# இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு

ம. முகம்மது உவைஸ்
பீ.மு. அஜ்மல்கான்



பதிப்புத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

# இஸ்லாமியத்
# தமிழ் இலக்கிய
# வரலாறு

தொகுதி ஒன்று

தொடக்க காலம்

( கி.பி. 1700 வரை )

ம. முகம்மது உவைஸ்

பீ. மு. அஜ்மல்கான்

பதிப்புத்துறை





மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

(c) பதிப்புத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை-625 021.
Publications Division,
Madurai Kamaraj University,
Madurai-625 021.

பதிப்பு எண் : 89

விலை ரூ. 40/-

பதிப்பு விவரங்கள் :

1. ஆசிரியர்கள் : பேராசிரியர், அறிஞர்
ம. முகம்மது உவைஸ்,
அறிஞர் பீ. மு. அஜ்மல்கான்,
இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை-625 021.

2. தலைப்பு : இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு
தொகுதி ஒன்று - தொடக்க காலம்
(கி.பி. 1700 வரை)

3 பதிப்பு
(அ) இடம் : மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
Madurai Kamaraj University,
Madurai-625 021.
(ஆ) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை (Publications Division)
Madurai Kamaraj University
இ) ஆண்டு : 1986 (முதற் பதிப்பு)

4. பக்கம் : 20 + 611

5. பொருள் : இலக்கிய வரலாறு

6. அச்சும் அமைப்பும் : திரீயெம் பிரிண்டர்சு, சென்னை-1.

**சீனி. கிருட்டிணசாமி,**
துணைவேந்தர்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
பல்கலைநகர், மதுரை-625 021.

# அணிந்துரை

இசுலாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் முதல் தொகுதி வெளி வருவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

இசுலாமிய இலக்கியத்திற்கு மட்டும் வரலாறாக அமையாமல் தமிழ் இலக்கிய வளர்ச்சியைக் கணிப்பதற்கும் இந்நூல் வழிவகை செய்கிறது. நூலின் தொடக்கத்தில், காலப்போக்கில் அமையும் அரசியல் பின்னணியைக் காட்டி, இசுலாமிய இலக்கிய வரலாற்றைச் சுட்டுவது சீரியதோர் உத்தியாகும். டாக்டர் ம. மு. உவைசும் டாக்டர் பீ. மு. அஜ்மல்கானும் நூலின் நுவல் பொருளைக் காட்டும் நோக்கும் போக்கும் பாராட்டிற்கு உரியன.

பல காலங்களில், பல்வேறு தேசத்தினர் தமிழ்நாட்டிற்கு வந்தனர்; பல சமயத்தினர் வந்தனர்; வரலாற்றின் வாயிலாக இவற்றை அறியலாம்; அத்தகையோருள் பலர் தமிழால் ஈர்க்கப்பட்டுத் தமிழ் இலக்கியச் செல்வங்களைப் படைத்துள்ளனர். இசுலாமியர் தமிழுக்குத் தந்த செல்வம் மிகப் பெரிது என்பதை இந்நூலின் வாயிலாக அறியலாம். ஒரு காலக்கட்டத்தில் இருநூறுக்கும் அதிகமான இசுலாமியத் தமிழ் நூல்களை ஒன்று திரட்டியமை பெருஞ்சாதனையாகக் கருதப் பட்டது. ஆனால், இன்றோ இசுலாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் நூல்களின் எண்ணிக்கை இரண்டாயிரத்தையும் தாண்டிவிட்டது என்று இந்நூலாசிரியர்கள் அறிவிக்கும் போது, தமிழ் இலக்கியம் வளமை பெறுவதை அறியலாம்.

இலக்கிய வகை குறித்து நூலின் போக்கில் கூறப்படும் செய்திகள் மனங்கொள்ளத் தக்கன. இசுலாமியத் தமிழ் இலக்கிய வடிவங் களாகக் கிஸ்ஸா, நாமா, மசலா, முனாஜாத்து முதலிய இலக்கியப் பிரிவுகள் ஏனைய பிற சமய, இன இலக்கியங்களில் இல்லாத இலக் கிய வகைகள் என்றும், இந்த இலக்கிய வகைகள் இசுலாமியச்

சமயத்திற்கே உரிய சிறப்பின என்றும் தேர்ந்து தெளிந்து கூறும் பாங்கு ஆய்ந்து அறிந்து மகிழ்தற்குரியதாகும்; இலக்கிய வகைகளுக்கும் சமயத்திற்கும் உள்ள தொடர்பினைக் குறிப்பிட்டுக் காட்டும் இடங்கள் சிறந்த ஆய்வுக் களங்களாகும்.

வேற்றுமைகளில் ஒருமைப்பாட்டினையும் ஒற்றுமையையும் சுட்டுவதில் இசுலாமிய இலக்கியங்கள் தலைசிறந்தனவாகத் திகழ்வதை இவ்வரலாற்று இலக்கியத்தை ஊன்றிப் படிப்போர் தெள்ளிதின் உணர்வர்.

தமிழ் ஆர்வலர்கள் இந்நூலினைக் கற்றுத் தேர்ந்து பயன் அடைவார்களாக!

பல்கலை நகர்
26—2—1986

துணைவேந்தர்

பேராசிரியர் கலாநிதி
**சு. வித்தியானந்தன்,**
துணைவேந்தர்,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,
யாழ்ப்பாணம், இலங்கை.

# சிறப்புரை

உலகிலே வேறெந்த மொழிகளுக்குமில்லாத தனிப்பெருஞ்சிறப்பு தமிழ் மொழிக்கு உண்டு. எல்லாச் சமயத்தவரும் தமிழைப் பேணி வளர்த்திருக்கின்றனர். சைவர்கள், வைணவர்கள், சமணர்கள், பௌத்தர்கள் ஆகியோரின் இலக்கியங்கள் தமிழை வளப்படுத்தி யுள்ளன. இவர்கள் போலவே எண்ணிறந்த இஸ்லாமியப் புலவர்கள் மிகச் சிறந்த நூல்கள் பலவற்றைத் தமிழிலே படைத்திருக்கின்றனர். பொருளமைப்பிலும் உருவத்திலும் இவ்விலக்கியங்களினாலே தமிழ் இலக்கியம் பெரும் பயனடைந்திருக்கின்றன. ஆனால் இவ்விலக் கியங்கள் பற்றிப் பலருக்குத் தெரியாமல் இருந்தது. சீறாப்புராணம் போன்ற சில நூல்களே தமிழ் உலகிற்கு அறிமுகப்பட்டிருந்தனவே யொழிய, தமிழ்த் தொண்டிலே ஊறித்திளைத்த பல நூற்றுக் கணக்கான முஸ்லிம் படைப்புக்கள் அறிமுகப்படுத்தப்படவில்லை. தமிழிலக்கிய வரலாறு எழுதிய எழுத்தாளர்களும் இஸ்லாமியத் தமிழ்த் தொண்டுபற்றி ஓரிரு நூல்களைக் குறிப்பிட்டிருந்தனரேயொழிய, இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பரப்பை ஆராயவில்லை. இஸ்லா மியரே தமது இலக்கிய வளம் பற்றி அறியாதிருந்தனர். இந்நிலை 1950-ஆம் ஆண்டுவரை நிலவி வந்தது.

ஜனாப் உவைஸ் அவர்கள் இலங்கைப் பல்கலைக்கழகப் புகுமுக நேர்முகத் தேர்வுக்கு 1946-ஆம் ஆண்டில் தோற்றியபோது, இலங் கைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியராக இருந்த உயர்திரு விபுலானந்த அடிகள் தமிழிலுள்ள இஸ்லாமியக் காப்பியமொன்றைக் குறிப்பிடும்படி கேட்டார். அப்போது அதற்கு மறுமொழி கூறமுடி யாது தத்தளித்தபோது சீறாப்புராணம் பற்றி நீங்கள் கேள்விப்பட வில்லையா என்று அடிகளார் வினாவினார். இச்சம்பவம் உவைஸ் அவர்களை இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றிச் சிந்திக்கத் தூண்டியது.

உயர்திரு விபுலானந்த அடிகளாருக்குப் பின் இலங்கைப் பல்கலைக்கழகப் பேராசிரியராகக் கடமையேற்ற பேராசிரியர் க. கணபதிப் பிள்ளையவர்கள் இஸ்லாமிய இலக்கிய ஆராய்ச்சிப்

பகுதியைத் தொடங்கி வைத்து, ஜனாப் உவைஸ் அவர்களை இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றி முதுகலைமாணித் தேர்வுக்கு ஆராயும்படி தூண்டினார். இவ்வாராய்ச்சியினை மேற்பார்வையிடும் பொறுப்பு என்னிடம் விடப்பட்டது. எனது மேற்பார்வையில் 1951-ஆம் ஆண்டு 'Muslim Contribution to Tamil Literature' என்னும் ஆய்வு நூல் வெளி வந்தது. உவைஸ் அவர்களின் ஆராய்ச்சியை மேற்பார்வையிட்டதனால் எமக்கும் இஸ்லாமியத் தமிழிலக்கியம் பற்றிய அறிவு வளர்ந்தது. பல்கலைக்கழகத்தின் கலைமாணி வகுப்பு மாணவர்களுக்கு இஸ்லாமியர் தமிழ் மொழிக்கு ஆற்றிய தொண்டு பற்றி விரிவுரைகள் 1950-ஆம் ஆண்டிலிருந்தே நிகழ்த்தினேன். இதனைத் தொடர்ந்து 1953-ஆம் ஆண்டிலே நான் வெளியிட்ட ''இலக்கியத் தென்றல்'' என்ற நூலிலே இஸ்லாமியரின் தமிழ்த்தொண்டு பற்றி ஓர் இயல் அமைத்தேன். 1961-ஆம் ஆண்டிலே இஸ்லாமியர் கலையும் பண்பும் பற்றி எழுதிய ''கலையும் பண்பும்'' என்ற நூலிலே இரு இயல்களிலே இஸ்லாமியரின் தமிழ்த்தொண்டு பற்றி விரிவாக எழுதினேன்.

ஜனாப் உவைஸ் அவர்கள் இஸ்லாமிய இலக்கியங்கள் பற்றித் தொடர்ந்து ஆராய்ச்சி செய்து பலகட்டுரைகள் எழுதி வந்தார். நான் இலங்கைப் பேராதனைப் பல்கலைக்கழகத்திலே தமிழ்ப் பேராசிரியராகக் கடமையாற்றிய போது ''முஸ்லிம் தமிழ்க் காப்பியங்கள்'' என்னும் பொருள் பற்றி எனது மேற்பார்வையில் ஆய்வு செய்து, ஜனாப் உவைஸ் அவர்கள் கலாநிதிப் பட்டம் பெற்றார். இவ்வாய்வு 1975-ஆம் ஆண்டு நூலாக வெளிவந்தது.

கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளாக உவைஸ் அவர்கள் இஸ்லாமியத் தமிழிலக்கிய ஆய்விலே ஈடுபட்டு வந்திருக்கிறார். பல நூல்களை வெளியிட்டதோடு அனைத்துலக இஸ்லாமியத் தமிழாராய்ச்சி மகாநாடுகளையும் நடத்தி வந்திருக்கின்றார். இவற்றின் பயனாக இஸ்லாமியத் தமிழ் மக்களிடையே தமிழ் விழிப்புணர்ச்சி ஏற்பட்டதோடு, தமிழ் இலக்கிய வரலாற்றில் முஸ்லிம்களின் பங்கும் கணிசமான அளவு உள்ளதென்பது நிறுவப்பட்டுள்ளது.

இவற்றின் பயனாக மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திலே இஸ்லாமியத் தமிழ் இலக்கியத் துறையொன்று நிறுவப்பட்டது. இத்துறையின் முதற் பேராசிரியராக நியமிக்கப்படக் கூடிய தகுதியுடையவராகக் கலாநிதி உவைஸ் அவர்கள் கணிக்கப்பட்டதால், அத்துறையை வழி நடத்தும் முதற் பேராசிரியராக அவர் கடமை ஏற்றார். இஸ்லாமியத் தமிழிலக்கியத் துறை இஸ்லாத்தின் வரலாறு, பண்பாடு, இலக்கியம் பற்றிப் பல ஆராய்ச்சிகள் நடத்தி வருகின்றது. சில நூல்களையும் வெளியிட்டுள்ளது.

இவ்வெளியீடுகளின் தொடர்ச்சியாக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு ஆறு தொகுதிகளாக வெளிவர இருக்கின்றது. அவற்றின் முதலாம் தொகுதி இப்போது வெளியாகின்றது. இத்தொகுதி கி.பி. 1700-ஆம் ஆண்டு வரையுள்ள வரலாற்றினைப் பதினொரு இயல் களிலே தருகின்றது. இத்தொகுதியில் பல்சந்தமாலை, யாகோபு சித்தர் பாடல், ஆயிரமசலா, மிகுறாசுமாலை, திருநெறிநீதம், கனகாபிசேகமாலை, சக்கூன்படைப்போர், முதுமொழிமாலை, சீறாப் புராணம், மக்காப்பள்ளு ஆகிய பத்து நூல்களைப் பற்றிய ஆராய்ச்சி அடங்கியுள்ளது.

இத்தொகுதியில் மூன்றாம், நான்காம், ஆறாம், எட்டாம் இயல்கள் மதுரைக் காமராசர் பல்கலைக்கழக இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறை விரிவுரையாளர் கலாநிதி அஜ்மல் கான் அவர்களால் எழுதப்பட்டவை. ஏனைய ஏழு இயல்களும் பேராசிரியர் கலாநிதி உவைஸ் அவர்களினால் எழுதப்பட்டவை. எனவே இத்தொகுதி இவ்விரு அறிஞரின் கூட்டு முயற்சியாக வெளிவருகின்றது.

தொகுதி ஒன்றின் முதல் இயல் தமிழ் நாட்டிலும் ஈழத்திலும் இஸ்லாமியர் குடியேறி வாழ்ந்த வரலாற்றுச் செய்திகளைத் தொகுத் துரைப்பதாக அமைகிறது. இஸ்லாம் உலகிற் பரவுவதற்குப் பல நூற்றாண்டுகள் முன்னமே முஸ்லிம்களின் மூதாதையரான அறபு மக்கள் தமிழ்நாட்டுடன் தொடர்பு கொண்டிருந்தனரெனக் கூறும் ஆசிரியர், (பக். 20) அதற்குச் சான்றுகளாகச் சங்க இலக்கியங்களில் பயின்ற யவனர் தொடர்பான குறிப்புக்களை எடுத்துக்காட்டுகின்றார். யவனர் என்போர் சோனகரே என்பது இவரது கருத்தாகும். திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு ஆகியவற்றிலும் யவனர், சோனகர் எனக் குறிப்பிட்டமையைத் துணைச்சான்றாகக் கொள்கிறார் (பக். 5). மத்தியதரைக் கடலின் வடக்கிலுள்ள ஐயோனியன் என்ற கடலின் கரைப்பகுதியில் வாழ்ந்த மக்கள் கீழைத்தேயங்களுக்கு வந்தபோது யவனரெனச் சுட்டப்பட்டனர் என்பதும், முதலில் இவ்வாறு வந்தோர் கிரேக்கர், உரோமர் என்பதும், அவர்களைத் தொடர்ந்து வந்தோர் அறபு மக்கள் என்பதும் ஆசிரியர் கருத்தாகும் (பக். 3). அறபு மக்கள் வர்த்தக நோக்கிலே தமிழகத்தோடு கொண்டிருந்த சங்க இலக்கிய காலப்பகுதியிலே ஈழத்திலும் குடியேறிவிட்டனரென்பதற்கு பிளினி என்பவரது குறிப்பைச் சான்றாகக் காட்டுகின்றார் (பக். 15).

சங்க இலக்கிய காலத்திலே தமிழகத்தோடு அறபு மக்கள் கொண் டிருந்த தொடர்பை மேலும் வலியுறுத்தும் வகையில் சங்க நூற் சொற்கள் சிலவற்றிற்கு அறபு மொழியில் மூலங்காண்கிறார். 'முசிறி' என்ற துறைமுகத்தின் பெயர் 'முசாபர்' என்ற அறபுச் சொல்லினின்று மருவியது எனவும், பதிற்றுப்பத்திலே 'பந்தர்' என வழங்கும் சொல்

அறபு மொழியிலே துறைமுகக் களஞ்சியத்தைக் குறிக்கும் 'பந்தர்' என்ற அறபுச் சொல்லினின்று பெறப்பட்டதென்றும் குறிப்பிடுகின்றார் (பக். 12-14).

இஸ்லாம் உலகிற் பரவத் தலைப்பட்டபின் இந்தியக் கரையோரங் களில் முஸ்லிம் குடியிருப்புக்கள் தோன்றின. இஸ்லாமியச் சமயப் பெரியார்கள் வந்தனர். பள்ளிவாசல்கள் நிறுவப்பட்டன. கி.பி. 728-இல் ஹாஜி அப்துல்லா பின் அன்வர் என்பவர் கட்டிய பள்ளி வாசல் திருச்சிராப்பள்ளியில் இன்னும் சிதைந்த நிலையிலுள்ளது (பக். 16). கி.பி. பத்தாம் நூற்றாண்டில் நத்தர் வலியுல்லா என்ற ஸிரியா நாட்டுப் பெரியார் திருச்சிராப்பள்ளியில் வந்து தங்கினார் (பக். 16). கி.பி. 1050-இல் மதுரையில் சுல்தான் அலியுத்தீன் தர்கா இருந்தது (பக். 16).

கி பி. 1182-இல் அறபு நாட்டினின்று வந்த ஸையது இப்ராஹீம் என்பவர் மதுரையில் ஆண்ட விக்கிரம பாண்டியனை வென்று தமிழ கத்தின் கிழக்குப் பகுதியை ஆண்டார் (பக். 17-19) எனக் குறிப்பிடும் ஆசிரியர் அதற்குச் சான்றுகளாக டாக்டர் எஸ். எச். யூ. ஹுஸைனி யின் பாண்டிய நாட்டு வரலாறு என்ற நூலையும், வண்ணக் களஞ்சியப் புலவர் இயற்றிய தீன் விளக்கம் அல்லது தீனெறி விளக்கம் என்னும் நூலையும் காட்டுகின்றார். அவ்வாட்சி நிகழ்ந்த நகரம் பௌத்திர மாணிக்கப்பட்டினம் எனவும், அது மேலைப்பட்டணம் எனவும், காயல் என்று வழங்கப்படும் இடம் எனவும் குறிப்பிடுகிறார்.

இவ்வாறு அறபு மக்கள் தொடர்பு, இஸ்லாம் வருகை, தமிழகத் தில் இஸ்லாமியர் ஆட்சி என்பவற்றைக் குறிப்பிட்ட ஆசிரியர் 12-ஆம் நூற்றாண்டின் பின்னர் நிகழ்ந்த இஸ்லாமியர் ஆதிக்கப்படர்ச்சி தொடர்பான வரலாற்றுச் செய்திகளையும் விரிவாக எடுத்துக்காட்டு கின்றார். இவ்வாறு அறபு இஸ்லாம் தொடர்புகளாலே தமிழகத்திலும் ஈழத்திலும் இஸ்லாமியப் பண்பாட்டுக்கான அடித்தளம் இடப்பட் டிருந்ததெனவும், இந்த அடித்தளத்திலேயே இஸ்லாமியத் தமிழிலக் கியம் முளைவிட்டது என்றும் கூறுகிறார். தொடக்கத்திலே தமிழ் மொழியை அறபு எழுத்துக்களில் எழுதி 'அறபுத்தமிழ்' என்ற புதிய கலவை மொழியைக் கையாண்டு, இவர்கள் காலகதியிலே தமிழ் எழுத் துக்களையும் எழுதப் பயின்றனர். அறபுத் தமிழில் எழுதப்பட்ட இஸ் லாமிய இலக்கியங்கள் பின்னர் தமிழ் எழுத்துக்களில் எழுதப்பட்டன.

இரண்டாம் அத்தியாயம் தொடக்க காலம் எனக் குறிப்பிடப் படுகின்றது. இவ்வியல் தமிழில் இன்று கிடைக்கும் இஸ்லாமிய இலக்கியங்களுள் கால முதன்மையுடையதாகக் கருதப்படும் பல்சந்த மாலை பற்றிய ஆய்வாக அமைகின்றது. களவியற்காரிகை என்ற

பெயரில் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் பதிப்பித்த நூலின் உரை மேற்கோளில் இப் 'பல்சந்தமாலை'யின் எட்டுப் பாடல்கள் அமைந்துள்ளன. இவையே இப்போது கிடைப்பன. கட்டளைக் கலித்துறையில் அமைந்த இதன் பாடல்கள் அகப் பொருள் அமைதியுடையவை. இவற்றிலே பாட்டுடைத் தலைவன் பெயர் 'கலைமதி வாய்மைக் கலுபா', 'இயவனராசன் கலுபா', 'வச்சிர நாட்டுக்கிறைவனாகிய கலுபா' என்னும் சிறப்புப் பெயர்களாலும் வின்னன் என்ற இயற்பெயராலும் சுட்டப்படுகின்றான். கலுபா, வின்னன் ஆகிய சொற்கள் அறபு மொழி மூலங்களிலிருந்து வந்தன என்றும், கலுபா என்பது வெற்றி வீரனைக் குறிக்கும் சுட்டு என்றும் கொள்ளப்படுகின்றது. இதன்படி தமிழ்நாட்டில் வெற்றி பெற்று ஆட்சி செய்த ஒரு இஸ்லாமியத் தலைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட பிரபந்தம் இது எனக் கொள்ளப்படுகின்றது. இந்நூலின் காலம் கி.பி. 12-ஆம் நூற்றாண்டு அல்லது முன்பாக இருக்கலாமென ஆசிரியர் கருதுகின்றார். மொழி இலக்கணச் சான்றுகளை இவர் அதற்குத் துணை கொள்கின்றார் (பக். 84-88).

பல்சந்தமாலை காட்டும் இலக்கியப் பண்பு, பண்பாட்டு அம்சங்கள் எடுத்துக்காட்டப்படுகின்றன. அதில் இடம்பெறும் அஞ்சு வண்ணத்தவர் என்ற சொல்லின் பொருண்மையை விரிவாக ஆராய்ந்த ஆசிரியர் இச்சொல் அஞ்சு வண்ணத்தான் எனத் தமிழ்க் கல்வெட்டுக்களிலும் இடம் பெற்றுள்ளதை எடுத்துக்காட்டி, இது தமிழ்நாட்டில் வணிகம் நடத்திக் கொண்டிருந்த முஸ்லிம் வணிகக் குழுவினரையே குறித்திருக்க வேண்டுமெனக் கொள்கிறார். பல்சந்தமாலையின் இலக்கியச் சுவையும் எடுத்துக் காட்டப்படுகிறது.

பல்சந்தமாலைக்கு அடுத்ததாகப் பழைமை வாய்ந்த இஸ்லாமியத் தமிழிலக்கியமாக யாகோபு சித்தர் பாடல் மூன்றாம் இயலிற் கொள்ளப்படுகின்றது. இவ்வியல் தொடக்கத்தில் இந்திய-தமிழக சித்தர் மரபு பற்றிய அறிமுகத்தைத் தந்து, அடுத்து யாகோபு சித்தர் பாடல் பற்றிச் சிறப்பாக ஆராய்கிறது. யாகோபு சித்தர் என்பவர் முதலில் இராமதேவர் என்னும் பெயருடன் திகழ்ந்தவர். பின்னர் இஸ்லாமியராக மதம் மாறி யாகோபு என்ற பெயர் பெற்றவர்; தமிழ் இலக்கிய வரலாற்றிலே சித்தர்கள் வாழ்ந்த காலம் திட்டவட்டமாக நிறுவப்படவில்லை. கி.பி. 14, 15, 16-ஆம் நூற்றாண்டுகளில் அவர்கள் வாழ்ந்திருக்கலாம் என்ற கருத்து பொதுவாக நிலவுகின்றது. யாகோபு சித்தர் காலமும் தெளிவாக அறியப்படவில்லை. எனினும் கி.பி. 12-ம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவரென ஆசிரியர் கருதுகின்றார் (பக். 148).

ஒரு முஸ்லிம் புலவரால் இயற்றப்பட்ட முதற் 'சித்தர் பாடல்' என யாகோபு சித்தர் பாடல்களை ஆசிரியர் குறிப்பிடுகின்றார்,

யாகோபு குருநூல், யாகோபு வைத்திய சிந்தாமணி, யாகோபு வகாரக்களங்கு என்னும் வாத வைத்தியம், யாகோபு சுன்னம் முதலிய பாடற் பகுதிகளை இவ்வியலில் ஆராய்கின்றார். இப்பாடற் பகுதிகளில் இடம்பெற்றுள்ள இஸ்லாமிய சமயக் கருத்துக்களையும் எடுத்து விளக்கியுள்ளார். தொடக்கத்தில் இப்பாடல்களைப் பதிப்பித்தோர் இஸ்லாம் மார்க்கம் தொடர்பான அறிவின்மையாற் பல சொற்களைப் பிழைபடப் பதிப்பித்தமையையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

நான்காம் இயலில் ஆராயப்படுவது **ஆயிரம் மசலா** என்று வழங்கும் **அதிசய புராணம்.** இஸ்லாமியத் தொடர்பாலே தமிழுக்கு அறிமுகமான ஓர் இலக்கிய வடிவம் மசலா. இது வினாவிடை அமைப்பிலானது. இவ்வகையில் முதலாவதாகக் கிடைக்கும் நூல் **ஆயிரம் மசலா** என்று வழங்கும் **அதிசய புராணம்** ஆகும். இந்நூல் வண்ணப்பரிமளப் புலவர் என்பவரால் இயற்றப் பெற்றது. இயற்றப் பட்ட ஆண்டு 1572 எனக் குறிக்கப்பட்டுள்ளது (பக். 153).

இந்நூல் ஒரு நீதி இலக்கியத்தைப்போல் அமைந்துள்ளதென்றும் இஸ்லாமிய மார்க்கப் போதனைகளை உள்ளடக்கியதாக உள்ளதெனவும் ஆசிரியர் கூறுகின்றார். இதன் பாடல்களின் இலக்கிய நயம் விரிவாக நோக்கப்பட்டுள்ளது.

நபிகள் நாயகம் (சல்) அவர்களின் விண்ணேற்றப் பயண அற்புதம் மிஃறாஜ் என வழங்கப்படும். இதனைக் கூறும் மிகுறாசுமாலை ஐந்தாம் இயலில் இடம் பெறுகின்றது. இதனை இயற்றியவர் கி.பி. 16-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த ஆலிப்புலவர் ஆவர். இந்நூல் கி பி. 159· -இல் இயற்றப்பட்டதென நூலின் அகச்சான்று மூலம் ஆசிரியர் எடுத்துக்காட்டுகின்றார். இந்நூலின் பொருளமைதி, இலக்கிய நயம் என்பன விரிவாக எடுத்துக் காட்டப்படுகின்றன.

ஆறாம் இயல் மசலா போல வினாவிடை அமைப்பிலமைந்த **திருநெறி நீதம்** என்னும் நூல்பற்றியது இஸ்லாமிய மார்க்கம் சார்ந்த நல்லொழுக்க நெறிகளை இது எடுத்துக் கூறுவது. இந்நூலின் ஆசிரியர் பீர் முகமது. காலம் கி பி. 1613.

இஸ்லாமியக் காப்பியங்களிலேயே முதலாவதாக அமையும் **கனகாபிஷேகமாலை** ஏழாம் இயலில் ஆராயப்படுகின்றது. இதன் ஆசிரியர் கனகவிராயர். இவரது இயற்பெயர் செய்கு நயினார். இக் காப்பியம் பாட செய்கு நயினார்க்கு முதனூலாக அமைந்தது 'முக்கத்தி லூசன்' என்னும் கித்தாபே (நூலே) ஆகும் (பக். 278). இதன் காலம் 1648.

**சக்கூன் படைப்போர்** என்னும் நூலின் ஆய்வாக எட்டாம் இயல் அமைகின்றது. **படைப்போர்** என்பது இஸ்லாமியராலே தமிழுக்குக்

கிடைத்த ஓர் இலக்கிய வகை. இது போர் பாடும் இலக்கியம் என்பதால் தமிழின் பரணிப் பிரபந்தத்துடன் ஒப்பிடத்தக்கது. ஆயின் பரணி போல் அதீதக் கற்பனைகள், காதற் சுவை ததும்பும் அம்சங்கள் என்பன படைப்போரில் இடம் பெறுவது இல்லை. படைப்போர் வகை இலக்கியத்தில் சக்கூன் படைப்போர் கால முதன்மையுடையது. இதன் காலம் கி.பி. 1686. இதன் ஆசிரியர் வரிசை முகியித்தீன் புலவர்.

மாலை என்னும் பிரபந்த வகை சார்ந்த முதுமொழி மாலை பற்றிய ஆராய்ச்சி ஒன்பதாம் இயலில் இடம் பெறுகின்றது. எனினும் முனா ஜாத்து எனவும் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பதைப் பதிப்புரை குறிப்பிடுவதாக ஆசிரியர் கூறுகின்றார். இதன் ஆசிரியர் சீறா பாடிய உமறுப் புலவர் என்ற கருத்துண்டு. ஆனால் நிறுவப்பட வில்லை. இதன் காலமும் நிறுவப்படவில்லை, இந்நூல் நபிகள் நாயகம் பெருமானார் அவர்களின் புகழ்பாடுவதாகும்.

சீறாப்புராணத்தையும் முதுமொழி மாலையையும் ஒரே ஆசிரியர் இயற்றி இருப்பின் ஏறத்தாழ ஒரே மாதிரியாக இருக்கவேண்டிய மொழிநடையில் ஒற்றுமையைக் காண முடியாது என்பது ஆதாரங் களுடன் வலியுறுத்தப்பட்டுள்ளது. குறைந்த எண்ணிக்கையான அறபுச் சொற்களும் கூடுதல் எண்ணிக்கையான வடமொழிச் சொற் களும் முதுமொழி மாலையில் இடம்பெற்றிருப்பது முதுமொழி மாலை யைச் சீறாப்புராணத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சீறாப்புராணத்தில் இடம்பெறாத வடமொழிச் சொற்கள் பல முதுமொழி மாலையில் இடம்பெற்றுள்ளமை சுட்டிக் காட்டப்பட்டுள்ளது (பக். 404).

இந்நூலிலே உள்ள மிகப் பெரிய இயல் சீறாப்புராணம் பற்றியது. சீறாப்புராணம் விரிவாக ஆராயப்பட்டுள்ளது. சீறாப்புராணத்தின் கொடை நாயகர் வகுதையம்பதி அபுல்காசிம் மரைக்காயர் பற்றிய குறிப்பு அந்நூலில் வரும் யாத்திரைப் படலத்துக்கு அப்பால் இடம் பெறவில்லை என்பது சுட்டிக்காட்டப்பட்டு அங்ஙனம் விடுபட்டமைக்குக் காரணங்கள் எதுவாயிருக்கலாம் என்பதும் விரிவாய் ஆராயப்பட் டுள்ளது (பக். 431-433). அல்குர்ஆன் கருத்துக்கள் எங்ஙனம் சீறாப்புராணத்தில் இடம் பெற்றுள்ளது என்பது விரிவாக விளக்கப் பட்டுள்ளது (பக். 512-530). கருத்தொற்றுமை, சொல்லாட்சி போன்ற பகுதிகள் (பக். 531-535) ஒப்பாய்வுப் பணியின் சிறப்பை எடுத்துக்காட்டிக் கொண்டிருக்கிறது.

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றின் இறுதி இயலான திருமக்காப் பள்ளு பற்றிய இயலில் திருமக்காப் பள்ளு முக்கூடற் பள்ளு என்னும் நூலுடன் ஒப்பு நோக்கி ஆராயப்பட்டுள்ளது. முக்கூடற் பள்ளு முதன் முதல் பதிப்பிக்கப்பட்ட ஆண்டு ஆதாரங்களுடன் நிறுவப்

பட்டுள்ளது (பக். 559). முக்கூடற் பள்ளு நூலில் வரும் மூத்த பள்ளியான முக்கூடற் பள்ளியும் இளைய பள்ளியான மருதூர்ப் பள்ளியும் திருமக்காப் பள்ளு நூலில் முறையே மக்காப் பள்ளியாகவும் மதீனாப் பள்ளியாகவும் வந்துள்ளமை சுட்டிக் காட்டப்பட்டுள்ளது (பக். 577). இரண்டு பள்ளு நூல்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் ஆங்காங்கே உரிய இடங்களில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளமை ஈன்று நோக்கற்பாலது.

இவ்விலக்கிய வரலாற்று நூல் கால அடிப்படையில் பத்து நூல்களை அறிமுகம் செய்கின்றது. அவ்வகையிற் பல்சந்தமாலை முதல் மக்காப் பள்ளு வரையிலானவை அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. இவற்றில் யாகோபு சித்தர் பாடல், முதுமொழி மாலை என்பவற்றுக்குத் திட்டமாகக் காலம் குறிப்பிடவில்லை.

ஒவ்வொரு நூலையும் அறிமுகம் செய்யும்போது அந்நூற் செய்திகள் தொடர்பான இஸ்லாமிய மார்க்க விடயங்கள் வரலாற்றுச் சான்றுகளுடன் எடுத்துக்காட்டப்படுகின்றன. இதனுல் ஆதார பூர்வமான தகவல்கள் கிடைக்கின்றன.

நூல்களிற் காணப்படும் சொற்களில் அறபு, பாரசீகம் ஆகிய மொழிகள் தொடர்பானவற்றை எடுத்து விளக்குவதில் ஆசிரியர்கள் கவனம் செலுத்தியுள்ளனர்.

எடுத்துக்காட்டப்பட்ட பத்து இலக்கியங்களினதும் இலக்கியச் சுவையை எடுத்துக் காட்டும் போது அவ்வகை சார்ந்த தமிழிலக்கியங்களுக்கு தொடர்புபடுத்திக் காட்டுவது ஆசிரியர்களது (தமிழிலக்கியப் பரப்பிலுள்ள) ஆழ்ந்த புலமைக்குச் சான்றாக உள்ளது.

இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்று முயற்சியில் முதன் முதலாக மேற்கொள்ளப்பட்ட நுணுக்க விவர ஆய்வுடன் கூடிய முயற்சியாக இதனைக் கருதலாம். இந்நூலின் ஆசிரியர்களான பேராசிரியர் கலாநிதி உவைஸ் அவர்களும் கலாநிதி அஜ்மல் கான் அவர்களும் பாராட்டுக்குரியவர்கள். பல்கலைக்கழகம் ஒன்றில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்திற்கென ஒரு துறையை நிறுவி, இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றி ஆராய்ச்சி நடத்துவதற்கு வாய்ப்பளித்த மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தினருக்கு நாம் கடமைப்பட்டுள்ளோம். அடுத்து ஐந்து தொகுதிகளும் விரைவில் வெளிவருமென எதிர்பார்க்கின்றோம்.

யாழ்ப்பாணம் **சு. வித்தியானந்தன்**
15—12—1985.

'தமிழண்ணல்'

**டாக்டர், கணக்காயர்**
**இராம. பெரியகருப்பன்,**
தமிழியல் துறைத் தலைவர்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை.

# முகவுரை

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின், இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறை பயனுள்ள, நிலையான பல பணிகளைச் செய்து வருகிறது. அதன் 'அறபுத் தமிழ்ச்சொல் அகராதி' ஒரு பார்வை நூலாகப் பயன்படக்கூடியது. இஸ்லாமியத் தமிழ் நூல்கள் பற்றிய விவரத் தொகுப்பும் வெளிவருங் காலத்தில், கலைக்களஞ்சியம்போல் பயன்படக் கூடியதாகும். அத்துறை சார்ந்த பணிகளுள் தலைமை யானது 'இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறாகும்.' ஆறு பெரும் தொகுதிகளாக வெளியிடத் திட்டமிட்டு, இப்போது முதல் தொகுதி அச்சாகி வெளிவருகிறது. இம் முதல் தொகுதி இஸ்லாமிய இலக் கியங்கள் தமிழில் தோன்றி வளர்வதற்கான வரலாற்றுப் பின்னணியை யும் சமூகச் சூழ்நிலைகளையும் விளக்கித் தொடங்குகிறது. தொடக்க கால நிலையும், காப்பிய வளர்ச்சியும் பின்னர் விரிவாக விளக்கப்படு கின்றன. இதற்கு ஏறக்குறைய எழுநூறு பக்கங்கள் வரை கொண்ட முதல் தொகுதி பயன்படுகிறதுஎனில், ஆறு தொகுதிகளாலும் உணர்த்தக் கூடிய செய்திகள் எவ்வளவு உள்ளன என எண்ணிப் பார்த்தல்வேண்டும். இதைப்போலவே கிறித்தவத் தமிழ் இலக்கிய வரலாறும் எழுதப்படவேண்டும் என்ற தூண்டுணர்வு ஏற்படுகிறது. கிறித்தவத் தமிழ் இலக்கியங்கள் பற்றிய 'நூலடைவும்' பயன்படுவ தாகும். சமணம், பௌத்தம் போலத் தனித்தனிச் சமயங்கட்கெல் லாம் இலக்கிய இலக்கண வரலாறெழுதிப் பார்த்தால், தமிழின் கூர்தலற வளர்ச்சியை மதிப்பிடுதல் கூடும். தமிழைப் பல பரிமாணங் களில் வைத்துப் பார்ப்பதுபோல் இது பயன்படும்.

கி பி. ஏழாம் நூற்றாண்டு தொடங்கியே தமிழகத்தில் இஸ்லாமிய சமய உறவு ஏற்பட்டுவிட்டது. வணிகத் தொடர்பு வழி வந்த இவ்வுறவு, கடந்த ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இங்கு நிலை பெற்றுளது. பாரசீகம், அறபு, உருது மொழித் தொடர்புகள் குறிப் பிடற்பாலன. இனாம், பதில் போன்ற சொற்கள் அறபு மொழியின என இனம்காண முடியாதவாறு, தமிழ்போலவே வழங்குவது எடுத்துக் காட்டப்படுகிறது. தொடக்க காலத்தில் தமிழை அறபு எழுத்துக்களில்

எழுதி நூல்கள் யாத்துள்ளனர். ''பேச்சுத் தமிழ் நடைக்கு ஒப்பான ஒரு நடையிலே இஸ்லாமியத் தமிழ் நூல்களை எழுத முற்பட்டனர்.'' இங்ஙனம் தொடங்கிய இஸ்லாமிய இலக்கியம் தமிழில் எவ்வாறு சீரிய கூரிய தீந்தமிழ் நடையாக மாறி வளர்ந்தது என்பதை இம் முதல் தொகுதியே நன்கு விளக்குகிறது.

யவனர், சோனகர் பற்றிய ஆய்வுகள் மனங்கொளத் தக்கன. இஸ்லாமியப் படையெடுப்பு, ஆட்சி வரலாறுகளும் நடுவு நிலைமையோடு தெளிவாக எடுத்துக் காட்டப்படுகின்றன. பல்சந்தமாலை தொடங்கி திருமக்காப் பள்ளு ஈறாக நூல்களை வரலாற்று நோக்கில் எடுத்துக் காட்டும்போது நூல் வரலாறும் நூலாசிரியர் வரலாறும் நூற்சிறப்பும் மிக விரிவாக, மனங்கொள்ளத் தக்கவகையில் எடுத்துரைக்கப்படுகின்றன. மற்றைய பொது இலக்கிய வரலாறு தானும் இவ்வாறு எடுத்து விளக்கப் பெற்றிலதே என நினைக்குமளவு இவை விரிவும் தெளிவும்பட அமைந்துள்ளன. இத் தொகுதியில் சிந்தையை அள்ளும் சீறாப்புராணம் பற்றிய பகுதி இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. சீறாப் பற்றிய திறனாய்வாளருக்கும் அதனைக் கற்க விரும்பும் ஆராய்ச்சியாளருக்கும் 154 பக்கங்கள் கொண்ட, இந்நூலின் பத்தாம் இயல் மிகவும் பயன் படுவதாகும்.

இஸ்லாமிய சமய அறிவும் அறபு மொழியறிவும் இல்லாதார் பதிப்பித்த இஸ்லாமிய இலக்கிய நூல்களில் ஏற்பட்ட பதிப்புப் பிழைகள், பிறவாறு இந்நூல்களிற் காணப்படும் பதிப்புப் பிழைகள் போல்வன ஆங்காங்கு சுட்டிக் காட்டப்படுவது குறிப்பிடத்தக்கது. பிற்கால இஸ்லாமிய இலக்கியப் பதிப்புகளுக்கு இந்நூற் குறிப்புக்கள் பல வழிகாட்டியாக அமையும்.

பெரிதும் இஸ்லாமிய சமயத்தவர் அல்லாரும் படித்துப் பயன் கொள்ளுமாறு, இந்நூல், அவர்களுக்கு வழிகாட்டும் நோக்கினையும் மனத்துட்கொண்டு எழுதப்பட்டிருப்பது போற்றத்தக்கதாகும். ''பல்வேறு சமயத்தைச் சேர்ந்தவர்களும், தத்தம் இலக்கியங்கள் உள்ள இத் தமிழ்மொழியைத் தத்தம் வேத மொழியாக, புனித மொழியாகக் கொண்டு கருமமாற்றுகின்றனர்'' என்ற இந் நூலாசிரியர் கருத்து நினைவுகூர்ந்து பேணுதற்குரியதாகும். இத்தகைய நூல்கள் சமய உறவை வலுப்படுத்தித் தமிழை அவ்வச் சமயங்களில் நிலைபெறச் செய்யும்.

டாக்டர் ம. மு. உவைசு அவர்கள் எம் இஸ்லாமிய இலக்கியத் துறையில் தொடக்கம் முதல் பணியாற்றி வருகிறார்கள். அவர்களுக்குத் தமிழ் இஸ்லாமிய இலக்கியங்களில் தோய்ந்து ஆழ்ந்த அறிவு

உண்டு. அதனை இத் தொகுதிகளின் வழி நன்கறியலாம். இலங்கைத் தமிழ் மகனாகிய அப் பேராசிரியரிடம் ஈழத் தமிழின் இயல்பும் உண்டு. இந்நூலைப் படிக்குங்கால் ஆங்காங்கு அத்தகைய நடைப்போக்கையும் சொல்லாட்சிகளையும் காணலாம். மலர்ந்த முகமும் இனிய இயல்பும் உடைய அவர்கள் இடையறா முயற்சியும் உழைப்பும் உடையவர்கள். இவ் வரலாறு எழுதும் பணியினைத் தம் குறிக்கோளாகவும் கொண்டு அவர்கள் கடமையாற்றிவருவது பெருமைக்கு உரியதாகும். அவர்களுடன் டாக்டர் பி. மு. அஜ்மல்கான் தொடக்கம் முதலே, ஆராய்ச்சித் துணைவராக இருந்து இம் மாபெரும் பணியில் ஒத்துழைத்து வருகிறார். இளமையும் ஈடுபாடும் மிக்க அவர், இன்று அத்துறையில் விரிவுரையாளராக அமர்ந்து, இத் தொகுதிகள் நிறைவுறவும் முழுமையுடனும் வெளிவர உதவி வருகின்றமை சிறப்பாகக் குறிப்பிடற்பாலதாகும்.

மதுரை காமராசர் பல்கலைக் கழகம் இங்ஙனம் இத்துறையின் வழி ஆற்றிவரும் பெரும்பணிகளை அறிந்து, இத் துறையை நிறுவிய தமிழக அரசும் மற்றும் இஸ்லாமிய கொடை வள்ளல்களும் இத்துறை மேன்மேலும் வளர 'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்' பேணுவார்கள் என்று எதிர்பார்ப்போமாக! தமிழ் மக்கள் இந்நூலுக்கு நல்ல வரவேற்பு நல்கிப் போற்றிப் படிப்பார்கள் என்பதற்கு ஐயமில்லை. ஏனெனில் இந்நூலின் பொருட் செறிவு மட்டுமின்றி, அச்சும் அமைப்புங்கூட உள்ளத்தைக் கவருமாறு நன்கமைந்துள்ளன.

29—3—1986 'தமிழண்ணல்'

# நன்றியுரை

பல்லாண்டு காலமாக வளர்க்கப்பட்டு வந்த இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் பின்னர் கவனிப்பாரற்றுப் போயின. அறிஞர் தம் இல்லங்களில் மறைந்து கிடந்தன. தூசு படிந்த வண்ணம் இருந்தன. சீறாப்புராணமும் மஸ்தான் சாகிபு பாடலுமே இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் என உணரப்பட்ட காலம் அது. தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய அனைவருமே ஒரு சில வரிகளில் முஸ்லிம்களின் தமிழ்த்தொண்டு பற்றிக் குறிப்பிட்ட காலம் அது.

இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தின் அத்தகைய மந்த நிலைக்கு முற்றுப்புள்ளி வைத்து இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் மறுமலர்ச்சி பெறும் வகையில் முதல் நடவடிக்கை எடுத்த பெருமை கொழும்பில் மாத்திரம், அன்று அமைந்திருந்த இலங்கைப் பல்கலைக்கழகத்தையே சாரும். 1949-ஆம் ஆண்டு இலங்கைப் பல்கலைக்கழகம் அதன் தமிழ்த்துறையில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தை ஆய்வு செய்யும் வாய்ப்பை ஏற்படுத்தியது. இத்தகைய நிலைக்கு மூலகர்த்தாவாக விளங்கியவர் அன்றையத் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்த டாக்டர் க. கணபதிப் பிள்ளை ஆவார். அவருக்கு உறுதுணையாக இருந்தவர் இன்றைய யாழ்ப்பாணப் பல்கலைக்கழக உபவேந்தர் டாக்டர் சு. வித்தியானந்தன் அவர்களாவர். அப்பொழுது முதுகலை மாணித் தேர்வுக்கான விருப்புக்குரிய பாடமாக இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் அமைந்தது. 1954-ஆம் ஆண்டு நடைபெற்ற முதுகலை மாணித் தேர்வின்போது ''முஸ்லிம்கள் தமிழுக்காற்றிய தொண்டு'' என்னும் தலைப்பில் ஓர் ஆய்வுநூல் சமர்ப்பிக்கப்பட்டது. அந்த ஆய்வின் போது ஏறத்தாழ இருநூறு இஸ்லாமியத் தமிழ் நூல்களையே பயன் படுத்தக்கூடியதாக இருந்தது. இருநூறு நூல்களை அங்ஙனம் ஒன்று திரட்டியது அப்பொழுது ஒரு பெரும் சாதனையாக மதிக்கப் பட்டது. அந்த நிலைமையும் இன்று மாறிவிட்டது. இரண்டாயிரத் துக்கும் அதிகமான இஸ்லாமியத் தமிழ் இலக்கிய நூல்களை ஒன்று திரட்டுவதில் வெற்றி கண்டுள்ளோம்.

இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்திலே விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. இஸ்லாமியத் தமிழ் இலக்கிய ஆராய்ச்சிக் கருத்தரங்குகள் நடைபெற்றன. தமிழ் நாட்டில் உள்ள பல்கலைக்கழகம் ஒன்றில் இஸ்லாமியத் தமிழ் இலகியத்துறை ஒன்றின் இன்றியமையாமையை அத்தகைய மாநாடுகளில் அனைவரும் வற்புறுத்தலாயினர். 1974-இல் நடந்த சென்னை மாநாட்டில் அப்போதைய முதலமைச்சர் அதற்கான ஏற்பாடுகளை மேற்கொள்ள முன் வந்தார். அவர் விரும்பியவாறு

அப்பொழுது முஸ்லிம்களின் ஒத்துழைப்பைப் பெற முடியவில்லையாதலால் அந்நன்முயற்சி நிறைவேறவில்லை. 1978-இல் காயல் பட்டணத்தில் நிகழ்ந்த மூன்றாவது மாநாட்டில் தமிழக அரசு அக்குறையை நிவர்த்தி செய்ய முன் வந்தது. 1979-ஆம் ஆண்டில் கொழும்பில் நடைபெற்ற நான்காம் மாநாட்டில் மாண்புமிகு கல்வி அமைச்சரும், மாண்புமிகு நீர்ப்பாசன அமைச்சரும் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் அத்தகைய இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறை நிறுவப்பட்டுள்ளது என அறிவித்தார்கள்.

அந்தக் கால கட்டத்தில் டாக்டர் வி. சி குழந்தை சாமி அவர்கள் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராகக் கடமை ஆற்றினார். அந்தப் புதுத்துறையை வழிநடத்தக்கூடிய ஒருவரின் பணியைப் பெறும் வழிவகைகள் அப்பொழுது ஆராயப்பட்டன. இலங்கையிலிருந்தாவது ஒருவரைப் பெறவேண்டும் என்று அவர் கருத்துத் தெரிவித்தார். அவர் இலங்கைக்குச் சிறப்புப் பணிபுரிய சென்றமையால் அவர் காலத்தில் அந்தத்துறை இயங்க ஆரம்பமாக வில்லை. எனினும் அந்தப் பதவியை நிரப்புவதற்கான நடவடிக்கைகளை அவர் மேற் கொண்டிருந்தார். இடைக்காலத்தில் திருவாளர் பழனிவேல் ராஜன் அவர்கள் தலைமையில் செயல்பட்ட ஆட்சிக் குழுவினர் அதற்கென ஒருவரைத் தெரிவு செய்வதற்கான தேர்வுக் குழு ஒன்றை நியமித்தனர். அந்தக் தேர்வுக் குழுவில் இன்றையத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம், முந்தைய துணைவேந்தர் டாக்டர் தெ. பொ.மீனாட்சிசுந்தரம், உயர் நீதிமன்றப் பிரதம நீதிபதியாகிய டாக்டர் எம். எம். இஸ்மாயில் ஆகியோர் அங்கம் வகித்தனர். அதன் பயனாக நாம் இருவரும் (டாக்டர் எம். எம். உவைஸ், டாக்டர் பீ. எம். அஜ்மல்கான்) முறையே பேராசிரியராகவும் துணை ஆய்வாளராகவும் நியமனம் பெற்றோம். மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறை 1979-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 15-ஆம் தேதியிலிருந்து செயல்படத் தொடங்கியது.

அப்பொழுது டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகக் கடமை புரிந்தார்கள். பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராகவும் பேராசிரியராகவும் டாக்டர் முத்துசண்முகம் பிள்ளை அவர்கள் பணி புரிந்தார். அவர்கள் இருவரினதும் வேண்டுகோளுக்கிணங்கவே ‘தமிழிலக்கிய அறபுச் சொல்லகராதி’ தயாரிக்கப்பட்டது. ஒவ்வொன்றும் ஏறத்தாழ அறுநூறு பக்கங்களைக் கொண்ட ஆறு தொகுதிகளாக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு எழுதும் பணி மேற்கொள்ளப் பட்டது. அதன் பயனாக இந்தத் தொகுதி வெளிவருகின்றது. இந்தத்

தொகுதியில் கி.பி. 1700 ஆண்டு வரையிலான தொடக்ககால இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் ஆராயப்பட்டுள்ளன. இஸ்லாமிய அடிப்படையிலான தமிழ்க் காப்பியங்கள் இரண்டாந் தொகுதியாகவும் சிற்றிலக்கியங்கள் மூன்றாந் தொகுதியாகவும் சூபி மெய்ஞ்ஞான இலக்கியங்கள் நான்காந் தொகுதியாகவும் அறபுத் தமிழ் இலக்கியங்கள் ஐந்தாந் தொகுதியாகவும் உரைநடையும், தற்கால கவிதைகளும் ஆறாந் தொகுதியாகவும் ஆராயப்படுகின்றன. அத்தோடு இரண்டாயிரத்துக்கும் அதிகமான இஸ்லாமியத் தமிழ் இலக்கிய நூல்கள் ஒன்று திரட்டப்பட்டு அவற்றை உள்ளடக்கிய நூல் விவரப் பட்டியல் ஒன்று வெளிவர உள்ளது. அந்த நூல் விவரபபட்டியலில் ஆண்டு அடிப்படையிலான அகர வரிசையும் நூல் அடிப்படையிலான அகர வரிசையும் நூலாசிரியர் அடிப்படையிலான அகர வரிசையும் இடம் பெற்றுள்ளன. டாக்டர் முத்துசண்முகம் பிள்ளை அவர்களுக்குப் பின்னா தமிழ்ப் பேராசிரியர் பதவியிலமர்ந்தவர் டாக்டர் ராம. பெரிய கருப்பனார் அவர்கள். 'தமிழண்ணல்' என்றும் அழைக்கப்படும் பேராசிரியர் அவர்கள் பலவழிகளிலும் எமக்கு ஊக்கம் ஊட்டி வந்தார்.

அந்தக் கால கட்டத்தில் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களுக்குப் பதிலாக பேராசிரியர் ஜே ராமச்சந்திரன் அவர்கள் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகப் பதவியில் அமர்ந்தார். அவரும் எமக்குப் பலவழிகளில் ஊக்கம் ஊட்டினார். எங்கள் ஆய்வுப் பணியை வளர்க்கவும் எமது துறை நூலகத்தைப் பெருக்கவும் எமக்கு எல்லா வசதிகளையும் செய்து கொடுத்த மேற் கூறப்பட்ட அனைவருக்கும் எமது உளங்கனிந்த நன்றி உரித்தாகட்டும்.

இன்று துணை வேந்தராகக் கடமையாற்றும் டாக்டர் சீனி. கிருஷ்ணசுவாமி அவர்கள் பல்கலைக்கழகத்தின் உயிரியல் துறைத் தலைவராகவும் பேராசிரியராகவும் தனி அலுவலராகவும் கடமையாற்றிய பொழுதே எங்களுக்குப் பல வழிகளிலும் உதவி உள்ளார். உற்சாகப்படுத்தி உள்ளார். காட்சிக்கு இனியராகவும் எளியராகவும் திகழும் டாக்டர் சீனி. கிருஷ்ண சுவாமி அவர்கள் நிச்சயமாக எம்பணிகளில் ஆக்கம் அளித்து ஊக்கம் ஊட்டுவார் என்னும் திடமான நம்பிக்கை எமக்குண்டு.

இந்தத் தொகுதிக்கு அருமையான ஓர் அணிந்துரையை துணை வேந்தர் கிருஷ்ண சுவாமி அவர்கள் வழங்கி உள்ளார். அவருக்கு எமது உளங்கனிந்த நன்றி உரித்தாகுக. ஏனைய தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய நூலாசிரியர்கள் புறக்கணித்திருந்த இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பற்றிய வரலாற்றினை ஓர் இயலில் தமது தமிழ்த் தென்றல் என்னும் நூலிலும் இரண்டு இயல்களில் தமது கலையும்

பண்பும் என்னும் நூலிலும் முதலில் சுட்டிக் காட்டிய பெருமை கலாநிதி சு. வித்தியானந்தன் அவர்களையே சாரும். பேராதனைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருந்து இப்பொழுது யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத் துணை வேந்தராகப் பணிபுரிந்துவரும் பேராசிரியர் சு. வித்தியானந்தன் அவர்கள் எமது இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு தொகுதி ஒன்றினைப் பற்றிய தமது கருத்துக் களைத் தொகுத்துத் தந்துள்ளார். அவை சிறப்புரையில் இடம் பெற்றுள்ளன. அவருக்கும் எமது பணிவன்பான நன்றி. பேராசிரியர் ராம பெரிய கருப்பனார் (தமிழ் அண்ணல்) அவர்கள் இந்தத் தொகுதி யில் தாம் சிறப்பாகக் கருதியவற்றை முகவுரையில் தந்துள்ளார். அவருக்கும் எமது உள்ளார்ந்த நன்றி.

இந்நூலினைப் பல்கலைக்கழக வெளியீடாக வருவதற்கு உற்றுழி உதவி, உறுதுணை புரிந்த பல்கலைக்கழக ஆட்சிக் குழுவினருக்கு எமது உள்ளங்கனிந்த நன்றி உரித்தாகட்டும்.

டாக்டர் கதிர் மகாதேவன் அவர்களை நாம் மறந்துவிடமுடியாது. நாம் எழுதியவற்றை நல்ல முறையில் அச்சாக்கும் பொறுப்பு அவரையே சாரும். இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றின் முதலாந் தொகுதியைப் பதிப்பித்தலில் சலியாது ஈடுபட்ட டாக்டர் கதிர் மகாதேவன் அவர்களுக்கும் அப்பணியை நிறைவேற்ற அவர் களுடன் ஒத்துழைத்த அவர் தம் அலுவலர்கள் அனைவருக்கும் எமது மனமார்ந்த நன்றி.

'செய்வன திருந்தச் செய்' என்பதற்கிணங்க கி.பி. 1700 வரையி லான தொடக்க கால இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றின் முதலாந் தொகுதியைச் செவ்வனே அச்சாக்கித் தந்த திரீயெம் பிரிண்டர்சுக்கும் அச்சியற்றும் துறையில் பயிற்சிச் சான்றிதழ் பெற் றுள்ள அதன் தலைவர் அல்ஹாஜ் எம். எம். மீராசாகிபு அவர்களுக்கும் நாம் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம். நன்றி.

அதே போன்று தமது ஓய்வு நேரத்தினைப் பொருட்படுத்தாது அச்சுப்பிழைகள் ஏற்படாதவாறு கண்ணும் கருத்துமாய்க் கடமை புரிந்த ஜனாப் எம். சையித் முகம்மது (ஹஸன்) அவர்களை நன்றி உணர்வோடு குறிப்பிட விரும்புகின்றோம்.

ஆசிரியர்

# உள்ளடக்கம்

# இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு

## தொகுதி ஒன்று

### முதல் இயல் : பின்னணி

எல்லாம் எமக்கு ஊர்; எல்லோரும் எமது சுற்றத்தவர். இவை விழுமிய கருத்துக்கள். புறநானூறில் இடம் பெற்றுள்ளன இக்கருத்துக்கள். இவற்றைப் பாடியவர் கணியன் பூங்குன்றனார். ஆழமான கருத்துப் பொதிந்த இக்கூற்றினை 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார் கணியன் பூங்குன்றனார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிடப் பட்டவை இக்கருத்துக்கள். எனினும் இவை இன்றும் புதுக் கருத்துக் களாகவே நமக்குப் புலனாகின்றன. இன்றைய சிக்கல் நிறைந்த இந்த உலகத்துக்கு இத்தகைய உயர்ந்த உளப்பாங்கு உடையவராய் மக்கள் இருத்தல் மிக இன்றியமையாததாய் உள்ளது. இவ்விழுமிய கருத்துக்கள் நடைமுறைப்படுத்தப்பட்டால் நம்மிடையே நிலவும் பகைமை அகன்றுவிடும்; பூசல் ஒழிந்துவிடும்; சிக்கல் தீர்ந்துவிடும்; கருத்து வேறுபாடு மறைந்துவிடும்; பிரிவு மனப்பான்மை பிரிந்துவிடும்; உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் வேற்றுமை வேரறுந்துவிடும்; வல்லரசு சிற்றரசு என்னும் பாகுபாடு குன்றிவிடும். ஐக்கியம் வளரும்; அமைதி நிலவும்; செல்வம் கொழிக்கும்; நம்பிக்கை பெருகும்; விட்டுக் கொடுக்கும் உளப்பாங்கு வலியுறும்; வாழ்வு வளம்பெறும்.

இத்தகைய விழுமிய கருத்துக்களைக் கொண்டவர்களாய்ப் பண்டைய தமிழ் மக்கள் வாழ்ந்தனர் என்பதற்குப் பண்டைய தமிழ் இலக்கிய நூல்கள் சான்று பகருகின்றன. பண்டுதொட்டே பல்வேறு இனத்தவரும் வெவ்வேறு சமயத்தவரும் தமிழ் மொழியைப் பேணிப் போற்றி வளர்த்து வந்துள்ளனர். இதன் பயனாகப் பல்வேறு இனத்த வரும் வெவ்வேறு சமயத்தவரும் தத்தமதே என உரிமை பாராட்டக் கூடிய அளவுக்குத் தமிழ் இலக்கியப் பரப்பு நிறைந்து வழிகின்றது. பல்வேறு சமயப் போதனைகளைக் கொண்டு அவ்விலக்கியப் பரப்பு மிளிர்கிறது. அத்தகைய பல்வேறு சமயங்களும் வெவ்வேறு கொள்கை களைக் கடைப்பிடித்து வருகின்றன எனினும் அவ்வச் சமயங்களின் விழுமிய போதனைகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ள தீந்தமிழ் நூல்கள் மிகப்பல. உலகில் வாழும் பல்வேறு பிரதானமான சமயத்தவர்களாலும் போற்றப்படும் ஒருசில மொழிகளுள் தமிழும் ஒன்று. சைவம், வைணவம், பௌத்தம், சமணம், கிறித்தவம், இஸ்லாம் முதலிய பல சமயக் கொள்கைகளையும் அறியக்கூடிய

மொழியாக இனிய தமிழ் மொழி விளங்குகிறது. அதேபோன்று பல்வேறு சமயத்தைச் சேர்ந்தவர்களும் தத்தம் இலக்கியங்கள் உள்ள இத்தமிழ் மொழியைத் தத்தம் வேத மொழியாக, புனித மொழியாகக் கொண்டு கருமமாற்றுகின்றனர்.

இங்ஙனம் சீரும் சிறப்பும் பெற்ற தமிழ் மொழியில் பேரும் புகழும் வாய்ந்த இஸ்லாமிய மார்க்க அடிப்படையில் பாவளமும் உரைவளமும் மிக்க இலக்கியங்கள் தோன்றலாயின; மலரலாயின; நறுமணம் வீசத் தலைப்பட்டன; போற்றப்படலாயின; படித்துப் பயனடையக் கூடியனவாய்த் திகழலாயின; இன்றும் சிறந்து விளங்கிக் கொண்டிருக்கும் தன்மையனவாயின. இவை ஏன் தோன்றின? எங்கு தோன்றின? யாரால் படைக்கப்பட்டன? அத்தகைய படையலுக்கு ஏதுவாக, வாய்ப்பாக அமைந்த சூழ்நிலைகள் யாவை? இன்னோ ரன்ன வினாக்களுக்கு முதற்கண் விடை காண முற்படுவோம்.

## முஸ்லிம்களும் தமிழகமும் :

முஸ்லிம்களின் தமிழ்நாட்டு வருகையைத் தொடர்ந்தே இஸ் லாமியத் தமிழ் இலக்கியங்கள் தோன்றலாயின. முஸ்லிம்களின் வருகையுடன் அது ஆரம்பித்திருக்கக் காரணம் இல்லை. தமிழ் மக்களுடன் கலந்து வாழ்ந்து பழகிய பின்னரே இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் தோன்றியது எனலாம். தமிழில் பாண்டித்தியம் பெற்ற பின்னரே இம்முயற்சியில் முஸ்லிம் மக்கள் ஈடுபட்டிருப்பர். இஸ்லா மியத் தமிழ் இலக்கியம் எப்பொழுது தோன்ற ஆரம்பித்தது என்பன அறிவதற்கு முன்னர் முஸ்லிம் மக்கள் தமிழ் நாட்டுக்கு எப்பொழுது வந்தனர் என்பதை நாம் அறிதல் வேண்டும்.

இஸ்லாம் உலகில் பரவுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே முஸ்லிம் மக்களின் மூதாதையரான அறபு மக்கள் தமிழ் நாட்டுடன் தொடர்பு கொண்டிருந்தனர். தமிழ் நாட்டுக்கு அவ்வறபு மக்கள் வந்து, கிழக்கு மேற்கு வணிகத் துறையிலே பெரிதும் ஈடுபட்டு வந்தனர். அதற்கான அகச் சான்றுகளைச் சங்ககால இலக்கியங் களிலே நிறையக் காணலாம். சங்க கால இலக்கியங்களான பத்துப் பாட்டு, எட்டுத் தொகை போன்றவற்றில் அவ்வறபு மக்களைக் குறிப்பதற்கு யவனர் என்னும் பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

யவனர் என்பவர் யார்? யவனர் என்னும் மக்கள் வாழ்ந்த பகுதி யவனம் என அழைக்கப்பட்டதா? அப்படியாயின் அவ்வாறு அழைக்கப்பட்ட யவனம் எங்கு உள்ளது? இன்றுள்ள உலகப் படத்தில் யவனம் என்று ஒரு நாடு இல்லை. ஆனால் அந்த நாடு எங்கே இருந்தது என்பதை அல்லது அந்தப் பெயரோடு தொடர்புடைய

ஒரு பிரதேசம் இப்பொழுது எங்கு இருக்கிறது என்பதை ஒருவாறு கூறலாம்.

மத்திய தரைக் கடலுக்கு வட கிழக்கே இரண்டு கடல்கள் உள்ளன. ஒன்று ஏஜியன் கடல். மற்றது ஐயோனியன் கடல். இந்த ஐயோனியன் கடலுக்குக் கரையாக அமைந்துள்ள பிரதேசம் அறபு மக்கள் பெரும்பான்மையாக வாழும் பகுதியாகும். அறபுத் தீபகற்பத்தின் வடமேற்குப் பகுதியும், பலஸ்தீனம், சிரியா, லெபனான், துருக்கி, சைப்பிரஸ் முதலிய நாடுகளும் இந்த ஐயோனியன் கடலைச் சுற்றிவர உள்ள நாடுகளாகும். இக்கடலைச் சுற்றிவர உள்ள பிரதேசமே ஐயோனியன் கடற்கரைப் பிரதேசமாகக் கணிக்கப்பட்டுள்ளது. இப்பிரதேசத்திலிருந்து கீழை நாடுகளுக்கு வந்தவர்களே ஒரு காலத்தில் ஐயோனியர் என்று அழைக்கப்பட்டனர். பின்னர் இவர்களே யவனர் என அழைக்கப்பட்டனர். மிகப் பழைய காலத்திலே இப்பிரதேசத்திலிருந்து கீழை நாடுகளுக்கு வந்த கிரேக்கரும் ரோமானியரும் முறையே இப்பெயரால் அழைக்கப் படலாயினர். அவர்களைத் தொடர்ந்து அப்பிரதேசங்களிலிருந்து இங்கு வந்த அறாபியர் யவனர் என வழங்கப்பட்டனர். இதிலிருந்து ஐயோனியர் என்ற பதமே காலப் போக்கில் யவனர் என மருவி வந்திருக்கிறது எனலாம். தமிழ் இலக்கிய மரபில் யவனம் ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. கிரீசு, அறேபியா முதலிய மேல் நாடுகளுள் ஒன்றாகக் கணிக்கப்படுகின்றது. அந்நாட்டவரே தமிழில் யவனர் என அழைக்கப்படுகின்றனர். அந்நாட்டையே மதுரைக் காஞ்சியில் வரும் 'நனந்தலை தேசத்து' என்னும் சொற்றொடர் சுட்டுவதாகக் கூறுவர். அங்கிருந்து தமிழ் நாட்டுக்குக் குதிரைகள் கொண்டுவரப்பட்டன என்று கூறுகிறது மதுரைக் காஞ்சி.

விழுமிய நாவாய் பெருகி நீரோச்சுநர்
நனந்தலை தேஎத்து நன்கல னுய்ம்மார
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியோ டனைத்தும்
(321-323)

இவ்வாறு அங்கிருந்து குதிரைகளைக் கொண்டுவந்த யவனர் எப்பொழுதும் போருக்குத் தயாராய் இருந்தனர் என்கிறது முல்லைப் பாட்டு. அவர்களுடைய போர்க் கோலத்தை ' புரவியை அடிக்கின்ற சம்மட்டி வளைந்து கிடக்கின்ற உடை அச்சம்மட்டி மறையும்படி வடிம்பு தாழ்ந்து பெருக்குஞ் செறிதலை உடைய புடைவை உடையினையும் சட்டை இட்ட அச்சம் வரும் தோற்றரவினையும் இயல்பாக வலி கூட்டிய மெய்யினையுமுடைய தறுகண்மையினை உடைய யவனர்' என முல்லைப்பாட்டு இவ்வாறு வருணிக்கிறது.

மத்திகை வளைஇய மறிந்து வீங்கு செறிவுடை
மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலியுணர் யாக்கை வன்கண் யவனர் (54-61)

யவனர்களால் இயற்றப்பட்ட விளக்கின் சிறப்பினை

யவன ரியற்றிய வினைமாண் பாவை

என நெடுநல்வாடையும் (101)

...........யவனர்
ஓதிம விளக்கின் உயர்மிசைக் கொண்ட

என பெரும்பாணாற்றுப் படையும் (315-316) விவரித்துள்ளமையைக் காணலாம்.

யவனரின் தமிழ் நாட்டு வருகையின் பிரதான குறிக்கோள் அகநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்கள் வியாபார நோக்கமாகவே வந்தனர். கிழக்கு நாடுகளுக்கு அவசியமான பொருள்களை மேற்கிலிருந்து கொண்டுவரவும் மேற்கு நாடுகளுக்குத் தேவையான பொருள்களைக் கிழக்கிலிருந்து கொண்டு செல்லவுமே அவர்கள் அங்கு வந்தனர். பண்டமாற்று வியாபாரத்திலேதான் அவர்கள் பெரிதும் ஈடுபட்டுவந்தனர்.

சேர மன்னர்க்குரியது சுள்ளி ஆறு. இது பேரியாறு என்றும் அழைக்கப்படுகிறது. இந்த அழகிய பெரிய ஆற்றில் அலை மோதுவதால் நுரை ஏற்படுவது வழக்கம். அந்த நுரைகள் கலங்கிவிடுகின்றன. அவ்வாறு கலங்குவதற்குக் காரணம் அதனூடே கப்பல் செல்வதாகும். அவை சாதாரண கப்பல்கள் அல்ல. அவை தொழில் திறமை மிக்கனவாய் அமைக்கப்பட்டவை; மாட்சிமையுடையவை; அழகியவை; யவனர் என்னும் மேலைநாட்டு வணிகர் கொணர்ந்தவை. அக்கப்பல்கள் மேற்கு நாடுகளிலிருந்து பொன்னைச் சுமந்து கொண்டு வந்தன. மீண்டும் கிழக்கு நாடுகளிலிருந்து மிளகுப் பொதிகளை மேற்கு நாடுகளுக்கு ஏற்றிச் சென்றன. இவ்வாறு பண்டமாற்று வியாபாரத்தில் ஈடுபட்டனர் யவனர்.• இத்தகைய வளம் பொருந்தியது முசிறி என்னும் பட்டினம். இச்செய்தியே சுருக்கமாக அக நானூற்றிலே இவ்வாறு விளக்கப்படுகின்றது.

சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமா ணன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி........... (149)

இங்கே கறி என்னும் சொல் மிளகினைக் குறிக்கிறது. மிளகு போன்ற வாசனைத் திரவியங்களினால் ஈர்க்கப்பட்டே யவனர் முதலியோர் பொதுவாகக் கிழக்கு நாடுகளுக்கும் சிறப்பாகத் தமிழ் நாட்டுக்கும்

வருகை தந்தனர். அவர்கள் பெரிதும் விரும்பிய பொருள்களுள் ஒன்று மிளகு. இதனாலேயே 'யவனப் பிரியம்' என மிளகு அழைக்கப்படுகிறது. இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ள முசிறி என்ற நகர்ப் பெயரும் அறபு மொழியிலிருந்து வந்தது எனவும் கூறுவர்.

எட்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கருதப்படும் திவாகர நிகண்டு 'யவனர் சோனகர்' (பக்கம் 31) எனக் குறிப்பிடுகிறது. சோனகர் தாம் யவனர் என நிரூபிக்கிறது. அதன் பின்னர் தோன்றிய பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டும் அவ்வாறே கூறுகின்றது (பக்கம் 131). திவாகர நிகண்டு கம்மாளர் பத்து வகையினரைக் குறிப்பிடுகின்றது. அவர்களுள் யவனர் கம்மாளராகக் குறிப்பிடப் படுகின்றனர். பிங்கல நிகண்டு கம்மாளர் ஐந்து வகையினர் என்றும் அவர்களுள் யவனர் ஒரு வகையினர் என்றும் குறிப்பிடுகின்றது.

யவனர் தச்சர்களாக இருந்தனர் என்பதை மணிமேகலை,

அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும் (19 : 108)

என்றும் பெருங்கதை,

யவனத் தச்சரும் அவந்திக் கொல்லரும் (1 : 58 : 40)

என்றும் குறிப்பிடுவதைக் காணலாம். உண்மையிலேயே யவனர்கள் தச்சுத் தொழிலில் திறமை மிக்கவர்களாக இருந்தனர் என்பதற்கு சீவக சிந்தாமணி போன்ற காப்பியங்களில் பல சான்றுகள் உள்ளன. பொறிகள் இயற்றுவதில் யவனர்களுக்கு இருந்த திறமையைக் குறிப்பிடவந்த திருத்தக்கதேவர், அவர்களால் இயற்றப்பட்ட பொறி களைக் குறிப்பிடுகின்றார். 'அம்புகளையும் வேல்களையும் கற்களை யும் உமிழ்வனவாக - உமிழ்ந்து எறிவனவாக யவனர் தங்கள் அறிவின் திறமையினால் பொறிகள் அமைத்தனர்' இக்கருத்துக்களே இங்கு இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

அம்புமிழ்வ வேலுமிழ்வ கல்லுமிழ்வ வாகித்
தம்புலங்க ளால்யவனர் தாட்படுத்த பொறியே
(நாமகள் இலம்பகம் : 74) (103)

பெருங்கதையிலும் யவனர் கைவன்மை மெச்சப்படுகிறது. அவர்களால் இயற்றப்பட்ட புதுவிதமான ஊர்தியைப்பற்றி பெருங் கதை வியந்தோதுகின்றது. அப்பொறி இவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளது.

அவன் யவனச் சேரியில் வாழ்ந்தான். யவனச் சேரி மறவர் தலைவன் அவன் விரும்பிய உறவினருள்ளும் சிறந்த உறவினனாக இருந்தான். பொன்னாலான அணிகலன்களை அணிந்திருந்த அந்நாட்டு அரசனான உதயணகுமாரனுக்கு மிகவும் வேண்டியவன்.

கண்மணி போன்று நெருங்கியவன். சிறந்த நண்பன் யவன வீரன். அவன் தன் கைப்பட ஒரு பொறியை இயற்றினான். அது மிக நுண்ணிய தொழில் சிறப்போடு திகழ்ந்தது. சூரியனுடைய தேர் வானத்தில் இயங்கும் அளவு வேகத்தில் நிலத்தின்மேல் இயங்க வல்லது. எத்தகைய ஆற்றல் உள்ளவர்களாலும் உணர்ந்துகொள்ள முடியாதது. அரிவிசை ஆணிகைக் கொண்டது. இரும்பினாலான இறகுகளைக் கொண்டது. யானை மருப்பாலாய பலகைகளால் பக்கங்கள் அழகு செய்யப்பட்டது. குதிரை முதலியன பூட்டப் படாமலே இயந்திரத்தினாலே இயங்கவல்லது. மாட்சிமை உடைய தொழில் திறன் அமைந்தது. அது ஓர் இயந்திரத் தேர். இக் கருத்துக்களே பெருங்கதையில் இவ்வாறு அமைந்துள்ளன.

அமரிய நண்பின் தமருளும் தமராம்
யவனப் பாடி ஆடவர் தலைமகன்
தமனியப் பைம்பூண் தம்மிறைக் கியன்ற
கண்மணி அன்ன திண்நட் பாளன்
கையிற் புனைந்த கழிநுண் சிறப்பொடு
வையகத் தியங்கும் வெய்யவன் ஊரும்
தேரின் அன்ன செலவிற் றாகி
யாவரும் அறியா அரும்பொறி ஆணியின்
இருப்புப் பத்திரம் இசையக் கவ்வி
மருப்புப் பலகை மருங்கணி பெற்றுப்
பூணி இன்றியும் பொறியின் இயங்கும்
மாண்வினை வையம்......

(இலாவண காண்டம் : யூகி போதரவு : 167-178)

இன்னோர் இடத்தில் 'செயற்கரிய பொறிகளைக் கூர்ந்துணர்ந்து இயற்றுவர் யவனர்கள்' என இவ்வாறு பெருங்கதையில் வருணிக்கப் பட்டுள்ளது.

அரும்பொறி நுனித்த யவனக் கைவினை

(மகத காண்டம் : பதுமாபதி போந்தது : 48)

யவன தேசத்து வேலைப்பாடமைந்த சிறு பெட்டி யவனப் பேழை என அழைக்கப்படுகிறது. யவனப் பேழை பற்றிச் சிந்தாமணி குறிப்பிடுகின்றது.

பொன்சொரி கதவு தாளில் திறந்துபொன் யவனப் பேழை

(நாமகளிலம்பகம் : 85) (114)

என்றும்,

எரிமணி செம்பொன் ஆர்ந்த இராயிரம் யவனப் பேழை

(காந்தருவதத்தையார் இலம்பகம் : 65) (557)

அதேபோன்று யவனர்களால் நுண்கலைத் திறனுடன் செய்யப் பட்ட செப்பு அதன் சிறப்பியல்பு காரணமாக 'யவனச் செப்பு' என அழைக்கப்பட்டது. இந்தச் செப்புக்களிலும் பலவகை உண்டு. ஆடைகள் வைப்பதற்குச் செய்யப்படும் செப்பு ஒருவகை. இவ்வகை யான செப்பைப் பற்றிச் சீவக சிந்தாமணி குறிப்பிடுகின்றது. 'மணிகளால் செய்யப்பட்ட யவனச் செப்பிலிருந்து தூய எடுத்து' என்பதனை.

மணியியல் யவனச் செப்பின் மங்கலத் துகிலை வாங்கி
(குணமாலையாரிலம்பகம் : 296) (1146)

எனத் திருத்தக்க தேவர் வருணித்துள்ளார். மற்றொருவகை வெற்றிலைபாக்கு முதலியன இடப்படுவதற்காகத் தயாரிக்கப்படும் அடப்பை. இதனைப் பற்றியும் சீவக சிந்தாமணி குறிப்பிடு கின்றது. விளிம்பில் முத்துக்கள் அழுத்தப்பட்டிருந்தன. யவனத் தச்சரின் கைவினைய உடையன. தெளிந்த பொன்னாலானவை. அத்தகைய அடப்பையிலே சில பொருள்கள் இடப்பட்டன. பறிக்கப் பட்ட காயும் மணங்கமழ் வெற்றிலையும் முகவாசமும் தனிப்பாகும் இடப்பட்டன. இக்கருத்துக்களே இவ்வாறு அமைந்துள்ளன.

விளிம்புமுத் தழுத்திய யவனக் கைவினைத்
தெளிந்தபொன் னடைப்பையும் பாகுசென்றனவே
(கேமசரியாரிலம்பகம் : 67) (1478)

யவனரின் கடமை உணர்ச்சி தமிழ் இலக்கியத்தில் விதந்தோதப் பட்டுள்ளது. தாம் எந்த வேந்தனின் கடமை புரிகிறார்களோ அந்த வேந்தன்கூட அவ்வாறு கடமை புரிந்தவர்களின் பெருமை பேணாது ஒழுகினார். அத்தகைய சந்தர்ப்பத்திலும் தமது கடமையே கண்ணாய் இருந்தனர் யவனர். பகைவர்களைக் காய்ந்து கலக்கினர். அவர் களுடைய மற்றொரு பண்பும் இங்கு குறிப்பிடப்படுகிறது. முழுமை யான வழிபாட்டுத் தொழிலின்கண் முதலிடம் பெற்று விளங்கினர். அதன் பயனாக பெருஞ் செல்வத்தோடு திகழ்ந்தார்கள். வெற்றி வீரர்களாகப் பேர் பெற்றார்கள். இத்தகையவர்களைக் கொண்ட யவனச்சேரி நூறு அங்கிருந்தன. பெருங்கதையில் இக்கருத்துக்கள் அமைய இடம் பெற்றுள்ள பாடல் இது.

விண்ணுற நிவந்த பண்ணமை படைமதில்
வாயிலு மருங்கிலும் காவல் கண்ணி
வேந்துபிழைத் தொழுகினும் காய்ந்து
முழுப்பரி சார முதற்கண் எய்தி
விருப்பெருஞ் செல்வமொடு வென்றி தாங்கிய
ஐம்பதி னிரட்டி யவனச் சேரியும்
(மகதகாண்டம் : புறத்தொடுங்கியது : 3-8)

இங்கு, பரிசாரம் என்பது வழிபாட்டினைக் குறிக்கும்.

மக்கள் யவனப் பேழைகளை ஏந்திச் சென்றனர். அந்த யவனர் எத்தகையவர் என்று இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. வல்லோன் வகுத்த நல்வினைக் கூட்டத்து யவனர்கள் அவர்கள். இக்கருத்துக் களே இங்கு இவ்வாறு அமையப் பெற்றுள்ளன.

வல்லோன் வகுத்த நல்வினைக் கூட்டத்
தியவனப் பேழையு ளடைந்தோ ரேந்திய
(மகதகாண்டம் : பதுமாபதிவதுவை : 213 - 214)

அடுத்து யவனப் பாவைகள் பற்றிய குறிப்பு வருகிறது. யவனரால் செய்யப்பட்ட பாவைகளே இங்கு குறிப்பிடப்படுகின்றன. எந்தெந்த இடங்களில் அவசியமாகப் பாவைகள் இருக்க வேண்டுமோ அந்தந்த இடங்களில் எல்லாம் பாவைகள் வைக்கப்பட்டிருந்தன. அந்தப் பாவைகளின் கையிலே அகல் இருந்தன. அந்த அகலின்கண் தூண்டுதலை உடைய திரி இடப்பட்டிருந்தன. அங்கே நெய் சொரிந்து கொண்டிருந்தன. அவ்வாறு அவை எரிந்துகொண்டு இருந்தன. இந்தக் காட்சி பெருங்கதையிலே இவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளது.

வேண்டிடந் தோறும் தூண்டுதிரிக் கொளிஇக்
கைவயிற் கொண்ட நெய்சற் சொரியும்
யவனப் பாவை அணிவிளக் கழல (1 : 47 : 175-177)

பெருங்கதையில் மற்றோர் இடத்தில்,

ஆரியச் செப்பும் யவன மஞ்சிகையும் (1 : 37 : 76)

குறிப்பிடப்படுகின்றன.

பெருங்கதையில் ஒரு யவன அரசனைப் பற்றிய குறிப்பு இடம் பெறுகிறது. அவன் கடல் கடந்த நாட்டை ஆளுபவன். அவன் வாசவதத்தையின் தகப்பனான மன்னனுக்குத் திறை செலுத்தி வந்தான். குதிரைகளையும் விமானங்களையும் இன்னும் பல விலை மதிக்க முடியாத பொருள்களையும் திறையாக அனுப்பினான். ஆனால் இம்மன்னன் அந்த யவன அரசனிடமிருந்து இவற்றைப் பெற மறுத்தான். யவன அரசனுடைய மகளிடம் ஒரு பாவை இருந்தது. திறையாகச் செலுத்தப்பட்ட அத்தனை பொருள்களுக்கும் பதிலாக அந்தப் பாவையே தனக்கு வேண்டும் என்றான். யவன அரசனும் இணங்கினான். அவனுக்கு அப்பாவை கொடுக்கப்பட்டது. அதற்குத் தனது பட்டத்து அரசியின் பெயரை இட்டான். அவனுடைய ஏனைய புதல்விகள் அப்பாவையைப் பெற விரும்பினர். ஆனால் அம் மன்னனோ அப்பாவையைத் தனது மகள் வாசவதத்தைக்கே வழங்கி னான். அதற்கென மாளிகை போன்ற ஒரு சிறு கோயிலையும் அமைத்து அப்பாவையை அதனுள் வைத்தான். இக்கருத்துக்களே பெருங்கதையில் உள்ள பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

அடுதிரை முன்னீர் யவனத் தரசன்
விடுநடைப் புரவியும் விசும்பிவர்ந் தூரும்
கேடில் விமானமும் நீரியங்கு புரவியும்
கோடி வயிரமும் கொடுப்புழிக் கொள்ளான்
சேடிள வனமுலை தன்மகள் ஆடும்
பாவை அணிதிறை தருகெனக் கொண்டுதன்
பட்டத் தேவி பெயர்நனி போக்கி
எட்டினி ரட்டி ஆயிரம் மகளிரும்
அணங்கு விழையவும் அருளான் மற்றென்
வணங்கிறைப் பணைத்தோள் வாசவதத்தைக்
கொடுமக ளாகெனப் பெருமகன் பணித்த
பாவையும் மற்றதன் கோயிலும்.
(வத்தவ காண்டம் : பிரச்சோதனன் தூதுவிட்டது : 59-70)

யவனருடைய மொழியைக்கூடப் பயின்றதற்கான சான்றுகள் பெருங்கதையில் உள்ளன. வாசவதத்தையை அலங்கரிப்பவன் கூற்றாக யவனமொழிப் பயிற்சி பற்றிய குறிப்பு அமைந்துள்ளது.

..............புனைவோன்
பற்றிய யவன பாடையில் எழுந்தவள்
கற்றனள் என்றெடுத் துற்றவர் உரைப்ப
(வத்தவகாண்டம் : முகவெழுத்துக்காதை : 59 - 60)

இலங்கையில் வழங்கும் சிங்கள மொழியிலும் யவனர் பற்றிய குறிப்புக்கள் வருகின்றன. வடமொழி, பாளிமொழி போன்ற ஆரிய மொழிகளின் செல்வாக்கினைப் பெற்ற சிங்கள மொழியில் யவன என்றே யவனர் அறிமுகப்படுத்தப்படுகின்றனர். பாளி மொழியில் பயன்படுத்தப்படுவதுபோல் யொன், யோன் என்னும் பதங்களையும் இதே கருத்தில் சிங்கள மொழியில் பயன்படுத்தக் காணலாம். யோனக என்னும் பிரயோகமும் அங்கு உண்டு. யோனக என்னும் சிங்களச் சொல் சோனகர் என்பதைக் குறிக்கவே பயன்படுத்தப்படுகின்றது. சிங்கள மொழியில் தோன்றிய பழைய இலக்கியங்களிலும் சோனகரைப் பற்றிய குறிப்புகள் வரும்பொழுது யோனக என்றே உபயோகப் படுத்தப்படுவதைக் காணலாம். சோனக வீதி என்பதுகூட சிங்கள மொழியில் யோனக வீதி அல்லது யொன் வீதி என்றே இலங்கையில் இன்றும் வழங்கப்படுகின்றது.

சென்ற பல நூற்றாண்டுகளாக வாழையடி வாழையாக இலங்கையில் வாழ்ந்து வரும் முஸ்லிம்கள் இன்றும் சோனகர் என்றே அழைக்கப்படுகின்றனர். இலங்கை அரசும் அவர்களை இனம் காண்பதற்காக இலங்கைச் சோனகர் என்றே அழைத்து வருகிறது.

இந்தியாவிலிருந்து சிறப்பாகத் தமிழ் நாட்டிலிருந்து அண்மைக் காலங்களில் இலங்கை வந்த முஸ்லிம்களை இந்தியச் சோனகர் என வழங்கிவருகிறது. அறபு மக்களின் பரம்பரையினரைச் சோனகர் என்று சுட்டும் வழக்கம் இன்று இலங்கையில் மாத்திரமே இருந்து வருகிறது. அரசு அங்கீகாரம் பெற்றதாய் அவ்வழக்கம் நடைமுறைப் படுத்தப்பட்டு வருகிறது.

யவனர் என்னும் சொல்லிலிருந்து சோனகர் என்னும் பதம் தோன்றியதா? அல்லது சோனகர் என்பதிலிருந்துதான் யவனர் என்பது தோன்றியதா? எதிலிருந்து எது தோன்றியது என்பதைக் கண்டுபிடிப்பது சிக்கலான ஒரு கருமம் என்பது உண்மையே. இதற்குத் தீர்வு காண்பது அவ்வளவு இலகுவான காரியம் ஒன்று அன்று. யவனர் என்பது வேற்றுமொழிச் சொல்லாயிருக்க சோனகர் என்பது தமிழ்ச்சொல் போன்று காட்சி அளிக்கின்றது.

யவனர் என்னும் சொல்லிலிருந்து சோனகர் என்னும் பதம் மருவியதாக இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் கூறுகிறது. இக்கூற்றுக் கிணங்க யவனர் என்னும் சொல் 'ஆனர்' ஆகத்திரிந்து சகர மெய் பெற்று 'சோனர்' என 'ஆன்றோர் சான்றோர்' எனத் திரிந்ததுபோல் திரிந்துள்ளது என்றும் பின்னர் 'சதம்' என்னும் சொல் 'சதகம்' ஆனது போல் 'சோனர்' என்பது 'சோனகர்' ஆக மாறி உள்ளது என்றும் வந்துள்ளமை புலனாகின்றது. மொழியியல் அடிப்படையில் இக்கூற்று பொருத்தமானதொன்றாக அமையவில்லை. மொழியியல் விதிகளுக்கு இணங்க இத்தகைய மாற்றங்கள் ஏற்பட முடியாது. மேலும் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கண அடிப்படையில் மொழி முதல் சகரம் இழக்கப்பட்டிருக்கிறதே தவிர புதிதாக தோன்றியதற்கான சான்றா தாரம் இல்லை. எனவே சான்றோர் என்பது ஆன்றோர் என மாறலாம் ஆனால் ஆன்றோர் சான்றோர் என திரிந்திருக்க வேண்டிய அவசிய மில்லை. இவ்விரு சொற்களும் ஒரே பொருளைக் குறிக்கும் வெவ் வேறு சொற்களாகக் கருதப்படுகின்றன. இஸ்லாமிய அடிப்படையில் பாடப்பட்ட தமிழ்ச் செய்யுட்களைக் கொண்ட ஒரே நூலில் ஒரு புலவர் யவனர், சோனகர் என்னும் இரண்டு சொற்களையும் ஆண்டிருப்பதைக் காணலாம். முஸ்லிம்களையோ, முஸ்லிம்களின் மூதாதையரான அறபு மக்களையோ குறிக்கவே இவ்வாறு ஒரே ஆசிரியர் இவ்விரண்டு சொற்களையும் தமது நூலில் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம். எனவே யவனர், சோனகர், என்னும் இரண்டு சொற் களும் பண்டுதொட்டு ஒரே கருத்தில் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன.

சங்ககால இலக்கியங்களில் யவனர் என வந்த சொல்லுக்கு அவ்விலக்கியங்களுக்கு உரைவகுக்க முற்பட்ட பிற்காலத்தில் வந்த

நச்சினார்க்கினியர் சோனகர் என்றே பொருள் தந்துள்ளார். திவாகரம் என்னும் நிகண்டும் அதனைத் தொடர்ந்து வந்த பிங்கலந்தை என்னும் நிகண்டும் 'சோனகர் யவனர்' என்றே கூறுகின்றன. முதலில் சோனகர் என்ற பதத்தைக் குறிப்பிட்டுவிட்டே யவனர் எனக் குறிப்பிடு கின்றன.

12-ஆம் நூற்றாண்டுக்குரிய ஜடாவர்மன் குலசேகரனால் வழங்கப்பட்ட திருப்புல்லாணிக் கல்வெட்டில் பவுத்திர மாணிக்கப் பட்டணத்தில் இருந்த சோனக சாமந்த பள்ளிவாசலுக்கு அளிக்கப் பட்ட நன்கொடைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

யவனர் என்னும் சொல் தொடக்கத்தில் மேற்கு நாட்டிலிருந்து வந்த கிரேக்கரைச் சுட்டியது. பின்னர் அவர்களைத் தொடர்ந்து வந்த உரோமானியரைக் குறித்தது. அதற்கப்புறம் உரோமானியரின் பின்னர் வந்த அறாபியரைக் குறிக்க வழங்கப்பட்டது. கிரேக்கரும் உரோமானியரும் பெரும்பாலும் தரைமார்க்கமாகவே கீழைத்தேயங் களுக்கு வந்தனர். அவர்கள் முதலில் வட இந்தியாவுக்கு வந்தனர். உரோமானியர் வருகையும் அவ்வாறே அமைந்திருந்தது. கடல் மார்க்கமாக அவர்கள் வருவதற்கு அவர்களுக்கு வாய்ப்புக்கள் இருக்க வில்லை. அவர்கள் வாழ்ந்த நாடுகளைச் சுற்றி உள்ள மத்திய தரைக் கடலிலிருந்து நேரடியாக இந்து மகாசமுத்திரத்துக்கு வருவதற்கான வழி அவர்களுக்கு வசதியாக அமையவில்லை. அறபு மக்களுக்கோ வெனின் செங்கடல் வழியாக இந்து மகாசமுத்திர நாடுகளுக்கும் அவற்றின் மூலமாக ஏனைய கீழைத்தேயங்களுக்கும் செல்லும் கடல் மார்க்கம் மிக வசதியாக அமைந்திருந்தது.

அறபுக் குடா நாட்டின் தென்கிழக்காக அமைந்துள்ள கரைப்பகுதி இந்து சமுத்திரத்தின் கரையாக அமைந்திருந்தது. அறபுக் கடல் பிராந்தியமாக இருந்தது. தமிழகத்துடன் நேரடித் தொடர்பு கொள் வதற்கு இவ்வமைப்பு பெரிய வாய்ப்பாக அமைந்தது.

இஸ்லாம் உலகில் பரவுவதற்கு முன்னரே அறபு மக்கள் திரை கடலோடித் திரவியம் தேடுபவர்களாக வாழ்ந்து வந்தனர். பல நாடு களைப்பற்றி அறிந்திருந்தனர். சீனதேசம் வரை சென்றிருந்தனர். 'சீனம் சென்றேனும் ஞானம் தேடு' என்னும் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் பொன்மொழியிலிருந்தும் அவர்களும் அவர்களுக்கு முன்பு வாழ்ந்தவர்களும் சீனம் முதலிய நாடுகளைப் பற்றி அறிந்திருந்தனர் என்று கொள்ளலாம். 'கிறித்தவ ஆண்டு தொடங்கியதற்கு முன்னரேயே அறபிகள் இலங்கையில் வந்து குடியேறினர்' என பிளினி என்னும் வரலாற்றாசிரியர் குறிப் பிட்டுள்ளார். எனவே முஸ்லிம்களின் மூதாதையரான அறாபியரே

யவனர் என அழைக்கப்பட்டனர். அத்தகையோர் தென் இந்தியாவிலும் வாழ்ந்தனர். இலங்கையிலும் வாழ்ந்தனர்.

அறாபியர் பண்டமாற்று வியாபாரத்துக்காகக் கப்பல் மூலம் தமிழ் நாட்டுக்கு வந்து சென்றனர் என்பதற்குச் சங்க காலத் தமிழ் இலக்கியங்களிலே சான்றுகள் உள்ளன. சுள்ளி என்னும் ஆற்றிலே மரக்கலத்திலே சென்று பண்டமாற்று வியாபாரத்தில் யவனர் ஈடுபட்டமையால் அங்கு இருந்த முசிறிப் பட்டினம் செல்வம் கொழித்து விளங்கியது என அகநானூறு (149) கூறுகின்றது. இந்த முசிறிப் பட்டினம் அறபு மொழியிலிருந்தே அப் பெயரைப் பெற்றது என அறிஞர் கூறுவர்.

'சபர்' என்னும் சொல் அறபு மொழியிலே பிரயாணஞ் செய்தலை, தேச சஞ்சாரத்தில் ஈடுபடுதலைக் குறிக்கின்றது. 'சபர்' அடியாகப் பிறந்த பெயர்ச்சொல்லான 'முசாபர்' என்பது பயணியை, தேச சஞ்சாரியைக் குறிக்கின்றது. இத்தகைய பயணிகளான 'முசாபர்' பலர் ஒன்றுகூடும் இடத்தை அவர்கள் தமது மொழியில் 'முசாபறி' என்று அமைத்திருக்கலாம். இஸ்லாத்தில் விதிக்கப்பட்டுள்ள கட்டாய கொடையைப் பெறத் தகுதியுடைய கூட்டத்தவருள் பயணிகளான முசாபர்களும் இடம் பெறுகின்றனர். 'முசாபர் கானா' பயணிகள் தங்குமிடம் என இப்பொழுது வழங்குவது போன்று அப்பொழுது 'முசாபறி' என்று தேச சஞ்சாரிகள் ஒன்றுகூடும் இடம் அழைக்கப் பட்டிருக்கலாம். இந்த 'முசாபரி' என்னும் சொல்லே முசிறி என மருவி இருக்கலாம்.

சங்ககால இலக்கியம் எனப் பத்துப்பாட்டையும் எட்டுத்தொகையையும் கருதுகிறோம். எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று பதிற்றுப் பத்து. இது ஏனைய சங்ககால நூல்களைவிடக் காலத்தால் பிந்தியது. பதிற்றுப்பத்திலே 'பந்தர்' என்னும் சொல் இடம் பெற்றுள்ளது. இந்நூலிலே பந்தர் என்னும் இச்சொல் ஆளப்பட்டுள்ள நான்கு இடங்களை எடுத்துக் கொள்வோம். பதிற்றுப்பத்துக்கு உரை எழுதியவர்கள் பந்தர் என்னும் சொல்லுக்கு பண்டகசாலை எனப் பொருள் கொண்டுள்ளனர். ஆனல் பந்தர் என்பது இங்கே துறைமுகப் பட்டினம் என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். பந்தர் என்பது முத்துக்குப் பேர்போன ஒரு புராதனக் கடற்கரைப் பட்டினம் எனக்கூறுகிறது தமிழ் அகராதி.

இனிய ஓசையை உடையன அலைகள். அந்த அலைகள் கடலிலே அவ்வினிய ஓசையை எழுப்பிக்கொண்டிருந்தன. அத்தகைய கடல் வழியாக கப்பல்கள் வந்தன. அந்தக் கப்பல்கள் செல்வத்தைக் கொண்டு வந்தன. அந்தச் செல்வங்கள் தொகுக்கப்பட்டுக் குவிக்கப்

பட்டிருந்தன. அவ்வாறு குவிக்கப்பட்டுக் காட்சி அளிக்கிறது பந்தர் என்னும் துறைமுகம். இக்கருத்துக்களைக் கொண்ட செய்யுள் இது.

இன்னிசைப் புணரி இரங்கும் பௌவத்து
நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்
(பதிற்றுப்பத்து: 55 : 4)

இங்கே குறிப்பிடப்பட்ட பந்தர் என்பது பலரும் கூடும் இடமாக அமைந்திருந்தது. நான்கு எல்லைகளுக்குள்ளும் வாழும் பலரும் ஒன்று சேரும் தலமாகத் திகழ்ந்தது. கீழ்க்கடலும் மேலைக்கடலும் தென்கடலும் ஆகிய எல்லைக்குள் இடைப்பட்ட நிலத்து வாழும் அரசரும் பிற சான்றோரும் கூடி இருக்குமிடமாக விளங்கியது. இவ்வாறு அனைவரும் பந்தரில் கூடி இருந்தனர் என்பது,

குணகுட கடலோ டாயிடை மணந்த
பந்தரந்தரம்.............. (பதிற்றுப்பத்து: 51 : 15-16)

எனப்பாடப்பட்டுள்ளது. இங்கே 'பந்தரந்தம்' என்பது பந்தரின் உள்வெளியைக் குறித்தது.

பந்தர் என்பது ஓர் இடத்தின் பெயர் என்பதை மற்றெரு பதிற்றுப் பத்துப் பாடல் எடுத்துக்காட்டுகின்றது. இப்பாடலில் இரண்டு இடங்கள் கூறப்படுகின்றன. ஒன்று கொடுமணம் என்னும் ஊர். மற்றது பந்தர் என்னும் பெரிய புகழை உடைய பழைய ஊர். இந்த ஊர்களிலே மன்னன் தனது நெடிய புகழ் பெற்ற சுற்றத்தாருடன் இருந்தான். இவ்விரண்டு ஊர்களின் பெயர்களும் இப்பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

கொடுமணம் பட்ட நெடுமொழி ஒக்கலோடு
பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்
(பதிற்றுப்பத்து: 67 : 1 - 2)

விலைமதிக்கமுடியாதது முத்து. அங்கே உள்ள முத்துக்கள் உலகெங்கிலும் புகழ் பெற்றவை. பிரசித்தி பெற்றவை. எல்லோரும் புகழ்கின்ற முத்துக்கள் அவை. அவை பந்தரிலே கிடைக்கின்றன. ஆனல் அவற்றுக்குத் தேவையான அரிய கலன்கள் கொடுமணம் என்னும் ஊரில் கிடைக்கின்றன. இவ்விரண்டு வகையான விலை மதிக்க முடியாத பொருள்களும் கிடைக்கின்ற இரண்டு ஊர்களும் இவ்வாறு புகழ்ந்து பாடப்பட்டுள்ளன.

கொடுமணம் பட்ட வினைமா ணெடுங்கலம்
பந்தர்ப்பயந்த பலர்புகழ் முத்தம்
(பதிற்றுப்பத்து: 74 : 5 - 6)

பதிற்றுப்பத்திலிருந்து மேலே எடுத்துக்காட்டப்பட்ட நான்கு பாடல்களிலும் பந்தர் என்னும் இடமே சுட்டப்படுகிறது. அச்சொல்லின் பொருள் பண்டசாலை எனின் நான்கு இடங்களிலும் அது பண்டசாலையைக் குறித்திருக்க வேண்டும். பந்தர் எனப் பெயருடைய மிகுந்த புகழ்பெற்ற பழைய ஊர் என்னும் பொருளில் 'பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்' என்று கூறும்பொழுதும் 'பந்தர் என்னும் ஊரிடத்தே பெற்ற, பலரும் புகழ்கின்ற முத்துக்களையும்' என்னும் பொருளில் 'பந்தர் பயந்த பலர்புகழ் முத்தம்' என்று கூறும் பொழுதும் பந்தர் என்பது ஓர் இடத்தைக் குறிக்கும் பெயர் என்பது தெற்றெனப் புலனாகிறது.

களவியற்காரிகையில் மேற்கோள் காட்டப்பட்டுள்ள பழம்பாட்டுச் செய்யுள் ஒன்றிலும் பந்தர் என்னும் சொல் ஆளப்பட்டுள்ளது.

> பறைவா யொலியோதம் பந்த ருகளுந்
> துறைசேர் சிறுகுடியார் துஞ்சினுந் துஞ்சாய்
> இறையின் மருண்மாலை யெம்மே போனீத்த
> நுறைவ னுடையையோ நீவாழி நாராய்

என்பது அந்தப் பாடல் (பக்கம் 108).

'பந்தர்' என்னும் அறபுச் சொல் துறைமுகம், துறைபொருட் களஞ்சியம் என்னும் பொருள்களைக் குறிக்கின்றது. பாரசீக மொழியிலும் இச்சொல் துறைமுகப்பட்டினத்தைக் குறிக்கிறது. அறபு மொழியிலிருந்து பாரசீக மொழிக்கு வந்தது இச்சொல். எனவே பந்தர் என்பது ஓர் அறபுச்சொல் என்பது புலனாகிறது. இன்னும் பந்தர் என்னும் பெயரைக் கொண்ட துறைமுகப்பட்டினங்கள் தமிழ் நாட்டில் உள்ளன. போர்ட்டோ நோவோ என்றும் பறங்கிப் பேட்டை என்றும் அழைக்கப்படும் துறைமுகப்பட்டினம் மஹ்மூது பந்தர் என வழங்கப்படுவதை இன்றும் காணலாம். தமிழ் நாட்டில் கிழக்குக் கரையில் கோவளத்துக்கு அருகில் 'சஹிது பந்தர்' என்னும் பட்டினம் ஒன்றும் உள்ளது.

சங்க கால இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள இவ்வகச் சான்றுகள் மூலம் அறபுமொழி பேசும் மக்கள் பழங்காலத்திலிருந்தே தமிழ்நாட்டுடன் வியாபாரத் தொடர்புகள் கொண்டிருந்தனர் என்பது புலனாகும். இன்றைய முஸ்லிம்களின் மூதாதையர்களும் இவ்வறாபியரே என்பதும் போதரும். இஸ்லாத்தைப் பரப்பியவர்களும் வியாபாரத்தின் பொருட்டு வந்தவர்களும் இவ்வறாபியரே ஆவர். தமிழ்நாட்டு மக்களுக்கும் அறபுநாட்டு மக்களுக்கும் தொன்று தொட்டு இருந்துவந்த நெருங்கிய தொடர்பு இஸ்லாம் உலகில் பரவத் தொடங்கிய பின்னரும் நீடித்தது. முன்னரைவிட வலுப்பெற்றது.

இஸ்லாம் இவ்வுலகில் தோன்றுவதற்கு முன்னர் சீனம் வரை சென்ற அறாபியர்கள், இஸ்லாம் பரவத்தலைப்பட்டதும் வள்ளல் நபி முகம்மது (சல்) அவர்களின் வளமான போதனைகளையும் வான் மறையையும் தத்தம் இதயங்களில் ஏந்திச் செல்லலாயினர். இத்தகை யோரின் முயற்சியால் கி.பி. ஏழாம் நூற்றாண்டு முடிவதற்குள் தமிழ் நாட்டிலும் இஸ்லாம் புகுந்துவிட்டது. நபிகள் நாயகம் (சல்) அவர் களின் தோழர்களான தமீமுல் அன்ஸாரி (றலி) அவர்களினதும் அபி வக்காஸ் (றலி) அவர்களினதும் கல்லறைகள் தமிழ்நாட்டில் இருப்பது இஸ்லாத்துக்கும் தமிழ்நாட்டுக்கும் அப்போது இருந்த நெருங்கிய உறவை எடுத்துக்காட்டிக் கொண்டிருக்கின்றது. இஸ்லாமிய இறை நேசச் செல்வர்களான வலிமார்கள் ஆன்மீக வழிவகுத்த ஞானிகள் முதலாயினோர் தமிழ் நாட்டுக்கு வரத் தலைப்பட்டனர். அதன் பயனாக இஸ்லாம் தமிழ் நாடெங்கும் பரவலாயிற்று.

## வரலாற்றுச் சான்றுகள்

இங்ஙனம் தமிழகத்தில் இஸ்லாம் பரவியதற்கான வரலாற்றுச் சான்றுகள் நிரம்பக் காணப்படுகின்றன.

இஸ்லாம் உலகில் பரவுவதற்கு முன்பிருந்தே அறாபியர் மேற்கு இந்திய நாடுகளுடன் பெருமளவிலான வியாபார நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தனர் என எஸ். சிறிகந்தயா என்னும் வரலாற்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். 'முகமது நபியின் வருகையினாலும் அவரின் பின் வந்தவர்களின் தலைமையில் இஸ்லாம் வளர்ச்சி அடைந்தமையினாலும் ஒரே முறையில், அட்லாண்டிக் சமுத்திரத் திலிருந்து பசுபிக் சமுத்திரம் வரை உள்ள பிரதேசங்களில் இஸ்லாம் பரவிய போதிலும் அவர்களின் செல்வாக்கு நிலையாக இருந்தது இந்து சமுத்திரத்தைச் சார்ந்த நாடுகளிலேயாம்' என்றும் 'அவர்கள் உடற்பலம் வாய்ந்த பேரரசாக மாறியது இந்து சமுத்திரத்திலேதான் என்றும் அதன் பயனாக 'இந்து சமுத்திரம் ஒரு மாபெரும் அறபுக் கடலாக மாறியது' என்றும் 'அறபு மக்களின் வருகையினால் ஏற்பட்ட நிலையான பெறுபேறுகளை இந்து சமுத்திரத்தின் மேற்குக் கரை நாடுகளிலே காணக்கூடியதாக உள்ளது' என்றும் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

இஸ்லாம் உலகில் பரவத் தலைப்பட்டதும் இந்தியாவின் கடற் கரைப் பகுதிகளில் முஸ்லிம் குடியேற்றங்கள் தோன்றலாயின. அவர் களின் வியாபாரக் குறிக்கோள்களை நிறைவேற்ற அந்நாட்டு இந்து மன்னர்கள் எல்லா உதவிகளையும் நல்கினர். அனைத்து ஒத்துழைப் புக்களையும் அளித்தனர். இதன் பயனாக அவர்களுடைய பண்ட மாற்று வியாபாரம் பல்கிப் பெருகியது.

எட்டாம் நூற்றாண்டு தமிழ்நாட்டில் சோழப் பெருமன்னர் ஆட்சி புரிந்த காலம். அவர்களுடைய தலைநகர் கோழி என்றும் உறையூர் என்றும் பெயர் பெற்றிருந்தது. அப்பொழுது அங்கு வந்த இஸ்லாமியப் பெரியாரின் பெயர் ஹாஜி அப்துல்லா பின் அன்வர் என்பதாகும். இஸ்லாத்தைப் பரப்பும் முயற்சியில் அவர் ஈடுபட்டார். முஸ்லிம்களின் தொழுகைக்காக, அவர்களின் கடமைகளை நன்கு நிறைவேற்றுவதற்கு வாய்ப்பாக இருக்கும் பொருட்டு கி. பி. 738இல் ஒரு பள்ளிவாசலைக் கட்டி எழுப்பினர். அந்தப் பள்ளிவாசல் இன்று சிதைந்த நிலையில் உள்ளது. அதனை அதே நிலையில் திருச்சிராப் பள்ளியில் இன்றும் காணலாம். அது அப்பெரியாரின் தொண்டினைப் பாராட்டும் சின்னமாக விளங்கிக் கொண்டிருக்கிறது.

இந்தப் பள்ளிவாசலுக்குச் சற்றுத் தொலைவில் மற்றொரு பெரியாரின் அடக்கத்தலம் உள்ளது. அது நத்தர் வலியுல்லாஹ் அவர்களின் அடக்கத்தலமாகும். அந்தக் கல்லறையும் வரலாற்றுத் தொடர்புள்ளதாக விளங்குகிறது. முன்பு அவர் ஸிரியா நாட்டு அதிபதியாக விளங்கினார்கள். இளம் வயதினரான அப்பெரியார் அரசு கட்டிலைத் துறந்து இறைபணிக்காக தமது வாழ்க்கையை அர்ப்பணித்தார்கள். பத்தாவது நூற்றாண்டில் சோழ நாட்டை அடைந்தார்கள். திருச்சிராப்பள்ளி மலையிலே தமது சீடர்களுடன் மெய்ஞ்ஞான விளக்கம் செய்துகொண்டிருந்தார்கள். வாழ்க்கையின் இறுதிவரை இங்கேயே இருந்தார்கள்.

'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்னும் குறிக்கோளுடன் இயங்கிய முஸ்லிம்கள் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் அத்தகைய உச்ச நிலையை அடைந்தனர். இஸ்லாமியக் கப்பல்கள் இந்தியாவில் மேற்குக் கரையோரத் துறைமுகங்களுடன் மாத்திரமல்லாது, இலங்கைத் துறைமுகங்களுடனும் பண்டமாற்று வியாபாரத் துறைகளில் மும்முரமாக ஈடுபட்டுக்கொண்டிருந்தன.

இஸ்லாமிய மார்க்கப் போதகர்கள் பலர் தமிழகத்துக்கு வருகை தந்துள்ளனர். அவர்களுள் பாண்டி நாட்டுக்கு கி.பி. 1050இல் வருகை தந்த மாலிகுல் முல்க் என்பவரைப் பற்றியும் அலிஷா என்பவரைப் பற்றியும் அலெக்ஸாண்டர் நெல்ஸன் என்பவர் குறிப்பிட்டுள்ளார். அப்பெரியார் இருவரின் வருகைக்கு முன்பதாகவே மதுரையில் முஸ்லிம் மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். அவர்கள் அப்போதிருந்த பாண்டிய மன்னனான கூன் (குண) பாண்டியனிடமிருந்து பதினாயிரம் பொற்காசுகள் செலுத்தித் தமக்கென ஆறு கிராமங்களை வாங்கினர். பின்னர் அக்கிராமங்கள் மதுரையில் வடபகுதியில் உள்ள சுல்தான் அலியுத்தீன் தர்காவுக்கு நன்கொடையாக வழங்கப்பட்டன. இவ் விவரங்களை அலெக்ஸாண்டர் நெல்ஸன் என்பவர் தமது வரலாற்று நூலில் குறிப்பிட்டுள்ளார்.

இதே கால எல்லையில் புகழ்பெற்ற அறபுப் பயணிகளான இப்னு குர்தாத்பிஹி, மஸ்ஊதி, போன்றோர் தமிழகத்துக்கு வந்துள்ளனர். மதுரை, கன்னியாகுமரி பற்றிய விவரங்களைத் தமது நூல்களில் விவரித்துள்ளனர்.

கி.பி. 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் தமிழ்நாட்டில் நிகழ்ந்த ஒரு சம்பவம் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தைப் பொறுத்தவரையில் மிக முக்கியமான ஒரு நிகழ்ச்சியாக அமைந்து விடுகின்றது. ஹிஜ்ரி ஆண்டு 578இல் அதாவது கி.பி. 1182இல் அறபு நாட்டில் உள்ள மதீன மாநகரிலிருந்து ஒரு மனிதப் புனிதர் தமிழகத்துக்கு வருகை தருகிறார். அப்பொழுது அறபு நாடுகளிலே சிலுவை யுத்தம் நடை பெற்றுக் கொண்டிருக்கிறது. அந்த மனிதப் புனிதரான சையது இபு றாகீம் அவர்கள் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் புதல்வி பாத்திமா நாயகி அவர்களின் புதல்வர் ஹுசைன் (றலி) அவர்களின் வழித்தோன்றலாக வந்துள்ளார். சையது இபுறாகீம் அவர்கள் தென் இந்தியாவின் மேற்குக் கரையில் உள்ள கண்ணனூரில் வந்திறங்கி உள்நாட்டுக்குச் சென்றார்கள். அவர்கள் தமது பரிவாரங்களுடன் வந்து தமிழ்நாட்டில் தங்கினார்கள். அப்பொழுது பாண்டி நாட்டைப் பாண்டியர் ஆண்டுவந்தனர். பாண்டி நாட்டை ஐவர் ஆண்டு வருவது பெரு வழக்காக இருந்தது. சையது இபுறாகீம் அவர்கள் தமிழ்நாடு வரும்பொழுதும் இந்த நிலைமையே நிலவியது. சையது இபுறாகீம் அவர்களுக்கு விக்கிரம பாண்டியனுடன் போர் புரியவேண்டி ஏற்பட்டது. போரிலே விக்கிரம பாண்டியனுடைய இரு புதல்வர் களும் தளபதிகளும் சையது இபுறாகீம் அவர்களுடைய புதல்வரும் வீரமரணம் எய்தினர். விக்கிரம பாண்டியனும் போரில் கொல்லப் பட்டான்.

சுல்தான் சையது இப்றாகீம் அவர்கள் தமிழகத்தின் கிழக்குப் பகுதியிலே ஆட்சி புரிந்தார்கள். அவருடைய ஆட்சிக்குட்பட்ட பிரதேசம் வைப்பாற்றுக்கும் வையை நதிக்கும் இடைப்பட்ட பகுதியாக இருந்தது. பௌத்திர மாணிக்கப்பட்டினம் அவருடைய தலைநகராக அமைந்திருந்தது. ஏதோ சிறப்பான காரணத்துக்காகத் தான் அவர் பௌத்திர மாணிக்கப்பட்டினத்தை தமது அரசின் தலைநகராகத் தெரிந்தெடுத்திருத்தல் வேண்டும். அன்று முஸ்லிம்களின் பண்ட மாற்று வர்த்தகத்தின் மையமாக அந்நகர் விளங்கி இருக்கலாம். செல்வம் கொழிக்கும் நகராகத் திகழ்ந்திருக்கலாம். கிழக்கு மேற்கு நாடுகளிலிருந்து பொருள்களுடன் வரும் கப்பல்கள் சந்திக்கும் இடமாகப் பிரசித்திப் பெற்றிருக்கலாம். நாட்டின் பொருளாதா ரத்தின் கேந்திர நிலையமாகப் பரிணமித்திருக்கலாம். திருப்புல் லாணிக் கல்வெட்டிலே பௌத்திர மாணிக்கப்பட்டினம் குறிப்பிடப் படுகிறது. மாணிக்கவாசகர் குதிரை வாங்கச் சென்றதும் அந்தப்

பௌத்திர மாணிக்கப்பட்டினத்துக்கே என்று கூறுவாரும் உளர். வஸ்ஸாப் என்னும் வரலாற்று ஆசிரியர் அந்த நகரத்தைக் குறிப்பிடவே பத்தன் என்னும் பதத்தை உபயோகித்துள்ளார் என்றும் சிலர் சுட்டிக் காட்டுவர். வஸ்ஸாப் அவர்கள் குறிப்பிட்ட பத்தன் என்பது பௌத்திர மாணிக்கப்பட்டினம் என்றும் மாலிப்பத்தன் என்பது மேலைப்பட்டணம் என்றும் காபில் என்பது காயல் என்றும் கூறுவர்.

சுல்தான் சையது இபுறாகீம் அவர்கள் ஏறத்தாழ பன்னிரண்டரை ஆண்டுகள் அங்கு இஸ்லாமிய ஆட்சி புரிந்தார்கள். தமது ஆட்சிக் காலத்தில் நாணயங்களும் வெளியிட்டார் என்றும் கூறப்படுகிறது. பின்னர் விக்ரமபாண்டியனின் உறவு முறையினனான வீரபாண்டியன் படையெடுத்து வந்து சுல்தான் சையது இபுறாகீம் அவர்களுடன் போர் செய்தான். இப்போரிலே சுல்தான் சையது இபுறாகீம் அவர்கள் கொல்லப்பட்டார்கள். வெற்றிவாகை சூடிய வீரபாண்டியனும் போரிலே ஏற்பட்ட காயங்களினால் காலமானான். அந்தக் கால எல்லையில் மதுரையை ஆட்சி செய்தவன் ஜடாவர்மன் குலசேகரன் என்பவனாகும்.

மதீன மாநகரிலிருந்து வந்து தமிழ் நாட்டிலே ஆட்சி புரிந்த சையது இபுறாகீம் அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு தோன்றியது தீன் விளக்கம் அல்லது தீனெறி விளக்கம் என்னும் தமிழ்க்காப்பியம். வண்ணக்களஞ்சியப் புலவரால் இயற்றப்பட்ட இக்காப்பியத்தில் சுல்தான் சையது இபுறாகீம் அவர்களின் வாழ்க்கை வரலாறு விரிவாக வருணிக்கப்படுகிறது. டாக்டர் எஸ். ஏக். யூ. ஹுஸைனி அவர்கள் தமது பாண்டியநாட்டு வரலாறு என்னும் நூலிலே சுல்தான் சையது இபுறாகீம் அவர்களின் ஆட்சியைப்பற்றி சுருக்கமாகக் குறிப்பிடுகிறார்.

தமிழக வரலாறு எழுதிய வரலாற்று ஆசிரியர் வேறு எவரும் சுல்தான் சையது இபுறாகீம் அவர்களின் வருகையைப் பற்றியோ, விக்கிரமபாண்டியனுடன் அவர்கள் போர் புரிந்தமையைப் பற்றியோ பௌத்திர மாணிக்கப்பட்டினத்திலிருந்து ஆட்சி புரிந்தமை பற்றியோ எதுவும் குறிப்பிடத் தவறிவிட்டனர். விக்கிரமபாண்டியனைத் தோற்கடிக்க சையது இபுறாகீம் அவர்களுக்கு ஒத்துழைப்பு நல்கியதாகக் கூறப்படும் குலசேகர பாண்டியன் ஜடாவர்மன் குலசேகரன் என்ற பெயரில் மதுரையில் கி. பி. 1190-ஆம் ஆண்டில் அரசு கட்டில் ஏறினான் எனக் குறிப்பிடப்படுகின்றது.

திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் தமது பாண்டிய அரசு என்னும் நூலில் 'கி. பி. 1190-இல் அரசு கட்டில் ஏறிய ஜடாவர்மன் குலசேகரன் என்பவன் விக்கிரமபாண்டியனைத் தொடர்ந்து அரசு கட்டில் ஏறினான் 'என்பதை நிச்சயமாகக் கூறமுடியாது' என்றும்

(பக்கம் 120) கி.பி. 1219 வரை ஆட்சி செய்த ஜடாவர்மன் குலசேகரன் ஒருவேளை விக்கிரமபாண்டியனைத் தொடர்ந்து ஆட்சி பீடத்திலே அமர்ந்திருக்கலாம்' (பக்கம் 125) என்றும் குறிப்பிட்டுள்ளார். இக் குறிப்புகளிலிருந்து விக்ரமபாண்டியனுக்கும் ஜடாவர்மன் குலசேகர பாண்டியனின் ஆட்சிக்கும் இடையே அரச பரம்பரையைப் பொறுத்த வரையில் ஓர் இடைவெளி இருப்பதுபோல் தோன்றுகிறது. விக்கிரம பாண்டியனைத் தொடர்ந்து சுல்தான் சையது இபுறாகீம் அவர்கள் ஆட்சி புரிந்தார்கள் என்றும் அவர்கள் பௌத்திர மாணிக்கப்பட்டினத்திலிருந்து ஆட்சிபுரியும் காலத்திலிருந்து சில ஆண்டுகளுக்குப் பின்னர் மதுரையிலிருந்து (கி. பி. 1190 இலிருந்து) ஜடாவர்மன் குலசேகர பாண்டியன் ஆட்சிபுரிந்து வந்தான் என்றும் முடிவுகட்டலாம். இவ்வாறு முடிவு கட்டுவதற்கு ஆதாரமாக உள்ளவை தீன் விளக்கம் என்னும் காப்பியமும் பௌத்திர மாணிக்கப்பட்டினம் என்று வழங்கப் பட்ட பகுதியில் உள்ள ஏர்வாடி (யர்புத்) என்னும் ஊரில் அமைந்துள்ள சுல்தான் சையது இபுறாகீம் அவர்களின் கல்லறையுமே ஆகும். சுல்தான் சையது இபுறாகீம் அவர்கள் மதீனாவில் உள்ள யர்புத் என்று அறபில் வழங்கப்படும் ஊரிலிருந்து புறப்பட்டு வந்தமையால் அவர்கள் அடங்கப்பட்டிருக்கும் இடமும் அறபுமொழியிலே யர்புத் என வழங்கப்பட்டு இப்பொழுது ஏர்வாடி என மருவி உள்ளது என்பது புலனாகின்றது. சுல்தான் சையது இபுறாகீமைப் பற்றிய ஒரு படைப் போர் நான்காயிரம் கண்ணிகள் கொண்ட ஓலைச் சுவடியாக உள்ளது. பிற்காலத்தில் அவரைப்பற்றிப் பல கவிதை நூல்களும் உரைநடை நூல்களும் வெளி வந்துள்ளன.

சுல்தான் சையது இபுறாகீம் அவர்கள் ஆட்சிக்கு வருமுன்னர் பாண்டியநாட்டில் குழப்பமான நிலையே நிலவியது. சகோதரர் களுக்கிடையே நடைபெற்ற உள்நாட்டுப் போருடன் வெளிநாட்டுப் படையெடுப்புகளும் நிகழ்ந்தன. இலங்கையிலிருந்தும் படையெடுப்பு நிகழ்ந்துள்ளது. பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண் டிய நாட்டில் நிகழ்ந்த உரிமைப் போராட்டத்தில் இலங்கைப் படை களுக்கும் பங்கு உண்டு. இலங்கையிலிருந்து வந்த படைகள் இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள செம்பொன்மாரி என்னும் இடத்தில் வந்திறங்கினர். அவர்கள் மக்களால் வரவேற்கப்பட்டனர். அந்த வரவேற்பை வருணிக்க வந்த வரலாற்றுப் பேராசிரியர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் இலங்கை வரலாற்று நூலான மகாவமிசத்தை மேற்கோள்காட்டி ''செம்பொன்மாரி அருகே வணிகர்களும் சோனகர்களும் மங்கலப் பொருட்களுடன் இலங்கைப் படைகளை வரவேற்றனர்'' என்று குறிப்பிட்டுள்ளார். இங்கே சோனகர்கள் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளமையைக் காணலாம். இதிலிருந்து 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே முஸ்லிம்களுக்கு

இருந்த செல்வாக்குப் புலப்படுகிறது. இந்த காலகட்டத்திலேதான் சுல்தான் சையத் இபுறாகீம் அரபுநாட்டிலிருந்து வந்து தமிழகத்தை ஆட்சி செய்வதில் வெற்றி பெற்றார் என்பது புலனாகின்றது.

முஸ்லிம் மக்கள் தமிழகத்தின் பழங்குடி மக்கள் என்பதற்கு ஆதாரமாகப் பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் முஸ்லிம் களுக்கு நன்கொடை வழங்கப்பட்ட செய்தி அக்காலக் கல்வெட் டொன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. அக்கல்வெட்டு இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள திருப்புல்லாணி வைணவ கோவிலில் அமைந் துள்ளது. இக்கோவிலில் முதலாம் கோபுர வாயிலிலே சாசனம் அமைந்து உள்ளது. வாயிலின் தரையில் கல்வெட்டு பொறிக்கப்பட் டுள்ளது. பாண்டிய மன்னனான இரண்டாவது மாறவர்மன் சுந்தர பாண்டியன் முஸ்லிம்களுக்கு வழங்கிய நன்கொடை பற்றியது அந்தக் கல்வெட்டு. இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி. 1238 முதல் 1251 வரை ஆட்சி புரிந்தவன்.

அம்மன்னனுடைய ஏனைய கல்வெட்டுக்களைப் போன்று திருப் புல்லாணிக் கல்வெட்டும், 'பூமலர்த் திருவும் பொருசய மடந்தை யும்' என ஆரம்பிக்கிறது. மங்கலம் உண்டாகட்டும் என்னும் பொருளில் 'ஸ்வஸ்திஸ்ரீ' என்னும் வடமொழிச் சொற்றொடரை அக்கல்வெட்டு முதலில் கொண்டுள்ளது. கவிதைகளில் வருவது போன்று 'வெண்டிரை உடுத்த மண்டினி கிடக்கை திருநில மடந்தை' என்னும் சொற்றொடரும் இங்கு இடம் பெற்றுள்ளது.

அக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள ஊர் பௌத்திர மாணிக்கப் பட்டினம். அங்கு பொறிக்கப்பட்டுள்ள செய்தி முஸ்லிம் பள்ளி வாசலுக்கு வழங்கப்பட்ட ஒரு நன்கொடை பற்றியது. 104 வரிகளைக் கொண்டது அந்தக் கல்வெட்டு. அக்கல்வெட்டு தென்னிந்திய கல்வெட்டு எட்டாம் தொகுதியில் 402-வது இலக்கத்தை கொண்டது. (S.I.I. Vol. VIII No 402) தொல்பொருள் ஆராய்ச்சி அறிக்கை 1903-இல் 116-ஆம் இலக்கத்தை கொண்டது. (A.R. 116 of 1903).

''திருநில மடந்தையுரிமையிற் களிப்பச் சமையமு நீதியும் தருமமும் தழைப்ப இமையவர் விழாக்கொடி இடந்தொறும் எடுப்ப, கருங்கனலி கனல் கெட, கடவுள் வேதியர், அருந்தொழில் வேள்வி செங்கோல் வளர, சுருதியும், தமிழும் தொல்வளங்குலவ, பொருதிறல்வாழி பூதலம் சூழ''.........செங்கோலோச்சி வந்தான் பாண்டிய மன்னன் இரண்டாவது மாறவர்மன் சுந்தர பாண்டியன். அவன் வெற்றி கொண்ட குறுநில மன்னர்களின் பிரதேசங்கள் பின்னர் குறிப்பிடப் படுகின்றன. அவையாவன கோசளம். துளுவம், குச்சரம், போசள மகதம், பொப்பளம், புண்டரம், ஈழம், கடாரம், கௌடம், தெலிங்கம், சோனகம், சீனம் என்பனவாகும். 'ஒரு தனிநாயகன் நின்று

உலகேத்த திருமுடி சூடி செங்கோல் ஓச்சி கொற்றந்தரள குளிர் வெண்குடை கீழ் கற்றைவரி காவலர் வீச செங்கோலோச்சி வந்தான்.

அம்மன்னன் ஆட்சி பீடத்தில் அமர்ந்து எட்டாவது ஆண்டு தொளாயிரத்து தொண்ணூற்று நாலாவது நாள் இந் நன்கொடை வழங்கப்பட்டதாக அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. மூன்றாம் இராசேந்திர சோழன் பாண்டி நாட்டில் அரசு கட்டில் ஏறிய இரண்டாவது மாறவர்மன் சுந்தரபாண்டியனைத் தோற்கடித்து அவனைத் தனக்குக் கப்பம் செலுத்தும் சிற்றரசனாக்கினான். கி.பி. 1246-இல் போசள மன்னன் வீர சோமேசுவரன் உதவியுடன்சோழர் ஆட்சிக்குட்பட்டிருந்த பாண்டி நாட்டைக் கைப்பற்றி இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் சுயேச்சையாக அதனை ஆட்சி புரிந்து வந்தான். சுந்தர பாண்டியனின் வாழ்க்கையில் இது மிக முக்கியமான ஒரு நிகழ்ச்சி ஆகும். அந்த நிகழ்ச்சியிலிருந்து தொளாயிரத்துத் தொண்ணூற்று நாலாவது நாள் கணிக்கப்பட்டிருக்கலாம். அவ்வாறு பார்க்கும் பொழுது ஆங்கில ஆண்டுக் கணக்கின்படி தொளாயிரத்து தொண்ணூற்று நான்கு நாட்கள் இரண்டு வருடம் இருநூற்று அறுபத்து நான்கு நாட்களுக்குச் சமமாகும். எனவே இரண்டாவது மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சி பீடத்தில் அமர்ந்து பத்தாவது ஆண்டு கழிந்து இருநூற்று அறுபத்து நான்கு நாட்கள் கழிந்தபின் அந் நன்கொடை வழங்கப்பட்டது எனலாம். இக்கூற்றுக்கு ஆதாரமாக அக்கல்வெட்டிலே மற்றொரு குறிப்பு உண்டு. 'எட்டாவதி னெதிரா மாண்டினெதிராம் ஆண்டு' என வந்துள்ள குறிப்பிலிருந்து அம் மன்னன் ஆட்சிபீடத்திலமர்ந்து பத்தாவது ஆண்டில் அந்நன் கொடையை வழங்கினான் என்பது புலனாகும்.

அந்நன்கொடை வழங்கப்பட்ட முஸ்லிம் பள்ளிவாசல் எங்குள்ளது என்பது அடுத்து கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. இடத்தைக் குறிப்பிடும்பொழுது மதுரையைப் பற்றியும் அதன் சுற்றுப்புற இடங்களைக் குறித்தும் விவரிக்கப்படுகிறது. 'மதுரோதைய வளநாட்டு மாடக்குளக்கீழ் மதுரைக்கோயில் பள்ளியறைக் கூடத்துப் பள்ளிப்பீடமழவராயனில் எழுந்தருளியிருக்க, கீட்செம்பி நாட்டுப் பௌத்திர மாணிக்கப்பட்டின கீழ்பால் சோனகச் சாமந்தப்பள்ளியான பிலால்ப்பள்ளி' என நன்கொடை வழங்கப்பட்ட முஸ்லிம் பள்ளி வாசல் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்நன்கொடை அப்பள்ளிவாசலின் பரிபாலகருக்கு வழங்கப்பட்டது. அப்பரிபாலகரை ஆழ்வார் என்றே கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

நன்கொடைக்கு உட்படுத்தப்பட்ட நிலப்பரப்பும் அதன் வகை தொகையும் அடுத்து அக்கல்வெட்டில் பொறிக்கப்பெற்றுள்ளது. ஆம்புத்தூர் நான்கெல்லைக்குட்பட்ட நிலம் நன்கொடையாக வழங்கப்

பட்டுள்ளது. 'காராண்மைக் காணியாக வந்தது அந்நிலம். அந் நிலத்துக்கு உட்பட்ட நீர், நிலம், காணியாட்சி, நன்செய், புன்செய், நத்தம் தோட்டம், குளமும், குளப்பரப்பும் உட்பட்ட நிலத்தில் பழந்தேவதானம் பள்ளிச்சந்தம் நீக்கி, நீக்கி உள்ள நிலம் அந்த ராயம் விநியோகம் காரிய ஆட்சி, வெட்டி பாட்டம், பஞ்சுபீலி, தறி இறை, செக்கிறை, தட்டாரப் பாட்டம் மற்றும் எப்பேர்ப்பட்ட வருக்கும் இவ்வாண்டு முதல் சோனகப்பள்ளிச் சந்தி இறையிலியாக இருப்பதாக மழவராயர் சொன்னமையால்' அக்கல்வெட்டு பொறிக் கப்பட்டதாகக் குறிப்பு உள்ளது.

அக்கல்வெட்டுச் செய்தி இவ்வாறு முடிவுறுகிறது. 'வரியிலார் எழுத்திட்ட உள்வரியும் நம் ஓலையும் தரச்சொன்னோம். கைக் கொண்டு இப்படி சந்திராதித்தவரை செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்துக்கொள்க என்று திருவாய் மலர்ந்தருளினார். இவை திருமல்லிநாட்டு......டையான உய்யநின்றாடுவான் வீரசோழ தேவனான குருகுலத்தரையன் எழுத்து, இவை செவ்விருக்கை நாட்டு சக்கரபாணி நல்லூர் அரையன் விரத முடித்தானான பல்லவராயன் எழுத்து. 104 வரிகளைக் கொண்ட அக்கல்வெட்டில் நன்கொடை பற்றிய செய்தியும் விவரங்களும் 65-ஆம் வரியுடன் முடிவடைகிறது. எஞ்சியுள்ள வரிகள் அக்கல்வெட்டுச் செய்தியினை மீண்டும் கூறுவதாகும்.

இனி, அந்தக் கல்வெட்டில் ஆளப்பட்டுள்ள சில சொற்களை எடுத்துக் கொள்வோம். அங்கே சோனக சாமந்தப்பள்ளி எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சாமந்தர் என்னும் பதத்துக்கு இளவரசன். சிற்றரசன், படைத்தலைவன், அமைச்சன் எனப் பல்வேறு கருத்துக் களைக் கூறுகிறது தமிழ் அகராதி. சாமந்தர் என்னும் அச்சொல் சாமாந்த் என்னும் பாரசீகச் சொல்லிலிருந்து பிறந்து உயர்திணைப் பலர்பால் விகுதியான 'ஆர்' பெற்றிருக்கலாம். பாரசீக மொழியில் சாமாந்த் என்னும் சொல் 'அரசனைப்போன்ற' அல்லது 'அரசுரிமை சார்ந்த' (Royal) என்னும் பொருளை உடையது எனக்குறிப்பிடு கிறது பாரசீக - ஆங்கில அகராதி. சோனகச் சாமந்தப்பள்ளி என்று குறிப்பிடும்பொழுது 'சாமந்தம்' என்னும் அச்சொல் ஒரு முஸ்லிம் சிற்றரசனை அல்லது ஒரு முஸ்லிம் அரச குடும்பத்தைச் சார்ந்த ஒருவனைக் குறிப்பிடுவதாக இருக்கலாம். அச்சிற்றரசனுடைய பொருளுதவியால் அல்லது அவரது முயற்சியால் அப்பள்ளிவாசல் கட்டப்பட்டிருக்கலாம். முஸ்லிம் மக்களால் பெரிதும் பாராட்டப்பட்ட பள்ளிவாசலாக அது திகழ்ந்திருக்கலாம்.

இதே கருத்தில் சாமந்தன் என்னும் பாரசீகச் சொல் தமிழிலே வழங்கப்படுவதைக் காணலாம். தென்னிந்திய கோவில் கல்வெட்

டொன்றில் 'மகாசாமந்தன்' என்று வந்துள்ளது. சிற்றரசுப் பதவியி லிருந்த ஒரு மந்திரியைக் குறிப்பிடவே அக்கல்வெட்டில் அச்சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். 'கோ......ஓட்டு மடையன் முதலினர்பாத சாமந்தரோடு' என வீரராசேந்திர சோழன் மெய்க் கீர்த்தியில் (வரி 160) சாமந்தன் என்னும் சொல் வந்துள்ளது. 'சாமந்தரைச் சக்கரகோட்டத்து' என்று (வரி 172) வீரராசேந்திர சோழன் மெய்க்கீர்த்தியில் வந்துள்ளது. 'பொரு சினத்தால் சாமந்தனும்பட்டு வீழ' என்றும் (வரி 145) அதே மெய்க்கீர்த்தியில் குறிப்பிடக்காண்கிறோம். 'தேவநாதன் முதல் சாமந்தரைச் சக்கரக் கோட்டத்துக்குத் துரத்தி, உரிய தாரம் பிடித்துக் கொண்டு' என இரண்டாம் இராஜாதிராஜன் மெய்க்கீர்த்தியில் இடம் பெற்றுள்ளது. இரண்டாம் இராஜராஜன் உடன் போர்புரிந்த பராக்கிரம பாண்டிய னின் மகன் வீரபாண்டியத்தேவர், தனக்கு சாமந்தரின் உதவி கிடைத்தது என்பது 'சாமந்தரிலும் நமக்குச் சேர்வுபட்டு, நின்றுடன் செய்கிற' (வரி 30) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இச்செய்தியைக் குருவாலாங்காட்டுக் கல்வெட்டிலும் காணலாம்.

எனவே திருப்புல்லாணிக் கல்வெட்டிலிருந்து முஸ்லிம் அரச பரம்பரையைச் சேர்ந்த ஒருவரால் கட்டப்பட்டது, பௌத்திர மாணிக்கப்பட்டினத்திற்குக் கீழ்பால் இருந்தது, சோனக சாமந்தப் பள்ளி என்பது தெற்றெனப்புலனாகின்றது எனலாம்.

தமிழ்நாட்டில் சோனகர் அல்லது முஸ்லிம்கள் குறுநில மன்னராக இருந்து ஆட்சி செய்தமையினாலேயே சாமந்தர் என்னும் பெயர் தமிழ் வழக்கில் வந்துள்ளது. தி. வை. சதாசிவ பண்டாரத்தாரும் தமது பிற்காலச் சோழர் வரலாறு என்னும் நூலில் 'வணிகர் குழுவினர் எல்லாம், தனித்தனிக் குழுவினர் என்பதும் அவர்கள் ஒருவர்க்கொருவர் முரண்படாமல் நம் தமிழகத்தில் தம் வாணிகத்தை நடத்திப் பொருளீட்டிப் புகழுடன் வாழ்ந்து வந்தனர் என்பதும் ஈண்டு அறியத்தக்கன' என்று குறிப்பிட்டுள்ளார். 'ஒவ்வொரு வணிகக் குழு வினரும் ஒவ்வொரு சிறு காவற்படை வைத்துக் கொண்டிருந்தனர் என்பதும் அவர்கள் வாணிகத்தின் பொருட்டுத் தாம் செல்லும் இடங் களுக்கெல்லாம் அச்சிறுபடையோடு செல்வது வழக்கம் என்பதும் சில குறிப்புக்களால் உணரக்கிடக்கின்றன' என்றும் கூறியுள்ளார்.

காவற்படை வைத்துக்கொள்ளும் உரிமை வணிகர் கூட்டங் களுக்கு இருந்திருப்பின் தமிழ்நாட்டில் சிற்சில பகுதிகளில் அவர்கள் குறுநிலமன்னர்களாக ஆட்சி புரிந்திருத்தல் வேண்டும் என்பது புலனாகின்றது. முஸ்லிம்களாகிய வணிகக்கூட்டத்தினரும் அவ்வாறு அந்நடைமுறைக்கு விதிவிலக்காக அமையவில்லை என்பது தெளிவு. எனவே அத்தகைய முஸ்லிம் குறுநிலமன்னர்கள் சாமந்தர் என

அழைக்கப்பட்டதில் வியப்பு ஒன்றும் இல்லை என்று கருத இடமும் உண்டு.

அக்கல்வெட்டில் 'சோனகச்சாமந்தப்பள்ளியான பிழார்ப்பள்ளி' எனக்குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம். பிழார்ப்பள்ளி என்றால் என்ன? கல்வெட்டினைப் பதிவு செய்தவர் விட்ட பிழையினால் இத்தடுமாற்றம் ஏற்பட்டிருக்கலாம். அச்சொற்றொடர் அக்கல் வெட்டில் 'சோனக சாமந்தப்பள்ளியான பிலால் பள்ளி' என்று இருந்திருத்தல் வேண்டும். பிலால் என்னும் சொல்லில் உள்ள பசுர இகரம் வல்லொலி வல்லெழுத்தாக உச்சரிக்கப்படல் வேண்டும். பிலால் என்பது அறபுச்சொல். கல்வெட்டைப் பதிவு செய்தவர் களுக்குப் 'பிலால்' என்னும் அறபுச்சொல் ஒரு புதிராக அமைந் திருக்கலாம். திருப்புல்லாணிக் கல்வெட்டுப் பொறிக்கப்பட்ட காலத் தில் நடைமுறையிலிருந்து கல்வெட்டு எழுத்து முறையில் லகரத்துக்கும் ழகரத்தும் அதிக வேறுபாடு இருக்கவில்லை. எனவே 'பிலால்' என்பதனைப் பிழையெனக் கண்ட கல்வெட்டுப் பதிப்பாசிரியர் அதனைப் பிழார் என மாற்றி இருக்கலாம்.

பிலால் என்பது ஒரு பெயர். அறபு மொழியில் வழங்கி வருகிறது. பிலால் என்பவர் எத்தியோப்பியா என்று வழங்கும் அபிசீனியாவைச் சேர்ந்தவர். அவர் ஒரு நீக்ரோ. கறுப்பு இனத்தைச் சேர்ந்தவர், தொடக்கத்தில் இஸ்லாத்தைத் தழுவியவர்களுள் ஒருவர். ஓர் அடிமையாக இருந்தபொழுதே பிலால் அவர்கள் இஸ்லாத்தைத் தழுவினார். அதற்காக எசமானனால் கடுமையாகத் தண்டிக்கப் பட்டார். பின் அடிமைத்தளையிலிருந்து முஸ்லிம் மக்களால் விடுவிக்கப்பட்டார்.

இஸ்லாத்தின் ஆரம்பகாலத்தில் தொழுகையை நிறைவேற்ற வருமாறு முஸ்லிம் மக்களை அழைக்க வேண்டி இருந்தது. அறபுச் சொற்றொடர்களை இனிமையான குரலில் நன்கு உச்சரிக்கக் கூடிய வராயிருந்தமையினால் பிலால் அவர்கள் அந்தப் பணியை நிறை வேற்றுமாறு முகம்மது நபி (சல்) அவர்களால் நியமிக்கப்பட்டார். முஅஸ்ஸின் என்று வழங்கப்பட்ட அப்பதவி பிலால் என அவர் பெய ராலும் வழங்கப்படலாயிற்று. அதனால் அக்கல்வெட்டில் குறிப்பிடப் பட்ட சோனகசாமந்தப் பள்ளிவாசல் பிலால் பள்ளி எனக் குறிப்பிடப் பட்டிருக்கவேண்டும். இன்றும் பள்ளிவாசல்களைப் பெயர் சுட்டி வழங்கும் மரபு உண்டு.

இந்நன்கொடை, ஆழ்வாரிடம் ஒப்படைக்கப்பட்டது என உள்ளது. திருப்புல்லாணி கோயில் வைணவ கோயிலாக இருந்தமையால் சோனக சாமந்தப்பள்ளியான பிலால் பள்ளிப் பரிபாலகரையும் அப் பெயரால் அழைத்திருந்தனர்.

அக்கல்வெட்டில் பழந்தேவதானம் பள்ளிச்சந்தம் என்னும் இரண்டு சொற்றொடர்கள் வந்துள்ளன. பழந்தேவதானம் என்பது சைவ, வைணவ கோவில்களையும், பள்ளிச்சந்தி என்பது சமண, பௌத்த கோவில்களையும் சுட்டுவதாகக் கொள்ளலாம். பழந்தேவதானத்துக்கும் பள்ளிச்சந்திக்கும் உரியவற்றை நீக்கி எஞ்சி உள்ளவற்றையே சோனக சாமந்தப் பள்ளியான பிலால் பள்ளிக்கு ஒதுக்கப்பட்டுள்ளது என்பதைக் குறிப்பிடவே இவ்விரண்டு சொற்றொடரும் பயன்படுத்தப் பட்டுள்ளன எனலாம்.

பல வரிகள் அக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன. அந்தராயம், விநியோகம் என்பன இரண்டு சிறுவரிகள். உள்வரியாகவும் கணிக்கப் படுபன அவை. கோயில் பணி அல்லாத பணிகளை மேற்பார்வை செய்பவர் காரிய ஆராட்சி என அக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. வெட்டிபாட்டம் என்பது கடைநிலை ஊழியருக்காக ஊர்ச் சபையினர் தரும் பணத்தைக் குறிப்பது. அடுத்து, தொழில் பற்றிய வரிகள் அக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன. பஞ்சுக்காக அற விடும் வரி பஞ்சுபீலி என அழைக்கப்படுகிறது. தறி இறை என்பது நெய்யும் தறி அடிப்படையில் துணிமணி நெய்வோர் அரசுக்குச் செலுத்தவேண்டிய வரி ஆகும். செக்கைப் பயன்படுத்தி எண்ணெய் தயாரிக்கும் வாணியரிடமிருந்து அறவிடப்படுவது செக்கிறை என்னும் வரி. பொற்கொல்லர் அல்லாத தட்டாரிடமிருந்து அறவிடப்படும் வரி தட்டாரபாட்டம் என வழங்கப்படுகிறது. சோனக சாமந்தப் பள்ளியான பிலால் பள்ளிக்கு வழங்கப்பட்ட நன்கொடை இத்தகைய எல்லா வரிகளிலிருந்தும் விதிவிலக்கு அளிக்கப்பெற்றதாகும்.

''செம்பி நாடானது ஆதிநாளில் கொற்கையைத் தலைநகராகக் கொண்டு, மதுரைப் பாண்டியப் பேரரசின் கீழ், பட்டத்து இளவரசராக வருவோரின் ஆளுகைக்கு உட்பட்டதாக இருந்திருத்தல் வேண்டும். பிற்காலத்தே வைகை விலகிச் சென்றுவிட்டதைப் போன்றே, பாண்டியனின் ஆட்சியும் செம்பி நாட்டை விட்டு அகன்று விட்டன. அதன் பின்னர் கொற்கை என்கின்ற பெயரும் மறைந்து, வைகையம் பதி, வகுதைமாநகர், காயல், தென்காயல் என்றெல்லாம் மாறி இறுதியாகக் கீழக்கரை என்று ஆகியுள்ளது. இது நாம் கூறுவதன்று. இன்றைய கீழக்கரை தான் முன்னாளில் கொற்கை எனத் திகழ்ந்த மாபெரும் கடல்துறை என்பது நமது இந்தியப் பேரரசு வெளியிட்டுள்ள (ராமநாதபுரம், திருநெல்வேலி) கெஜட்டியர் (Gazetteer) நூல்களில் காணப்படுகின்ற தகவல் ஆகும்.'' இவ்வாறு வள்ளல் சீதக்காதி வரலாறு என்னும் தமது நூலில் டாக்டர் கலைமாமணி கவி கா. மு. சரீப் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். (பக்கம் 38 - 48)

பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் மார்கோபோலோ தமிழ் நாடு வந்தார். இலங்கையை விட்டு நீங்கிய பின்னர் மார்கோ

போலோ முதன்முதல் அடைந்த பிரதேசம் 'கோரமண்டல்' கடற்கரைப் பிரதேசம் ஆகும். இது ம'அபர் என அழைக்கப்பட்டது. இப்பிரதேசத்தை முஸ்லிம் மக்களே ம'அபர் என அழைத்தனர் என மார்கோபோலோ குறிப்பிடுகிருர். ஐந்து அரச சகோதரர்கள் பற்றியும் பாண்டிநாட்டை ஆட்சி புரிந்த ஐந்து முடிமன்னரைப் பற்றியும் அவர் குறிப்பிட்டுள்ளார். பாண்டிநாட்டை, ம'அபர் பிரதசேத்தின் மிக விசாலமான மாகாணம் எனவும் வருணிக்கிறார். கி. பி. 1280இல் சீனுவுக்கும் ம'அபருக்கும் இடையே அரசியல் உறவு ஏற்பட்டது. அக்கால கட்டத்தில் 'ஐந்து சகோதரர்கள் சுல்தான்களாக' ஆட்சி புரிந்தனர் என சீன வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின்றனர். அரசராகக் கடமையாற்றிய அவர்கள் சம காலத்தவராவார்கள். ஆனால் ஒவ்வொருவரும் தனித்தனியே சுதந்திரமாக ஆட்சி புரிந்தனர் என்றே வேற்று நாட்டவருக்குப் புலப்பட்டது. அவர்கள் தத்தம் பெயரைக் கொண்ட கல்வெட்டுக்கள் மூலம் நன்கொடை அளித்தனர். நாணயங் களையும் இயற்றி வழங்கினர். ஆனால் அவர்கள் அனவைருக்கும் முதல்வராக குலசேகரன் விளங்கினுன் என்பதை மார்கோபோலோவும் வஸ்ஸாபும் புரிந்து கொண்டுள்ளனர். அந்த அரசர்களுள் மூத்தவன் அஸ்ஹர் என அழைக்கப்பட்டான் என மார்கோபோலோ குறிப் பிட்டுள்ளார். 'ம'அபர் ஆட்சியாளரான காஸங்தேவர் (குலசேகரன்) என்பவரின் ஆட்சி செல்வம் கொழிக்கும் காலமாகத் திகழ்ந்தது. ஏறத்தாழ நாற்பது ஆண்டுகள் நீடித்தது' என வஸ்ஸாப் குறிப் பிடுகிறார்.

குலம் (குயிலோன்) இலிருந்து நிலாவார் (நெல்லூர்) வரை பரந்திருந்த கோர மண்டல பிரதேசம் அறபு மொழியில் ம'அபர் என்றே வெளிநாட்டவர் அறிந்திருந்தனர். அறபு நாடுகளிலிருந்தும் பாரசீகக்குடா நாடுகளிலிருந்தும் அங்கு வந்த பிரயாணிகளும் வியாபாரிகளும் அந்தப் பிரதேசத்தை ம'அபர் என்றே வழங்கினர். இப்பிரதேசத்திலிருந்த துறைமுகப் பட்டினங்களுக்குப் பல நாடுகளிலி ருந்தும் கப்பல்கள் வந்து சென்றுகொண்டிருந்தன. குறிப்பாக பாரசீக வளைகுடாத் தீவுகளின் செல்வமும், பொதுவாக இராக், குறாசான், றூம், ஐரோப்பா போன்ற நாடுகளின் ஆடம்பரமான பொருள்களும் ம'அபரில் இருந்தன. இந்தியாவுக்கான திறவு கோலாக ம'அபர் திகழ்ந்தது என வஸ்ஸாப் குறிப்பிட்டுள்ளார். காயலை (காயல்)ப் பற்றிக் குறிப்பிடுகையில் அது பாண்டிய அரசின் பிரதானமான வியாபார மத்திய நிலையமாக திகழ்ந்தது என்றும் அந்த நகரை உடைய அரசர் நேர்மை தவறாமல் நாட்டை ஆண்டு வந்தார் என்றும் வியாபாரிகளுக்கும் வெளிநாட்டவர்களுக்கும் பெருஞ் சலுகைகளை வழங்கினார் என்றும் அதன் காரணமாக அவர்கள் அந்நகருக்கு வருவதில் மகிழ்ச்சி அடைந்தனர் என்றும் மார்கோ போலோ குறிப்பிட்டுள்ளார்,

'குதிரைகளும் வேறு பொருள்களும் நிறைந்த மேற்கில் இருந்து வரும் கப்பல்கள் அந்த நகரத்துக்கு வராமல் செல்வதில்லை. ஹொர் மோஸ் பகுதிகளிலிருந்தும் அத்தகைய கப்பல்கள் அந்த நகருக்கு வந்த வண்ணம் இருந்தன. அதன் பயனாக காயில் நகரில் பெரும் தொகையான மக்கள் ஒன்றுகூடி பெருமளவினதான வியாபார நடவடிக்கைகளில் ஈடுபட்டுக்கொண்டிருந்தனர்' என மார்கோபோலோ குறிப்பிட்டுள்ளார். அங்கே நடைபெற்ற வியாபார நடவடிக்கைகளில் குதிரை வியாபாரமும் அரசியல் முக்கியத்துவம் பெற்றதாய் இருந்தது. ஏனெனில் அந்த நாட்டின் வருவாயில் பெரும்பகுதி அரசனுக்கும் அவரது படைக்கும் குதிரை வாங்குவதற்காகவே பயன்படுத்தப் பட்டது.

வஸ்ஸாப் என்னும் பயணி வருணித்த தமிழ் நாட்டுத் துறை முகங்களிலே முக்கியமாகப் பணியாற்றியவராகக் குறிப்பிடப்படுபவர் தக்கியுத்தீன் அப்துல் றஹ்மான் அவர்கள். அவர் மர்ஸ்பான் ஆகக் கடமையாற்றினார் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவருக்கு மர்ஸ்பான் என்றே பட்டம் வழங்கப்பட்டிருந்தது. மர்ஸ்பான் என்பது ஒரு பாரசீகச் சொல். அச்சொல்லுக்கு எல்லைப்புற ஆளுநர் என்னும் ஒரு பொருளும் உண்டு. ஆங்கிலத்தில் Margrave என்னும் சொல்லுக்கு மர்ஸ்பான் சமமாக உள்ளது என்பர். Margrave என்பது புனித ரோமப் பேரரசின் இளவரசர்களுக்கு அளிக்கப்பட்ட ஜெர்மானியப் பெயர். எல்லைப்புற மாகாணத்தின் தலைவர் என்பதையும் Margrave என்னும் சொல் சுட்டிக் காட்டுகிறது. இவ்வாறு தமிழ் நாட்டிலே ஓர் ஆளுநராகப் பணிபுரிந்த தக்கியுத்தீன் அப்துல் றஹ்மான் அவர்கள் மலிகுல் இஸ்லாம் ஜமாலுத்தீன் என்பவரின் சகோதரர். ஜமாலுத்தீன் அவர்கள் ஓர் அறபுச் சிற்றரசர். கைஸ் நாட்டை ஆட்சிபுரிந்து வந்தார். பாரசீக வளைகுடாவில் கைஸ் தீவு அமைந்துள்ளது. முதன் முதல் தக்கியுத்தீன் அப்துல் றஹ்மான் அவர்கள் காயலிலே ஜமாலுத்தீன் அவர்கள் நிறுவிய வியாபார நடுநிலையத்துக்கு அதிபதியாகக் கடமை ஆற்றினார்.

மலிகுல் இஸ்லாம் ஜமாலுத்தீன் அவர்களின் வியாபார நடவடிக்கைகளைப்பற்றி வஸ்ஸாப் இவ்வாறு விரிவாகக் குறிப்பிட் டுள்ளார். ஜமாலுத்தீன் அவர்கள் பாண்டிய மன்னனுடன் ஓர் உடன்படிக்கை முடித்துக் கொண்டிருந்தார். அந்த உடன்படிக்கைக்கு இணங்க கைஸ் தீவில் உள்ள தமது குதிரைப் பண்ணையிலிருந்தும் வேறு இடங்களிலிருந்தும் நல்ல இனக் குதிரைகளை ஆண்டுதோறும் 1400 வீதம் ம'அபருக்குக் கொண்டுவருதல் வேண்டும். அவை நல்ல, தலைசிறந்தனவாய் இருத்தற்பொருட்டு எல்லா இடங் களுக்கும் சென்று அவற்றைத் தெரிவு செய்யவேண்டும் என்பதும்

வியாபார உடன்படிக்கையில் ஒரு நிபந்தனையாகும். இதற்கிணங்க ஒவ்வொரு குதிரையின் விலையும் நிர்ணயிக்கப்பட்டது.

குதிரை வியாபாரத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில் நாட்டின் செல்வம் வீணாக்கப்பட்ட விதத்தினை மார்கோபோலோ குறிப்பிட்டுள்ளார். வியாபார உடன்படிக்கையில் இடம் பெற்ற வியாபாரிகளுக்குச் சாதகமான நிபந்தனைகளே பணம் விரயமானதற்கான காரணமாக அவர் குறிப்பிடவில்லை. தென்னிந்தியாவின் காலநிலை குதிரைகளின் வளர்ப்புக்கு ஏற்புடையதாய் இருக்கவில்லை என்று அவர் கூறியுள்ளார்.

வஸ்ஸாப் அவர்களும் குதிரை பராமரிப்பதில் தமிழக மக்களுக்கு அனுபவமிருக்கவில்லை. ஆதலால் குதிரைகளினால் அடைய வேண்டிய நன்மையை அவர்கள் அடையவில்லை என்று குறிப்பிட்டுள்ளார்.

அக்கால எல்லையில் தமிழ் நாட்டை ஆண்டுவந்தவன் முதலாம் மாறவர்மன் குலசேகரன் என்பான். அவனுடைய ஆட்சிக் காலம் கி.பி. 1268 முதல் கி.பி. 1310 வரை நிகழ்ந்தது என்பர். இந்தக் காலகட்டத்தில் அவனுடன் வேறு நால்வர் பாண்டி நாட்டை குறுநில மன்னராக ஆண்டு வந்தனர். இரண்டாம் ஜடாவர்மன் சுந்தர பாண்டியன், மாறவர்மன் விக்ரம பாண்டியன், ஜடாவர்மன் வீர பாண்டியன், மூன்றாம் ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் என்பவரே அவர்கள் எனப் பாண்டிய வரலாறு கூறுகின்றது. ஆறாவது பாண்டியனாகக் கணிக்கப்பட்டவர் தகியுத்தீன் அப்துல் றகுமான் என்பவரே. இக்கருத்தினையே செய்தக்காதிறு திருமண வாழ்த்தில் எட்டையபுரம் உமறுகத்தாப் புலவர் அவர்கள்,

மைவருக்கஞ் சூழ்சோலை மாமதுரைப் பாண்டியர்கள்
ஐவருக்கு மாறாக ஆறாம்பேர் கொண்டபிரான். (47)

என்று குறிப்பிட்டுள்ளார். இதிலிருந்து அவர் எல்லைப்புற மாகாண ஆளுநர் எனப் பொருள்படும் மர்ஸ்பான் என்னும் பட்டம் பெற்றிருந்தமை உறுதியாகிற்று. அவர் பாண்டியன் மகளைத் திருமணம் புரிந்தார் என்பது

நிலமகளும் சயமகளும் நிற்ப வழுதிசெல்வக்
குலமகளைக் கைப்பிடித்துக் கொண்ட மணவாளன். (48)

என உமறுகத்தாப் புலவரின் கூற்றிலிருந்து புலனாகிறது.

கி.பி. 1284ஆம் ஆண்டில் முதலாம் மாறவர்மன் குலசேகரன் இலங்கைக்குப் படை அனுப்பி மூன்றாவது பராக்கிரம பாகுவை தோற்கச் செய்து அந்நாட்டை வென்றான் என வரலாறு கூறுகின்றது. அந்தப் பாண்டி நாட்டுப் படைக்குத் தலைமைத் தளபதி

யாகச் சென்றவர் தக்கியுத்தீன் அப்துல் றஹ்மான் என்பவரே. அவர் இலங்கை மன்னனை வென்று ஆரியச் சக்கரவர்த்தி என்பவனை அரசு கட்டிலில் அமர்த்திவிட்டு நாடு திரும்பினார். பாண்டிய நாட்டிலிருந்து சென்ற படைக்கு ஒரு முஸ்லிம் தலைமை தாங்கிச் சென்றார் என்பதனை வரலாற்றாய்வாளரான திரு. வி. கே. சுப்பிரமணிய ஐயர் அவர்கள் தமது 'பழங்காலத் தக்கணம்' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். ஈழத்தின்மீது பாண்டியன் போர் தொடுத்து வெற்றி கொண்டமையை இலங்கையின் பண்டைய வரலாற்று நூலான சூளவமிசம் குறிப்பிடுகின்றது. செய்தக்காதி திருமண வாழ்த்திலும் உமறுகத்தாப் புலவர், அத்தலைவர் இலங்கையைப் பிடித்து ஆரியச் சக்கரவர்த்தி என்பானை அரசு கட்டிலில் அமர்த்தியதாகப் பாடி உள்ளார் இவ்வாறு :

வாரிதனி லேறியந்த வங்கம் விட்டி லங்கைபிடித்து
ஆரியனை மிக்காய் அரியா சனத்தில் வைத்தோன். (55)

அந்த ஆரியச் சக்கரவர்த்தி என்பவன் இலங்கையின் வடமேற்குக் கரையிலுள்ள புத்தளம் என்னும் பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்து வந்தான். அவன் ஆரியச் சக்கரவர்த்தி என்று பெயர் பெற்றிருந்தாலும் ஆரியனாக இருக்கவில்லை என திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். பண்டைய தக்கணம் என்னும் நூலில் அதன் ஆசிரியர் திரு. கே. வி. எஸ். அய்யர் அவர்கள் அவன் ஒரு முகமதியன் எனக் குறிப்பிட்டுள்ளார். டாக்டர் எஸ். கே. அய்யங்கார் அவர்கள் அதனை மறுத்துள்ளார். மறுப்புச் சரியானதே எனக் கருத்து வெளியிட்டுள்ளார் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள்.

ஆரியச் சக்கரவர்த்தி சோனக சாமந்தன் என்று அழைக்கப்பட்டான் என்றும் ஆரிய சக்கரவர்த்தி என்னும் பெயர் அவனுக்கு வீர விருதாக வழங்கப்பட்டது என்றும் 'தமிழ்ச் சமுதாயத்தில் அறபிகள்' என்னும் தலைப்பில் பிறைக் கொழுந்து என்னும் சிறப்பு மலருக்கு எழுதி உள்ள ஒரு கட்டுரையில் அதன் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஆரியச் சக்கரவர்த்தி என்று பெயர் பூண்ட அந்த ஆட்சியாளர் தமிழ் நாட்டைச் சார்ந்த ஒரு முஸ்லிம் என்பதை உறுதிப்படுத்தப் புறச் சான்றுகள் உள்ளன.

ஆரியச் சக்கரவர்த்தி அரசோச்சும்போது இப்னு பத்தூதா இலங்கைக்குச் சென்றார். ஆரியச் சக்கரவர்த்தியின் தலைநகராய் அமைந்திருந்த புத்தளத்தில் போய் இறங்கினார். இருவரும் அறிந்திருந்த பொது மொழியாகப் பாரசீக மொழி அன்று அமைந்திருந்தது. இதனால் இலகுவாக தமது குறிக்கோளை இப்னு பத்தூதா ஆரிய சக்கரவர்த்தியிடம் எடுத்துக் கூறினார். ஆதமலையைத் தரிசிக்க

வந்துள்ளதாக இப்னு பத்தூதா தமது ஆசையைத் தெரிவித்தார். உடனே ஆரியச் சக்கரவர்த்தி இப்னு பத்தூதா ஆதமலைக்குக் செல்வதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொடுத்தார். பாண்டி மன்னரின் அவைக்களத்தில் முஸ்லிம்கள் பலர் இருந்தார்கள். அவர்கள் பாரசீக மொழியில் பாண்டித்தியம் பெற்றவர்களாகத் திகழ்ந்தார்கள். ஆரியச் சக்கரவர்த்தியும் அதே குழுவினைச் சேர்ந்தவ ராதலால் அவர் பாரசீக மொழியில் பயிற்சி பெற்றிருந்தார். தக்கியுத்தீன் அப்துல் றஹ்மான் என்பவரால் ஆட்சியில் அமர்த்தப் பட்டவர் அவர். பாரசீக மொழியில் பயிற்சி பெற்றிருந்ததனால் ஆரியச் சக்கரவர்த்தி முஸ்லிமாக இருந்திருத்தல் வேண்டும். அவர் முஸ்லீமாய் இருந்த காரணத்தினால்தான் மற்றொரு வெளிநாட்டு முஸ்லிமான பயணி இப்னு பத்தூதாவுக்கு ஆதமலைக்குச் செல்வதற் கான எல்லா உதவிகளையும் நிறைவேற்ற முன்வந்தனர். இப்னு பத்தூதா தமது இலங்கைச் சுற்றுலாவை முடித்துக் கொண்டு கப்பல் மார்க்கமாக வந்து புத்தளத்தையே அடைந்தார். அங்கிருந்தே தமிழகம் சென்றார். இவை அனைத்தும் ஆரியச் சக்கரவர்த்தி முஸ்லிமாக இருந்திருத்தல் வேண்டும் என்னும் கருத்தை வலுப் படுத்துவனவாய் அமைந்திருப்பதைக் காணலாம்.

பல்வேறு பயணிகளால் குறிப்பிடப்பட்ட தமிழகத் துறை முகங்களுள் ஒன்றிலிருந்து சீனாவுக்கு ஒரு தூதுக்குழு அனுப்பப் பட்டது. கி. பி. 1297 இல் அனுப்பப்பட்ட இத்தூதுக்குழுவுக்கு பகறுத்தீன் அஹமது பின் இப்றாஹீமுல் தைபி என்பவர் தலைவராகக் கடமையாற்றினார். இவர் ஜமாலுத்தீன் என்பவரின் புதல்வர். துறைமுகப்பட்டினங்களில் மாத்திரம் அல்லாது உள்நாட்டுப் பிரதேசங் களிலும் முஸ்லிம் மக்கள் குடியேறி இருந்தனர். வடநாட்டிலிருந்து தென் இந்தியாவுக்கு படையெடுத்து வருவதற்கு முன்பிருந்தே தமிழக முஸ்லிம்கள் வரலாறு ஆரம்பமாகியுள்ளது.

தகியுத்தீன் அப்துல் றஹ்மான் என்பவரின் வழித்தோன்றல்கள் பாண்டிய நாட்டிலே உயர் பதவிகள் பல வகித்துவந்துள்ளனர். பாண்டி நாட்டின் கடற்கரைப் பிரதேசம் அந்தப் பகுதியின் வரி அறவிடும் மா அதிபராக அத்தகையோர் கடமையாற்றி உள்ளனர் என வரலாறு கூறுகின்றது. அக்காலத்தில் அவர்கள் பாண்டிய அரசவையிலே பெரும் செல்வாக்குடன் விளங்கி வந்துள்ளனர். அன்று வாழ்ந்த முஸ்லிம் மக்கள் மிகுந்த செல்வாக்குடன் விளங்கினர் என்பதை இத்தகைய நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டிக்கொண்டிருக் கின்றன. இங்ஙனம் அறபுத் தொடர்புடன் ஆரம்பமான பல்வேறு முஸ்லிம் குடி இருப்புக்கள் கலப்பு இனத்தவராகப் பல்வேறு சமுதாயங் களை உருவாக்க வழிவகுத்தன என்று வரலாற்று ஆசிரியர் கூறுவர்.

கி. பி. 1310 இல் முதலாவது மாறவர்மன் குலசேகர பாண்டியன் கொல்லப்பட்டான். அவனுக்கு இரண்டு புதல்வர்கள். பட்டத்தரசியின் மகன் சுந்தரபாண்டியன். வைப்புப் பெண்ணின் மகன் வீர பாண்டியன். குலசேகர பாண்டியன் தனது பட்டத்தரசியைப் புறக் கணித்துவிட்டு வைப்பாட்டிபால் கூடுதலாகக் கவனம் செலுத்தினன் எனக் கூறப்படுகிறது. வைப்பாட்டியின் மகன் வீரபாண்டியனை அரசுரிமை பெறச் செய்ய முயற்சித்தான் என்றும் குறிப்பிடப்படுகிறது. தனது தாயாரைப் புறக்கணிப்பதையும் தனக்குக் கிடைக்க உள்ள அரசுரிமையை மாற்றாள் மகனுக்கு வழங்கத் திட்டமிடுவதையும் அறிந்த சுந்தரபாண்டியன் கோபாவேசத்தினால் தனது தந்தை குலசேகரபாண்டியனைக் கொன்று விட்டான்.

அரசகுடும்பத்தைச் சார்ந்தவர்களும் அரசுப் பிரமுகர்களும் தந்தையைக் கொன்ற தனையன் ஆட்சி பீடத்தில் அமருவதை விரும்ப வில்லை. அவர்கள் வீரபாண்டியன் ஆட்சி புரிவதையே விரும்பினர். அவனையே ஆட்சி பீடத்தில் அமர்த்தினர். இதன் பயனாக உள் நாட்டுப்போர் மூண்டது. போர் வீரர்களின் அனுதாபத்தைப் பெற்ற சுந்தரபாண்டியன் நாமக்கல் நகரத்துக்குச் சென்று தன்னை அரச னாகப் பிரகடனப்படுத்தினான். எங்கே உள்ளது என்று இன்றும் அடையாளங்கண்டு கொள்ளப்படாத தலாச்சி ஏரிக்கருகே வீரபாண்டி யனுக்கும் சுந்தரபாண்டியனுக்கும் போர் மூண்டது. இப்போரிலே தோல்வி அடைந்த வீரபாண்டியன் சிறைக் கைதியாகப் பிடிபட்டான். நுண்ணறிவும் புத்தி கூர்மையும் மிக்க வீரபாண்டியன் அங்கிருந்து தப்பி ஓடிவிட்டான். நாமக்கல்லுக்கு அணித்தாய் உள்ள கரம்ஹட்டி என்னும் இடத்தின் ஆட்சியாளராகக் கடமையாற்றிய தனது உறவின னான மன்னார் பெருமாளிடம் சென்று வீரபாண்டியன் அவனுடைய உதவியைப் பெற்றுப் போர் செய்து தான் இழந்த நாட்டை மீண்டும் பெற்றதுடன் நின்று விடாது சுந்தரபாண்டியன் நாட்டை விட்டு ஓடவும் செய்துவிட்டான்.

இந்நிகழ்ச்சிக்கு முன்னர் மாறவர்மன் குலசேகரபாண்டியன் உயிருடன் இருக்கும் பொழுதே இரண்டாம் ஜடாவர்மன் வீர பாண்டியன் என்ற பெயரோடு வீரபாண்டியன் கி.பி. 1296 இலிருந்து சிற்றரசனாகவும் மூன்றாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் என்ற பெயரோடு சுந்தரபாண்டியன் கி. பி. 1303 இலிருந்து சிற்றரச னாகவும் இருந்து வந்தனர். இந்தக் கால எல்லையில் இவர்களுக் கிடையே கருத்து வேறுபாடு இருந்ததாகத் தெரியவில்லை. இவர்கள் இருவருள்ளும் தனக்குப் பின்னர் வீரபாண்டியனே முதன்மையான இடத்தைப் பெறுவான் என்று குலசேகரபாண்டியன் ஏதோ ஒரு வகையில் சுட்டிக்காட்டி இருத்தல் வேண்டும். இதனால் அதிருப்தி

அடைந்தமையினாலேயே சுந்தரபாண்டியன் தனது தந்தையைக் கொன்றிருத்தல் வேண்டும்.

வீரபாண்டியனால் தோற்கடிக்கப்பட்ட சுந்தரபாண்டியன் டில்லியில் தஞ்சம் புகுந்தான். அப்போது அங்கு ஆட்சி பீடத்தில் அமர்ந்திருந்தவர் சுல்தான் அலாவுத்தீன் கில்ஜி. சுந்தரபாண்டியன் அங்கு சென்று அலாவுத்தீன் கில்ஜியிடம் உதவி கோரினார். அப்போது மலிக் நாஇப் என்று அழைக்கப்பட்ட மலிக்காபூர் என்பவர் சுல்தான் அலாவுத்தீன் கில்ஜியின் ஆணைப்படி தென் இந்தியாவுக்குப் படை எடுத்துச் சென்றிருந்தார். கி.பி. 1309 இல் மலிக் நாஇப் வாறங்கல் என்னும் இடத்துக்குப் படை எடுத்துச் சென்றார். அம்மன்னனைத் தோற்கடித்துவிட்டு டில்லிக்குத் திறை செலுத்த வகை செய்தார். மூன்றாம் வீரவல்லாளன் என்பவனை கி.பி. 1310 இல் தோற்கடித்துவிட்டு துவார சமுத்திரம் என்னும் நகரில் மலிக் நாஇப் தங்கி இருந்தார். இச்சந்தர்ப்பத்தில்தான் சுல்தான் அலாவுத்தீன் கில்ஜியின், சுந்தர பாண்டியனுக்கு உதவி செய்யும்படியான, ஆணை மலிக் நாஇபுக்குக் கிடைத்தது.

முஸ்லிம் வரலாற்றாசிரியர்களும் முஸ்லிம் அல்லாதோரும் மலிக் நாஇப் என்பவர் வடக்கிலிருந்து சுந்தரபாண்டியனுக்கு உதவி செய்யுமுகமாக தெற்கே வந்தார் என்று கூறி உள்ளனர். கி.பி. 1316 இல் கல்வெட்டு ஒன்றில் அக்காலத்துக்குச் சற்று முன்னர் சுந்தரபாண்டியன் முஸ்லிம்களுடன் வந்தான் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. சுல்தானின் படைகள் வருவதைக் கண்ட வீரபாண்டியன் தனது தலைநகரைப் புறக்கணித்துவிட்டுக் காட்டுப் பகுதிக்கு ஓடி விட்டான் என்று கூறப்பட்டுள்ளது. வெற்றி பெற்ற மலிக் நாஇப் மதுரையிலே சுந்தரபாண்டியனை அரசனாக அமர்த்திவிட்டு தமிழ் நாடு முழுவதையும் டில்லி சுல்தானின் ஆட்சியின்கீழ் கொண்டு வந்தார் என்று கூறப்படுகிறது.

தேவகிரிக் கோட்டையில் கைப்பற்றப்பட்ட செல்வங்களினால் உந்தப்பட்ட அலாவுத்தீன் கில்ஜி தமிழ்நாட்டில் உள்ள செல்வங்களையும் பெற ஆசைப்பட்டான். இதன் காரணமாக மதுரைக்கு வந்து அதனைக் கைப்பற்றி மலிக் நாஇப் இராமேஸ்வரம் வரையும் சென்றார். சுந்தரபாண்டியனின் எதிரியான வீரபாண்டியனுக்கு உதவி புரியும் முகமாக இலங்கை மன்னனின் உதவி கிடையாமல் போவதற்கு வழிவகை செய்யவே மலிக் நாஇப் அங்கே சென்றார் எனக் கூறப்படுகிறது. நெடுநாட்களாக இலங்கை மன்னன் வீரபாண்டியனுக்கு ஆதரவு காட்டி வந்திருக்கிறான். டில்லி சுல்தானின் ஆட்சியின் கீழ் தமிழகம் நேரடியாக வந்தது எனக் கூற முடியாவிட்டாலும் முஸ்லிம்களின் செல்வாக்கு அங்கு நிலவியது

எனக் கூறலாம். பாண்டியநாட்டு வரலாறு எழுதிய டாக்டர் எஸ். ஏ. கிவ். ஹுசைனி அவர்கள் ‘காஸி மஹல்லாவிலே ஒரு பள்ளி வாசல் உள்ளது’ என்றும் ‘அந்தப் பள்ளிவாசல் சுந்தரபாண்டியனால் நிறுவப்பட்டது’ என்றும் ‘அந்தப் பள்ளிவாசலின் பராமரிப்புக்காகவும் அங்கு நடக்கவேண்டிய கிரியைகளை நிறைவேற்றுவதற்காகவும் வராகனூர் என்னும் கிராமத்தின் வருவாயை ஒதுக்கினார்’ என்றும் இதற்கென செப்பேடு ஒன்று வழங்கப்பட்டது என்றும் குறிப்பிட்டுள்ளார். இந்தச் செப்புப்பட்டயத்தைப் பெற்றவர் காதி செய்யிது தாஜுதீன் என்றும் அவர் அந்த மதுரைப் பள்ளிவாசலின் எல்லையைப் பராமரித்துக் கொண்டிருப்பவர்களின் மூதாதையர் என்றும் செய்யிது தாஜுதீன் என்பவர் மஅபரின் பிரதம நீதி அரசராக அப்பொழுது கடமையாற்றிய செய்யிது ஜமாலுத்தீன் அல் முப்திஉல் மஅபரியின் குமாரர் என்றும் கூறி உள்ளார். இந்தக் காதி என்னும் நீதி பரிபாலகர் சுல்தான் அலாவுத்தீன் கில்ஜியால் நியமிக்கப்பட்டவர் என்றும் இந்தப் பள்ளிவாசல் சுந்தரபாண்டியனால் நிறுவப்பட்டது என்றும் இன்றும் வாழையடிவாழையாகக் கூறப்பட்டு வருகிறது.

அலாவுத்தீன் கில்ஜி அவர்களின் சேனாதிபதியான மலிக்காபூர் என்னும் மலிக் நாஇப் மதுரையை விட்டு நீங்கி கி.பி. 1311 அக்டோபர் 18 ந்தேதி டில்லியை அடைந்தார். அவரால் வீரபாண்டியனை முற்றாக ஒழிக்கவோ கைது செய்யவோ முடியவில்லை. மலிக் நாஇப் பெருமுயற்சி செய்தார் எனினும் வீரபாண்டியன் கெட்டித் தனமாகத் தப்பிவிட்டான். வடக்கிலிருந்து வந்த படை திரும்பிச் சென்றதும் இரு சகோதரர்களிடையே பூசல் மீண்டும் தலை தூக்கியது. ஆனால் இருவரும் வலி இழந்து காணப்பட்டமையால் ஒருவரை மற்றவரால் அடக்கமுடியவில்லை.

கி.பி. 1313 இல் பாண்டியநாடு வலிகுன்ற, மலிக் நாஇபினால் பாதிக்கப்பட்ட சேரமன்னன் ரவிவர்மன் குலசேகரன் பாண்டிநாட்டுக்குப் படை எடுத்து வந்து வீரபாண்டியனைத் தோற்கடித்து மஅபரின் மன்னனாக காஞ்சியில் உள்ள வேகவதி நதிக்கரையிலே முடி சூட்டிக் கொண்டான். தனது நிலைமையை அவன் நன்கு பயன்படுத்தி வலுப்படுத்திக்கொண்டான். வீரபாண்டியன் காட்டுக்கு ஓடிவிட்டான். சுந்தரபாண்டியனின் அதிகாரம் தென்னாற்காடு மாவட்டத்திலும் திருநெல்வேலி மாவட்டத்திலும் நிலவியது. ரவிவர்மன் குலசேகரன் அதிக நாட்கள் ஆட்சி செய்யவில்லை. கி.பி. 1317 இல் பிரதாபருத்ர என்னும் காகதீய அரசன் முப்பிடி நாயக்கன் என்னும் தனது சேனாதிபதி மூலம் பஞ்சபாண்டியரை வெற்றி கொண்டு அங்கு தெலுங்கு ஆளுநர் ஒருவரைக்கொண்டு ஆட்சி நடத்தினார்.

மலிக் நாஇப் தமிழ் நாட்டிலிருந்து சென்ற பின்னர் சுந்தரபாண்டியனும் வீரபாண்டியனும் தமது ஏனைய சகோதரர்களுடன்

தமது தந்தையாரின் இராச்சியத்தின் பல்வேறு பகுதிகளை ஆண்டு வந்தனர். ஆனால் சுந்தரபாண்டியனோ வீரபாண்டியனோ அந்த இராச்சியத்தின் பிரதான ஆட்சியாளராக இருக்கவில்லை என பாண்டிய குறிப்புக்கள் கூறுகின்றன. எனினும் ஐந்து சகோதரர்களுள் ஒருவனான பராக்கிரம பாண்டியன் கி. பி. 1315 இல் பிரதான அதிபதியாகி திருநெல்வேலி மதுரை இராமநாதபுரம் தஞ்சாவூர் மாவட்டங்களை ஆட்சி செய்து வந்தான். இதனைத் தொடர்ந்து ஐந்து பாண்டியர்களுக்கிடையே பூசல் நிலவியது.

கி.பி. 1318 இல் வடக்கிலிருந்து இரண்டாவது படையெடுப்பு நிகழ்ந்தது. பாண்டிய இளவரசர்களைத் தோற்கடிக்குமாறு குஸ்று கான் என்பவரை மஅபரை ஆக்கிரமிக்குமாறு குத்துபுத்தீன் முபாரக் கில்ஜி அனுப்பினார். இதனை அறிந்த பராக்கிரம பாண்டியன் காட்டிற்கு ஓடிவிட்டான். அப்பொழுது அவனுக்கு ஆலோசகராகவும் அமைச்சராகவும் இருந்தவர் மலிக்குல் அஃலம் சிறாஜுத்தீன் அவர்கள். சிறாஜுத்தீனையும் தன்னோடு வருமாறு பராக்கிரம பாண்டியன் அழைத்தான். தகியுத்தீன் அப்துல் றஹ்மான் புதல்வரான சிறாஜுத்தீன் அவர்கள் மறுத்துவிட்டார்கள். ம'அபரின் தலைசிறந்த வணிகரும் வஸீரும் (அமைச்சரும்) ஆன சிறாஜுத்தீன் அவர்கள் முஸ்லிம் ஆக்கிரமிப்பாளன் தமது சகோதரரான மற்றொரு முஸ்லிமைத் துன்புறுத்தமாட்டான் என்ற நினைப்பில் அந்தப் பட்டணத்துக்கே பொறுப்பாகத் தங்கிவிட்டார். இது பௌத்திர மாணிக்கப்பட்டணமாக இருக்கலாம். டாக்டர் எஸ். கே. ஐயங்கார் அவர்கள் பட்டணம் என்பதை தேவி பட்டணம் என அடையாளம் கண்டுள்ளார். கொள்கையற்றவனும் பேராசை பிடித்தவனும் மதம் மாறியவனுமான பர்வாறி இனத்தைச் சேர்ந்தவன், சிறாஜுதீன் அவர்களையும் அவரது குடும்பத்தாரையும் கைது செய்தது மாத்திரம் அல்லாமல் அவர்களுடைய சொத்து அனைத்தையும் கொள்ளையடித்துக்கொண்டு சென்றுவிட்டான். ஃபிரிஷ்தா என்பவர் அந்த அறபு வணிகர் கொல்லப்பட்டார் எனக் குறிப்பிட்டுள்ளார்.

இசாமி என்னும் கவிஞர் டெல்லியிலிருந்து தக்காணம் வந்து, தகியுத்தீன் அப்துல் ரகுமான் என்பவரின் புதல்வர் சிறாஜுத்தீன் என்பவரை வானளாவப் புகழ்கிறார். சிறாஜுதீன் அவர்களுக்கு ஒரு மகள் இருந்தாள். அவளுடைய பேரழகினால் கவரப்பட்ட குஸ்று கான் அவளை விவாகம் செய்துகொள்ள விரும்பினான். ஆனால் அவன் வெற்றிபெற முடியவில்லை. தனது தந்தையாரைக் கொன்ற பாதகன் குஸ்றுகானை விரும்பாத அப்பெண்மணியின் ஆவியும் பிரிந்தது. பராக்கிரம பாண்டியனை எப்படியாவது கைது செய்ய வேண்டும் என்று பகீரத முயற்சியில் ஈடுபட்ட குஸ்றுகான் வெற்றி காணவில்லை.

வடநாட்டிலிருந்து வந்த முஸ்லிம் படை வெற்றி காணாமல் வட நாட்டுக்குத் திரும்பியது. பராக்கிரம பாண்டியன் தனது ஆட்சியைத் தொடர்ந்தான். குஸ்றுகானின் துரோகம் முதலியன காரணமாக குத்துபுத்தீன் முபாரக் படுகொலை செய்யப்பட்டார். குஸ்றுகானின் நடவடிக்கைகளில் திருப்தி அடையாத மலிக் காஸி என்பவர் குஸ்று கானுக்கு எதிராகப் போர் புரிந்து அவனைக் கொன்றார். இவ்வாறு வடக்கே ஆட்சியில் புரட்சி ஏற்பட்டுக் கொண்டிருக்கும்பொழுது பராக் கிரம பாண்டியனுக்குத் தனது ஆட்சியை ஸ்திரப்படுத்த முடிந்தது.

தில்லி ஆட்சி பீடத்தில் அமர்ந்த சுல்தான் முகம்மது துக்லக் தமது தலைநகரை தில்லியிலிருந்து தேவகிரிக்கு மாற்றினார். பின்னர் சுல்தான் கியாதுத்தீன் துக்லக்கினால் கி.பி. 1320 இல் (ஹிஜ்ரி 721) ம'அபர் பிராந்தியத்துக்கு எதிராக உலூக் கான் என்பவரின் தலைமையில் படை அனுப்பப்பட்டது. வறங்கல் என்னும் இடத்தில் ஏற்பட்ட தோல்வியை அடுத்து தேவகிரியிலிருந்து பின்வாங்க அவருக்கு நேரிட்டது. கி.பி. 1323 இல் வறங்கல் கைப்பற்றப்பட்ட பின்னர் அவர் ம'அபர் மீது படை எடுத்து வந்திருக்கலாம். ம'அபரைக் கைப்பற்றி இருக்கலாம். மதுரையை முஸ்லிம்கள் வெற்றிகொண்டது கி.பி. 1323 இல் என்று மதுரைத் தல வரலாறு கூறும். கி.பி. 1323 இல் நிகழ்ந்த படை எடுப்பின் காரணமாக பராக்கிரம பாண்டியன் தோற்கடிக்கப்பட்டு சிறைபிடிக்கப்பட்டான். தில்லிக்கு அனுப்பப் பட்டான். இதன் பயனாக ம'அபர் பகுதி தில்லி சுல்தான் கியாதுத்தீன் துக்லக் என்பவரின் ஆட்சியின் கீழ் வந்தது. கி.பி. 1327 இல் தில்லி சுல்தானின் மதுரை ஆளுநராக உலூக் கான் இருந்ததாலும் ம'அபருக்கே உரிய உலோகத்தில் முகம்மது பின் துக்லக்கின் நாணயம் ஹிஜ்ரி 734 (கி.பி. 1333) எனவும் இருந்தமையினாலும் தில்லி ஆட்சி கி.பி. 1333 வரை பாண்டி நாட்டில் நிலவியது எனக் கூறலாம்.

அடுத்து தில்லி சுல்தான் முகம்மது பின் துக்லக்கின் ஆளுநராக வந்தவர் சரீப் ஜலாலுத்தீன் அஹ்ஸன் என்பவர் என அவருடைய மகளை தில்லியில் திருமணம் புரிந்த இப்னு பத்தூத்தா குறிப்பிட்டுள்ளார். சில ஆண்டுகள் தில்லி சுல்தானுக்கு விசுவாசம் ஆக இருந்த சரீப் ஜலாலுத்தீன் அஹ்ஸன் என்பவர் கி.பி. 1333 இல் தம்மை மதுரையின் சுதந்திர சுல்தானாகப் பிரகடனப்படுத்தினார். கி.பி. 1335 இல் தமது பெயரால் தங்க நாணயம் வெளியிட்டார்.

கி.பி. 1340 இல் சுல்தான் அஹ்ஸான் ஷா என்பவர் கொல்லப் பட்டார். அவருடைய அலுவலர் ஒருவரான அலாவுத்தீன் உதவ்ஜி மதுரை சுல்தான் ஆனார். ஓராண்டு ஆட்சிக்குப் பின்னர் அவர் மருகர் குதுபுத்தீன் ஷா என்ற பெயருடன் மதுரை ஆட்சி பீடத்தில்

அமர்ந்தார். ஆட்சி பீடத்தில் அமர்ந்த நாற்பது நாட்களில் அவரும் கொல்லப்பட்டார். அவரும் தமது மிக்க குறுகிய ஆட்சிக் காலத்தில் நாணயம் வெளியிட்டார்.

அவருக்குப்பின் சுல்தான் முகம்மது பின் துக்லக்கின் படை வீரனாக இருந்த கியாதுத்தீன் முகம்மது தம்கானி ஷா என்னும் பெயருடன் ஆட்சியைக் கைப்பற்றினார். இப்னு பத்தூதாவைப் போன்று இவரும் சுல்தான் ஜலாலுத்தீன் அஹ்ஸன்ஷாவின் மருகர் ஆவார். கியாதுத்தீனின் கொடுங்கோன்மையைப்பற்றி இப்னுபத் தூதா விரிவாக வருணித்துள்ளார். மூன்றாம் வீரபல்லால என்பவ ருக்கும் கியாதுத்தீனுக்கும் நடந்த போரில் கியாதுத்தீன் வெற்றி பெற்றார். கி.பி. 1342 இல் கியாதுத்தீன் மரணமானான். அவனுக் குப் பின்னர் ஆட்சிக்கு வந்தவர் நாஸிறுத்தீன். இவர் தில்லி சுல்தா னின் வீட்டு வேலைக்காரனாக இருந்தவர் என்று கூறப்பட்டுள்ளது. தமது மாமனாரான கியாதுத்தீனை அடைந்த நாஸிறுத்தீன் சில நாட் களில் மதுரை சுல்தான் ஆனார். அவர் ஒரே ஒரு நாணயத்தை கி.பி. 1344 இல் வெளியிட்டுள்ளார். இவருக்குப் பின் ஆட்சியைக் கைப்பற்றியவர் ஆதில்ஷா. இவரும் நாணயம் வெளியிட்டுள்ளார். இது கி.பி. 1355 இல் வெளிடப்பட்டது.

கி.பி. 1359 இல் பக்றுத்தீன் முபாரக் ஷா மதுரை சுல்தான் ஆனார். இவர் ஆட்சி புரிந்த ஒன்பது ஆண்டுகளில் பல நாணயங் களை வெளியிட்டுள்ளார். இந்த மதுரை சுல்தான் பரம்பரையில் கடைசியாக வந்தவர் அலாவுத்தீன் சிக்கந்தர் ஷா ஆவார். அவ ருடைய நாணயங்கள் கி.பி. 1372 இலிருந்து 1377 வரை உள்ள ஆண்டுகளைக் குறிப்பனவாக அமைந்துள்ளன. அலாவுத்தீன் சிக்கந்தர் ஷாவின் ஆட்சியுடன் மதுரை சுல்தான் ஆட்சி முடிவுற்றது எனலாம்.

கி.பி. 1378 இல் சுல்தான் சிக்கந்தர் ஷா ஒரு நாணயத்தை வெளியிட்டார். எனவே மதுரை சுல்தான் ஆட்சி இத்திகதிக்கு முன்னர் முடிவுற்றது என்று கூற முடியாது. மதுரையை வென்ற புக்கன் என்பவன் கி.பி. 1378 இல் மரணமானான் என்பதினாலும் இக் கூற்று வலியுறுகிறது. அந்த புக்கனின் ஆட்சியிலேதான் குமார கம்பண என்னும் விஜயநகர இளவரசன் தனது தகப்பன் புக்கனுக்காக முஸ்லிம்களுடன் போராடி மதுரையைக் கைப்பற்றி மதுரை சுல்தான் ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தான்.

ஆதில் ஷாவின் ஆட்சிவரை மதுரை சுல்தான்கள் வெளியிட்ட நாணயங்களில் அறபு மொழியே பயன்படுத்தப்பட்டது. பின்னர் பாரசீக மொழி உபயோகிக்கப்பட்டது. ஆனால் பெரும்பாலான குடி மக்களின் மொழி தமிழாகவே இருந்தது. ஆட்சி பீடமொழி பாரசீக

மாக இருந்தது. ஜலாலுத்தீன் தம்கானி ஷாவின் உத்தரவுகளில் இடம் பெற்றிருந்த பாரசீகச் சொற்களை இப்னுபத்தூதா அவர்கள் அதேவிதமாகத் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

குமார கம்பணனின் வெற்றியைத் தொடர்ந்து விஜயநகரப் பேரரசின் ஆட்சிக்கு ம'அபர் உட்படுத்தப்பட்டது. விஜயநகரப் பேரரசின் பிரதிநிதியாகக் குமாரகம்பணன் மதுரையில் ஆட்சிபுரிந்து வந்தான். அவனைத் தொடர்ந்து அப்பதவியை அவனது மருகன் வகித்து வந்தான். இரண்டாவது விஜயநகர ஹரிஹரவின் பின்னர் இவ்விருவரும் மதுரையில் ஆட்சி புரிந்து வந்தனர். இவர்களின் காலம் கி.பி. 1379 இலிருந்து கி.பி. 1404 வரை நீடித்தது.

தென் இந்தியாவிலே விஜயநகரப் பேரரசின் ஆட்சி கி.பி. 1646 இல் முடிவடைந்தது எனலாம். பத்து ஆண்டுகளுக்கும் பின்னர் முஸ்லிம்கள் மீண்டும் தலைதூக்கினர். செஞ்சி அரசைக் கைப்பற்றிய முஸ்லிம்கள் தஞ்சாவூரையும் தமது ஆட்சிக்குக் கீழ் கொண்டுவந்து விட்டனர். ஆண்டுதோறும் மதுரை ஆட்சியாளர் அவர்களுக்குத் திறை செலுத்தி வந்தனர்.

விஜயநகர மன்னரைத் தொடர்ந்து நாயக்கர் ஆட்சி தலை தூக்கியது. அந்நாயக்க மன்னர்களுள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர் வீரப்ப நாயக்கர் ஆவார். (கி.பி. 1572 - 1595). அவர் நேர்மையான ஆட்சியாளர் எனக் குறிப்பிடப்படுகிறது. கட்சி சார் பற்ற முறையில் நீதி வழங்கப்படுதல் வேண்டும் என்று திட சித்தம் உள்ளவராய்த் திகழ்ந்தார். அவருடைய காலத்தில் பழங்காலத்தைய நன்கொடை ஒன்று பற்றிய ஒரு பிரச்சினை தோன்றியது. கூன் (சுந்தர) பாண்டியன் காலத்தில் மதுரையில் குடியேறி இருந்த முஸ்லிம் வர்த்தகர்களால் அப்பாண்டிய மன்னனிடமிருந்து பதினா யிரம் பொற்காசுகள் கொடுத்து ஆறு கிராமங்கள் விலைக்கு வாங்கப் பட்டன. பின்னர் அந்த ஆறு கிராமங்களும் மதுரை நகரின் வட பகுதியில் உள்ள சுல்தான் அலாவுத்தீன் தர்கா என்னும் கல்லறைக்கு நன்கொடையாக வழங்கப்பட்டன. இந்த விவரங்களை அலெக் ஸாண்டர் நெல்சன் என்பவர் மதுரை வரலாற்றிலே குறிப்பிட் டுள்ளார்.

வீரப்ப நாயக்க மன்னன் காலத்தில் இந் நன்கொடை பற்றிய ஒரு பிரச்சினை எழுந்தது. இந்தப் பிரச்சினையைத் தீர விசாரித்து முன்னர் வழங்கப்பட்ட நன்கொடையை உறுதிப்படுத்தினான் என்று கி.பி. 1574 இல் வழங்கப்பட்ட கோரிப்பாளையம் கல்வெட்டு இன்றும் சான்று பகர்ந்துகொண்டிருக்கிறது. இக்கல்வெட்டு தமிழில் எழுதப் பட்டுள்ளது. மதுரை, கோரிப்பாளையத்தில் அமைந்துள்ள சுல்தான்

அலாவுத்தீன் உதவ்ஜி என்பாரின் நினைவாலயத்தின் ஒரு தூணில் இக்கல்வெட்டு செதுக்கப்பட்டுள்ளது.

திருமலை நாயக்கர் (கி.பி. 1623-1659) ஆட்சிக்கட்டில் ஏறும் போது திருச்சிராப்பள்ளி தலைநகராக விளங்கியது. அதனை அவர் மதுரைக்கு மாற்றினார். திருமலை நாயக்க மன்னன் காலத்தில் தென்னிந்தியாவைப் பொறுத்தவரையில் இந்து மக்களுக்கும் முஸ்லிம் மக்களுக்கும் இடையே ஒற்றுமை நிலவியது. ஆனால் முத்து வீரப்ப நாயக்கனின் குறுகிய ஆட்சியில் அவர் முஸ்லிம்களுடன் சண்டை இட்டுக் கொண்டே இருந்தார். எனினும் திருமலை சேதுபதியின் கடைசிக் கல்வெட்டு ஹனுமந்தகுடியில் உள்ளது. 1673/74 இல் செதுக்கப்பட்டது. அந்தக் கல்வெட்டில் முஸ்லிம்களுக்கு வழங்கப் பட்ட காணிநிலம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

மூன்றாவது முத்து வீரப்ப நாயக்கன் மரணம் அடைந்ததும் அவனுடைய தாயார் மங்கம்மாள் தனது மகனின் புதல்வர் சார்பில் அரசுப் பொறுப்பை ஏற்றார். அவள் தனது சாமர்த்தியத்தினால் தனது அரச அலுவல்களைச் செவ்வனே நடாத்தி வந்தார். அவுரங்க சீபின் காலத்தில் மொகலாய ஆதிபத்தியத்துக்கிணக்கமாகவே அவளுடைய ஆட்சி அமைந்தது. வறுமை, அழிவு ஏதுமின்றி நாட்டில் அமைதி நிலவியது. மொகலாய சேனாதிபதி சுல்பிகார்கான் கி.பி. 1697 இல் தென்னாடு வந்தபோது இராணி மங்கம்மாள் பல பரிசில் களை அவனுக்கு அளித்து அதன் பயனாக அவனிடமிருந்து பெற்ற உதவியினால் தஞ்சாவூர் ஆட்சியாளர் கைப்பற்றிய தனது நாட்டின் சில பகுதிகளை மீட்டுக் கொண்டாள். கி.பி. 1702 இல் தான் ஈடுபட்டுள்ள போரில் தனக்கு உதவி புரியுமாறு கோரி தாவூத்கானுக்கு ஒரு நிருபம் வரைந்தாள். இதன் பயனாக திறை செலுத்த மறுத்த திருவாங்கூர் ஆட்சியாளர் மங்கம்மாளுக்கு திறை செலுத்த வேண்டி ஏற்பட்டது.

முஸ்லிம் குடிமக்களை இராணி மங்கம்மாள் நல்ல முறையில் கவனித்து வந்தாள். தனது பேரப்பிள்ளையின் பெயரில் முஸ்லிம் களுக்கு நன்கொடை அளித்தாள். கி.பி. 1692 இல் வழங்கப்பட்ட ஒரு செப்பேட்டுக் கல்வெட்டின் மூலம் ஒரு பள்ளிவாசலை பராமரிப்ப தற்காக நன்கொடை வழங்கினாள். கி.பி. 1701 இல் ஒரு முஸ்லிம் தர்காவிற்கு (நினைவாலயத்துக்கு) திருச்சிராப்பள்ளிக்குச் சமீபமாக உள்ள சில கிராமங்களை நன்கொடையாக வழங்கினாள். மங்கம்மாள் என்றாள் தருமம், தருமம் என்றாள் மங்கம்மாள் என்று கூறும் அளவிற்கு மங்கம்மாளுடைய கொடைச் சிறப்பு மிகப் பிரபல்யம் அடைந்தது. கி. பி. 1706 இல் இராணி மங்கம்மாள் மரண மானாள்.

கி.பி. 1732 இலிருந்து 1736 வரை திருச்சிராப்பள்ளியிலிருந்து ஆட்சிபுரிந்து வந்த மீனாட்சி அம்மாள் காலத்தில் மதுரையில் அமைதியின்மை நிலவியது. இதனைப் பயன்படுத்த முயன்ற ஆர்க்காட்டு நவாப் தனது மகன் சப்தர் அலியையும் மருமகன் சந்தா சாகிபையும் கி.பி. 1734 இல் மதுரை அரசையும் தஞ்சாவூர் அரசையும் கைப்பற்றும்படி கூறி அனுப்பினான். சப்தர் அலியைத் தன்பக்கம் ஈர்த்துக் கொண்ட மீனாட்சியின் வளர்ப்பு மகன் வீரகுமாரனின் தந்தையான பங்காரு திருமலை என்பவன் ஆட்சி பீடத்தில் அமர முயன்றான். இச்சந்தர்ப்பத்தில் மீனாட்சி சந்தா சாகிபைத் தன் பக்கம் சேர்த்துக் கொண்டு அவருக்கு அரச பொறுப்புக்களை ஒப்படைத்தாள். இறுதியில் சந்தா சாகிபு வெற்றிபெற்று மதுரையைக் கைப்பற்றினான், ஆனால் இந்த வெற்றி நிலைக்கவில்லை. மராத்தியர் தமது செல்வாக்கை அப்பகுதிகளில் நிலைநாட்டுவதில் வெற்றி பெற்றனர். நாயக்கர் ஆட்சியில் பள்ளிவாசல்களுக்கும் தனிப்பட்ட முஸ்லிம்களுக்கும் பல நன்கொடைகள் வழங்கப்பட்டிருந்தன.

கி.பி. 1734 இல் வடக்கிலிருந்து வந்த முஸ்லிம் நிஸாம் திருச்சிராப்பள்ளிக் கோட்டையையும் மதுரைக் கோட்டையையும் கைப்பற்றினார். மாபூஸ்கான் ஐயும் முகம்மது அலிகானையும் இரண்டு கோட்டைகளிலும் நவாப்களாக நியமித்துவிட்டு வடக்கே சென்றுவிட்டார். அவர்கள் இருவரும் நாட்டை ஏறத்தாழ பத்தரை ஆண்டுகள் ஆண்டுவந்தனர். முஸ்லிம் மக்கள் ஆட்சி நடத்தினமையால் அவ்வாட்சி துலுக்கானியம் என வழங்கப்படலாயிற்று. கி.பி. 1752 இல் ஏற்பட்ட ஓர் இணக்கத்துக் கிணங்க அவர்கள் கோட்டைகளை சேதுபதியிடம் ஒப்படைத்துவிட்டு திண்டுக்கல்லுக்குச் சென்றுவிட்டனர்.

கி.பி. 1665 உடன் விஜயநகராட்சி முடிவுற்றது. விஜயநகர ஆட்சியாளருக்கு பின்னர் அரசு கட்டில் ஏறியவர்கள் பீஜபூர், கோல்கொண்டாப் படைகளினால் மேலும் தெற்கே தள்ளப்பட்டனர். பீஜபூர் படைகள் மேற்குப் பகுதியிலும் கோல்கொண்டாப் படைகள் கிழக்குப் பகுதியிலும் தத்தம் எல்லைகளைத் தெற்கே வியாபித்துக் கொண்டுவந்தனர். இக்கால எல்லையில் ஆட்சி செய்த இந்து மன்னர்கள் உள்நாட்டுக் கலவரங்களால் பாதிக்கப்பட்டனர்.

கி.பி. 1674 இல் பீஜபூர் சுல்தான் தனது சேனாதிபதி வெங்காஜியை தெற்கே அனுப்பினான். அவன் தஞ்சாவூரைக் கைப்பற்றினான். கோல்கொண்டாவின் உதவியைப் பெற்று அதற்குப் பிரதி ஈடாக தனக்குக் கிடைக்கும் வெற்றியை சமமாகப் பகிர்ந்து கொள்வதாகக் கூறி கி.பி. 1676 இல் சிவாஜி படையுடன் தெற்கே வந்தார். செஞ்சியைக் கைப்பற்றினார். அவுரங்கசீப் தெற்கே வருவதைக்

கேள்விப்பட்டதும் வடக்கே சென்று விட்டார். தெற்கே வந்த அவுரங்கசீப் பீஜபூரை கி.பி. 1686 இலும் கோல்கொண்டாவை கி.பி. 1687 இலும் கைப்பற்றினார். கி.பி. 1705 இல் பல கோட்டை களைக் கைப்பற்றினார். கி.பி. 1707 இல் பேரரசர் அவுரங்கசீப் மரணமானார்.

திருமலை சேதுபதியைத் தொடர்ந்து ஏற்பட்ட குறுகிய இடை வேளைக்குப் பின்னர் கிழவன் சேதுபதி என வழங்கப்பட்ட விஜய ரகுநாத தேவர் ஆட்சி பீடத்தில் அமர்ந்தார். அவர் முஸ்லிம்களைப் பொறுத்தவரையில் எவ்விதப் பாகுபாடும் இல்லாது ஆட்சிபுரிந்தார். அவர் கி பி. 1675 முதல் 1710 வரை இராமநாதபுரத்தில் ஆட்சிபுரிந்து வத்தார். அவர் காலத்திலேதான் சீதக்காதி வள்ளல் வாழ்ந்தார். செய்கு அப்துல் காதிறு மரைக்காயர் என்பதே சீதக்காதி எனவாயிற்று. விஜய ரதுநாதத் தேவர் என்ற பெயரை உடைய கிழவன் சேதுபதி தமது நண்பரும் நம்பிக்கைக்குரியவருமான சீதக்காதியின்மீது தமக் குள்ள பெருமதிப்பை வெளியிடும் முகமாக அவருக்கு விஜயரகுநாதப் பெரிய தம்பி எனப்பட்டம் சூட்டினார். சீதக்காதி அவர்கள் புகழ்மிக்க வியாபாரியாகத் திகழ்ந்தார். அவுரங்கசீப் பேரரசரின் ஆட்சி காலத் தில் வங்க நாட்டின் ஆளுநராகவும் பணிபுரிந்தார் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது.

இந்தியாவில் ஆங்கிலேயர் வந்துவிட்டனர். ஆங்கிலேயர் சேவை யில் முன்பு பணிபுரிந்த முகம்மது யூசுப்கான் இந்தியாவின் சுதந்திரத் திற்காகப் பின்னர் ஆங்கிலேயரையே எதிர்த்தான். புரட்சிப் படைக் குத் தலைமை தாங்கினான். அதன் காரணமாக கி.பி. 1764 இல் ஆங்கிலேயரால் தூக்கிலிடப்பட்டான். அவர் கான் சாகிப் என நினைவு கூரப்படுகிறார். அவரின் சம காலத்தவரான கர்னல் புல்லர்டர் (Colonel Fullarton) என்பவர் முகம்மது யூசுப்கானின் பண்புகளையும் அவர்தம் ஆற்றல்களையும் கி.பி 1785 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 5ந்தேதி எழுதியுள்ள குறிப்பொன்றில் விதந்தோதி உள்ளார். அவர் தூக்கிலிடப்பட்ட பின்னர் அவருடைய பதவியை வகித்த ஒருவருக்கும் இராணுவ அதிகாரங்கள் வழங்கப்படவில்லை. ஆங்கிலேயரே அவ்வதிகாரங்களைப் பெற்றனர்.

அப்பொழுது திண்டுக்கல் ஹைதர் அலியின் ஆட்சியில் இருந்தது. கி.பி. 1772 இல் ஆங்கிலேயர் மைசூரின் ஹைதர் அலியுடன் ஒரு சமாதான உடன்பாட்டுக்கு வந்தனர். ஆங்கிலேயர் எட்டு ஆண்டுகள் அமைதியாக ஆட்சிபுரிந்தனர். கி.பி. 1790 இல் ஆங்கிலேயர் பாண்டி நாட்டின் ஆட்சியை முழுமையாகக் கைப்பற்றினர். கிழக்கு இந்திய கம்பெனி அந்நாட்டு வருவாயை அறவிட்டுக்கொண்டது.

கி.பி. 1752 இல் திப்பு பிறந்தான். அவர் தகப்பன் ஹைதர் அலிக்குப்பின் கி.பி. 1783 இல் ஆட்சி பீடம் ஏறினார். கி.பி. 1800 இல் வீரமரணம் எய்தினார். திப்பு ஆட்சி பீடத்தில் அமர்ந்த பின்னர் மதுவகைகளின் உபயோகத்தை நாடெங்கிலும் தடைசெய்தார். அவர் ' மைசூரின் புலி ' என வருணிக்கப்பட்டார். பிரெஞ்சுக்காரரின் உதவியுடன் ஆங்கிலேயர் ஆட்சியை எதிர்த்தார். பிரெஞ்சுக்காரருடன் சேர்ந்து ஆங்கிலேயருக்கு எதிராகப் போரிட்டார். ஆனால் வெற்றி கிடைக்கவில்லை. போர்க்களத்தில் திப்புசுல்தான் வீரமரணம் எய்தினார். தமது நிலையைத் தென்னிந்தியாவில் வலுப்படுத்திய ஆங்கிலேயர் பின்னர் முழு இந்தியாவையும் தமது ஆட்சியில் அமைத்தனர். அதன் பயனாக நாட்டில் அமைதி நிலவியது.

**முஸ்லிம்களும் இலங்கையும் :**

இனி இலங்கை முஸ்லிம்களின் வரலாற்றைப் பார்ப்போம். தமிழ் நாட்டு முஸ்லிம் மக்களின் வரலாறு போன்றதொரு வரலாறு ஈழத்து முஸ்லிம் மக்களுக்கு உண்டு. தமிழ் நாட்டுக்கு வருகை தந்தது போன்றே இலங்கைக்கும் அறபு மக்கள் இஸ்லாத்துக்கு முன்பிருந்தே வரத்தலைப்பட்டனர். முஸ்லிம் மக்களையும் அவர்தம் மூதாதையரான அறபு மக்களையும் ஈர்த்தது இலங்கையில் அமையப்பெற்றுள்ள பாவா ஆதமலையேயாகும். ஆதிபிதா ஆதம் நபி (அலை) அவர்களின் பாதம் அம்மலையின் மேல் பொதிந்து இருப்பதால் அம்மலை பாவா ஆதமலை எனப்பட்டது. பாவா என்னும் அறபுச் சொல் தகப்பனைக் குறிக்கிறது. அவ்வாறு ஆதம் நபி (அலை) அவர்களின் பாதம் உள்ள மலையைத் தரிசிப்பது இன்றியமையாதது என்று முஸ்லிம்களும் அவர்தம் மூதாதையரான அறபு மக்களும் கருதலாயினர். எனவேதான் அவர்கள் இலங்கைக்கு வரத் தலைப்பட்டனர்.

இவ்வாறு புனித பிரயாணத்தின் நிமித்தமாகவும் பின்னர் வியாபார நோக்கமாகவும் இலங்கைக்கு வருகைதந்த அறாபியர்களைத் தமது மூதாதையராகக் கருதுபவர்கள் இலங்கை வாழ் முஸ்லிம்கள். அவர்கள் இலங்கைச் சோனகர் என்றும் இந்தியச் சோனகர் என்றும் மலாயர் என்றும் அங்கே அழைக்கப்படுகின்றனர். இலங்கைச் சோனகரும் இந்தியச் சோனகரும் தமிழ்மொழியையே தமது வீட்டு மொழியாகக் கொண்டோராவர். ஜாவா மொழியென்றும் மலாய் மொழியென்றும் வழங்கப்படும் மலாய் மொழியை இலங்கை வாழ் மலாயர் தமது வீட்டு மொழியாகப் பயன்படுத்துவர்.

இலங்கைச் சோனகர் தம்மை பண்டைய அறாபியரின் வழித்தோன்றல்கள் எனக் கருதுகின்றனர். வாழையடி வாழையாக, வந்தவர்கள் என மதிக்கின்றனர். கலிபா அப்துல் மலிக் பின் மர்வான்

என்பவர் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருந்த காலம் அது. அவரது ஆட்சி கொடுங்கோன்மைக்கு இருப்பிடமாகத் திகழ்ந்தது என்பர். எட்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலே அவர் ஆட்சி புரிந்தார் எனக் கூறப்படு கின்றது. ஆனாலும் அங்கு வாழ்ந்த சில முஸ்லிம்களுக்கும் அவருக் கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அதன் பயனாக அவர் ஹாசீம் கிளை என்னும் நபிகள் பெருமானார் தோன்றிய கிளையைச் சேர்ந்த சிலரை நாட்டை விட்டும் துரத்தி விட்டார். அறபு நாட்டிலிருந்து நாடு கடத்தினார். அவர்கள் யூபிரட்டீஸ் நதியைக் கடந்து தென் முகமாகச் சென்று இந்திய குடா நாட்டின் தென்பகுதியில் உள்ள கொங்கன் பிரதேசத்திலும் இலங்கையிலும் மலக்காவிலும் குடி யேறினர். இலங்கைக்கு வந்தவர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து இலங்கையின் பல்வேறு பகுதிகளிலும் குடியேறினர். அவர்கள் இலங்கையின் வடக்கு, வடகிழக்கு, வடமேற்கு, மேற்கு, தெற்குக் கரையோரங்களில் குடியேறினர். யாழ்ப்பாணம், திருகோணமலை, மாந்தோட்டம், மன்னார், குதிரைமலை, புத்தளம், கொழும்பு பர்பரீன் (பேருவலை), காலி முதலிய இடங்களில் வாழத்தலைப் பட்டனர். இலங்கையின் வடமேற்குப் பகுதிகளான, மாந்தோட்டம், மன்னார், குதிரைமலை போன்ற முத்துக் குளிப்புக்குப் பேர்பெற்ற இடங்களில் குடியேறினமையினால் முத்துக்குளிப்புப் போன்ற தொழில்கள் முஸ்லிம்களின் பொறுப்பிலேயே இருந்து வந்தன.

இன்றைய இலங்கையின் தலைநகரான கொழும்பிலேயே முஸ் லிம் இடுகாடு ஒன்று இருந்தது. அங்கு கூபி முறையிலான எழுத்துக் களினால் செதுக்கப்பட்ட ஓர் அறபுக் கல்வெட்டு இருந்தது. அந்தக் கல்வெட்டில் ஒரு தனி மனிதனின் தனிப்பெரும் பண்புகளும் நல்லியல்பு களும் விதந்து ஓதப்பெற்றிருந்தன. அவருடைய கல்லறையின் அடையாளமாகவே அந்த எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட கல் அமைந் திருந்தது. அவர் அங்கு எட்டாம் நூற்றாண்டில் கொழும்புக்கு வந்தவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. 1787 ஆம் ஆண்டு அளவில் அந்தக் கல்லை எடுத்துத் தமது வீட்டுவாயிலில் அமைத்துக் கொண் டார் ஒரு டச்சு அதிகாரி. அந்தக் கல்வெட்டின் நாயகர், காலிது இப்னு அபூபக்கயா எனக் குறிப்பிட்டுள்ளது.

காலிது இப்னு அபூபக்கயா ஓர் அறபி. அவர் கொழும்புக்கு வந்து கி.பி. 848 இல் இறந்தார் எனக் குறிக்கப்பட்டுள்ளது. அந்தக் கால கட்டத்தில் இலங்கையில் வாழ்ந்து வந்த முஸ்லிம் மக்களின் சமயப்பற்று குன்றி இருந்தது என்றும் ஆதலினால் அந்த முஸ்லிம் களிடையே புத்துணர்வை தட்டி எழுப்புவதற்காக அந்த முஸ்லிம் பெரியார் அங்கு அனுப்பப்பட்டார் என்றும் அக்கல்வெட்டுக் கூறுகிறது. அப்பாஸிய ஆட்சியின் உச்சகாலம் அது. நீதி முறைக்குப் பேர் பெற்ற ஹாரூன் அல்றஷீத் மாமன்னர் பகுதாதிலே ஆட்சி புரிந்து

வந்த காலம் கி.பி. 786-809 ஆகும். எல்லாத் துறைகளிலும் ஹாரூன் அல்றஷீதின் ஆட்சி சிறந்து விளங்கியது. அவருடைய ஆட்சிக் காலத்திலேதான் காலிது இப்னு அபூபக்கயா என்னும் பெரியார் இலங்கைக்கு வந்திருத்தல் வேண்டும். வெளிநாட்டவருடன் நெருங்கிய உறவு வைத்தவர் ஹாருன் அல்றஷீத் அவர்கள்.

சிந்துபாத் என்னும் கதையில் வரும் இலங்கைக் கடற்கரையைப் பற்றிய குறிப்புக்கள் அன்று அறாபியர் இலங்கையைப்பற்றி அறிந்திருந்தனர் என்பதைப் புலப்படுத்துகின்றன. இலங்கையில் சிந்துபாத் என்னும் பயணியை சந்தித்தவர் ம'அபர் மக்கள் என்றும் அவர்கள் அறபு மொழியை அறிந்திருந்தனர் என்றும் ஒருவர் அறபு மொழியில் பாண்டித்தியம் பெற்றிருந்தார் என்றும் அக்கதைகளிலே குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த ம'அபரியர் நீர்ப்பாய்ச்சி நெற்சாகுபடியில் ஈடுபட்டுக்கொண்டிருந்தனர் என்றும் அந்தக் கதைகளிலே குறிப்பிடப்பட்டுள்ளன.

இலங்கையைப்பற்றி முதன்முதல் கூறிய அறாபியர் கி.பி. 838 ஆம் ஆண்டில் பிறந்த தபறி என்னும் பூகோளவியல் வல்லுநரே யாவார். ஆனால் அவருடைய வருணனைகள் எல்லாம் பாவா ஆதமலையைப்பற்றிய விவரங்களுடன் நின்று விடுகின்றன. கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் இலங்கை வந்த இத்ரீஸி என்னும் பயணி தமது பூகோளவியல் என்னும் நூலில் அபூஸைத் கூறியவற்றை உறுதிப்படுத்தியுள்ளார். மேலும் அன்று இலங்கையிலே எல்லாச் சமயங்களும் சமமாகக் கணிக்கப்பட்டன என்றும் குறிப்பிட்டுள்ளார். அப்பொழுது இலங்கையில் ஆட்சி புரிந்த ஒரு மன்னனின் ஆலோசகர்களாக நான்கு பௌத்தரும் நான்கு முஸ்லிம்களும் நான்கு கிறித்தவர்களும் நான்கு யூதர்களும் இருந்தனர் என்று குறிப்பிட்டுள்ளார்.

ஐரோப்பாவில் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் நிகழ்ந்த சின்னஞ்சிறு சம்பவம் ஒன்று பழங்காலத்திலிருந்தே அறாபியர் இலங்கையைப் பற்றியும் இலங்கையில் கிடைக்கும் பொருள்களைப்பற்றியும் அறிந்திருந்தனர் என முடிவுகட்டக் கூடியதாக இருக்கின்றது. அப்பொழுது ஐரோப்பாவில் இருந்த வியாபார நடுநிலையத்தில் அறபு வணிகர் பலர் இருந்தனர். அவர்கள் முன்னிலையில் சில மணிக்கற்கள் வைக்கப்பட்டன. அவற்றுள் ஒன்றினை உற்று நோக்கிய ஓர் அறபி வணிகன் அந்தச் சிவப்புமணிக்கல் இலங்கையில் கிடைக்கப்பெற்றதன்று என்று திட்டவட்டமாகக் குறிப்பிட்டார். ஒரு மணிக்கல்லைப் பார்த்துவிட்டு அது இலங்கையில் பெறப்பட்டதன்று என்று கூறும் அளவுக்கு அறாபியர் இலங்கையைப்பற்றி அறிந்திருந்தனர் என்பது புலப்படுகின்றது. முகம்மது நபி (சல்) அவர்கள் காலத்தில் ஓர் அறபுப் பயணி தென் இந்தியாவின் ஊடாக வந்து ஆதமலையைத் தரிசித்துத் சென்றார் எனவும் கூறப்படுகின்றது.

கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் அறபு மக்கள் வணிகத் துறையில் உச்ச நிலையை அடைந்திருந்தனர். பண்ட மாற்று வியா பாரத்தில் ஈடுபட்டிருந்த அவ்வறாபியர் இலங்கை மன்னரின் நன் மதிப்பைப் பெற்றனர். இலங்கையின் மேற்குக் கரையோரப் பகுதி களில் குறிப்பாக 12, 13 ஆம் நூற்றாண்டுகளுக்குரிய எகிப்திய நாண யங்கள் கண்டெடுக்கப்பட்டமை இதனை வலியுறுத்தும். அம்மன்னர் அவ்வறாபியரை தமது அமைச்சரவையில் அங்கம் வகிக்கப்பண்ணினர். அம்மன்னரின் அனுமதியை பெற்று தத்தம் பிணக்குகளைத் தீர்த்துக் கொள்ளும் முகமாக தம்மவரைக் கொண்ட நீதி மன்றங்களை முஸ்லிம் மக்கள் நியமித்துக் கொண்டனர். அத்தகைய நீதிமன்றங்களிலே உறுப்பினராக முஸ்லிம்களிலிருந்தே அறிஞர்களும், வர்த்தகர்களும், கப்பலோட்டிகளும் தெரிவு செய்யப்பட்டனர். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்தே அறபுப் பயணிகள் தமது பயண நூல்களிலே இலங்கையைப் பற்றிக் குறிப்பிடலாயினர். அக்கால கட்டத்தில் பக்தாத் கலிபா இலங்கையை ஆட்சிபுரிந்த மன்னர்களுக்கு பரிசில்கள் அனுப்பியதாகவும் கூறப்படுகின்றது.

முஸ்லிம்களின் மூதாதையரான அறபு மக்கள் முதன்முதல் குடி யேறிய பர்பரீன் என்றும் பர்பரி என்றும் அறபு மொழியில் வழங்கப் பட்ட வேர்விலை என்னும் துறைமுகப்பட்டினம் அறபு மக்களின் வருகையுடன் நெருங்கிய தொடர்புடையதாகக் காணப்படுகின்றது. செங்கடல் துறைமுகப்பட்டினமான பர்பரீன் என்னும் பட்டினத்துக்கும் இலங்கையின் தென்மேற்குக் கடற்கரைப் பிரதேசத்தில் அமைந்திருந்த பர்பரீன் என்னும் துறைமுகப்பட்டினத்துக்கும் பெயரளவில் மாத்திரம் அல்லாது வரலாற்று அடிப்படையிலும் நெருங்கிய தொடர்புடைய தாக உள்ளன.

ஆபிரிக்காவிலே இன்று சோமாலிலாந்து என்னும் ஒரு சுதந்திர நாடு உள்ளது. ஆபிரிக்காவின் வடமேற்கு முனையாக அமைந்துள்ளது அந்நாடு. அந்தப் பிரதேசம் பழங்காலத்தில் அபிசீனியப் பேரரசின் ஒரு பகுதியாக அமைந்திருந்தது. முகம்மது நபி (சல்) அவர்கள் இஸ்லாத்தைப் போதித்த ஆரம்பகாலத்தில் மக்காவில் வாழ்ந்த முஸ்லிம் அல்லாதாரினால் ஏற்பட்ட இன்னல்களைப் பொறுக்க முடியாது ஆரம்ப காலத்தில் இஸ்லாத்தைத் தழுவியவர்களை அபிசீனியா செல்லுமாறு பணித்தார்கள். மக்காவிலிருந்து அப் பொழுது முஸ்லிம்கள் செங்கடலைக் கடந்து அபிசீனியாவுக்குச் சென்றனர். செங்கடற்கரையைக் கொண்டு திகழும் அபிசீனிய அரசுக் குரியதாய் இருந்த அந்நிலப்பகுதியே இன்று சோமாலிலாந்து என வழங்கப்படுகிறது. சுதந்திரம் பெறுவதற்கு முன்னர் அந்நாடு மூன்றாகப் பிரிக்கப்பட்டு இத்தாலிய சோமாலிலாந்து, பிரெஞ்சு சோமாலிலாந்து, பிரித்தானிய சோமாலிலாந்து என வழங்கப்பட்டது.

மூன்று ஐரோப்பிய இனத்தவரும் அந்நாட்டை ஆட்சி செய்தமையாலே அது அவ்வாறு அழைக்கப்பட்டது.

இப்போதைய சோமாலிலாந்தின் ' தலைநகராக விளங்குவது மொகாதிசு என்னும் நகரம். ஆனால் அந்தக் காலத்தில் பர்பரீன் என்னும் செங்கடல் துறைமுகப்பட்டினமே சோமாலிலாந்தின் பிரதான நகராக விளங்கியது. அந்த பர்பரீன் என்னும் துறைமுகப்பட்டினத்தி லிருந்து புறப்பட்டு வந்த அறபுப் பயணிகள் (முசாபர்) இலங்கையிலே அவர்கள் முதன்முதல் குடியேறிய இடத்தைத் தமது நாட்டுத் துறை முகத்தின் பெயரால் அழைத்தனர் எனலாம். இலங்கைக்கு நேர் மேற்கே சோமாலிலாந்தும் அதன் செங்கடற்கரைத் துறைமுகப் பட்டினமாகிய பர்பரியும் அமைந்துள்ளன. இன்றும் அறபுத் தமிழ் நூல்களிலும் அறபு நூல்களிலும் இலங்கையிலுள்ள வேர்விலை என்னும் நகர் பர்பரி என்றும் பர்பலி என்றும் அழைக்கப்படுவதைக் காணலாம். பர்பரி என்பது பர்பலி என்றும் பின்னர் வேருவிலை என்றும் மருவி இருக்கலாம். வெருவல என்றும் வழங்கப்படுகிறது.

இன்னொரு விதத்திலும் இதனைப் பார்க்கலாம். பர் என்றால் நாடு அல்லது கரை என்று பொருள்படும். மலைநாடு மலபார் என்றும் கறுப்பர் நாடு ஸன்ஸிபார் என்றும் வழங்கப்பட்டு வருகின்றன. கப்பல் களிலே முதன் முதல் வந்த அறாபியர்கள் இந்து சமுத்திரத்திலே அலைந்து அலைந்து வந்திருக்கலாம். அவ்வாறு அலையும்பொழுது அவர்களுக்கு நிலப்பரப்பு தென்பட்டிருக்கலாம். உடனே மகிழ்ச்சி ஆரவாரம் மிக்கவராய் 'பர் பர்' எனச் சத்தமிட்டிருக்கலாம். பர்பர் - நிலம் நிலம் என ஒலி எழுப்பி இருக்கலாம். எனவே அவர்கள் இறங்கிய இடத்துக்கு அவர்கள் பர்பர் என்று பெயரிட்டிருக்கலாம். இதுவே பின்னர் பர்பரி என்றும் பர்பலி என்றும் பேருவலை என்றும் வேர்விலை என்றும் மருவி இருக்கலாம்.

முஸ்லிம் மக்களின் மூதாதையரான அறபு மக்கள் இலங்கைக்கு வந்தபொழுது அவர்கள் தம்மோடு கொண்டுவந்த தாவர இனங்களை இலங்கையில் அறிமுகம் செய்தனர். அவற்றுள் குறிப்பிடத்தக்கது Ba'obab மரமாகும் (பேஒபப்). அந்த இனத்தைச் சேர்ந்த மரங்களை இன்றும் மன்னார்ப் பகுதியில் காணலாம். அந்த இன மரம் ஆபிரிக்க நாட்டுக்கே சொந்தமான மரமாகும். அந்த மரம் தடித்த தண்டை உடையது. அந்த மரம் இங்கு வரக் காரணமாக இருந்தவர்கள் அறாபிய வணிகர்களே.

இலங்கைக்குச் சென்ற மேற்கு ஆபிரிக்கப் பயணியான இபுனு பத்தூதா தமது இலங்கைப் பயணம் பற்றிக் குறிப்பிடுகிறார். அவர் இலங்கையின் தெற்கில் உள்ள காலி மாநகருக்குச் சென்றதாகவும் அங்கிருந்து பன்னிரண்டு மைல் தொலைவில் உள்ள தீனவர் (டொன்ட்றா என்றும் தெவுந்தரை என்றும் இப்பொழுது அழைக்கப்

படும் நகரம்) என்னும் பட்டினத்துக்குச் சென்றதாகவும் அங்கிருந்து 'குளம்பூ'வுக்குச் சென்றதாகவும் குறிப்பிட்டுள்ளார். அக்குளம்பூ பட்டினத்தில் ஐநூறு அபிசீனியர்களுடன் கடல் தலைவனும் வஸீரு (அமைச்சரு)மான ஜலஸ்தி என்பவர் ஆட்சி புரிந்து கொண்டிருந்தார் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

பூக்குளம் என்பது காலப்போக்கில் குளம்பு ஆயிது எனலாம். இக்குளம்பு என்னும் சொல்லிலிருந்தே கொழும்பு என்னும் பெயர் மருவியுள்ளது எனலாம். கொழும்பு என்னும் பட்டினத்துக்கும் குளத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதைக் காணலாம். கொழும்பைச் சுற்றிவர ஓர் ஏரி உள்ளது. அந்த ஏரியில் பூக்கள் மலிந்திருந்தமையால் அது பூக்குளம் என்னும் பெயரைப் பெற்றிருக்கலாம். முதலில் இப்பட்டணம் பூக்குளம் என அழைக்கப்பட்டு பின்னர் குளம்பு என மாறி இருக்கலாம். மரா என்பது ராம என்று மாறுவதுபோல் பூக்குளம் என்பது குளம்பூ என்று மாறி இருக்கலாம்.

**முஸ்லிம்கள் பற்றிய பிற குறிப்புக்கள் :**

பழங்காலந்தொட்டே தமிழ் பேசும் உலகுடன் அறபு மக்கள் தொடர்பு கொண்டிருந்தனர். வணிகத் துறையிலே நெருங்கிய தொடர்பு இருந்திருக்கிறது. பண்டமாற்று வியாபாரத்திலேயே அவர்கள் தீவிரமாக ஈடுபட்டனர். அந்த வியாபாரத்தின் மூலமாக நற்பெயர் பெற்றனர். தமிழக அரசரினதும் மக்களினதும் சிறப்பாக வணிகரினதும் நம்பிக்கையைப் பெற்றனர். அவை காரணமாக அவர்களின் ஒத்துழைப்பும் நல்லாதரவும் முஸ்லிம்களுக்குக் கிடைத்தன.

முஸ்லிம் மக்களும் அவர்களின் மூதாதையரான அறபு மக்களும் தமிழ் கூறும் நல்லுலகுக்கு வந்த பின்னர் பல பெயர்களால் அழைக்கப்பட்டனர். உலகிலே இஸ்லாம் பரவுவதற்கு முன்னர் அவர்கள் யவனர் என அழைக்கப்பட்டனர். யவனரைப் பற்றி ஏற்கனவே ஆராய்ந்தோம். அவர்களை அழைக்க தமிழகம் பயன்படுத்திய சோனகர், துலுக்கர், ராவுத்தர் என்ற பெயர்கள் எவ்வாறு தோன்றின, ஏன் பயன்படுத்தப்பட்டன என்பதை இப்பொழுது பார்ப்போம்.

இன்றைய தமிழ் பேசும் முஸ்லிம் மக்களின் மூதாதையர் ஒரு காலத்தில் யவனர் என்றும் பின்னர் சோனகர் என்றும் வழங்கப்பட்டனர் என்பது வரலாறு கண்ட உண்மை. யவனர் என்ற சொல்லிலிருந்து சோனகர் என்னும் சொல் தோன்றியதா அல்லவா என்ற ஆராய்ச்சி அவசியமற்றது. இன்று நமக்குக் கிடைக்கக்கூடிய மிகப் பழமையான பல்சந்தமாலையில் இருந்து கிடைத்துள்ள செய்யுட்களில் இயவனர் என்னும் பதமும் சோனகர் என்னும் பதமும் இன்றைய முஸ்லிம்களின் மூதாதையரைக் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

தமிழ் நாட்டிலும் ஈழ நாட்டிலும் வாழும் முஸ்லிம் மக்களின் மூதாதையர் பண்டமாற்று வணிகத்தில் ஈடுபடுவதையே பிரதான குறிக்கோளாகக் கொண்டு இங்கு வந்தனர். அகநானூறு, புறநானூறு போன்ற சங்க கால இலக்கியங்கள் இதற்குச் சான்று பகர்ந்து கொண்டிருக்கின்றன. 'பொன்னொடு வந்து கறியொடு பெயரும்' என்கிறது அகநானூறு (149) 'யவனர் நன்கலந் தந்த தண்கமழ் தேறல்' எனக் கூறுகிறது. மேலும் புறநானூற்றில்,

மனைக்குவைஇய கறிமூடையால்
கலிச்சுமைய கரைக்கலக்குந்து
கலந்தந்த பொற்பரிசும்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்த
மலைத்தாரமும் கடற்றாரமும்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
முழுங்கு கடன் முழவின் முசிறி (343 : 3-10)

எனவும் பண்டமாற்று வியாபாரம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கே கறிமூடைக்குப் பதிலாக பொன் தரப்படுகிறது.

இந்தப் பொன் 'சோன' எனவும் வழங்கப்படுகிறது. பொன் கொண்டுவந்தமையினால் தமிழக முஸ்லிம்களின் மூதாதையர் அப் பெயரால் அழைக்கப்பட்டிருக்கலாம். 'சோன என்னும் சொல்லோடு உயர்திணைப் பலர்பால் விகுதியாக 'ஆர்' சேர்ந்தால் சோன + அர் சோனவர் என வரும். அச்சொல்லோடு ஆண்பால் விகுதியாகிய அன் சேர்ந்தால் சோனவன் என்றும் பெண்பால் விகுதியாகிய அள் சேர்ந்தால் சோனவள் என்றும் வரும். இங்கே சோன என்னும் சொல்லோடு உயர்திணை ஆண்பால் விகுதியும் பெண்பால் விகுதியும் பலர்பால் விகுதியும் வந்து புணரும்பொழுது உடம்படுமெய்யாக வகரம் தோன்றுவதைக் காணலாம். பொன் எனப் பொருள்படும் சோனம் நிறைய இருந்தமையாலும் அங்கிருந்து பொன் கொண்டு வரப்பட்டமையாலும் அந்த நாடு சோனகம் என வழங்கப்பட்டிருக்கலாம். அந்தச் சோனகத்தைச் சேர்ந்தவர்களே சோனகர் என்று அழைக்கப்பட்டனர் எனலாம். உயர்திணை ஆண்பால், பெண்பால், பலர்பால் விகுதிகள் அமைவதற்காகச் சோனகர் என்பது திரிந்து இருக்கலாம். உயர்திணை ஆண்பாலில் சோனவன் என்றும் பெண்பாலில் சோனவள் என்றும் பலர்பாலில் சோனவர் என்றும் வந்திருக்கலாம். சோனகன் என்பதோ சோனகி என்பதோ வழக்கில் இடம் பெறவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இலங்கையில் அரசாங்க அலுவலகங்களில் தமிழில் பதியப்பெற்ற பிறப்பு அத்தாட்சிப் பத்திரங்களில் இன அடிப்படையில் சோனவன் என்று ஆணையும் சோனவள் என்று பெண்ணையும் குறிப்பிட்டுள்ளமையைக்

காணலாம். சோனவன், சோனவள் என்பதே இலங்கை முஸ்லிம் மக்களின் தமிழ் பேச்சு வழக்கில் இடம் பெற்றிருப்பதையும் நாம் பார்க்கலாம்.

கம்பரும் தமது இராமாயணத்தில் சோனகர் என்னும் சொல்லைத் தனியே ஆண்டுள்ளார்.

ஆலையின் மலையிற் சாலி முளையினில் அமுத வாசச்
சோலையில் துவச ரில்லில் சோனகர் மனையில் தூய
வேலையில் கொளவொ ணாத வேற்கணார் குமுதச் செவ்வாய்
வாலெயிற் றூறு தீந்தேன் மாந்தினர் மயங்கு வாரை

சுந்தரகாண்டம் : ஊர்த்தேடு படலம் : 112 (207)

என சோனகரின் மனையின் சிறப்பு விதந்தோதப்பட்டுள்ளது.

சோனகர் என்பது தமிழ் இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது போன்று தமிழில் கல்வெட்டுக்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள் இச்சொல்லைக் கொண்டுள்ளன. கி.பி. 1014 ஆம் ஆண்டின் இராஜராஜ சோழ தேவனின் கல்வெட்டில்

'தஞ்சைப் புறம்படி ராஜவித்யாதரப் பெருந்தெருவில்
இருக்கும் சோனகன் சாழூர்'

என வந்துள்ளது.

இக்கல்வெட்டில் இடம்பெற்றுள்ள 'சோனகன் சாழூர்' என்பது குறிப்பிடத்தக்க ஒரு சொற்றொடராகும். சாமூரின் (Zamorin) நாட்டைச் சேர்ந்தவர் சாமுரி என அழைக்கப்பட்டார். அந்த சமூரின் நாட்டைச் சேர்ந்தவர் அறபு நாட்டுக்குச் சென்றுள்ளார். அறபு வரலாற்று ஆசிரியரின் கூற்றுக்கு இணங்க அறபு நாட்டுக்குச் சென்ற சாமுரி என வழங்கப்பட்டவர் கேரளாவை ஆட்சி செய்த சேரமான் பெருமாள் நாயனாரேயாவர். அங்கு பல மன்னர் சேரமான் பெருமாள் என அழைக்கப்பட்டனர். அவர்களுள் இஸ்லாத்தைத் தழுவி அறபு நாட்டுக்குச் சென்றவர் மூன்றாம் சேரமான் பெருமாள் நாயனாரே என்பதே சான்றோரின் துணிபு. பாஸ்கர ரவிவர்மன் என்பது இவரின் இயற்பெயர். மூன்றாம் சேரமான் பெருமாள் என முடி சூட்டப்பட்டார். இவரின் ஆட்சிக் காலம் கி.பி. 780 முதல் 834 வரை நீடித்தது என்பர். இம்மன்னன் இஸ்லாத்தைத் தழுவியதும் இவரின் பெயர் அப்துல் றகுமான் சாமிரி என மாற்றப்பட்டது. அறபு நாட்டில் ஸஃபர் (Zafar) என்ற இடத்தில் உள்ள சமாதிக் கல்வெட்டில் அப்துல் றகுமான் சாமுரி என்பவர் ஹிஜ்றி 212 (கி.பி. 830) இல் அங்கு வந்ததாகவும் ஹிஜ்றி 216 (834) இல் இறைஅடி சேர்ந்ததாக வும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவரின் வேண்டுகோளுக்கு இணங்கவே

மாலிக் இப்னு தீனாரின் தலைமையில் இஸ்லாமிய பிரச்சாரக்குழு ஒன்று தமிழ் நாட்டுக்கு வந்ததாகவும் கூறப்படுகிறது. பல பள்ளி வாசல்கள் இவர்களால் கட்டப்பட்டன என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள சோனக சாமூர் என்பவரும் சமுரின் நாட்டைச் சேர்ந்த ஒரு முஸ்லிமாகவே இருத்தல் வேண்டும். அம்முஸ்லிம் அங்கு வந்து குடியேறி இருத்தல் வேண்டும். அக் காலத்தில் பெரும்பாலும் முஸ்லிம் மக்கள் தமது பேரோடு தாம் இன்ன பிரதேசத்தைச் சேர்ந்தவர் என்பதைக் குறிக்குமுகமாகச் சாமூர் என்ற சொல்லைத் தமது பெயருடன் சேர்த்துக் கொண்டிருக்கலாம். இதனைக் கௌரவமாகக் கருதி இருக்கலாம். இந்தப் பழக்கமே 'சோனகன் சாமூர்' என்ற சொல்லும் தோன்றுவதற்கு ஏதுவாயிருக்க லாம். சாமூர் என்ற பதமே சில சமயங்களில் சாமிர் என்றும் சாமூரைச் சேர்ந்தவர் என்றும் பொருள்படும். சாமூரி என்பது சில சமயங்களில் சாமிர் என்றும் வழங்கப்பட்டிருக்கலாம். இப்பொழுது சாமூரின் என்னும் பகுதி கோழிக்கோடு என வழங்கப்படுகிறது என்பர். 'சாமிரி' என்பது திருக்குர்ஆனிலே வருகிறது. (20 : 85, 87, 95) புதியவர், வெளிநாட்டவர் என்னும் கருத்தும் இச்சொல்லுக்கு உண்டு.

மற்றொரு கல்வெட்டில் இராஜராஜ சோழதேவன் தஞ்சைப் பெரிய கோவிலுக்கு வழங்கிய அணிமணிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவ்வணிமணிகளின் பட்டியலில் 'சோனகச் சிடுக்கு' என்னும் அணி யும் இடம் பெற்றுள்ளது.

கி.பி. 1239 இல் ஆட்சிக்கு வந்த பாண்டிய மன்னன் மாறவர்மன் சுந்தரவர்மன் தனது எட்டாவது ஆட்சி ஆண்டில் வழங்கிய ஒரு நன்கொடை பற்றிய குறிப்பு திருப்புல்லாணிக் கோவிலில் கோபுர வாசலில் உள்ள கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது. அந்தக் கல்வெட்டில்,

'கீழ்செம்பிநாட்டுப் பௌத்திர மாணிக்கப்பட்டின கீழ்பால் சொனக சாமந்தப் பள்ளியான பிழார் பள்ளி' என்பது இடம் பெற் றுள்ளது. இங்கு சொனக என்னும் பதம் பயன்படுத்தப்பட்டிருப் பதைக் காணலாம்.

மதுரைப் பாண்டிய மன்னர்களது மெய்க்கீர்த்திகளிலும் இச் சொல் ஆளப்பட்டுள்ளது.

'தெலிங்கம் சோனகம் சீனம் முதலாய'

என்று சோனகம் என்னும் சொல்லும்

'அருமனனார் சோனகரும் அவந்தியரும் முதலாய
இருநில மாமுடி வேந்தர் இறைஞ்சி நின்று திறைக்காட்ட

என்றும்

'குச்சரு மாரியரும் கோசலரும் கொங்கணரும்
வச்சிரமும் சாரிய மொத்த......மனருஞ் சோனகரும்'

என்றும் சோனகர் என்னும் சொல்லும் மெய்க்கீர்த்திகளில் வந் துள்ளன...திருவிளையாடற் புராணத்தில் பரஞ்சோதி முனிவர்

'......... ......... கொங்கர் ......... வங்கர்
......... ......... சோனகர் ......... .........

எனப் பல்வேறு நாட்டு மக்களுள் சோனகரை ஒரு நாட்டினராகக் குறிப்பிட்டுள்ளார்.

ஒட்டக்கூத்தர் தமது குலோத்துங்கச் சோழன் பிள்ளைத் தமிழில் 'மாறாடம் சோனகம் பப்பளம்' (77) என சோனக நாட்டைக் குறிப் பிட்டுள்ளார்.

சிலப்பதிகாரத்தில் யவனர் என்னும் பதம் இடம் பெற்றுள்ளது.

'கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவனர் இருக்கையும்'
(சிலப்பதிகாரம்: இந்திரவிழாவூரெடுத்த காதை: 8-10)

என்ற அடிகளில் வரும் யவனர் என்னும் பதத்திற்கு சோனகர் என பழைய அரும்பத உரை குறிப்பிடுகின்றது. 15 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து சிலப்பதிகாரம் என்னும் சுவைக் காப்பியத்துக்கு அரியதோர் உரைவகுத்த அடியார்க்கு நல்லார், யவனர் என்னும் அப்பதம் மிலேச்சரைக் குறிப்பதாகக் குறிப்பிட்டுள்ளார்.

'கடிமதில் வாயில் காவலிற் சிறந்த
அடல்வாள் யவனர்க் கயிராது புக்காங்கு'
(சிலப்பதிகாரம்; ஊர்காண்காதை: 66-67)

என்னும் அடிகளிலும் வரும் யவனர் என்னும் பதத்திற்கு உரையிலே யவனர் எனக் குறிப்பிட்ட அடியார்க்கு நல்லார் தமது அரும்பத விளக் கத்திலே துருக்கர் எனக் குறிப்பிட்டுள்ளார். அரும்பத விளக்கத்திலே யவனர் என்னும் பதத்துக்குச் சோனகர், துருக்கர், மிலேச்சர் என்று கருத்துத்தந்த அடியார்க்கு நல்லார் இவர்கள் தொழில் வாயில் காத்தல் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

'குடதிசை மருங்கின வெள்ளயிர் தன்னோடு'
(சிலப்பதிகாரம்: அந்திமாலைச் சிறப்புச் செய்த காதை: 35)

என்னும் அடியில் வரும் 'குடதிசை' என்பன யவனதேசம் என்றும் 'குடதிசை அயிர்' என்பது யவன தேசத்து அயிர் என்றும் 'அயிர்' என்பது கண்டு சர்க்கரை என்றும் விரிவுரை தந்துள்ளார் அடியார்க்கு நல்லார்.

' இருவகைக் கூத்தின் இலக்கண மறிந்து
பலவகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்தும் '
(சிலப்பதிகாரம் : அரங்கேற்று காதை : 12-13)

என்னும் அடிகளுக்கு விரிவான உரை வகுத்துள்ள அடியார்க்கு நல்லார் அங்கே பல வரிக்கூத்துக்களைக் குறிப்பிட்டுள்ளார். அவரின் கூத்துக்களுள் ஒன்று 'சோனக மஞ்சரி' என

' துஞ்சாத அம்மைப் பூச்சோனக மஞ்சரி '

என வகைப்படுத்தி உள்ளார்.

' அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும் '
(சிறைக்கோட்ட மறக்கோட்ட மாக்கிய காதை : 108)

என மணிமேகலையில் யவனம் வந்துள்ளது. யவனம் என்பது யவன தேசத்தைக் குறிக்கின்றது என அரும்பத விளக்கம் கூறுகிறது.

உரையாசிரியர்களுள் காலத்தால் பிந்தியவரும் 'உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர்' என பாராட்டப்பட்டவரும் கல்வி யறிவிலும் உரைகூறும் வன்மையிலும் சிறந்து விளங்கியவருமான நச்சினார்க்கினியர் சங்க கால இலக்கியங்களிலும் பிற இலக்கியங் களிலும் யவனர் என வரும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அப்பதம் 'சோனகர்' என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளதாகவே குறிப்பிட்டுள்ளார்.

ஆரம்ப காலத்தில் தமிழ்நாட்டு முஸ்லிம் மக்களின் மூதாதையர் வேற்று நாட்டவராகவே கணிக்கப்பட்டனர். அவர்கள் வணிகம் செய்த பகுதிகளில் அவர்களிடமிருந்து ஒரு புதிய வரி தண்டல் செய்யப் பட்டது. சோழர் காலக் கல்வெட்டுக்களில் அவ்வரி 'சோனகவரி' என்றே குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம்.

வாசனைத் திரவியங்களில் மாத்திரமன்றித் தமிழ் நாட்டுக்குத் தேவையான குதிரைகளை அறபு நாடுகளிலிருந்து தமிழ் நாட்டுக்குக் கொண்டு வந்து விற்பனை செய்வதிலும் முஸ்லிம் மக்களின் மூதா தையர் ஈடுபட்டிருந்தனர். இதன் காரணமாக முஸ்லிம்கள் பல்வேறு வரிகளைச் செலுத்த வேண்டியவர்களாக இருந்தனர். 'குதிரை வரி', 'குதிரைப் பந்தி', 'குதிரைக் காணிக்கை' என்பன இவர்கள் செலுத்த வேண்டிய வரிகளாக இருந்தன எனவும் கல்வெட்டில் குறிப்பிடப்பட் டுள்ளன. தமிழ்நாடு வந்த மேற்கு நாட்டுப் பயணிகளான மார்க்கோ போலோ, இப்னு பதூத்தா, வஸ்ஸாப், ரசீதுத்தீன் போன்றோர் தமிழகத்திற்கும் அறபு, பாரசீக குடா நாடுகட்கும் இடையே நடை பெற்ற குதிரை வியாபாரத்தைப் பற்றி விரிவாகக் குறிப்பிட்டுள்ளனர். கடம்பர்கள், பல்லவர்கள் காலங்களிலேயே அத்தகைய குதிரை வியா பாரம் ஆரம்பிக்கப்பட்டதென்றும் சோழர் ஆட்சிக் காலத்திலே அது

சிறப்பு வளர்ச்சியுற்றிருந்ததென்றும் வரலாற்று ஆசிரியர் குறிப்பிடுவர். அவ்வரலாற்று ஆசிரியர் அறபு நாட்டுக் குதிரைகள் கேரளம், கொங்கு வழியாகத் தமிழகத்துக்குக் கொண்டுவரப்பட்டன என்றும் அவ்வாறு குதிரைகளைக் கொண்டு வந்தவர்கள் ‘குதிரைச் செட்டிகள்’ என அழைக்கப்பட்டனர் என்றும் தலக்கொண்டாக் கல்வெட்டில் குறிப்பிட்டுள்ளது என்றும் சுட்டிக் காட்டுகிறார். பிற் காலப் பாண்டியன் ஆட்சிக் காலத்திலே அக்குதிரை வியாபாரத்தில் பௌத்திர மாணிக்கப்பட்டினம், தேவிப்பட்டினம், காயல்பட்டினம் போன்ற துறைமுகங்கள் சிறந்து விளங்கின. அவ்வியாபாரத்தைச் சிறப்பாக கவனிப்பதற்காக ஒரு தனியான அமைப்பும் நடைமுறையில் இருந்தது என்பர். கிழக்கு இராமநாதபுரப் பகுதியில் வந்து இறங்கிய அறபு நாட்டுக் குதிரைகள் கொண்டுவரப்பட்ட வழி இன்றும் குதிரை மொழி (வழி)க்காடு என வழங்கப்பட்டு வருவதைக் காணலாம். அந்த வழியைத் தொடர்ந்து திருச்செந்தூர்ப் பகுதியில் உள்ள பரமன் குறிச்சியில் ‘குதிரை வழிக்குளம்’ ஒன்று உள்ளமையும் ஈண்டு குறிப் பிடத்தக்கது. காயல்துறையில் கரை இறக்கப்பட்ட குதிரைகளுக் காகப் பயன்படுத்தப்பட்ட நீர்நிலையாக அந்த ‘குதிரை வழிக்குளம்’ அமைந்திருக்கலாம்.

அரிமர்த்தன பாண்டிய மன்னனது அமைச்சரவையில் பணிபுரிந் தார் மாணிக்கவாசகர். பாண்டிய மன்னனுக்காகக் குதிரை வாங்க அவர் திருப்பெருந்துறைக்குச் சென்றார். நரியைப் பரியாக்கின கதையும் பரியை நரியாக்கின கதையும் எல்லாரும் அறிந்தவையே. மாணிக்கவாசகரை ஆட்கொள்ள வந்த சிவபெருமான் குதிரைமேல் ஏறி வந்தவர் என்பது

கோட்டமிலா மாணிக்க வாசகர்முன்
குதிரை ராவுத்தனாக நின்று

என திருப்பெருந்துறைப் புராணம் பாடுகின்றது.

மாணிக்கவாசகரின் காலத்தை நிர்ணயிப்பதற்கு அவர்தம் திரு வாசகத்தில் உள்ள ஒரு பாடல் பயன்படுத்தப்படுவதைக் காணலாம். எட்டாம் நூற்றாண்டிலே முஸ்லிம் மக்கள் தமிழகம் வந்துவிட்டனர் என்பதனை அடிப்படையாக வைத்து மாணிக்கவாசகரின் காலத்தை நிர்ணயிக்க முற்பட்டுள்ளனர் அறிஞர். அக்கூற்றுக்கு ஆதாரமாக திருவாசகத்தில் உள்ள ஒரு பாடல் மேற்கோள் காட்டப்படுகிறது. அப்பாசுரம்,

வெள்ளைக் கலிங்கத்தர் வெண்திரு முண்டத்தர்
பள்ளிக் குப்பாயத்தர் அன்னே என்னும்
பள்ளிக்குப் பாயத்தர் பாய்பரிமேல் கொண்டென்
உள்ளம் கவர்வரால் அன்னே என்னும்

என திருவாசகம் அன்னைப்பத்து ஏழாவது பாடலாக அமைந்துள்ள தைக் காணலாம். முஸ்லிம் மக்கள் கழுத்திலிருந்து கணுக்கால் வரை அணியும் மேலங்கி குப்பாயம் என அழைக்கப்படுகிறது. இதே வெள் ளைக் குப்பாயத்தை முஸ்லிம் மதகுருக்கள் அணிந்து செல்வதை இன்றும் காணலாம். திருவாசகப் பாடலில் வெள்ளை நிறமான ஆடையை அவர்கள் அணிந்திருந்தனர். தலையை மொட்டை அடித் திருந்தார்கள். குப்பாயத்தை அணிந்தவர்களாகப் பள்ளிவாசலுக்குச் சென்றனர். அத்தகைய உடையில் சிவபெருமான் தோன்றினார் என்கின்றது திருவாசகம்.

திருப்பெருந்துறைக் கோவில்களுக்கு சந்நதி பஞ்சாட்சர மண்டபம் இன்றும் ராவுத்தர் மண்டபம் என அழைக்கப்படுவதைக் காணலாம். எனவே இந்த ராவுத்தர் என்னும் சொல் முஸ்லிம்களைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். பதின்மூன்றாம் நூற் றாண்டைச் சேர்ந்த திருப்பதி-திருமலைக் கல்வெட்டில் திருப்பதி திருக்கோவிலில் ராவுத்தராயன் சந்தி நடைபெற வழங்கப்பட்ட கொடையைப் பற்றியும் பாண்டிய குறுநில மன்னரான ராவுத்தராயன் சிங்கப்ப நாயக்கர் என்பவரைப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஈரோடு கல்வெட்டு ஒன்றில் கி.பி. 1510 இல் அங்கு ஆட்சி செய்த கஜபதி அரசரது ஆளுநரான திருமலை ராவுத்தராயன் என்பவரைப் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது.

தமிழ் இலக்கியத்திலும் ராவுத்தர் என்னும் இச்சொல் இடம் பெற்றுள்ளது. பெரும்பற்றப் புலியூர்நம்பி பாடிய திருவாலவாயுடை யார் திருவிளையாடல் புராணத்தில்

துய்ய பேருலகுக் கெல்லாம்
துலங்கிய இராவுத்தராயன்

என ராவுத்தர் என்னும் சொல் வந்துள்ளது. இன்னெறி மன்னர் மன்னன் இன்னிமை கூர்ந்து இரவுத்தற்கு நன்மைகூர் வரிசைத் தூசு நல்குமென்று என மற்றொரு பாடலில் பெரும்பற்றப்புலியூர் நம்பி தமது திருவிளையாடற் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

அருணகிரிநாதரது கந்தர் அலங்காரம், கந்தர் கலிவெண்பா என்பனவற்றில் முருகப்பெருமான்,

'' சூர்க் கொன்ற ராவுத்தனே ''
'' மாமயி லேறும் ராவுத்தனே ''

என வருணிக்கப்பட்டுள்ளார். தமிழ் நாட்டில் இன்று வாழும் முஸ்லிம் மக்களின் மூதாதையரைக் குறிப்பிட பயன்படுத்தப்பட்ட 'ராவுத்தன்' என்னும் சொல் காலப்போக்கில் தமிழ் சொல்லாகவே மாறிவிட்டதைக் காணலாம். அத்தோடு நின்றுவிடவில்லை. தமிழ் மக்களில் ஒரு

பிரிவினரைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டதோடு அவர்களின் தலை வரைக் குறிக்க 'ராவுத்தராயன்' என பயன்படுத்தப்பட்டிருப்பதையும் காண்கின்றோம். அதே போன்று நெல்லை மாவட்டத்தில் ராவுத்தர் பாளையம் என்றும் மதுரை மாவட்டத்தில் ராவுத்தன் பட்டி என்றும் தஞ்சை மாவட்டத்தில் ராவுத்தன் வயல் என்றும் தென் ஆற்காடு மாவட்டத்தில் ராவுத்த நல்லூர் என்றும் திருச்சி மாவட்டத்தில் போத்த ராவுத்தன்பட்டி என்றும் வட ஆற்காடு மாவட்டத்தில் ராவுத்த ராயன் குப்பம் என்றும் ஊர்ப் பெயர்கள் தோன்றி இருப்பதையும் நாம் ஈண்டு கருத்திற் கொள்ளல் வேண்டும்.

குப்பாயம் அணிந்தவர்களைப் பற்றிச் சீவக சிந்தாமணியும் குறிப்பிடுகின்றது. அங்கே குப்பாய மிலேச்சனைப் பற்றிய குறிப்பு வந்துள்ளது.

செங்கட் புன்மயிர்த் தோறிரை செப்முக
வெங்க ணோக்கிற் குப்பாய மிலேச்சனை
(சீவக சிந்தாமணி: கோவிந்தையாரிலம்பகம்: 23 (431)

இங்கே குப்பாயம் என்பது முஸ்லிம் மக்கள் அணியும் மேலங்கியைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் ஓர் அறபுச் சொல் என்பது ஈண்டு நோக்கற்பாலது.

அறபு நாட்டு முஸ்லிம்கள் தமிழகத்தோடு கொண்ட தொடர் பினால் தமிழகத்துக்கு குதிரைகள் கொண்டு வரப்பட்டமை தமிழக ஓவியக் கலைக்கும் கருவாக அமைந்துள்ளது. இத்தகைய ஓவியம் ஒன்றினை நெல்லை மாவட்டத்தில் காணக்கூடியதாக இருக்கின்றது. நெல்லை மாவட்டத்தில் உள்ளது திருப்புடை மருதூர்க்கோவில். அந்தக் கோவிலின் கோபுரத்தின் இரண்டாம் தளத்தில் ஓர் ஓவியம் இடம் பெற்றுள்ளது. வர்ணச் சுவர் ஓவியமாக அது திகழ்கிறது. அந்த ஓவியத்தில் அறபு முஸ்லிம்கள் அறபு குதிரைகளைத் தமிழ் நாட்டுக் கரைகளில் கொண்டு வந்து சேர்க்கும் விவரங்கள் தீட்டப்பட் டுள்ளன. இந்த ஓவியம் 14 ஆம் அல்லது 15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனக் கருதப்படுகிறது. இக்காட்சியினைச் சொல் ஓவிய மாகக் கண்டு மகிழ்கிறான் கம்பன். அவன் தனது இராமாயணத்தின் பால காண்டத்தில் உள்ள வனக் காட்சிப் படலத்தில்

உண்ணமு தருந்தியிளை யோர்நகர் கொணர்ந்த
துண்ணெனு முழக்கின துருக்கர் தர வந்த
மண்மக டன்மார் பினணி வன்னச ரமென்னப்
பண்ணுறு வயப்புரவி பந்தியின் நிறைத்தார் (14 : 13 : 902)

என துருக்கர் கொண்டுவந்த குதிரைகள் கோசல நாட்டில் நிறைந்து இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். கோசல நாட்டில் உள்ளனவாகக்

கம்பன் கற்பனை செய்த அத்தனையும் சோழ நாட்டில் இருந்தவை என்பது யாவரும் அறிந்ததே.

பதினோராம் நூற்றாண்டில் அரசோச்சியவன் முதலாம் குலோத்துங்க சோழன். அச்சோழ மன்னனின் காஞ்சி மாளிகையில் நாற்பத்தெட்டுத் தேச மன்னர்கள் திறை அளந்தார்கள். அவ்வாறு திறை அளந்த நாற்பத்தெட்டுத் தேச மன்னர்களின் பட்டியல் ஒன்றினைத் தந்துள்ளார், செயங்கொண்டார் தமது கலிங்கத்துப் பரணியில் :

வந்தவர் மத்திகர் மாருவர் மாகதர் மச்சர் மிலைச்சர்களே
சூத்திரர் குத்தர் இடக்கர் பிடக்கர் குருக்கர் துருக்கர் (333)

என துருக்கர் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளமையைக் காணலாம்.

ஒட்டக்கூத்தரும் தமது குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழில் அம்மன்னனது மறப்புகழைப்பாட முற்பட்டு அந்நூலில் இடம் பெற்ற களவர்ணனையில்

கருநடர் துருக்கர் வடகவுடர் கடுத்தர் கவுரியர் மகதத்தர்
பிறர் சமயக் கடலென வளைத்தமரர் ககனதல முட்ட
வொலிகளி பெருகளத்திடையே (52)

ஏனையவர்களுடன் சேர்த்து துருக்கரையும் குறிப்பிட்டுள்ளார். சில சமயங்களில் துருக்கர் என்பது துலுக்கர் என்றும் மாறி வருவதைக் காணலாம். கல்வெட்டுகளில் இச்சொற்கள் இரண்டும் மாறிமாறி வந்துள்ளன.

கோவை மாவட்டத்தில் உள்ளது பாரியூர். அங்கே உள்ள ஒரு கல்வெட்டில் பாண்டிய மன்னர் வீரபாண்டித் தேவர் வழங்கிய முற்றூட்டிற்கு நான்கு எல்லை குறிப்பிடும்பொழுது

‘ துலுக்கன்பட்டி தென்மேற்கு ’

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. தாராபுரத்தில் உள்ள ஒரு கல்வெட்டில்

‘ துலுக்கர் பள்ளியாகி ஸ்தானம் தெரியாமலாகிவிட்ட ’

என்னும் சொற்றொடர் பொறிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்.

‘ முன்னாள் ராஜராஜன் ஸ்ரீசுந்தரபாண்டியன் தேவர்
துலுக்கருடன் வந்த நாளையில் ’

என்னும் வரலாற்றுச் செய்தியை விளம்புரம் திருக்களர் கல்வெட்டும்

‘ துலுக்கர் ராச்சியமாய் பல சேமங்கள் தப்பித்து ’

என்னும் குறிப்பை திருவெற்றியூர் கல்வெட்டும் கொண்டுள்ளன. ‘துருக்கர், துலுக்கர்’ என்னும் இரண்டு சொற்களும் முஸ்லிம் மக்களைக் குறிப்பிட மாறிமாறிப் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக்

காணலாம். 'துருக்கர்' என்னும் சொல்லைக் குறிக்க இன்றைய ஆந்திர மாநிலத்தில் உள்ள தெலுங்கில் எழுதப்பட்ட பனகல் கல் வெட்டில் துலுஷ்கர் என்னும் சொல் பொறிக்கப்பட்டுள்ளமை ஒப்பு நோக்கற்பாலது.

தமிழ்ச்சங்க வெளியீடான மதுரைத் திருப்பணிமாலை மதுரைப் பற்றிய தலவரலாற்று நூலாக அமைந்துள்ளது. அந்நூலில் பாண்டி யர் ஆட்சி மறைந்ததை அடுத்து கி.பி. 1324 முதல் கி.பி. 1378 வரை நிலைத்த முஸ்லிம் சுல்தான் ஆட்சியை 'துலுக்காணியம்' என்னும் புதுச் சொல்லால் குறிப்பிடுகிறது. துலுக்காணம் என்பதிலிருந்தே துலுக்காணியம் என்பது தோன்றி இருக்கலாம், துருக்கர் அல்லது துலுக்கர் இருப்பிடம் என்னும் பொருளில் தோற்றுவிக்கப்பட்ட 'துலுக்காணம்' என்பது இன்று தமிழக வழக்கில் இடம் பெற்று விட்டது.

சென்னை மாநகரின் கிழக்குப் பகுதியில் உள்ள ஒரு பிரதேசம் இன்றும் துலுக்காணம் என்று வழங்கப்பட்டு வருகிறது. திரிகூட ராசப்பர் திருக்குற்றாலக் குறவஞ்சியில் வரும்

'மக்கம் மராடம் துலுக்காணம் மெச்சிகுற மகளும்' (63 : 1)

என்னும் அடியில் துலுக்காணம் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம். விசயரகுநாத சேதுபதியின் வெற்றிச் சிறப்பை வெளியிடப் புனையப் பட்ட வண்ணம் தஞ்சை சரசுவதி மகால் நூல் வெளியீடான வண்ணத் திரட்டில் இடம் பெற்றுள்ளது. அவ்வண்ணத்தில்

'வழுமண் மறகதர் துலுக்காணர் சோழர்'

என்னும் வரி காணப்படுகிறது. திருப்பதி கோயில் கல்வெட்டு ஒன்றில் யாதவராய மன்னர்

'ஓரமஞ்சி துலுக்காண நாயக்கர்'

எனக் குறிப்பிடப்படுகிறார்.

துலுக்கர் என்னும் இச்சொல் பிற்கால வழக்கிலும் இடம் பெற லாயிற்று. விஜயநகரப் பேரரசர் ஆட்சி செய்த காலம் அது. அப் பொழுது தமிழகம் அவ்வாட்சியில் இணைந்து இருந்தது. அக்காலத் தில் திருவாரூர் கோயிலில் திருவீழி மிழலையைச் சேர்ந்த அர்ச்சகர் ஒருவர் அட்டூழியங்கள் புரிந்து வந்தார். அவ்வட்டூழியங்களைத் தத்துவப் பிரகாச சுவாமிகள் விஜயநகர மன்னனுக்கு எடுத்துக் காட்டினார். ஒரு பாடல் மூலமாகவே அதனை விளக்கினார். அதன் பயனாக அதற்கான பரிகாரத்தையும் கண்டார். பெருந்தொகை என்னும் தொகை நூலில் இடம் பெற்ற அப்பாடல் இவ்வாறு அமைந் துள்ளது.

ஊழித் துலுக்கல்ல ஒட்டியார் தானுமல்ல
வீழித் துலுக்கு வந்து மேலிட்டதோ—ஆழி
சிறந்த தேராரூர்த் தியாகருடைப் பூசை
சிறந்த தேகிருட்டின ராயா.

இங்கே துலுக்கன் என்ற பொருளில் துலுக்கு என்னும் சொல் இரண்டுமுறை பயன்படுத்தப்பட்டுள்ளது. பண்டுதொட்டு வாழ்ந்து வருபவர் ஒட்டியரும் துலுக்கரும். அவர்கள் தமிழ் நாட்டில் தகாத முறையில் நடந்து கொண்டனர் எனக் கூறப்படுகிறது. இக்கூற்றை அடிப்படையாக வைத்தே தத்துவப் பிரகாசர், பரம்பரையாக வரும் துலுக்கரும் அல்லர், ஒட்டியரும் அல்லர், திருவீழி மிழலையிலிருந்து வந்த துலுக்கனே தீமை செய்துள்ளான் என கிருஷ்ண தேவராயரிடம் முறையிட்டார். அவன் பின்னர் நீக்கப்பட்டான். இதனைக் குறிப் பிடும் பொழுது ஒரு பாடலில் துலுக்கர் என்னும் சொல் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

உண்ட வயிற்றில் உமிக்காந்த லிட்டதே
தொண்டரே வீழித்துலுக்கரே—பண்டெல்லாம்
அப்ப மவலென் றதிரசமுந் தோசைகளும்
கப்புவது போச்சே கவிழ்ந்து (1639)

இங்கே துலுக்கர் என்றது அர்ச்சகரை. இவ்வாறு துலுக்கர் என்னும் சொல் நல்லவர்களையும் தீயவர்களையும் சுட்டப் பயன் படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். இவற்றிலிருந்து துலுக்கர் என்னும் சொல் அப்பொழுது தமிழில் பெருவழக்கைப் பெற்றிருந்தது என்பது புலனாகிறது.

சோனகர், துலுக்கர், மிலேச்சர் போன்ற சொற்களை தாம் விரும்பியவாறு இலக்கியத்தில் பயன்படுத்தி உள்ளனர் புலவர். எந்தச் சொல்லால் யாரைக் குறிப்பிடுவது என்பது பற்றிய தெளிவான கருத்து புலவர்களிடையே நிலவவில்லை என்று தோன்றுகிறது. சில சமயங்களில் சில புலவர்கள் முன்பு முஸ்லிம்களைச் சுட்டப் பயன் படுத்திய சோனகர், துலுக்கர் போன்ற பதங்களை பல்வேறு இனத்த வரைக் குறிப்பிட ஒரே பாடலில் ஆண்டிருப்பதைக் காணலாம். கம்ப ராமாயணத்தில் உள்ள பால காண்டத்தில் உலாவியற் படலத்தில் இத்தகைய கருத்துக்களைக் கொண்ட ஒரு செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

மான மாகதர் மச்சர் மிலேச்சர்கள்
......... ......... ......... .........
......... ......... ......... .........
சோனகேசர் துலுக்கர் குருக்களே 48 (1187)

விஜயநகர மன்னர்களுடைய விருதாவளியில் 'துலுக்க மோகந் தவிர்த்தான்' ''துலுக்க தள விபாடன்'' என்னும் சொற்றொடர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். அத்தகைய விருதுகளை பிற்கால நாயக்க குறுநில மன்னர்களும் இராமநாதபுர சேதுபதி மன்னர்களும் தத்தம் பெயர்களுடன் இணைத்து வழங்கி வந்தனர். அவ்விருதுகள் முஸ்லிம்களுக்கு மாறான கருத்துக்களைக் கொண்டுள்ளன போன்று காட்சி அளித்தாலும் தத்தம் குடிமக்களாக வாழ்ந்த தமிழ் நாட்டு முஸ்லிம் மக்களிடம் அவர்கள் கொண்டிருந்த அன்பும் பரிவும் பாசமும் பிரதிபலிக்கும் வகையில் அவை அமைந்திருந்தன.

முஸ்லிம் மக்கள் பண்டு தொட்டு அஞ்சுவண்ணத்தார் என்றும் வழங்கப்பட்டு வந்துள்ளனர். அவர்கள் ஏன் அவ்வாறு அழைக்கப் பட்டனர்? அவ்வாறு அவர்கள் அழைக்கப்பட்டதில் முக்கியத்துவம் ஏதும் உண்டா? அவர்கள் அவ்வாறு அழைக்கப்படுவதற்குத் தூண்டு கோலாக இருந்த காரணிகள் எவை? அவர்களே தம்மை அவ்வாறு அழைத்துக் கொண்டனரா? அல்லது அவர்கள் அவ்வாறு பிறரால் அழைக்கப்பட்டனரா? அவர்கள் தாம் அவ்வாறு அழைக்கப் படுவதை விரும்பினார்களா? அவர்கள் அஞ்சுவண்ணத்தார் என அழைக்கப்பட்டமைக்குச் சான்றாக தமிழ் இலக்கிய நூல்களில் ஆதா ரங்கள் உண்டா? பழைய நிகழ்ச்சிகள் பொறிக்கப்பட்டுள்ள தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்களில் அந்த அஞ்சுவண்ணத்தார் என்னும் சொற் றொடர் இடம் பெற்றுள்ளதா? இடம் பெற்றுள்ளதாயின் அவ்வாறு இடம் பெற்றுள்ளதன் நோக்கம் யாது? இன்னோரன்ன வினாக் களுக்குப் பல்சந்த மாலை பற்றிய அடுத்த அத்தியாயத்தில் விடை காண முயல்வோம்.

இந்தியாவில் ஆட்சி புரிந்த முஸ்லிம் மன்னர்கள் பெரும்பாலும் அறபு மொழியில் அல்லது பாரசீக மொழியில் பாண்டித்தியம் பெற்ற வர்களாகவே வாழ்ந்து வந்தனர். மதுரையை ஆட்சி புரிந்த சுல்தான் களும் அதற்கு விதிவிலக்காக அமையவில்லை. மதுரையை ஆட்சி புரிந்த சுல்தான்கள் தமிழ் நாட்டில் தமது ஆட்சியை நிலைபெற முயற்சி செய்தார்களே தவிர கல்வி, கலை, கலாச்சார வளர்ச்சிக்கு உழைக்க அவர்களுக்கு வாய்ப்பு கிடைக்கவில்லை. மதுரை சுல்தான் களும் பாரசீக மொழியிலே பாண்டித்தியம் பெற்றவர்களாகவே திகழ்ந் துள்ளனர். இலங்கையை ஆட்சி புரிய அனுப்பப்பட்ட ஆரிய சக்கர வர்த்தியும் பாரசீக மொழியில் பாண்டித்தியம் பெற்றிருந்தார் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. மதுரை சுல்தான்களால் வெளியிடப்பட்ட நாணயங்களிலும் அறபு அல்லது பாரசீகச் சொற்களே பொறிக்கப்பட் டிருந்தன.

இந்தியாவுக்கு முஸ்லிம்கள் வந்ததன் பயனாக பெருமாற்றங்கள் இந்தியாவில் ஏற்பட்டன. அவை சமூக, அரசியல் மாற்றங்களாக

மாத்திரம் அமையவில்லை. அறிவு வளர்ச்சியிலும் மாற்றங்கள் ஏற்படலாயின. அரசாங்க அலுவலகங்களிலே பணி புரிந்த உள்ளூர் மக்கள் அறபு, பாரசீகம் போன்ற பிறமொழிகளைக் கற்கவேண்டி இருந்தது. சிறப்பாக, சுல்தான் சிக்கந்தரின் ஆட்சிக் காலத்தில் இந்துக்கள் முதன் முறையாக பாரசீக மொழியைக் கற்க முற்பட்டனர். 16ஆம் நூற்றாண்டில் இந்துக்கள் எவ்வளவு ஆர்வத்துடன் பாரசீக மொழியைக் கற்றனர் என்றால் அடுத்த நூற்றாண்டு ஆவதற்குள் அவர்கள் பாரசீக மொழியைக் கற்றுத் தேர்ந்த முஸ்லிம்களையும் மிஞ்சிவிட்டனர் என பேராசிரியர் புளொக்மன் என்பவர் குறிப்பிட்டுள்ளார்.

'சிறுவர்கள் கூட விரைவாகப் பாரசீக மொழியைக் கற்றுக் கொண்டனர். அவர்களுக்கு முதலில் அரிச்சுவடி கற்றுக் கொடுக்கப்பட்டது. உச்சரிப்பிலும் பயிற்சி அளிக்கப்பட்டது. நிறுத்தக் குறிகளின் உபயோகமும் கற்றுக் கொடுக்கப்பட்டது. இவற்றைக் கற்றுத் தேற அச்சிறுவர்களுக்கு இரண்டு நாட்களுக்குமேல் செலவாகவில்லை. ஒரு வாரத்தில் குறுகிய வாக்கியங்கள் வாசிக்கும் முறை கற்றுக் கொடுக்கப்பட்டது. சமயசார்பான அல்லது ஒழுக்க முறைபற்றிய வாக்கியங்களே முதலில் கற்றுக் கொடுக்கப்பட்டன. அவை கவிதையாகவும் இருந்தன; உரைநடையாகவும் இருந்தன. இதன் பயனாக அச்சிறார்கள் குறுகிய கால எல்லைக்குள் பாரசீக மொழியைச் செம்மையாக வாசிக்கக் கூடியவர்களாக மாறிவிட்டனர்.' இவ்வாறு நரேந்திர நாத் லோ என்பவர் 'முகமதிய (முஸ்லிம்) ஆட்சியில் இந்தியாவில் அறிவு வளர்ச்சி' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

இதுகாறும் கூறியவற்றிலிருந்து சில முடிவுகள் தெரிகின்றன. கடந்த பத்து நூற்றாண்டுகளுக்குத் தமிழ் நாட்டுக் கலை கலாசாரம், மொழி, சமயம் முதலிய பல துறைகளில் இஸ்லாமிய அடிப்படையிலான முஸ்லிம்களின் செல்வாக்கு பிரதிபலித்துக் கொண்டிருக்கிறது. தமிழ் மொழியிலே அதன் பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் இடம் பெற்றுள்ள, முஸ்லிம்களின் சிறப்பு மொழிகளான அறபு, பாரசீகம், உருது மொழிச் சொற்கள் இரு சாராருக்கும் இடையே நிலவிய நெருங்கிய உறவினை எடுத்துக் காட்டுவனவாக அமைந்துள்ளன. தமிழ் மொழியிலே இடம் பெற்றுள்ள இனாம், பதில் போன்ற சில அறபுச் சொற்கள் அறபு என அடையாளங்காண முடியாத அளவுக்கு தமிழ் மயமாகி உள்ளன. அதே போன்று இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய சூபிக் கருத்துக்கள் தமிழிலே உருவாகியுள்ள சித்தர் பாடல்களில் மறைந்திருக்கின்றன.

ஆரம்பகால முஸ்லிம்களை எடுத்துக் கொண்டாலும் அவர்கள் தமது வணிக நடவடிக்கைகளை வளர்ப்பதிலே அக்கறை செலுத்தி

னார்களே தவிர தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு எவ்வித பணியும் புரிந்த தாகத் தெரியவில்லை. தமிழ் நாட்டிலே முஸ்லிம் மக்களின் குடி யேற்றம் அதிகரிக்க அதிகரிக்க இஸ்லாத்தைப் பற்றிய அவர்களின் அறிவு விருத்தி அடையத் தலைப்பட்டது. ஆதலினால் அவர்களுக்கு இஸ்லாம் பற்றிய நூல்கள் தேவைப்பட்டன.

அக்காலத்தில் தமிழ் நாட்டில் வாழ்ந்த முஸ்லிம் மக்கள் தமிழைப் பேசக் கற்றிருந்த போதிலும் எழுதத் தெரியாதவர்களாக இருந் திருத்தல் வேண்டும். அதே நேரத்தில் அல்குர்ஆன் வேத நூலை ஓதக் கூடியவர்களாக இருந்திருத்தல் வேண்டும். அதன் பயனாக அறபு எழுத்துக்களை வாசிக்கும் ஆற்றல் அவர்கள் பெற்றிருத்தல் வேண்டும். தமிழ் பேசத் தெரிந்து அறபு வாசிக்கத் தெரிந்திருந்த அன்றைய தமிழ் நாட்டு முஸ்லிம்களுக்கு இஸ்லாமிய நூல்களை எழுத அன்றைய தமிழ் நாட்டு அறிஞர் அறபு மொழியில் பாண்டித்தியம் பெற்றவர்களாக இருந்தமையினாலேயே ஒரு புது உத்தியைக் கையாள வேண்டியிருந்தது. எனவேதான் பேச்சுத் தமிழ் நடைக்கு ஒப்பான ஒரு நடையிலே இஸ்லாமியத் தமிழ் நூல்களை எழுத முற்பட்டனர். அக்கால எல்லையில் தமிழ் நூல்களை எழுதிய முஸ்லிம் அறிஞர்களும் தமிழில் சிறந்த பாண்டித்தியம் பெற்றவர்களாக இருந் திருக்கவில்லை போலும். ஆகவே, அவ்விஸ்லாமிய அறிஞர்கள் இஸ்லாம் பற்றிய தமிழ் நூல்களை அறபு எழுத்துக்களில் எழுதத் தலைப்பட்டனர்.

அவ்விஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களே அறபுத் தமிழ் இலக் கியங்கள் என வழங்கப்படலாயின. முஸ்லிம்களின் நாளாந்த வாழ்க் கையில் அத்தகைய நூல்கள் அறபுத் தமிழில் எழுதப்பட்ட நூல்களாகக் கருதப்பட்டன. ஒரு காலத்தில் முஸ்லிம் மக்களின் திருமண அழைப் புக்கள் கூட அறபுத் தமிழில் அச்சியற்றப்பட்டன. அறபுத் தமிழ் பயிற்சி ஒரு கலையாகப் பயிலப்பட்டது. தமிழகத்திலே சில கலா சாலைகள் அறபுத் தமிழ்ப் பயிற்சிக்காக வகுப்புக்களை ஒழுங்கு படுத்தின என அவற்றில் பயின்றவர்கள் கூறி உள்ளனர். அத்தகைய அறபுத் தமிழில் உரைநடை மாத்திரமன்று, தலை சிறந்த கவிதை நூல்களும் இயற்றப்பட்டன.

காலப்போக்கில் தமிழ் அறிவு வளரவளர அவ்வாறு அறபுத் தமிழில் எழுதப்பட்ட இஸ்லாமிய நூல்கள் தமிழ் எழுத்துக்களிலும் எழுதப்பட்டன. இன்று கிடைக்கக் கூடிய சில இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் தமிழ் எழுத்து, அறபு எழுத்து ஆகிய இரண்டு லிபிகளிலும் அச்சியற்றப்பட்டிருப்பதைக் காணலாம். அறபு எழுத்துக் களில் எழுதப்பட்ட தமிழ் நூல்கள் தமிழ் எழுத்துக்களில் எழுதப்பட்ட தமிழ் நூல்களைவிட புனிதத்தன்மை வாய்ந்தவை என எண்ணிய

பாமர மக்களும் எம்மிடையே இருந்தனர். தமிழ் எழுத்துக்களை அறபு எழுத்துக்களில் எழுத முற்பட்டபோது தமிழ் எழுத்துக்களுக்கு சமமான உச்சரிப்பை உடைய எழுத்துக்கள் அறபு மொழியில் இல்லா மையினால் அறபு எழுத்துக்களின் மேலாலோ கீழாலோ குற்றுக்களை இட்டுப் புதிய எழுத்துக்களை உருவாக்க வேண்டிய பொறுப்பும் அவ் வறபு அறிஞரைச் சார்ந்திருந்தது.

தமிழ் வளர்ச்சியில் ஈடுபாடுகொண்டு ஆர்வமுடன் வாழ்ந்த முஸ்லிம் பெருமக்களும் காலத்துக்குக் காலம் தோன்றி உள்ளனர். அவர்கள் சாமந்தர் என வழங்கப்பட்ட சிற்றரசர்களாக இருந்திருக்க லாம். இல்லையென்னாது வழங்கிய கொடை வள்ளல்களாக இருந் திருக்கலாம். வின்னன் எனப் பெயரைக் கொண்டு சிற்றரசராக வாழ்ந்து தமிழ் வளர்ச்சியில் ஈடுபட்ட ஒருவருக்கான எடுத்துக்காட் டாக அவரைக் காட்டலாம். தமிழ் வளர்ச்சியிலே பெரிதும் ஈடுபாடு கொண்டு தமிழ்ப் புலவர்களைப் போற்றிப் பாராட்டிப் பரிசில்கள் வழங்கித் தமிழ்த் தொண்டும் இஸ்லாமியத் தொண்டும் புரிந்த சீதக் காதி வள்ளல் போன்றோர் மற்றதற்கான தக்க எடுத்துக்காட் டாகும்.

அடுத்த அடுத்த அத்தியாயங்களில் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களின் வரலாற்றினை அறிய முயல லாம்.

---

# இரண்டாம் அத்தியாயம்

## தொடக்க காலம்

## பல்சந்த மாலை

இஸ்லாம் ஒரு பொதுமறை. உலகம் எப்பொழுது படைக்கப் பட்டதோ அப்பொழுதே படைக்கப்பட்டது. உலகத்தைப் படைப் பதற்கு முன்னர் அல்லாஹ் நூரே முகம்மது என்னும் ஒளியைப் படைத் தான். அவ்வொளியிலிருந்துதான் அனைத்தையும் படைத்தான். முஸ்லிம் மக்கள் ஒருலட்சத்து இருபத்து நான்காயிரம் நபிமார் (தீர்க்கதரிசி)களில் நம்பிக்கை வைத்துள்ளனர். அந்த நபிமார்கள் அத்தனைபேரும் இஸ்லாத்தை அடிப்படையாகக் கொண்டவர்களே. அவர்கள் இஸ்லாமிய கொள்கைகளையே போதித்தனர். ஓர் இறை வன் என்னும் முக்கியமான கொள்கையினைப் போதித்தனர். அதனையே தத்தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகினர். முகம்மது நபி (சல்) அவர்களினாலே இஸ்லாம் மார்க்கம் பூரணத்துவம் பெற் றது. அல்லாஹ் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களுக்கு இஸ்லாம் மார்க்கத்தைப் பூரணமாக்கி அருளினான். அல்குர்ஆனில் உள்ள மாஇதா என்னும் அத்தியாயத்தில் அவ்வாறு அல்லாஹ் கூறி உள்ளான். ''நான் உங்களுக்கு, உங்களுடைய மார்க்கத்தை இன் றைய தினம் பரிபூரணமாக்கி வைத்து விட்டேன், உங்களுக்காக இஸ்லாம் மார்க்கத்தையும் தேர்ந்(தெடுத்)து (உங்களுக்கு அருட் செய்து அங்கீகரித்துக்) கொண்டேன்'' (அல்குர்ஆன் 5 : 3) எல்லா நாட்டவராலும் எல்லா இனத்தவர்களாலும் எல்லா மொழியைப் பேசுபவர்களாலும் உலகில் எங்கெங்கு வாழ்கிறார்களோ அங்கங்கு உள்ளவர்களாலும் அன்றும் இன்றும் என்றும் பின்பற்றப்பட்டதாயும் பின்பற்றப்பட்டு வருகிறதாயும் பின்பற்றப்படுவதாயும் அமைந்துள்ள மார்க்கம் இஸ்லாம் மார்க்கம்.

தமிழ் மொழி மிகப்பழமையானது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பதற்கு இலக்கணமாக விளங்குவது. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பதனை அடிப்படைக்கொள்கையாகக் கொண்டு திகழ்வது. வாழ்க்கைக்கு இன்றியமையாத உலகியல் கருத்துக் களையும் ஆன்மிகவியல் கருத்துக்களையும் தன்னிடத்தே உடைய தாக மிளிர்வது. அகப்பொருளையும் புறப்பொருளையும் பக்திப் பாசுரங்களையும் ஞானப்பாடல்களையும் பேரின்பச் செய்யுட்களையும் சிற்றின்பக் கவிதைகளையும் ஒருங்கே அமையப்பெற்று பிரகாசிப்பது. மெய்ப்பாடுகள் அனைத்தையும் தன்னகத்தே பிரதிபலித்துக்கொண் டிருப்பது தமிழ் மொழியாகும்.

வாழ்க்கையைப் பிரதிபலிப்பது இலக்கியம் விழுமிய கருத்துக் களை ஆற்றொழுக்குப்போல் எடுத்துச்செல்வது இலக்கியம். எண்ணக் குவியல்களைத் தன்னிடத்தே குவித்து வைத்திருக்கும் பெருமை அவ் விலக்கியத்துக்கு உண்டு. சுருங்கச்சொல்லி விளங்கவைக்கும் பண்பும் அதற்கு உண்டு. சமயம், கலை, கலாசாரம் முதலியனவற்றின் பாது காவலனாக அமைவதும் அவ்விலக்கியமே. இலக்கியத்துக்கு எல்லாமே பொருளாய் அமையும். ஒரு மொழியில் தோன்றும் இலக்கியம் அம் மொழிக்குப் புறம்பான மொழிகளிலிருந்தும் பெறப்படும் சொற்களை யும் சொற்றொடர்களையும் தன்மயப்படுத்தித் தன்மொழி போல் ஆக்கித் தன்வயப்படுத்திக் கொள்ளும் ஆற்றலும் அவ்விலக் கியத்துக்கு உண்டு. பிறமொழிக் கருத்துக்களையும் தன் மொழிக் கருத்துக்கள் போல் அமைத்துக்காட்டும் பாங்கும் இலக்கியத்தோடு உடன் பிறந்ததொன்றாகும். இலக்கியம் இன்றேல் இலக்கணம் இல்லை என்று கூறும் அளவுக்கு இன்றியமையாததாய் விளங்குவது இலக்கியம்.

**இஸ்லாமும் தமிழும் :**

இஸ்லாம், தமிழ், இலக்கியம் என்னும் மூன்று சொற்களையும் கொண்ட சொற்றொடரே இஸ்லாமியத் தமிழ் இலக்கியம், இஸ்லாம் எங்கள் வழி ; தமிழ் எங்கள் மொழி ; இலக்கியம் எங்கள் விழி, என்பதற் கேற்ப வழி மொழி விழிகளாய் அமைந்துள்ளது இஸ்லாமியத் தமிழ் இலக்கியம். ஆக, இவ்விஸ்லாமியத் தமிழ் இலக்கியம் எமது முது சொம். எமது வழி செம்மையானதாய் இருத்தல் அவசியம். எமது மொழி பண்பாடானதாய் இருத்தல் வேண்டும். எமது விழி கூர்மை யானதாய் இருத்தல் இன்றியமையாதது. எனவே எமது வழி மொழி விழியான இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் போற்றிப் பேணிப் பாது காக்கப்படல் வேண்டும். வழிபோற்றப்பட்டு மொழி பேணப்பட்டு விழி பாதுகாக்கப்படுதல் போன்று இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் உரிய முறையில் கண்காணிக்கப்பட்டு வருதல் வேண்டும்.

இவ்விஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தை எமது மூதாதையர் எவ் வாறு படைத்தனர். அவ்வாறு படைக்கப்பட்டவற்றை எவ்வாறு போற்றினர்? எவ்வாறு புகழ்ந்தனர்? எவ்வாறு பாதுகாத்து வந்த னர்? காலத்துக்குக் காலம் அவற்றிற்கு எவ்வாறு புத்துயிரளித்து வந்தனர்? அவர்கள் அவ்வாறு படைத்தவை பின் வந்தவர்களுக்கு எவ்வாறு முன்மாதிரியாக அமைந்தன? பின் வந்தவர்களால் பின் பற்றப்படுவதற்கு ஏற்றமுறையில் அவர்கள் அவற்றைப் படைக்கும் பொழுது அவற்றை எவ்வாறு வழிகாட்டிகளாக, முன்னோடிகளாக அமைத்தனர்? அவர்களும் அவற்றைப் படைத்தபொழுது அவர் களுக்கும் வழிகாட்டிகளாக, முன்னோடிகளாக அமைந்தவை யாவை?

அவர்கள் அவற்றைப் படைப்பதற்குத் தூண்டுகோலாய் அமைந்த காரணிகள் எவை? அவர்களுக்கு உறுதுணையாக அமைந்த அக் காரணிகளை அவர்கள் எவ்வாறு பயன்படுத்தினர்? அவ்வாறு அக் காரணிகளைப் பயன்படுத்துவதில் அவர்கள் வெற்றி கண்டார்களா? அவ்வாறு படைத்தவற்றைக் கொண்டு நாம் அறிவது யாது? அவர்களின் அத்தகைய படைப்புக்களைப் படைத்தவர்கள் எமக்கு விட்டுச் சென்றுள்ள சித்தாந்தம் யாது? கொள்கை யாது? விதிமுறை யாது? ஒழுக்கவழி யாது? அவை எம்மால் பின்பற்றக்கூடியனவாய் இன்றும் இருக்கின்றனவா? அவற்றை நாம் இன்று பின்பற்றுகிறோமா? அன்று அவர்கள் படைத்தவை இன்று எமக்கு பயன்தரக்கூடியனவாய் அமைந்துள்ளனவா? எம்மை வழி நடத்தத்தக்கனவாய் உள்ளனவா?

இவ்வினாக்களுக்குரிய விடைகளை நாம் கண்டு பிடித்தல் வேண்டும். இவ்விடைகள் நமக்குப் பயனுடையனவா என்று பார்த்தல் வேண்டும். இவற்றை அலசி ஆராய வேண்டும். இவை நமது இன்றைய பாரம்பரியங்களுக்கு இயைந்தனவாய் உள்ளனவா என்று நோக்குதல் வேண்டும். இன்றைய எமது சூழ்நிலைகளுக்கேற்ப இவை எம்மால் கடைப்பிடிக்கக் கூடிய அளவுக்கு நவீன மயமாய்க் காணப்படுகின்றனவா என்று அறிதல் வேண்டும். புதுக் கருத்துக் களுடன் ஒத்திருக்கின்றனவா என்று உணர்தல் வேண்டும்.

இத்தகைய நோக்கங்களை வைத்தே இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களை ஆராய முயல்வோம். அவ்வாறு ஆராயும்பொழுது அவ்வாராய்ச்சியை வரலாற்றுக் கண்ணோட்டத்தோடு பார்க்க முனைவோம். இன்ஷா அல்லாஹ்.

**முதல் இலக்கியக் குறிப்புகள் :**

இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பரப்பிலே தோன்றிய நூல்கள் பல. அவற்றுள் இன்று எமக்குக் கிடைக்கக் கூடியதான மிகப் பழமையான நூல் பல்சந்த மாலை என்னும் இலக்கியமாகும். இப்பல்சந்த மாலையில் இருந்தும்கூட ஒரு சில பாடல்களே இப்பொழுது எமக்கு கிடைத்து உள்ளன. பழங்காலத்தில் தோன்றிய அகப்பொருள் பற்றிய ஒரு நூலுக்கு எழுதப்பட்ட உரையிலே இப்பாடல்கள் உதாரணச் செய்யுட்களாகத் தரப்பட்டுள்ளன. அந்த அகப்பொருள் பற்றிய ஒரு நூல்கூட இன்னும் சரியாக அடையாளங்காணப்படவில்லை.

அகப்பொருள் துறைகளை இனிதின் விளக்குவது அந்த அகப் பொருள் பற்றிய நூல். அது பலவகையாலும் சிறப்புமிக்க ஒரு நூல். இறையனார் அகப்பொருளின் உரையில் மேற்கோளாகக் எடுத்தாளப் பட்டுள்ள உதாரணச் செய்யுட்க்ள் எந்த நூலிலிருந்து எடுக்கப்

பட்டவை என்பது முன்பு எவராலும் அறியப்படாமல் இருந்தது. அச் செய்யுட்கள் அனைத்தும் பாண்டிக்கோவை என்னும் ஒரு நூலிலிருந்து எடுக்கப்பட்டவை என்பதை முதன் முதலாக வெளியிட்டவர் மு. இராகவையங்கார் அவர்களேயாவர். இக்கூற்றினை இந்த அகப்பொருள் பற்றிய நூலின் உரை தெள்ளிதில் புலப்படுத்துகிறது. அந்த அகப்பொருள் பற்றிய நூலில் பல அரிய, இப்பொழுது கிடைக்கப் பெறாத, நூல்கள் பலவற்றிலிருந்து மேற்கோட் செய்யுட்கள் எடுத் தாளப்பட்டுள்ளன. பொருளிலக்கணங்கற்பவருக்கும் தமிழ் இலக்கிய வரலாற்றை ஆராய்பவர்களுக்கும் நாட்டின் வரலாற்றினை ஆராய்ச்சி செய்து வருபவர்களுக்கும் பல அரிய செய்திகளை அவ்வகப்பொருள் பற்றிய நூல் அதனிடத்தே கொண்டுள்ளது. அத்துடன் அமைந்து விடாது கவிதைச் சுவையை நுகர விரும்புவோருக்கும் ஓர் அரிய இனிய விருந்தாக இது காட்சி அளிக்கிறது.

அகப்பொருள் துறைகளைப் பற்றிய அவ்வரிய நூலின் ஒரே ஒரு கையெழுத்துப் பிரதி சென்னை அரசாங்கத் தொன்னூல் நிலையத்தி லிருந்தது. அக்கையெழுத்துப் பிரதியில் எழுதப்பெற்றிருந்த ஆங்கிலக் குறிப்பினால் அஃது ஆழ்வார் திருநகரி மலையப்ப பிள்ளைக் கவிராய ருக்குரிய ஏட்டுப்பிரதிகளுள் ஒன்றாக இருந்தது என்பதும் அவ் வேட்டுப் பிரதியினின்றும் நாதமுனிப் பிள்ளை என்பவர் 1920 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பன்னிரண்டாம் தேதியில் பிரதி செய்தார் என்பதும் அறியக்கிடக்கின்றது என்பர். அதனைப் பதிப்பித்து வெளி யிட்டவர் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள். அன்றி யும் வாசிப்போர் பயனடைய முடியாத வண்ணம் பிழைகள் பொதிந் தும் இதழ்கள் முறைபிறழ்ந்தும் இடையிடையே செய்யுட்களும் வாக்கியத் தொடர்களும் மறைந்தும் போய் இருந்தன. ஆயினும் மிகவும் பயன்பயக்கக்கூடிய நூலாக இது இருந்தமையினால் ஒருவாறு செப்பஞ் செய்து பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் இதனைப் பதிப்பித்துள்ளார். 1931ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டது அகப்பொருள் துறைப் பற்றிய அந்நூல்.

யாப்பருங்கலக்காரிகை யாப்புக்குரியனவற்றை எல்லாம் கலித் துறைச் செய்யுளால் விளக்குவது போன்று அவ்வகப்பொருள் துறை பற்றிய நூலும் அகப்பொருள் செய்திகளை அந்தாதித் தொடையில் அமைந்த கலித்துறைச் செய்யுட்களால் சுருங்க உரைக்கின்றது. மிகவும் சிறந்த உரையினை அந்நூல் கொண்டு உள்ளது. இறைய னார் களவியல் சூத்திரங்களை அடிப்படையாகக் கொண்டு பரந்துபட்ட அகப்பொருள் செய்திகளுக்கெல்லாம் அரிய மேற்கோள் காட்டி விரிந்து செல்கின்றது. தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்கள் தவிர்ந்த பிற நூல்களிலிருந்து மேற்கோள் தருமிடங்களில் அந்நூல்களின் பெயர்களையும் இவ்வுரை சுட்டி உணர்த்துகிறது.

அவ்வகப்பொருள் துறை பற்றிய நூலின் பெயர் புலப்படவில்லை என்று பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை குறிப்பிட்டுள்ளார். அரசாங்கத் தொன்னூல் நிலையத்துள்ள கையெழுத்துப் பிரதியில் 'இறையனா ரகப்பொருட்டுறை : சங்கச் செய்யுளாக உதாரணம் எழுதியது' எனக் காணப்பட்டுள்ளதாக பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை சுட்டிக்காட்டி உள்ளார். இக்குறிப்பு, நூல் இன்னதென உணர்தற்கு அதன்புறத்தே எழுதி வைக்கும் தலைக்குறிப்பாகவே கொள்ளவேண்டும் என்றும் அது நூல் பெயர் அன்று என்பது திண்ணம் என்றும் அவர் மேலும் குறிப்பிட்டுள்ளார். அவ்வகப்பொருள் பற்றிய நூலுக்கு இப்பொழுது இடப்பட்டுள்ள பெயரான **களவியற் காரிகை** என்பது தம்மாலே படைக்கப்பட்ட பெயர் என்று பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் கூறி உள்ளார்.

கிடைத்துள்ள இந்நூற்பகுதி, பாலைக்கருப்பொருளுணர்த்துங் கலித்துறைக்குரிய மூன்றாம் அடியின் மூன்றாம் சீரோடு தொடங்கு கிறது என்றும் ஆதலால் இச்செய்யுளுக்கு முன்பு ஏறத்தாழ பத்து கலித்துறைச் செய்யுட்களும் அவற்றிற்குரிய உரைகளும் மூலப்பிரதி யில் அமைந்திருக்கலாம் எனக் கொள்ளலாம் என்றும் குறிப்பிட் டுள்ளார் பேராசிரியர் அவர்கள்.

அகப்பொருள் துறைபற்றிய அந்த நூலான களவியற் காரிகை யிலே தான் பல்சந்தமாலைக்குரிய சில பாடல்கள் மேற்கோள் செய்யுட்களாகத் தரப்பட்டுள்ளன. களவியற் காரிகையில் இடம் பெற்றுப் பின்னர் மறைந்து போன சூத்திரச் செய்யுட்களுடனும் அவற்றின் உரையுடனும் இன்னும் பல பல்சந்தமாலைச் செய்யுட்கள் அழிந்து போயிருக்கலாம்.

மேற்கோள் நூல்களைப்பற்றிய குறிப்பு ஒன்றை களவியற் காரிகை என்னும் நூலின் இறுதியில் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் தந்துள்ளார். அக்குறிப்பில் பல்சந்தமாலையைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார். 'பல்சந்தமாலை என்ற பெயருடைய நூல் ஒரு சில செய்திகளைப் புலப்படுத்துகின்றது. பன்னிரு பாட்டியலில் பல்சந்தமாலை என்றொரு பிரபந்த வகை கூறப்பட் டுள்ளது. இந்நூல் அப்பிரபந்த வகையைச் சார்ந்ததாக இருத்தல் கூடும். ஆனால் இதன் கணின்று களவியற் காரிகை உரையில் காணப்படுவன எல்லாம் கலித்துறைச் செய்யுட்களே. இந்நூல் வச்சிர நாட்டு வகுதாபுரியில் அரசு புரிந்த அஞ்சுவண்ணத்தவர் மரபினனாகிய ஒரு முகமதிய (முஸ்லிம்) மன்னனைக் குறித்துப் பாடப்பெற்றதாகும். வகுதாபுரியை இக்காலத்தில் காயற்பட்டினம் என வழங்குவர். சையத் அப்துல் காதர் (சீதக்காதி) என்ற பிரபு இந்நகரிலேயே வாழ்ந்து வந்தவர். மன்மதன் வச்ரநாடன் வகுதைவாழ் சீதக்காதி என்ற

நொண்டி நாடகச் செய்யுளால் இது விளங்கும். வகுதாபுரிக்கு 'அந்துபார்' என ஒரு பெயரும் இருத்தல் வேண்டும் என்பது ஒரு செய்யுளால் புலப்படுகின்றது'—(களவியற் காரிகை பக். 168-69) வகுதை அல்லது வகுதாபுரி என்பது எந்தப் பட்டினத்தைக் குறிப்பிடு கின்றது என்பதைத் திட்டவட்டமாகக் கூறிவிடமுடியாது. இப்பொழுது பல பட்டினத்தவரும் அப்பெயர் தத்தம் பட்டினங்களையே சுட்டுவ தாக வாதாடிக்கொண்டிருக்கின்றனர். வரலாற்றுச் சான்றுகளோடு நிறுவவும் முற்பட்டுள்ளனர்.

தமது 'தமிழ் இலக்கிய வரலாறு—14-ஆம் நூற்றாண்டு' என்னும் நூலில் திருவாளர் மு. அருணாசலம் அவர்கள் பல்சந்தமாலையைப் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார். பல்சந்தமாலை எந்த பிரபந்த வகையைச் சார்ந்தது என ஆராய முற்பட்ட அவர் இவ்வாறு குறிப் பிட்டுள்ளார். ''பெயர் பல்சந்தமாலை என்று இருந்த போதிலும் கூட, கிடைக்கின்ற எட்டுப் பாடல்களையும் வைத்து நூலின் தன்மையை அறிய வழியில்லை. இதில் யாப்பு வேறுபாடுகள் உண்டா? அகப்பொருளைத் தவிர வேறு பொருள் அமைதிகள் உள்ளனவா? என்பது தெரியவில்லை. எட்டுப் பாடல்களும் கலித் துறையாய் இருக்கிறபடியாலும், அகப்பொருளையே கொண்டிருக்கிற படியாலும், கோவை போன்ற ஒரு நூலோ என்ற ஐயம் உண்டாகிறது. களவியற் காரிகை உரைகாரர் தம் மேற்கோள்களை எடுத்து ஆளும் போது, ஒரு வரன்முறையைக் கையாளுகிறார். எட்டு இடங்களிலும் முதலில் திருக்கோவையார், இரண்டாவது பாண்டிக்கோவை, மூன்றா வது பல்சந்தமாலை என்று அவர் அமைத்து இருப்பதால் இதுவும் கோவையாகலாம் என்ற எண்ணம் வலியுறுகிறது''. (தமிழிலக்கிய வரலாறு 14-ஆம் நூற்றாண்டு பக். 335).

இனி இப் பல்சந்தமாலையில் இடம் பெற்றுள்ளதாகக் களவியற் காரிகை உரையாளரால் மேற்கோள் காட்டப்பட்டுள்ள பாடல்களைப் பார்ப்போம்.

1. கலைமதி வாய்மைக் கலுபா வழிவருங் கற்பமைந்த
தலைமைய ரேழ் பெருந் தேரங்க மும்பெற் றநந்தசிர
மலையன மாமதில் வச்சிர நாடன்ன வாணுதறன்
முலையிணை தோய்ந்ததெல் லாங்கன வேயென்று
முன்னுவனே.

2. நாட்டம் புதைக்கின்ற தென்னீ மடந்தை நவகண்டமே
லீட்டம் புகழ்வின்னன் மேவா ரெனவிங்ஙன் யான்வருந்த
வாட்டம் பயின்றாங் ககிலின் குழம்பணிந் தாகமெங்கும்
வேட்டம் தெரிகின்ற கொங்கைக ளென்னை மிகை
செய்தவே.

3. நகுதா மரைமலர் சூழ்வாவி சூழ்வச்ர நாடர் தங்கள்
வகுதா புரியன்ன வாணுத லீர்மற் றவார் தழையு
மிகுநாண் மலர்களுங் கொண்மின்கள் கொள்ளாவிடின் மதுவந்
தொகுகாம னைங்கணை யாலெம தாவி துவக்குணுமே.

4. செம்முக மானதர் செங்குங் குமப்புயர் சீர்சிறந்த
மைம்மலி வாசப் பொழில்வாய் மதியன்ன வாணுதலீர்
மும்மத மாரி பொழியப் பொழிமுகில் போல் முழங்கிக்
கைம்மலை தான்வரக் கண்டதுண் டோநும் கடி புனத்தே.

5. இயவன ராசன் கலுபா தாமுத லெண்ணவந்தோர்
அயன்மிகு தானைய ரஞ்சுவன்னத்தவ ரஞ்சலென்னாக்
கயவர்கள் வாழ்பதி போலத் தினைப்புனங் காய்கொய்துபோம்
பயன்விளை வாம்படி பூத்தது வேங்கைப் பணிமொழியே.

6. பிறையார் நறுநுதற் பேதைதன் காரணத்தாற்பெரும
மறைநா ளிரவில் வருவது நீயொழி வச்சிரநாட்
டிறையா கியகலு பாமுத லானவர் யானைகணின்
றறைவாரும் விஞ்சத் தடவிகள் குழு மணிவரையே.

7. வானது நாணக் கொடையா லுலகை வளர்த்தருளும்
சோனகர் வாழுஞ் செழும்பொழில் சூழந்து பாரனையா
டானணி வாணுதல் கண்டும் பகலே தனித்தனியே
மானமி லாதிரை தேரும் பறவைக ளாமழக ழிந்தே.

8. வில்லார் நுதலியு நீயுமின் றேசென்று மேவுதிர்சூ
தெல்லா முணர்ந்தவ ரேழ்பெருந் தரங்கத் தியவனர்க
ளல்லா வெனவந்து சத்திய நந்தா வகை தொழுஞ்சீர்
நல்லார் பயிலும் பழனங்கள் சூழ்தரு நாட்டகமே.

**அகப் பொருள் விளக்கம் :**

இச்செய்யுட்களுக்குரிய அகப்பொருட்டுறைகளை நோக்குவோம். ஒவ்வொரு அகப்பொருட்டுறைக்கும் கீழால் ஒவ்வொரு பாடலும் வந்துள்ளது. அந்தந்தச் சூத்திரத்தில் வந்த அகப்பொருட்டுறைகளைச் சுருக்கமாக விளக்கி அவற்றின் கீழ் மேற்கோட்செய்யுட்கள் தரப் பட்டுள்ளன. திருவாளர் மு. அருணாசலம் அவர்கள் தமது இலக்கிய வரலாற்றிலே அப்பாக்களைக் குறிப்பிட்டு அவற்றிற்கு மேலாக அந்த அகப்பொருட்டுறைகளைக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் களவியற் காரிகை உரையாசிரியரால் சுட்டப்பட்டுள்ள அகப்பொருட்டுறைகளி லிருந்து திருவாளர் மு. அருணாசலம் அவர்கள் எடுத்துக்காட்டியுள்ள அகப்பொருட்டுறைகள் நான்கு செய்யுட்களைப் பொறுத்தவரையில்

வேறுபடுகின்றன. திருவாளர் மு. அருணாசலம் அவர்கள் முதலாம் செய்யுளுக்கு 'உயிரெனவியத்தல்' என்றும் இரண்டாம் செய்யுளுக்கு 'கண்புதைத்தாளுக்குத் தலைமகன் கூறுதல்' என்றும் மூன்றாம் செய்யுளுக்கு 'தழைகொண்டு இரந்துநிற்றல்' என்றும் ஐந்தாம் செய்யுளுக்கு 'தினைமுதிர் வுரைத்தல்' என்றும் அகப்பொருட்டுறைகளைக் குறிப்பிட்டுள்ளார். முதலாம் செய்யுளைத் தவிர்த்து ஏனைய மூன்று செய்யுட்களுக்கும் மேலாக தரப்பட்டுள்ளவை, அகப்பொருட்டுறைகளை உரையாசிரியர் விளக்கிய சொற்றொடர்களின் ஒரு பகுதியேயாம். ஆனால் முதலாம் செய்யுளுக்கு மேலாகத் தரப்பட்டுள்ள 'உயிரென வியத்தல்' என்பது (போன்று) பிறை அடைப்புக்கள் இருப்பவை பிழையான இடைச் செருகல் என்று களவியல் காரிகைப் பதிப்பாசிரியர் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் தமது முன்னுரையிலே குறிப்பிட்டுள்ளார். அத்துடன் அவர் நின்றுவிடவில்லை. களவியற் காரிகையின் கடைசிப் பக்கத்தில் தரப்பட்டுள்ள பிழைதிருத்த அட்டவணையில் 17ஆம் பக்கத்தில் 17ஆம் வரியில் உள்ள (உயிரென வியத்தல்) என்பது பிழையானது என்றும் அதனை 'நீக்குக' எனத் தடித்த எழுத்திலும் பேராசிரியர் குறிப்பிட்டுள்ளார். திருத்தப்படவேண்டிய பிழையை திருத்தாது அவ்வகப்பொருட்டுறையைச் சேர்த்துக்கொண்ட திருவாளர் மு. அருணாசலம் அவர்களின் நூலைப் பின்பற்றிப் பல்சந்தமாலைச் செய்யுட்களைப் பற்றிக் குறிப்பிட்டவர்கள் அனைவரும் இந்தப் பிழையைச் செய்துள்ளனர். மூல நூலான களவியற் காரிகையுடன் ஒப்பிட்டு நோக்கும்பொழுது இக்குறை தெற்றெனப் புலப்படும்.

இனிப் பல்சந்தமாலைச் செய்யுட்களுக்குரிய அகப்பொருட்டுறைகளையும் அவற்றைக் களவியற் காரிகை உரையாசிரியர் எவ்வாறு விளக்கி உள்ளனர் என்பதையும் பார்ப்போம். முதலில் களவியல் சூத்திரத்தையும் உரையாசிரியர் குறிப்பிடும் அகப்பொருட்டுறையையும் அதனை அவர் விளக்குமுறையையும் தந்து ஒவ்வொரு செய்யுளையும் மீண்டும் பார்ப்போம். களவியற் காரிகையின் 25வது சூத்திரம் இவ்வாறு அமைந்துள்ளது.

> இடையா நயப்புப் பிரிவை யுணர்த்த விடமணித்.........
> ..................டைமாற வெய்தற் கருமையுயிரே யெனவியத்தல்
> படையார் விழிப்பாங்கியை யுணர்த்தல் பாங்கனை நினைதல்
> அடையான வேழுவகையே புணர்ச்சி யென்றாக்கினரே.

இச்சூத்திரத்தில் வரும் 'எய்துதற்கருமை' என்னும் அகப்பொருட்டுறைக்கு மேற்கோளாக திருக்கோவைச் செய்யுளையும் (17) பாண்டிக் கோவைச் செய்யுளையும் தந்து பல்சந்தமாலைச் செய்யுளை மூன்றாவதாகக் குறிப்பிடுகிறார். 'எய்துதற்கருமை' யென்பது

புணர்ந்து நீங்கிய தலைவியைத் தலைமகன் ஆயவெள்ளத்துட் கண்ட தலைமகளை அரியள் என்பதுபடச் சொல்லுதல். என்னை ?

கொய்தழை யல்குல் கூட்டம் வேண்டி
யெய்துதற் கருமையி னிறப்பப் புகழ்ந்தது
(வெண்பா மாலை - 11, 7)

என்றாராகலின். அதற்குச் செய்யுள் வருமாறு : என உரையாசிரியர் குறிப்பிட்டுவிட்டு செய்யுளை மேற்கோளாகத் தருகிறார்.

இவ்வகப்பொருட்டுறைக்கு மாணிக்கவாசகரின் திருக்கோவையிலிருந்து 17வது திருப்பாடலை மேற்கோளாகக் காட்டுகிறார். திருக்கோவையாருக்கு உரை வகுத்த பேராசிரியர் அத்திருக்கோவைத் திருப்பாடலுக்குரிய அகப்பொருட்டுறையாக 'அருமையறிதல்' என்பதைக் குறிப்பிடுகிறார். களவியல் உரைகாரர் குறிப்பிட்ட 'எய்துதற்கருமை' என்னும் அகப்பொருட்டுறையும் பேராசிரியர் குறிப்பிட்ட அகப்பொருட்டுறையும் கருத்தொருமித்தன என்றே கொள்ளுதல் வேண்டும்.

தலைவன் மறைந்து நிற்கின்றான். அப்பொழுது தலைவி தன் தோழியர் குழாத்துள் புகுகின்றாள். மறைந்து நின்ற தலைவன் அதனைக் காண்கின்றான். அத்தருணத்தில் தோழியர் தலைவிக்கு இயற்றும் வழிபாடு முதலியவற்றைக் காண்கின்றான். கண்டு தலைவியின் சிறப்பெல்லாம் உணருகின்றான். அத்தகைய சிறப்பான ஒரு தலைவியை யாம் எய்தியது மிகவும் அருமையானதொன்றேயாகும் என்று கூறுகிறான். அவ்வாறு அவளை எய்தியது கனவோ நனவோ என ஐயுறுகிறான். மீண்டும் அவளை நாம் பெறுதல் கூடுமோ கூடாதோ என்றும் கவலை கொள்கிறான்.

இனி இவ்வகப்பொருட்டுறைக்குரிய பல்சந்தமாலைச் செய்யுளை எடுத்துக்கொள்வோம்.

கலைமதி வாய்மைக் கலுபா வழிவருங் கற்பமைந்த
தலைமைய ரேழ்பெருந் தேரங்கமும்பெற் றநந்தசிர
மலையன மாமதில் வச்சிர நாடன்ன வாணுதறன்
முலையிணை தோய்ந்ததெல் லாங்கன வேயென்று
முன்னுவனே.

கலைகளிலும் புத்தி நுட்பத்திலும் உண்மை பேசுவதிலும் சிறந்து விளங்கிய கலுபா வழி வந்த கற்பமைந்த தலைமையர் தேர்ந்தெடுக்கப்பட்ட ஏழு பெரும் உறுப்புக்களைக் கொண்டதும் பல சிகரங்களை உடைய மலை போன்றதுமான பெரிய மதிலால் சூழப்பட்ட

வச்சிரநாட்டு வளைந்த ஒளிவீசும் நெற்றியை உடையவளின் மார்பினைத் தோய்த்து யான் மகிழ்ந்ததெல்லாம் கனவாகவே போயிற்றே என்று வருந்துகிறேன்.

களவியற் காரிகையில் இடம் பெற்றுள்ள பாங்கற் கூட்டம் பதினெட்டு வகைப்பட்ட கிளவிகளைக் கொண்டுள்ளது. களவியற் காரிகையில் கூறப்படும் பாங்கர் கூட்டத்துக்குரிய துறைகள் பதினெட்டும் மூன்று சூத்திரங்களில் இடம்பெற்றுள்ளன. மூன்றாவது சூத்திரமான 28ஆம் சூத்திரத்தில் 'அற்றான்குளத்தில்' முதலிய துறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அச்சூத்திரம் பின்வருமாறு :

தேறும்பொழி றனைக்கண்டு வியத்தல் திருவேயெனல்
மாறும் படியன்றி யாற்றான் கிளத்தல் மருங்கணைதல்
ஊறும் புணர்ச்சி மகிழ்தலி ருத்தலென் றொண் புலவோன்
கூறுங் கிளவிக ளீரொன்பது பாங்கன் கூட்டமே.

திருக்கோவையாரில் உள்ள பாங்கன் கூட்டம் பற்றிய செய்யுளில் முப்பது துறைகள் குறிப்பிடப்படுகின்றன. இங்கும் முன்னின்ற பதினெட்டுத் துறைகளை ஒரு வகையாகவும் ஏனையவற்றை மற்றொரு வகையாகவும் பிரிப்பர். முதல் பதினெட்டும் தலைவன் பாங்கற் கூட்டத்துக்கே உரியன என்றும் எஞ்சிய பன்னிரண்டும் பாங்கற் கூட்டம் பாங்கியற் கூட்டம் என இடந்தலைப்பாடு இரண்டிற்கும் உரியன என்றும் கூறுவர்.

பல்சந்த மாலையிலிருந்து மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ள அடுத்த பாடலில் அகப்பொருட்டுறை 'ஆற்றான் கிளத்தல்' என்பதாகும். இதனை களவியற் காரிகை உரைகாரர் 'இவ்வகை சொல்லக்கேட்டு நாணினாற் கண்புதைத்தாளுக்குத் தலைமகன் கூறுதல்' என்று விளக்குகிறார். இதனைத் திருக்கோவையார் 'கண்புதைக்க வருந்துதல்' எனக் குறிப்பிடுகிறார். திருக்கோவையாரில் 43-வது திருப்பாடல் இதற்கு மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.

தலைவி வெட்கப்படுகிறுள். அவ்வெட்கம் காரணமாகக் கண்களை புதைத்துக் கொள்கிறாள் தலைவி. அவள் தன்முன் வராது கண்புதைத்து ஒதுங்கினமையை தலைவனால் பொறுக்க முடியவில்லை. அவன் ஆற்றாது வருந்தினான். அவ்வாறு வருந்திய தலைவன் தன் வருத்தம் தோன்றத் தலைவியை நோக்கிக் கூறுகிறான்.

இனி 'ஆற்றான் கிளத்தல்' என்பதற்கு மேற்கோளாக அமைந்துள்ள பல்சந்தமாலையிலிருந்து எடுக்கப்பட்டுள்ள இரண்டாம் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

நாட்டம் புதைக்கின்ற தென்னீ மடந்தை நவகண்டமே
லீட்டம் புகழ்வின்னன் மேவா ரெனவிங்ஙன் யான் வருந்த
வாட்டம் பயின்றாங் ககிலின் குழம்பணிந்தாக மெங்கும்
வேட்டம் தெரிகின்ற கொங்கை ளென்னை மிகைசெய்தவே

நீ ஏன் நாணிக் கண்புதைக்கின்றாய்? மடந்தையே! ஒன்பது கண்டங்களுக்கு அப்பாலும் சென்று புகழ் ஈட்டும் வின்னன் தன் பகைவர் என யான்வருந்த, என்னை மிக வருத்தி, அங்கு அகிலின் குழம்பு அணிந்து, ஆகம் முழுவதும் வேட்கை மீதூர்ந்து விளங்குகின்ற கொங்கைகள் என்னை மிகவும் வருத்தின.

பல்சந்தமாலையின் அடுத்த செய்யுள் மேற்கோளாகக் காட்டப் பட்டுள்ள களவியற் காரிகைச் சூத்திரம் இவ்வாறு அமைந்துள்ளது.

இயற்றுஞ் செழுந்தழை யுங்கண்ணி
 யுங்கொண் டிருளையிடத்
துயர்பின் செலவைக் குறையுற
 லென்று நல் லஞ்சனந்தோய்
கயற்கண்களால் மதன் சக்கரங்
 காக்குங் கதிர்முகத்தாய்
நயத்தண்டமிழ்ப் பொருட்பாலோர்
 நயத்தால் இயம்பினரே. (29)

இச்சூத்திரத்தில் ஒரு கிளவி மாத்திரமே கூறப்படுகிறது. இது 'இரந்து குறையுற்றவிடத்துக் குறையுறுதல்' என்னும் கிளவியாகும். குறையுறுதல் என்பது இடந்தலைப்பட்ட தலைமகன் தழையும் அணியும் கொண்டு தோழி பின்னலை முனியாது இரந்து நிற்றல் என்னை ?

அந்தழை யல்கு லணிநலம் புணரா
வெந்துயர் பெருக வெளிப்பட விரந்தன்று
—வெண்பாமாலை - 11, 9

என்றாராகலின். இவ்வாறு இவ்வகப் பொருட்டுறையைக் களவியற் காரிகை உரைகாரர் விளக்கியுள்ளார். திருக்கோவையாரின் 90-வது செய்யுள் இதற்கு மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. திருக்கோவை யாரில் இவ்வகப்பொருட்டுறை 'தழைகொண்டு சேரல்' எனக் குறிப் பிடப்பட்டுள்ளது.

முன்பு தலைவன் தலைவியைப் பெறாவிடின் மடலேறுவதாக அச்சுறுத்தினான். இப்பொழுது தலைவி மாறிவிட்டாள். என்மீது அருள் மிக உடையவள்; ஆதலினால் தலைவியிடம் நின் குறை கூறி

அதனை முடித்துத் தருகின்றேன். நீ மடலேறுவேண்டா. இவ்வாறு தலைவனை ஆற்றுவித்தாள் தோழி. தோழியின் இச்சொல்லையே ஆதாரமாகக்கொண்டு தலைவன் மீண்டும் தலைவிக்கு மாலையையும் தழையையும் கையுறையாகக் கொண்டு தோழி மூலம் குறை நயப்பித்தாள்.

இதற்கான பல்சந்தமாலைச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

நகுதா மரைமலர் சூழ்வாவி சூழ்வச்ர நாடர்தங்கள்
வகுதா புரியன்ன வாணுத லீர்மற்ற வார்தழையு
மிகுநாண் மலர்களுங் கொண்மின்கள், கொள்ளாவிடின் மதுவந்
தொகுகா மனைங்கணை யாலெம தாவி துவக்குணுமே.

தேன்பிலிற்றி மலர்கின்ற தாமரை சூழ் வாவிகள் நிறைந்த வச்சிர நாட்டவரின் வகுதாபுரிபோன்ற ஒளிவீசும் நெற்றி உடையீர்! யான் தரும் நீண்ட தழைகளையும் அன்றலர்ந்த மலர்களையும் கொள்வீர்களாக! கொள்ளாவிட்டால் மது நிறைந்த காமனது ஐந்து பூக்களைக் கொண்ட ஐங்கணைகளால் எமது ஆவி கட்டுண்ணும், துன்புறும்.

அடுத்த பல்சந்தமாலைச் செய்யுள் மதியுடம்படுத்தல் பிரிவைச் சார்ந்தது. அதற்கான சூத்திரம் களவியற் காரிகையில் இவ்வாறு அமைந்துள்ளது.

நயந்து குறையுற் றவன்வாழ் பதிவினா யாணர்மிக்க
கயந்தங்கு வேழம் வினாத லினமான் தளைவினாதல்
முயன்றன பருமவ ழிவினாவாய் மொழிக்கிரங்கல்
வயந்தந்த வஞ்சு மதியுடம் பாடென வைத்தனரே (20)

இதற்கு உரைவகுத்த உரைகாரர்,

'என்னெனின், மதியுடம்படுத்தல் ஐந்து வகைப்பட்ட கிளவியாமென்பதறிவித்தலைக் கருதிற்று என்னை? பதிவினாதலும், வேழம் வினாதலும், தலைவினாதலும், வழிவினாதலும், வாய்மொழிக் கிரங்கலுமென,' எனக்கூறி உள்ளார். பின்னர் ஒவ்வொன்றையும் விளக்கி மேற்கோட் செய்யுள் தருகிறார் 'வேழம் வினாதல் என்பது தலைமகளும் தோழியுமோரிடத்திருப்பச் சென்று தன் குறையறிவிப்பால் சில வேழம் போந்தனவோ வென்று சொல்லுதல்' எனக் குறிப்பிட்டுள்ளார். திருக்கோவையாரில் உள்ள 53-வது செய்யுள் இதற்குரிய முதற்செய்யுளாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருக்கோவையாரில் உள்ள மதியுடம்படுத்தற் செய்யுளில் பத்துத் துறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. வேழம் வினாதல் அவற்றுள் ஒன்று. தலைவன் விற்பிடித்துக்கொண்டு அம்பு ஒரு கைக்கொண்டு வந்தான். வேட்டையாட வந்தான். அப்போது தலைவியும் தோழியும் ஓரிடத்தில் இருப்பதைக் கண்டான். அவர்களுடன் பேசுவதற்கு ஒரு

காரணத்தை வருவித்துக் கொண்டான். தோழியைத் தலைவன் அணுகி இந்த வழியில் ஒரு யானை வந்ததுண்டோ என்று வினாவி னான். அவன் வினவுவது யானையை அன்று வேறு ஒன்றென்பதை தோழி உணரட்டும் என்பதற்காகவே அவன் அவ்வாறு கேட்டான். இவ்வாறு கேட்பதனையே வேழம் வினாதல் என்று கூறுவர். களவியற் காரிகையில் வேழம் வினாதலுக்கு மேற்கோளாகப் பல்சந்தமாலைச் செய்யுள் இவ்வாறு, அமைந்துள்ளது.

செம்முக மானதர் செங்குங்கு மப்புயர் சீர்சிறந்த
மைம்மலி வாசப் பொழில்வாய் மதியன்ன வாணுதலீர்
மும்மத மாரிபொழியப் பொழிமுகில் போல் முழங்கிக்
கைம்மலை தான்வரக் கண்டதுண் டோநும் கடிபுனத்தே

சிவந்த முகமும் பகைவரது மானத்தை அழிக்கும் வல்லமையும் உடைய அரசர் போன்றவரான செம்மையான குங்குமந் தோய்ந்த புயங்களை உடைய சிறப்பு மிக்கவர், மரங்கள் அடர்த்தியாக இல்லாத திறந்த, எல்லா திக்குகளிலும் மணங்கமழ்ந்து கொண்டிருக்கும் பூஞ்சோலை யில் இளம்பிறை போன்ற வளைந்த ஒளிபொருந்திய நெற்றியை உடையீர்! மூன்று மதத்தைப் மழைபோன்று பொழிந்து கொண்டும் மழைபொழிகின்ற முகில் இடி இடிப்பது போல் முழங்கிக்கொண்டும் தும்பிக்கையை உடைய மலைபோன்ற யானை ஒன்று இவ்வழியாக கிளிகடியும் நும் தினைப்புனத்தேவரக் கண்டதுண்டோ? (எனக் கேட்டார்)

பல்சந்தமாலையிலிருந்து மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ள அடுத்த செய்யுள் 'கணியென உரைத்தல்' என்னும் அகப்பொருட் டுறைக்குரியது. களவியற் காரிகை உரைகாரர் 31-லிருந்து 42 வரை உள்ள சூத்திரங்களைத் தொடுத்து உரை கூறுகிறார். ஆனால் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்களின் களவியல்காரிகைப் பதிப்பில் 31, 32, 34 ஆம் சூத்திரங்கள் முழுமையாகவும் 33, 35 ஆம் சூத்திரங்கள் அரைகுறையாகவும் காணப்படுகின்றன. எஞ்சிய ஏழு சூத்திரங்களும் கிடைக்கப் பெறாமையினால் அங்கு இடம் பெற வில்லை. ஆனால் உரைகாரர் அச்சூத்திரங்களில் இடம் பெற்ற அகப் பொருட்டுறைகள் அனைத்தையும் குறிப்பிட்டுள்ளார். 'தோழி அயிர்த் துரைத்தல்' முதல் 'செலவழுங்குளித்தல்' வரை உள்ள எண்பத்திரண்டு அகப்பொருட்டுறைகளைக் குறிப்பிட்டுள்ளார். அவற்றுள் ஒன்று 'கணியெனவுரைத்தல்', 'கணியென உரைத்தலென்பது வேங்கை பூத்துப் பருவமாகத் தினை கொய்யக் கண்ட தோழி தலைமகட்குச் சொல்லியது' என்பர் உரைகாரர்.

திருக்கோவையாரில் உள்ள 138 ஆம் திருப்பாடல் இதற்கான முதல் மேற்கோள் செய்யுளாக அமைந்துள்ளது. திருக்கோவையாரிலே

இதற்குரிய அகப்பொருட்டுறை 'தினைமுதிர்வு வுரைத்தது வரைவு கடாயது' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

தலைவன் மீண்டும் களவின்பத்தையே விரும்பினான். புனத்தியலே ஓரிடத்திலே வந்து நின்றான். அவன் கேட்கும் பொருட்டுத் தோழி தலைவிக்கு ஒரு செய்தி சொன்னாள். தினைக்கதிர் முதிர்ந்து விட்டது. சுற்றத்தவர்கள் எல்லாரும் வந்து தினை அரிவார்கள். ஆதலினால் நாம் இங்கே வந்து விளையாட முடியாது. அதனைத் தாயாரும் அனுமதிக்கமாட்டார். எனவே இக்கூற்று வரைய கடாயதாக அமைந்துள்ளது. வேங்கை மரம் பூத்துவிட்டால் அது தினைக்கதிர் முதிர்வடைந்து விட்டது. ஆதலினால் தினைக்கதிர் அரியப்பட வேண்டிய காலம் அது என்பதை உணர்த்திற்று. திருமண காலம் அண்மிவிட்டது என்பதையும் அது சுட்டும்.

இனி, கணியென உரைத்தல் என்றும் அகப்பொருட்டுறைக்கு மேற்கோளாக அமைந்துள்ள பல்சந்தமாலைச் செய்யுள் இதோ.

> இயவன ராசன் கலுபா தாமுத லெண்ணவந் தோர்
> அயன்மிகு தானைய ரஞ்சுவன்னத்த ரஞ்சலென்னாக்
> கயவர்கள் வாழ்பதி போலத் தினைப்புனங் காய்கொய்துபோம்
> பயன்விளை வாம்படி பூத்தது வேங்கை பணிமொழியே

இயவன அரசனாகிய கலுபாவை முதலாகக் கொண்டு வந்தவர்கள் பூமியிலே மிகுந்த சேனையை உடையவர்கள். அஞ்சுவண்ணத்தவர் என அழைக்கப்பட்டவர்கள். தோல்வி என்னாத கயவர்கள் வாழ்கின்ற நகர் போலத் தினைப்புனத்தில் முற்றிய கதிர்களைக் கொள்ளை கொண்டு போகின்றன, பறவைகள். எனவே கூடிய விரைவில் அறுவடை செய்து விளைவுப்பயனைக் கொண்டு போகுமாறு வேங்கை மரம் பூத்தது. பணிமொழியே. (வேங்கை பூக்கும் காலமும் கதிர் கொய்யும் காலமும் திருமணம் நிகழ்த்தும் காலமும் ஆகும்). களவியற் காரிகையில் இடம்பெறாத சூத்திரங்களிலிருந்து எடுக்கப்பட்ட மற்றும் ஓர் அகப்பொருட்டுறைக்குப் பல்சந்தமாலையிலிருந்து மற்றொரு பாடல் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. அவ்வகப் பொருட்டுறை சூத்திரங்களின் விளக்கவுரையில் 'அச்சக்கிளவி' என்றும் பாடல்களை மேற்கோள் காட்டப்படும் தலைப்பு 'ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி' என்றும் உரைகாரர் காட்டியுள்ளமையைக் காணலாம். 'ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி' என்பது தலைமகன் வரும் வழியிலுள்ள அச்சத்தைச் சொல்லி 'வரவை விலக்குதல்' என்றும் அதனை விளக்கி உள்ளமையைக் காணலாம்.

திருக்கோவையாரிலிருந்து இவ்வகப்பொருட்டுறைக்கு 176-வது திருப்பாடல் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. திருக்கோவை

யாரிலும் இவ்வகப்பொருட்டுறை 'ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

தலைவன் களவின்பமே விரும்பினான். இரவிலே வந்தான். இரவில் வந்த தலைவனத் தோழி எதிர் சென்று சந்தித்தாள். 'நீ இரவில் இந்தக் கொடுமையான வழியில் வராதே. அபாயம் மிக்கது இப்பகுதி. உனக்கு அபாயம் ஏற்படலாம். நீ இவ்வாறு வருதலை எண்ணி நாம் அஞ்சுகிறோம். பெரிதும் அஞ்சி வருந்துகிறோம். ஆதலினால் நீ இரவில் வராதே' என்று தோழி தலைவனுடைய வரவை விலக்கினாள். இந்த அகப்பொருட்டுறைக்கான பல்சந்த மாலைச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

பிறையார் நறுநுதற் பேதைதன் காரணத் தாற்பெரும
மறைநா ளிரவில் வருவது நீயொழி வச்சிரநாட்
டிறையா கியகலு பாமுத லானவர் யானைகணின்
றறைவாரும் விஞ்சத் தடவிகள் சூழு மணிவரையே

பெரும! பிறைபோலும் நறுநுதலை உடைய பேதைபொருட்டு, மதிமறையும் அமாவாசை இருளில் வருவதை நீ தவிர்த்துக் கொள்வா யாக. வச்சிரநாட்டு அரசராகிய கலுபா முதலானோரின் மணி வரைகள், யானைகள் நின்று அவற்றை அடக்குவாரும் உள்ள விந்திய மலைக்காடுகள் போன்று காடுகள் சூழ்ந்திருக்கும்.

விளம்பு மியல்பைப் பழித்த லியற்பட வேவிளம்ப
லுளங்கொள் தணப்பிடர் தன்னையொழித்த லெனவுரைக்கும்
வளங்கொள் கிளவிகள் மூன்றும் வரைபொருட் கேகலெனக்
குளங்கொண்ட நன்மொழிக் கோம்பே தமிழினுட் கோப்புற்றதே.

என்பது களவியற் காரிகையில் உள்ள 50-வது சூத்திரம். இச்சூத்திரத் திற்கு உரைவகுத்த உரைகாரர்; 'இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், வரைபொருட்ககறல் மூன்று வகைப்பட்ட கிளவியாமென் பதறிவித்தலைக் கருதிற்று. என்னை, இயற்பழித்தல், இயற்படமொழி தல், தணப்பிடரொழித்தலென. அவற்றுள் இயற்பழித்தலென்பது இவ்வகை வெளிப்பட்ட பின்றையும் வரையாது நெட்டிடைகழிந்து பொருள் வயிற் பிரிந்த விடத்து ஆற்றாளாய் தலைமகளைக் கண்ட தோழி சொல்லுதல். அதற்குச் செய்யுள்கள் மூன்று மேற்கோளாகத் தரப்பட்டுள்ளன.

திருக்கோவையாரின் 189வது திருப்பாடல் முதலாவது மேற்கோட் செய்யுளாகத் தரப்பட்டுள்ளது. ஆனல் இந்தத்திருப்பாடலின் அகப் பொருட்டுறை திருக்கோவையாரில் 'பறவையொடு வருந்தல்' எனத் தரப்பட்டுள்ளது. தலைவி வருந்தினாள். ஆனால் தலைவியின் வருத்தத்தைச் சிறிதும் பொருட்படுத்தாது பறவைகள் இரை தேடின. அப்பறவைகள் வாளா இருந்து விட்டன. அப்பறவைகள் இரவில்

இரை தேடுவன. ஆனால் அவை பகலில் இரை தேடிக்கொண்டிருந் தன. அதனால் தனது வருத்தத்தைப் பறவைகளை விளித்துத் தலைவி கூறினாள் என்கிறது திருக்கோவையார் விளக்கம். ஆனால் 'ஆற்றாளாய தலைமகளைக் கண்ட தோழி சொல்லுதல்' என களவியற் காரிகை உரைகாரர் கூறி உள்ளார். பல்சந்தமாலைச் செய்யுளும் தலைமகள் பறவைகளை விளித்துச் சொல்வதாகவே அமைந்துள்ளது. இதுதான் அந்தப் பல்சந்தமாலைச் செய்யுள்.

வானது நாணக் கொடையா லுலகை வளர்த்தருளும்
சோனகர் வாழுஞ் செழும்பொழில் சூழந்து பாரனையா
டானணி வாணுதல் கண்டும் பகலே தனித்தனியே
மானமி லாதிரை தேடும் பறவைக டாமழிந்தே.

மேகமே நாணுமாறு கொடையால் உலகை வளர்த்து அருள் பாலிக்கும் சோனகர் வாழ்கின்ற செழும்பொழில் சூழ்ந்த அந்துபார் போன்ற பெண்ணின் சோம்பி இருக்கின்ற அழகிய ஒளிபொருந்திய நெற்றியைக் கண்டதும் அது பிறை போன்று இருத்தலின் பகலிலேயே இரவு வந்த தாக ஐயுற்றுப் பறவைகள் மானமின்றி—அனுதாபம் காட்டாமல்—வருந்தி விரைந்து இரை தேடுகின்றனவாயின.

பல்சந்தமாலையிலிருந்து கடைசியாக மேற்கோள் காட்டப் பட்டுள்ள செய்யுள் 'பதியளவுரைத்தல்' என்னும் அகப்பொருட்டுறைச் செய்யுளாக அமைந்துள்ளது. இவ்வகப்பொருட்டுறை களவியற் காரிகையின் 51-வது சூத்திரத்தில் இடம்பெற்றுள்ளது.

உற்ற நெறிகை யடைசுரத் துய்த்தல் சுரத்துழையோர்
பற்றி விருந்து விலக்கல் பதியின ளவுரைத்தல்
சிற்றிடைத் தோழிதன் னைவினா விச்செவி லியிரங்க
னற்றரு வேயனை யாண்மென்மை கூறனற்
றாய்க்குரைப்பே.

இங்கு இடம் பெற்றுள்ள 'பதியளவுரைத்தலென்பது இவ்வகைச் சொல்லிலிருந்து விலக்கிய இடைச்சுரத்தார் தலைமகனூரளவு சொல்லு தல்' என்பார் உரைகாரர்.

இவ்வகப்பொருட்டுறைக்குத் திருக்கோவையாரிலிருந்து 221 வது திருப்பாடல் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. ஆனால் திருக் கோவையாரில் இவ்வகப்பொருட்டுறை 'நகரணிமை கூறல்' என அமைந்துள்ளது.

தலைவனும் தலைவியும் சென்றனர். மக்கள் வழக்கற்ற அந்தப் பாலை வழியாகச் சென்றனர். அப்பாலையிலே ஒரு மரம் இருந்தது. அந்த மரநிழலில் அவர்கள் இருவரும் அமர்ந்திருந்தனர். இனிது விளையாடிக் கொண்டிருந்தனர். பின்னர் எழுந்து செல்லத் தலைப்

பட்டனர். அவ்வாறு செல்லும்பொழுது அவர்கள் இருவரையும் கண்ட அவ்வழிப்போக்கர் தலைவனிடம் தலைவனின் நகரம் 'எதிரே தோற்றுகின்ற குன்றைக் கடந்தால் தோன்றும்' என்றும் 'மிக அணித்து' என்றும் கூறி அனுப்பினர்.

'பதியளவுரைத்தல்' என்னும் இவ்வகப்பொருட்டுறைக்குரிய பல்சந்தமாலைச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

வில்லார் நுதலியு நீயுமின் றேசென்று மேவுதிர்கூ
தெல்லா முணர்ந்தவ ரேழ்பெருந் தரங்கத் தியவனர்க
ளல்லா வெனவந்து சத்திய நந்தாவகை தொழுஞ்சீர்
நல்லார் பயிலும் பழனங்கள் சூழ்தரு நாட்டகமே.

சாமர்த்தியம் மிக்கவர், ஏழு பெருங்கடல்களைக் கடந்து சென்று வணிகத்தில் ஈடுபடுகின்ற யவனர்கள் அல்லாஹ் என்பது உச்சரிக்கக் கேட்டு வந்து தாம் அளித்த வாக்குறுதி மாறாதவகையில் தொழும் சீருடைய சிறந்த நல்லவர்கள் பயிலுகின்ற பழனங்கள் சூழ்ந்த நாடு அண்மையிலுள்ளது. எனவே வில் போன்ற நெற்றியை உடையவளும் நீயும் இப்போதே சென்று அப்பதியை அடைவீராக.

**பல்சந்தமாலை பற்றிய கருத்துக்கள் :**

பல்சந்தமாலையில் பல பாடல்கள் இருந்திருக்க வேண்டும். திருவாளர் மு. அருணாசலம் அவர்கள் கூறுவது போல் அது ஒரு கோவை நூலாக இருந்திருந்தால் பல செய்யுட்கள் அதில் இடம் பெற்றிருத்தல் வேண்டும். அவற்றுள் பல களவியற் காரிகையிலே இடம் பெற்றிருத்தல் வேண்டும். களவியற் காரிகைச் சூத்திரங்களும் அவற்றிற்கான உரையும் அழிந்து போயின போன்று பல்சந்தமாலையிலிருந்து மேற்கோளாகக் காட்டப்பட்ட பல செய்யுட்களும் அழிந்து போயிருக்கலாம்.

ஓர் இனத்தின் சமய, பண்பாட்டுக் கருத்துக்களைக் கருவாக அமைத்துப் பாடப்படும் இலக்கியங்கள் அவ்வினத்துக்குரிய இலக்கியங்களாகக் கருதப்படுகின்றன. இவ்வாறே இஸ்லாமிய இலக்கியமும் அமைந்துவிடுகின்றன. அத்தகைய இலக்கியங்கள் தமிழ் மொழியில் தோன்றி உள்ளமையால் அவற்றை இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் என அழைக்கிறோம். இஸ்லாமிய சமய, பண்பாட்டுக் கொள்கைகளை நன்கு புரிந்து கொண்டவர்களால் படைக்கப்பட்ட அத்தகைய இலக்கியங்களே சிறந்தவையாகக் கணிக்கப்படுகின்றன. இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களாகக் கருதப்படும் மிகப்பெரும்பான்மையானவை முஸ்லிம் புலவர்களாலே இயற்றப்பட்டுள்ளன. இஸ்லாமிய அடிப்படையிலே படைக்கப்பட்டுள்ளன.

இத்தகைய சூழ்நிலையில் தோன்றியது தான் பல்சந்தமாலை. மொத்தமாக எத்தனை பாடல்கள் இந்நூலில் இருந்தன என்பதை நாம் அறியோம். அவை முழுமையாக எமக்குக் கிடைக்கவில்லை. அதன் ஆசிரியர் யாவர் என்பதைக் கூட இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள பல்சந்தமாலைப் பாடல்களிலிருந்து அறிந்துகொள்ள முடியாத நிலையில் இருக்கிறோம்.

இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள பாடல்களிலிருந்து பல்சந்தமாலையின் பாட்டுடைத் தலைவர் யாவர் என்பதை அறிவோம். அவர் எந்த இனத்தை சார்ந்தவர் என்பதை அறிவோம். எங்கிருந்து அரசு புரிந்தார் என்பதும் புலனாகின்றது. எந்த நாட்டில் வாழ்ந்தார் என்பதும் தெரிகிறது. அவரைச் சார்ந்தவர்கள் என்னதொழிலில் ஈடுபட்டார்கள் என்பதும் புலப்படுகின்றது. அத்தகையோரை அழைக்க எவ்வெப்பெயர்கள் பயன்படுத்தப்பட்டன என்பதும் தெளிவாகிறது. அத்தகையோருடைய சிறந்த பண்புகளைப் பற்றியும் அறிய முடிகிறது. அவர்களுடைய வள்ளன்மை போற்றப்படுவதையும் காண்கிறோம். அவர்கள் இஸ்லாம் மதத்தைப் பின்பற்றியவர்களாக வாழ்ந்து வந்தார்கள் என்பது பற்றியும் பல்சந்தமாலையில் சான்றுகள் உள்ளன.

இத்தகைய விவரங்கள் அனைத்தையும் தரக்கூடிய ஒருநூல் அகப்பொருளைப் பேசுவதாகத் தோன்றி உள்ளது. பொதுவாக அகப்பொருளைப் பற்றி நூல்கள் தோன்றுவதற்கு முன்னர் ஏனைய பொருள்களில் நூல்கள் தோன்றி இருக்கவேண்டும். அல்லது அதே காலத்தில் தோன்றி இருக்கவேண்டும். அல்லது அதனை முன்மாதிரியாக வைத்துப் பிற பொருள்களில் நூல்கள் தோன்றி இருக்க வேண்டும். அத்தகைய நூல்கள் இஸ்லாமிய அறங்களைப் பற்றிப் பேசி இருக்கலாம். ஒழுக்கங்களைப் பாடி இருக்கலாம். வாழ்க்கை வரலாறுகளைக் காவியங்களாக இயற்றி இருக்கலாம். போதனைகளை அமைத்து இலக்கியங்கள் யாத்திருக்கலாம். சாதனைகளை வைத்து இலக்கியக் கோபுரங்கள் கட்டி எழுப்பி இருக்கலாம். இன்னோரன்ன பல நூல்கள் தோன்றி இருக்கலாம். பல்சந்தமாலைக்குச் சற்று முன்னரோ, பல்சந்தமாலையின் சமகாலத்திலோ அதற்குச் சற்றுப் பின்னரோ இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் நூல்கள் எதுவும் எமக்குக் கிடைக்கவில்லை. அத்தகைய நூல்கள் தோன்றி கவனிப்பாரற்று மறைந்து போயிருக்கலாம். உரிய முறையில் பேணிப் போற்றப்படாது கையேடுகளாகவே முடங்கிக் கிடக்கலாம். ஒருவேளை அத்தகைய கையேடுகளில் அளவுக்கு அதிகமான அறபுச் சொற்கள் இடம் பெற்றிருந்தமையால் அவற்றைப் புரிந்து கொள்ள முடியாத காரணத்தினால் அவை புறக்கணிக்கப்பட்டிருக்கலாம். களவியற் காரிகையில் உரைகாரர் மேற்கோட் செய்யுட்

களாகத் தரப்படாதிருந்திருந்தால் பல்சந்தமாலைச் செய்யுட்களும் எமக்கு இன்று கிடைத்திருக்காது. எனவே, தமிழ் கூறும் முஸ்லிம் உலகு களவியற் காரிகை உரைகாரருக்குப் பெரிதும் கடமைப்பட் டுள்ளது.

பல்சந்தமாலை என்பது 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்று எனக் கூறப்படுகிறது. அது பத்துச் செய்யுள் முதல் நூறு செய்யுள் வரை கொண்டதாகப் பாடப்படுவது எனக் கூறுகிறது பன்னிரு பாட்டியல். பத்துப் பாடல்களுக்கு ஒரு சந்தமாக பத்து வெவ்வேறு சந்தங்களில் நூறு செய்யுட்களாகப் பாடப்படுவது என்று பிற பாட்டியல்கள் குறிப் பிடுகின்றன. ஆனால் எமக்குக் கிடைத்துள்ள பல்சந்தமாலைச் செய்யுட்கள் களவியல் காரிகையில் மேற்கோளாகக் கொள்ளப்பட்டன வாகும். அது ஒரு தனிநூல். எனவே முன்னர் குறிப்பிட்ட பாட்டியல் இலக்கணம் இப் பல்சந்தமாலைக்குப் பொருந்தாது என்கிறார் திருவாளர் மு. அருனாசலம் பிள்ளை அவர்கள் தமது தமிழ் இலக்கிய வரலாறு - 14 ஆம் நூற்றாண்டு என்னும் நூலில். களவியற் காரிகை யில் தரப்பட்டுள்ள பாடல்களன்றி வேறு பாடல்கள் கிடைக்கவில்லை. அப்பாடல்கள் வேறு எங்காவது மேற்கோட் செய்யுட்களாகப் பயன் படுத்தப்பட்டிருந்தால் எமக்குக் கிடைத்திருக்கும். அத்தகைய வாய்ப்பு இருப்பது போல் தோன்றவுமில்லை.

இனி, பல்சந்தமாலையின் காலத்தைக் கணிக்க முயல்வோம். பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் களவியற் காரிகை யைப் பதிப்பித்த பின்னர் அங்கு இடம் பெற்ற பல்சந்தமாலையின் செய்யுட்களைத் தமிழ் இலக்கிய வரலாற்று நூலில் முதல் முதல் குறிப்பிட்டவர் திருவாளர் மு. அருணாசலம் அவர்கள். அவரைத் தொடர்ந்தே ஏனையோர் பல்சந்தமாலைச் செய்யுட்களில் ஈடுபாடு காட்ட முன்வந்துள்ளனர். தத்தம் நூல்களில் அச்செய்யுட்களை இடம் பெறச் செய்ய முற்பட்டனர். அவர்கள் அனைவருக்கும் முன் மாதிரியாக அமைந்தது திருவாளர் மு. அருணாசலம் அவர்கள் தமது தமிழ் இலக்கிய வரலாறு - 14 ஆம் நூற்றாண்டு என்னும் நூலில் தந்த செய்யுட்களும் அவற்றிற்குரிய அகப்பொருட்டுறைகளுமேயாம்.

பல்சந்தமாலையின் நான்கு செய்யுட்களைப் பொறுத்தவரையில் மு. அருணாசலம் அவர்கள் தந்துள்ள அகப்பொருட்டுறைகள் களவியற் காரிகையில் தரப்பட்டுள்ள அகப்பொருட்டுறைக் குறிப்புக்களிலிருந்து வேறுபட்டுள்ளன. அவரைப் பின்தொடர்ந்து இந்தச் செய்யுட்களை விளக்க முற்பட்ட அனைவரும் இந்த வேறுபாட்டைக் கவனிக்கத் தவறி விட்டனர். சிறப்பாக முதற் செய்யுளைப் பொறுத்தவரையில் மு. அருணாசலம் அவர்கள் செய்த பிழையை மற்றவர்களும் செய் திருப்பதைக் காணலாம். அப்பிழையைக் கண்டு பிடிக்க அனைவரும்

தவறி விட்டனர். ஒரு வேளை அத்தகையோருக்குக் களவியற் காரி கையின் 1932 ஆம் ஆண்டு பதிப்பு கிடைக்காமல் போயிருக்கலாம்.

பல்சந்தமாலையின் காலத்தைக் குறிப்பிட வந்த திருவாளர் மு. அருணாசலம் அவர்கள் பின்வருமாறு தமது தமிழ் இலக்கிய வரலாறு - 14 ஆம் நூற்றாண்டு என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார் (பக்கம் 335). 'களவியற் காரிகையின் உரையையும் அதன் மேற் கோளாகக் காட்டப்பட்டுள்ள நூல்களையும் நன்கு ஆராயும் பொழுது, அது மிகவும் பழமையான நூல் என்றே உணரக்கிடக்கின்றது. அதனுள் காட்டப்பட்ட நூல்களுள் காலத்தால் பிற்பட்டது பல்சந்த மாலை என்றே கருதுவோம். இந்நூல் வகுதாபுரி வின்னனைப் பாடுகின்ற தெனக் குறிப்பிட்டோம். மதுரையை முகம்மதியர்* (முஸ்லிம்கள்) கைப்பற்றி அங்கு முகமதிய (முஸ்லிம்) ஆட்சியை நிறுவிய காலம் 1310-1325 என்பது சரித்திர ஆராய்ச்சியாளருடைய கருத்து. வின்னன் என்பவன் மதுரையைப் பிடித்த மாலிக்கபூரின் படையில் ஒரு தலைவனாக இருந்திருக்கலாம். யவனன் என்று கூறுவதால் நாம் இவ்வாறு கருதுகிறோம். இவனுடைய காலம் 1325-1350 ஆக இருத்தல் கூடும். இதே காலத்தில் வாழ்ந்த ஒரு புலவர் அவனுடைய புகழாக இந்த நூலைப் பாடி இருக்கிறார். அக் காலத்தில் முகமதியர்கள் (முஸ்லிம்கள்) வெற்றிகொண்ட இடங்களில் கோயில்களை எரித்துச் சூறையாடினார்கள் என்று சரித்திரங்களில் கேள்விப்பட்டிருக்கிறோம். இந்தப் புலவர் அவ்வாறு செய்யத் துணிந் திருந்த இத்தலைவனைப் பாடித் தம்மூர்க்கோயிலை மீட்க எண்ணி னாரா என்பது விளங்கவில்லை. பரிசிலுக்காக அவனை இவர் பாடி யிருக்க நியாயமில்லை. ஏனென்றால் அவன் அன்னிய நாட்டினன்; தமிழ் நாட்டிற்குப் புதியவன். ஆதலால் அவனிடம் பரிசில் பெறப் பாடினார் என்று கருதுவதைவிட, அவனிடம் தப்பிப் பிழைக்கப்

---

* இங்கே ஒரு விளக்கம் அவசியமாகிறது. இஸ்லாத்தைப் பின் பற்றுபவர்களை முகமதியர்கள் என்பதும் இஸ்லாத்தை முகமதிய மதம் என்பதும் தவறு. இவ்வாறு அழைப்பதற்கு இஸ்லாம் முகமது டைய மார்க்கம் அன்று. இஸ்லாம் அல்லாஹ்வுடைய மார்க்கம். உலகில் இஸ்லாத்தை போதித்து அதனைப் பரப்ப வழி வகுத்தவர் முகம்மது நபி (சல்) அவர்கள். பௌத்த மதத்தைப் பின்பற்றுபவர் களையும் கிறித்தவ மதத்தைப் பின்பற்றுபவர்களையும் அவ்வம்மதம் நிறுவியவர்களின் பெயர்களால் முறையே பௌத்தர் என்றும் கிறித்தவர் என்றும் அழைப்பது போல் இஸ்லாம் மதத்தைப் பின்பற்றுபவர்களை முகமதியர் என அழைக்கக்கூடாது. இஸ்லாம் மார்க்கத்தைப் பின்பற்றுபவர்கள் முஸ்லிம்கள் என்றே அழைக்கப்படல் வேண்டும்.

பாடினார் என்று கருதுவதே ஏற்புடையதாகும். பல்சந்தமாலையில் காலம் கி.பி. 1350 என்று கூறுவது பொருந்துவதே.'

களவியற் காரிகையில் இடம் பெற்றுள்ள பல்சந்தமாலையின் காலத்தைப் பற்றியும் அதன் பாட்டுடைத் தலைவனைப் பற்றியும் திருவாளர் மு. அருணாசலம் அவர்களின் கூற்றுப் பொருத்தமுடைத்தாக தோன்றவில்லை. வடநாட்டுச் சுல்தானின் பிரதிநிதியாகத் தென்னகம் வந்த மாலிக்கபூர் என்று அழைக்கப்பட்ட மலிக் நாஇப் என்பவரையோ அவருடைய படைத்தலைவன் ஒருவனையோ அத்தகைய தலைவனின் மகனையோ பல்சந்தமாலைப் பாடல்கள் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டுள்ளன என்று கூறுவதை ஏற்றுக் கொள்ள முடியாது. முதலில் அவர்களுக்குத் தமிழ் தெரியாது. தமிழ் மரபில் ஊறித்திளைத்த இஸ்லாமிய பாடல்களைச் சுவைக்கும் ஆற்றல் அவர்களுக்கு இருந்தது என்றும் கூறிவிட முடியாது. மதுரை ஆட்சி பீடத்தில் அமர்ந்தவர்கள் கூட அக்கால எல்லையில் பாரசீக மொழியில் ஈடுபாடு கொண்டவர்களாகவே இருந்தனர். வடநாட்டிலிருந்து தென்னகத்துக்குப் படை எடுத்து வந்தவர்களும் அத்தகைய நிலையிலே இருந்தனர் என்பது தெளிவு. அத்தகையோரிடமிருந்து பரிசில் பெறுவதற்காகப் பல்சந்தமாலை பாடப்பட்டது என்று கூறுவதை ஏற்றுக்கொள்ள முடியாது. அப்படியாயின் பல்சந்தமாலையின் பாட்டுடைத் தலைவர் யார்? அவர் வாழ்ந்த காலம் எது? பல்சந்த மாலையின் காலம் எது? என்பனவற்றை ஆராய முற்படலாம்.

**பல்சந்தமாலையின் காலம் :**

தமிழ் நாட்டைப் பேரரசர்கள் ஆட்சி செய்து வந்த காலத்தில் தமிழ் நாட்டில் ஆங்காங்கே சிற்றரசர்களும் குறுநில மன்னர்களும் ஆட்சி செய்து வந்துள்ளனர். அவ்வாறு ஆட்சி செய்து வந்தவர்கள் பேரரசர்களுக்குத் திறை செலுத்தி வந்தனர். தகவல் தொடர்பு முதலிய வசதிகள் மிகக்குறைவாக இருந்த அக்காலத்தில் தலை நகரிலிருந்து பேரரசின் பல்வேறு பகுதிகளையும் நேரடியாக ஆட்சி செய்வது கடினமாகும். எனவே தான் சிற்றரசரும் குறுநில மன்னரும் அவ்வப்பகுதிகளில் பாலனம் செய்து வந்தனர். பேரரசின் கட்டளைகளுக்கு இணங்கும் வரை அத்தகைய சிற்றரசர்களும் குறுநில மன்னர்களும் தொடர்ந்து பாலனம் செய்ய அனுமதிக்கப்பட்டனர். அவர்கள் பேரரசுக்குத் திறை செலுத்திக் கொண்டிருக்கும்வரை சிற்றரசராகவும் குறுநில மன்னராகவும் அவர்கள் தம் கடமைகளை இடையீடெதுவும் இன்றித் தொடர்ந்து நடத்துவதற்கும் வாய்ப்பு அளிக்கப்பட்டனர். அத்தகைய சிற்றரசரும் குறுநில மன்னரும் தமது பணிகளிலிருந்து தவறின் அவர்கள் அடக்கி ஒடுக்கப்பட்டனர். அவர்களின் பிரதேசம் கைப்பற்றப்பட்டது.

அதே போன்று தமிழ் நாட்டின் எல்லைப்புறங்களிலும் அத்தகைய நிலைமை நிலவி இருக்கலாம். எல்லைப் புறங்களிலே பல்வேறு இனத்தவர்களும் பல்வேறு நாட்டைச் சார்ந்தவர்களும் ஆங்காங்கே சிற்றரசர்களாகவும் குறுநில மன்னர்களாகவும் ஆட்சி புரிந்திருக்க லாம். அவர்கள் அயலில் ஆட்சி புரிந்த பேரரசர்களுக்குத் திறை செலுத்தியும் வந்திருக்கலாம். அவ்வாறு திறை செலுத்தத் தவறிய சந்தர்ப்பங்களில் அவர்களுடன் போரிட்டு அவர்களுடைய ஆட்சிக் குட்பட்ட பகுதிகள் கைப்பற்றப்பட்டிருக்கலாம்.

இங்ஙனம் கைப்பற்றப்பட்ட பகுதிகளைப் பற்றியும் திறை செலுத்தித் தத்தம் பிராந்தியங்களில் ஆட்சி புரிந்த சிற்றரசர்களையும் குறுநில மன்னர்களையும் பற்றியும் தமிழ்நாட்டுப் பேரரசர்களின் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம். ஒரு தமிழ் நாட்டுப் பேரரசனால் வெற்றிகொள்ளப்பட்ட பிராந்தியங்கள் பின் வருவன என ஒரு கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. கொசலம், துளுவம், குச்சரம், பொசலமகதம், பொப்பளம், புண்டரம், கலிங்கம், ஈழம், கடாரம், கௌடம், தெலிங்கம், சோனகம், சீனகம். இக் கல்வெட்டு ஸ்ரீசுந்தர பாண்டியனினால் பொறிக்கப் பெற்றது. திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருநெல்வேலித் தாலுகாவைச் சேர்ந்த திருநெல்வேலியில் உள்ள நெல்லையப்பர் கோயிலின் மூன்றாம் பிராகாரத்தின் தெற்குச் சுவரில் வெளிப்புறத்தில் உள்ளது. (A.R. No. 132 of 1894) இதே போன்ற குறிப்புள்ள பல கல்வெட்டுக் கள் உள்ளன. (A.R. No. 149 of 1894; A.R. No. 154 of 1894; A.R. No. 156 of 1894; A.R. No. 170 of 1895)

இங்கே குறிப்பிடப்பட்ட பகுதிகள் தமிழ்நாட்டிலோ அல்லது எல்லைப்புறத்தில் அமைந்தனவாய் இருக்கலாம். அந்தந்தப் பகுதியில் சிற்றரசராகவோ, குறுநில மன்னராகவோ, பிராந்தியத் தலைவராகவோ இருந்தவரின் இனத்தின் அடிப்படையில் அவ்வப் பிரதேசங்கள் அழைக்கப்பட்டிருக்கலாம். அச்சிற்றரசுகள் அனைத் தையும் தமது ஆட்சியில் கொண்டுவந்தமையை பெருமையாக அப் பேரரசன் கருதி இருக்கலாம். ஆகையினாலே அச்செய்தியைத் தனது கல்வெட்டில் குறிப்பிடுவதில் அவ்வரசன் பெருமிதம் அடைந்திருக்க லாம். சோனகன் ஒருவன் தலைவனாக அல்லது சிற்றரசனாக இருந்த பகுதி சோனகம் என வழங்கப்பட்டிருக்கலாம். இன்றைய முஸ்லிம்களின் மூதாதையரான அறபு மக்கள் வாழ்ந்த அறேபியாவை அக்கல்வெட்டில் சோனகம் எனக் கருதியிருக்கக்கூடும் எனக் கூறுதல் பொருந்தாக் கூற்றாகும். மிக்க தொலையில் உள்ள ஒரு நாட்டைத் தமிழ்நாட்டு மன்னன் கைப்பற்றினான் எனக் கூறுதலும் மிகைப்படக் கூறும் குற்றத்துக்கு இழுத்துச் சென்றுவிடும்.

இன்னும் சில கல்வெட்டுக்களில் தமிழ்ப் பேரரசர்களுக்குத் திறை செலுத்தியவர்களின் பட்டியல் குறிப்பிடப்படுகின்றது. இங்கே நாடுகள் குறிப்பிடப்படவில்லை. நாட்டு மக்களே குறிப்பிடப்படு கின்றனர். அந்நாடுகளை ஆட்சிபுரிந்த அம்மக்கள் தலைவர்களே குறிப்பிடப்படுகின்றனர். திருச்சிராப்பள்ளி மாவட்டம், உய்யக் கொண்டான் திருமலையில் உள்ள உஜ்ஜீலநாத கோயிலின் இரண் டாவது பிராகாரத்தின் கோபுரத்தின் இடது வாயிலில் அமைந்துள்ள கல்வெட்டு இத்தகைய செய்தியைக் கொண்டுள்ளது. கி. பி. 1133 முதல் 1150 வரை ஆட்சிபுரிந்த குலோத்துங்க சோழனுடைய கல்வெட்டு இது. அக்கல்வெட்டில் இவ்வாறு இச்செய்தி இடம் பெற்றுள்ளது.

16வது வரி : பல்லவர் தெலுங்கர் மாளவர் கலிங்கர் கொங்க ணர் கந்நாடர்.

17வது வரி : செரலர் சிங்கணர் கொங்கணர் செதியர் திரகத்தர் வங்கர் அரங்கர் ஜோனகர் கைகயர் ஜீனர் எந்.

18வது வரி : றறைகழல் வேந்தரு மல்லாவரைசரும் முறை மையிலுரிந்த திறை குணந் திறைஞ்சி.

இக்கல்வெட்டு பூரணமான தொன்றன்று. எனினும் பல்வேறு பிராந்தியத்தினரும் குலோத்துங்க சோழ மன்னனுக்குத் திறை செலுத்திய செய்தி இங்கு குறிக்கப்பட்டுள்ளது. ஜோனகரும் திறை செலுத்தினார் என்பது ஈண்டு இடம் பெற்றுள்ளது. (A.R. No. 99 of 1892) குலோத்துங்க சோழ மன்னனுடைய மற்றொரு கல்வெட்டி லும் இத்தகைய செய்தி இடம் பெற்றுள்ளமையைக் காணலாம். (A.R. No. 141 of 1895) இரண்டாம் குலோத்துங்க சோழனின் மெய்க்கீர்த்தியிலும் இச்செய்தி இடம் பெற்றுள்ளது. ஜோனகன் என்பது முகமதியன் (முஸ்லிம்) என்று டி. என். சுப்பிரமணியம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

(கோவில் கல்வெட்டுகள் : தொகுதி 111 பகுதி 11 பக்கம் 1496)

இவற்றிலிருந்து புலனாவது என்ன ? தமிழ்நாட்டுப் பேரரசனின் ஆட்சியில் பல குறுநில மன்னர்கள் இருந்தனர். அவர்கள் தத்தம் பிரதேசங்களில் ஆட்சிபுரிந்து வந்தனர். பேரரசருக்குத் திறை செலுத்தி வந்தனர். அத்தகையோருள் சோனகரும் இருந்தனர். அத்தகைய ஒருவன்தான் பல்சந்தமாலையின் பாட்டுடைத் தலைவராக இருந்திருப்பான். மலிக் நாஇப் என வழங்கப்பட்ட மலிக்காபூரோ வடக்கிலிருந்து வந்த முஸ்லிம் படைத் தலைவனோ அத்தகைய ஒருவனின் மகனோ பல்சந்தமாலையின் பாட்டுடைத் தலைவராக இருந்திருக்க முடியாது. மலிக்காபூர் தென்னகத்தருகே படை எடுத்து வந்த பின்னர்தான் முஸ்லிம் மக்கள் தமிழகத்தில் குடியேறினர்

என்று கூறுவது உண்மையாய் இருந்தால் மாத்திரமே திருவாளர் மு. அருணாசலத்தின் கூற்று உறுதியாகும். நிலைமை அவ்வாறன்று. மலிக்காபூர் தென்னகத்திற்கு வருவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே முஸ்லிம் மக்களும் அவர்களின் மூதாதையரான அறபு மக்களும் தமிழகத்தில் குடியேறத் தலைப்பட்டுவிட்டனர். எனவே பல்சந்தமாலையின் காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு என்று கூறுவது பொருத்தமுடைத்தன்று.

அஃது அவ்வாறாயின் பல்சந்தமாலையின் காலம் எது? பல்சந்த மாலையிலிருந்து இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள பாடல் களிலிருந்து பல்சந்தமாலையின் காலத்தை நிர்ணயிக்கக்கூடிய அகச் சான்றுகள் உள்ளனவா? பல்சந்தமாலையின் எல்லாப் பாடல்களும் கிடைத்திருப்பின் சந்தேகத்துக்கிடமின்றி பல்சந்த மாலையின் காலத்தை உறுதியாகக் கூறி இருக்கலாம். இப்பொழுது கிடைத் துள்ள பல்சந்தமாலையின் பாடல்களில் இடம் பெற்றுள்ள சொல் லாட்சியினைப் பயன்படுத்தி அதன் காலத்தைக் கூறமுடியுமா எனப் பார்ப்போம். பொதுவாக ஒரு நூலில் இடம் பெற்றுள்ள சொற்களின் அமைப்பு முறையும் அவற்றை அந்நூலில் பயன்படுத்தியுள்ள முறையும் ஓரளவுக்கு அதன் காலத்தை நிர்ணயிக்கக்கூடிய அகச் சான்றுகளாகப் பெரும்பாலும் அமைந்துவிடுவது உண்டு. அத்தகைய அமைப்பு முறை பல்சந்தமாலையில் உண்டா என்பதைப் பார்ப்போம்.

ஆவோ டல்லது யகர முதலாது

என்கிறது தொல்காப்பியச் சூத்திரம்.

(தொல்காப்பியம் 65 ; மொழி மரபு 32)

ஆகாரத்தோடு கூடி அல்லது யகர ஒற்றுமொழிக்கு முதலாகாது. இது தொல்காப்பிய மொழி மரபு. யானை, யாணன் எடுத்துக் காட்டுகள். தொல்காப்பியரின் மொழி மரபுக்கியைய யவனர் என்னும் சொல் அமைய இயலாது. ஆனால் பவணந்தி முனிவர் தமது நன்னூலில்

அஆ உஊ ஓ ஒள யம் முதல்

என (நன்னூல்: 104) வந்துள்ளது. இந்நன்னூற் சூத்திரத்திற்கு உரை வகுத்தவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். "தொல்காப்பியனார், ஆவோடல்லது யகர முதலாது எனக் கூறி இருப்பினும், பவணந்தி முனிவர் அஆஉஊஓஒள என்பனவற்றுடன் யகரம் சொல்லுக்கு முதலில் வருவதாகக் கொண்டது வடசொற்கள் தமிழில் வரும் பொழுது முதலாதலையும் காட்ட என்க. இதனை இங்ஙனம் பின்வருவனவற்றிற்குக் கொள்க. நன்னூலார், வடசொல்லிலக்கணத் தையும் ஒருசார் தழுவுதலைமேல், 'மொழியியல்' என்னாது 'பதவியல்' என்பதனாலும் காண்க. அ, ஆ, உ, ஊ, ஓ, ஒள

இந்த ஆறு உயிரோடும் கூடிய யகர மெய் சொல்லுக்கு முதலாகும் யவனர், யானை, யுகம், யூகம், யோகம், யௌவனம் எடுத்துக் காட்டுக்கள்''.

பல்சந்தமாலையில் இடம்பெற்றுள்ள இரண்டு செய்யுட்களில் பல்சந்தமாலை ஆசிரியர் தொல்காப்பியரின் மொழிமரபினைப் பின் பற்றி உள்ளார் என்றே தோன்றுகின்றது. அவருடைய சொற் பிரயோகம் நன்னூல் கருத்துக்களுக்கு ஏற்புடைத்தாய் அமைய வில்லை. பல்சந்தமாலை ஆசிரியர் சோனகரை (முஸ்லிம்களை)க் குறிக்க 'இயவனர்' என்று இரண்டு இடங்களில் உபயோகிக்கிறார். 'இயவனராசன்' என ஒரு செய்யுளை ஆரம்பிக்கிறார். களவியற் காரிகை 8 ஆம் பக்கத்தில் இடம் பெற்றுள்ள பல்சந்தமாலைச் செய்யுள்

இயவன ராசன் கலுபா தாமுத லெண்ணவந்தோர்

என அதன் முதலடியைக் கொண்டுள்ளது.

........................................கூ
தெல்லா முணர்ந்தவ ரேழ்பெருந்த தரங்கத் தியவனர்கள்

என 159 ஆம் பக்கத்தில் உள்ள பல்சந்தமாலைச் செய்யுளின் இரண் டாமடி அமைந்துள்ளது. இவ்விரண்டு செய்யுட்களிலும் 'இயவனர்' என்றே வந்துள்ளது. முதலாம் செய்யுளில் 'இயவனர்' என்பது பாடலை ஆரம்பிக்கும் சொல்லாக அமைந்துள்ளது. மற்றச் செய் யுளில் 'யகரத்தின் முன்வந்த குற்றியலுகரம் முற்றியலிகரமாக மாறி' இயவனர் என வந்துள்ளது. யவனர் எனப் பாடலில் பயன்படுத்தி இருந்தால் அப்பயன்பாடு தொல்காப்பிய மொழி மரபுக்கு மாறாக இருந்திருக்கும். சான்றோர் அதனை 'வழு' எனக் கருதி இருப்பர். பல்சந்தமாலை ஆசிரியர் வாழ்ந்த காலத்தில் 'அகரத்தோடு யகர மெய் மொழிக்கு முதலில் வரும்' என்னும் நியதி இருக்கவில்லை. எனவே தான் பல்சந்தமாலை ஆசிரியர் 'இயவனர்' என்னும் உப யோகத்தை விரும்பி இருப்பார். இதிலிருந்து பல்சந்தமாலை ஆசிரிய ரின் காலத்தில் நன்னூலாரின் மொழி மரபு வழக்கில் இருக்கவில்லை எனத் தோன்றுகின்றது. எனவே, பல்சந்தமாலை ஆசிரியர் பவணந்தி முனிவர் வாழ்ந்த காலத்துக்கு முற்பட்டவராய் இருத்தல் வேண்டும்.

பவணந்தி முனிவர் காலம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பர். கி.பி. 1181 முதல் 1212 வரை சோழப் பேரரசரின் ஆட்சியில் குறுநில மன்னனாக ஆட்சி புரிந்தவன் சீயகங்கன். இக்கால எல்லையுள் அவன் வாழ்ந்ததை உறுதிப்படுத்தும் அவனுடைய கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன என்பர். இவனுடைய தலைநகர் குவளாலபுரமாகும். இந்நகர் இன்று மைசூர் மாநிலத்தில் உள்ள கோலார் என அடையாளம் காணப்பட்டுள்ளது என்பர். சீயகங்கன்

என்னும் குறுநில மன்னன் வேண்டுகோளுக்கு இணங்கவே பவணந்தி முனிவர் நன்னூலை இயற்றி உள்ளார். நன்னூல் சிறப்புப்பாயிரத்தில் சீயகங்கனின் கொடைத்திறம் வருணிக்கப்பட்டுள்ளது. சீயகங்கன் பவணந்தி முனிவருக்கு நன்னூலை இயற்ற ஆதரவு நல்கினமையினாலேயே அவன் அவ்வாறு புகழப்பட்டுள்ளான். ஆக, 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த பவணந்தி முனிவரின் நன்னூலில் கூறப்பட்டுள்ள மொழி மரபினை பல்சந்தமாலை ஆசிரியர் பின்பற்றவில்லை. ஆதலால் பல்சந்தமாலை ஆசிரியர் 13ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் என்பதே புலனாகின்றது.

களவியற் காரிகையின் உரைகாரர் மேற்கோள் காட்டியுள்ள செய்யுட்கள் எடுக்கப்பட்டுள்ள நூல்களைப்பற்றி ஆராயும்பொழுதும் பல்சந்தமாலையின் காலத்தை நிர்ணயிக்கக்கூடிய சில சான்றுகளைப் பெறலாம். களவியற் காரிகையின் உரைகாரர் அங்கு பல கோவைகளிலிருந்து மேற்கோட் செய்யுட்களைத் தந்துள்ளார். அரையர் கோவை, திருக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, பாண்டிக்கோவை, வங்கர்கோவை என்னும் கோவை நூல்களிலிருந்து செய்யுட்களை மேற்கோள்களாக எடுத்துக்காட்டியுள்ளார். அரையர் கோவையிலிருந்து ஒரு செய்யுளையும் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையிலிருந்து ஒரு செய்யுளையும் வங்கர் கோவையிலிருந்து மூன்று செய்யுட்களையும் தந்துள்ளார். திருக்கோவையிலிருந்தும் பாண்டிக்கோவையிலிருந்தும் விளக்கப்பட்டுள்ள களவியற் காரிகைச் சூத்திரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு செய்யுள் வீதம் அங்கு மேற்கோள் தரப்பட்டுள்ளன. அரையர் கோவையிலிருந்து தரப்பட்டுள்ள ஒரு செய்யுளில் ‘தயாபரன் தஞ்சை அன்னாய்’ என வந்துள்ளது. ஆனால் இச்செய்யுள் தஞ்சைவாணன் கோவையிலிருந்து பெறப்பட்டதன்று. கிடைக்கக்கூடிய கோவை நூல்களிலிருந்து மேற்கோட் செய்யுட்களை எடுத்தாண்ட களவியற் காரிகை உரைகாரர் ஏனைய கோவை நூல்களிலிருந்து அத்தகைய செய்யுட்களை எடுக்கத் தவறியது ஏன்? ஏனைய கோவை நூல்கள் அவருக்குக் கிடைக்காமல் போயிருக்கலாம். அவருடைய காலத்தில் அவை இயற்றப்படாமல் இருந்து இருக்கலாம். ஏனைய கோவைகளிலிருந்து அவர் மேற்கோட் செய்யுட்களைத் தரத் தவறியமைக்குரிய காரணம் அவ்வுரைகாரர் அக்கோவைகளுக்குக் காலத்தால் முற்பட்டவராய் இருக்கலாம். உரைகாரரின் காலத்துக்குப் பின்னர் தோன்றிய கோவைகளிலிருந்து அவர் தமது உரை நூலில் மேற்கோள்கள் தரவில்லை எனலாம்.

பல கோவைச் செய்யுட்களை மேற்கோள்காட்டிய களவியற் காரிகை உரைகாரர் தஞ்சைவாணன் கோவையிலிருந்து மேற்கோள் காட்டவில்லை. தஞ்சைவாணன் கோவை, களவியற் காரிகை உரை

காரரின் காலத்துக்குப் பின்னால் தோன்றி இருக்கலாம். அவ்வா றாயின் அவருக்கு அந்நூல் கிடைத்திருக்காது. நம்பி அகப்பொருள் இயற்றப்பட்டது கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியிலே என திருவாளர் மு. அருணாசலம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். நாற்கவி ராசநம்பி இயற்றிய அகப்பொருள் விளக்கத்துக்கு இலக்கியமாகவே பொய்யாமொழிப் புலவர் தஞ்சைவாணன் கோவையை இயற்றினார் என்றும் கூறியுள்ளார். ஆகவே தஞ்சைவாணன் கோவையும் கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றியதாகும். களவியற் காரிகையும் அதன் உரையும் தஞ்சைவாணன் கோவைக்கு முற்பட்டது எனலாம். இவ்வடிப்படையில் பார்க்கும்பொழுது பல்சந்தமாலை 12 ஆம் நூற்றாண்டளவில் அல்லது அதற்கு முன்னர் இயற்றப்பட்ட ஒரு நூலெனக் கொள்ளலாம் அல்லவா ?

**பாட்டுடைத் தலைவன் :**

கி.பி. 12 ஆம் நூற்றாண்டின் இறுதியில் தமிழ் நாட்டின் ஒரு பகுதியான வைப்பாற்றுக்கும் வைகையாற்றுக்கும் இடைப்பட்ட பகுதியை சுல்தான் சையது இப்றாகீம் ஆட்சி புரிந்து வந்துள்ளார். அப்பொழுது பாண்டி நாட்டை ஆண்டுவந்த விக்கிரமபாண்டியனுடன் போர் புரிந்தே சுல்தான் சையது இப்றாகீம் அப்பகுதியின் ஆட்சியைக் கைப்பற்றினார். அவருடைய ஆட்சி ஆரம்பிப்பதற்கு முன்னரேயே முஸ்லிம்கள் தமிழ் நாட்டுடன் தொடர்பு கொண்டிருந்தனர். ஆக, அந்நாட்களில் வாழ்ந்த ஒரு முஸ்லிம் சிற்றரசனைப்பற்றி ஒரு முஸ்லிம் புலவரால் பாடப்பட்டது பல்சந்தமாலை என்று கூறலாம்.

இனி பல்சந்தமாலையின் பாட்டுடைத் தலைவனை எடுத்துக் கொள்வோம். எமக்குக் கிடைத்துள்ள பல்சந்தமாலையின் பாடல் களில் 'கலைமதி வாய்மைக்கலுபா', 'இயவனராசன் கலுபா', வச்சிரநாட்டுக்கிறையாகிய கலுபா' என்னும் சிறப்புப் பெயர்களா லும் 'வின்னன்' என்னும் இயற்பெயராலும் பாட்டுடைத் தலைவன் சுட்டப்பட்டுள்ளான். வின்னன் என்பவன் தமிழ் நாட்டில் சிற்றரச னாக ஆட்சிபுரிந்த சோனக இனத்தைச் சேர்ந்தவனாக இருத்தல் வேண்டும் அல்லது அவன் ஒரு சோனகக் குறுநிலமன்னனின் மகனாக இருத்தல் வேண்டும்.

பொதுவாக அறபு நாட்டில் இன்னார் இன்னாரின் மகன் என்று கூறுவதே மரபு. இப்னு உமறு அல்லது பின்உமறு என்று சொல்லும் பொழுது உமறு என்பவரின் மகன் என்றே பொருள்படுகிறது. புகழ் பூத்த ஒருவரின் புதல்வரை அறிமுகம் செய்யும் பொழுது அப்பெரி யாரின் மகன் இவன் என்று கூறுதல் தான் வழக்காறு. அந்த மரபைப் பின்பற்றி இன்றும் முஸ்லிம் மக்கள் இவ்வாறு பெயரிட்டும் வருகின்ற னர். இஸ்லாத்தின் தலை சிறந்த ஆட்சியாளருள் ஒருவராகத் திகழ்ந்த

கலிபா உமறு (ரலி) அவர்களின் புதல்வரை அறிமுகப்படுத்தவே இஸ்லாமிய கிரந்தங்களில் இப்னு உமறு அல்லது பின் உமறு என்னும் சொற்றொடர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் இன்று பெரும் பாலான தமிழ் பேசும் முஸ்லிம் மக்கள் தமிழ் மரபைப் பின்பற்றி தகப்பன் பெயரை முன் உபயோகித்துத் தத்தம் பெயர்களை பின்னால் எழுதுகின்றனர்.

வின்னன் என்னும் சொல் எவ்வாறு உருவாகி உள்ளது என்று பார்ப்போம். வின்னன் என்பது ஓர் அறபுச் சொற்றொடரின் மருஉ என்றே கொள்ளுதல் வேண்டும். அறபு வழக்காற்றுக்கிணங்க ஒரு குறிப்பிட்ட பெயரை உடையவனின் மகன் என்பதையே இச்சொற் றொடர் குறிக்கும். ஒலிப்புடைய பகர வல்லெழுத்தைக்கொண்ட 'பின்' என்னும் அறபுச் சொல்லின் பொருள் மகன் என்பதாகும். அவனுடைய தந்தையின் பெயர் எதுவாயிருந்தாலும் இந்த 'பின்' என்னும் சொல்லை அத்தந்தையின் பெயருடன் சேர்த்துச் சொல்லு தலே வழக்காறாகும். பல்சந்தமாலைப் பாட்டுடைத் தலைவனின் தந்தையின் பெயர் 'அவ்ன்' என்றிருந்திருத்தல் வேண்டும். 'அவ்ன்' என்பது அறபுச்சொல். இச்சொல் இயற்பெயராகவும் உபயோகிக்கப் பட்டிருப்பதுடன் 'ஒன்' என மருவியும் வழங்கி வருதலைக் காண கின்றோம். 'அவ்ன்' என்பவன் மகன் என்பதைக் குறிக்க 'பின் அவ்ன் என்னும் சொற்றொடர் பயன்படுத்தப்படுகிறது. 'அவ்ன்' என்னும் அறபுச் சொல்லுக்குரிய பொருள் 'நெருங்கிய நண்பன்' என்பதாகும். எனவே 'பின் அவ்ன்' என்பது இயற்பெயராக இருப்ப தோடு நெருங்கிய நண்பனின் மகன் என்பதையும் குறிக்கிறது. இந்த 'பின் அவ்ன்' என்பது காலப்போக்கில் சிற்சில மாற்றங்களுக்கு உள்ளாகி இருக்கவேண்டும்.

தமிழ் அரிச்சுவடியில் வல்லெழுத்துக்கள் உருவம் மாறாது ஒலிப் புடைய வல்லெழுத்துக்களாகவும் ஒலிப்பில்லா வல்லெழுத்துக்களாகவும் பயன்படுத்தப்படுவதைக் காணலாம். 'பின் அவ்ன்' என்பதில் உள்ள பகரம் ஒலிப்புடைய வல்லெழுத்தாகவே உச்சரிக்கப்படுதல் வேண்டும். ஒலிப்புடைய வல்லெழுத்தாக வரும் பகரம் பெரும்பாலும் எழுத்து வழக்கிலும் பேச்சு வழக்கிலும் வகரமாக மாறியிருக்கிறது. சான்றாக ஒலிப்புடைய வல்லெழுத்தை முதலில் கொண்ட 'பஸ்' (Bus) என்னும் சொல் 'வசு' என இலங்கையின் சில இடங்களில் மாறி இருப்பதைக் காணலாம். முஸ்லிம் எழுத்து வழக்கிலும் பேச்சு வழக்கிலும் இத் தகைய மாற்றம் ஏற்படுகிறது. முஸ்லிம் மக்களைத் தொழுகைக்கு அழைப்பதைப் பாரசீகத்தில் 'பாங்கு' எனப்படுகிறது. இங்கே முத லெழுத்தான பகரம் ஒலிப்புடைய வல்லெழுத்தாகவே உச்சரிக்கப்படல் வேண்டும். இச்சொல்லை இதே கருத்தில் பயன்படுத்தும் தமிழ்ப்

பேசும் முஸ்லிம் மக்கள் பாங்கு என அதன் முதல் எழுத்தை ஒலிப் புடைய வல்லெழுத்தாக 'Voiced Plosives' எனப் பயன்படுத்துவதோடு அந்த ஒலிப்புடைய வல்லெழுத்தான பகரத்தை வகரமாக மாற்றி 'வாங்கு' எனப் பயன்படுத்துகின்றனர். அதே அடிப்படையில் அபூபக்கர் என்பதை அவுவக்கர் என்பர். அதே போன்று இங்கே குறிப்பிடப்பட்ட 'பின் அவ்ன்' என்னும் பெயர் 'வின் அவ்ன்' என மாறிக் காலப்போக்கில் உச்சரிப்பு எளிமை காரணமாக 'வின் அன்' என மாறியிருக்க வேண்டும். வின் அன் இரண்டும் சேர்ந்து முன் னோக்கி ஓரினமாதல் என்ற அடிப்படையில் வின்னன் என்ற சொல் ஏற்பட்டிருக்க வேண்டும்.

ஆக, பல்சந்தமாலையில் வரும் வின்னன் என்னும் சொல் அவ்ன் என்பவரின் மகன் எனப் பொருள்படலாம். அல்லது நெருங்கிய நண்பனின் மகன் எனவும் பொருள் படலாம்.

வின்னன் என்னும் பாட்டுடைத் தலைவன் பல்சந்தமாலையில் 'கலைமதி வாய்மைக்கலுபா' என்றும், 'இயவன ராசன் கலுபா' என்றும் 'வச்சிரநாட்டுக்கிறையாகிய கலுபா' என்றும் அழைக்கப்பட் டுள்ளான் என்று முன்னர் குறிப்பிட்டோம். இங்கே கலுபா என்னும் சொல் எதைக் குறிக்கின்றது? பல்சந்தமாலையைப் பற்றி எழுதிய வர்கள் அத்தனை பேரும் 'கலுபா' என்பது அறபுச் சொல் என்றும் அது 'கலிபா' என்பதிலிருந்து மருவி வந்துள்ளது என்றும் குறிப்பிட் டுள்ளனர்.

'கலிபா' என்னும் அறபுச்சொல் திருக்குர்ஆனிலே வருகிறது. பிரதிநிதி என்னும் கருத்தில் இச்சொல் திருக்குர்ஆனிலே ஆளப்பட் டுள்ளது (2 : 30, 38 : 26) ஆட்சிப்பொறுப்பை வகித்ததோடு தொடர் புடையதாக அச்சொல் அங்கு அமையவில்லை. நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் மறைவுக்குப் பின்னர் அவர்களின் பரிபாலனப் பொறுப்புக்களைச் செயல்முறைப்படுத்துவதற்கு அபூபக்கர் (றலி) அவர்கள் தெரிவு செய்யப்பட்டார்கள். அவர்கள் தாம் 'கலிபத் றசூலுல்லாஹ்' (அல்லாஹ்வின் தூதரின் பிரதிநிதி) என்னும் சிறப்புப் பெயருக்குத் தகுதி உடையவரானார்கள். அவர்கள் அதனைத் தமது சிறப்புப்பட்டமாக உபயோகிக்கவில்லை எனலாம். அபூபக்கர் (றலி) அவர்களுக்குப் பின்னர் ஆட்சி பீடத்தில் அமர உமறு கத்தாப் (றலி) அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். கலிபா என்னும் பட்டத்தை முதலில் சூடியவர் உமறு கத்தாப் (றலி) அவர்கள் என்பர். ஆனால் உமறு கத்தாப் (றலி) அவர்கள் 'கலிபத்கலிபத் றசூலுல்லா' (அல்லாஹ்வின் தூதரின் பிரதிநிதியின் பிரதிநிதி) என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டார்கள். ஆனால் இந்தப் பட்டம் மிக நீளமானதொன்றாகக் கருதப்பட்டமையால் அது கலிபா எனச் சுருக்கிக் கொள்ளப்பட்டது என்பர். உமையாக்களும் அப்பாஸியாக்

களும் கலிபா என்னும் பட்டத்தைப் பயன்படுத்தி வந்தனர். அப்பாஸியக் கலிபாக்களின் ஆட்சி வீழ்ச்சியுறும் சமயத்தில் அவர்கள் அல்லாஹ் என்னும் திருநாமத்தை தமது பட்டங்களில் சேர்த்துக் கொள்ளலாயினர். அதன் பயனாகக் குடிமக்கள் அவர்களுக்கு 'கலிபத்துல்லா' (அல்லாஹ்வின் பிரதிநிதி) போன்ற பட்டங்களைச் சூட்டலாயினர். அல் முத்தவக்கில் என்பவரின் காலத்திலே இந்தப் பழக்கம் முதன் முதல் தோன்றியது. உஸ்மானியப் பேரரசிலும் இந்த வழக்கு இருந்தது.

உமையாக்களும் அப்பாஸியாக்களும் எகிப்தை ஆண்ட பாத்திமிய்யாக்களும் ஸ்பெயினை ஆட்சி புரிந்த உமையாக்களும் பிற்காலத்தில் வந்த உஸ்மானியர் போன்ற அரசர்களுமே கலிபாப் பதவியைப் பயன்படுத்தி உள்ளனர். மற்றவர்கள் தம்மை சுல்தான் (மன்னன்) என்றே அழைக்கலாயினர். இந்தியாவில் ஆட்சி புரிந்தவர்களும் தம்மை சுல்தான் என்றே அழைத்தனர். ஆட்சி புரிந்தனர். அதன் காரணமாக ஆட்சி பீடத்தில் அமர்ந்தவர்களைக் கலிபா என அழைக்கும் பழக்கம் அருகிவிட்டது எனலாம். 12 ஆம் நூற்றாண்டின் இறுதியில் தமிழ் நாட்டின் ஒரு பகுதியை ஆட்சிபுரிந்த செய்யத் இப்றாஹீம் அவர்களும் சுல்தான் என்றே அழைக்கப்பட்டுள்ளார். மதுரையை ஆட்சி செய்த முஸ்லிம் மன்னர்களும் தம்மை சுல்தான் என்றே அழைத்தனர்.

கலிபா என்னும் சொல் பிரதிநிதி என்னும் பொருளில் வேறு விதமாகப் பிற்காலத்தில் பயன்படுத்தப்படலாயிற்று. ஆன்மிக வழிகாட்டிகளாகத் தோன்றிய இறைநேசச் செல்வர்கள் தாம் தாம் சென்றவிடங்களில் எல்லாம் தத்தம் பிரதிநிதிகளாக இவரை நியமித்தனர். அத்தகையோர் அந்த மதகுருவின் கலிபாவாக—பிரதிநிதியாகப் பணிபுரியும்படி நியமிக்கப்பட்டோராவர். கலிபா என்னும் சொல்லுக்கும் அரசபதவிக்கும் இருந்த தொடர்பு முறிந்துவிட்டது என்றே கூறலாம். ஆக, பல்சந்தமாலையில் அதன் பாட்டுடைத் தலைவனாகிய வின்னன் என்பானைக் குறிப்பிடப் பயன்படுத்தி உள்ள கலுபா என்னும் சொல் கலிபா என்பதின் மரூஉ என்பது பொருந்தாக் கூற்றாகும். அஃது அவ்வாறாயின் அந்தக் கலுபா என்னும் சொல் எதனைக் குறிக்கிறது ?

> '(நபியே)ரூம் வாசிகள் சமீபத்தில் உள்ள பூமியில் (தற்சமயம்)
> தோல்வி அடைந்தனர். அவர்கள் (இன்று) தோல்வி
> அடைந்துவிட்ட போதிலும், அதி சீக்கிரத்தில்
> அவர்கள் வெற்றி அடைவார்கள்.'

இவை திருக்குர்ஆனிலே றூம் என அழைக்கப்பட்டுள்ள முப்பதாவது அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ள இரண்டாம் மூன்றாம் வாக்கியங்

கள். இங்கே வெற்றி கொள்வதைக் குறிக்க 'கலபிஹிம்' என்னும் சொல் திருக்குர்ஆனிலே பயன்படுத்தப்பட்டுள்ளது. கலப என்பதி லிருந்தே 'கலபிஹிம்' என்பது தோன்றி உள்ளது. அறபு அரிச் சுவடியிலே உள்ள 19வது எழுத்தாகிய 'கைன்' என்பதும் 23வது எழுத்தாகிய 'லாம்' என்பதும் இரண்டாம் எழுத்தாகிய 'ப' என்பதும் சேர்ந்தே கலப என்னும் இவ்வறபுச் சொல் அமைந்துள்ளது. அறபு அகராதி கலப, குலுபா, கலபத் என்பன ஒரு கருத்துடைய சொற்கள் என்றும் ஒரே அடியிலிருந்து பிறந்தவை என்றும் குறிப்பிடுவதைக் காணலாம். அறபு மொழியைப் போன்றே பாரசீக மொழியிலும் இச்சொல் இதே கருத்தைக் கொண்டுள்ளது.

வெற்றி வீரனைக் குறிக்கவும் இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. பி.பி. 1232 முதல் 1273 வரை இஸ்பெய்ன் நாட்டில் கிரானடாவைத் தலைநகராகக் கொண்டு முகம்மது என்பவர் ஆட்சி புரிந்து வந்தார். இவர் இப்னு அல் அஹ்மர் எனப் பொதுவாக அழைக்கப்பட்டார். முகம்மது இப்னு யூசுப் இப்னு நஸ்ர் என்பதே அவரது முழுப் பெயர். இவர் தமக்கு 'அல்காலிப்' என்னும் பட்டப்பெயரைச் சூட்டிக்கொண் டார் என்று பிலிப் கே. ஹிட்டி என்பவர் தமது அறாபியரின் வரலாறு என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். அறாபியரின் இலக்கிய வரலாறு என்னும் நூலில் ஆர். ஏ. நிகொல்ஸன் என்பவர் இம்மன்னர் 'காலிப் பில்லா' என்னும் பட்டத்தைச் சூட்டிக் கொண்டார் என்று கூறி யுள்ளார். இவர்தான் ஸ்பெயினில் 'நஸ்றித்' பரம்பரையை உரு வாக்கினவர். அதன் காரணமாக இரண்டரை நூற்றாண்டுகளாக ஸ்பெயினில் கிறித்தவர்களைத் தலைதூக்காமல் இருக்க வழிகோலிய வர். இவருடைய காலத்திலே தான் உலகப் புகழ் பெற்ற அல்ஹம்றா என்னும் சிவப்பு மாளிகையும் இதர நினைவுச் சின்னங்களும் தோன்றலாயின. அல்லாஹ்வின் அருளைப் பெற்ற வெற்றி வீரன் என்பதையே 'அல் காலிப்' என்பது சுட்டுகிறது.

இவ்வாறு பார்க்கும்பொழுது பல்சந்தமாலையில் வின்னனைக் குறிப்பிட்ட கலுபா என்னும் சொல்லுக்கும் வெற்றி வீரன் என்று பொருள்படும் கலப என்னும் சொல்லுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பது புலனாகின்றது. வின்னனும் வெற்றி வீரன் என்னும் பொருளிலே தான் கலுபா என அழைக்கப்பட்டுள்ளான். ஆக, கலுபா என்னும் சொல் கலிபா என்பதின் மரூஉ எனச் சொல்வதைவிட கலப என்னும் சொல்லின் திரிபு எனக் கொள்வது சாலப் பொருத்த முடைத்து அல்லவா ?

**இஸ்லாமியக் கருத்துக்கள் :**

பல்சந்தமாலையில் இருந்து மேற்கோள் காட்டப்பட்டுள்ள செய்யுட்களில் வந்துள்ள மற்றொரு அறபுச் சொல் அல்லா என்ப

தாகும். அந்த அறபுச் சொல்லை பிழையின்றி எழுதுவதாயின் அது அல்லாஹ் என இருத்தல் வேண்டும். அல்லாஹ் என்பது இறைவனைக் குறிக்க இஸ்லாம் பயன்படுத்தும் ஒரு சொல். அதனைத் தமிழில் மொழிபெயர்க்க முடியாது. எனவேதான் அச்சொல் அவ்வாறே தமிழ் நூல்களில் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

'அல்லா வெனவந்து சத்திய நந்தா வகைதொழும்சீர்'

என ஒரு பாடலின் மூன்றாம் அடியாக வந்துள்ளது. இங்கே இஸ்லாமிய வழிமுறை குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம். முஸ்லிம்கள் நாள்தோறும் ஐவேளை அல்லாஹ்வைத் தொழுதல் வேண்டும். பள்ளிவாசலில் சென்று தொழுவதே சிறப்புடைத்தாகும். எனவே பள்ளி வாசலுக்கு வந்து தொழும்படி முஸ்லிம் மக்கள் அழைக்கப்படுகின்றனர். அந்த அழைப்பு 'அதான்' எனப்படுகிறது. பள்ளிவாசலிலிருந்து அந்த அழைப்பை விடுபவர் முஅத்தின் என அறபில் அழைக்கப்படுவர். அறபில் அதான் என்பதே பாரசீக மொழியில் பாங்கு எனப்படுகிறது. அது வாங்கு எனவும் பயன்படுத்தப்படுகிறது. இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் அத்தகைய அழைப்பை முதன்முதல் விடுத்தவர் பிலால் (றலி) என்பதை முன்னர் படித்தோம்.

இவ்வாறு தொழுகைக்கு அழைக்கும்பொழுது அல்லாஹ் என்னும் அறபுச் சொல் பலமுறை உச்சரிக்கப்படுகிறது. அந்த அழைப்பைச் சுருக்கமாகப் பார்த்தால் இது நன்கு புலப்படும். அந்த அமைப்பிலே அல்லாகு அக்பர் (அல்லாஹ் பெரியவன்) என முதலில் நான்கு முறையும் அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹ் (அல்லாஹ் அன்றி வணக்கத்துக்குரியவன் வேறு யாருமில்லை என்று சாட்சியம் பகருகின்றேன்) என அடுத்து இரண்டு முறையும் அஷ்ஹது அன்ன முகம் மதுர் றசூலுல்லா (அல்லாஹ்வின் தூதர் முகம்மது என்று சாட்சியம் பகருகின்றேன்) என இரண்டு முறையும் ஹய்ய அலஸ்ஸலாத் (தொழுகைக்கு விரைந்து வாருங்கள்) ஹய்ய அலல் பலாஹ் (வெற்றி பெற விரைந்து வாருங்கள்) என இரண்டு முறையும் மீண்டும் அல்லாகு அக்பர் என்று இரண்டு முறையும் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று ஒரு முறையும் கூறப்படுகின்றது. வைகறைத் தொழுகைக்கு அழைக்கும் பொழுது அஸ்ஸலாத்து ஹைருன்மினன் நவ்ம் (தூக்கத்தைவிடத் தொழுகை சிறந்தது) என இரண்டு முறை கடைசியாக அல்லாகு அக்பர் எனக் கூறுதற்கு முன்னர் கூறப்படும். இவ்வாறு பார்க்கும் பொழுது இந்த முஸ்லிம்களின் தொழுகைக்கான அழைப்பிலே அல்லாஹ் என்னும் சொல் பதினொரு முறை உச்சரிக்கப்படுவதைக் காணலாம். பல தடவை மீட்டப்படுவதைக் காணலாம்.

பொதுவாக முஸ்லிம்களின் வழக்கில் பாங்கு சொல்ல அல்லது அதான் சொல்ல முஸ்லிம்கள் பள்ளிவாசலுக்கு வந்தனர் எனக் கூறப்

படுகிறது. அவ்வாறு சொன்னால் அது தெளிவாக மக்களுக்கு விளங்கும். ஆனால் பல்சந்தமாலை ஆசிரியர் அவ்வாறு பாங்கு சொல்ல வந்து அல்லது அதான் கூறவந்து தொழுதனர் என்று கூற வில்லை. அந்தப் பாடலின் சீர் அமைப்புக்கு இணங்க அவருக்கு அவ்வாறு கூற முடியாமல் போயிருக்கலாம். எதுகை மோனை நயத்தைப் பேணுவது ஒரு புலவரின் கடமை அல்லவா ? எனவேதான் பல்சந்தமாலை ஆசிரியர் அதான் கூறக்கேட்டு அல்லது பாங்கு சொல்லக் கேட்டு வந்து தொழுதனர் என்று கூறவில்லை. அந்த அதான் அல்லது பாங்கு ஒலியில் அல்லாஹ் என்னும் சொல் பல தடவைகள் உச்சரிக்கப்படுவதால் அந்த அல்லாஹ் என்ற சொல் பல தடவை உச்சரிக்கப்படுவதைக் கேட்டுத் தொழுகைக்கு வந்தனர் என சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார் பல்சந்தமாலை ஆசிரியர். அதான் ஒலி அல்லது பாங்கு ஒலி கேட்டதும் பள்ளிவாசலுக்குச் சென்று தொழுகையை நிறைவேற்றுதல் ஒவ்வொரு முஸ்லிமின் தலையாய கடமை என்பதையும் மறைமுகமாகக் கூறிடும் ஆசிரியரின் ஆற்றல் நயக்கத்தக்கது அல்லவா ?

**அஞ்சு வண்ணத்தார் :**

பல்சந்தமாலையில் முஸ்லிம் மக்களைக் குறிப்பிட யவனர், சோனகர், அஞ்சுவண்ணத்தவர் என்னும் சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. யவனர், சோனகர் என்பன முன்பு விளக்கப்பட்டுள்ளன. அச்சொற்கள் முஸ்லிம் மக்களைச் சுட்ட எவ்வாறு பயன்பட்டுள்ளன என்பதை முன்னர் பார்த்தோம். இப்பொழுது அஞ்சுவண்ணத்தை எடுத்துக்கொள்வோம்.

சில சமயங்களில் அஞ்சுவன்னம் என்றும் வேறு சில சமயங்களில் அஞ்சுவண்ணம் என்றும் இச்சொல் பயன்படுத்தப்படுகின்றது. அஞ்சு வண்ணம் என்பதற்குப் பலரும் பலவாறு பொருள் கூறுவர்.

பிற்காலச் சோழர் சரித்திரம் எழுதிய திருவாளர் தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அஞ்சுவண்ணத்தாரைப் பற்றி இவ்வாறு குறிப்பிடு கிறார். (பக். 582—583) 'நம் தமிழகத்தில் வாணிகம் நடத்திவந்த குழுவினருள் அஞ்சுவண்ணத்தார் என்ற ஒரு வகையினரும் சிறந்து விளங்கினர் என்பது செப்பேடுகளாலும் கல்வெட்டுக்களாலும் அறியக் கிடக்கின்றது. அச்செப்பேடுகள் முதல் ஆதித்த சோழன் காலத்தி லிருந்த சேரமான் தாணுரவியின் ஆட்சியிலும் (T.A.S. தொகுதி 11 பக். 67) முதல் ராசேந்திர சோழன் காலத்திலிருந்த சேரமான் பாஸ்கர ரவிவர்மன் ஆட்சியிலும் வரையப்பெற்றவையாகும். ஆகவே அவை மிக்க பழமை வாய்ந்தவை எனலாம். அச்செப்பேடுகளில் குறிக்கப் பெற்றுள்ள அஞ்சுவண்ணத்தார் யாவர் என்பதைப் பற்றி அறிஞர்

களுக்குள் கருத்து வேறுபாடுகள் உண்டு. அன்னோர் சேரநாட்டில் இருந்த யூதர்களாயிருத்தல் வேண்டும் என்பது டாக்டர் குண்டர்ட் என்ற அறிஞரினதும் டாக்டர் பர்னல் என்ற அறிஞரினதும் கருத் தாகும். எல்லிஸ் என்ற அறிஞர் அத்தொடர், ஐவகை உரிமைப் பட்டங்களை உணர்த்தும் என்பர். கல்வெட்டிலாகாவின் தலைவரா யிருந்த பேரறஞர் வெங்கையா என்பவர் அஞ்சுவண்ணத்தார் ஒருவாறு சுயேச்சை பெற்று நிலவிய குழுவினர் என்று குறித்துள்ளார். (T.A.S. தொகுதி 11 பக். 74) வேறு சிலவர் அத்தொடர் ஐவகைச் சாதியாரைக் குறிப்பதாகும் என்பர். எனவே அதன் உண்மைப் பொருள் ஒருதலை யாகத் துணியப்படவில்லை என்பது தெள்ளிது. எனினும் அவர்கள் யாவர் என்பதைப் பல்சந்தமாலை என்ற பழைய நூலில் உள்ள சில பாடல்கள் உணர்த்துகின்றன. அந்நூல் முழுதும் இப்பொழுது கிடைக்காவிடினும், அதில் உள்ள சில பாடல்கள் களவியற்காரிகை நூலில் அதன் உரையாசிரியரால் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப் பட்டுள்ளன. அப்பாடல்களில் இயவனராசன் கலுபா தாமுதலெண்ண வந்தோர் அயன் மிகு தானையர் அஞ்சுவண்ணத்தவர் என்றும்

ஏழ்பெருந்தரங்கத் தியவனர்கள்
அல்லா வெனவந்து

என்றும் காணப்படும் தொடர்கள் அஞ்சுவண்ணத்தார் முகமதியராய் (முஸ்லிம்களாய்) இருத்தல் வேண்டும் என்பதைப் புலப்படுத்து கின்றன. இச்செய்தியை மற்றொரு பாடலில் பயின்று வரும் சோனகர் என்ற சொல் உறுதிப்படுத்துதல் காணலம்.........அன்னோர் முகமதிய (முஸ்லிம்) மரபினர் என்பது ஐயமின்றித் துணியப்படும். ஆகவே தமிழ்நாட்டில் தங்கி வாணிகம் நடத்தி வாழ்ந்துகொண்டிருந்த முகமதிய (முஸ்லிம்) வாணிகக் குழுவினரே அஞ்சுவண்ணத்தார் என்று வழங்கப்பெற்றிருத்தல் வேண்டும் என்பது தேற்றம்.'

கீழ்க்கடற்கரையில் பாண்டி நாட்டில் உள்ள தீத்தாண்டதானபுரத் திலும் அக்குழுவினர் இருந்தனர் என்பது அவ்வூர் கல்வெட்டொன் றால் அறியப்படுகிறது. அன்றியும் சோழ நாட்டிலுள்ள துறைமுகப் பட்டினமாகிய நாகப்பட்டினத்தில் அவர்கள் வாணிகம் நடத்திக் கொண்டு சிறப்புற்றிருந்தமை பற்றி பழைய பாடல் ஒன்று தெளிவாகப் புலப்படுத்துவதைக் காணலாம். எனவே அவர்கள் தமிழகத்தில் யாண்டும் சென்று வாணிகம் நடத்திப் புகழ் படைத்தவர்கள் என்பது நன்கு தெளியப்படும்.

திருவாளர் தி. வை. சதாசிவ பண்டாரத்தார் தமது கல்வெட்டுக் கள் கூறும் உண்மைகள் என்னும் நூலில் (பக்கம் 16—22) கல் வெட்டுக்களிலே காணப்படும் சில குழுவின் பெயர்கள் அஞ்சுவண்ணம்

என்னும் தலைப்பில் அஞ்சுவண்ணத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில், கடற்கரை நகரங்களில் அஞ்சுவண்ணம் என்ற குழு ஒன்று இருந்தது என்பது கோட்டயச் செப்பேடுகளாலும் கொச்சிச் செப்பேடுகளாலும் அறியப்படுகின்றது என்றும் இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை தாலுகாவின் கடற்கரையிலுள்ள தீத்தாண்டதானபுரத்தில் காணப் படும் கல்வெட்டொன்றிலும் அக்குழுவின் பெயர் பயின்று வருகின்றது என்றும் சுட்டிக்காட்டுகிறார். அக்குறிப்புக்களையும் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

1. இவ்வாண்டு வேணாடு வாழ்கின்ற அய்யனடிகள்
திருவடியும் அதிகாரமும்
பிரகிருதியும்......அஞ்சுவண்ணமும் புன்னைத்
தலைப்பகுதியும் உள்வைத்து
(Travancore Archaelogical Series Vol. II p. 67)

2. (அ) 'அறு நூற்றுவரும் அஞ்சு வண்ணமும் மணிக்கிராமமும் இரட்சிக்கக் கடவர். பள்ளியையும் பூமியையும் உலகும் சந்திர ஆதித்தரும் உள்ள நாளெல்லாம் செலவு பத்திரத்தில் பட்ட வண்ணம் செய்து கொள்ளக் கடவர்; அஞ்சுவண்ணமும் மணிக்கிராமமும் (அதே கல்வெட்டு. வரிகள் 21-25)

(ஆ) அன்றன்று படும் உலரு அஞ்சுவண்ணமும் மணிக் கிராமமும் இலக்கிச் சுவைப்பதாகவும் (அதே கல்வெட்டு, வரிகள் 34-35)

(இ) அஞ்சுவண்ணமும் மணிக்கிராமமும் இவைகளுக்கு அன்னியாயம் உண்டாயில் உலரு துலர்க்கூலி தடுத்தும் தங்கள் அன்னியாயம் தீர்ந்துக்கொள்ளக் கடவர்
(அதே கல்வெட்டு, வரிகள் 65-66)

(ஈ) இந்நகரத்துக்குக் காராளராக நீரேற்றார் அஞ்சு வண்ணமும் மணிக்கிராமமும் இவருள் இரண்டு தலையாருங் கூடிச் செய்வதே கருமமாகவும் ( அதே கல்வெட்டு, வரிகள் 48-49)

3. ஈசுப்பு இராப்பனுக்கு அஞ்சு வண்ணமும்......அஞ்சுவண்ணப் பேறும்......கொடுத்தோம்.
(Epigraphica Indica Vol III p. 68)

4. இவ்வூரில் இருக்கிற அஞ்சுவண்ணமும் மணிக்கிராமத் தோமும் ஆரியரில் சாமந்த பண்டசாலேயும்......பட்டாரியரும் தோயவத்திரச் செட்டிகளும் தென்னிலங்கை வளஞ்சியமும் கைக்கோளரும் தூசுவரும் வாணியரும் நீண்ட கரையருங் கூடி......கோயில் திருமுன்பிலே நிறைவுறக்கூடியிருந்து......
(Inscription 598 of 1926; தீத்தாண்டதானபுரக் கல்வெட்டு)

மேலே குறிப்பிடப்பட்ட செப்பேடுகளுள் கோட்டயச் செப்பேடுகள் கி.பி. 10 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த சேரமான் தாணு ரவியின் ஆட்சிக்காலத்தவை. கொச்சிச் செப்பேடுகள் பாஸ்கர ரவிவர்மன் காலத்தனவாகும். அச்சேரமன்னன் முதலாம் இராசராச சோழன் காலத்தவன். எனவே அச்செப்பேடுகளும் தொன்மை வாய்ந்தவை. தீத்தாண்டதானபுரக் கல்வெட்டு சடையவர்மன் வீர பாண்டியன் ஆட்சியில் கி. பி. 1269 இல் பொறிக்கப்பெற்றது.

கோட்டயம் என்பது தமிழகத்தில் மேற்குக் கடற்கரையிலுள்ள பட்டினம். தீத்தாண்டதானபுரம் என்பது கிழக்குக் கடற்கரையில் உள்ள ஓர் ஊர். இவை இரண்டும் முற்காலத்தில் சிறந்த கடற்கரைப் பட்டினங்களாகத் திகழ்ந்தன. எனவே அப்பட்டினங்களில் வாழ்ந்த ஒரு வணிகர் குழுவைச் சுட்ட அஞ்சுவண்ணம் என்பது பயன்படுத்தப் பட்டது.

'அஞ்சுவண்ணமுடைய ஈசுப்பு இராப்பனுக்கும்' என இருத்தலால் இச்சொற்றொடர் முஸ்லிம்களைப்பற்றியது என நிச்சயம் கூறலாம். ஈசுப்பு என்பது முஸ்லிம் பெயரான யூசுப் என்பதின் திரிபே. கிறித்த வர்கள் இப்பெயரை ஜோசப்பு அல்லது யோசேப்பு என்றே வழங்கு கின்றனர். இன்றும் சில முஸ்லிம்கள் யூசுப் என்னும் பெயரை Eusuf என எழுதுவதைக்காணலாம்.

இவற்றை எல்லாம் ஆராய்ந்த சதாசிவபண்டாரத்தார் ''கோட்ட யம், தீத்தாண்டதானபுரம், நாகபட்டினம் முதலான கடற்கரைப் பட்டி னங்களில் முற்காலத்தில் வாழ்ந்த முஸ்லிம் வணிகர் குழுவே அஞ்சு வண்ணம் என்று செப்பேடுகளிலும் கல்வெட்டுக்களிலும் குறிக்கப் பெற்றுள்ளது'' என்பது நன்கு புலப்படுதல் காண்க.

அஞ்சுவண்ணத்தர் என்பது களவியற் காரிகையில் அஞ்சுவண்ணத் தார் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அச்சொற்றொடரை விளக்க வந்த திருவாளர் மு. அருணாசலம் அவர்கள் தமது இலக்கிய வரலாறு 14 ஆம் நூற்றாண்டு என்னும் நூலில் ''கி.பி. 1220 இல் சடைய வர்மன் வீரபாண்டியன் ஆட்சியில் பொறிக்கப்பட்ட திருவாடானைத் தாலுக்கா தீத்தாண்டதானபுரக் கல்வெட்டு, அஞ்சுவண்ணமும் மணிக் கிராமமும்...கோயில் திருமுன்பிலே நிறைவுறக் கூடியிருந்து என்பது முதலான தொடர்களால் இதைக் குறிப்பிடுகிறது. சேரநாட்டுக்குரிய கோட்டயச் செப்பேடுகளும் இத்தொடரைப் பலமுறை கூறுகின்றன. இவை பத்தாம் நூற்றாண்டுக்குரியன. கோட்டயம் மேற்கடற்கரை, தீத்தாண்டதானபுரம் கீழ்கடற்கரை இரண்டு ஊர்களும் பண்டைக் காலத்தில் சிறந்த துறைமுகப்பட்டினங்களாக இருந்தன. அங்கு கடல் கடந்து வாணிபம் செய்யும் வணிகர் பலர். இத்தொடர் ஒரு வணிகர் குழுவைக் குறிக்கும்போலும். தஞ்சை சரசுவதி மகால் பழம்

பாடல் திரட்டொன்றில் உள்ள ஒரு பாடலால் நாகையிலும் அஞ்சு வண்ணத்தார் இருந்தனர் என்று தெரிகிறது. இதுவும் ஒரு கடற் கரைப் பட்டினம். இவர்கள் முகம்மதிய (முஸ்லிம்) வணிகர். இவர்கள், அஞ்சு வண்ணத்தார் எனப்பெயர் பெற்றதற்குக் காரணம், இவர்கள் வாழ்க்கையில் தங்கள் சமயவேதம் விதித்த ஐந்து கொள்கை களை உடையவர்களாயிருத்தலினால் போலும்'' என்பர். (பக்கம் 333-334) இங்கே குறிப்பிடப்பட்ட கடைசி வாக்கியத்துக்கு ஆதார மாக சதாசிவ பண்டாரத்தார் செந்தமிழ் தொகுதி 45 பக்கம் 65 இல் எழுதி உள்ள குறிப்பைச் சுட்டிக்காட்டி உள்ளார்.

பாரசீக மொழியிலே 'அஞ்சுமன்' என்னும் ஒரு சொல் உண்டு. அதனை Anjuman என ஆங்கில வரிவடிவில் எழுதலாம். பாரசீக ஆங்கில அகராதியில் அச்சொல்லுக்குரிய கருத்து-Assembly Congress, Congregation என ஆங்கிலத்தில் தரப்பட்டுள்ளது. அவற்றிற்கான தமிழ்க்கருத்தினை முறையே ஒருங்குகூடுதல், பேராண்மைக்கழகம், வழிபாட்டிடங்களுக்கு வழக்கமாகச் செல்லும் மக்கள் தொகுதி எனலாம். இதே பொருளைத்தரும் அறபுச்சொல் 'இஞ்ஜிமா' (Injima) என்பதாகும். கூட்டம் கூடுதல் என்ற பொருளைக் கொண் டது அச்சொல்.

இன்றும் வட இந்தியாவில் வாழும் போறா (Bohra) முஸ்லிம் சமூகத்தினர் தாம், தாம் எங்கெங்கு வாழ்ந்தாலும் அங்கங்கெல்லாம் அவர்கள் அமைத்துக்கொண்டுள்ள சங்கங்களை அஞ்சுமன் என்பதனை முதற்சொல்லாகக் கொண்டே அழைக்கின்றனர். போறாச் சமூகத் தினர் எல்லா இடங்களிலும் வணிகச் சமூகமாகவே வாழ்ந்து வரு கின்றனர். வட கனறாவில் உள்ள ஒரு பொறியியற்கல்லூரி, அஞ்சு மன் பொறியியற்கல்லூரி என்றே அழைக்கப்படுவதை இன்றும் காணலாம்.

எந்த ஒரு கிராமத்திலும் உள்ள முஸ்லிம் பள்ளிவாசலைச் சார்ந்த அதன் அங்கத்தவர்களைக் கூட்டாகக் குறிப்பிடும்பொழுது ஜமா அத்தார் என்றே அழைக்கிறோம். ஜமாஅத் என்னும் அறபுச்சொல் லுக்கு ஆர் விகுதி சேர்ந்தே ஜமாஅத்தார் எனப்படுகிறது. ஜமாஅத் என்று கூறும்பொழுது அது ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் எனப் பொருள்படும். ஜம்உ என்னும் சொல்லே அதற்குரிய வேர்ச்சொல் லாகும். முன்னர் குறிப்பிட்ட இன்ஜிமா என்னும் அறபுச் சொல்லும் இதிலிருந்தே தோன்றி உள்ளது. ஒரே நோக்கத்துக்காக ஒன்று சேரும் ஒரே இனமக்களைக் குறிப்பிட ஜமாஅத் என்னும் சொல் உபயோகிக்கப்பட்டது போல அஞ்சுமன் என்னும் பாரசீகச் சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

அந்த அஞ்சுமன் என்னும் சொல் காலப்போக்கில் அஞ்சுவன் என மாறி இருக்கலாம். கூட்டத்தாரையும் உள்ளடக்கிக் கூறுவதற்காக அம்சாரியை பெற்று அஞ்சுவன்+அம்=அஞ்சுவன்னம் என உருவாகி இருக்கலாம்: தென்பிராந்தியத்தைக் குறித்த தெக்கான் என்னும் சொல் காலப்போக்கில் தெற்கில் உள்ள எல்லாவற்றையும் உள்ளடக்கு முகமாக தெக்கானம் என வழங்கப்பட்டது போல் அஞ்சுவன்னமும் தோன்றி இருக்கலாம். அஞ்சுவன்னம் என்பது உருவான பின்னர் அந்த அஞ்சுவன்னத்தைச் சேர்ந்தவர்கள் என்பதைக் குறிப்பிட அந்த அஞ்சு வன்னம் என்னும் புதுச்சொல்லோடு அத்து என்னும் சாரியையும் அர் என்னும் விகுதியும் சேர்ந்து அஞ்சுவன்னம்+அத்து+அர்=அஞ்சு வன்னத்தர் எனத் தோன்றி வழக்கில் வந்திருக்கலாம். இன்றும் தமிழ் நாட்டில் சில இடங்களில் உள்ள முஸ்லிம் சங்கங்களைக் குறிப் பிடுவதற்கு அஞ்சுவன்னம் என்னும் சொல் பயன்படுத்தப்படுவதைக் காணலாம். இச்சொறொடர், சில சமயங்களில் டண்ணகரத்தைப் பெற்று அஞ்சுவண்ணத்தர் எனவும் சில சமயங்களில் றன்னகரத்தைப் பெற்று அஞ்சுவன்னத்தர் எனவும் வழங்கப்படுவதைக் காணலாம். இலங்கையிலே வியாபாரத்துறையில் ஈடுபட்டிருக்கும் வட இந்தியா வைப் பிறப்பிடமாகக்கொண்ட போறா (Bohra)ச் சமூகத்தினரே அஞ்சுமன் என்னும் சொல்லைத் தமது சங்கத்தைக் குறிப்பிடப் பயன் படுத்தி வருகின்றனர். அவர்கள் அங்குள்ள தமது சங்கத்தினை 'அஞ்சுமன் ஏ சைபி' என அழைக்கின்றனர்.

அஞ்சுவண்ணம் என்பதும் அஞ்சுவன்னம் என்பதும் ஒரு பொருட் சொற்கள் என்றும் அதன் கருத்து ஒருசார் வணிகர் குழு என்றும் சென்னைப் பல்கலைக்கழக அகராதி குறிப்பிடுகின்றது. அஞ்சுவனத் தார் என்பதற்கு, டாக்டர் ஆர். றொட்லர் எழுதியுள்ள தமிழ் ஆங்கில மொழிகளின் அகராதியில், 'முகமதியருள் (முஸ்லிம்களுள்) தறிநெய் வார் வகையினர்' எனப்பொருள் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

வண்ணம் என்னும் சொல் சாதியைக் குறிக்கும் (தொல்காப்பியம்: பொருளதிகாரம் 82 உரை). வர்ணம் என்பதும் வருணம் என்பதும் அதே கருத்தைக் கொண்டுள்ளன.

நால்வேறு வருணப் பால்வேறு காட்டி

என மணிமேகலையில் (6 : 56) வருணம் என்னும் சொல் பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் என்னும் நால்வகைப்பட்ட சாதியின ரைச் சுட்டிற்று என்பர். இரு தசாப்தங்களுக்கு முன்னர் தமிழகத்தில் ஒருவரை ஒருவர் சந்திக்கும்பொழுது ஒருவர் மற்றவரிடம் அவர் சார்ந்த வருணத்தை உசாவுவது வழக்கமாக இருந்தது என்பர். பண்டு முஸ்லிம்கள் வந்தபொழுது அவர்களிடமும் அவர்கள் எந்த வருணம் எனக்கேட்கப்பட்டதாம். நான்கு வருணத்தையும் நன்கு

புரிந்து கொள்ளாத நிலையில் தாம் ஐந்தாம் வருணம் அல்லது அஞ்சாம் வண்ணம் என்று விடை கூறினார்களாம். இதனாலேயே முஸ்லிம் மக்கள் அஞ்சாம் வண்ணத்தார் என அழைக்கப்பட்டனராம். பின்னர் அஞ்சாம் வண்ணத்தர் என்பது அஞ்சு வண்ணத்தர் எனச் சுருங்கிற்றும்.

அஞ்சு வண்ணத்தர் பற்றிய மற்றொரு செய்தியும் வழக்கில் உள்ளது. பாரசீக நாட்டின் கைஸ் (கீஸ்) தீவிலிருந்து தமிழகம் வந்து தமிழக அரசியலில் அன்று நெருக்கமாக ஈடுபட்டவர் சுல்தான் ஜமாலுத்தீன் என்பவர். அப்பெரியாரைத் தொடர்ந்து ஐந்து வமிசத்தைச் சேர்ந்தவர்கள் தமிழகம் வந்தனர். ஆசிம் வமிசத்தாரும் பக்கிரி வமிசத்தாரும் பாறூக் வமிசத்தாரும் உமையா வமிசத்தாரும் இராணுவ யுக்தர்களும் தமிழகம் புக்கனர். நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வமிசாவழியினர் ஆசிம் வமிசத்தினர் என்றும் அபூபக்கர் (றலி) அவர்களின் வமிசாவழியினர் பக்கிரி வமிசத்தினர் என்றும் உமறே பாறூக் (றலி) அவர்களின் வமிசாவழியினர் பாறூக்கி வமிசத்தினர் என்றும் உதுமான் (றலி) அவர்களின் வமிசாவழியினர் உமையா வமிசத்தினர் என்றும் இன்று இராவுத்தர் என வழங்கப்படும் குதிரை வாணிகம் குதிரையேற்றம் முதலியவற்றில் சிறந்து விளங்கிய வர்கள் இராணுவ யுக்தர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். இந்த ஐந்து குழுவினரும் பின்னர் அஞ்சு வண்ணத்தவர் (அஞ்சாம் வருணத் தவர்) எனப்பட்டனர் என்பதே அச்செய்தியாகும்.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதியில் கொடுக்கப்பட் டுள்ளது போல் அஞ்சுவனத்தார் என்பது தான் சரியானதெனக் கொண்டால் அதனை அம் சுவனம் அத்து ஆர் எனப்பிரிக்கலாம். அவ்வாறாயின் அழகிய சுவர்க்கத்துக்கு உரிமை உடையவர் என்றும் அதற்குப் பொருள் கொள்ளலாம் அல்லவா? முஸ்லிம் மக்களைக் குறிப்பதற்கு அஞ்சுவனத்தர் என்னும் இச்சொல் பொருத்தமாக அமைந்திருக்கின்றதல்லவா?

நாகை பற்றிய ஒரு பாடலிலும் 'அஞ்சுவண்ணத்தர்' என்னும் பிரயோகம் இடம் பெற்றுள்ளது. இது ஒரு பழைய பாடல். இப் பாடலில் நாகைப்பட்டினம் வருணிக்கப்படுகிறது. அங்குள்ள வியா பார நடவடிக்கைகள் குறிப்பிடப்படுகின்றன. மேற்கே இருந்து குதிரைகள் கொண்டுவரப்படுகின்றன. வடக்கிலிருந்து பிடவை கொண்டுவரப்படுகிறது. கிழக்கேயிருந்து பொன் கொண்டுவரப் படுகிறது. கடலால் சூழப்பட்ட தெற்கிலிருந்து முத்துக்கள் எடுத்து வரப்படுகின்றன. இங்ஙனம் கப்பல்களிலே பல்வேறு வகையான பண்டங்கள் நாகைக்குக் கொண்டுவரப்படுகின்றன. இப்பண்டமாற்று வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளவர் அஞ்சுவண்ணத்தர். இதன் பயனாக

அஞ்சுவண்ணத்தவர் சிறப்புடன் வாழ்கின்றனர். அது காரணமாக அங்கே அறம் வளர்கிறது. அத்தகைய சிறப்புடைய ஊரிலே உள்ள கடற்கரையிலே சந்தனம் குவிந்து கிடக்கின்றது. ஏனைய பொருள்களும் அங்கும் இங்குமாய்ச் சிந்திக்கிடக்கின்றன. உப்பும் அங்கு உண்டு. இவற்றை குரங்குகள் எடுக்கின்றன. இதைக் கண்டு கோபப்படுகின்றன காட்டுக்குரங்குகள். அவற்றை அடிக்க வருகின்றன. கையை முறுக்கிக்கொண்டு வருகின்றன. இதனைக் கண்டு மற்றக்குரங்குகள் வாயிலே இட்ட முத்தை எடுத்து எறிந்து விட்டு அயலில் உள்ள கமுகு மரங்களிலே ஏறிவிடுகின்றன. இத்தகைய கண்கவர் காட்சி மிக்கது நாகை என்னும் நாகபட்டினம். இந்த நாகபட்டினத்திலே அஞ்சுவண்ணத்தர் என அழைக்கப்பட்ட முஸ்லிம் மக்கள் வணிகத்தில் சிறந்து விளங்கினர் என்பதையே இப் பழைய பாடல் குறிக்கிறது.

குடக்கினில் துரங்கமும் வடக்கினில் கலிங்கமுப்
குணக்கினில் பசும்பொனும் குளித்ததெற்கில் ஆரமும்
அடிப்பரப் புடைக்கலத் தனேகவண்ண மாகவந்து
அஞ்சுவண்ண முந்தழைத்து அறத்தின் வண்ணமான ஊர்
கடற்கரைக் குவித்திடும் சந்தனத்தை இந்துடன்
கலந்திறைக் குமந்தியைக் கனன்றுடன் முசுக்குலம்
புடைப்பதற்கு எழுந்துகை முறுக்கலும் இமுக்கிவாய்
புக்கமுத்தை விட்டெறிந்து பூகம்ஏறும் நாகையே.

அஞ்சுவணம் என்னும் சொல்லை யமகம் அணி விளங்கக் கம்பரும் ஆண்டுள்ளார். அவருடைய பாடல் வருமாறு :

அஞ்சுவணத்தி னாடை உடுத்தாள் அரவெல்லாம்
அஞ்சுவணத்தின் வேக மிகுத்தாள் அருளில்லாள்
அஞ்சுவணத்தின் உத்தரியத்தாள் அலையாரும்
அஞ்சுவணத்தின் முத்தொளிராரத் தணிகொண்டாள்
(சுந்தரகாண்டம் : ஊர்தேடு படலம் : 79 (174)

முதலடியில் அஞ்சுவணம் ஐந்து நிறங்களைக் குறிக்கும். அடுத்த அடியில் அது அஞ்சு உவணம் என பாம்பு பயப்படும் கருடனைக் குறிக்கும். மூன்றாம் அடியில் அம் சுவணத்தின் என அழகிய பொன்னாலான என்பதைக் குறிக்கும். இறுதி அடியில் அது அம் சு வன் நத்தின் என (கடல்) நீரில் அழகான ஒளிபொருந்திய நந்தினைக்குறிக்கும். இவ்வாறு அஞ்சுவணம் வேறுவிதமாகவும் பொருள் கொள்ளப்படும் சந்தர்ப்பங்களும் உள்ளன.

தஞ்சை மாவட்டம் மாயூரம் தாலுக்கா திருக்கொம்பியூர் கோகுலேஸ்வர கோயிலின் வடசுவரில் உள்ள ஒரு கல்வெட்டில்

'ஐஞ்சுவண்ணத்தால் வந்த ஈழக்காசு கருங்காசு'......

என்னும் சொற்றொடர் அமைந்துள்ளது. கி.பி. 970 முதல் 985 வரை ஆட்சிபுரிந்த உத்தம சோழன் காலத்தில் அவனது 16-வது ஆட்சியாண்டில் செதுக்கப்பட்டது.

களவியற் காரிகை உரையில் மேற்கோள் காட்டப்பட்டுள்ள பாடல்கள் அமைந்துள்ள வரிசையில் பார்ப்போமேயானால் வச்சிர நாடு, வச்ர நாடர், வகுதாபுரி, வச்சிரநாட்டு, அந்துபார் என்னும் இடப்பெயர்கள் இவ்வாறு அமைந்துள்ளன. இதிலிருந்து பல்சந்த மாலைப் பாட்டுடைத் தலைவனாகிய வின்னன் என்னும் குறுநில மன்னன் ஆட்சிபுரிந்த நாட்டின் பெயர் வச்சிர நாடு என்றும் அக் குறுநிலமன்னன் ஆட்சிபுரிந்த நகர் வகுதாபுரி என்றும் அந்துபார் என்றும் வழங்கப்பட்டது என்பது புலனாகின்றது.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதி வச்சிரநாடு என் பதைப் பாண்டி மண்டலத்தில் உள்ள ஒரு கடற்கரைநாடு எனக்குறிப் பிடுகின்றது. வச்சிரம் என்றால் புல் எனவும்படும். பாண்டிநாட்டுக் கிழக்குக் கடற்கரையிலே திருப்புல்லாணி உள்ளது. இது முன்பு திருபுல்லணை என்று இருந்தது என்றும் பின்னர் மருவியது என்றும் கூறுவர். அந்தத் தர்ப்பம் என்னும் புல் காரணமாகத் தர்ப்பசயனம் என வழங்கலாயிற்று என்றும் கூறுவர். இராமர் இலங்கை செல்ல அணைகட்டிய காலத்தே தர்ப்பப்புல்லைப் படுக்கையாக அமைத்து அதில் படுத்து உறங்கிய இடமே தர்ப்பசயனம் ஆயிற்று என்றும் அது தமிழாக்கப்பட்டு திருப்புல்லணை என்று வந்து திருப்புல்லாணி என வழங்கப்பட்டது என்றும் அபிப்பிராயப்படுவர். இதனையே வச்சிர நாடு என்றும் கூறுவர். எது எவ்வாறாயினும் பல்சந்தமாலைப் பாட்டுடைத் தலைவரான வின்னன் குறுநில மன்னனாக ஆட்சிபுரிந்த நாடே வச்சிரநாடு எனப்பட்டது எனத் துணிந்து கூறலாம்.

வின்னனுடைய வச்சிரநாட்டின் தலைநகராக அமைந்தது வகுதா புரி. இந்த வகுதாபுரியை வகுதை என்பர். வகுத்தளித்த மண்டலம் என்பதிலிருந்து பிறந்தது வகுதை என்று கூறுகிறார் எம். சையிது முகம்மது அவர்கள். அவர் பதிப்பித்த நபி அவதார அம்மானையில் இடம் பெற்றுள்ள அவர் தம் முன்னுரையில் ‘பதின்மூன்றாம் நூற் றாண்டில் பிற்பகுதியில் ஆட்சிபுரிந்த குலசேகர பாண்டியன் தமது மகளை மணந்த தமது அமைச்சரான தகிய்யுத்தீன் பின் அப்துல் றகுமான் அவர்களுக்கு சீதனமாக ‘வகுத்தளித்த மண்டலமே’ வகுதை என்னும் பெயரோடு வழங்கப்பெற்றது’ என்று குறிப்பிடுகிறார். கீழைநாட்டில் காஹிறா (கெய்ரோ) எனக் காயல்பட்டனம் விளங்கு கிறது. அதே போன்று கீழக்கரை, கீழை நாட்டின் வகுதையாக விளங்குகிறது. வகுதை என்பது பகுதாது என்பதன் திரிபாகும். பல்சந்தமாலையில் வகுதை ஒரு நகரமாகவே குறிப்பிடப்பட்டுள்ளது.

நகுதா மரைமலர் சூழ்வாவிசூழ்வச்ர நாடர் தங்கள்
வகுதாபுரி.................

என்றே வந்துள்ளது.

வகுதைக்குரிய மற்றொரு பெயரும் பல்சந்தமாலையில் குறிப் பிடப்படப்பட்டுள்ளது. அந்துபார் என வழங்கப்பட்டுள்ளது.

சோனகர் வாழும் செழும்பொழில் சூழ்அந்துபாரனையார்

என்கிறது பல்சந்தமாலை. அந்து+பார் என்னும் இரண்டு சொற் களாலானது இப்பெயர். பார் என்பது கரை, நிலம், நாடு என்னும் பொருளில் அறபியில் உபயோகிக்கப்படுகிறது. மலைநாடு என்பது மலபார் என்றும் கறுப்பர் நாடு என்பது ஸன்ஸிபார் என்றும் வழங்கப்படுவதைக் காணலாம். அந்துபார் - இல் உள்ள பார் என்பதும் அதேபோன்று கரை அல்லது நாடு என்பதைக் குறிக்கும். அந்து என்பதைத் தமிழ்ச் சொல்லாகக் கொண்டால் அது அந்தம், முடிவு என்பதைக் குறிக்கும். சீவகசிந்தாமணியில் வரும் ஒரு செய்யு ளின் இறுதி அடி,

ஆதியந் தகன்ற நான்மைக்கொடியெடுத்
திறைமை கொண்டான் (முத்தியலம்பகம்: 484 (3082)

என வந்துள்ளது. அந்தம் என்னும் பொருளிலே இவ்வடியில் அந்து என்பது வந்துள்ளது. ஆக, தமிழ்ச்சொல் அந்து என்பதையும் பார் என்னும் அரபுச்சொல்லையும் அது கொண்டதாயின் கடைசியில் உள்ள கரை அல்லது நிலம் அல்லது பிராந்தியம் என்று அதற்குப் பொருள் கொள்ளலாம். அந்துபார் என்னும் பெயரில் வரும் இரண்டு சொற்களும் அறபுச்சொற்கள் எனக்கொள்ளின் அதற்கு வேறுவித மாகப்பொருள் கூறலாம். அறபுமொழியில் ஹம்து என்பது புகழ் எனப் பொருள்படும். ஹம்து என்பது அம்து என்றும் அந்து என்றும் திரிந்ததாகக் கொள்ளலாம். எனவே அந்துபார் என்பதைப்புகழ் பெற்ற கரை அல்லது புகழ் பெற்ற பிராந்தியம் எனப் பொருள் கொள்ளலாம். புகழ் பெற்ற நகரம் என்றும் பொருள் கொள்ளலாம். எது எவ்வாறாயினும் அந்துபார் என்பது பாண்டிமண்டலத்தில் உள்ள ஒரு கடற்கரை நாடான வச்சிரநாட்டின் துறைமுகப்பட்டினமாகப் புகழ் பெற்று விளங்கியது எனக் கூறலாம்.

***சிறப்பியல்புகள் :***

பல்சந்தமாலைப் பாடல்களில் உள்ள சிறப்பியல்புகளைப் பார்ப் போம். பாட்டுடைத்தலைவனான வின்னன் ஒரு பாடலில் ‘கலைமதி’ வாய்மைக் கலுபா என வருணிக்கப்பட்டுள்ளான். ‘கலைமதி’ என்பது பூரணசந்திரனைக் குறிக்கிறது. எல்லாக்கலைகளையும் பெற்று

முழுமதி விளங்குவதனாலே அவ்வாறு சுட்டப்படுகிறது. பூரணச் சந்திரனைப் போன்று குறைவில்லாத நிறைந்த வாய்மையை உடையவன் இத்தலைவன். ஒரு போதும் பொய் சொல்லமாட்டான். உண்மையே பேசுவான். அவனுடைய வழியில் வந்தவர்களும் அவ்வாறே திகழ்கின்றனர். அம்மட்டன்று. கற்பமைந்த தலைமையர் அவனுடைய வழியில் வந்தவர்கள் நல்லொழுக்கமுடையவர்கள் அவர்கள். இதனையே இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் பல்சந்த மாலை ஆசிரியர்.

கலைமதி வாய்மைக் கலுபா வழிவரும் கற்பமைந்த
தலைமையர்...........

எல்லாக்கலைகளிலும் இயற்கை அறிவிலும் வாய்மையிலும் சிறந்தவர்கள் என்பதனையும் 'கலைமதிவாய்மை' என்பதற்குப் பொருளாகக் கூறலாம்.

அத்தகைய மக்கள் வாழும் நாடு வச்சிரநாடு. அது மதிலால் சூழப்பட்டது. மதிலோ பெரிய மதில். மலை போன்று காட்சி அளிக்கிறது. மலையிலே பல சிகரங்கள் ஒழுங்காக அமைந்த குன்றுகள் இருக்கின்றன. அதேபோன்று மதிலில் உச்சி காட்சி அளிக்கிறது. மதில் ஒன்றுக்கு இருக்கவேண்டிய ஏழு உறுப்புக்களும் குறையாமல் அமைந்திருந்தன. அத்தகைய மதில் இவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளது.

.........ஏழ்பெரும் தேர்அங்கமும் பெற்ற நந்த சிர
மலையன மாமதில்.........

வின்னன் சாதாரண மனிதன் அல்லன். அவன் ஆற்றல் மிக்கவன். பொருள் ஈட்டுவதில் மிக்க திறமை உடையவன். ஈட்டத்தில் சிறந்து விளங்குதல் ஓர் ஆணின் சிறந்த பண்புகளில் ஒன்று. இதனையே திருவள்ளுவரும்

ஈட்ட மிவறி யிசை வேண்டா ஆடவர் (குறள்: 1013)

எனக்குறிப்பிட்டுள்ளமை காணலாம். அவ்வாறு எல்லா இடங்களிலும் சென்று சம்பாதிப்பதில் சிறந்து விளங்கியவன் வின்னன் என்பதையே

............ நவகண்டமேல்
ஈட்டம் புகழ் வின்னன் ............

எனப் பாடியுள்ளார்.

வச்சிரநாட்டுக்கு மற்றொரு சிறப்பு உண்டு. அதன் தலைநகர் வகுதாபுரி. வச்சிரநாட்டைச் சூழவர வாவிகள் உண்டு. அந்த வாவிகள் நிறைய மலர்கள் உண்டு. அவை தாமரை மலர்கள். அம்

மலர்களின் சிறப்பியல்பு அவை மலர்ந்தால் சிரித்துக் கொண்டிருப்பன போன்ற காட்சியை வழங்கும். அதனாலேயே அந்நாடு

நகுதா மரைமலர் சூழ்வாவி சூழ்வச்ர நாடர் தங்கள்
வகுதா புரி.........

என வருணிக்கப்பட்டுள்ளது.

தலைவன் தலைவிக்கு வார்த்தழையும் மிகுநாண்மலர்களும், கொண்டு வந்தான். வார் என்பது முலைக்கச்சு. தழை என்பது இலையோடு கூடிய சிறுகொம்பு. அன்றலர்ந்த வாசனை மிக்கப் புதுமலர்கள் மிகுநாண்மலர்கள் எனப்பட்டன. அவற்றைப் பெற்றுக் கொள்ளாவிடின் என்ன நடக்கும் என்பதையும் தலைவன் கூறத்தவற வில்லை. அவ்வாறு தான் கொண்டு வந்தவற்றைப் பெற்றுக் கொள்ளாவிடின் தனது உயிர் கட்டப்பட்டுவிடும். ஏனெனில் தேன் சொரிகின்ற ஐம்பூக்கள் என்ற மன்மதன் அம்பால் எமது உயிர் கட்டப் பட்டு வருந்த நேரிடும் என்று கூறினான். இக்கருத்துக்களே இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

............வாணுதலீர் மற்ற வார்தழையும்
மிகுநாண் மலர்களும் கொண்மின்கள் கொள்ளாவிடின் மதுவந்
தொகுகாமன் ஐங்கணை யாலெம தாவி துவக்குணுமே

வின்னன் இனத்தை சேர்ந்தவர்களைப் பற்றி மற்றொரு வருணனை இடம் பெற்றுள்ளது. அவர்கள் சிவந்த நிறத்தை உடைய வர்கள். அவர்கள் அரசரைப் போன்றவர்கள். பகைவரின் மானத்தை அழிப்பவர்கள். மானதர். (இறையனார் அகப்பொருள் உரை மேற் கோட்செய்யுள் 163) இறையனார் அகப்பொருளில் மானதன் என ஒருமையில் வந்திருக்கப் பல்சந்தமாலைச் செய்யுள் மானதர் எனப் பன்மையில் பயன்படுத்தி இருப்பதைக் காணலாம். செம்மையான குங்குமப் பூக்களைப் போலான மாலை அணியப்பட்ட புயங்களை உடையவர்கள் அவர்கள். அத்தகையோரைப் பல்சந்தமாலை ஆசிரியர் இவ்வாறு வருணிக்கிறார்.

செம்முக மானதர் செங்குங்குமப் புயர் சீர்........

இச்சொற்றொடரை முதலாம் அடியின் முற்பகுதியாகக் கொண் டுள்ள செய்யுளில் பொழில் எனப் பெயராகவும் பொழிய என வினை எச்சமாகவும் பொழி எனப் பெயர் எச்சமாகவும் ஒரே வேரிலிருந்து பிறந்த சொற்கள் வந்திருப்பதைக் காணலாம். அங்கே ஒரு சோலை உண்டு. அந்தச் சோலையிலே நறுமணம் எங்கும் பரந்து கொண்டு இருக்கிறது. பச்சைப் பசேலெனப் பசுமை நிறம் மலிந்திருக்கின்றது. மரங்களும் அவ்வளவு அடர்த்தியாக இல்லை. அத்தகைய சோலை யிலே தலைவி சந்திரனைப் போன்றும் தோழியர் சந்திரனைச் சூழ உள்ள நட்சத்திரங்களைப் போன்றும் இருக்கின்றனர். அப்போது

அங்கே தலைவன் வருகின்றான். தலைவியுடன் பேச வேண்டும் என்ற ஆசை தலைவனுக்கு ஏற்படுகிறது. அவன் ஓர் உபாயத்தைக் கையாளு கின்றான். ஒளி பொருந்திய நெற்றிகளை உடையவர்களே! என வியந்து அவர்களிடம் ஒரு கேள்வி கேட்கிறான். காவலை உடைய உங்களுடைய இந்தக் காட்டு வழியாக ஒரு யானை போவதைக் கண்டீர்களோ என வினவுகின்றான். அந்த யானை சாதாரணமான யானை அன்று. ஒரு மதம் பிடித்த யானை. கன்னமதம், கைமதம், கோசமதம் என்னும் மூன்று விதமான மதநீர் வடியும் யானை. அந்த மதநீர் மழை போன்று வடிகின்றது. மதம் பிடித்த யானை சத்தமிடு வது வழக்கம். அந்த யானையின் சத்தம் சாதாரணமானதொன்றன்று. மழையைப் பொழிகின்ற முகில்கள் ஒன்றோடொன்று மோதும்பொழுது ஏற்படும் பேரிடி முழக்கம் போன்று முழங்கிக்கொண்டு வந்தது அந்த யானை. அது கையை உடைய மலை போன்ற யானை. இவ்வாறு விவரித்துத் தலைவன் ஒரு சாட்டாக வினாவுகின்றான். இக் கருத்துக்களையே பல்சந்தமாலை ஆசிரியர்

.........சீர்சிறந்த
மைம்மலி வாசப்பொழில்வாய் மதியன்ன வாணுதலீர்
மும்மத மாரிபொழியப் பொழி முகில்போல் முழங்கிக்
கைம்மலை தான்வரக்கண்டதுண்டோநும்கடி புனத்தே.

என நயம் மிளிரப் பாடியுள்ளார்.

முஸ்லிம் மக்களின் மூதாதையரை அவர்தம் நிறத்தைக் கருத்திற் கொண்டு சீவக சிந்தாமணியில் (431) 'செம்முகம்' என வந்திருப் பதையும் காணலாம்.

வேங்கை மரம் பூத்தது. அதன் பயனாகத் தேன் துளிக்கப்படு கிறது. அதன் பொன் போன்ற பூக்களிலிருந்து தேன் சொரிகின்றது. வேங்கை மரம் பூத்தால் தினைப்புனம் அறுவடைக்குத் தயாராகி விட்டது என்பது பொருள். தினைப்புனத்திலிருந்து பயன்பெறக் கூடிய காலம் வந்து விட்டது என்று கூறுமாப்போல் வேங்கை பூத்தது. தினைப்புனத்தைக் கொய்க என்று கூறுவதாக அது அமைந்திருந்தது. இக்கருத்தே பல்சந்தமாலையில்

............தினைப்புனங் காய்கொய் துபோம்
பயன்விளை வாம்படி பூத்தது வேங்கை பணிமொழியே!

என வந்துள்ளது.

அந்துபாரிலே சோனகர் வாழ்ந்தனர். அவ்வந்துபாரில் செழுமை யான பூஞ்சோலைகள் இருந்தன. அவர்களுடைய தனிச்சிறப்பு அவர் கள் எல்லோரும் உதவி செய்வதாகும் அருள் செய்வதாகும். உலகை வளர்ப்பதற்கு அந்தச் சோனகர் அருள் புரிந்தனர். தருமம் செய்து

உலகை வளர்த்தனர். அள்ளி அள்ளிக் கொடுத்தனர். இல்லை யெனாது கொடை வழங்கினர். வானமே வெட்கும்படியாக வள்ளன் மையில் சிறந்து விளங்கினர். பொதுவாக வானம் மழையை வழங்கும். கேட்காமலே தரும். இல்லை என்னாது கொடுக்கும். எல்லோரும் பயன்பெற அளிக்கும். அத்தகைய வானத்திலிருந்து பொழியும் மழையும் வெட்கம் அடையும் அளவுக்கு வாரி வழங்கினர் சோனகர். முஸ்லிம்களாகிய சோனகர் வாரி வாரி வழங்கும் அளவுக்கு வழங்க முடியவில்லையே என்று வானம் நாணியது. இக்கருத்துக்களே,

வானது நாணக் கொடையா லுலகை வளர்த்தருளும்
சோனகர் வாழுஞ் செழும்பொழில் சூழந்துபார்

எனப் பல்சந்தமாலையில் உள்ள ஒரு செய்யுளின் முதல் இரண்டு அடிகளாக அமைந்துள்ளன.

தலைவி வருந்தினாள். தலைவியோடு பழகிய பறவைகள் இருக்கின்றன. அவளுடைய வருத்தம் அவளுடைய நெற்றியிலே தோன்றிற்று. இவ்வருத்தம் இவ்வாறு தோன்றியும் அந்தப் பறவை கள் அவளைக் கவனிக்கவில்லை. அவளுக்கு ஆறுதல் அளிக்கும் முகமாக நடந்து கொள்ளவில்லை. அவைகள் அவள் மீது பரிவு காட்டவில்லை. பரிவு கூறவில்லை. பொதுவாக அவளோடு பழகிய பறவைகள் தத்தம் வயிற்றை நிரப்ப இரை தேடிக்கொண்டிருந்தன. தலைவியுடன் பழகியவை நாரைகளாக இருத்தல் வேண்டும். ஏனெனில் நாரைகள் இரவிலேதான் இரை தேடுவது வழக்கம். அது தான் அவற்றின் இயல்பு. காலமல்லாத காலத்திலே—பகலிலே இரை தேடின. மானம் இல்லாது இரை தேடின. பிறர் துன்புறுவதைப் பொருட்படுத்தாது பறவைகள் இரை தேடின. இதனையே அழகாக பல்சந்தமாலை இவ்வாறு வருணிக்கிறது.

அந்துபார னையாள்
தானணி வாணுதல் கண்டும் பகலே தனித்தனியே
மானமி லாதிரை தேடும் பறவைக டாமழிந்தே

அழிந்தே என்பது ஈண்டு பரிவு கூர்ந்தே என்னும் பொருளில் வந்துள் ளது. தொல்காப்பியரும், ‘புதைந்த நெஞ்ச மொடழிந்தெதிர் கூறி விடுப்பினும்’ (பொருளதிகாரம் : 40) எனக் குறிப்பிட்டுள்ளார். திருக்கோவையாரில்

இன்னு மறிகில வாவென்னை பாவ மிருங்கழிலாய்
மன்னும் பகலே மகிழ்ந்திரை தேடும் வண்டானங்களே (189)

என்றும், பாண்டிக்கோவையில்

மிகலே புரிகின் றதுகண்டு மின்றிவ் வியன்கழிலாய்ப்
பகலே புரிந்திரை தேர்கின்ற நாணாப் பறவைகளே.

என்றும் வந்துள்ளமை காண்க.

தலைவனும் தலைவியும் பாலை நில வழியாகச் சென்றனர். அப் பாதையில் செல்லுதலினால் களைப்படைந்த அவர்கள் இருவரும் நிழல் உள்ள ஓர் இடத்தை நாடினர். அங்கே தங்கி சிறிது விளையாடி விட்டு அப்பால் செல்லத் தலைப்பட்டனர். அப்பொழுது அவர்கள் ஒரு வழிப்போக்கர் கூட்டத்தைச் சந்தித்தனர். ''நீங்கள் எந்த ஊரைச் சேர்ந்தவர்கள்? எங்கே போகிறீர்கள்?'' என வினவினர். அவர்கள் தாம் செல்லும் இடத்தைக் கூறினர். வழிநடை வருத்தமுற்ற இந்நங்கையோடு விரைவாகச் சென்றால் உனது நாட்டகம் அண்மை யில் தான் இருக்கிறது என்றும் கூறினர். அத்தோடு அவர்கள் நின்றுவிடவில்லை. அந்த இடத்தின் தன்மையையும் கூறினர். 'அங்கே பல சோலைகள் உண்டு. அந்தச் சோலைகளில் நல்லார் தான் பயில்கின்றனர். எத்தகைய நல்லவர்கள் என்றால் அவர்கள் அல்லா என்று ஒலிகேட்டவுடனே வந்து அவர்கள் செய்த சத்தியம் தவறாது நாளொன்றுக்கு ஐவேளை அல்லாஹ்வைத்தொழும் நல்லவர் கள். அவர்கள் யவனர்கள். ஏழு பெருங்கடல்களையும் கடந்து செல்பவர்கள். வியாபாரத்தின் உபாயங்கள் அனைத்தையும் இரகசி யங்கள் எல்லாவற்றையும் நன்கு உணர்ந்தவர்கள். அத்தகையோர் வாழும் இடத்தை வில்போன்ற வளைந்த நெற்றியை உடையவளும் நீயும் விரைவாகச் சென்று அடைவீர்கள்' எனவும் கூறினர். இக் கருத்துக்கள் பல்சந்தமாலையில் சுவை மிக்கனவாய் அமைந்துள்ள பாடல் இதுதான்:

வில்லார் நுதலியு நீயுமின் றேசென்று மேவுதிர்சூ
தெல்லா முணர்ந்தவ ரேழ்பெருந் தரங்கத் தியவனர்க
ளல்லா வெனவந்து சத்தியநந்தாவகை தொழுஞ்சீர்
நல்லார் பயிலும் பழனங்கள் சூழ்தரு நாட்டகமே.

இங்கே 'அல்லாவெனவந்து' என்பதை முன்னர் விளக்கினோம். சத்தியம் நந்தாவகை தொழுவதென்றால் என்ன? இஸ்லாமிய மூல மந்திரமான கலிமாவை முஸ்லிம் மக்கள் மொழிய வேண்டும். இஸ்லாத்தைத் தழுவுபவர்கள் முதன் முதலில் உச்சரிக்கவேண்டியது அக்கலிமாவே. 'லாஇலாக இல்லல்லாஹு முஹம்மதுறசூலுல்லாஹ்' என்பது அந்தக் கலிமாவென்னும் மூலமந்திரம். 'வணக்கத்துக்குரிய நாயன் அல்லாஹ் அன்றி வேறு யாருமில்லை; முகம்மது அவனின் திருத்தூதராவார்' என்பதுவே அதன் கருத்து. இதனை நாம் மொழிதல் வேண்டும். உள்ளத்தால் சிந்திக்க வேண்டும். அதற்கு இணங்க ஒழுகுதல் வேண்டும். இதனையே செய்கு அப்துல்காதிர் நெய்னா லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் தமது மக்காக் கலம்பகத்தில் உள்ள காப்புக் குறள் வெண்பாவில்,

வல்லான் முற்று முணர்ந்தான் றன்னைச்
சொல்லா லுளத்தாற் செயலாற் றொழுவாம்

எனத் தனித்தமிழில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார். இங்ஙனம் கலிமாச் சொல்லுதலை நமது வாக்குறுதி என்று கூறலாம். அது எமது சத்தியப் பிரமாணமாக அமைந்துவிடுகிறது.

அல்லாஹ்வின் ஏவல்களை எடுத்து விலக்கல்களைத் தவிர்த்து ஒழுகுவதாக உறுதிமொழி வழங்குகிறோம். அந்தச் சத்தியத்தில் எவ்விதக் குறைவும் இல்லாமல் எழுதுவதையே நாம் உறுதிப்படுத்து கிறோம். அவ்வாறு கூறி சத்தியப் பிரமாணத்தில் எதுவித குறைவும் இல்லாமல் நிறைவேற்றியவர்கள் அந்துபார் வாழ்ந்த சோனக மக்கள் என்பதைக் கூறவே, 'சத்திய நந்தா வகைதொழுஞ்சீர், நல்லார்' என அவர்கள் பல்சந்தமாலையில் வருணிக்கப்பட்டுள்ளனர்.

உலகில் எல்லாக் கடல்களிலும் சென்று வியாபாரம் செய்து வருபவர்கள் சோனகர் என்பதைக் குறிக்க 'ஏழ் பெருந் தரங்கத்திய வனர்கள்' என்ற சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. பொது வாக ஏழு என்னும் சொல் பல என்ற கருத்துப்படவே உபயோகப் படுத்தப்படுவதைக் காணலாம். சுவர்க்கம், நரகம், வானம், பூமி, கடல் முதலிய எல்லாவற்றையும் குறிப்பிடும்பொழுது ஏழு என்னும் அடை கொடுத்தே அழைக்கப்படுவதைக் காணலாம். எனவே இங்கே பல என்னும் பொருளில் ஏழு என்பது பயன்படுத்தப்பட்டிருக்கலாம். பழங்காலத்தில் இலங்கை 'எழுகடல் ஈழம்' என்றே அழைக்கப்பட்டு வந்தது. இராசராச சோழனின் மெய்க்கீர்த்தியில் (42) இச்சொற் றொடர் இடம் பெற்றிருக்கக் காணலாம். ஜயங்கொண்ட சோழனின் கல்வெட்டு ஒன்றிலும் (A.R. No. 107 of 1892) சுந்தர பாண்டியனின் கல்வெட்டு ஒன்றிலும் (A.R. No. 81 of 1892) 'ஏழ் கடலீழம் புக்கிலங் கேசுரனாகிய விக்கிரம பாண்டியன் பருமணி மகுடமும் தனிதாக்கி' என வந்துள்ளது. ஈழநாட்டைச் சுற்றிவர ஏழு கடல்கள் இல்லை எனினும் பல கடல்களை கடக்க வேண்டி இருப்பதால் அவ்வாறு பாடி இருக்கலாம். ஆனால் உண்மையிலே முஸ்லிம்கள் தொன்று தொட்டுக் கடல்களில் சென்று வணிகம் புரிந்தனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. அதனைக் கருத்திற்கொண்டே பல்சந்தமாலை ஆசிரியர் 'ஏழ் பெருந் தரங்கத்து யவனர்' என முஸ்லிம் மக்களை வருணித் துள்ளார்.

இத்தகைய பல்வேறு தனிச்சிறப்புக்களைக் கொண்டு, இப் பொழுது நமக்குக் கிடைத்துள்ள பல்சந்தமாலைப் பாடல்கள் திகழ் கின்றன. இவற்றைப் போற்றிப் பாதுகாப்பது நம் கடனே.

களவியற்காரிகையைப் பதிப்பித்த பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் அதன் முன்னுரையில் நல்ல பல கருத்துக்களைக் குறிப்பிட்டுள்ளார். 'பாண்டிக் கோவையேயன்றி அரையர் கோவை, வங்கர் கோவை, தில்லையந்தாதி, கோயில் அந்தாதி, நறையூரந்

தாதி, பொருளியல், கிளவிமாலை, கண்டனலங்காரம், பல்சந்தமாலை, கிளவித்தொகை, இன்னிசைமாலை, தமிழ் நெறி விளக்கம் முதலிய வேறு பல அரிய நூல்களும் களவியற் காரிகையிலுள்ள மேற்கோட் பாக்களின் குறிப்புக்களால் புலனாகின்றன. பொருளிலக்கணங்கற் பவருக்கும், தமிழ் இலக்கிய சரிதத்தை ஆராய்பவருக்கும், தேச சரித்திரத்தில் ஆராய்ச்சி செய்து வருபவருக்கும் இந்நூல் பல அரிய விஷயங்களை உணர்த்த வல்லது. அன்றியும் கவிதைச் சுவையை நுகர விரும்புவோருக்கும் இஃது ஓர் இனிய பெருவிருந்தாக அமைந்து கிடப்பதாம். ஆதலால், இந்நூல் தமிழ் மக்களால் விரும்பிப் போற்றப் பெறத்தக்க அருமை வாய்ந்தது என்பது ஒருதலை' என்று கூறுகிறார்.

பல்சந்தமாலையும் எமக்கு முழுமையாக கிடைத்திருப்பின் தமிழக முஸ்லிம் மக்களின், கலை, கலாச்சாரம், மார்க்கம், பண்பாடு, நடைமுறை, முதலியவற்றோடு, அவர்களின் வரலாற்றினையும் நன்கறிந்து கொள்வதற்கு அதனை நன்கு பயன்படுத்த முடியும் என்பது வெள்ளிடைமலை; கிடைத்துள்ள எட்டுப்பாடல்களாலே பல விஷயங்களை அறியக் கூடியதாக இருக்கிறது. முழுமையாக எப்பொழுது கிடைக்குமோ?

---

# மூன்றும் இயல்

## யாகோபு சித்தர் பாடல்

இந்திய நாட்டிலே மூன்று வைத்திய முறைகள் பின்பிற்றப்பட்டு வருகின்றன. ஆயுர்வேத வைத்தியமுறை, யுனானி வைத்தியமுறை, சித்த வைத்திய முறை என்பனவே அம்மூன்று முறைகளுமாகும். அம் மூன்றும் வாத பித்த சிலேட்டுமம் என்னும் உடற் கூற்றியலை அடிப்படையாகக் கொண்டே அமைந்துள்ளன. மனித உயிருக்கு இவை மூன்றும் இன்றியமையாதன என்பதே அம்மூன்று முறை களினதும் அடிப்படைத் தத்துவமாகும். வாத, பித்த, சிலேட்டுமம் என்னும் மூன்றினதும் ஒழுக்கநெறி சீர்குலைந்தால் நோய் அல்லது மரணம் ஏற்படும் என்பதே அம்மூன்று முறையும் போதிக்கும் கொள்கையாகும்.

இந்து வைத்திய முறையின் மிகப்பழமையான அங்கம் ஆயுர்வேத வைத்திய முறையாகும். ஆரியர் அவ்வைத்திய முறை தம்முடையது என்று கூறினும் அது யாரால் எப்பொழுது தோற்றுவிக்கப்பட்டது என்பது பற்றிய ஆதார பூர்வமான செய்திகள் கிடைக்கவில்லை. இக்கால இந்து மக்கள் இறைவனால் இயற்றப்பட்டது என்பர். சிலர் பிரமன் என்றும் மற்றும் சிலர் சிவன் என்றும் கூறுவர். சிவனே வைத்தீஸ்வரர் என அழைக்கப்படுவதால் சிவனால் இயற்றப்பட்டது எனவும் கருதுவர். ஆயுர்வேத வைத்தியமுறை கி.மு. ஒன்பதாம் அல்லது பத்தாம் ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் தோன்றியது என்று முடிவு செய்வர்.

அறாபியர் ஆரம்ப காலத்திலேயே தமக்கென ஒரு வைத்திய முறையையும் அறிவியலையும் பயின்று வந்துள்ளனர் எனக் கூறப்பட்ட போதிலும் அக்காலத்தில் வாழ்ந்த புகழ்பெற்ற அறபு வைத்தியர் களைப்பற்றி விரிவாக அறிய முடியவில்லை. கி.பி. ஏழாம் எட்டாம் நூற்றாண்டு கால இந்தியாவுக்கு வந்த சிறிய நாட்டைச்சார்ந்த அறபு மக்கள் பல இந்து நூல்களை தம்மோடு எடுத்துச் சென்றனர் என்றும் அவற்றை அவர்கள் அறபு பாரசீக மொழிகளில் மொழி பெயர்த்தனர் என்றும் ரி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இந்திய வைத்தியரின் நூல்களையும் தமது மொழியில் அவ்வறபு மக்கள் மொழி பெயர்த்துள்ளனர். பேராசிரியர் வில்சன் என்பவரின் கருத்துப்படி அவர்கள் கிரேக்க வைத்திய நூல்களைவிட இந்து வைத்திய நூல்களையே பெரும்பாலும் பின்பற்றினர்.

அலெக்ஸாண்டிரியாவில் இருந்த புகழ்பெற்ற நூல்நிலையம் தகர்க்கப்பட்டபொழுது அந்நூல்நிலையத்திலிருந்த கிரேக்க நூல்கள்

அறபு மக்களுக்குக்கிடைத்தன. அவர்கள் அவற்றைப் பாதுகாத்த தோடல்லாமல் அவற்றைப் பரப்பவும் வழிவகைகளை மேற்கொண் டனர். ஐரோப்பிய நாடுகள் அதனால் அறபு மக்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டவர்களாக உள்ளனர். அறபு மக்களே அத்தகைய நூல் களை ஐரோப்பிய நாடுகளுக்குக் கொண்டு சென்றனர். அநாகரிக ஐரோப்பா அஞ்ஞானத்தில் மூழ்கி இருந்த சமயம் இந்நூல்களை அங்கு கொண்டு சென்று அறபு மக்கள் ஓர் இணைப்புப்பாலமாக அமைந்தனர்.

'சித்த' என்னும் சொல் 'சித்தி' என்னும் சொல்லை அடியாகக் கொண்டது. 'அடையவேண்டிய ஒரு குறிக்கோள்' அல்லது 'பூரணத் துவம்' அல்லது 'முத்தி' என்னும் பொருள்களைக் கொண்டது அச் சொல். பொதுவாக சித்தி என்னும் சொல் அஷ்டமாசித்தியைக் குறிக்கிறது. யோக மார்க்கத்தை அனுசரித்து சித்தர்கள் அடையும் எட்டுவிதச் சித்திகள், அல்லது எட்டுவிதப் பயன்கள் உள. அவையாவன : 1. அணிமா-அணுவாகுதல் ; 2. மகிமா-பெரி தாதல் ; 3. காமா-பாரமாகுதல் அல்லது சூக்குமமாகுதல், 4. இலகமா-இலேசாகுதல் ; 5. பிராத்தி-விரும்பியவற்றை அடைதல் ; 6. பிராகாமியம்-இயற்கைக்கு விரோதமாக விரும்பிய இடத்திற்குச் செல்லல். 7. ஈசத்துவம்-ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத் தொழில் இயற்றல், 8. வசித்துவம்-யாவற்றையும் தன் வசப் படுத்துதல் அல்லது இயற்கையை மாற்றி தாம் விரும்பிய வடிவமாதல். மேலே குறிப்பிட்ட ஆற்றல்களைப் பெற்றவர்கள் சித்தர்கள் என அழைக்கப்பட்டனர். இத்தகைய ஆற்றல்களைப் பிறப்பினாலும் சிலர் எய்துவர் என்பர். அவ்வாறு கூறுவோர் ஊழ்வினைப் பயனை அடிப் படையாக வைத்தே கூறுவர். தொடக்கத்தில் பதினெண்சித்தர்கள் வாழ்ந்தனர் என்று கூறப்படுகிறது. திருமூலர் முதலானவர்களே அத்தகையோராவர்.

**தமிழும் சித்தர்களும் :**

தமிழின் எல்லாத் துறைகளிலும் சித்தர்கள் எழுதி உள்ளனர். அவர்கள் தமது வைத்தியமுறைகளைக் கவிகளாகவே பாடி வைத் துள்ளனர். பண்டைக்காலத்தில் சித்தர்கள் அறிவியல் வல்லுநர் களாகத் திகழ்ந்துள்ளனர். இயற்கை கடந்த ஆற்றல் அவர்களிடம் இருந்ததோடு அவர்கள் பண்பாட்டாளராகவும் புத்திகூர்மைமிக்கவர் களாகவும் ஆன்மிகத்துறையில் சிறந்து விளங்கியவராகவும் திகழ்ந் தார்கள். வடமொழியில் இயற்றப்பட்டுள்ளவற்றை விட தமிழ் சித்தர் களின் படைப்புக்கள் சிறந்தனவாகக் கருதப்பட்டன.

சித்தர்களின் காலத்தை நிர்ணயிப்பது கடினமான ஒரு காரியம் என ரி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் தமது அகராதியில் குறிப் பிட்டுள்ளார். சித்தர்கள் அனைவரும் வைத்தியத்துறையில் மட்டும்

அல்லாது ரசவாதம் முதலிய பல்வேறு துறைகளிலும் சிறந்து விளங்கி உள்ளனர். மனிதவர்க்கத்தைத் தீண்டக்கூடிய எல்லா நோய் களையும் தீர்ப்பதற்கான மருந்துவகைகளையும் அம்மருந்துவகைகளை எவ்வாறு தயார் பண்ணலாம் என்பதையும் மிக விரிவாக விளக்கி உள்ளனர். அவற்றைப் படிப்பவர்கள் தயார் செய்யக்கூடியனவாய் அம்மருந்துகள் அமைந்துள்ளமையைக் காணலாம். இந்த வைத்திய முறையை அறியாத கிராமமோ குடிசையோ தமிழ்நாட்டில் இல்லை என்றே கூறிவிடலாம். தன்னை ஒரு நோய் பீடித்தால் அல்லது தனது பிள்ளைகளை நோய் தீண்டினால் எவ்வாறு குணப்படுத்தலாம் என்பதைத் தமிழ்நாட்டுப் பெண்கள் அறிந்திருந்தனர் என்பர். இது **'வீட்டுவைத்திய'** முறையாகவே மாறிவிட்டது என்றும் கூறிவிடலாம். சில சமயங்களில் இந்த வைத்திய முறை பரம்பரை பரம்பரையாகப் பெறப்பட்டது. வாழையடி வாழையாக வந்த வைத்தியர்கள் இந்த வைத்தியத்துறையில் பயின்று வெற்றி பெற்றுள்ளனர்.

மனித வாழ்க்கைக்கு மூச்சுவிடுதல் இன்றியமையாதது. அதே போன்று சிறந்த முறையில் மூச்சுவிடும் பழக்கமும் அவசியமாகும். அத்தகைய பழக்கத்தினால் நோய்களிலிருந்து விடுதலை பெற முடியும். புத்திக் கூர்மையான கட்டுப்பாடுடன் மூச்சுவிட்டால் நீண்ட காலம் வாழலாம் ; நோய் நொடியின்றி சீவிக்கலாம். உலகிலே சக்தி உள்ளவர்களாகக் காலம் கழிக்கலாம். தீயவற்றை எதிர்க்கும் ஆற் றலைப் பெறமுடியும். கவன ஈனமாக அல்லது கட்டுப்பாடற்ற முறையில் மூச்சுவிட்டால் மனித வாழ்க்கை குறுகிவிடும். இந்த இரகசியத்தைச் சித்தர்கள் தெரிவித்துள்ளனர். இதனை அவர்கள் வாசிப்பழக்கம் என்பர். இயற்கையின் வழி மிக எளிதானது. இலகு வாகப் பின்பற்றக்கூடியது. முக்கியத்துவம் அற்றது என்று இதனைக் கருதுவோர் இதனைப் புறக்கணித்துவிடுவர்.

ஆரியரின் வருகைக்கு முன்னரே தென்னிந்தியாவில் வழக்கி லிருந்த சித்தவைத்திய முறை பெரும்பாலும் இப்பொழுது வழக்கற்றுப் போய்விட்டது என்றே கூறலாம். அதன் பயனாக சித்த வைத்திய நூல்கள் பல அழிந்துபோயிருக்கலாம். கிழக்கு இந்திய கம்பெனி இந்தியாவை ஆட்சி செய்த காலத்தில் சித்த மருந்துக்கள் தயார் செய்யும் ஆலைகள் மூடப்பட்டன. அவற்றின் தயாரிப்புக்கள் தரமற்ற வையாயும் அபாயகரமானவையாயும் இருந்தன என்ற குற்றச்சாட்டின் மீது மூடப்பட்டன. இதன் அடிப்படை நோக்கம் மேற்கத்திய வைத்திய முறையை இங்கே பிரபலப்படுத்துவதாகும்.

சிறப்பாகக் குறிப்பிடக்கூடிய போகர், புலிப்பாணி போன்ற சீன மதகுருக்கள் இந்தியாவுக்கு வந்து தமிழ் வைத்திய முறையைக் கற்றனர். இராமதேவரும் சித்த வைத்திய முறையைக் கற்று

அறாபியா, எகிப்து போன்ற நாடுகளில் இவ்வைத்திய முறையைப் பரப்பினார் என்று ரி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இரசாயனம் பற்றிய அறிவு இந்தியாவிலிருந்தே மேற்கு நாடுகளுக்குச் சென்றிருத்தல் வேண்டும். போகர், இராமதேவர் என்னும் யாகோப் போன்ற சித்தர்கள் தாம் கற்றவற்றை தாம் சென்ற இடங்களிலெல்லாம் பரப்பினர். அத்தகையோர் அறாபியர், துருக்கி, சீனம் போன்ற நாடுகளுக்குச் சென்று சித்த வைத்திய முறையைப் பரப்பி உள்ளனர் என்பது புலனாகின்றது.

பல்வேறு கோணங்களிலிருந்து பார்க்கும்பொழுது சித்தர்களின் போக்கு மத்திய கால இந்திய சூபிகளின் கொள்கைகளைப் பெரிதும் ஒத்திருந்தன என டாக்டர் ஆர். வெங்கடராமன் அவர்கள் தமது ஆய்வு நூலில் குறிப்பிட்டுள்ளார். இக்கூற்றுக்கு ஆதாரமாக ஜெ. என். பர்குஹார் என்பவர் 'இந்த (தமிழ் சித்த) இயக்கம் முஸ்லிம் செல்வாக்கின் பிரதிபலிப்பாயிருக்கலாம்' எனத் தமது இந்திய சமய இலக்கிய வரலாறு என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளதை எடுத்துக் காட்டியுள்ளார். 'இந்திய வைத்தியர்கள் அறிந்து கொள்வதற்குப் பல்லாண்டுகளுக்கு முன்னர் அறாபியர் நாடி பற்றிய செய்முறைப் பரீட்சையில் மூலம் நோயின் குணங்களை அறியும் ஆற்றலைப் பெற்றிருந்தனர் என்றும் அறபு நாடுகளிலிருந்து வந்த இந்திய வைத்தியர்கள் நாடியைப் பரீட்சிக்கும் முறை பற்றிய அறிவைத் தம்முடன் கொண்டு வந்திருக்கலாம் என்றும் ஒ. பி. ஜக்கி என்பவர் குறிப்பிட்டுள்ளார். ஏறக்குறைய கி.பி. பதின்மூன்றாம்—பதினேழாம் நூற்றாண்டுகட்கு இடைப்பட்ட காலகட்டத்தில் நாடி பற்றிய அறிவின் செல்வாக்கைத் தமிழ் சித்த வைத்தியமுறை பெற்றிருக்கலாம் என்று அவர் கருத்து வெளியிட்டுள்ளார்.

தமிழ் சித்த நூல்களில் சோனகரின் (அறாபியரின்) வைத்திய ரசாயன முறை பாதிப்பை ஏற்படுத்தியது என்பதற்கு அந்நூல்களே சாட்சி பகருகின்றன. ஞானவெட்டியான் என்னும் நூலில் 'சோனகரால் வந்த சேர்ணஉப்பு' பற்றிய குறிப்பு வந்துள்ளது. சித்த வைத்திய முறையில் அறாபியரின் தொடர்பினால் ஏற்பட்ட பாதிப்புப் பற்றித் தமிழறிஞர்கள் பலர் கருத்துத் தெரிவித்து உள்ளனர். பேராசியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் சித்த வைத்திய நூல்களில் அறாபியரின் செல்வாக்கு எத்துணை வலுவுள்ளது எனின் சில அறிஞர்கள் 'சித்த வைத்திய நூல்களுள் பெரும்பாலானவை காயல்பட்டண முஸ்லிம்களால் எழுதப் பட்டுள்ளன' எனக் கருதுவர் எனக் குறிப்பிட்டுள்ளார்.

இராமலிங்க சுவாமிகளின் பாடல்களிலே சூபிப்புலவரின் செல்வாக்கு அதிகம் காணப்படுவதாக அறிஞர் அபிப்பிராயப்படுவர்.

திருவாளர் சுப அண்ணாமலை அவர்கள் ‘குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்களின் கவிதை நூல்கள் இராமலிங்க சுவாமிகளின் இலக்கியப் பின்புலமாக அமைந்தன’ என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர், ‘அறபு நாட்டைச் சேர்ந்த சூபிக்கவிஞரான தணிகை மணிப்பிரான் என்பவரின் மூன்றாவது மாணவனாக இராமலிங்க சுவாமிகள் இருந்தார் என மெய்வழி ஆண்டவர் என்பவர் குறிப்பிட்டுள்ளார்’ என்பதையும் எடுத்துக்காட்டி உள்ளார். எனினும் தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்கள் எழுதிய இராமலிங்க சுவாமிகளின் வாழ்க்கை வரலாறு பற்றிய நூலில் இவ்விவரம் குறிப்பிடப்படவில்லை என்பது ஈண்டு நோக்கற்பாலது என டாக்டர் வெங்கடராமன் சுட்டிக்காட்டி உள்ளார்.

**முஸ்லிம் சித்தர் :**

ஒரு முஸ்லிம் புலவரால் இயற்றப்பெற்ற முதல் சித்தர் பாடல், யாகோப் சித்தரினது எனக் கருதப்படுகின்றது. இந்த யாகோப் என்னும் பெயர் இஸ்லாமிய மரபுக்கியைய அமையவில்லை. இஸ்லாத்திலே அப்பெயர் யாகூப் என்றே வழங்கப்பட்டுவருகிறது. ஆனால் இந்தச் சித்தர் தம்மை யாகோப் என்றே அழைத்துள்ளார். இஸ்லாமியப் புலவர்களால் இயற்றப்பட்ட சித்தர் பாடல்களுள் காலத்தால் முந்தியது யாகோபு சித்தர் பாடல் என்பது பெருவழக்கு.

இவர் முன்பு இந்துவாக இருந்து பின்னர் இஸ்லாத்தைத் தழுவியுள்ளார். இந்த விவரங்களை இவ்வாசிரியரே தமது நூல்களில் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். முன்பு தமது பெயர் இராமதேவர் என இருந்தது என்பதைப் பல இடங்களில் இவ்வாறு தமது பாடல்களில் இவர் குறிப்பிட்டுள்ளார்.

ஆதியிலே இராமனென்று பேரும்பெற்று (வைத்தியம் 300 : 1)

போகாதே என்பேரா ராமதேவர்
தோய்ந்திட்டேன் ஆதியிலே ராமதேவர்
(யாகோபு வகாரக் களங்கு என்னும் வாத வைத்தியம் 300 : 74 ; 241)

ஆதியிலே என்பேரு ராமதேவர் (யாகோபு குருநூல் : 55)
ஆதிமுத லென்பேரு இராமதேவர்
(யாகோபு வைத்திய சிந்தாமணி : 6)

யாகோபு சித்தர் தாம் எந்தக் குலத்தைச் சேர்ந்தவர் என்பதையும் விளக்கமாகக் கூறி உள்ளார். தாம் பிறந்த குலத்தின் ஆதி மூதாதையர் யார் என்பதையும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். அத்தோடு நின்றுவிடவில்லை. தமது குலத்துக்கு யார் பெரிட்டார் என்பதையும் விவரித்துள்ளார். தாம் எவ்வாறு பெயரிடப்பட்டார் என்பதையும் இவ்வாறு பாடி உள்ளார்.

அகலிகையைத் தேவேந்திரன் சிநேகஞ்செய்ய
அதிற்பிறந்த தெங்கள் குல மன்னாள்தன்னில்
சுகமாக மறைந்ததினால் கௌதமரும்
சூட்சமுள்ள மறவரென்றும் தேவரென்றும்
செகமெச்சப் பேருமிட்டா ரதிலிருந்து
தீரமுடனேராம தேவரென்று
மகபதியாம் அகத்தியரும் பேருமிட்டு
வாழ்த்தினார் முனிவரெல்லா மகிழ்ந்திட்டாரே.
(யாகோபு வைத்திய சிந்தாமணி : 18)

மற்றொரு சந்தர்ப்பத்தில் இஸ்லாத்தைப் பின்பற்றியதன் பின்னர் தனக்குச் சூட்டப்பட்டுள்ள பெயரான யாகோபு என்பதனையும் அதற்கு முன்னர் தமது பெயரான இராமதேவர் என்பதனையும் ஒரு சேர ஒரே பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

உற்றுப்பார் யாகோபு இராமதேவர்
உறுதியாம் எழுநூறு குருநூல் முற்றே.
(யாகோபு வைத்திய சிந்தாமணி : 700)

யாகோபு சித்தர் தம்மைப்பற்றிக் குறிப்பிடும் பொழுதெல்லாம் தம்முடைய பெயருக்கு அடைகொடுத்தே விவரித்துள்ளார். பல பாடல்களில் யாகோப் அவர்களின் பெயர் இடம் பெற்றுள்ளது. யாகோபு வைத்தியம் 300 என்னும் பகுதியில், 'மறை புகழும் யாகோபு' (30) என்றும் 'கோன் என்ற யாகோபு' (58) என்றும் வந்துள்ளமையைக் காணலாம். யாகோபு சுண்ணம் என்னும் தொகுதியில் 'வித்தகாரம் யாகோபு விளம்பினாரே' (19) என்றும் 'கணக்கறிந்த யாகோபு சொன்னவாறே' (54) என்றும் 'சுருதியுற்ற யாகோபு' (101) என்றும், புகலரிய யாகோபு (144) என்றும் இடம் பெற்றுள்ளன. யாகோபு வகாரக்களங்கு என்னும் வாத வைத்திய நூலில் யாகோபின் பெயர் அடைபெற்று 'உற்றுணர்ந்து யாகோபு உரைசெய்தேனே' (8) என்றும் 'வேதாந்த யாகோபு' (148) என்றும் 'தீர்க்கலான் யாகோபு' (255) என்றும் 'பேசரிய யாகோபு என் பெயராச்சு' (237) என்றும் வந்துள்ளது. யாகோபு தமது நாளாந்த வாழ்க்கையின் ஒரு பகுதியை,

வனந்தனிலே சருகரித்துக் காலந்தள்ளு
வடிவான யாகோபுவகை சொன்னாரே (120)

என வாத வைத்தியம் 300 இல் வந்துள்ளமையைக் காணலாம். யாகோபு வைத்திய சிந்தாமணியிலும் 'தாஷ்டிகவான் யாகோபு சாற்றுவாறே' (236) என வந்துள்ளது. 'கூறுகின்ற மதியூகி யாகோப்' (390) என்றும் அவர் தம்மை வருணித்துள்ளார்.

ஐம்பத்தைந்து பாடல்களைக் கொண்ட யாகோபு குருநூலில் உள்ள ஐம்பத்து நான்காவது பாடலில் தம்மை ஒரு சித்தன் என்றும் தாம் இயற்றிய நூல்களின் எண்ணிக்கை பதினேழு என்றும் அவை அனைத்தையும் பார்த்தவன் ஒரு சித்தன் என்றும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

சுந்தரம்போல் பதினேழு நூல்கள் சொன்னேன்
சுருக்கமாய் வாதத்தைப் பார்க்கச் சொன்னேன்
வந்தரச வாதமது செய்வதற்கு
வகையுடனே நூல்களெல்லாம் சொல்லி வைத்தேன்
விந்தையுட னிடைபாகஞ் செய்பாகங்கள்
விரும்பியே தெரிவதற்குச் சொல்லிவிட்டேன்
சிந்தைமகிழ் வாகயெந்நூல் முழுதும் பார்த்தோன்
சித்தனென்று யாகோபு செப்பினாரே.

யாகோபு சித்தர் எப்பொழுதும் தம்மைப்பற்றித் தாமே குறிப்பிடும் பொழுது வினைச்சொற்களை உயர்திணைப் பன்மை விகுதியைக் கொண்டே - கௌரவப்பன்மை விகுதியைக் கொண்டே குறிப்பிட்டுள்ளார்.

யாகோபு வைத்திய நூல்களிலே பல இடைச்செருகல்கள் இருப்பது சில பாடல்களைப் படிக்கும்போது புலனாகின்றது. 'யாகோபுடைய கருத்தை யான் உங்களுக்குச் சொன்னேன்' என்னும் கருத்துடைய ஒரு வாக்கியம் வாதவைத்தியம் 300 என்னும் தொகுதியில் இடம்பெற்றுள்ளது. இப்பாடலை இதனைப் பதிப்பித்தவர் பாடியிருக்கிறாரோ என்று ஐயுறும் வண்ணம் அந்தப்பாடல் அமைந்துள்ளது. உடல் எவ்வாறு தங்கநிறமடையும் என்பதையும் ஒருவரிடமும் சொல்லக்கூடாத உண்மை இது என்பதையும் அப்பாடல் குறிப்பிட்டுள்ளது. அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

தண்மையாய்க் களங்கமதைச் செந்தூ ரித்துத்
தாட்டிகமா யுண்டிடவே மேனி தங்கம்
உண்மையிது சத்தியமா முற்றும்பாரு
ஒருவருடன் சொல்லாதே உண்மைசொன்னேன்
வன்மையிது பேசவில்லை மகத்தாஞ்சித்தர்
வாய்திறக்கா வசனத்தைச் சொல்லினேன்யான்
தண்மையாய்ப் பார்த்துணர் யாகோபு சொன்ன
கருத்தையா னுங்களுக்குக் கருதினேனே.

(வாதவைத்தியம் 300 : 287)

'தண்மையாய்ப் பார்த்துணர்' என இப்பாடலில் வந்துள்ளது. அன்பு பொதிந்த கண்ணோட்டத்தினால் பார்த்து உணர்ந்து பயனடைவாயாக என்று தொனிக்கவே அவ்வாறு பாடப்பட்டுள்ளது.

சதுரகிரி ஒரு மலைப்பிரதேசம். ஸ்ரீவில்லிபுத்தூர் அருகாமையில் உள்ளது. அந்தச் சதுரகிரியிலே இராமதேவர் வாழ்ந்து வந்தார். அதனையே வைத்தியம் 300 என்னும் நூலில் அவர் இவ்வாறு சுட்டிக் காட்டியுள்ளார்.

ஆதியிலே இராமனென்று பேரும்பெற்று
அன்புடனே சதுரகிரி தனிலிருந்து (1)
தேனென்று சதுரகிரி மத்தி வந்தேன்
(யாகோபு வைத்தியம் 300 : 2)

இராமதேவர் மக்காவுக்குச் சென்று இஸ்லாத்தை தழுவிய பின்னர் அவர் யாகோப் என நாமஞ்சூட்டப்பட்டார். முஸ்லிமாக சதுரகிரிக்கு வந்தபின்னர் சதுரகிரி என்னும் பெயரே மாறிவிட்டது. மற்றச் சித்தர்கள் அதன் பெயரைத் 'துலுக்கன் மொட்டை' என மாற்றி விட்டனர். இதனையே யாகோபு இவ்வாறு அமைத்துப் பாடி யுள்ளார்.

நானென்று அங்கிருக்கும் போதுசித்தர்
நலமாக வந்தென்னைக் கண்டுகொண்டு
கோனென்று நானிருந்த இடந்தனக்குக்
கொடுத்தார்கள் துலுக்கன்மொட்டை என்றுபேரே.
(யாகோபு வைத்தியம் : 2)

யாகோபு அவர்கள் மக்காவுக்குச் சென்று இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட நிகழ்ச்சியைப் பல பாடல்களில் விவரித்துள்ளார். அவர் ஆகாயமார்க்கமாய் மக்காவுக்குச் சென்றார் எனக் குறிப்பிட்டுள்ளார். எவ்வாறு சென்றார் என்பதை அவர் விளக்கவில்லை. அதனைப்பற்றி இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

ஆதியிலே இராமனென்று பேரும்பெற்று
அன்புடனே சதுரகிரி தனிலிருந்து
நீதியுடன் ககனமாய் மக்கஞ்சென்று
நேர்மையுடன் வலிமாரைக்கண்டு போற்றி
கோதில்லா தங்கிருக்கும் போதெனக்குக்
கொடுத்தார்கள் வலிமார்கள் யாகோபென்று
வாதியென்று உலகோர்கள் சொல்லவேதான்
மக்காவிற்றானிருந்து பின்புதானே
(வைத்தியம் 300 : 1)

மக்காவைப்பற்றிய வேறு குறிப்புக்களையும் யாகோபு சித்தர் தமது நூல்களிலே அங்கும் இங்குமாகக் குறிப்பிட்டுள்ளார். தான் கண்ட மக்காவிலே யார் யார் இருந்தனர் என்பதை ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தாமிருந்த இடத்திலிருந்து எவ்வளவு தொலைவில் மக்கமா நகரம் அமைந்துள்ளது என்பதை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

சாதிப்பார் மக்காவில் தேசத்தோர்கள்
சரியாக ஐந்நூறு யோசனைதான் தூரம்
(யாகோபு சுண்ணம் 300 : 153)

மக்காவிலே உள்ள இறைநேசர்கள் ஆடிப்பாடி மகிழ்ந்தனர் என்பதை

துஞ்சவே மக்காவின் தேசந் தன்னில்
துடியாக வலிமார்க ளாடும்பாட்டை
(யாகோபு சுண்ணம் 300 : 215)

எனக்குறிப்பிட்டுள்ளார். மற்றொரு பாடலில்

விளங்கவே மக்காவின் தேசந்தன்னில்
விடுபட்ட வலிமார்கள் கோடாகோடி
(யாகோபு சுண்ணம் 300 : 298)

என்றும் இன்னெரு பாடலில்

புகுந்திட்டேன் மக்காவின் தேசந்தன்னில்
புகலரிய பெரியோர்கள் மெத்தவுண்டு
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் 300 : 5)

என்றும் குறிப்பிட்டுள்ளார். தாம் பல தேசங்கட்குச் சென்றதாகவும் இறுதியில் மக்காவிற்குச் செல்லும் வாய்ப்புக் கிட்டியதாகவும் இவ்வாறு பாடி உள்ளார்.

பாடு பெறத் தேசங்கள் மிகவுஞ் சுத்தி
பருதிமதி உலகெல்லாம் குளிகையிட்டு
மேடுபெற மக்கத்திற் சென்றுபுக்கு
மேலான பெரியோர்கள் நீதிதன்னை.........
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் : 13)

மார்க்கமாய் மக்காவின் தேசந்தன்னில்
வழியோடே சென்றறிந்து.
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் : 164)

கருணையாய் மக்காவின் தேசந்தன்னில்
காரியமாய் குளிகையிட்டு நகரிற் சென்றேன்
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் : 175)

தோய்ந்திட்டேன் ஆதியிலே ராமதேவன்
துடியான மக்காவின் தேசம்புக்கி
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் : 241)

கன்னல் போல் மக்காவின் தேசந்தன்னிற்
கற்றுணர்ந்தேன் யாகோபு கருவிட்டேனே
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் : 270)

பிருதியுற்று வடதேசம் மக்காசென்று
பேதமது யில்லாமற் பேசினேனே.
(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 7)

ஆதியிலே யென்பேரு ராமதேவர்
அருமையுட னனேகநூல் சொல்லி வந்து
நீதியுடன் மக்கத்திற் போயிருந்து
நிலைபெறவே இந்நூல்கள் சொல்லிவைத்தேன்
(யாகோபு குருநூல்)

யாகோப் சித்தரின் நூல்களைப் பதிப்பித்தவர் ஜி. இராமசாமிக் கோன் என்பவர். அவர் மதுரை வடக்கு மாசிவீதியில் வாழ்ந்து வந்தவர் என்பதனை அவருடைய பதிப்புக்களே குறிப்பிடுகின்றன. அந்நூல்களைப் பதிப்பிப்பதற்காக மதுரை வித்வான் தா. குப்புசாமி நாயுடு அவர்கள் பரிசோதித்தமை பற்றிய குறிப்பும் நூலில் முகப்புப் பக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவை குருசாமி கோனாருக்குச் சொந்தமான ஸ்ரீராமச்சந்திர விலாஸ் அச்சகத்தில் பதிப்பிக்கப் பட்டுள்ளன. பல பதிப்புக்கள் வெளிவந்துள்ளன.

யாகோபு சித்தர் அவர்கள் இயற்றிய பதினேழு சாஸ்திரங்களையும் பதிப்பாசிரியர் இராமசாமிக்கோன் அவர்கள் பன்னிரண்டு தொகுதிகளாக வெளியிட்டுள்ளார். வைத்திய சிந்தாமணி, குருநூல், சுண்ணக்காண்டம், சுண்ணம், சுண்ண சூஸ்திரம், லோகச் செந்தூரம், செந்தூர சூஸ்த்திரம், சூஸ்திரம், வகாரக்களங்கு, பஞ்சமி மித்திரம், தண்டகம், இடைபாகம், செய்பாகம், வைத்ய வாதசூஸ்திரம், வைத்தியம், கல்லாட சாஸ்திரம், சாஸ்திரத்துக்கான அரும்பத உரை என்பன பதினேழு நூல்களுமாகும். இவற்றின் ஏழாவது பதிப்பு 1969 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

**இஸ்லாமியக் கருத்துக்கள் :**

தாம் எவ்வாறு இஸ்லாத்தைத் தழுவினார் என்பதையும் அதற்கான வாய்ப்பு எவ்வாறு ஏற்பட்டது என்பதையும் இஸ்லாத்தில் தம்மைச் சேர்ப்பதற்கு முஸ்லிம் மக்கள் என்னென்ன வழிமுறைகளைக் கடைப்பிடித்தனர் என்பதையும் தமது பாடல்களில் விவரமாக விளக்கி உள்ளார் யாகோபு சித்தர் அவர்கள்.

தாம் மக்காவுக்குச் சென்று வீதியிலே போகும்பொழுது தோழர் எனப் பொருள்படும் சாய்பு கண்டதாகவும் அந்தச் சாய்பு மூலமாக மெய்ஞ்ஞான அறிவைப் பெற்றதாகவும் இவ்வாறு பாடியுள்ளார் யாகோபு சித்தர் அவர்கள்.

ஆதிமுத லென்பேரு ராமதேவர்
அடைவாகக் குளிகையிட்டு மக்காதேசம்
வீதியிலே சென்று புக்கச் சாய்புகண்டு
விரும்பியே சாஸ்திரத்தில் மிகவும் பேசி
நீதியா யென் மனதிற் றோற்றமாகி
நேராகக் கொண்டணைத்து நேர்ந்துபார்த்து
ஓதியதோர் ஞானத்தின் செயலுங்கண்டேன்
உற்றுணர்ந்து பிற்பாடு உறுதியானேன்
(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 6)

அவர்கள் தமக்கு யாகோப் என்று பெயரிட்டனர் என்று கூறியுள்ளார் யாகோபு சித்தர். அது உண்மைப் பெயராக அமைந்துவிட்டது. அவர் சுன்னத்தும் செய்யப்பட்டார். இஸ்லாத்தில் சுன்னத்துச் சடங்கு பிரதானமான ஒரு கடமையாகும். சுன்னத்து என்னும் அரபுச் சொல்லின் பொருள் மரபு, பழக்கவழக்கம் என்பனவாகும். தொழுகையில் சுன்னத்துத் தொழுகை என்னும் பொழுது அது விருப்பத்துக்குரிய தொழுகையைக் குறிப்பிடுகிறது. அத்தகைய தொழுகையை விரும்பினால் நிறைவேற்றலாம். அல்லது விட்டுவிடலாம். விட்டுவிடுவது குற்றமாகாது. ஆனால் அதனை நிறைவேற்றினால் நன்மை உண்டு. கட்டாயமாக நிறைவேற்றப்படும் பர்ளுத் தொழுகையிலிருந்து இது வேறுபட்டது. முஸ்லிம் சிறார்களுக்கு நிறைவேற்றப்படும் சுன்னத்துச் சடங்கு என்னும் பொழுது இங்கே சுன்னத் என்பது வழக்காறு, மரபு வழி என்பதனையே குறிக்கின்றது. இந்த சுன்னத் என்பதனை 'விருத்த சேதனம்' என்றும் வழங்குவர். ஈழநாட்டிலே பெரும்பாலும் இப்பழக்கம் சுன்னத் சடங்கு என்றே அழைக்கப்படுகிறது. தமிழ் நாட்டில் பெரும்பான்மையாக இவ்வழக்கம் மார்க்கக் கலியாணம் என்று வழங்கப்படுகிறது. 'சுன்னத்துக் கலியாணம்' என்னும் வழக்கும் உண்டு. ஒரு சிறுவனுக்கு மார்க்கக் கலியாணம் நிறைவேற்றப்பட்ட பின்னரே அவன் முழுமையான முஸ்லிம் என்ற நிலையை ஆரம்பிக்கிறவனாகக் கருதப்படுவான். ஒரு குழந்தை பிறந்து ஏழாம் நாளே இச்சடங்கு நிறைவேற்றப்படுவதும் உண்டு.

இன்று முஸ்லிம் மக்களின் தமிழ்ப்பேச்சு வழக்கில் 'சுன்னத்' என்றிருப்பதையே யாகோபு சித்தர் பாடலில் 'சுண்ணத்' எனக்குறிப்பிடப்பட்டுள்ளது. ஒருவேளை பதிப்பாசிரியரே இவ்வாறு எழுத்துக்களை மாற்றி இருக்கலாம். யாகோபு அவர்களுக்குச் சுன்னத் செய்யப்பட்டது. தலையிலே அணிவதற்குக் தொப்பி அளிக்கப்பட்டது. பொதுவாக முஸ்லிம் மக்களுள் ஆண்பாலார் தலையில் ஏதாவது ஓர் அணியை அணிந்து கொள்வது வழக்கம். இங்கே யாகோபு சித்தருக்குத் தொப்பி அளிக்கப்பட்டது. இக்கருத்துக்களையே இவ்வாறு பாடியுள்ளார் யாகோபு சித்தர்.

உறுதியுற்று இருக்கையிலே யாகோபென்று
உண்மைப் பேர்கொடுத்துச் சுன்னத்துச்செய்து
அருமைபெறத் தொப்பியொன் றீய்ந்தாரப்போ
(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 7)

மேலே கூறிய சுன்னத் சடங்கினை அல்லது மார்க்கக் கலியாணத்தைச் சுட்டுவதற்காக யாகோப் சித்தர் வேறொரு சொற்றொடரையும் பயன்படுத்தி உள்ளார். 'இசுலாத்துப் பண்ணுவார்கள்' என்பதே அச்சொற்றொடர். இங்கே இஸ்லாத்தில் சேர்ப்பதற்கான எல்லா மதச்சடங்குகளையும் புரிந்தார்கள் என்பதையே ஆசிரியர் குறிப்பிட்டிருத்தல் வேண்டும். ஒரு தமிழன் மக்காவுக்குப் போனால் என்ன நிகழும் என்பதை ஒரு பாடலில் அனுபவரீதியாக விளக்கி உள்ளார் யாகோபு சித்தர்.

அந்தப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

வழக்கமாய் மக்காவின் தேசந்தன்னில்
வாஞ்சையாய்த் தமிழனவன் போனாற்கேளு
பழக்கமாய் தன்னுடைய மார்க்கந்தன்னில்
பதிவாகச் சேர்த்திடுவார் புத்திசொல்வார்
புழக்கமா யிசுலாத்துப் பண்ணுவார்கள்
புகழ்பெறவே இருங்களென்று சொல்லுவார்கள்
சழக்கில்லா நால்வேதம் மெய்யதாகும்
தரிகூடா மெய்யதுவைச் சொல்லக்கேளே.
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வைத்தியம் 300 : 78)

இஸ்லாமிய மூல மந்திரம் கலிமா எனப்படும். இது முன்னர் விளக்கப்பட்டது. இஸ்லாத்தைத் தழுவிய பின்னர் யாக்கோப் சித்தரை மக்கத்திலேயே தங்கச் சொன்னார்களாம். சிலகாலம் அவரும் அங்கே இருந்தாராம். அங்கே வாழும் காலத்தில் கலிமா ஓதியவராய் இருந்தாராம். இவ்வாறு யாகோப் சித்தரே ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

மக்கத்தி லேயிருங்க ளென்று சொல்லி
ஈவென்றுஞ் சொல்லாது கலிமாவோதி
இருந்தேனே சிலகாலம் யாகோபென்றே
(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 604)

யாகோபு வகாரக்களங்கு என்னும் வாத வைத்தியம் 300 என்பதிலும் கலிமா (3) சுட்டப்படுவதைக் காணலாம்.

அல்லாஹ்வைப் பற்றி யாகோப் சித்தர் குறிப்பிட்டுள்ளார், அல்லா(ஹ்) என்னும் சொல்லையே தமது பாடலில் பயன்படுத்தி உள்ளார். ஒவ்வொருவரினதும் முயற்சி நிறைவேற அல்லாஹ்வை

மனதில் எண்ணவேண்டும். தாம் கூறியவற்றைச் செய்து பார்த்து அதில் சித்தி எய்த அல்லாஹ்வை நினைக்க வேண்டும் என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

வண்மையாய் அல்லாவை மனதில் எண்ணி
வடிவாக எல்லாமுஞ் சித்தியாக
(யாகோபு சுண்ணம் 300 : 69)

மற்றோர் இடத்தில்

அதனையெடுத்து அல்லாவைத் தொழுது போற்றி
(யாகோபு சுண்ணம் 300 : 171)

என்றும் வந்துள்ளமை காண்க.

யாகோபு சித்தர் பாடல்களைப் பதிப்பித்தவர் முஸ்லிம் அல்லாதார் ஆகையால் அங்கு இடம் பெற்ற சில அறபுச் சொற்களை அவர் சரிவர உணர்ந்துகொள்ளத் தவறிவிட்டார் என்று தோன்றுகிறது. 'வலி' என்பது அறபுச் சொல், 'வலி' என்னும் சொல்லின் நேரடிக் கருத்து 'நெருக்கமானவர்' என்பதாகும். இறைவனுக்கு நெருக்கமானவர்கள், அல்லாஹ்வுக்கு நெருக்கமானவர்கள் என்பதைக் குறிக்கவே அச்சொல் பயன்படுத்தப்பட்டு வருகிறது. பொதுப்படையாகக் கூறுவதாயின் 'வலி' என்னும் சொல் இறைநேசச் செல்வர்களைக் குறிக்கப் பயன் பட்டு வருகிறது. 'வலி' என்னும் சொல்லையும் அது குறிக்கும் பொருளையும் புரிந்துகொள்ள முடியாத இப்பதிப்பாசிரியர் அதனைப் பிழையானதொன்று எனக் கருதி அதனை 'நபி' என மாற்றி உள்ளார்.

இஸ்லாத்தை தழுவி அதன்கண் உறுதி பூண்ட எவரும் 'நபி' என்னும் அறபுச் சொல்லும் 'வலி' என்னும் அறபுச் சொல்லும் குறிக்கும் பொருளை உணர்ந்து அதனை உரிய முறையில் பயன் படுத்தத் தவறுவதில்லை. முகம்மது நபி (சல்) அவர்களையும் அவர்களுக்கு முன் உலகில் தோன்றிய தீர்க்கதரிசிகளையுமே 'நபி' என்னும் அறபுச் சொல்லால் அழைக்க முடியும். ஏனையவர்களைக் குறிக்க 'நபி' என்னும் சொல்லைப் பயன்படுத்த முடியாது. பிற் காலத்தில் வாழ்ந்த யாகோபு சித்தர் இதனை உணர்ந்திருத்தல் வேண்டும். எனவே அவர் தமது பாடல்களில் 'வலி'மார் எனக் குறிப்பிட்ட பெரும்பான்மையான இடங்களில் அதனை 'நபி'மார் எனத் திருத்தி உள்ளனர் என்றே கொள்ளல் வேண்டும். யாகோபு சித்தர் அவர்கள் மக்காவுக்குச் சென்றிருந்தால் அவர் 'நபி'மாரைக் கண்டிருக்கமாட்டார், 'வலி'மாரைத் தான் கண்டிருப்பார்.

வைத்தியம் 300 என்னும் பாடற்றொகுதியில் வரும் முதலாம் பாடலிலே 'நபிமார்' என்ற சொற்றொடர் வலிமார் என இருந்திருத் தல் வேண்டும். மக்காவுக்குச் சென்று அவர் சந்தித்தவர்களை ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார். அவர் அங்கு வலிமாரையே சந்தித்திருத் தல் வேண்டும். பின்வரும் பாடலிலிருந்து இக்கூற்றுப்புலனாகின்றது.

ஆதியிலே இராமனென்று பேரும்பெற்று
அன்புடனே சதுரகிரி தனிலிருந்து
நீதியுடன் ககனமாய் மக்கஞ் சென்று
நேர்மையுடன் வலிமாரைக் கண்டுபோற்றி
கோதில்லா தங்கிருக்கும் போதெனக்குக்
கொடுத்தார்கள் வலிமார்கள் யாகோபென்று
வாதியென்று உலகோர்கள் சொல்லவேதான்
மக்காவில் தானிருந்து பின்புதானே (1)

யாகோபு சித்தர் நபி என்னும் சொல்லைச் சரியாகப் பயன்படுத்தி அதனைப் பதிப்பாசிரியர் அவ்வாறே பதிப்பித்த இடங்களையும் இப்பாடல்களில் காணலாம். அத்தகைய ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

இறகுமானின் பாதமலர் துதியே செய்து
நபிமாரை அனுதினமும் போற்றிசெய்து.
(சுண்ணம் 300 : 2)

பண்ணிட்டு நபிமாரைத் தொழுதுபோற்றி
(சுண்ணம் 300 : 3)

என்றும்

நடம்போடு நபிமாரைக் தொழுதுபோற்றி
(சுண்ணம் 300 : 15)

என்றும்

உற்றுமே நபிமாரைத் தொழுதுபோற்றி
வண்ணமாய் அல்லாஹ்வை மனதிலெண்ணி
(சுண்ணம் 300 : 69)

என்றும் இத்தகைய சந்தர்ப்பங்களுக்கான உதாரணங்களாக எடுத்துக் காட்டலாம். இந்த இடங்களில் எல்லாம் தொழுதுபோற்றி என்னும் சொற்றொடர் 'கௌரவமாகக் கணித்து' என்னும் பொருளில் வந்துள்ளமையைக் காணலாம்.

யாகோபு சித்தர் தாம் மக்கா சென்ற சந்தர்ப்பத்தில் தாம் கண்டவர்களைப்பற்றி குறிப்பிட்டுள்ளார். அப்பொழுது அவர் வலிமாரைத் தான் சந்தித்திருத்தல் வேண்டும். நபிமாரைச் சந்தித்திருக்க முடியாது. எனவே யாகோபு சித்தர் நபிமாரைச் சந்தித்ததாக அவர் தம் பாடலில் குறிப்பிட்டார் என்னும் கருத்துத் தோன்ற பதிப்பாசிரியர் அப்பாடல்களைத் திருத்தியுள்ளமை பெருந்தவறாகும். அத்தகைய செய்யுட்களில் வலிமார் என்றே இருந்திருத்தல் வேண்டும்.

தாக்கியே மக்காவின் தேசந்தன்னில்
சரியான வலிமார்கள் மெத்தவுண்டு
(சுண்ணம் 300 : 151)

என்றும்

.........வலிமாரோடே
சரியான துருசுசுண்ணம் வைத்து நானும்
(சுண்ணம் 300 : 155)

என்றும்

கூறினே னிதன்பெருமை வலிமாரெல்லாம்
கூறியது சித்தரெல்லாம் சொல்ல மாட்டார்
(சுண்ணம் 300 : 167)

என்றும்

மல்கவே வங்கத்தை யார்தான் காண்பார்
வையகத்தில் வலிமார்கள் தானுங்காண்பார்
(சுண்ணம் 300 : 249)

என்றும் 'வலி' என்று வரவேண்டிய இடங்களைப் பதிப்பாசிரியர் 'நபி' எனத் திரித்துக் குறிப்பிட்டுள்ளார்.

யாகோபு சித்தர் பாடலில் இடம் பெற்றுள்ள அறபுச்சொற்கள் பல, உருவம் திரிந்த முறையிலே அங்கு இடம் பெறக் காண்கின்றோம். பதிப்பாசிரியர் அறபுப் பயிற்சி அற்றவரானமையினாலேயே அவ்வாறு அவ்வறபுச் சொற்கள் உருமாற்றம் அடைந்திருக்கலாம். யாகோபு வைத்தியம் 300 என்னும் பாடல் தொகுதியிலே இடம் பெற்றுள்ள ஏழாம் பாடலிலே அத்தகைய சொற்கள் இடம் பெற்றுள்ளன.

நாம் 'திருக்குர்ஆனை ஓத ஆரம்பிக்குமுன்னர் 'அஊதுபில்லாஹி மினஷ்ஷைத் தானிற்றஜீம்' என்று கூறுகிறோம். இதன் கருத்து 'அல்லாஹ்வினால் சபிக்கப்பட்ட சாத்தானிமிருந்து பாதுகாப்புத் தேடுகின்றேன்' என்பதாகும். இந்த அறபுச் சொற்றொடரைக் கொண்டே யாகோபு சித்தரும் தமது நூல்களை ஆரம்பித்திருத்தல் வேண்டும். யாகோப் சித்தர் ஏழாம் பாடலிலே முதலடி அவ்வாறு இருந்திருத்தல் வேண்டும். அதனைப் பதிப்பாசிரியர் 'என்ற அபூலணி பிகனில்லாஹீம்' எனப்பதிப்பித்துள்ளார். இச்சொற்றொடர் எந்தக் கருத்தையும் தருவதாயில்லை. எனவே அவ்வடி

என்ற ஊது பில்லாஹி மினஷ்ஷைதானிற ஜீம்

என்று இருந்தால் முன் குறிப்பிட்ட கருத்துத் தொனிக்க நல்ல முறையில் பாடல் ஆரம்பிக்கும். அதே பாடலில் மற்றும் சில அறபுச் சொற்கள் உருக்குலைந்த நிலையில் இருக்கக் காணலாம். றஹீம், அல்லாயாறீம், றஹிமான் என்பன அத்தகைய சொற்களாகும்.

சுண்ணம் 300 இலுள்ள முதலாம் செய்யுளிலே இறைவனைக் குறிப்பிட றஹ்மான் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. அங்கே றஹ்மான் என்பதில் உள்ள றகரம் மொழிக்கு முதலில்

வராதானமையினால் இகரத்தைப் பயன்படுந்தி இறஹ்மான் என்று கூறி அவனை வாழ்த்துகிறார். இவ்வாறு,

இறகுமானின் பாதமலர் துதியே செய்து
(யாகோபு சுண்ணம் : 1)

முஸ்லிம் மக்கள் எதையும் தொடங்கும் போது அல்லாஹ்வை நினைத்தே ஆரம்பிப்பர். அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் என்று பொருள் படும், பிஸ்மில்லா ஹிற்றஹ்மானிற்றஹீம் என்னும் அறபுச் சொற்றொடரை உச்சரித்தே எந்த கருமத்தையும் ஆரம்பிப்பர். யாகோபு சித்தரும் இவ்வறபுச் சொற்றொடரைக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் அச்சொற்றொடரைச் சற்றுக் குறுக்கியே ஆண்டுள்ளார். 'பிஸ்மில்லா றகுமான்' என்றே குறிப்பிட்டுள்ளார். இச்சொற்றொடர் இவ்வாறு ஒரு பாடலில் அமைந்துள்ள

'துடியாகப் பிஸ்மில்லா றகுமான் என்று'
(யாகோபு சுண்ணம் 300 : 928)

இவ்வாறு இடம் பெற்றுள்ள மற்றொரு சொல் 'இல்லல்லாஹ்' என்பதாம். இவ்வறபுச் சொற்றொடரின் பொருள் 'அல்லாஹ்வன்றி' என்பதாகும். இறைதியானத்தில் ஈடுபடுவோர், 'இல்லல்லாஹ்' என்று பலமுறை உச்சரிப்பர். இச்சொற்றொடர்

இல்லல்லா என்றுநீ இன்பமுற்று
(வாத வைத்தியம் 300 : 56)

மற்றொரு சந்தர்ப்பத்தில் கலிமாவின் முதற் பகுதியாகிய லாஇலாஹ இல்லல்லாஹ் என்பதன் கருத்து 'அல்லாஹ்வன்றி வணக்கத்துக்குரிய நாயன் வேறில்லை' என்பதாகும். இச்சொற்றொடர் அதே உருவில் ஒரு பாடலில் இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

கண்டுமே மக்காவின் தேசம்விட்டுக்
கலிமாவுங் கண்டுநான் கீழ்தேசத்தில்
தொண்டுபட்ட லாயிலாக யில்லல் லாகூ
துணையாகப் பத்தியுடன் வழியேசென்று

(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாத வைத்தியம் 300 : 3)

தூதர் என்னும் பொருளில் இறசூல் என்பதும் ஆங்காங்கே ஆளப் பட்டுள்ளது.

பகுந்திட்டேன் இறசூலுங் கண்டாரப்போ
பக்குவமாய்க் கைகொடுத்தார் பதவியாலே
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் 300 : 5)

எண்ணமுடன் சொல்லாதே இறசூலாகி
இல்லல்லா வென்று நீ இன்பமுற்று
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் 300 : 56)

யாகோபு சித்தர் தமது வைத்திய நூலில் பயன்படுத்தியுள்ள மற்றொரு அறபுச் சொல் 'லெப்பை' என்பதாகும். ஹஜ் கடமையை நிறைவேற்ற மக்கமாநகருக்கு செல்பவர்கள் எப்பொழுதும் போல் உச்சரித்துக் கொண்டிருக்கும் சொல் 'அல்லாஹூம்மலப்பைக்க' என்பதாகும். 'அல்லாஹ்வே இதோ நான் உனது சேவையில்' என்பது அதன் பொருளாகும். பின்னர் தமிழ்நாடு, இலங்கை போன்ற நாடுகளில் வாழ்ந்த முஸ்லிம்கள் தமது பெயர்களுக்குப் பின்னால் அல்லது முன்னால் லெப்பை என்னும் சொல்லைப் பயன் படுத்தலாயினர். காலப்போக்கில் தமிழ் நாட்டில் லப்பை என்னும் சொல்லால் 'பின் தங்கிய முஸ்லிம்கள்' எனக் கருதப்படும் முஸ்லிம்கள் அழைக்கப்படுகின்றனர். அது அரசு அங்கீகாரம் பெற்ற ஒரு சொல். தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் முஸ்லிம் பள்ளிவாசல்களில் மார்க்கக் கடமைகளை முன்னின்று நடத்துபவர்களும் குர்ஆன் பள்ளிக்கூடங்களில் ஓதிக் கொடுப்பவர்களும் பெரும்பாலும் லெப்பை என அழைக்கப்பட்டனர். இவர்கள் லெவ்வை என்றும் அழைக்கப்படுவதுண்டு. லெப்பை என்பதின் பலர்பாலே லெப்பை மார் எனப்பட்டது. மார்க்கக் கடமைகளைப் புரிகிறவர்கள் என்னும் கருத்தில் வரும் 'லெப்பைமார்' என்பதனையே யாகோப் சித்தர் பாடல்களுள் ஒன்றில் இவ்வாறு அமைத்துள்ளார்.

சொல்லவே நால்வேதம் லெப்பைமார்கள்
சொற்பெரிய உலகத்தில் கர்மிதன்னை
மெல்லவே ஆண்டனைக் காட்டுமென்பார்
மேதினியிற் பணம்பொன்னுக் காசைவைத்து
நல்லவே சொல்லியிட்டுப் பணம்பிடுங்கி
நலமாக உன்னையவ ரேய்ப்பாரப்பா
உல்லவே நால்வேதக் காரனுக்கு
உண்மையுள்ள ஆண்டவனும் மெய்யுமாமே.
(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் 300 : 79)

இந்த 'லெப்பை மார்கள்' என்னும் சொற்றொடரை யாகோப் சித்தர் தமது பாடலில் சேர்த்துள்ளமையால் 'மார்க்கக் கடமைகளைப் புரிபவர்களைச் சுட்டுவதற்கு இச்சொற்றொடர் பெருவழக்கைப் பெற்ற ஒரு கால கட்டத்திலே தான் யாகோபு சித்தர் வாழ்ந்திருக்கவேண்டும்' என்பது புலனாகின்றது.

அல்லாஹ்வைத் தியானிப்பவர்கள் உச்சரிக்கும் சொற்கள் ஹா, ஹூ, யாஹூ என்பன. இம்மூன்று அறபுச் சொற்களையும் யாகோபு சித்தர் தமது பாடல்களில் பயன்படுத்தி உள்ளார். யாஹூ என்றால் 'என் அல்லாஹ்வே' என்பது பொருள். எனது அல்லாஹ்வின் நபி அல்லது எனது அல்லாஹ் என்று உச்சரிக்கும் நபி என்னும் பொருளில் 'யாகுநபி' என ஒரு பாடலில் இவ்வாறு பாடியுள்ளார்,

கூறிவிட்டார் யாகுநபி கேட்டுக்கொண்டு
குணமாக என்பேரு விளங்கத் தானும்

(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாத வைத்தியம் 300 : 30)
ஹூ, ஹா என்பன அல்லாஹ்வைக் குறிப்பனவாய் கூ, ஆ என யாகோப் சித்தர் பாடலில் இவ்வாறு அமைந்துள்ளது.

கூவென்ற சொற்கேட்டு வலிமாரெல்லாம்
குண்டலியைத் தானசைத்தும் தீன்தீன்என்றார்
ஆ வென்ற சொற்கேட்டு ஓடிவந்தேன்
அசனுசனும் வேறல்ல நீதானென்றார்
மாவென்ற றொட்டியொன் றீய்ந்தபின்பு
மக்கத்தி லேயிருங்க ளென்றுசொல்லி
ஈவென்றுஞ் சொல்லாது கலிமாவோதி
இருந்தேனே சில காலம் யாகோபென்றே.

(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 614)

இங்கே இஸ்லாத்தைக் குறிக்க தீன் என்னும் சொல் இரண்டுமுறை பயன்படுத்தி இருப்பதை காணலாம். சில சந்தர்ப்பங்களில் 'தீன் தீன் முகம்மது' என்று உச்சரிக்கப்படுவதும் உண்டு. அசன் உசன் என்பதும் அறபுச்சொற்கள் போல் தோற்றமளித்தாலும் அவ் விரண்டு சொற்களும் உண்மையிலேயே அறபுச்சொற்கள் தாமா என்னும் சந்தேகம் எழுகிறது. அச்சொற்றொடர் பயன்படத்தப் பட்டுள்ள சூழ்நிலையைப் பார்க்கும்பொழுது அது அறபுச்சொற்றொட ராகப் புலப்படவில்லை. சித்த வைத்திய முறையிலே கைதேர்ந்த வர்கள் அசனும் உசனும் என்பது கடவுளையும் உயிரையும் குறிக்கும் என்பர். யாகோபு வைத்திய சிந்தாமணியின் ஏழாம் பாடலிலும் இச்சொற்றொடர் ஆளப்பட்டுள்ளது.

இலங்கையின் சில பகுதிகளில் வாழும் மக்கள் அசனுசன் என்னும் இச்சொற்றொடரைப் பெரும்பாலும் தமது நாளாந்த பேச்சில் பயன் படுத்துவர். 'உங்களுக்கு ஏன் அவனுடைய குற்றங்குறைகள்?' என்று நேரடியாக கேட்காமல் 'உங்களுக்கு ஏன் அவனுடைய அசனுசன்?' எனக் கூறுவதுண்டு.

யாகோபு சித்தர் தமது பாடல்களில் பல பாரசீகச் சொற்களைப் பயன்படுத்தி உள்ளார். பீங்கான் என்பது அத்தகைய ஒரு சொல். அது பாரசீக மொழியில் பின்ஜான் என்றே வழங்கப்படுகிறது. புன்ஜான் என்னும் சீனமொழியிலிருந்து அச்சொல் பெறப்பட்டது என்பர். உணவு உண்ணப் பயன்படுத்தப்படும் தட்டையான ஒரு பாத்திரம் பீங்கான் எனப்படுகிறது. இச்சொல் இவ்வாறு ஆளப் பட்டுள்ளது.

துஞ்சாமல் பொடிபண்ணிப் பீங்கானிட்டுத்
துடியாகப் பட்சமொன்று பனியில்வையே
(யாகோபு சுண்ணம் 300 : 8)

கடுஞ்சுண்ண மூதியதைப் பீங்கானிட்டுக்
கதிர்பனியில் நாளைந்து வைத்தெடுக்க
(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 220)

சீசா என்பது மற்றொரு பாரசீகச் சொல். கண்ணாடியினாலான ஒரு குப்பி இவ்வாறு அழைக்கப்படுகிறது. யாகோபு சித்தரும் இதே கருத்தில் இச்சொல்லை

தனியாக நீரிருத்துச் சீசாதன்னில்
தாக்கியடை பின்புதான் சாற்றக்கேளு
(யாகோபு சுண்ணம் 300 : 9)

என்றும்,

பரிசைபெற யிறக்கியே சீசாதன்னில்
பரிவுடனே தானடைக்கச் சொன்னார்பாரே
(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 462)

என்றும் பயன்படுத்தியுள்ளமையைக் காணலாம்.

கந்தூரி என்பது துறுக்கி மொழியைச் சார்ந்த ஒரு சொல் என்பர். விழா என்பது அதன் பொருள். உறுது பேசும் மக்களிடையே இச் சொல் பெருவழக்கில் உள்ளது எனக் கூறுவர். பாரசீக மொழியில் இச்சொல் வழக்கு இழந்துவிட்டது என்றும் சொல்வர். பெரும்பாலும் சமயச் சார்பானதாகவே கந்தூரி என அழைக்கப்படும் விழா அமையும். கண்ணியத்துக்கும் மரியாதைக்குமுரிய இறைநேசர் ஒருவரின் ஞாப கார்த்தமாகக் கந்தூரி விழாக்கள் நடைபெறுவது உண்டு. இலங்கை யிலும் தமிழ் பேசும் மக்கள் வாழும் இந்தியாவிலும் ஒரு பெரியாரின் பிறப்பை அல்லது மறைவை நினைவுகூரு முகமாக நடத்தப்படும் விழாக்கள் இவ்வாறு அழைக்கப்படும். பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் முதல் இறைநேசச் செல்வர்கள் ஈறாக உள்ளவர்கள் பற்றிய தாக இத்தகைய கந்தூரி விழாக்கள் அமையும். இத்தகைய விழாக் களில் ஏழை எளியவர் முதல் அனைவருக்கும் அன்னதானம் வழங்கப்

படும். தமிழ் பேசும் முஸ்லிம் மக்கள் எங்கெங்கு சென்று குடியேறி னார்களோ அங்கங்கெல்லாம் இச்சொல்லும் இச்சொல் கருதும் பொருளும் பரவி உள்ளமையைக் காணலாம். தமிழ் பேசும் முஸ்லிம் மக்கள் மூலமாகவே இந்தோனீசியா போன்ற நாடுகளிலும் கந்தூரி என்னும் சொல் அதே முக்கியத்துவத்துடன் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

கந்தூரி என்னும் இவ்வேற்றுமொழிச் சொல் முஸ்லிம் மக்க ளிடையே பேச்சு வழக்கில் கந்திரி என வழங்கப்பட்டு வருகிறது. யாகோபு சித்தர் அவர்களும் கந்திரி என்னும் இச்சொல்லை அதே கருத்தில் பல இடங்களில் உபயோகித்திருப்பதைக் காண்கின்றோம். உலோகங்களைப் பொன்னாக்கும் விதத்தை நுணுக்கமாக விவரிக்கும் யாகோபு சித்தர் அத்தகைய பொன்னான உலோகத்தை அதிக விலைக்கு விற்றுத் தான தர்மம் செய்யுங்கள் என்று குறிப்பிட்டுள்ளார். கந்திரிகளாக்கிக் கொடுக்கும்படி ஆலோசனை கூறியுள்ளார். கந்திரி என்னும் சொல்லைத் தனிமையாக உபயோகிக்காமல் 'கந்திரி களாக்கி' என கந்தூரி விழாக்களில் அழைக்கப்படும் உணவுவகை களைக் கருத்திற் கொண்டே இவ்வாறு பாடி உள்ளார்.

உயருமே இப்படிக்கு மட்டந்தன்னை
உயர்த்தியே விற்றுத்தான் செலவு செய்து
நயந்துமே கந்திரிக ளாக்கித் தானும்
நலமாகக் கொடுத்துமே பின்னும் கேளு.

(யாகோபு சுண்ணம் 300 : 238)

மற்றொரு சந்தர்ப்பத்திலும் கந்திரி ஆக்கச் சொல்லி உள்ளார். அவ்வாறு ஆக்கிய சோற்றை எல்லோருக்கும் பகிர்ந்தளிக்கச் சொல்லி உள்ளார். அதன் பின்னர் தொழுகையை நிறைவேற்றவேண்டும் என்றார். உலோகத்தை மாற்றியமைக்கப்பட்ட பொன்னை விற்று பல பள்ளிவாசல்களைக் கட்டுவிக்கும்படி ஆலோசனை கூறி உள்ளார். அவ்வாறு பள்ளிவாசல்களைக் கட்டி எழுப்பினால் இறைநேசர்கள் வாழ்ந்தது போல் நாமும் வாழலாம் என்றுகூறி உள்ளார். அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

ஒன்றாகத் தொழுதிடவே மாற்றுகேளு
உறுதியாய்ப் பதினாறு மாற்றுக்காணும்
நன்றாக விற்றும் செலவு செய்து
கந்திரிக ளாக்கியே சோறுதன்னைப்
பன்றாக எல்லோருக்கும் கொடுத்துப்பின்பு
பதிவாகத் தொழுதுநீ பாரிலேதான்
நன்றாகப் பள்ளிவாசலைத்தான் கட்டி
நாடியே வலிமார்போ லிருந்துவாழே

(யாகோபு சுண்ணம் 300 : 289)

இன்னொரு பாடலிலும் யாகோபு சித்தர் தருமத்துக்கு முக்கியத்துவம் அளித்திருப்பதைக் காணலாம்.

உலகத்தில் வலியாக இருந்துபாரு
கூரேது கந்திரிகள் மிகவுஞ் செய்து
குணமாகக் கொடுத்துமே தருமம் பண்ணிப்
பாரேது பூமிதனி லிருந்துவாழும்
பாக்கியவான் யாகோபு பரிந்தவாறே.

(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாத வைத்தியம் 300 : 276)

உலகிலே வல்ல சித்தி பெறவே எவரும் விரும்புவர். அதற்கான வழி வகைகளை யாகோபு சித்தர் தமது பாடல்களில் விவரித்துள்ளார். உலோகத்தைத் தங்கம் ஆக்கும் விதத்தைக் குறிப்பிட்டுவிட்டு அவ் வாறு பெறப்பட்ட தங்கத்தை விற்கும்படி கூறி உள்ளார். அவ்வாறு விற்றுக்கிடைத்த பணத்தை எவ்வாறு செலவு செய்யவேண்டும் என் பதையும் குறிப்பிட்டுள்ளார். யாகோபு சித்தர் காலத்திலும் இன் றுள்ளன போன்ற சமூகப்பிரச்சினைகட்குத் தீர்வுகாணும் வழிவகை களைக் கூறி உள்ளார். சீதனக் கொடுமை காரணமாக இளம் பெண்கள் திருமணமாகாது இன்று இருப்பது போன்று அன்றும் இருந் திருப்பதை யாகோபு சித்தர் கண்டிருக்கலாம். எனவே தான் அப் பிரச்சினைக்குரிய தீர்வைக் கூறி உள்ளார். உலோகத்தினால் மாற்றப் பட்டுக் கிடைக்கும் தங்கத்தினை விற்றுக் கந்தூரி கொடுப்பதுடன் நின்றுவிட வேண்டாம் என்றும் அவ்வாறு பெற்ற பணத்தைக்கொண்டு குமரிப்பெண்களுக்கு நல்ல கணவன்மாரைப் பிடித்துத் திருமணம் செய்து வையுங்கள் என்றும் ஆலோசனை கூறி உள்ளார். இத்தகைய நற்கருமங்களில் ஈடுபடுவோமேயானால் 'வல்லசித்தி' உலகில் பெற லாம் என்று யாகோபு சித்தர் இவ்வாறு பாடியுள்ளார்.

இறங்கினதோர் தங்கத்தை விற்று நீயும்
இனியதொரு கந்திரிக்குச் சோறுமாக்கிக்
கிரங்கிவந்த அதிதிகட்குப் பிச்சையிட்டுக்
கிளர்ந்த குமர் கரையேறப் பணங்களீய்ந்து
திரங் காணக் கணவனுக்குக் கட்டிவைத்துத்
தீன்முகம்மது வை நிதம் தொழுது போற்றி
வரங்காண இப்பாக முடித்துக் கொண்டால்
வல்ல சித்தி பெற்றுலகில் வாழலாமே.

(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 553)

மற்றொரு பாடலில் யாகோபு சித்தர் யாருக்கு அன்னம் ஈயப்படல் வேண்டும் என்பதைக் குறிப்பிட்டுள்ளார். ஏழை எளியவர்கட்கு ஈயும் படி விவரித்துள்ளார். இங்கே அவர் ஏழை எளியவர்கள் என்று

சுட்டியது மிசுக்கீன்களையே. மிஸ்கீன் என்பது வறியவனைக் குறிக்கும் அறபுச் சொல்லாகும். அன்னம் ஈயப்படவேண்டியவர்கள் மிஸ்கீன்களே என்று ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தங்கமதை யெடுத்துவிற்றுச் செலவு கேளு
தன்மைபெறக் கந்திரிகள் மிகவுஞ்செய்து
உங்கவே மிசுக்கீன்களுக்கு அன்னமீய்ந்து.

(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 ; 563)

'ஹஷ் ஹஷ்' என்பது யாகோபு சித்தர் உபயோகித்துள்ள மற்றொரு பாரசீகச் சொல்லாகும். இதனை கசகசா என்றே தமது பாடலில் பயன்படுத்தி உள்ளார். சாமை அரிசி போன்ற சிறு அளவினையுடையது கசகசா. அது எள்ளு போன்றும் இருக்கும். இச் சொல்லை இரண்டு பாடல்களில் யாகோபு சித்தர் பயன்படுத்தி உள்ளார். முஸ்லிம் மக்கள் குளிர் பானங்களில் இதனைச் சேர்த்துப் பருகுவர். யாகோப் சித்தர் தமது இரண்டு பாடல்களில் கசகசாவைக் குறிப்பிட்டுள்ளார்.

ரஸ்தாளிப் பழமூவேழ் தோலைபோக்கி
நாட்டினிய சர்க்கரைசேர் நெய்யும்நாழி
மஸ்தான கசகசா பலமோபத்து
மையாக அரைத்தொன்றாய் மெழுகதாக்கி

(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 302)

இங்கே போதை என்னும் பொருளில் மற்றொரு பாரசீகச் சொல்லான மஸ்து என்பதையும் ஆசிரியர் உபயோகித்திருப்பதைக் காணலாம்.

மிக்க அதி மதுரமுடன் அமுக்கிராவும்
விதமான வாள் முளகு கசகசாவும்

(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 612)

என்றும் கசகசா வந்துள்ளமையைக் காணலாம்.

இஸ்லாத்தின் இரண்டாம் கடமையான தொழுகையைப்பற்றியும் யாகோபு சித்தர் குறிப்பிட்டுள்ளார். முஸ்லிம் மக்கள் தொழும் திசை கிப்லா என அறபு மொழியில் அழைக்கப்படுகிறது. அரேபியாவிலே மக்கமா நகரிலே கஃபா என்னும் புனித ஆலயமே முஸ்லிம் மக்களின் கிப்லாவாக - நோக்கித் தொழும் திசையாக அமைந்துள்ளது. இந்தியா, இலங்கை முதலிய நாடுகளுக்கு அந்த ஆலயம் வடமேற்கு, மேற்குத் திசையிலே அமைந்திருப்பதைக் காணலாம். யாகோபு சித்தர் தமது பாடல் ஒன்றில் மேற்கு நோக்கித் தொழ வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிட்டுள்ளார். ஒரு முஸ்லிம் தனது ஐவேளைத் தொழுகையை நிறைவேற்றும் பொழுது பல்வேறு நிலைகளில்-நின்று,

குனிந்து, இருந்து, நெற்றியால் நிலத்தைத் தொட்டு - வணங்க வேண்டி இருக்கிறது. அவ்வாறு தொழுது, ஓதி வந்தால் ஆண்டவன் நற்பயன் கிடைக்கும். இக்கருத்துக்களையே யாகோபு சித்தர் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

வணங்கலே தன்னைத்தான் வணங்கிநீயும்
வகையாக மேற்கேநீ மனதுவைத்து
இணங்கியே கால் மடித்துத் தொழுதுகையை
இனிதாக கண்தனிலே எற்றி நீயும்
குணங்காமற் குப்புறத்தான் படுத்தெழுந்து
கூறியே சேவித்துக் குணமதாக
கனமாக ஓதிடுநீ ஆண்டவன்தான்
கருத்துறவே வாதங்கள் சொல்லுவானே

(யாகோபு சுண்ணம் 300 : 263)

மற்றொரு பாடலில் முஸ்லிம் மக்கள் ஐவேளை தொழுகை நடத்துவதைக் குறிப்பிட்டுள்ளார்.

வேதியர்போல் நாளொன்றுக் கைந்துநேரம்
விதமாகத் தொழுதிருநீ வேண்டிக்கொள்ளே.

(யாகோபு சுண்ணம் 300 : 30)

முஸ்லிம் மக்கள் வெள்ளிக்கிழமை அன்று நிகழ்த்தும் ஜும்ஆத் தொழுகையை யாகோபு சித்தர் குறிப்பிட்டுள்ளார். அவர்கள் அத் தொழுகையை மிகுந்த பக்தியுடன் நிறைவேற்றுவர் எனவும் நீதமான மனதினை உடையவராய் இருப்பர் எனவும் இவ்வாறு பாடிப் புகழ்ந்துள்ளார்.

வேதமா மவர்களுக்குச் சிரசில் தொப்பி
வேதாந்த மார்க்கத்தார் வெள்ளிதன்னில்
பாதமாந் தொழுதிடுவோர் பத்திமெத்த
பகலுறக்க மில்லாத பிரிவுமெத்த
சேதமிலாத் தன்னுடைய மனதுதானும்
சித்திபெற்று வலுவாகப் பேசுவார்கள்
நீதமாய் மனதுதான் இருக்கும்பாரு
நித்தியராம் உத்தேச வழக்கம் பாரே.

(யாகோபு வகாரக்களங்கு என்னும் வாதவைத்தியம் 300 : 77)

யாகோபு சித்தர் தமது வைத்திய சிந்தாமணி 700 இல் அமைத்துள்ள காப்புச் செய்யுளில் இறைவனின் நபிமாரையும் தமக்கு யாகோபு எனப்பெயரிட்ட குருவையும் காப்பாகக் கொள்கிறார். அச்செய்யுள் வருமாறு :

ஆரணத்தில் அகிலாண்ட கோடிதன்னில்
அலைகடலில் வரையினிலு மமர்ந்தேயெங்கும்
பூரணமாய் நிறைந்துநிற்கும் பொருளே காப்பு
புகழ்பெரிய நபிமார்கள் பாதங்காப்பு
காரணமாய் எனக்குப்பேர் யாகோப்பென்று
கருணையுடன் றானழைத்த குருவேகாப்பு
தாரணியுள் ளோர்பிழைக்க விந்நூல் தன்னைச்
சாற்றுதற்கு ஆண்டவன்தன் பாதங்காப்பே.

இங்கே ஆண்டவன் என ஆண்பாலில் குறிப்பிட்டுள்ளமையால் யாகோபு சித்தர் இஸ்லாமிய மரபைப் பேணியே இக்காப்புச் செய்யுளை அமைத்துள்ளார் என்பது புலப்படுகின்றது.

**பிற கருத்துக்கள் :**

இதனை அடுத்துவரும் ஐந்து செய்யுட்களில் சைவ சமயப் பெரியார்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். ஒரு பாடலில் சிவபெருமான் இவ்வாறு பாடப்பெற்றுள்ளார்.

சிகையில் அமுதத்தை யணிந்தயீசன்
செப்பரிய விடை யேறி நின்றோன்மிக்க
தகையான மழுவெடுத்தப் பெரியோன்றானும்
தன்மையாய்க் காளியுடன் வாதுசெய்தோன்
தொகையாத மானிடரைப் படைத்தோன்ஞானத்
தொன்மைதரு நகைசெய்து யெரித்தோனான
இகமகிழுஞ் சிவனுடைய பதுமம் போன்ற
இணையடியைத் தொழுதுபணி யியல்புள்ளோரே.

(வைத்திய சிந்தாமணி 700 : 2)

இந்தப் பாடலும் யாகோப் சித்தர் பாடலில் இடம் பெற்றுள்ளது. இது போன்ற பிற பாடல்களும் யாகோப் சித்தர் இராமதேவராக இருந்த காலத்தில் பாடினவையாக இருக்கலாம். இதன் பதிப்பாசிரியர் இராமசாமிக்கோன் அவர்கள் இராமதேவரின் அத்தகைய பாடல்களை தாம் இதனைப் பதிப்பிக்கும்பொழுது இப்பாடல் தொகுதியில் சேர்த்திருக்கலாம். அல்லது இராமசாமிக்கோன் அவர்களே இவற்றைப் பாடி இங்கு இடம்பெறச் செய்திருக்கலாம். யாகோபு சித்தர் முன்னர் இராமதேவராக இருந்தபொழுது பாடியவை எனக் கொள்ளும் கூற்றே பொருத்தமாக உள்ளது.

மற்றுமொரு பாடலில் இராமதேவருக்கு முன்பு வாழ்ந்த சித்தர்கள் போற்றப்பட்டுள்ளனர். அவர்கள் ஒவ்வொருவருடைய பாதமும் போற்றப்பட்டுள்ளது. அந்தப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

பொதிகைவாழ் மாமுனிவர் பாதம் போற்றி
புகலரிய தன்வந்திரி பாதம் போற்றி
விதியிலுயர் காலாங்கி பாதம் போற்றி
வெற்றிபெற்ற போகருட பாதம் போற்றி
பதியான யூகமுனி பாதம் போற்றி
பக்திதரும் சட்டைமுனி பாதம் போற்றி
நிதிபுகலும் புலத்தியர்தன் பாதம் போற்றி
நினைவில் வைத்துப் பண்டிதத்தை நிசஞ்சொல்வேனே.
(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 5)

இந்தப் பாடலும் இராமதேவராக இருந்தபொழுது யாகோபு சித்தர் பாடியது எனக்கொள்ளலாம்.

யாகோபு சித்தர் அவர்கள் இராமதேவராக இருந்தபொழுது பதினெண் சித்தர் கூட்டங்களுடன் இருந்தார். அப்பொழுது அவர் கற்பம், நிகண்டு, வைத்தியம், ஞானம், கரிசல் தைலம், மாந்திரீகம், ஜாலம் முதலிய நூல்கள் பாடியதாக கூறப்படுகிறது. அதன் பின்னர் அவர் மக்கம் சென்று யாகோபு என்ற பெயர் சூட்டப்பட்டு முஸ்லீம் ஆனதைத் தொடர்ந்து சித்தவைத்தியம், யூனானி வைத்தியம், ஆயுள் வேத வைத்தியம் முதலான முறைகளை அனுசரித்து யாவரும் எளிதில் உணரும்படியாக முதலில் யாகோபு வைத்திய சிந்தாமணி 700 என்பதனைப் பாடியுள்ளார். அவர் பள்ளிவாசலிலிருந்து கொண்டே தமது நூல்களைப் பாடினார் எனப் பதிப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

அப்பிரேகப்பதங்கம், அப்பிரேகச் செந்தூரம், அப்பிரேகச் சுண்ணம், அப்பிரேகமெழுகு எனப் பலவகைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அப்பிரகம் என்பது அப்பிரேகம் என வந்துள்ளது. அப்பு+பிரகம்=அப்பிரகம் என வந்துள்ளது. அப்பு என்றால் நீர்; பிரகம் என்றால் கொள்ளும் ஆற்றல் உடையது. அப்பிரகம் என்பது கண்ணாடியைப் போன்ற ஒரு தாதுப்பொருளாகும். இது ஏனைய உலோகங்களைப் போன்றது. இது தமிழ் வைத்தியத்துக்கிணங்க நூற்று இருபது உபசரக்குகளில் ஒன்று. இதற்கு வேறு பல பெயர்களும் உண்டு. தமிழ்நாட்டு வைத்தியர்கள் இதைக்கொண்டு பல மருந்துகள் தயாரிப்பர். நீரிழிவு முதலிய நோய்களுக்கும் தாது புஷ்டி முதலியன ஏற்படுவதற்கும் இதனைப் பயன்படுத்துவர். ஆயுள் வேதப் பண்டிதர்களும் யுனானி வைத்தியர்களும் இதனைத் தண்ணீரில் ஊறப்போட்டு அத்தண்ணீரைக் குடிப்பதற்கும் மருந்துகளில் சேர்ப்பதற்கு உபயோகிப்பர்.

**சித்த வைத்திய முறை :**

தமிழ் சித்த நூற்படித் தாது வகைகளில் கருப்பு அப்பிரகம், வெள்ளியப்பிரகம், பொன்னப்பிரகம், கெந்தகப்பிரகம், தேனப்பிரகம்

என ஐந்து வகைகளாக வகுக்கப்பட்டுள்ளது. ஆனால் ஆயுள் வேதத்தில் நாகம், பேகம், பிளாகம், வச்சிரம் என நான்கு வகைகளாகவே கொள்ளப்படுகிறது. கடைசியாகக் கூறப்பட்ட வச்சிரம் என்பதே வைத்தியத்தில் உபயோகப்படும்.

இந்த அப்பிரேக பதங்கம் பற்றி யாகோபு சித்தர் இரண்டு பாடல்களில் இவ்வாறு பாடியுள்ளார்.

வச்சிரத்தின் அப்பிரேகம் பலமும் நாலு
 வைத்திடு நீ கல்வமிட்டு வீரங்காலாம்
உச்சிதமாய்ப் பாணிவிட் டரைக்க வெண்ணெய்
 உறுதிபெற முச்சாமஞ் சென்றபின்பு
முச்சி மடக் கதிரில் வைத்து மூடிநன்றாய்
 முனையவிட்டு கடத்திலிட்டு மேலேமூடு
தச்செயலாய் சீலைமண்தான் மூன்று செய்து
 தாக்கியே அடுப்பினில் வைத் தெரித்துவாங்கே

அடுப்பில் வைத் தெரிசாமஞ் சென்றபின்பு
 அதையெடுத்துப் பிரித்துப் பார் பதங்கமாகும்
எடுத்துவலி பணவீதம் வெல்லந்தன்னில்
 இட்டிடவே திரிநாளில் பேதிசோகை
அடுத்துவருங் காமாலை பாண்டுகுன்மம்
 அழிம்பான மகோதரமும் சூலைரோகம்
எடுத்துவிடுஞ் சூதகத்தில் வாய்வுமந்தம்
 இதமாகும் யாகோபு இயம்பினாரே
(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 257-258)

இவ்விரு பாடல்களும் அந்தாதித் தொடையாக அமைந்திருப்பதைக் காணலாம். யாகோபு சித்தர் பாடலில் உள்ள எல்லாப் பாடல்களும் அந்தாதித் தொடையாகவே அமைந்துள்ளன. ஒரு பாடலில் இறுதி அதனைத் தொடர்ந்து வரும் பாடலில் ஆதியாக அமையுமானால் அந்தப் பாடல்களை மனப்பாடம் செய்வோர்க்கு மிக எளிதாக இருக்கும் என்பர். வைத்தியம் பற்றிய பாடல்களாக இருப்பதனால் இவை மனனம் செய்வதற்கான பாடல்களாகவே இருத்தலினால் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன.

யாகோபு சித்தர் தமது வைத்திய சிந்தாமணியில் மூலிகைகளைக் குறிப்பிடும்பொழுது அவற்றில் பெயரை நேரடியாகக் குறிக்கவில்லை. மறைமுகமாகவே குறிப்பிட்டுள்ளார். 'பூனையது வணங்கியிலை' (60) என்று குப்பைமேனியைக் குறிப்பிட்டுள்ளார். 'குமரனுடைய மனைவியைத்தான் மூலம் வாங்கி' (346) என ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார். குமரனுடைய மனைவியின் பெயர் வள்ளி. மூலம் என்பது கிழங்கு. எனவே இங்கே வள்ளிக்கிழங்கை வெளிப்படையாக

கூறாமல் மறைமுகமாக அறிமுகப்படுத்தியுள்ளார். பாமரமக்கள் எளிதில் புரிந்துகொள்ள முடியாமல் அறிஞர் மாத்திரமே அறிந்து கொள்ளட்டுமே என்னும் நோக்கத்தினால் இவ்வாறு கூறி உள்ளார் போலும்.

வாழை என்னும் சொல்லை நேரடியாகக் கூறி இருக்கலாம். ஆனால் யாகோபு சித்தர் அவ்வாறு கூறவில்லை. அதனைக் குறிக்கத் 'தாயதனைக் கொன்றவனை' (412) எனக் குறிப்பிட்டுள்ளார். 'வாழைக்குத்தான் ஈன்ற காய் கூற்றம்' என்பதனைக் கருத்தில் கொண்டு இவ்வாறு அதனை உணர்த்தி உள்ளார். மற்றொரு பாடலில்

வடிவு கொண்ட சூரனுட கனியைத்தட்டி
வகைபருப்புப் பலமெடுத்து உரலிலிட்டு (426)

என வந்துள்ளது. இங்கே மாங்கனியை எடுத்துத் தட்டி அதனுள் இருக்கும் மாமுட்டைப் பருப்பு எடுத்து உரலிலிட்டு மருந்துவகை செய்தல் வேண்டும். இதனைக் குறிப்பிடவே கண்கவரும் மாம்பழம் எனச்சுட்டாது 'வடிவு கொண்ட சூரனுட கனி' என உணர்த்தி உள்ளார். தக்கனை வென்றவர் சிவபெருமான். எனவே 'தக்கனைத் தரித்தவன் பேர் மூலி' (428) என்று கூறும்பொழுது அது சிவன் வேம்பு குறண்டியைக் குறிப்பிட்டுள்ளது எனக் கொள்ளலாம்.

தேங்காய்க்கு முக்கண் என்று பெயர். தேங்காயில் மூன்று கண்கள் போன்ற அடையாளங்கள் இருப்பதனாலேயே அப்பெயர் வழங்கப்பட்டுள்ளது. எனவே தான் ஒரு பாடலில் 'முக்கணுடைத்தே சுரண்டிச் சட்டியிட்டு' (449) எனத் தேங்காய் முக்கண் என அழைக் கப்பட்டுள்ளது. தேங்காயை உடைத்து அதனைச் சுரண்டி, சட்டியில் இட்டு, தேங்காயில் உள்ள நீரைவிட்டு, அத்தேங்காயைப் பிழிந்து கொள்ளும்படி ஒரு பாடலில் இவ்வாறு கூறி உள்ளார்.

முக்கணுடைத் தேசுரண்டிச் சட்டியிட்டு
முன்னீரை விட்டதைப் பிழிந்துகொண்டு (449)

யானைக் கொம்பைச் சுண்ணம் ஆக்கும் முறையைக் குறிப்பிட வந்த யாகோபு சித்தர் யானைக் கொம்பு என்று சுட்டாது

முக்கணுடை பெலிகொடுக்கும் மூத்தோன்கையில்
முனிவாகப் பிடித்தகொம்பைப் பொடியாய்ப்பண்ணி (452)

எனக் குறிப்பிட்டுள்ளார். இளநீர் என்பதை இலகுவாகக் குறிப்பிட் டிருக்கலாம். ஆனால் அவ்வாறு கூறாது மூன்று கண்ணை உடையவ னின் இளையோன் என இளநீரை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

முக்கணுட யிளையோனை வெட்டிநீரை
முழுச்சட்டி தன்னிலிட்டு........... (484)

கொடுப்பைக்கீரை என்று தமிழ் நாட்டிலும் பொன்னாங்காணீ என்று இலங்கையிலும் பெரு வழக்கில் உள்ள கீரையைக் குறிப்பிட வந்த யாகோபு சித்தர் அதனை அவ்வாறு கூறாது பொன் என்னும் கன்னி என்று திருமகளைக் குறிப்பிட்டுள்ளார். திருமகளின் அவதார மாகிய சீதையைக் குறிப்பிட்டு சீதை இராவணனால் சிறை எடுக்கப்பட்டதையும் சுட்டி உள்ளார். இவற்றை எல்லாம் குறிப் பிட்டே பொன்னாங்காணீ என்னும் கொடுப்பைக்கீரையை அறிமுகப் படுத்தியுள்ளார். அந்தப் பாடலின் முதலாம் அடி இவ்வாறு அமைந் துள்ளது.

தோணா மலிராவணன் சிறையெடுத்த
தோகைபொன்னாங் கன்னிதனைப் பிடுங்கிவந்து (457)

மற்றொரு வகைக்கீரையைச் 'சிறியநங்கை' (450) எனக் குறிப்பிட் டுள்ளார் யாகோபு சித்தர்.

'அரிதாரம்' என்பதை நேரடியாகக் குறிப்பிடாது மறைமுகமாக அதனை 'சீர்பெறவே விஷ்ணுவின் பெண்டீர் தன்னை' (480) என்றும் 'ஆதிமகாவிஷ்ணுவின் மனையாள் தன்னை' என்றும் குறிப் பிட்டுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

தென்னை மரத்துக்குத் தென்னம்பிள்ளை என்று மற்றொரு பெயருண்டு. அதனைப் பிள்ளை என்றே யாகோபு சித்தர் குறிப்பிட் டுள்ளார். அந்தப் பிள்ளையின் மகன் தேங்காய். அதன் இளையோன் இளநீர். ஆக, இளநீரை நேரடியாகக் குறிப்பிடாமல் மறைமுகமாக

பிள்ளைமகன் இளையோனை முகத்தைச் சீவி (589)

எனப் பாடியுள்ளார் யாகோபு சித்தர். இவ்வாறு பல்வேறு சந்தர்ப்பங் களில் பல்வேறு உத்திகளைக் கையாண்டுள்ளார் ஆசிரியர் தமது நூல் களில். அவற்றை சுவைமிக்கனவாய் அமைத்துள்ளார்.

செப்பமுறாத பொருள்களைச் சுத்தமாக்குதல் சுத்தி எனப்படும். யாகோபு வைத்தியம் 300 என்னும் நூலில் அத்தகைய சுத்தி செய்யும் முறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. பல்வேறு வகையான சுத்தி செய்யும் முறைகளைக் குறிப்பிட்ட யாகோபு சித்தர் அத்தகைய சுத்தி செய் வதற்கு இன்றியமையாத பொருள்களுள் ஒன்றாக 'அமுரி'யைக் குறிப்பிட்டுள்ளார். சிறுநீரே அமுரி எனப்படுகிறது. பலராலும் வெறுக்கப்பட்ட ஒரு பொருள் சிறுநீர். அந்த சிறுநீரைப் பயன் படுத்தி சுத்திசெய்யலாம் என்றுகூறி உள்ளார். வெள்ளைப் பாஷாண சுத்தியை இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்,

செய்யப்பா வெள்ளைப்பா ஷாணசுத்தி
திறமாக வாங்கிவந்து வைத்துக்கொண்டு
உய்யவே சிறுவருட அமுரிவாங்கி
உயர்வான மிளகுதனை அரைத்துப்போட்டு
மெய்யான பாஷாணங் கிளிதான் கட்டி
விதமான அடுப்பேத்தி எரித்தெடுத்து
பையவே கழுவியதை உலர்த்திக்கொண்டால்
பக்குவமாஞ் சரியான சுத்தியாச்சே
(யாகோபு வைத்தியம் 300 : 18)

நாடியின் விபரங்கள் பற்றியும் யாகோபு சித்தர் இந்நூலில் விளக்கி உள்ளார். வாதநாடி, பித்தநாடி, சிலேற்பனநாடி, பூதநாடி, ஐயநாடி என நாடியின் வகைகளை விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். நாடிகளின் மொத்த எண்ணிக்கை நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு என்பதை இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

முறையிது மார்க்கமென்று மொழிந்திடும் வகைகட்கெல்லாம்
நறையும்நா லாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு
குறைவிலா தறியவென்ற கொள்கையை விபரமாகத்
தரையினி லுரைப்பேன் நாடிசமர்த் தினால்வாதம்பாரே.
(யாகோபு வைத்தியம் 300 : 75)

வாதம் ஏற்படும் முறைகளையும் அவ்வாறு ஏற்படுவதனால் உண்டாகும் நோய்களையும் வரிசைக் கிரமமாகக் குறிப்பிட்டுள்ளார். யாகோபு சித்தர் தமது பாடல்களில் வாதம் ஏற்படும் வேகத்தினை முதலில் குறிப்பிட்டுள்ளார். குதிரை, நாய், ஆமை, எலி, பூனை, உடும்பு, அன்னம், காகம், தவளை முதலிய பிராணிகள் போல் வாதம் வரும் என்றும் எவ்வாறு வாதம் வந்தால் என்ன என்ன நோய்கள் ஏற்படும் என்றும் விரிவாக விளக்கியுள்ளார். உதாரணமாக ஒன்றை எடுத்துக்கொள்வோம். குதிரை போன்று வாதம் வரும் என்றார். குதிரை போல் வாதம் வந்தால் வயிற்றில் நோவு ஏற்படும்; கால் கடுக்கும்; பிடரியில் வலி உண்டாகும்; இடுப்பு வெட்டும்; மேல் வலி அதிகமாகும்; கண் நோவு ஏற்படும்; இவை ஏற்பட குதிரை போன்று வாதம் குதித்து குதித்து வரும். இக்கருத்துக்களையே யாகோபு சித்தர் இவ்வாறு ஒரு பாடலில் அமைத்துப் பாடியுள்ளார்.

வாதமே குதிரைபோல வருகிடில் வயிற்றில் நோவு
மேதமாய் கால்கடுக்கும் பிடரியில் வலியுண்டாகும்
மீதமா யிடுப்பு வெட்டும் மேல்வலி அதிகமாகும்
கோதிலா விழியில் நோவு குதித்தோடும் வாதவாய்வே.
(யாகோபு வைத்தியம் 300 : 76)

பித்த நாடியைப்பற்றியும் இதே பாணியில் பிராணிகள் போன்றே வருவன என்று குறிப்பிட்ட ஆசிரியர் அவ்வாறு வந்தால் ஏற்படும் நோய்களையும் விவரித்துள்ளார். குதிரை போன்ற நடையில் பித்த நாடி இயங்குமாயின் சரீரத்தில் சக்தி குறையும்; தலைவலி உண்டாகும். தலை கனமாகும்; பேச்சு அதிகமாகும்; அழுகை ஏற்படும்; அவ்வாறு ஏற்பட்டோர் கண்ணை முழிப்பர் என இவ்வாறு பாடியுள்ளார்.

குதிரைபோற் பித்தம்வந்து கூடியே நடக்குமாகில்
கதிருள பெலன்குறைந்து தலைவலி கனமுண்டாகும்
அதிரவே பேச்சுமுண்டு அபயமும் அழுகையுண்டு
பிதிரவே முழிக்குங் கண்ணும் பித்தமென் றுரைக்கலாமே
(யாகோபு வைத்தியம் 300 : 97)

அடுத்து சிலேற்பன நாடியின் இயல்பை வகுத்துக் கூறியுள்ளார். கபம், சளி என்பனவற்றை இது குறிக்கும். இதனையும் விவரிக்கப் புகுந்த ஆசிரியர் அதே உத்தியைக் கையாண்டுள்ளார். இந்த சிலேற்பனம் குதிரை, அம்பு, ஆமை, பூனை, அன்னம் போன்று வரும் என்றார். சிலேற்பனம் அம்பு போல் அதிர்ந்து வரும் என்பார். அவ்வாறு அம்பு போல வந்தால் பெலன் குறையும்; இரண்டு காதும் அடைத்துவிடும்; இருமலேற்படும்; வாயிலிருந்து நீர் வடியும்; காசமாக மாற்றிவிடும் என இவ்வாறு பாடியுள்ளார்.

அம்பு போற் சிலேற்பனந்தான் அதிர்ந்துமே வருகுமாகில்
தெம்புள்ள பெலன்குறைந்து செவிரெண்டு மடைத்துக்கொள்ளும்
வம்புட னிருமலுண்டு வாயில் நீர்வடியும் பின்பு
வெம்பிடுஞ் சேதம்காச விதமெனச் சொல்லலாமே
(யாகோபு வைத்தியம் 300 : 129)

பூதநாடியின் இயல்பைக் குறிப்பிடும்பொழுது அதன் வருகையை அம்புக்கும் அன்னத்துக்கும் மாத்திரமே ஆசிரியர் ஒப்பிட்டுள்ளார். நாடியின் ஒழுங்கற்ற தன்மை பூதநாடி என விவரிக்கப்பட்டுள்ளது. பேய் பிடித்தவர் நாடி என இதனைச் சொல்லலாம். இந்தப் பூதநாடி அன்னம் போல் வந்தால் ஒருவனுக்கு அசதி ஏற்படும்; காந்தல் உண்டாகும்; இடுப்பு வெட்டும்; சின்னம் ஏற்படும்; கொப்பளங்கள் தோன்றும்; இறுதியில் அம்மை நோயாகும் என இவ்வாறு யாகோபு சித்தர் பாடியுள்ளார்.

அன்னம்போல் பூதம் வந்தால் அசதியும் காந்தல் காணும்
சின்னமாய் இடுப்புவெட்டும் சிறிதுகொப்பளங்கள் தோணும்
சொன்ன கொப்பளங்களெல்லாம் சொடிந்துமே பிறங்கிக்கொள்ளும்
நன்னய ஆமையாகும் நாடிய வகை யிதாமே.
(யாகோபு வைத்தியம் 300 : 135)

அடுத்து விவரிக்கப்படுவது ஐயநாடி. இது சிலேட்டும நாடி என்றும் கபநாடி என்றும் வழங்கப்படும். நாடித்துடிப்பு என்றும் அழைக்கப்படும். நாடியின் மூன்று நிலைகளுள் ஒன்று இவ்வாறு வழங்கப்படும். நாடியின் ஒழுங்கு குலைவினை இது குறிக்கும். உடலமைப்பில் உள்ள கபச் சீர்குலைவினையும் இது சுட்டும். நாடித் துடிப்பு சில சமயங்களில் விரிவடையும் அல்லது சுருங்கும். விரல் அல்லது விரல்களால் இது அறியப்படும். இந்த ஐயநாடியின் இயல்பு களை பல பாடல்களில் விவரித்துள்ளார். ஐயநாடியின் ஒழுக்கை பிராணிகளின் நடையுடன் மாத்திரம் ஒப்பநோக்குவதில் திருப்தி அடையாத யாகோபு சித்தர் அதன் வருகையை கயிறுடனும் அம்புடனும் ஒப்பிட்டுள்ளார். ஐயநாடி வரும் கதிக்கு இணங்க ஒருவனுடைய உயிரின் கால எல்லை நிர்ணயிக்கப்படுவதாகக் குறிப் பிட்டுள்ளார்.

ஐயநாடி ஆமை வேகத்தில் ஏற்பட்டால் அவ்வாறு ஏற்பட்ட மனிதன் ஆறுமாதத்தில் மரணமாவான் என்றும் எறும்பின் வேகத்தில் ஏற்பட்டால் அவ்வாறு ஏற்பட்ட மனிதன் ஐந்து மாதத்தில் மரண மாவான் என்றும் இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

ஐயமே ஆமைபோல அசந்துமே நடக்குமாகில்
மெய்யதா யாறுமாத மிலர்தானு மரணமாகும்
பையவே எறும்பு போலே பரிந்தையம் வருகுமாகில்
பொய்யில்லை மாதமைந்து போனபின் மடிவான் பாரே

(யாகோபு வைத்தியம் 300 : 138)

கயிறு போல் ஐயநாடி வந்தால் ஐந்து நாழிகையிலும் அம்பு போல வந்தால் அரைச் சாமத்திலும் மரணம் ஏற்படும் என ஐயநாடி பற்றிய கடைசிச் செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் யாகோபு சித்தர்.

தந்திடு கயிறு போலத் தானைய மோடிப்பின்பு
நைந்திடு மாகிலைந்து நாழிகை மரணஞ்சொல்லு
வந்திடு அம்புபோல வருகிடி லைய ந்தானும்
பிந்திடா தரைச்சாமத்தில் பேச்சில்லை மடிவார் பாரே.

(யாகோபு வைத்தியம் 300 : 156)

வியாதி வரும் விவரங்களை அடுத்து எடுத்துக் காட்டியுள்ளார் யாகோபு சித்தர். வியாதி ஏற்படுவதற்கான காரணங்களைக் குறிப் பிட்டுவிட்டு அத்தகைய வியாதிகளைத் தீர்ப்பதற்கான மருந்துவகை களையும் அவை எவ்வாறு தயாரிக்கப்படல் வேண்டும் என்பதனையும் பல பாடல்களில் விளக்கி உள்ளார் ஆசிரியர். உலகத்திலே வியாதிகள் ஏற்படுவதற்கான பொதுப்படையான காரணங்களை இலகு தமிழில் இவ்வாறு ஒரு பாடலில் யாகோபு சித்தர் விளக்கி உள்ளார்.

தன்மனையாளுந் தானுமி ருக்கையிலே
    தாவிவேறு மனைதேடிப் புகுந்தாலும்
நன்மனைவியின் போகமிகுந்தாலும்
    நல்லுணவென் றதிகம் புசித்தாலும்
வன்மையாகக் குறைத்துப் புசித்தாலும்
    மாலையி லெண்ணெய் முழுகிக் குளித்தாலும்
சின்னமா மலச்சிக்க லிருந்தாலும்
    தேடிப் பாரில் வியாதிகள் வருகுமே.

(யாகோபு வைத்தியம் 300 : 160)

நோய் வராமல் தடுப்பது மிக நல்லது. ஆனால் நோய் ஏற்பட்டு விட்டால் உடனடியாக அதனைத் தீர்க்க நடவடிக்கைகள் எடுக்கப் படல் வேண்டும். கஷாயங்களைக் குடிக்கவேண்டும். அவ்வாறு தொடக்கத்திலே நடவடிக்கை எடுக்கப்படாவிட்டால் அதனால் ஏற்படும் விளைவுகள் பயங்கரமாயிருக்கும். ஆக, நோயினை முளை யிலே கிள்ளி விடவேண்டும். இக்கருத்துகளையே அந்தாதியாக உள்ள இரண்டு பாடல்களில் இவ்வாறு விளக்கி உள்ளார் யாகோபு சித்தர்.

காலிலே முள்ளுத் தைத்தவுடனேதான்
    கண்ட முள்ளை எடுத்து எறிந்திடில்
சோலி யேதுவி யாதிகளுமில்லை
    தோணா மலதைவிட்டுமே வைத்திட்டால்
வேலிக்கு முள்ளிடக் காலினிற் பாய்ந்தாற்போல்
    மிக்க சீயும் பிடித்துப் புரைவைத்து
மேலினிற்சுர சன்னியும் வந்திடும்
    வேணுமென்று நீ தேடின தாகுமே.

ஆகு மிந்த விதமிது போலவே
    அறியா மற்சுரங் கிட்டியே வந்திடில்
பாரு டனேகி யாழங்கள் செய்துமே
    பண்பு டனே கொடுத்து விடுத்திட்டால்
வாகு டனேசுரமும் ப றந்திடும்
    வகையுடனே நீ பாராமல் விட்டிடில்
ஏகு மிந்தச் சுரமும் வலுத்துப்பின்
    எல்லாச் சன்னியும் வந்துவிளையுமே

(யாகோபு வைத்தியம் 300 : 162-163)

கியாழம் என்பது கஷாயம். மற்றொரு சந்தர்ப்பத்தில் விக்கலுக்கு மருந்து குறிப்பிட்டுள்ளார். இலகு தமிழில் அமைந்த அப்பாடல் வருமாறு :

விடுமே விக்கல் வந்தாக்கால்
　　வேண்டு மருந்தை நீகேளு
நடுவே பழைய செருப்புதனில்
　　நன்றாய்ப் பிஞ்ச தோலெடுத்து
மடுவே தீயி லேகருக்கி
　　வைத்துச் சாம்ப லாயெடுத்து
கொடுவே தேனிற் றான்குழப்பிக்
　　கொடுக்க விக்க லுடன் போமே.

(யாகோபு வைத்தியம் 300 : 303)

யாகோபு வைத்தியம் 300 இல் பாடல்களின் தலைப்பு மாற மாறச் சந்தங்களும் வேறுபட்டு வந்துள்ளன. சுத்திகளைப் பற்றியுள்ள பாடல்களை ஒரு சந்தத்திலும் நாடியின் விபரங்களை வேறொரு சந்தத்திலும் பல்வேறு நாடிகளின் இயல்புகளை மற்றொரு சந்தத்திலும் வியாதிவரும் விபரங்களை இன்னொரு சந்தத்திலும் யாகோபு சித்தர் பாடியிருப்பதைக் காணலாம். படிப்போருக்குக் களை தட்டாமல் இருக்கவே பல்வேறு சந்தங்களை யாகோப் சித்தர் தமது பாடல்களைப் பாடப்பயன்படுத்தி உள்ளார்.

யாகோபு சித்தர் தமது யாகோபு வைத்தியம் 300 என்னும் நூலில் பெரும்பாலும் தாம் கூறுவனவற்றை யெல்லாம் ருக்குமான் அல்லது உருக்கிமான் என்பவரை முன்னிலைப்படுத்தியே கூறியுள்ளார். ருக்குமானே என விழித்துக் கூறியுள்ளார். இஸ்லாமிய வரலாற்றிலே லுக்மான் என்பவரைப் பற்றிப் பேசப்பட்டுள்ளது. இவர் ஒரு தலை சிறந்த அறிஞர், வைத்தியர். லுக்மானுல் ஹக்கீம் எனப்பெருமை யாக அழைக்கப்பட்டவர். அல்குர்ஆனிலே இவரைப்பற்றிக் குறிப் பிடப்படுகிறது.

‘ நிச்சயமாக நாம், ‘லுக்மானு’க்கு
ஞானத்தைக் கொடுத்தோம் ’ (31 : 12)

ஆனால் தமது பாடல்களில் யாகோப் சித்தர் குறிப்பிடும் ருக்குமான் என்பவர் யார் என்பது புலனாகவில்லை. ஒருவேளை ருக்குமான் என்பவர் வைத்திய சாஸ்திரம் கற்க யாகோப் சித்தரிடம் வந்த ஒரு மாணவனாயிருக்கலாம். ருக்குமானைப்பற்றிய குறிப்பு யாகோபு வைத்தியம் 300 என்னும் நூலில் மாத்திரமே வந்துள்ளது. பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. காப்புச் செய்யுளிலே இப்பெயர் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

ஆதிநாத னமைத்த படைப்பினில்
பேதியாமற் பிறந்த வைத்தியம்
ஓதித்தேற உருக்குமா னுக்கிதை
நீதியாக நிறைப்படி சொல்லுவேன்.

மற்றொரு பாடலில் ருக்குமான் தம்மிடம் வந்ததாகவும் இன்னொரு பாடலில் தமக்கு மந்திரங்கள் சாஸ்திரங்கள் முதலியவற்றைக் கற்றுத்தரும்படி கேட்டதாக ஒரு பாடலின் கடைசி இரண்டு அடிகளும் இவ்வாறு அமைந்துள்ளன.

*சீரான ருக்குமா னிவடந்தன்னில்*
*தேடியென் னிடம்வந்து இருந்துகொண்டு*
*கூராகவாத வைத்தியங்கள் கேட்கக்*
*குறிப்புடன் சொல்லக்கேட்டு மகிழ்வுற்றாரே*
(யாகோபு வைத்தியம் 300)

*சுகமாகக் கைநாடி வைத்தியங்கள்*
*சூட்சமுள்ள மந்திரங்கள் சாஸ்திரங்கள்*
*புகழாக வியாதிவரும் குணங்கள் தன்னைப்*
*பூரணமாய் எந்தனுக்கு இயம்புவீரே.*
(யாகோபு வைத்தியம் 300 : 4)

இதற்கு விடைபகரும் முகமாக அடுத்த பாடல் அமைந்துள்ளது. அந்தப்பாடலில் யாகோபு சித்தர் விடை அளிக்கிறார்.

இயம்பென்ற ருக்குமான் றனக்குத்தானும்
இனிமையுடன் யாகோபு இயம்புகின்றேன்.
(யாகோபு வைத்தியம் 300 : 5)

இதே போன்று பல இடங்களில் ருக்குமான் என குறிப்பிடப்பட்டுள்ளது. 'சொல்லக்கேளும் ருக்குமானே' (218); 'பேணிச் சொல்வேன் ருக்மானே' (227); 'வாதம் போய்விடக் கியாழமது வகையாய்க் கேளும் ருக்மானே'(258); 'தலைதான் முழுகத் தைலமதைச்சாற்றக் கேளும் ருக்மானே'(261); 'தாட்சியில்லா ருக்மானே சகலருமறியச் சொன்னேனே' (264); 'சுழிலாய் இன்னொருமுறை தன்னைச் சொல்லிடக் கேளும் ருக்மானே' (275); 'சேரே இதற்கு மருந்துதனைச் சிறப்பாய்ச் சொல்வேன் ருக்மானே' (287); 'மேகம் போய்விடும் பத்தியத்தை விரும்பிக்கேளும் ருக்மானே' (360); போமே இன்னு மெருவித்ததைப் புகலக்கேளும் ருக்மானே' (303) என யாகோபு வைத்தியம் 300 என்னும் பகுதியில் வந்துள்ளமையைக் காணலாம்.

தாம் குறிப்பிடும் வைத்திய முறைகளைப் பின்பற்றினால் அவ்வாறு பின்பற்றுபவர்களின் நோய்கள் அகன்றுவிடும் என்று யாகோபு சித்தர் தமது பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். அத்தகைய நோய்கள் எவ்வாறு அகன்றுவிடும் என்பதை விளக்க முன்னோர் குறிப்பிட்டுள்ள உவமைகளையே தமது பாடல்களிலும் இடம் பெறச் செய்துள்ளார். தமது மருந்து வகைகளை மேற்கொண்டால் நோயாளிகளின் நோய்கள் சூரியனைக்கண்ட பனிபோல் மறைந்துவிடும் என்று

குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு குறிப்பிடும் பொழுது சந்தர்ப்பங்களுக்கு இயைய சூரியனைக் குறிக்க வெவ்வேறு சொற்களைப் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம். ஒரு செய்யுளில் 'பானுகண்ட பனிபோலாகும்' (102) என்றும் மற்றுஞ்சில செய்யுட்களில் 'கதிர் கண்ட பனி போலேகும்' (141; 184; 442; 463; 652; 591) என்றும் வேறு சில செய்யுட்களில் 'பகலவனைக் கண்ட பனிபோல வாகும்' (224) மற்றொரு செய்யுளில் 'பகல்கண்ட பனிபோல பறந்துபோகும்' (266) இன்னும் சில செய்யுட்களில் 'பருதிகண்ட பனிபோலாம்' (234; 256; 290; 403; 630) என்றும் பிறிதொரு செய்யுளில் 'நிதி கதிரைக் கண்ட பனிபோல மாறும்' (627) என்றும் வந்துள்ளன. வேறுசில செய்யுட்களில் சூரியனைக் கண்ட இருளைப் போல நோய்கள் தீர்ந்து விடும் எனக் குறிப்பிட்டுள்ளார். (174; 199; 332; 350; 381; 385). முப்புரத்தைச் சிவபெருமான் எரித்த வரலாறு சைவ சமயத்தில் உள்ளது. அதனையே ஓர் உவமையாக யாகோபு சித்தர் குறிப்பிட்டுள்ளார். அப்பிரகத்தை அரைத்தால் அது 'முப்புரத்தை எரித்தால் போல நீறுமாகும்' (223) என்பதே அந்த உவமையாகும். இன்னும் சில பாடல்களில் ஒன்றோடொன்று பகைமை பூண்டுள்ள இரண்டு பிராணிகளைக் குறிப்பிட்டு ஒன்றைக் கண்ட மற்றது போல் வியாதிகள் மறைந்துவிடும் எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

நாற்றிசையிற் கருடன் கண்ட சர்ப்பம் போல
நாடாம லோடுமென்று நவின்றிட்டாரே (357)

சொல்லுமென்ற புலிகண்ட ஆடுபோலாம்
சூட்சமிது யாகோபு சொன்னார்தாமே (380)

பிசகாது யானைகண்ட சிங்கம் போலாம் (392)
காட்டிலே யாளிகண்ட யானை போலாம் (643)

சிங்கங் கண்ட மதயானைபோலாகும் (683)

இராமருடைய பாணம் மிக வேகமாகச் சென்று தாக்கும் ஆற்றல் வாய்ந்தது. தாம் கூறும் மருந்து வகைகளை உட்கொண்டோரின் வியாதிகள் இராமருடைய அம்பு போல விரைவாக அகன்று விடும் என்று ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் யாகோபு சித்தர்.

பெலமுள்ள சுரங்களது பத்தும் போகும்
பின்னாளின் பாற்கஞ்சி யுண்டு தேறு
பெலி கொடுக்கும் ராமருட பாணம் போலாம்
பேதமில்லை யாகோபு பேசினுரே. (384)

மருந்துவகைகளையும் தயிலங்களையும் உரிய முறையில் தயார் செய்தால் அவற்றினால் நிச்சயம் பலன் உண்டு. ஒரு பட்ட மரமாயிருந்தாலும் அம்மரத்தின் வேருக்கு நீர் கிடைத்தால் அம்மரம் தளிர்க்கும். அதே போன்று சிறப்பாகத் தயார்செய்யப்பட்ட மருந்தினால் வியாதி

குணமாகும். இதனையே ஓர் உவமை மூலம் இவ்வாறு விளக்கியுள்ளார் யாகோபு சித்தர். இந்த உவமை இடம்பெற்ற பாடலில் யாகோபு சித்தர் தமது மாணாக்கனுக்கு சில ஆலோசனைகளை வழங்கி உள்ளார். அந்தப் புத்திமதிகளுக்கு ஆதாரமாகவே இந்த உவமை இங்கு புகுத்தப்பட்டுள்ளது. இதுதான் அந்தப்பாடல்.

பாரிலே இத்தயிலஞ் செய்து நீயும்
  பதியவே வாதங்கள் மிகவுஞ்செய்து
ஊரிலே இருந்துவிடு வலிமார் போலே
  உலகத்தில் இப்பாகஞ் சொல்ல வேண்டாம்
வேரிலே நீரிருந்தால் மரந்தளிர்க்கும்
  விதம்போலக் கருவுகளின் விபரந்தன்னைக்
கூறினா லொன்றுமில்லை தயிலபாகங்
  குணமாகச் செய்திடவே சுத்தியாகும்.

(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 556)

அருந்ததியைக் கண்ணால் பார்த்தல் இலகுவன்று. புதுமணத் தம்பதிகளுக்கு அருந்ததியைக் காட்டுவர். புதுமணத்தம்பதிகள் சகல பாக்கியங்களும் பெற்று பொலிவுடன் கற்புக்கமைய வாழவேண்டும் என்னும் அவாவினாலே அவ்வாறு காட்டுவர். காண்பதற்கு அரிதான அருந்ததியைக் காணக்கூடிய ஒரு வழியை யாகோபு சித்தர் குறிப்பிட்டுள்ளார். பொன்னாங்கன்னித் தைலம் என்னும் தலைப்பிலே அந்த விவரத்தைக் குறிப்பிட்டுள்ளார். திருமகளின், பொன்னாங்கன்னியின் - அவதாரமான சீதா பிராட்டியை இராவணன் சிறை எடுத்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. பொன்னாங்காணி அல்லது கொடுப்பைக் கீரையைக் குறிப்பிடவே இந்த நிகழ்ச்சியை யாகோபு சித்தர் குறிப்பிட்டுள்ளார். பொன்னாங்கன்னியை உரலிலிட்டு இடித்து எரித்து முடாவில் ஊற்றிக் காய்ச்சி அதனைப் பூசி முழுகினால் தெரியாதவை எல்லாம் கண்ணுக்குப் புலப்படும். கண்களுக்குச் சாதாரணமாகப் புலப்படாத அருந்ததியையும் பார்க்கலாம். இக்கருத்துக்களையே யாகோபு சித்தர் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தோணாம லிராவணன் சிறையெடுத்த
  தோகை பொன்னா ங்கன்னித னைப்பிடுங்கிவந்து
நாணாதே கல்லுரலி லிட்டு நைய
  நலம்பெறவே திலகமுன்னெடையும்ரெட்டி
வாணாமல் வாங்கியிடி பாணிரெட்டி
  வகையாக யெரித்து முடா ஊற்றிக் காய்ச்சிக்
காணாத தைலங்கள் முழுகக்கேளு
  கண்களுக்கு அருந்ததியுங் காணுந்தானே.

(யாகோபு வைத்திய சிந்தாமணி 700 : 457)

யாகோபு சித்தரின் பாடல்கள் எல்லாம் நான்கடியை உடையன வாய் இருக்க ஒரு செய்யுள் மாத்திரம் ஐந்தடிச் செய்யுளாக அமைந் திருப்பதைக் காணலாம். அச்செய்யுள் லிங்க சுத்தியைப்பற்றிக் குறிப் பிட்டுள்ளது. அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

பாரேயோர் கட்டியாய் லிங்கம் வாங்கிப்
பகரொருநாள் தேனதிலே ஊறப்போட்டு
நேரேதா னதையெடுத்து அமுர்தப்பாலில்
நேர்மையுடன் றானொருநாளூறப்போட்டு
சீரேதான் எலுமிச்சம் பழச்சாரோடு
சிறந்தகுப்பை மேனிச்சா ரமுதப்பாலும்
காரேதான் மூன்றையுமே சேர்த்து வைத்து
கருத்தாக அடுப்பிலே சட்டியேத்தி
காரேலிங் கத்தைச்சட் டியிலே வைத்துத்
தடையின்றிப் புகையாமல் சுருக்குத் தாக்கே.

(யாகோபு வைத்தியம் : 300 : 15)

இங்கே அமுர்தப்பால் என்றும் அமுதப்பால் என்றும் இரு சொற் றொடர்கள் வந்துள்ளன. அமுதப்பால் என்பது முலைப்பால். அமுர்தப்பால் என்பது மதியமுர்தம். பின்னையது யோகாப்பியாசத் தில் ஈடுபடும்பொழுது உள்நாக்கின் பின்புறமிருந்து கசிவது. அமுர்தப் பால், அமுதப்பால் என்னும் இரண்டையும் ஈண்டு குறிப்பிட்டுள்ளமை நோக்கற்பாலது.

**பிற செய்திகள் :**

யாகோபு சித்தர் சந்தித்ததாக அவர் குறிப்பிடும் பெரியோர்களைப் பார்ப்போம். மக்காவுக்குச் சென்று அங்கே அநேக நூல்களைப் பயின்று விட்டுத் தமது இருப்பிடமான சதுரகிரிக்கு வந்தபொழுது திருமூலர் தம்மைக் கண்டதாகவும் கண்டு இருக்க வைத்தார் எனவும் யாகோபு சித்தர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தானென்ற மக்காவில் அனேக நூல்கள்
தக்கபடி சொல்லி வைத்து அதைவிட்டேகி
தேனென்ற சதுரகிரி மத்தி வந்தேன்
திருமூலர் கண்டென்னை இருக்கவைத்தார்

(யாகோபு வைத்தியம் 300 : 2)

இறைநேசச் செல்வர்களான அவுலியாக்களுள் ஒருவரையே யாகோபு சித்தர் குறிப்பிட்டுள்ளார். பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த முகியத்தீன் அப்துல் காதிறு ஜெயிலானி (ரலி) அவர்களை மாத்திரமே குறிப்பிட்டுள்ளார்.

யோக ஹளறத்து சையதப்துல்
உற்ற காதர்கயி லானி என்றே
(யாகோபு வைத்தியம் 300 : 6)

என அப்பெரியார் ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளார்.

சித்தர்களின் காலத்தை நிர்ணயிக்க முடியாது என சித்தவைத்திய முறையில் கைதேர்ந்தவர்கள் கூறுவர். இராமதேவர் நீண்ட காலத்துக்கு முன் வாழ்ந்தவர் என்பது ரி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்களின் கருத்து. வைத்திய வாதயோக ஞானங்களில் மகா வல்லவராகத் திகழ்ந்தார்கள். இவர் பதினெண் சித்தர்களுள் ஒருவராகக் கருதப்பட்டுள்ளார். இஸ்லாத்தைத் தழுவுவதற்கு முன்னரே பல நூல்களை எழுதி உள்ளார்.

இராமதேவராக வாழ்ந்து இஸ்லாத்தைத் தழுவிய பின்னர் யாகூப் ஆக மாறிய இவருடைய காலத்தை நிர்ணயிக்கக்கூடிய அகச் சான்றுகள் கிடைக்கவில்லை. முகியத்தீன் அப்துல் காதிர் ஜயிலானி (றலி) அவர்களைத் தமது நூலில் குறிப்பிடுவதிலிருந்து யாகோபு சித்தர் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவர் என்பது புலனாகிறது. அவருடைய மொழி நடையைப்பற்றிப் பார்க்கும் பொழுது அவர் பிற்காலத்தில் வாழ்ந்தவராகக் கொள்ளலாம். ஆனால் யாகோபு சித்தர் கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என கூறுவர் சிலர். பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என வேறு சிலர் அபிப்பிராயப்படுவர். சித்த இலக்கியங்களில் ஆய்வு மேற்கொண்ட டாக்டர் வெங்கடராமன் போன்றார் யாகோபு சித்தர் தேரையரின் மாணவர் என்றும் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் ன்றும் கருத்துத் தெரிவிப்பர்.

ஆக, யாகோபு சித்தர் தமது நூல்களில் பயன்படுத்தி உள்ள சொற்களைக் கொண்டே அவருடைய காலம் நிர்ணயிக்கப்படவேண்டியுள்ளது. அவருடைய நூலினைப்பற்றிய விரிவான மொழி நூல் ஆய்வு ஒன்றினை மேற்கொண்டால் மாத்திரமே அந்தச் சொற்களின் அடிப்படையில் யாகோபு சித்தர் எக்காலத்தைச் சேர்ந்தவர் என்பதை நிர்ணயிக்கக்கூடியதாக இருக்கும். அத்தகைய ஓர் ஆய்வு இன்றியமையாததாகின்றது.

---

# நான்காம் இயல்

## ஆயிரமசலாவென்று வழங்கும் அதிசய புராணம்

சமய, இனச் சார்புபெற்ற இலக்கியங்கள் ஒரு மொழியில் தோன்றுதல் தவிர்க்க முடியாததாகும். காரணம் சமுதாயத்தின் பிரதி பலிப்பே இலக்கியமாக வெளிவருகிறது. அச்சமுதாய அமைப்பில் பின்னிப்பிணைந்து பிரிக்க முடியாத நிலையினை எட்டியிருப்பன சமய, இனக் கொள்கைகளாகும். எனவேதான் தமிழிலக்கிய வரலாற்றிலும் நாம் சைவ, வைஷ்ணவ, சமண சமய இலக்கியங்கள் என்றும், கிறிஸ்துவ, இஸ்லாமிய மத இலக்கியங்கள் என்றும் வேறுபடுத்த முடிகின்றது. ஒவ்வொரு சமயமும் இனமும் தங்களது பங்கினை தமிழிலக்கிய வரலாற்றில் நிலைநாட்டத் தவறவில்லை. இவ்வகையில் இஸ்லாமிய மதம் ஏனைய எந்த ஒரு சமயத்திலும், இனத்திலும் இல்லாத அளவிற்கு பெருங்காப்பியங்களையும், சிற்றிலக்கியங் களையும், இன்னபிற தமிழிலக்கியப் பிரிவுகளையும் தன்னகத்தே பெற்றமைந்திருப்பதுடன் தமக்கென மட்டுமே சுட்டுக்காட்டும் சில தமிழிலக்கிய வகைகளையும் பெற்றுள்ளது. இத்தகைய இலக்கிய வடிவங்களை இஸ்லாமிய தமிழிலக்கிய வடிவங்கள் என்றே நாம் குறிப் பிடலாம். காரணம் இஸ்லாமிய மதம் பெற்றுள்ள இவ்வகை இலக்கி யங்களை இஸ்லாம் அல்லாத வேறு தமிழிலக்கியங்களில் நம்மால் காண முடியாது.

**இஸ்லாமிய இலக்கிய வடிவங்கள் :**

இஸ்லாமிய தமிழிலக்கிய வடிவங்களாக நாம் குறிப்பிடுவன கிஸ்ஸா, நாமா, மசலா, முனாஜாத்து, படைப்போர் முதலான இலக்கியப் பிரிவுகளேயாகும். ஏனைய பிற சமய, இன இலக்கியங் களில் இல்லாத இவ்விலக்கிய வகைகள் இஸ்லாமிய மதத்திற்கே உரிய சிறப்பிலக்கிய வகைகளாகும். இவ்விலக்கிய வகைகளும் அவற்றின் பெயர்களும் அறபு, பாரசீக மொழிகளை அடியொற்றியே தமிழிலக்கி யத்தில் இடம் பெறுகின்றன. ஒரு மொழியின் இலக்கியத்திற்கும் அவ்விலக்கியம் சார்ந்துள்ள மதத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர் பினைப் புரிந்து கொள்வதற்கு இத்தகைய இலக்கியப்பிரிவுகள் சிறந்த சான்றாகும். இஸ்லாம் மதத்தின் கலாசாரமும் கோட்பாடுகளும் அறபு, பாரசீகம் போன்ற நாடுகளின் பின்புலத்துடன் நெருங்கிய தொடர்புடையனவாகும். அதனால் இஸ்லாம் வழித்தோன்றும் தமிழிலக்கியங்களிலும் அறபு, பாரசீகத்தின் தாக்கத்தினைக் காணமுடி கின்றது. இத்தாக்கங்கள் இஸ்லாமிய தமிழிலக்கியங்களில் பரந்து பட்டுக் காணப்படினும் இஸ்லாமிய தமிழிலக்கிய வடிவங்களாகக் குறிக்

கப்படும் முனாஜாத்து, கிஸ்ஸா, மசலா, நாமா, படைப்போர் முதலான பிரிவுகளில் ஏனையவற்றைக் காட்டிலும் சற்று அதிகமாகவே உள்ளன எனலாம்.

இஸ்லாமிய தமிழிலக்கியப் பிரிவுகளுள் ஒன்றான மசலா என்னும் இலக்கிய வகையுள் ஒன்றே ஆயிரமசலா என்னும் தமிழிலக்கிய வடிவமாகும். 'மஸ்அலா' என்னும் அறபுச் சொல்லின் (Mas'alat) பொருள் வினா என்பதாகும். மஸ்அலா என்னும் சொல்லே தமிழில் மசலா என்று வழங்கப்பெறுகிறது. இவ்வறபுச் சொல் ஸுஆல் (கேள்வி) என்னும் அறபு வேர்ச்சொல்லிலிருந்து தோன்றியதாகும். அறபில் மஸ்அலா என்பதன் பிறிதொரு பொருள் 'பிரச்சனை' என்பதாகும். எனவே இஸ்லாமிய தமிழிலக்கிய வடிவங்களுள் ஒன்றாகக் கருதப் படும் மசலா என்பதன் நேரடியான பொருள் பிரச்சனை அல்லது வினா என்பதாகும். இஸ்லாம் அண்ணல் நபி (சல்) அவர்களின் காலத்திற்குப் பின் வேரூன்றிப் பரவத்தொடங்கிய காலக்கட்டத்தி லிருந்து இன்றுவரையில் அதனுடைய போதனைகளிலும் மார்க்கம் வகுத்துக்காட்டும் நெறி முறைகளிலும் எண்ணற்ற ஐயங்கள் தோன்றி யிருக்கின்றன. இவ் ஐயங்கள் வினாவாக எழுகின்றபோது அவற்றை நிவர்த்தி செய்யும் வழி முறையை இஸ்லாம் வகுத்துக் காட்டுகின்றது. அதாவது ஒருவருக்கு இஸ்லாத்தின் பரந்துபட்ட நற்போதனைகளில் எப்பகுதியில் ஐயங்கள் தோன்றினும் அவற்றை மார்க்க போதகர் களிடம் வெளிப்படுத்தி தீர்த்துக்கொள்ள வேண்டும் என்பதே மார்க்கத் தில் பின்பற்ற வேண்டிய வழியாகும். இத்தகைய முறையின் அடிப் படையில் எழும் ஐயப்பாடுகளையே மஸ்அலா என்னும் அறபுச்சொல் குறிக்கிறது. இஸ்லாத்தில் இவ்வாறு ஒருவருக்கு எழும் மஸ்அலாக் களுக்குரிய தீர்வுகளை தேடும்போது அவற்றிற்கு ஆதாரமாக இருப் பவைகள் இரண்டாகும்; ஒன்று அல்குர்ஆன், மற்றது அல்ஹதீது ஆகும். அல்குர்ஆன் என்பது இறைவனால் வானவர் ஜிப்றயீல் (அலை) மூலமாக அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு வெளிப்படுத்தப் பட்ட இஸ்லாமியர்களின் ஏகோபித்த வேத நூலாகிய திருமறை யாகும். அல்ஹதீது என்பது குறிப்பாகப் பெருமானார் நாயகம் (சல்) அவர்கள் தம் வாழ்வில் சொன்னவைகள், செயலாக்கியவைகள், நடப்பித்துக்காட்டிய நிகழ்வுகளைக் குறிக்கும். இவை யிரண்டினைப் பற்றியும் நாயகம் (சல்) கூறும்போது 'உங்களுக்கிடையே நான் இரண்டினை விட்டுச் செல்கின்றேன். அவ்விரண்டினையும் நீங்கள் உறுதியாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளின் நீங்கள் ஒருபோதும் வழி கெட்டுப் போகமாட்டீர்கள் இவ்விரண்டும் அல்குர்ஆனும், அல்ஹதீ தும் ஆகும்' என்றார்கள். தீனுல் இஸ்லாம் அதன் வரலாற்றில் எத்தனையோ மஸ்அலாக்களை எத்தனையோ பேர்களிடமிருந்து பல்வேறு இக்கட்டான சூழ்நிலைகளிலும் எதிர்கொண்டிருப்பினும்

அத்தனை ஐயப்பாடுகளுக்கும் மேற்குறித்த அல்குர்ஆனும், அல்ஹதீதும் விடையளித்திருக்கின்றன. இவ்விரண்டும் விடை பகர முடியாத வினாவே இதுவரையில் எழவில்லை. இனியும் எழப்போவதுமில்லை என்று கூறலாம். இஸ்லாமில் காணப்படும் இத்தகைய நெறிமுறை அதாவது எழும் வினாக்கள் அதனை தீர்த்து வைப்பதற்கான வழி முறை ஆகியன இஸ்லாமியத் தமிழ்ப்புலவர் மனத்தில் இடம்பெற்று தமிழுலகில் தனித்ததொரு இலக்கிய வடிவத்தினை மசலா என்னும் பெயரில் தோற்றுவிக்கக் காரணமாயின. பிற சமய, இனங்களில் இல்லாத மசலா என்னும் இஸ்லாமிய தமிழிலக்கிய வடிவத்தின் தோற்றத்திற்கான அடிப்படைக் காரணம் இஸ்லாமிய மார்க்கத்தின் நெறிமுறைகளே ஆகும். இதனடிப்படையில் இஸ்லாமிய தமிழ் இலக்கியப் படைப்பாளர்களிடம் மார்க்கக் கருத்துகளைப் பரப்புதல் வேண்டும், இஸ்லாமிய கருத்துக்களை தமிழ் கூறும் நல்லுலகம் அறிதல் வேண்டும் என்ற ஆதங்கமே இத்தகைய மசலா போன்ற இலக்கிய வகைகள் தமிழில் தோன்றிப் பெருகுவதற்கான சூழலாக அமைந்தது. தங்களுடைய ஆதங்கத்தை நிறைவேற்ற இலக்கிய வழிமுறையை நல்கிய இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் அறபு, பாரசீக மொழிகளைப் பின்பற்றி புதிய இலக்கிய வகைகளை தமிழில் அமைத்துக் கொண்டிருக்கின்றனர். அத்தகைய தமிழ்ப் புலவர்களின் ஆதங்கத்தின் விளைவால் தமிழுலகில் மசலா இலக்கிய வகையில் முகிழ்ந்த முதல் நூலே ஆயிரமசலாவாகும்.

**மசலா :**

மசலா இலக்கியங்களில் ஏனைய பிற தமிழ் இலக்கியப் படைப்புகளில் உள்ளதுபோல் கற்பனைக்கிடமில்லை. காரணம் மசலா இலக்கியங்களுக்கான ஆதாரம் அல்குர்ஆனும், அல்ஹதீதுமே ஆகும். இவ்விரண்டிலும் வாழ்வின் நடப்பியல் உண்மைகளே புதைந்திருக்கின்றன. எனவே இவற்றை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் இலக்கியங்களும் இத்தகு முறையிலேயே அமைந்துள்ளன. மசலா தமிழிலக்கிய வடிவத்திற்கு முன்னோடியாக ஆயிரமசலாவையும் இதனை அடுத்து நூறு மசலா, வெள்ளாட்டி மசலா போன்ற இலக்கியங்களையும் தமிழுலகம் பெற்றுச் சிறக்கிறது. ஆயிரமசலா, மசலா தமிழிலக்கிய வடிவத்திற்கு மட்டும் முன்னோடியான இலக்கியமன்று, இஸ்லாமிய தமிழிலக்கிய உலகில் எமக்கு இன்று கிடைத்துள்ளவற்றுள் காலத்தால் இரண்டாவது இலக்கியம் என்று சொல்லத்தக்க பழமையையும், பெருமையையும் பெற்றுள்ளது. இஸ்லாமியத் தமிழ், தமிழுலகில் அச்சாரமிடத் தொடங்கியது பல்சந்த மாலை என்னும் இலக்கியத்தின் மூலமாகவும் அதற்கடுத்த நிலையில் ஆயிர மசலாவின் படைப்பாலும் என்று கருதப்படுகிறது, எனினும் பல்சந்த

மாலையின் காலமும், நூல்பற்றிய முழுமையான விவரமும் அறிய முடியாத நிலையில் இஸ்லாமியத் தமிழிலக்கியங்களுள் நூலின் காலத்தையும், உள்ளடக்கத்தையும் முழுமையாக நமக்கு அறிவுறுத்திக் காட்டும் முதல் தமிழ் இலக்கியம் என்ற கருத்தினடிப்படையில் ஆயிரமசலாவே முதன்மை நிலை பெறுகிறது. தமிழுலகில் அடியெடுத்து வைக்கத் தொடங்கிய இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் ஆரம்ப காலக்கட்டத்திலேயே தங்களுக்கென இலக்கிய உலகில் இஸ்லாமிய நெறிக்கேற்ப தனிப் பாதையை ஏற்படுத்திக்கொண்டனர் என்பதையே ஆயிரமசலா என்னும் இஸ்லாமியத் தமிழிலக்கிய வடிவம் நமக்கு அறிவுறுத்துகின்றது.

இந்நூலின் முழுப்பெயர் 'ஆயிரமசலா வென்று வழங்கும் அதிஜய புராணம்' என்பதாகும். இப்பெயரில் உள்ள ஆயிரமசலா என்பது ஆயிரம் வினாக்கள் என்பதையே குறிக்கும். இவ்விலக்கியத்தின் முதற்பக்கத்தில் இஃது 'நபி நாயகம் முகம்மது சல்லல்லாகு அலைஹிவ சல்லமவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஹதீதுகள்' என்று குறித்திருப்பதிலிருந்து இந்நூலின் உள்ளடக்கச் செய்திகள் அதாவது ஆயிரமசலாவிற்கான பதில்கள் அல்ஹதீதுகளை மூலாதாரமாகக் கொண்டுள்ளன என்பதை அறியலாம்.

**ஆசிரியர் :**

ஆயிரமசலாவை இயற்றியவர், வண்ணப்பரிமளப் புலவராவர். நூலாசிரியரின் குறிப்பை நூலின் முகப்பிலமைந்த பாடலில்

புயலாய்ந்த மதுரைகீழ்பாற் பொருந்திய சுலையுமானிற்
செயலாய்ந்த முல்லாமிய்யா செயிதுரை செய்ய விந்நூல்
இயலாய்ந்த முதலிசெய்கு இசுஹாக்கென்னும் வகுதைநாடன்
பயஹாம்ப ரருள் சேர்வண்ணப் பரிமளம் பகரலுற்ருன்

(ஆயிரமசலா : கடவுள் வாழ்த்து : 32)

எனக் குறிக்கப்பட்டுள்ளது. இப்பாடலின் மூலம் நூலாசிரியரின் இயற்பெயர் செய்யது இசுஹாக்கென்பதையும் அவர் வகுதை நாட்டினைச் சார்ந்தவர் என்பதையும் அறிகிறோம். வகுதை என்பது இன்றைய காயல்பட்டினம் என்றும், கீழக்கரை என்றும், பறங்கிப் பேட்டை என்றும், கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. எனவே, ஆயிரமசலாவின் ஆசிரியர் இன்றைய நிலையில் எவ்வூரினைச் சார்ந்தவர் என்பதை அறுதியிட்டுக் கூறமுடியாது. வகுதை நாடன் என்று குறிக்கப்பட்டிருப்பினும் நூலின் முதல் பக்கத்தில் உள்ள நூலாசிரியர் இடத்தில் 'மதுரை மாநகர் வண்ணப் பரிமளப் புலவரவர்கள் பாடியது' எனக் குறிக்கப்பட்டிருப்பதிலிருந்து இந்நூலாசிரியர் இன்றைய வகுதை நாட்டிலிருந்து குடிபெயர்ந்து வாழ்ந்துவந்த வம்சா வழியினர்

எனவும் இந்நூலை இயற்றும்போது மதுரைப் பதியைச் சார்ந்திருந் தவர் எனவும் கொள்ளலாம். மேலும், இந்நூலை இயற்றும்போது மதுரைக்குக் கிழக்குப் புறத்திலுள்ள சுலைமான் என்னும் ஊரினைச் சார்ந்த முல்லாமிய்யா செயிது மகுதூம் என்பவர் அறபியில் உள்ள அல்ஹதீதுகளுக்கு தமிழில் உரை செய்து வண்ணப்பரிமளப் புலவருக்கு ஆயிரமசலா இயற்ற உதவியிருப்பதையும் இப்பாடல் நமக்குத் தெரியப்படுத்துகிறது.

**காலம் :**

நூலில் மேற்குறித்த பாடலுக்கு அடுத்த செய்யுளில் நூலின் காலம் பற்றிய குறிப்பு தெளிவாக உள்ளது.

இயலிறசூல் திருவடிசாய்ந்த தொளாயிரத்தி னுடனெண்ப
தாண்டின்
முயலும்ப்ரமாதூ தாவருடத்தில் முழங்குபுளி யங்குளத்து
முல்லாமிய்யா செயிதுமகுதூம்
வயதுமுப் பத்தொன்பான் தன்னிலிந்நூ லுரைத்திட
முத்தமிழாற் போற்றிப்
பயிலுமையேழெனும் வாலப்பி ராயந்தன்னிற் பரிந்து
வண்ணப் பரிமளஞ் சொற்பகர்ந்த வாறே
(ஆயிரமசலா : கடவுள் வாழ்த்து : 33)

இங்கு இஸ்லாமிய ஆண்டு ஹிஜ்றி 980-ஆம் ஆண்டு வண்ணப்பரிமளப் புலவர் ஆயிரமசலாவை சொல்லோவியமாக்கியதாகக் காணப்படுகிறது. அத்துடன் நூல் செய்த அவ்வாண்டு உரையாசிரியரான முல்லாமிய்யா செய்யிது மகுதூம் அவர்களுக்கு வயது 39 என்பதையும் நூலாசிரி யருக்கு வயது 35 என்பதையும் தெளிவுபட எடுத்துரைக்கிறது. இப் பாடலில் 'இயலிறசூல் திருவடிசாய்ந்த...' என்ற முதல் அடி நாயகம் பெருமானார் (சல்) தங்கள் பிறந்தகமான மக்கமா நகரினைவிட்டு தீனுல் இஸ்லாத்தின் நெறியை உலகறியச் செய்யும்பொருட்டு மதினா நகருக்குச் சென்ற ஹஜ்ஜுப் பயணத்தையே குறிக்கிறது. இப்பயணத் தின் துவக்க நாளே இஸ்லாமிய சகாப்தத்தின் முறையான வரலாற்றுத் துவக்கமெனலாம். அன்று முதலே இஸ்லாமிய வருடமான ஹிஜ்றி ஆண்டு கணக்கிடப்படுகிறது. அவ்வாறாயின் ஹிஜ்றி 980-ஆம் ஆண்டே இந்நூல் இயற்றப்பட்டிருக்க வேண்டும். இவ் ஹிஜ்றி ஆண்டிற்கு இணையான கிறிஸ்தவ ஆண்டு கி. பி. 1572-ஆம் வருட மாகும். இவ்வருடத்திலேயே இஸ்லாமிய தமிழலக்கியங்களுள் முதன் முறையாக மசலா இலக்கிய வகை உதயமாவதற்கு ஆயிரமசலா காரணமாக இருந்திருக்கிறது. இவ்வருடம் பல்சந்தமாலையின் தோற்றத்திற்குப் பின்பே அமையினும் நமக்குக் கிடைத்துள்ள இஸ்லாமியத் தமிழிலக்கியங்களுள் முழுமையாக கிடைத்துள்ள முதல்

நூல் 1572-லேயே தோன்றியிருக்கிறது. எனவே ஆயிரமசலாவின் தோற்றம் இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றில் ஒரு முக்கியத்துவத் தைப் பெறுகின்றதெனலாம்.

ஆயிரமசலாவின் அரங்கேற்றம் பற்றியும் நூலின் உள்ளடக்கச் செய்யுள் தெளிவுற எடுத்துரைக்கிறது.

அந்தமுறு மதுரை தனிற் செந்தமிழோர் சங்கத்தி
னரங்கேற்றிச்
சந்தமுறு மீமானு மிசுலாமுந் தழைத்தோங்கத் தகுதி பூண்டு
வந்து நெறி மனுநீதி வளர்ப்பவர் முன் னுளப்பாவின்
மகிழ்ந்து போற்றிக்
கொந்துலவு மெம்மிறசூல் நபிசொல்லா யிரமசலாக்
கூறலுற்றேன்
(ஆயிரமசலா : கடவுள் வாழ்த்து : 34)

என ஆசிரியர் கூற்றிலேயே பாடலை அமைத்திருப்பதிலிருந்து சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரைப் பதியில் அரங்கேற்றம் நிகழ்ந் திருப்பதை அறியலாம். மேலும் இப்பாடலில் ஆயிரமசலா இயற்று வதற்கான காரணத்தை ஆசிரியர் 'சந்தமுறு மீமானு மிசுலாமுந் தழைத்தோங்க......' என்னும் வரியில் புலப்படுத்துவதுடன் இறுதி அடியின் மூலமாக இறசூலுல்லா (சல்) அவர்களின் அல்ஹதீதுகளையே ஆயிரமசலாவாக கூறலுற்ற செய்தியையும் தெளிவுபடுத்துகிறார். இச்செய்யுளில் வண்ணப்பரிமளப் புலவர் '......ஆயிரமசலாக்கூறலுற் றேன்' என்று உரைத்திருப்பதிலிருந்து இம்மசலா இலக்கியத்தின் பெயர் ஆயிரமசலா என்பது மட்டுமே இருந்திருக்க வேண்டும். பிற்காலத்தே அதிஜய புராணம் என்னும் பெயரும் ஏற்பட்டிருக்க வேண்டும்.

**வரலாற்றுப் பின்னணி :**

ஆயிரமசலாவில் உள்ள ஆயிரம் வினாக்களையும் அதற்குரிய விளக்கங்களையும் இலக்கிய உருவில் அளிக்கும் முன்னர் ஆசிரியர் இவ்வாயிரம் வினாக்களுக்குரிய வரலாற்றுப் பின்னணியை நாயகம் (சல்) அவர்களின் வாழ்க்கைப் பின்புலத்துடன் எடுத்துரைக்கின்றார். மசலா போன்ற இலக்கிய வகைகள் அல்ஹதீதை மூலாதாரமாகக் கொள்ளும்போது முழுக்க முழுக்க நபி (சல்) அவர்களின் வாழ்வியல் நிகழ்வுகளையும் அவர்கள் இவ்வுலக வாழ்வை உய்விக்கும்பொருட்டு இறையருளினால் வழங்கிய நற்போதனைகளையும் வெளியுலகுக்கு உணர்த்துகின்றன. எனவே ஆயிரமசலாவிற்குரிய சூழலை உணர்த்தக் கருதும் ஆசிரியர் நாயகத்தின் பிறப்பினை சுருங்கச் சொல்லி அண்ணலார் (சல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனம் வந்தடைந்த வரலாற்றை முதலில் கூறுகிறார்.

மிக்கான புகழ்கொண்ட வேதாம்ப ராலநபி விரைமான் மதந்
திக்காதி காதங்கண் மிகவீச வருகின்ற திருமேனியாய்
மக்காவிலே நின்று மதினாவிலே சென்று வளமாயதிற்
றக்கோர்க ளொடுவேத நெறிதீனில் வழிநேர்மை
தருநாளிலே
(ஆயிரமசலா : 9)

நாயகம் (சல்) அவர்கள் பிறந்தது மக்கமா நகராயினும் ஆரம்ப காலக் கட்டத்தில் பிறந்தகத்தில் உள்ளவர்களால் நாயகம் (சல்) புறக்கணிக்கப் பட்ட நிலையில் அங்கிருந்து வெளியேறிய நபி (சல்) அவர்களை ஏற்றுப் போற்றித் தஞ்சமளித்தது மதின நகரமே ஆகும். அத்துடன் இறை கட்டளைப்படி முதன் முதலில் இஸ்லாத்தின் நற்போதனை களை ஏற்றுப் போற்றியவர்களும் மதீன நகர் மக்களே ஆவார்கள். அதனால்தான் மேற்குறித்த பாடலில் 'வேதநெறி தீனில் வழிநேர்மை தரு நாளிலே' என வண்ணப்பரிமளப் புலவர் குறித்துள்ளார். இவ்வாறு நபிகள் நாயகம் (சல்) மதீன நகரில் வீட்டிலிருக்கும் போது ஒருநாள் வானவர் கோன் ஜிப்றயீல் (அலை) நாயகம் (சல்) அவர்களின் முன் தோன்றி மதினாவிற்கு அண்டைய பகுதியான கைபர் நகரில் வேதியர் அப்துல்லா இப்னு சலாமென்பாரை சந்தித்து இஸ்லாத்தை பரப்பும்படியான இறைக்கட்டளையை அறிவித்தார்கள்.

நவிலுவார் ஜெபுற யீலோர் புதுமையானதை மதினா
நகரில்வாழ் நபி யிறசூலே
கபுலல் லாவினிய சலாமுரை செய்தானது வலதோர்
கனகவா ரியிலு யர்வானோ
ரபுதுல்லா இபுனு சலாமெனுமகா அறிவுடை யோரவரை
நீர்வர வெனவேதா
னிவணில் வாசகமுளதாயெழுதி யோலையை விடுவீரென
அல்லா திருவுளமானான்
(ஆயிரமசலா : 11)

இறைவனின் ஏவல்படி நாயகம் (சல்) தூதுவர் உக்காசு (றலி) என்பவரை அனுப்பி தம்மைப்பற்றியும் இஸ்லாத்தின் ஏகோபித்த இறைவழிபாட்டு நெறிமுறை பற்றியும் அப்துல்லா இப்னு சலாமிடம் எடுத்துரைக்கும்படி செய்கிறார்கள். தூதுவரைக் கண்ணுற்ற அப் துல்லா இப்னு சலாம்

அர்த்தமொன் றறியா வண்ணமாயிர மசலாவுங்கள்
சித்தமன் புறவேகொண்டு சென்றவர்க் கருள்வேன்
(ஆயிரமசலா : 32)

என உரைத்து நாயகத்தை தரிசிக்கும் பொருட்டு 700 யூதர்களுடன் கைபர் பிராந்தியத்திலிருந்து மதீன நகருக்கு புறப்படுகிறார். இந்

நிலையில் அப்துல்லா இப்னு சலாம் ஆயிரம் ஐயப்பாடுகளை தம் நெஞ்சில் நினைத்து அவற்றைத் தீர்க்கும் நோக்கத்துடன் நாயகத்திடம் வருவதை நபி (சல்) அவர்களுக்கு முன்னறிவிப்புச் செய்யும் ஜிப்றயீல் (அலை)

பரிசுத்த மசலாக் கேட்கும் படிகாலைச் சூதர் வாரார்
பருதிக்கா லுமக்கு நான்தான் சொல்வனீ ரவர்க்குச் சொல்லும்
(ஆயிரமசலா : 46)

என உரைக்கின்றார்கள். நாயகம் (சல்) அவர்களின் வாழ்வில் நடைபெறும் ஒவ்வொரு செயலும் ஒவ்வொரு அசைவும் இறைக்கட்டளைப் படியே அவன் வகுத்துக்காட்டும் வழிமுறைகளுக்கேற்பவே நடைபெற்றன. இதற்கேற்பவே இங்கு ஜிப்றயீல் ஆயிரமசலாக்குரிய விளக்கங்களையும் இறைவழிப்படி 'நான் உமக்கு (நாயகத்திற்கு) சொல்வேன் அதனை நீர் அவருக்குச் சொல்லுக' என நெறிப்படுத்துகின்றார் ஜிப்றயீல் (அலை). வானவரின் செய்தியைக் கேட்டபின் ஒரு நாள் சனிக்கிழமை அன்று நாயகம் (சல்) தங்கள் வழிநடக்கும் அசுஹாபிகள் (தோழர்கள்) உடன் மிக்க சுபுஹ் தொழுதிருக்குங்காலை (வைகறை நேரத்துஇறைவழிபாடு) மன்றல்சேர் மறையோர் பள்ளிவாயிலில் அப்துல்லா இப்னுசலாம் தம் 700 யூதர்களுடன் வந்தடைகின்றார். இங்கு தம் வருகையை உணர்த்தும் போது

உண்டாவதிலு முண்டாகாததிலு மொளிவோடழி வதிலு
மண்டாததிலு மழியாததிலு மறிவுறு நெறியதிலும்
கொண்டாடிய மாமச லாவாயிரம் கொண்டே வந் தேன்யான்
கண்டோர் புகழுங் கொந் தாலமே கலைபயி லிறசூலே
(ஆயிரமசலா : 51)

என தம் எண்ணத்தை வெளிப்படுத்தி தாமும் தம்மைச் சேர்ந்த 700 பேர்களும் இஸ்லாத்தைத் தழுவுவதாக இருப்பின் தாம் கொண்டு வந்துள்ள ஆயிரம் மசலாக்களுக்கு விடை பகர வேண்டும் எனக்கூறுகிறார். தம் எண்ணப்படி தமது ஐயப்பாடுகளை பெருமானார் நாயகம் (சல்) அவர்கள் நீக்கி விளக்கம் அளித்து விடுவார்களே எனில் தாங்கள் தீனுல் இஸ்லாத்தைத் தழுவுவது உண்மையே எனவும் மொழிகின்றார்.

துங்கமாமச லாவினுக்குத்தரஞ் சொல்லி லாதிதன் தூதுவராகுநீர்
திங்கள்வீசுல கத்தினு லும்முட தீனலாத தொரு தீனிலை யாகையா
லெங்கண்மா நகருள்ள வர்யாவரும் யானுமென்னொடிணங்கிய பேர்களும்
பொங்குநற்கலி மாவுரைத்திந் நெறி பூண்டு தீனிடை புக்குவ துண்மையே
(ஆயிரமசலா : 53)

இவ்வாறு அப்துல்லா இப்னு சலாம் கூறக்கேட்ட நாயகம் 'மெய்ப் புடனுமக்கு மிக்காய் வேண்டுவதெல்லாங் கேளும்' எனப் பதிலுரைக்க வானவர்கள் ஜிப்றயீலும் (அலை), மீக்காயிலும் (அலை), இசுறாயீலும் (அலை) அவ்விடத்து வந்தமர யூதர்களும், அசுஹாபிமார்களும் சூழ்ந் திருக்க அப்துல்லா இப்னு சலாம் தாம் கொண்டு வந்திருக்கும் ஆயிரம் வினாக்களை ஒன்றன்பின் ஒன்ருகக் கேட்கத் தொடங்குகின்றார். இவரது வினாக்களுக்கு நபி (சல்) அவர்கள் முறையாக இறையருளால் விடைபகரக் கேட்ட யூதர்கள் இறுதி வினாவும் பதிலும் முடிந்த பின்னர்,

> அரியவை யான விந்த வாயிரமசலாத் தன்னை
> வரிசைபூண் டுறுதியான பயானெலாந் தமாமதாகப்
> பரிவுடனுரைத்தீர் வண்மைப் பயஹாம்பர் நீரேயுண்மை
> தரிபட வேகன்றூத ரென்பது தப்பாதுண்மை
>
> (ஆயிரமசலா : 1045)

எனக்கூறி எழுநூறு யூதர்களும் அப்துல்லா இப்னு சலாமுடன் இசுலாத் தின் ஏற்றத்தைப் போற்றி கலிமாக் (இஸ்லாமிய மூல மந்திரம்) கூறி இசுலாத்தைத் தழுவுகின்றனர்.

பெருமானுர் நாயகம் (சல்) அவர்களின் வாழ்வில் நடைபெற்ற இவ்வரலாற்று நிகழ்ச்சியே வண்ணப்பரிமளப் புலவரவர்களின் நாவண் ணத்தால் ஆயிரமசலாவென்னும் இனிய தமிழிலக்கியமாக உருப் பெற்றது. அப்துல்லா இப்னு சலாமின் ஆயிரம் விளுக்களுக்குரிய நாயகத்தின் பதில்களே இன்றும் அல்ஹதீதில் ஒரு பகுதியாக அறபு மொழியிலும், ஆயிரமசலாவாக தமிழிலும் நின்று நிலவுகின்றன.

மேற்குறித்த உள்ளடக்கச் செய்திகளை செய்யுள் வடிவில் அழகியதோர் இலக்கியமாக அமைத்துத் தந்திருக்கும் வண்ணப் பரிமளப் புலவர் அப்துல்லா இப்னு சலாமுடைய ஆயிரம் வினாக்களை யும் அவற்றிற்குரிய நாயக(சல்)த்தின் விளக்கங்களையும் முறைப்படி ஒன்றன்பின் ஒன்றாக அமைத்துள்ளார். இந்நூலில் மொத்தம் 1095 செய்யுள்கள் அடங்கியுள்ளன. நூலின் முகப்பில் காப்புச் செய்யுள் என்ற தலைப்பில் இரண்டு பாடல்களும் கடவுள் வாழ்த்து என்ற தலைப்பில் 35 பாடல்களும் இடம் பெற்றுள்ளன. கடவுள் வாழ்த்து என்ற தலைப்பில் அமைந்துள்ள பாடல்களிலே நூல் ஆக்கியோன் பற்றிய செய்திகள், நூலின் அரங்கேற்றம், காலம் பற்றிய குறிப்புக் கள் அடங்கியுள்ளன. இப்பகுதிக்கு அடுத்து பதிக வரலாறு என்னும் தலைப்பில் உள்ள பத்து பாடல்களில் நாயகத்தின் (சல்) பிறப்பு மற்றும் பெருமானார் (சல்) மக்காவிலிருந்து மதீன நகர் வந்து விட்டிருக்கும் செய்திகள் குறிக்கப்படுகின்றன. இத்தகைய பதிக வரலாறு ஏனைய பிற இஸ்லாமியத் தமிழிலக்கியங்களில் இடம்பெற வில்லை என்பது இங்கு குறிக்கத் தக்கதாகும். இதற்கடுத்து 11-வது

பாடல் முதலாவதாக 57-வது பாடல் வரையிலான 46 பாடல்களில் ஆயிரமசலாவிற்குரிய சூழல் பின்னணிகள் விவரிக்கப்படுகின்றன. இப்பகுதியில் வானவர் ஜிப்றயீல் (அலை) நாயகத்திற்கு அப்துல்லா இப்னு சலாம் பற்றித் தெரியப்படுத்துவதும், நாயகம் (சல்) அதன் பயனாய் உக்காஸ் (றலி) அவர்களைத் தூதனுப்புவதும் அப்துல்லா இப்னு சலாம் ஆயிரமசலாக்களுடன் நாயகத்தைத் தரிசிக்க மதீனம் வந்தடைவதுமான நிகழ்வுகள் ஆயிரமசலாவிற்குரிய பின்புலமாகச் சுட்டப்படுகின்றன. இதற்குப் பின் 58-வது பாடல் முதலாக இறுதி வரை அப்துல்லா இப்னு சலாமின் கேள்விகளும் அதற்கு நாயகத்தின் பதிலுரைகளும் இடம் பெறுகின்றன.

**மார்க்கக் கருத்துக்கள் :**

ஆயிரமசலா ஒரு நீதி இலக்கியத்தைப் போல் விளங்குகிறது. இதில் அடங்கியிருக்கும் கருத்துக்கள் இஸ்லாமிய மார்க்கப் போதனைகளாகவும் வாழ்க்கை நெறிப்படி இஸ்லாம் காட்டும் நல்வழிமுறைகளாகவும் உள்ளன. ஆயிரமசலா வகுத்துக்காட்டும் வழியின்கண் நடப்போருக்குரிய நன்மைகளை ஆசிரியர்,

மூதறி வுண்டாம் நாளு முதலவன் கிருபை தோன்றுந்
தீதறுந் துன்பத் தீருஞ் செல்வமுஞ் சிறப்பு முண்டாம்
பூதலத்துயிர்கள் யாவும் புகழ்ச்சியும் மகிழ்ச்சி யான
ஆதியை யிறசூல் தம்மை யகமகிழ்ந் தருளு வோர்க்கே
(ஆயிரமசலா : 2 )

என நூலின் ஆரம்பத்திலேயே சுட்டிக்காட்டுகின்றார். இஸ்லாத்தின் ஒவ்வொரு அடிப்படை விஷயங்களும் கேள்விகளாக அப்துல்லா இப்னு சலாமால் எழுப்பப்படுகின்றன. அத்துடன் தீனுல் இஸ்லாமில் விலக்கப்பட்டவர்கள் யார், தீனு (மார்க்கம்) க்கு புறம்பானவர்கள் யார் என்பதும் எடுத்துக்காட்டப்படுகிறது. மேலும் புறுக்கான் வேதத்தின் சிறப்பு, வானவர்கோன் ஜிப்றயீல் (அலை) அவர்களின் வளமை, சூரியன், சந்திரன் முதலானவற்றின் செயற்பாடுகள் குறித்த விளக்கங்கள், சொர்க்கத்தின் தன்மை, நரகத்தின் கொடுமை, முனாபிக் (நயவஞ்சகர்), ஆபில், காபில் (இயற்பெயர்கள். ஆபில், காபில் இருவரும் ஆதம் நபியவர்களின் புதல்வர்களாகும்), தஜ்ஜால் (உலகம் அழிவதற்கு முன் தோன்றும் மார்க்க விரோதி), ஆபில், காபில் முதலானவர்களின் செயல்கள், கியாமத்து (இறுதி) நாள் குறித்த ஐயப்பாடுகளுக்குரிய விளக்கங்கள் முதலான இன்னபிற பல்வேறு விஷயங்கள் பற்றிய கருத்துக்கள் ஆயிரமசலாவில் கேள்விகளாகவும் விளக்கங்களாகவும் இடம் பெறுகின்றன. இவை தொடர்பான சில கருத்துக்களைமட்டும் காண்போம்.

தீன் என்பது இஸ்லாமிய மார்க்கத்தைக் குறிக்கும் அறபுச் சொல் லாகும். இத் தீனின் அடிப்படையான ஆணிவேர் ஈமானுகும். அதாவது இசுலாத்திலும் அதனுடைய ஏகத்துவ இறைக்கொள்கையிலும் நம்பிக்கை கொள்வதையே ஈமான் என்னும் சொல் குறிக்கிறது. இது பற்றி அப்துல்லா இப்னு சலாம் நாயகத்திடம்,

மானாக மேவந்த மக்காவில் வாழ்
தேனாவி லேவந்த செப்போசையாய்
மீனாக மேகொண்ட மெய்த்தூ தரே
தீனாவ தேதென்று செப்பீர் மனே

(ஆயிரமசலா : 71)

என்று வினவ அதற்கு இறசூலுல்லா (சல்) அவர்கள்,

வீறான சூதர்க்கு மேலானவா
தேறாகு பாகொத்த தீனாவதே
சாறான கலிமா ஷஹாதத்துட
னீறாத சீபத்தி லீமானுமாம்

(ஆயிரமசலா : 72)

என இஸ்லாத்தின் மூலமந்திரமான கலிமாவின் மேல் ஈமான் கொள்வதையே தீனென்று சுட்டுகின்றார்கள். கலிமா என்பது இஸ்லாத்தின் அடிப்படை போதனைகளைச் சுட்டும் மூல மந்திரமாகும். இது ஐந்து வகைப்படும். அவற்றுள் முதலாவது கலிமா ஏகத்துவ இறைவழி பாட்டுக் கொள்கையை வலியுறுத்தும் 'லாயிலாக இல்லல்லாகு முஹம்மது ற்-றசூலுல்லா' என்பதாகும். இதன் பொருள் 'வணக்கத் திற்குரியவன் அல்லாஹ் ஒருவனே. முஹம்மது அவனது திருத்தூதர்' என்பதாகும். இக்கருத்தை வலியுறுத்துவதே மேற்சொன்ன பாட லாகும்.

இஸ்லாத்தில் சுவர்க்கத்தை ஜென்னத் என்பர். இத்தகைய சுவர்க்க சுவனங்கள் எட்டாகும். அவைகள் முறையே தாறுல் ஜலால் ஒளியாலும், ஜன்னத்துல் குல்து வெள்ளியாலும், ஜன்னத்துல் மஉவா பொன்னாலும், ஜன்னத்துல் ஃபிர்தௌஸ் முத்தாலும், ஜன்னத்துந் நயீம் வைடூரியத்தாலும், தாருஸ் ஸலாம் செம்மணியாலும், தாருல் கரார் பவளத்தாலும், ஜன்னத்துல் அதன்-மரகதத்தாலும் படைக்கப் பட்டனவாகும். இத்தகைய சுவர்க்கம் பற்றிய குறிப்புக்கள் இறைவனின் திருமறையாம் அல்குர்ஆனிலும் இடம் பெறுகின்றன. இவ்வெட்டு சுவர்க்கங்கள் பற்றிய விளக்கமும் சிறப்பும் ஆயிரமசலா வில் விரிவாக இடம் பெறுகின்றன.

மேற்குறித்த சுவர்க்க பவனங்களில் உள்ள மாளிகைகளின் வகைகள் பற்றி வரிசைப்படுத்தி உரைக்கின்றார் வண்ணப்பரிமளப்புலவர்,

மங்காத மாணிக்க மாளிகையநேக மாறாதசோதி
முத்துமா ளிகையநேகஞ்
சிங்காரபச்சைவெள்ளி மாளிகையநேகஞ் சீரான
மெய்ப்பளிங்கு மாளிகை யநேகம்
வங்காரச்செம்பொனணி மாளிகையநேக
மாமரகதத்தினொளி மாளிகையநேகஞ்
செங்கோல் பரப் பொளியின் மாளிகையநேகஞ்
சித்திரமுகப் பொடறை வைத்துள வநேகம்
(ஆயிரமசலா : 362)

இத்தகைய எழின்மாளிகைகள் நிரம்பப் பெற்ற ஜென்னத்தில் தீங்கார் யாரும் இருக்கமாட்டார்களாம். அங்கிருக்கும் எல்லோரும் செல்வச் சிறப்புடன் இருக்க எழில் சூழ அகம் மகிழும் நிலைபற்றி எடுத்துரைக்கும் பாட்டின் நயம் நோக்கற்பாலது !

அன்னத்தை வென்றநடை யாலத்தை வென்றவிழி
யாரத்தை வென்ற நகையு
மின்னைத் துரந்தவிடை மேரைக் கடிந்தமுலை மேகத்தை
வென்ற குழலும்
வன்னப்ரகாச மெழ மலரணையி லிருவருமெய்
மகிழமிகு மருவு மணமு
மென்னத்த யாவினொடு மேவு கூறானிகளையீயுவ
னெழுபதி னாயிரம்
(ஆயிரமசலா : 520)

என சுவர்க்கத்தின் எழிலினை வர்ணிக்கின்றார்.

இதனையடுத்து நரகத்தின் தன்மை பற்றி அப்துல்லா இப்னு சலாம் வினவ அதற்கு நாயகம் பதிலளிக்கும் போது அதனைப் படிக்கும் மானுடன் நெஞ்சில் நரகத்தின் கொடூரத் தன்மை அச்ச உணர்வை ஏற்படுத்தும் வண்ணம் பாடல்களை யாத்துள்ளார் புலவர். அப்துல்லா இப்னு சலாம் நரகத்தின் கொடிய தன்மைகளை நாயகத்தின் விளக்கத்தின் முலம் அறிந்து எந்த வகை மானுடர் இத்தகைய கொடிய நரகதனை வந்தடைவார்கள் என வினவ அதற்கு நாயகம் (சல்) தம் பதிலில் நரகம் சென்றடையும் மானுடப் பிறவிகளை இனம் காட்டும்போது,

தொழுகைமறந்தவருஞ் சூதையுவந்தவரும்
பழுதுபடும்பொருள் பலிசையுவந்தவரும்
வழிகெட நின்றவரும் வல்லவனுக்கஞ்சா
அழுகையுவந்தவரு மந்நரகஞ் சேர்வார்
(ஆயிரமசலா : 535)

என மொழிகின்றார்கள். அத்துடன் நடைமுறை வாழ்வில் மெய்யானவைகளை மறைத்து வைத்தோர், பொய் மறந்து நேர்வழி தமக்குப் பொருந்தாது என வாழ்வோர், சூழ்ச்சி செய்வோர், நேரான ஸக்காத்து

(வசதி படைத்தவர்களால் வழங்கப்படவேண்டிய கட்டாய தர்மம்) வழங்காதோர், கூரான சிந்தைகொடி கூத்துவந்து பார்த்தோர், ஏராத சங்கீத ராகவிசை கேட்டோர், வெறி மதுவுண்டோர், வெருள் குணமா னோர், தாயொடு தந்தை மனந்தனையும் நோவு செய்தோர், பேயொடு உறவு செய்தோர், இபுலீசு (சாத்தான்) செய் மாய்கையில் மகிழ்ந் தோர், சேயோடு பகையானோர், பள்ளிதனில் வீண்மொழி பகர்ந்து நகை செய்தோர், கொண்ட கணவன் மனதை மெத்தவும் நோவித் தோர், கணவன் பொருளையறுதியன்றிக் கண்டோர்க்கீயும் கன்னியர், துணைவன் முதலிற் காணாமற் துணிந்து திருடுந் தோஷியர், செறி வான நேர் நெறித் தீனொடு பகைத்தோர், செய்நன்றி நம்பின வரைச் சதிகள் செய்தோர், வரிசைக் கணவன்தனைக் கெடுக்க மாய மருந்துதனைச் செய்தோர், மைக் களவு சூனியங்கள் வஞ்சனைகள் செய்தோர் முதலான இன்னபிற விரும்பத்தகாத தீமைகளைச் செய்யும் அத்தனை பேரும் வெந்நரகில் வீழ்ந்து துன்புறும் தோஷியர்களாவார் கள் என பெருமானார் நாயகம் (சல்) அவர்கள் விவரிக்கின்றார்கள். இத்துடன் இவ்வுலகில் அவரவர் செய்யும் தீமைகளுக்கேற்ப மேலுலகில் இறையிடத்து தண்டனையும் வேறுபடுவதையும் சுட்டிக் காட்டும் நாயகமவர்கள் (சல்) பிழைமாதர்களுக்குண்டான தண்டனையை விவரித்துக் கூறுகிறார்கள். கணவனது வாக்கினை மதிக்காது உதா சீனம் செய்யும் பெண்களைப் பற்றி கூறும்போது

வாக்கினாற் கணவன்றன்னை மதிப்பிலாவுதாசனங்க
ணோக்கியே சொல்லுமந்த நுண்ணிடை மடவார் தம்மை
நாக்கிலே தூண்டிலிட்டு நயனமோடிழுத்து வாங்கித்
தூக்கியே யதாபு செய்வார் சுடுவர் கூப்பிடுவர்தாமே
(ஆயிரமசலா : 585)

எனவும் அன்பர் சொல்லறுதியின்றி அயல்மனைக்கேகும் மாதை

............................
இன்புறுங்கரமுங்காலு மிடுப்பொடு சேர்த்துக்கட்டி
மின்படு நெருப்புத்தூணால் மிடை படவடிப்பார் நாளுந்
தன்வினைத்தன்னைச் சுற்றிக் கொடுவினையாகத்தானே
(ஆயிரமசலா : 588)

என அவரவர்களின் தீவினைகளுக்கேற்ப தண்டனை வழங்கப்படும் இசுலாமிய நெறிமுறை பற்றி நாயகம் தம் வாக்கால் விவரிக்கப் படுகிறது.

உலகில் மானுடர்கள் பலவிதம். அதற்கான விளக்கத்தை நாயகத் தின் வாய்மொழி வழியாக அறிகிறோம்.

ஒரு மண்ணாற் படைத்த மாந்த ரொருவடி வாவரென்றே
கருதியே பலமண் கொண்டு கருப்பிடித் தமைத்தா னந்தப்
பரிசினால் மனுட ரெல்லாம் பலவண்ண மானா ரென்ன
மருவியே யிறசூல் கூற.............. (ஆயிரமசலா : 661)

என்பதிலிருந்து மானுடப்படைப்பு மண்ணிலிருந்து எல்லாம் வல்ல அல்லாஹ்வால் படைக்கப்பட்டது என்ற இஸ்லாத்தின் கொள்கையை அறியலாம். இதனை திருமறையான அல்குர்ஆனில் அல்லாஹ் 'நிச்சயமாக நாம் உங்களை மண்ணிலிருந்து சிருஷ்டித்தோம்' (அல்குர்ஆன் 22 : 5) என்று குறிப்பிடுகின்றான். அத்தகைய படைப்பும் ஒரே மண்ணிலிருந்து படைக்கப்படவில்லை. பல மண் கொண்டு படைக்கப்பட்டதால் மானுடர் பல வண்ணமானார்கள்.

முஸ்லிம் மக்கள், 'கியாமத்' (இறுதி) நாள் என்பதில் நம்பிக்கை கொண்டுள்ளனர். இதனை கியாமத்துஸ் ஸுக்ரா, கியாமத்துல் உஸ்தா, கியாமத்துல் குப்ரா என்ற மூன்று வகையாகக் கொள்வர். முதலாவது ஒவ்வொரு மானுடப் பிறவிக்கும் இறக்கும்போது ஏற்படும் நிலையையும் இரண்டாவது எல்லா படைப்பினங்களும் அழிந்து உலகம் முடியும் நாளையும் மூன்றாவது அழிந்த படைப்பினங்கள் உயிர்ப்பிக்கப்பட்டு அவரவரின் நன்மை தீமைப்பலன்களை எய்துவதையும் குறிப்பனவாகும். இத்தகைய மூன்றில் முதல் இரண்டு நிலைகளும் தோன்றுவதற்கான அடையாளங்களை இறைவன் தன் திருமறையிலும் குறித்துள்ளான். இத்தகையனவாக 40 அடையாளங்கள் உள்ளன. இவற்றை ஆயிரமசலாவில் வண்ணப்பரிமளப்புலவர் தம் பாவண்ணத்தால் விரிவாக எடுத்துரைக்கின்றார். மேற்குறித்த கியாமதுல் உஸ்தா என்னும் உலகம் அழியும் நாளில் மானுடர் மானத்தை மதியார், வீதியில் நடப்பவரும் கூட தம் மேனி தெரிய நடப்பார்கள். ஆகாத மதுவை உண்டு அழிவார்கள், பள்ளி வாசலுக்குச் செல்லார்கள், ஈமானை மானுடர் கைவிடுவார்கள். அத்துடன் மானுடரில் மட்டுமின்றி அக்காலத்தே இயற்கையும் கூட முரணாவதை

மாரிதருங் கொடையுமா றும்றகுமத் துளதுஞ்
சீரியருந் தீன்வழியிற் செய்யார்கள் நற்செயலை
வேரியருங் கோடைமிக மாரிகா லமுமாங்
காரியம் பார்க் கிலிரணங் காணாது போதவுமே

(ஆயிரமசலா : 859)

என ஆசிரியர் எடுத்துக்காட்டுகின்றார். இவ்வாறான கியாமத் நாள் அடையாளங்கள் தோன்றியபின் ஒவ்வொருவரும் இறப்பெய்தி இறுதி நாளில் எழுப்பப்படுவார்கள் என்பது இஸ்லாத்தின் போதனையாகும்.

இதனையே கியாமத்துல் குப்ரா என்பது குறிக்கிறது. அத்தகைய நாளில் உலக வாழ்வில் அவரவரின் நன்மை தீமைகளை நாயன் முன்னிலையில் வானவர் உரைப்பார்கள் எப்படி !

கியாமத்தான கியாமத்து நாளிலே கருதிநாயன்கணக்குகள் கேட்கு நாள்
நியாயத் தாயடியாரை யெழுப்புமந்நேரஞ் சாலிகுவானவர் தங்களைத்
தயாநட் பானது கொண்டந்தப் பூமியிற் றக்ககூட்டுறவாக்கு வானென்னவே
பயானைப் பேசநபிபதம் போற்றியே வந்தகூதர்மறுமொழி கூறுவார்

(ஆயிரமசலா : 797)

இவ்வாறு கியாமத்து நாள் தோன்றி உலகம் அழிவுற்ற பின் இறுதியாக உலக மாயைகளுக்கு வழித்துணை நிற்கும் தஜ்ஜாலும் மறைவுற்றபின், இஸ்றாயீல் (அலை) அவர்களும் மறைவுற்ற பின்பே கியாமத்துல் குப்ரா தொடக்கம் பெறுகிறது. இஸ்றாயீல் (அலை) என்பது, இறப்புகளுக்குப் பொறுப்பான வானவராவார். இவர் 'மலக்குல் மவ்த்' என அழைக்கப்படுவார். இஸ்றாயில் (அலை) பற்றி அல்லாஹ் குறிப்பிடுகையில் 'உங்கள் மீது உங்கள் இறைவனால் சாட்டப்பட்டிருக்கும் மலக்குல் மவுத்' தான் உங்களுடைய உயிரைக் கைப்பற்றுகின்றார். பின்னர் மீண்டும் உயிர் கொடுக்கப்பட்டு உங்கள் இறைவனிடமே நீங்கள் கொண்டுவரப் படுவீர்கள் (அல்குர்ஆன் 32 : 11) என்று குறிப்பிட்டுள்ளான். எனவே இஸ்லாமிய நெறிப்படி ஒருவரது இறப்பின் தருவாயில் அவர் அருகில் இருந்து உயிரைப் பிரித்துச் செல்வது இஸ்றாயில் (அலை) அவர்களே ஆகும். இவ்வாறு அனைத்து உயிர்களின் அழிவிற்குப் பின் இறைவன் தமக்கிட்ட பணியை முடித்தவுடன் இஸ்றாயில் (அலை) அவர்களும் கூட இறப்பெய்திவிடுவார்களாம். இதனையும் வண்ணப்பரிமளப் புலவர் விரித்துரைத்தபின் கியாமத்துல் குப்ரா என்னும் இறந்தவர் எழுப்பப்படுவது குறித்த வினாவிற்கு நாயகம் (சல்) அவர்கள் பதிலளிப்பதாக விவரித்துச் செல்லுகிறார் ஆசிரியர். உயிர்கள் அனைத்தும் பிரிந்தபின் இருக்கும் நிலையை சுட்டும்போது,

'இனிமேற் றுனியாவொ டிகழ்ச்சியிலை
பனி ஆதம் பிறப்பு மிறப்பு மில்லை
யுனுசே ரருணத் துத யங்களிலை
யனியா யவபங் கசடுக ளிலையே'

(ஆயிரமசலா : 962)

என உலகில் உள்ள அநியாயங்கள் யாவும் அழிந்துபட்ட நிலையை சுட்டியபின் இவ்வுலக வாழ்வில் அவரவர் செய்த நன்மை தீமைகளின் பிரதிபலிப்பினை கியாமத்துல் குப்ரா நாளில் எடுத்துக் காட்டும் நயம் சிறப்புடைத்ததாகும். இது,

நன்மை செய்தவர் சொர்க்க மாநக ரெய்தி வாழ்வர் நலன் பெறத்
தின்மை செய்தவர் நரகமானது சேர்ந்திருப்பர் அதன்றியில்
நன்மை செய்தார் நரக மெய்திலர் நரகர் சொர்க்க நலம் பெறார்
இன்மை தாழ்வுறு மறுமை வாழ்வுறு மென்று வள்ளலியம்பினார்
(ஆயிரமசலா : 963)

இவ்வாறு ஆயிரமசலாவில் வாழ்வின் தோற்றம் வாழ்வியலின் நிகழ்வுகள் அந்நிகழ்ச்சிகளின் போது எதிர்படும் இடையூறுகள் அவ் விடையூறுகளிலிருந்து மீட்சி பெறுவதற்கான வழிமுறைகள், நல் வழியில் நல்மோட்சம், அம்மோட்சத்தின் சிறப்பு, வாழ்வின் இறுதி நாள் இத்தகைய இறுதிநாள் உலகப் பிறவிகள் ஒவ்வொன்றிற்கும் ஏற்பட்ட பின் கியாமத்துல் உஸ்தா என்னும் உலக முடிவுநாள் பற்றிய விளக்கங்கள் அடுத்து கியாமத்துல் குப்ராவான மறுமை எழுச்சி நாள் வரையிலான பல்வேறு ஐயப்பாடுகள் ஆயிரம் வினாக்களாகப் பகுக்கப்பட்டு அப்துல்லா இப்னு சலாமால் வினாவாக எழுப்பப்பட்டு பெருமானார் நாயகம் (சல்) அவர்களின் திருமொழியாக விடைகள் பகரப்படுகின்றன. அப்துல்லா இப்னு சலாமிற்கு ஏற்பட்ட ஐயப் பாடுகளை நாயகம் தீர்த்து வைத்தபின்,

தீபரமா மசலாவுரை கூறிய தீனெறியே குருவே
மாபரமே கலி மாமொழியேமனு வாரம் விடாவகையே
காபிரெல்லோரையு நேரிசுலாநெறி காணுமனோலயமே
தாபர மானவ ரேயரசே பல சாதிக ணாயகமே
(ஆயிரமசலா : 1044)

என்று புகழ்ந்துரைக்கின்றார். இங்கு நாயகமவர்களின் குறிக் கோளான தீனுல் இஸ்லாம் நெறியைப் பரப்புதல் என்ற அவர்கள் தம் எண்ணத்தை அப்துல்லா இப்னு சலாம் குறிப்பிட்டுள்ளார். காபிர்கள் எனப்படுவோர் இஸ்லாமல்லாதவர்களாவர். அத்தகையோர்களை தீனுல் இஸ்லாம் நெறி காணும்படி அறிவு புகட்டும் கலிமா மொழியே என நபிகள் நாயகத்தை புகழ்ந்துரைக்கும் நயம் சிறப்புடைத்தாகும். இஸ்லாத்திற்கு அடிப்படையானது ஐந்து கலிமாக்களாகும். இத்தகைய கலிமா ஐந்தின் பொருள்படி நடக்க முன்னோடியாக இருக்கும் முதல்வர் நபிகள் நாயகமே அதனால் அவரை 'கலிமா மொழியே' என சிறப்புப்படுத்துகிறார் ஆசிரியர். நாயகத்தின் பதிலுரைகளிலே தேனிலே ஊறிய வண்டினைப் போல் தம்மை மறந்த அப்துல்லா இப்னு சலாம் தம் கல்பு (இதயம்) தீனிலே நம்பிக்கை கொள்ளும் வண்ணம் பயான் எடுத்துரைத்த விந்தையை நினைத்துருகுகின்றார்.

மாமான மும்புகழ் முகம்மதே யெங்களின் வாழ்வேகுதாய் தூதரே
சூமானி யாமான வழிபிழைத் தேநின்ற சூதர்வங்கிடமானதை
யீமானி லேதீனிலே கல்பு பூணவென் றிசுலாமின் வழிகாட்டினீர்
சாமானியமோக சாருமசலாவுந் தமாமாய்ப் பயானோதினீர்

(ஆயிரமசலா : 1046)

இப்பாடலில் அப்துல்லா இப்னு சலாம் குறிப்பிடுவதாக உள்ள 'பயான்' என்னும் அறபுச் சொல் தெளிவுபடுத்துதல் என்பதைக் குறிக்கும். பயன் சொல்வதையும் சுட்டும். அப்துல்லா இப்னு சலாமின் ஆன்மாவில் ஏற்பட்ட ஐயங்களை நாயகம் பெருமானார் தம் பேச்சு வன்மையாலும், அறிவின் திறன் கொண்டும் ஒளிபெறச் செய்து தெளிவுபடுத்தியதையே 'பயானோதினீர்' என்னும் சொல் குறிக்கிறது.

இவ்வாறு நபி (சல்) அவர்களின் பயானைக் கேட்ட அப்துல்லா இப்னு சலாமும் அவருடன் வந்த எழுநூறு யூதர்களும் தம் மனங்குளிர இஸ்லாத்தின் ஏகோபித்த இறை வணக்கத்தை ஏற்று இஸ்லாமிய நெறியின்கண் கலிமாச் சொல்லி முஸ்லிம்களாகின்றனர்.

'சீராய்ந்த நெறிபூண்டு செயலாய்ந்த வும்முடைய
  தீனிலையி லாக்குமெனவே
நேராய்ந்த பயகாம்ப ரிருசெங்கை தனைவந்து
  நிரைகொண்டு கைதண்டவே
காராய்ந்த கொடை வேந்தர் குபிராய்ந்த
  வர்கடீங்கு கலிசாய்ந்து போகநினைய
வோராய்ந்த கலிமாவொ டெழுநூறு மறையோரு
  மிசுலாமி லுறவாகினார்

(ஆயிரமசலா : 1052)

இஸ்லாமிய தமிழிலக்கிய மசலா வடிவத்தில் முதற்கண் தோன்றிய ஆயிரமசலாவில் எழுப்பப்படும் வினாக்களிலும் அதற்குரிய விடைகளிலும் ஒரு சங்கிலிப் பிணைப்பையும் தொடர்வுச் செய்திகளையும் காண முடிகிறது. இத்தொடர்பும், பிணைப்பும் ஆரம்பம் முதல் இறுதிவரையில் மானுட வாழ்வின் துவக்கமுதல் உலகம் அழியும்வரையிலான ஒரு முறையான வளர்ச்சி, முடிவு என்பதை படிப்போருக்கு நன்குணர்த்தி நிற்கின்றன. ஆயிரம் மசலாவை படிப்போர் மனத்தில் வெறும் வினா விடை என்ற எண்ணம் மட்டுமே ஏற்படாவண்ணம் அதற்கு ஒரு இலக்கியச் சுவையை ஏற்படுத்தித்தரும் வண்ணம் ஒரு வினாவிற்கும் அதற்குரிய விடைக்கும் அடுத்த வினாவிற்கும் அதற்குரிய விடைக்கும் பிணைப்பினைக் காட்டும்படி செய்யுள்களை ஆக்கியுள்ளார் ஆசிரியர்.

**யாப்பமைதி :**

ஆயிரமசலாவில் உள்ள செய்யுள்கள் அனைத்தும் உள்ளடக்கச் செய்திகளுக்கு ஏற்ப பல்வேறு சந்தங்களையும் யாப்பமைதிகளையும் கொண்டனவாக உள்ளன. சொர்க்கத்தின் விளக்கங்கள் பற்றிப் பகரும்போது ஜென்னத் எனப்படும் சொர்க்கங்களின் மாளிகைகளை நாயகம் விவரித்த பின்னர் அம்மாளிகைகளின் செல்வச் செழிப்பை எடுத்துரைக்கும் பாடலில் சந்தமும் யாப்பும் செல்வச் செழிப்புடன் செழித்தோங்குவதை உணரலாம். சொர்க்கத்தில்

பஞ்சணையின் மெத்தைமலர் பாயலொடு தூங்கு
மஞ்சனமணிக்குருசும் வாடைவெளியாடை
மிஞ்சுகதிரத்நமணி மேவரியாசனமும்
வஞ்சமறவேயிருக்கு மாளிகைகடோறும்

(ஆயிரமசலா : 363)

என வர்ணித்துக் காட்டுகிறார் ஆசிரியர். இதேபோல் சொர்க்கத்திற்குச் சென்றடையும் நல்லோருக்கு அங்குள்ள கனிகளானமாதுவளை, முந்திரி, தமரத்தங்கனி, பேரீச்சை முதலானவைகள் கொடுக்கப்படும். இத்தகைய கனிகள்பற்றிய கருத்துக்களை எடுத்துரைக்கும் பாடல்களை ஆசிரியர் மடக்கு என்னும் அணி சிறக்கும் வண்ணம் பாடலின் ஒவ்வொரு அடியிலும் வரும் ஒரே சொல் வெவ்வேறு பொருள்பட அமையும்படி அமைத்துள்ளார்.

முந்திரிகைக் கனியாய் மூண்ட பிழைக் காலாக
முந்திரிகைக் கிடுமிரையாய் முன்னரகிற் றுழாமல்
முந்திரிகைக் கொளுந்தவுபா மொழிந்தவருக்கிருந்தருந்த
முந்திரிகைக் கனியுமங்ஙன் முதல்வனுண்டாக்கினனே

(ஆயிரமசலா : 500)

எப்படி சொர்க்கம்பற்றிய செய்திகளை எடுத்துரைக்கும்போது இனிய சொற்களை ஆசிரியர் கையாளுகின்றாரோ அவ்வாறே நரகம் பற்றிய கருத்துக்களை விவரிக்கும்போது படிப்போர் உள்ளத்தே அவலச் சுவையை ஊட்டும் வண்ணமும், நரகத்தின் கொடுமை அச்சவுணர்வை ஏற்படுத்தும் வண்ணமும் சொற்களை ஆளுகின்றார். இம்மை வாழ்வில் நம்பிக்கை கொள்ளும்வகையில் மறுமை வாழ்வில் நம்பிக்கை கொள்ளாது மனதின் போக்கிற்கேற்ப தீமைகளைச் செய்து மரணம் எய்தியபின்னர் இறைவனது நரகில் சென்றடைவோர் தம் நிலை குறித்து கூறி அழும் காட்சியை அவலத்துணர்வோடு எழுத்துப் படுத்துகிறார் ஆசிரியர்.

ஐயோ சங்கிலியரிகண்ட மணிவாரெனவே யறிந்தோமோ
ஐயோசெய்யும் பிழைபோக அஞ்சித்தவுபாச் செய்தோமோ
ஐயோநரகிற்றுர மல்லோ ரறவேவன் கணரானாரே
ஐயோவிஃதோபேறென்ன வழுதேகதறுவ ரவரவரே
(ஆயிரமசலா : 577)

இங்கு அவலச் சுவையைத் தரும் 'ஐயோ' என்னும் உணர்வுக்குறிப்புச் சொல்லை, திரும்பத் திரும்ப பாடலின் அடிதோறும் பயன்படுத்தியிருப் பதன் மூலம் தாம் எடுத்துரைக்கக்கருதும் அவல உணர்விற்கு தம் சொல்லால் அழுத்தத்தைத் தருகின்றார் வண்ணப்பரிமளப்புலவர். உலகில் பிறந்த மானுடப் பிறவிகள் செய்யும் தவறுகளை உணர்ந்து இறைவனிடம் மன்றாடி மன்னிப்புக் கேட்பார்களானால் அவற்றை அல்லாஹ் ஏற்றுக்கொள்வான். இதனை அல்குர்ஆன் அதன் திரு வசனத்தில் '...............அவர்கள் (மனிதர்கள்) மன்னிப்பைக் கோரிக் கொண்டிருக்கும் வரையில் அல்லாஹ் அவர்களை வேதனை செய்ய மாட்டான்' (அல்குர்ஆன் : 8 : 33) எனவுரைக்கிறது. இத்தகு முறை யில் இறைவனிடம் மன்றாடி மன்னிப்புக்கோருவதையே 'தவுபா' என்ற அறபுச் சொல் குறிக்கும். இவ்வாறு உலக வாழ்வில் பிழை களையும் செய்துவிட்டு அதற்குரிய மாற்று வழியான தவுபாவும் செய் யாமல் இருந்த தம் இழிநிலை குறித்து நரகில் சென்றோர் நினைத்து ஏங்குவதை மேற்குறித்த பாடலில் 'ஐயோ செய்யும் பிழைபோக அஞ்சித் தவுபாச் செய்தோமோ' என்று அவலத்துடன் எடுத்துரைத் துள்ளார் ஆசிரியர்.

நடன மாதர்களுக்குரிய நரக தண்டனைபற்றி எடுத்துரைக்கும் போது ஒரே பாடலில் முதலிரண்டு வரிகளிலும் நடன மாதரின் இம்மை வாழ்வையும் அடுத்த இரண்டு வரிகளில் அவர்களது மறுமை வாழ்வின் இன்னலையும் முரண்தொடைச் சுவையமைய எடுத்துரைக்கின்றார். நடனம், கேளிக்கைகள் இசுலாத்தில் தடை செய்யப்பட்டதாகும். அதனால் இவ்வுலக வாழ்வில் இத்தகு செயல்களில் ஈடுபடுவோர் மறுமை வாழ்வில் நரகில் அதற்குரிய தண்டனையை பெறுவது நிச்சய மாகும். இக்கருத்தினை எடுத்துரைக்கும்போது நடனமாதர் பற்றிக் கூறுவதால் அதற்கேற்ப சொல்லாட்சி பாடலில் பொருளுரைக்கேற்ப ஓசை நயத்துடன் அமைந்துள்ளது.

சிலம்பு கிண்கிணி சதங்கை தண்டைகள் செறிந்திடுந்தரி சிலங்கவே
புலம்பமைந்தர்கள் பதம் புரிந்திவை புனைந்துளங்களி குளிர்ந்துளோர்
கலங்கவெங்கணினிரம்புகண்செவி கறங்க நஞ்சரவருந்தநீள்
விலங்குசங்கிலியணிந்து நின்றுடல் விரிந்தெழுந்துடல் வெதும்புவார்
(ஆயிரமசலா : 595)

இவ்வுலகில் காலிலே சிலம்பும் கிண்கிணி சதங்கையும் அணிந்து உளம் மகிழ்ந்து நடனம் புரிந்தவர் மறுமை வாழ்வில் தம் கண்கள் கலங்க காலிலே அணிந்த சிலம்பு, சதங்கைக்குப் பதிலாக விலங் கணியையும் சங்கிலியையுமணிந்து உடல் வெம்பி துன்புறும் நிலை 'இந்த ஜனங்கள் இம்மையை விரும்பி, அவர்களுக்கு முன்னிருக்கும் மறுமையின் கொடூரமான நாளைப் புறக்கணித்து விடுகின்றனர்.......' என்னும் அல் குர்ஆனின் வசனத்திற்குச் (76 : 27) சான்று பகருகின்றது.

**ஓசை நயம் :**

வண்ணப்பரிமளப் புலவர் உணர்வுகளை ஓசைமூலம் தம் படைப்பு களுக்கு கொண்டு வருவதில் சிறப்புப் பெற்றுள்ளார் என்றே கூறலாம். அவரது பாடல்களில் உணர்வுக் குறிப்புச் சொற்கள் அதிகம் பயன் பட்டிருப்பதுபோல் அந்தந்த உணர்வுகளுக்கும், பொருள்களின் தன்மைகளுக்கும் ஏற்ப அடுக்குச்சொற்களையும் பாடல்களின் யாப்ப மைதி கெடாதவாறு பயன்படுத்தியுள்ளார். இத்தகைய அடுக்குச் சொற்கள் உணர்வு பூர்வமாக பல பாடல்களில் அமைந்துள்ளன. மது அருந்துவோர்கள் நரகத்தில் அடையும் தண்டனை குறித்த விளக் கத்தை அளிக்கும் பாடலில் அடுக்குச் சொற்கள் அடிகள் தோறும் அமைந்து பாடலின் கருத்தமைவிற்கும், யாப்பமைவிற்கும் ஏற்பச் சிறக்கின்றன. இசுலாத்தில் மதுபானம் தடைசெய்யப்பட்டதாகும். இதுபற்றி அல்லாஹ் குறிப்பிடுகையில் '(நபியே!), சாராயத்தைப் பற்றியும், சூதாட்ட த்தைப் பற்றியும் அவர்கள் (மனிதர்கள்) உம்மிடம் கேட்கின்றனர். அதற்கு நீர் கூறும் : இவ்விரண்டிலும் பெரும் பாப மிருக்கின்றது; மனிதர்களுக்குச் சில பயன்களுமிருக்கின்றன. ஆனால் அவ்விரண்டிலுள்ள பாபம் அவ்விரண்டிலுள்ள பயனைவிட மிகப் பெரிது.........' (அல்குர்ஆன் : 2 : 219) என்று கூறி உள்ளான். இத்தகு முறையில் இறைவனால் பாபமாக சுட்டப்பட்ட மதுவினை மாயை காரணமாக அருந்துவோர் மரணத்திற்குப் பின் மறுமை வாழ் வில் அடையும் இன்னலை நபி மொழி மூலமாக எடுத்துரைக்கின்றார் ஆசிரியர்.

மதமுறு மதுவையுண்ட மாந்தர்கள் வயிற்றின் மீதே
கொதுகொதுகொதெனக் காய்ந்து குமுறிய கனல் வெந்நீரைக்
கதகததெனவார்க்கக் கனங்குடலீரலெல்லா
மொதுமொதுமொதெனத்தள்ளி வீழ்ந்திடு முரண்டுதானே
(ஆயிரமசலா : 597)

மது உண்பதால் மனிதர் மதம்பிடித்த நிலைக்குள்ளாவதால் வண்ணப் பரிமளப்புலவர் 'மதமுறு மது' என்று மதுவின் தன்மைக்கேற்ப அடை

மொழியைப் பயன்படுத்துகின்றார். மேலும் மதுபானம் வயிற்றிற்குள் சென்று உணர்வுகளை மறக்கச் செய்யும் காரணத்தினாலேயே அத்தகு பாவத்திற்கு மறுமை நாளில் வயிற்றின் மீதே கொது கொது கொதெனக் காய்ந்து குமுறிய கனல் நீர் ஊற்றப்படும். அவ்வாறு ஊற்றும்போது மதுவின் காரணமாக மயக்கத்திலிருந்த குடல் குமுறிய கனல் நீரின் விளைவால் மொதுமொதுமொதெனத் தள்ளி வீழ்ந்திடும். இப்பாடலில் உள்ள அடுக்குச்சொற்கள் மதுவின் மயக்கத்தையும் அதனால் பெறும் தண்டனையின் துன்பங்களையும் உள்ளத்தில் உணர்த்தும்படி சிறப்புற அமைந்துள்ளன.

**சொல்லாட்சி :**

வண்ணப்பரிமளப்புலவர் தாம் எடுத்துக்கொண்ட பொருள் விளக்கத்திற்கு ஏற்ற சொற்களை கையாள்வதுடன் இஸ்லாமிய கொள்கைகளை விளக்கும் வண்ணம் எளிய உவமைகளையும் ஆங்காங்கே பயன்படுத்தியுள்ளார். மானுடருள் தம் இளமை வாழ்வில் அல்லாஹ்வை மறந்தோரின் மறுமை வாழ்வு நிலை குறித்துக் கூறும்போது அவர்கள் தூண்டில் மீனென திகைத்துப்போய் தம் இளமை தடுமாறி துன்பம் அடைவார்களாம்.

உளமகிழவாதியை யுவந்துற நினைந்தே
வளமைபயிலும்வாலி பத்தில் வணங்காதார்
விளமதுறுந்தூண்டில் தனின் மீனென மலைத்தங்
கிளமைதடுமாறிமிக வீடுபடுவாரே (ஆயிரமசலா : 565)

பிறிதொரு பாடலில் உலக மாயைகளில் சிக்குண்டு மறுமை வாழ்வுதனை மறந்திருப்போர் தம் மனம்போன போக்கிலேயே பாபங்களை இம்மை வாழ்வில் ஆற்றி அதன் பயனாய் மறுமை உலகில் அவரது நிலை குறித்துக் கூறும்போது நாம் அன்றாடம் பயன்படுத்தும் 'இருதலைக் கொள்ளி எறும்புபோல்' என்னும் உவமையை பயன்படுத்துகின்றார் வண்ணப்பரிமளப்புலவர். இறைவன் தன் திருமறையில் 'பின்னர் மறுமை நாளில் நிச்சயமாக நீங்கள் உயிர் கொடுத்து எழுப்பப்படுவீர்கள்' (அல் குர்ஆன் : 23 : 16) என்றும், பின்னர் அவர்கள் தங்களின் மெய்யான எஜமானனாகிய அல்லாஹ்விடமே கொண்டு வரப்படுவார்கள். அந்நேரத்தில் தீர்ப்பு கூறும் அதிகாரம் அவனுக்கே உடையது......... (அல் குர்ஆன் : 6 : 62) என்றும் குறிப்பிடுகிறான். இத்தகைய இறைக்கட்டளையை இம்மை வாழ்வில் மறப்போர்.

வருதலைக் கருத்து றாமல் வடுப்பிழை செய்தோ ரெல்லாம்
கருதலைக் கடல தென்னக் கறங்கவே அடித்து வீழ்ந்து
விரிதலைக் கோலமாக மெலிந்திடும் அதாபுக்கஞ்சி
இருதலைக் கொள்ளி வாயில் எறும்பது போலு மாவார்
(ஆயிரமசலா : 642)

என இறைவனின் முன்னிலையில் இம்மை வாழ்வில் பாவம் செய்தோர் யாதொரு வழியுமின்றி இன்னல் பட்டு இக்கட்டான சூழலிலே இருப்பது சித்தரிக்கப்படுகிறது.

ஆயிரமசலாவில் அறபுச் சொல்லாட்சி அதிகமான அளவில் இடம் பெற்றிருப்பினும் அவைகள் தமிழ் சந்தங்களுக்கும் யாப்பு வகை களுக்கும் ஏற்ப அமைந்துள்ளன. இந்நூலில் உள்ள செய்திகள் அல் ஹதீதுகளாக இருப்பதால் இஸ்லாம் மார்க்கம் பற்றிய விளக்கங் களின்போது அறபு சொற்களை ஆள்வது தவிர்க்க முடியாததாகிறது. இதில் இடம் பெற்றுள்ள 1092 பாடல்களில் ஓர் அறபுச் சொல்கூட இல்லாத பாடலினைக் காண்பதரிதாகும். நான்கடிச் செய்யுள்களில் மூன்று அடிகள் முழுக்க அறபுச் சொற்களாக அமைந்துள்ள பல செய்யுள்களை ஆயிர மசலாவில் காணலாம். சான்றாக உக்காசு(றலி) என்பவர் நாயகத்தின் கட்டளைப்படி அப்துல்லா இப்னு சலாமிற்கு கடிதம் எழுதுவதை செய்யுள் வடிவில்,

குல்லாதி வரிசை வலாகவுல வலாக்குவ்வத்த
இல்லாபில்லாகில் அலிய்யில் லலீமென்னுஞ்
சொல்லான வுரையோடு துணிந்தெழுது மென்ன
மல்லார் புயத்தினர் வடித்தெழுதலுற்றார்

(ஆயிரமசலா: 18)

என வண்ணப்பரிமளப்புலவர் குறிப்பிடுகின்றார். இச்செய்யுளில் முதல் இரண்டு வரிகளில் உள்ள அறபுச் சொற்கள் இசுலாத்தின் மூல மந்திரமாகக் கருதப்படும் ஐந்து கலிமாக்களுள் மூன்றாம் கலிமாவான தம்ஜீது என்னும் பெயருடைய மூலமந்திரத்தின் பகுதியான 'வலா ஹௌல வலாகுவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அலீம்' என்பதே ஆகும். இதன் பொருள் மகத்துவமும் உயர்வும் உள்ள அல்லாஹ்வின் உதவியின்றி பாவத்தை விட்டு மீளவும் நன்மை செய்ய வும் எவருக்கும் ஆற்றலில்லை, என்பதேயாகும். இப்பொருள் தெரிந் தால்தான் இப்பாடலின் மகத்துவமும் விளங்கும். இத்தகு முறையில் அறபுச் சொற்கள் தமிழ்ச் சொற்களுடன் இணைந்து அமைந்த எண்ணற்ற பாக்கள் ஆயிரமசலா முழுவதும் பரந்து கிடக்கின்றன. இப்பாக்கள் வண்ணப்பரிமளப்புலவருக்குள்ள அறபுமொழித் திறத்தை யும் அவற்றை தமிழ் யாப்புக்கேற்ப கையாண்டிருப்பது அவருக்குள்ள தமிழ் பாண்டித்தியத்தையும் பறைசாற்றுவனவாக உள்ளன.

# ஐந்தாம் இயல்

## மிகுறாசுமாலை

இஸ்லாமிய தமிழிலக்கியங்கள் பெரும்பாலானவற்றின் தோற்றத் திற்கு அடிப்படையாக அமைவது இஸ்லாமிய மார்க்கத்துடன் தொடர் புடைய ஏதாவது ஒரு வரலாற்று நிகழ்ச்சியாகவே இருக்கும். இதற்குக் காரணம் இஸ்லாமிய மார்க்கம் முறையான வரலாற்று வளர்ச்சியை தன்னகத்தே பெற்றிருப்பதே ஆகும். ஒரு குறிப்பிட்ட வரலாற்று நிகழ்ச்சியை பின்புலமாகக் கொண்டு எழுந்துள்ள எண் ணற்ற இஸ்லாமிய தமிழிலக்கியங்களுக்கு முன்னோடியாக அமைவது மிகுறாசு மாலையே ஆகும். மிகுறாசு மாலை என்னும் நூல் தலைப் பில் உள்ள மிகுறாசு என்னும் சொல் அறபு மொழியைச் சார்ந்த தாகும். இதனை மிஃறாஜ் எனவே அழைப்பர். மாலை என்பது தமிழிலக்கிய சிற்றிலக்கியப் பிரிவுகளுள் ஒன்றாகக் கருதப்படும் தனித்த இலக்கிய வகையை சுட்டுவதாகும். மிஃறாஜ் என்பதின் நேரடியான பொருள் ஏற்றம் உயருதல் என்பதாகும். ஆனால் நாயகம் முஹம்மது (சல்) அவர்கள் மண்ணுலகிலிருந்து விண்ணுல கிற்கு உயர்ந்து அங்கே அனைத்தையும் கடந்துசென்று திசைகளே இல்லாத இடங்களே இல்லாத ‘லா-மகான்’ எனும் கற்பனைக் கெட்டாத கதியை அடைந்து உருவோ மருவோ இம்மியும் இல்லாத ஏகனாம் வல்ல அல்லாஹ்வை நேர்முகமாகத் தரிசித்து அவனது கட்டளையான ஐவேளைத்தொழுகை என்னும் இறைவழிபாட்டு நெறி முறையைப் பெற்று வந்த விண்ணேற்றப் பயணத்தினை மட்டும் குறிப் பிடும் சொல்லாகவே மிஃறாஜ் என்னும் சொல் திகழ்கிறது.

இஸ்லாமிய சகாப்தத்தின் துவக்க காலத்தில் பெருமானார் நபி நாயகம் (சல்) அவர்களது வாழ்க்கை இறை ஒளிபெற்றுச் சிறந்தது. அவ்வொளியானது உலகம் உன்னத நிலை அடையும்பொருட்டு உல கெங்கும் பரவும் வகையில் செய்தல் வேண்டி எல்லாம் வல்ல அல்லாஹ் எண்ணற்ற அற்புத நிகழ்ச்சிகளை நபி (சல்) அவர்களுக்கு நிகழ்த்திக் காட்டியதோடு பல்வேறு சொல்லற்கரிய ஆற்றல்களையும் அவ்வப் போது அளித்தும் வந்தான். பெருமானார் அவர்களுக்கு அல்லாஹ் நிகழ்த்திக்காட்டிய பெறற்கரிய அற்புத நிகழ்வுகளுள் பெரும் முக்கி யத்துவம் வாய்ந்த சிறப்பினைப் பெற்று விளங்கியது மிஃறாஜ் எனப் படும் நாயகம் (சல்) அவர்களின் விண்ணேற்றப்பயணமே ஆகும். இத்தகு சிறப்பு மிக்க வரலாற்று சம்பவம் அண்ணலெம் பெருமானார் (சல்) அவர்களின் வாழ்வில் எத்தகு சூழலில் நடைபெற்றது என்பதை அறிதல் இன்றியமையாததாகும்.

நாயகம் (சல்) அவர்களின் காலத்தில் நிகழ்ந்த விக்கிரக ஆராதனையும் பெண்களின் தாழ்ந்த நிலையும் குறைஷிகளின் கொடியபோக்கும் அவர்களை உலக வாழ்வை உய்விக்க வேண்டி இறையிடத்து மன்றாடத் தூண்டியது. அவர்களது மன்றாட்டமும் ஏற்றுக்கொள்ளப்பட்டு இறையருளும் கிடைக்கப்பெற்றது. அண்ணலார் தமக்குக் கிடைத்த இறையருளை ஏற்றிப்போற்றி அதனை உலகெங்கும் பரப்பி உலக மாயைகளை அழிக்கும் முயற்சியில் கடும் துன்பங்கள் எதிர்பட்டன. எவ்வளவு இன்னல்கள் ஏற்பட்ட போதிலும் ஒன்றே இறை என்பதனை வழிப்படுத்திக் காட்டி நெறிப்படுத்துவது இஸ்லாம் என்ற உண்மையை நிலைநாட்டும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள் அண்ணலெம் பெருமானார் அவர்கள். இத்தருணத்தில் நாயகம் (சல்) அவர்கள் தங்களது நண்பராகிய அர்க்கம் என்பவரின் இல்லத்தில் தங்கியிருந்தார்கள். அப்போது மக்கா நகரில் உள்ள அபுஜஹில் என்பவன் அண்ணலாரைப் பழிவாங்கும் எண்ணத்தை வளர்த்து வந்தான். இஸ்லாத்தின் பரமவிரோதியான இவனுடைய பெயர் அபுல்ஹிகம் (அறிவின் தந்தை) என்பதாகும். பின்னர் அஞ்ஞானத்தின் தந்தை எனப்பொருள்படும் வகையில் முஸ்லிம்களால் அபுஜஹில் என்ற பெயர் கொண்டு அழைக்கப்பட்டான். தம் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள கத்தாப் என்பவரின் புதல்வரும் இஸ்லாத்தை எதிர்த்த குறைஷித்தலைவர்களுள் ஒருவருமான செல்வாக்குப் பெற்றிருந்த உமர் (முகம்மது நபி (சல்) அவர்களின் மறைவுக்குப்பின் இஸ்லாமிய அரச பீடத்தில் அமர்ந்த முதல் நான்கு கலிபா (அடுத்து வந்தவர்) க்களுள் இரண்டாவது கலிபாவாகத் திகழ்ந்தவர்) அவர்களைத் தூண்டினான். அபுஜஹிலினால் தூண்டிவிடப்பட்ட உமர் அவர்கள் நாயகத்தை பழி வாங்கும் எண்ணத்துடன் புறப்பட்டார், பெருமானாரைக் கொலைபுரியும் எண்ணத்துடன் வந்த உமர் அவர்கள் முகம்மது நபி (சல்) அவர்களை சந்தித்த போது இஸ்லாத்தின் வழிபாட்டு நெறிமுறையை உணர்ந்து அல்லாஹ்வின் மார்க்கம் வகுத்துக் காட்டும் வழிமுறையை ஏற்றுப்போற்றிப் பின்பற்றத்தொடங்குகின்றார்கள். இத்தருணம் இஸ்லாமிய ஆரம்பகால சரித்திரத்தில் ஒரு நூதனமான மாறுதலுக்கு வழிவகுத்தது. அன்றைய நிலைவரை இஸ்லாத்தை தழுவியர்கள் எண்ணிக்கையில் ஓரளவுக்கு இருந்திருப்பினும் வீரகுணமும் கூர்மையான அறிவு நுட்பமும் குறைஷிகளுக்கு பெரும் அதிர்ச்சியாக இருந்தது. இச்சூழலில் குறைஷிகளின் பெரும் துன்பங்களுக்கு இடையில் இஸ்லாம் வளர்ந்துகொண்டே வந்தது. ஹளரத் உமர் (றலி) அவர்கள் போன்ற அறிவு நுட்பம் வாய்ந்த பலர் இஸ்லாத்தைத் தழுவினார்கள். அபிசீனிய மக்கள் பிரிவினர் முஸ்லிம்களுக்கு உதவியாக இருந்தனர். இஸ்லாமும், அதனைப்பரப்பும் இறசூலுல்லாவின் மகத்துவமும்

வளர்ந்துகொண்டே வரும் சூழலைக் கண்ணுற்று மனம் பொறாத அபுஜஹில் போன்ற குறைஷிகள் தொடர்ந்து மூன்றுவருட காலத்திற்கு பெருமானரையும் அவரது குடும்பத்தினரையும் சொல்லற்கரிய இன்னல் களுக்குட்படுத்தினர். அண்ணலெம் பெருமானாரை பல வழிகளில் கொலை செய்யவும் முயற்சித்தனர். அச்சூழலில் 'நபி நாயகம் (சல்) அவர்களை அவர்களின் குடும்பத் தாராகிய பனிஹாஷிம்கள் (ஒரு கூட்டத்தாரின் பெயர்) குறைஷிகளிடம் ஒப்புவிக்கவேண்டும், அவ் விதம் ஒப்பியாது போனால் குறைஷிகளிலெவரும் பனிஹாஷிம் குடும் பத்தாருடன் சிநேக சம்பந்தம் வைத்துக் கொள்ளக்கூடாது, அவர் களிடமிருந்து ஒன்றை வாங்கவும், அவர்களுக்கு ஒன்றைக் கொடுக்க வும் கூடாது, அவர்களுக்கு உணவுப் பொருள்கள் போவதற்கும் இடங் கொடுக்கக் கூடாது' என்று பேசித் தமக்குள் உடன்படிக்கை செய்து அதனை எழுதி கஃபா (மக்காவிலுள்ள இறைவன் புனித ஆலயம்) வின் முன் தொங்கவிட்டனர். இதனால் பெருந்துன்பங்களுக்கு பெரு மானாரும் அவரது குடும்பத்தினரும் ஆட்பட்டனர். இத்தகு கொடும் துன்பங்களை முகம்மது (சல்) அவர்கள் தம் வாழ்வில் அனுபவித்துக் கொண்டிருந்த காலகட்டத்திலேயே நபி நாயகம் அவர்கள் வாழ்வில் மிஃறாஜ் என்னும் விண்ணேற்றப் பயணமான அற்புத நிகழ்வு நடைபெற்றது.

பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் ஓரிரவில் துயில் கொண்டிருந்த நேரத்தில் திடீரென வானவர்க்கரசரான ஜிப்றயீல் (அலை) அவர்கள் மழைக்கு அதிபதியான மீகாயீல் (அலை) அவர்களும் காற்றுக்கு அதிபதியான இஸ்ராயீல் (அலை) அவர்களும் பின்னணி யாக இருக்க நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் மிஃறாஜ் அழைப்பைச் சமர்ப்பிக்கும் பொருட்டு பெருமானார் அவர்களை எழுப்பினார்கள், வானவர்கோன் ஜிப்றயீல் (அலை), அழைப்பை இறைக்கட்டளையாக ஏற்றுக்கொண்ட நபிகள் நாயகம் (சல்) அவர்கள் தம் பயணத்திற்கு தயாரானார்கள். ஜிப்றயீல் (அலை) அவர்களுக்கருகில் புறாக் என்னும் மின்னலை விட வேகமாகச் செல்லக்கூடிய புரவி நின்றது. அதன் மேல் அண்ணலெம் பெருமனார் அவர்களும் ஜிப்றயீல் (அலை) அவர்களும் ஏறிக்கொள்ள அப்புரவி ஒரு நொடியில் அவர்களை பைத்துல் முகத்திஸிலுள்ள புனித ஆலயத்திற்குக் கொண்டு போயிற்று. அங்கு நபிகளார் வானவர்களுடன் தொழுது முடித்த வுடன் மீண்டும் தம் விண்ணேற்றப்பயணத்தைத் தொடங்கினார்கள். அண்ணல் நபி (சல்) அவர்களின் வாழ்வில் நடைபெற்ற வரலாற்றுப் புகழ்மிக்க விண்ணேற்றப் பயணத்தின் முதல் நிலையாக கஃபாவி லிருந்து பைத்துல் முகத்திஸ் ஆலயம் சென்றடைந்த நிகழ்ச்சி அல்இஸ்றா என அழைக்கப்படுகிறது. இதன் நேரடியான பொருள் 'நடுநிசிப் பயணம்' என்பதாகும். அல்இஸ்றா குறித்து அல் குர்ஆன்

இவ்வாறு கூறுகிறது. 'அல்லாஹ் மிகப் பரிசுத்தமானவன். அவன் (முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) என்னும் தன் அடியாரை கஃபாவாகிய சிறப்புற்ற பள்ளியிலிருந்து வெகு தூரத்தில் இருக்கும் பைத்துல் முகத்திஸிலுள்ள மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு ஓரிரவில் அழைத்துச் சென்றான். அவ்வாறு அழைத்துச் சென்ற நாம், அதனைச் சூழவுள்ள பூமிகளை ஆசீர்வதித்துள்ளோம். நம்முடைய திருஷ்டாந்தங்களை அவருக்குக் காண்பிப்பதற்காகவே அழைத்துச் சென்றோம்' (அல் குர்ஆன் 17 : 1). இதிலிருந்து அல்லாஹ் தன் திருஷ்டாந்தங்களை காண்பிப்பதற்காகவே நாயகம் (சல்) அவர்களை அழைத்துச் சென்றான் என்பது பெறப்படுகிறது. அல்இஸ்றா முடிவடைந்த பின்பே வானத்திற்கு உயர்த்தப்பட்டு ஆண்டவனுடைய சந்நிதானத்திற்கு நாயகம் (சல்) அவர்கள் அழைத்துச் செல்லப்பட்டார்கள். பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு அங்கு அல்லாஹ் பல்வேறு அந்தரங்கங்களை வெளிப்படுத்தினான். சுவர்க்க நரகங்களின் காட்சிகள் அண்ணலாருக்குக் காட்டப்பட்டன. மனிதப் புலன்களால் அறிய முடியாத காட்சிகளைக் கண்டபின் மீண்டும் வெகு விரைவில் வானத்திலிருந்து பைத்துல் முகத்திஸிற்கு அண்ணல் நபி (சல்) அவர்கள் கொண்டு வரப்பட்டு மீண்டும் அங்கிருந்து மக்காவிலுள்ள தம் இருப்பிடத்தில் சேர்ப்பிக்கப் பட்டார்கள். நாயகம் முகம்மது (சல்) அவர்களின் இவ்விண்ணேற்றப் பயணம் வெகு சொற்ப நேரத்திலேயே நடைபெற்று முடிந்தது. அண்ணல் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வாழ்வில் நடைபெற்ற இச்சம்பவமே இஸ்லாமிய வரலாற்றில் மிஃறாஜ் எனவும் இச்சம்பவம் நடைபெற்ற இரவு மிஃறாஜ் இரவு எனவும் சிறப்புடன் அழைக்கப்படுகின்றன.

நாயகம் பெருமானாரின் விண்ணேற்றப் பயணம் நடைபெற்ற காலம், இடம், பயண நிகழ்வுகள் தொடர்பாக சில கருத்துக்கள் உண்டு. இவ்விண்ணேற்றம் பெருமானார் அவர்கள் நபித்துவம் பெற்று $11\frac{1}{2}$ ஆண்டுகளுக்குப் பின் ஓர் இரவு உம்முஹானி என்பவரின் இல்லத்தில் துயில் கொள்ளும்போது நடைபெற்றது என்றும் நபித்துவத்திற்குப் பின் 12 ஆண்டுகள் கழிந்தபின் ஹத்தீம் என்ற இடத்தில் நாயகம் (சல்) அவர்கள் இருக்கும்போது நடைபெற்றது என்றும் கூறப்படுகிறது. அண்ணலார் நபித்துவம் பெற்றது தங்களது 40வது வயதிலாகும். அவ்வாறாயின் கி. பி. 610 வது ஆண்டிலேயே மிஃறாஜ் நடைபெற்றிருக்க வேண்டும். இன்னும் சில உலமாக்கள் (மார்க்க அறிஞர்கள்) ஹிஜ்றி சகாத்தம் துவக்கம் பெறுவதற்கு ஓராண்டிற்கு முன்பே மிஃறாஜ் பயணம் நடைபெற்றிருக்கவேண்டும் எனக் கருதுகின்றனர். ஹிஜ்றி ஆண்டின் துவக்கம் கி.பி. 622 ஜூன் மாதம் 20ந் தேதி எனக் கருதப்படுகிறது. இதற்கு ஓராண்டிற்கு முன்பு எனின்

கி. பி. 621 ஆம் வருடமாக இருத்தல் கூடும். மிஃறாஜ் இரவு றஜப் (7வது இஸ்லாமிய மாதம்) மாதம் 27ந் தேதி நிகழ்ந்தது எனவும் ரபியுல்லவ்வல் மாதம் (மூன்றாவது இஸ்லாமிய மாதம்) 17ந் தேதி நடைபெற்றது எனவும் கூறப்படுகிறது. எனினும் பெரும்பான்மை யான மார்க்க அறிஞர்களின் ஒருமித்த கருத்து றஜப் மாதம் 27ந் தேதி ஹிஜ்றத் ஆண்டுத் துவக்கத்திற்கு முன்பேயே மிஃறாஜ் பயணம் அண்ணலாரின் வாழ்வில் நடைபெற்றிருக்க வேண்டும் என்பதாகும். ஏனெனில் நாயகத்தின் வாழ்வியல் சம்பவங்களின் அடிப்படையில் மிஃறாஜ் நிகழ்வு மக்கமா நகரில் நாயகம் தங்கியிருக்கும்போதே நடை பெற்றிருக்கிறது என்பதில் ஐயமில்லை. மக்கமா நகரில் நடைபெற்ற அண்ணல் நபியவர்களின் வாழ்வியல் நிகழ்வுகள் ஹிஜ்றி ஆண்டுத் துவக்கத்திற்கு முன்பு நடைபெற்றவைகளாகும். ஹிஜ்றி ஆண்டுத் துவக்கமாக வரையறை செய்யப்பட்டது நபிகளார் (சல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனம் வந்தடைந்த பின்பே ஆகும். எனவே ஹிஜ்றி ஆண்டுத் துவக்கத்திற்கு முன்பே மிஃறாஜ் நிகழ்வு நாயகத்தின் வாழ் வில் நடைபெற்றது.

பொதுவாக மிஃறாஜில் ரூஹானிய்யத்தான மிஃறாஜ், ஜிஸ்மா னிய்யத்தான மிஃறாஜ் என இரு வகையுண்டு. உடல் இல்லாமல் உயிர்மட்டும் அல்லாஹ்வை தரிசிப்பதற்கு ரூஹானிய்யத்தான மிஃறாஜ் என்பர். இவ்வகையினை கனவு வகையில் சேர்ப்போரும் உண்டு. ஆனால் உண்மையில் இது கனவன்று. கனவிற்கும் இதற் கும் நிரம்ப வேறுபாடுகள் உண்டு. இஸ்லாமில் ரூஹானிய்யத்தான மிஃறாஜை பொதுவானதொரு தரிசனமாகவே கருதுகின்றனர். பல நபிமார்களுக்கும் இத்தகு அனுபவம் ஏற்பட்டிருக்கிறது. ஜிஸ்மா னிய்யத்தான மிஃராஜ் உடல் உயிர் ஆகிய இரண்டும் சேர்ந்து விண்ணுலகம் சென்று அல்லாஹ்வை சந்திப்பதைக் குறிப்பதாகும். இத்தகு அனுபவம் அண்ணல் பெருமானார் (சல்) அவர்களுக்கு மட்டுமே உலகில் ஏற்பட்டிருக்கிறது. அண்ணல் நபி (சல்) அவர் களின் விண்ணேற்றப்பயணம் சரீரத்தோடு செய்யப்பட்டதென்பதே மிகுதியானவர்களின் கொள்கையாகும். சிலர் இது சரீரத்தினால் செய்யப்படவில்லை என்றும் ஆத்ம உலகத்தில் நடைபெற்றதென்றும், ஆத்மாவிற்கே காட்சிகள் காட்டப்பட்டதென்றும் கூறுவர். இந் நிகழ்வினை கனவு எனக் கூறுவோரும் உளர். மிஃறாஜ் நிகழ்ச்சி பற்றி ஆன்மீக நெறி தொடர்பான விளக்கங்கள் அல்ஹதீதுகளில் விரிவாக இடம் பெற்றுள்ளன. அண்ணல் நபி (சல்) அவர்கள் தம் வாழ்வில் பல முறை ஆன்மீகப் பயணம் செய்திருப்பினும் அவற்றிற் கெல்லாம் உச்சநிலை போலமைந்த சரீரப் பயணமாகவும் ஆன்மீக பரிபக்குவ பிரயாணமாகவும் ஜிஸ்மானிய்யத்தான மிஃறாஜ் நிகழ்ச்சி அமைந்துள்ளது.

நாயகத்தின் வாழ்வில் மட்டுமல்ல ; இஸ்லாமிய வரலாற்றிலேயே முக்கிய நிகழ்வாக இவ்விண்ணேற்றம் அமைகிறது. இஸ்லாமியர் களின் ஐந்து முக்கிய கடமைகளுள் இரண்டாவது கடமையாக வலி யுறுத்தப் பெறுவது எல்லாம் வல்ல அல்லாஹ்வை நாள்தோறும் ஐந்து முறை வழிபாடு செய்யும் தொழுகையாகும். இது ஸலாத் எனப்படும். பெருமானார் நபி (சல்) அவர்கள் ஒன்றே இறை என்ற கொள்கையை இஸ்லாத்தின் மூலம் உலகறியச் செய்யத் துவங்கும்போது இறைவழி பாட்டினை குறிப்பிட்ட எண்ணிக்கை வரன்முறையில் நிகழ்த்தவில்லை யாம். நாயகம் (சல்) அவர்களின் விண்ணேற்றப் பயணத்தின் போதே முஸ்லிம்களின் மீது ஐவேளைத் தொழுகை என்பது அல்லாஹ் வால் முதன் முதலில் கடமையாக்கப்பட்டது.

இது குறித்து நபிகள் நாயகத்தின் பொன் மொழிகள் குறிப்பிடும் போது 'நாயகம் (சல்) அவர்கள் ஏழு சொர்க்கங்களையும், சிதுறத்துல் முந்தஹா, பைத்துல் மஃமூர் ஆகியவற்றையும் தங்களது விண்ணேற் றப் பயணத்தின்போது கண்டு களித்த பின்னர் இறுதியாக நாளொன் றுக்கு ஐம்பது வேளை தொழுவதை அல்லாஹ் விதியாக அறிவித்தான். இக்கட்டளையை பெற்றுக்கொண்டு நபி (சல்) அவர்கள் திரும்பும்போது ஆறாவது வானத்தில் உள்ள மூஸா (அலை) அவர்கள், நாயகம் (சல்) அவர்களுக்கு விதிக்கப்பட்ட இறைக்கட்டளையை அறிந்து நாயகத்தின் உம்மத்துக்கள் (இனம். உம்மத் என்பது நாயகத்தின் வழி இஸ்லாம் மார்க்கத்தைப் பின்பற்றிச் செல்பவர்களைச் சிறப்பாகக் குறிக்கும்) ஐம்பது தடவைகள் நாளொன்றுக்கு இறைவழிபாட்டினை நிகழ்த்துவது கடினமென்று எடுத்துக் கூறி அல்லாஹ்விடம் திரும்பிச் சென்று இவ்வெண்ணிக்கையை குறைக்கும்படி வேண்டுகோள் விடுக்கு மாறு கூறினார்கள். அண்ணல் நபி (சல்) அவர்களும் மூசா (அலை) அவர்களின் கருத்திற்கேற்ப பலமுறை மீண்டும், மீண்டும் அல்லாஹ் விடம் சென்று தம் உம்மத்துக்களுக்காக மன்றாடி இறுதியாக ஐம்பது வேளைத் தொழுகை என்ற அல்லாஹ்வின் கட்டளை ஐந்து வேளைத் தொழுகையாகக் குறைக்கப்பட்டுக் கடமையாக்கப்பட்டது.' நாயகம் (சல்) அவர்களின் வாழ்வியல் நிகழ்ச்சியில் ஓர் உன்னத நிலையைப் பெறுவது அவர்கள் விண்ணேறிச் சென்று எல்லாம் வல்ல அல்லாஹ் விடம் நேரிடையாக முஸ்லிம்களின் ஐவேளைத் தொழுகைக்கான கட்டளையைப் பெற்றுவந்த மிஃறாஜ் நிகழ்ச்சியே ஆகும். எனவே இந்நிகழ்ச்சி நபிகள் நாயகம் (சல்) அவர்களது வாழ்வில் மட்டுமல்ல இஸ்லாமிய வரலாற்றிலேயே பொன்னெனப் பொறிக்கத்தக்க சம்பவ மாகும்.

இத்தகு சிறப்பு மிக்க வரலாற்றுச் சம்பவத்தை தமிழுலகம் நன் கறியச் செய்யவேண்டும் என்ற ஆலிப்புலவரின் ஆதங்கமே மிஃறாஜ் நிகழ்ச்சி தமிழிலக்கிய உருவம் பெறக் காரணமாயிற்று. ஆலிப்

புலவரின் உணர்வுத் தூண்டுகோளுக்குக் கிடைத்த உருவமே இன்று நம்மிடையே இருக்கும் மிகுறாசு மாலை என்னும் சிறப்பு மிகு இஸ்லாமிய தமிழிலக்கியமாகும். மிகுறாசு மாலை தோன்றிய காலச் சூழலில் படித்து இன்புறுவதற்கும், படிப்பதைக் கேட்டுச் சிறக்கவும் இஸ்லாமிய தமிழிலக்கியங்கள் இல்லை என்ற எண்ணம் ஆலிப் புலவருக்கு ஏற்பட்டதும் மிகுறாசு மாலை தோற்றத்திற்கு ஒரு காரண மாக அமைகிறது. தமிழிலக்கிய உலகில் இஸ்லாம் தழைத்தோங்கத் தொடங்கியபோது ஏனைய பிற சமய இலக்கியங்கள் போன்று காவியச் சுவை நன்கு அமையப்பெற்று விளங்கிய முதல் இஸ்லாமிய தமிழிலக்கியம் மிகுறாசு மாலையே ஆகும். இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றில் இத்தகு சிறப்பு மிக்க தமிழிலக்கியத்தை இயற்றித் தந்த ஆலிப்புலவர் 16 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவராவார். இளமையிலேயே இயற்கையான தமிழ்ப்புலமை மிக்கவரான ஆலிப் புலவர் தமிழ் கூறும் நல்லுலகம் அறியும்படி இனிய இஸ்லாமிய தமிழி லக்கியம் ஒன்றினைத் தம் புலமைத்திறத்தால் ஏற்படுத்திட முடிவு செய்து அதற்குத் தம் நெஞ்சில் நிறைந்த அண்ணல் நபி (சல்) அவர் களின் விண்ணேற்றப்பயணத்தையே பாடுவது என்று தீர்மானித்தார். விண்ணேற்றப் பயணம் தொடர்பாக முழு விவரமும் அறிந்திட ஆலிப் புலவர் அறபு நூல்களின் துணையை நாட வேண்டியதாயிற்று. நாயகம் (சல்) அவர்களின் மிஃறாஜ் நிகழ்ச்சியான வரலாற்று சம்ப வத்தை விளக்கிக் காட்டும் அறபுக் கித்தாபு (புத்தகம்) காயல் பட்டி னத்தில் முகம்மதப்பு மரக்காயரின் மரபில் வந்த ஒருவரிடம் இருப் பதை அறிந்து ஆலிப்புலவர் அவரிடம் சென்று அந்நூலினைப் பெற்றார். காயல் மாநகரில் வாழ்ந்த முகம்மதப்பு மரைக்காயர் மரபில் வந்தோர் அண்ணல் நபி (சல்) அவர்களின் அரிய விண் ணேற்ற நிகழ்ச்சியை உலகறியச் செய்ய வேண்டும் என்ற நல்லெண் ணத்தில் தமக்கு நூல் கொடுத்து உதவியிருப்பதை ஆலிப்புலவர் தம் நூலில் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

மண்டலமென் காயல்வளர் முகம்மதப்பு
  மரைக்காயர் மரபி லானோர்
திண்டிறத்தி லிப்பெருநூல் விளங்கவெனப்
  பெருந்தலீல்கள் செய்கை யாலு
மண்டர்தரு வெனக்கொடுக்கு மருட்கோடை
  முசுலிம் களவர்கள் முன்னே
கொண்டல்முகம் மதுநபிதம் மிகுறாஜை
  யிசைத்தமிழாற் கூற லுற்றேன்.

(மிகுறாசு மாலை : 23)

இங்கு இடம் பெறும் 'பெருந்தலீல்' என்பதில் உள்ள தலீல் என்னும் அறபுச்சொல் வழிகாட்டி, கைகாட்டி என்பதைக் குறிக்கும். அல்

குர்ஆன், அல் ஹதீஸ் போன்றவைகள் முஸ்லிம்களின் நல்வாழ்வுக்கு வழிகாட்டிகளாக இருப்பதால் தலீல் என்றும் குறிக்கப்படுகின்றன. எப்படி இஸ்லாமியர்களின் நல்வாழ்விற்கு குர்ஆனும், ஹதீஸும் வழி காட்டியாக, கை காட்டியாக விளங்குகின்றனவோ அவ்வாறே காயல் மரைக்காயர் மரபிலானோர் இவ்வுலகில் மிஃறாஜ் நிகழ்ச்சியைக் குறிப்பிடும் அறபு நூலின் செய்திகளை உலகறியச் செய்ய வழிகாட்டி யாக இருந்தனர் என்ற பொருளினைக் குறிக்கும் வகையிலேயே ஆலிப்புலவர் நன்றிப் பெருக்கோடு மரைக்காயர் மரபிலானோரின் உதவியை பெருந்தலீல் என்று குறிப்பிட்டுள்ளார்.

முகம்மதப்பா மரபிலானோர் நூல் கொடுத்து உதவியவுடன் அந் நூலின்கண் உள்ள செய்திகளைப் படித்து விரிவுரை அறிய வேண்டி அன்றைய காதி (நீதிபதி)யாக காயல்பட்டினத்தில் பதவி வகித்த செய்கு முகம்மது அலாவுத்தீனின் உதவியை ஆலிப்புலவர் நாடினார். அறபு மொழியில் சிறந்த பாண்டித்தியம் பெற்ற அன்றைய காயல் பட்டினத்து காதி ஷெய்கு முகம்மது அலாவுத்தீனே ஆலிப்புலவரின் எண்ணம் நிறைவுறுவதற்கு வேண்டிய கருத்துக்களை அறபு மொழியி லமைந்த கித்தாபிலிருந்து தமிழாக்கம் செய்துதவினார். இச் செய்தியை மிகுறாசு மாலையின் கடவுள் வாழ்த்துப் பகுதியில் அமைந்த பாடல் தெளிவிக்கிறது.

களித்தசிறை வண்டுலவக் கமலம் விள்ளுங்
காகிரியில் வாழ்செய்கு முகம்ம தின்பா
லளித்தவவு லாதிறசூ லறிஞர் பீரா
மடல்மகுதூம் காலியலா வுத்தீ னன்பாற்
றெளித்தவறி விவையெவர்க்குந் தெரியா தென்றே
திருத்துமிகு மிகுறாஜென் னுங்கித் தாபில்
விளைத்தஹறு பதையறபா லோதி யோதி
விரிதமிழ்நூ லுரையாக்கி விளக்கி னாறே

(மிகுறாசு மாலை : 17)

இப்பாடலில் காகிரியில் வாழ் செய்கு முகம்மது என்னும் இரண்டா மடியில் வரும் காகிரி என்பது அறபுச் சொல்லாகும். கெய்ரோவைக் குறிக்கும் இவ்வறபுச் சொல்லால் தமிழ் பேசும் முஸ்லிம்களால் காயல் பட்டினம் அழைக்கப்பட்டிருக்கிறது. இம்மரபிற்கிணங்கவே பல இஸ்லாமிய தமிழிலக்கியங்களிலும் காயல்பட்டினம் காகிறு என்றே சுட்டப்பட்டுள்ளது. தமக்கு தமிழுரை அளித்துதவிய காலி (காலி என்பதும் காதி என்பதும் ஒன்றே) அலாவுத்தீனின்பால் தமக்குள்ள உயர்ந்த மதிப்பினை வெளிப்படுத்தும் பொருட்டே 'அவுலாது இறசூ லறிஞர் பீராமடல் மகுதூம் காலியலாவுத்தீன்' என்று ஆலிப்புலவர் குறித்துள்ளார். அவுலாதிறசூல் என்றால் முகம்மது (சல்) அவர் களின் சந்ததி எனப் பொருள்படும். பீர் என்னும் அறபுச் சொல்

ஆன்மீகத் தலைவரைக் குறிப்பதாகும். இப்பாடலில் மிகுறாஜென்னும் கித்தாபிலிருந்து தம்முடைய மிகுறாசு மாலைக்குரிய வரலாற்றுச் செய்திகளை ஆலிப்புலவர் பெற்றது தெளிவாக இடம் பெற்றுள்ளது. இச் செய்யுளுக்கு முந்திய பாடலின் இறுதி இரண்டடியிலும்

காதிமகு தூம்ஷரிப லாவுதீனிந் நூலையுயர்
கட்டுதமி ழாலு ரைசெய்தார்
(மிகுறாசு மாலை : 16)

என்றும் ஆசிரியர் கூறியுள்ளார். மேலும் காயல் செய்கு முகம்மது அலாவுத்தீன் உதவியால் தமிழ் உரையைக் கேட்டு அதனைத் தம் தாய்த்திரு மொழியாம் தீந்தமிழில் மிகுறாசு மாலையாகத் தொடுத்ததையும் ஆலிப்புலவர் பின்வருமாறு பாடியுள்ளார்.

மருவளர் காகிரி னாடுறு செய்குமு
கம்மத லாவு தீனா
ரருள்வளர் நந்நபி தம்மிகு றாஜை
யருந்தமிழ் செய்தி டலால்
பொருள்வளர் மங்கைந கர்ப்பதியான
புதுப்படை வீட்டி னில்வாழ்
திருவளர் செய்கபு பக்கர்தன் னாலி
செழுங்கவி செய்த னனே
(மிகுறாசு மாலை : 20)

ஆலிப்புலவரின் இனிய இஸ்லாமிய தமிழிலக்கியம் படைக்கவேண்டும் என்ற எண்ணம் நிறைவுறுவதற்குதவிய செய்கு முகம்மது அலாவுத்தீன் பெருமைப்படுத்தும் வகையிலேயே தம் நூலின் முகப்பிலமைந்த செய்யுள்களில் ஆசிரியர் மூன்றிடங்களில் செய்கு முகம்மது அலாவுத்தீனை நினைவு கூருகின்றார். செய்கு முகம்மது அலாவுத்தீனின் தமிழுரையைக் கேட்ட ஆலிப்புலவர் அதனைப் பொருள் வளம் மிக்க மங்கைநகர் பதியிலமைந்த புதுப்படை வீட்டினிலமர்ந்து மிகுறாசு மாலையாகக்கவி செய்த செய்தியும் மேற்காட்டிய செய்யுளின்மூலமாகப் பெறப்படுகிறது. அத்துடன் ஆலிப்புலவரின் தந்தை பெயரும் செய்கு அபூபக்கர் என்பதும் தெரியவருகிறது. எனவே மேற்குறித்த பாடலின் அகச்சான்றுகள் மூலம் ஆலிப்புலவர் மங்கை நகரினைச் சார்ந்தவர் என்பதை அறியலாம். ஆனால் இன்று தமிழகத்தில் இத்தகைய பெயர்கொண்ட ஊர் ஏதும் இல்லை. வரலாற்றுச் செய்திகளின் அடிப்படையில் திருநெல்வேலி மாவட்டத்தில் சேரமாதேவி, தேசமாணிக்கம் ஆகிய இரு ஊர்களுக்கு இடையில் இன்றமைந்துள்ள மேல் செவ்வல் என்னும் நகரமே மங்கை நகரம் என்றழைக்கப்பட்டது. தமிழகத்தின் ஒரு பகுதியில் ஆட்சி செய்த முத்து வீரப்ப

நாயக்கன் மரணம் அடைந்தபின் ஆட்சிபீடத்திலமர்ந்தது அவனது தாயார் ராணிமங்கம்மாவாகும். இக் காலத்தில் நல்லாட்சி செய்த ராணி மங்கம்மாள் நினைவாகவே இன்றைய மேல் செவ்வல் நகரம் அன்று மங்கை நகரம் என்றழைக்கப்பட்டது. மேலும் மேல் செவ்வல் நகரமே மங்கை நகரம் என்பதையும் அதுவே ஆலிப்புலவரின் பிறந்தகம் என்பதையும் உறுதி செய்யும் வகையில் இன்றும் மேல் செவ்வல் நகரில் ஆலிப்புலவரின் இல்லம் மிஃறாஜ் வீடு என்றே அழைக்கப்படுகிறது. ஆலிப்புலவரின் பெற்றோர்கள் இவரை ஆலிப்பிள்ளை என்று அழைத்து வந்த காரணத்தால் ஆலிப்புலவர் என்ற பெயர் தமிழுலகிலும் நிலை பெற்றது. இவர் அறபு புலவரும், பானத்சுஆத் என்னும் அறபு நூலின் ஆசிரியருமான கஃபு இப்னு ஸுஹைரின் வழிவழி வந்தவராகக் கருதப்படுகிறார். நாயகம் (ஸல்) அவர்களின் வாழ்வில் நடந்த வரலாற்று நிகழ்ச்சியை இனிய தமிழ்க்காவியமாக்கிய ஆலிப்புலவர் ரமலான் (ஒன்பதாவது இஸ்லாமிய மாதம்) மாதம் பிறை 27ல் வெள்ளிக்கிழமை பாளையங்கோட்டையில் ஒரு தோட்டத்தில் பிற்பகல் தொழுகை நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது உயிர் நீத்தார். இவரது உடலும் இங்கேயே நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது. இவ்விடம் இன்றும் ஆலியப்பா பள்ளி என்றே அழைக்கப்பட்டு வருகிறது.

ஆலிப்புலவர் மிஃறாஜ் மாலையை இயற்றுவித்த காலத்தை நன்கறியும் வகையில் நூலின் அகச் சான்றுகள் அமைந்துள்ளன.

தோன்று ஹிஜுறத்துத் தொளாயிரத்தித்தொண் ணுற்றெட்
டேன்றுவரு மாண்டினிடை ஜமாத்துலவ்வ லென்று
சான்றோர்புகழ திங்களிடை தானிருப தில்வே
ரூன்றுமிகு றாஜுரையி னைத்தமிழ் செய்தாரே
(மிகுறாசு மாலை : 18)

இப்பாடலின் கருத்தினடிப்படையில் காயல் முகம்மதப்பா மரபினரிடையே ஆலிப்புலவர் பெற்ற மிஃறாஜ் கித்தாபினை அன்றைய காதி ஷெய்கு முகம்மது அலாவுத்தீன் தமிழில் விளக்கம் செய்ய அதனை ஆலிப்புலவர் ஹிஜ்றி 998-ஆம் ஆண்டு ஜமாதுலவ்வல் மாதம் இனிய தமிழ் காவியமாக்கினார் என்பதனை அறியலாம். கிறித்துவ ஆண்டின் படி கி. பி. 1589 ஆம் வருடம் நவம்பர் மாதமே முஸ்லிம்களின் ஹிஜ்றி 998 ஆம் ஆண்டு துவக்கம் பெறுகிறது. ஆலிப்புலவர் குறித்திருக்கும் ஜமாதுலவ்வல் என்னும் இஸ்லாமிய மாதம் ஹிஜ்றி ஆண்டின் ஐந்தாவது மாதமாகும். எனவே ஹிஜ்றி 998 ஜமாதுலவ்வலுக்கு இணையான கிறித்துவ ஆண்டின் காலம் 1590 மார்ச்சு மாதமாகும். மேலும் ஹிஜ்றி 998 ஆம் வருடத்திய ஜமாதுலவ்வல் மாதம் கிறித்துவ ஆண்டிற்கு சரியாக கி. பி. 1590 ஆம் மார்ச்சு மாதம் 8-ந் தேதியே

துவக்கம் பெறுகிறது. ஆலிப்புலவர் மிகுறாசு மாலையை தமிழில் செய்வித்ததாக மேற்சொன்ன பாடலில் குறித்திருப்பதோ ஜமாது லவ்வல் மாதம் 20ந் தேதியாகும். அப்படியாயின் இதற்கிணையான தேதி மார்ச்சு 27ந் தேதியாகும். கி. பி. 1590 ஆம் வருடம் மார்ச்சு மாதம் 8ந் தேதி வியாழக்கிழமையாகும். அதாவது ஹிஜ்ரி 998 ஆம் வருடம் ஜமாதுலவ்வல் 1ந் தேதி செவ்வாய்க்கிழமையாக இருத்தல் வேண்டும். எனவே மேற்குறித்த பாடலின்படி ஹிஜ்ரி 998 ஆம் வருடம் ஜமாதுலவ்வல் 20ந் தேதிக்கு இணையான கிறித்துவ ஆண்டு, மாதம், தேதி, கிழமையானது கி.பி. 1590 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 27ந் தேதி செவ்வாய்க்கிழமையாகும். இத்தேதி யிலேயே மிகுறாசு மாலையை தமிழ்க் காவியமாக்கினார் ஆலிப் புலவர். ஹிஜ்றி ஆண்டிற்கிணையான கிறித்துவ ஆண்டினை உறுதிப் படுத்துவதுபோல் ஹிஜ்றி ஆண்டினை குறித்துள்ள பாடலுக்கு அடுத்த செய்யுளில் மிகுறாசு மாலையை இயற்றுவித்த காலத்தை ஆசிரியர் கொல்லமாண்டில் தருகின்றார்.

இங்கிலகு கொல்லமெழு நூற்றறுப தையாண்
டங்குவரு பைங்குனி யதின்றெயிதி மூவா
றிங்கணபி வள்ளலிற சூல்தமிகு றாஜை
மங்கைநக ராலியுயர் வண்டமிழின் வைத்தான்
(மிகுறாசு மாலை : 19)

இங்கு ஆலிப்புலவர் மங்கை நகரினைச் சேர்ந்தவர் என்பதை வலி யுறுத்துவதுடன் கொல்லம் 765 ஆம் ஆண்டு மிகுறாசு மாலையை வண்டமிழின் வைத்தான் என்ற செய்தியும் பெறப்படுகிறது. இக் கொல்லமாண்டிற்கு இணையான கிறித்துவ வருடம் கி.பி. 1590-ஏ ஆகும். இப்பாடலில் தமிழ் ஆண்டின் அடிப்படையிலான மாதம், தேதியையும் ஆசிரியர் குறித்துள்ளார். மிகுறாசு மாலை பங்குனி மாதம் 18-ந்தேதி இயற்றப்பட்டதாக அறிகிறோம்.

இந்நூலின் அரங்கேற்றம் பற்றி பல்வேறு கருத்துக்கள் நிலவு கின்றன. இஸ்லாமியத் தமிழ் உலகம் ஏற்றிப் போற்றத்தக்க காவி யத்தை இயற்றி முடித்த ஆலிப்புலவர் அதனை தமிழ் மக்கள் நிறைந்த அரங்கில் அரங்கேற்றவேண்டி கோட்டாற்றிற்குச் சென்றாராம். அங்கு அவர்தம் கருத்திற்கு கோட்டாற்று முஸ்லிம்கள் முக்கியத்துவம் தர மறுத்துவிடவே பெரும் கவலை கொண்டிருந்தபோது தம் மாணாக்க ராகிய கோட்டாற்று சிவலிங்கம் செட்டியாரின் உதவியுடனும், பாவாடைச் செட்டியாரின் உதவியுடனும் கோட்டாற்றில் உள்ள 3000 கைக்கோளர் சமூகத்தினர் மத்தியில் தமது மிகுறாசு மாலை என்னும் நாயகத்தின் விண்ணேற்ற வரலாற்றினை உரைக்கும் நூலினை அரங் கேற்றினார் என்பர். இவ்வாறு அரங்கேற்றம் நடைபெற்றுக்

கொண்டிருக்கும்போது நாயகத்தின் விண்ணுலகப் பயணத்தை இன் தமிழ்ச்செய்யுளால் உரைத்து அதற்கு விளக்கவுரையும் அளித்துக் கொண்டு வரும்போது நாயகம் (சல்) அவர்கள் விண்ணுலகம் சென் றடைவதற்கு முன் பைத்துல் முகத்திசிற்குச் சென்று தொழுகை நடத்தியதை எடுத்துரைக்கும்போது அங்கு நபி (சல்) அவர்கள் தாம் ஏறி வந்த புறாக் என்னும் வாகனத்தை அங்குள்ள பைத்துல் முகத்திஸ் என்னும் பள்ளியில் உள்ள தூணில் தம் சுட்டுவிரலால் துளைசெய்து அப்புரவியைக் கட்டிவிட்டு அங்கு தம் வருகையை எதிர்நோக்கி வீற்றிருந்த ஒரு லட்சத்து இருபத்து நாலாயிரம் நபிகளுடன் கூடி யுற்றார் என்ற கருத்தமைந்த பின்வரும் பாடலினை அரங்கேற்றினார்,

அவ்வாய லோடும் பைத்துல் முகத்தீ ஏழகுமிகுஞ்
செவ்வான பள்ளித் திருவாய லாமதிற் சென்றுமதிற்
றவ்வாம லங்ங னகத்தா கவிபுதர் தங்களின் கோன்
சவ்வான தூணைக் கைவிர லாற்றமர் தானிட்டரோ

(மிகுறாசு மாலை : 111)

ஏறிய வாசியைத் தூண்டுளை யிற்கட்டி யின்சொல் விண்ணோர்
மீறிய பாங்கு சொலியெமைக் கூட்டி மிகுந்தத
மீறிய பள்ளியி னுட்சென்ற போதங் கிலட்சமொடுங்
கூறு மிருபத்து நாலா யிரநபி கூடியுற்றார்

(மிகுறாசு மாலை : 112)

அப்போது 'சவ்வான தூணைக் கைவிர லாற்றமர் தானிட்டரோ', 'ஏறிய வாசியைத் தூண்டுளையிற் கட்டி யின் சொல் விண்ணோர்' என்னும் அடிகளை ஆலிப்புலவர் உரைக்கும்போது முச்சுடர் அண்ணல் பெருமானார் அவர்கள் அவ்விடத்துத் தோன்றி 'ஆலி அச்செய்தி அல்லாஹ்வுக்கும், ஜிப்றயீலுக்கும் எனக்குமே தெரியும். உனக்கு எவ்வாறு தெரியும்?' என்று வினவினார்களாம். அத்திருக்காட்சியை கண்ட ஆலிப்புலவர் உணர்வுப்பெருக்கால் அவ்விடத்திலேயே மயக்க முற்று வீழ்ந்ததுடன் அண்ணலாரின் அருட் திறத்தால் மிகுறாசு மாலையை அரங்கேற்ற உதவிய பாவாடைச் செட்டியாரும் ஒளியிழந் திருந்த தம் கண்களுக்கு ஒளியினைப்பெற்றாராம். அண்ணல் நபி (சல்) அவர்களின் வரவினை அறிந்த பின்பே கோட்டாற்று முஸ்லிம் மக்கள் தம் தவற்றை உணர்ந்து ஆலிப்புலவரின் புலமைத் திறத்தை ஏற்றுப் போற்றியதாக ஒரு கருத்து நிலவுகிறது.

பிறிதொரு கருத்து தமது மிகுறாசு மாலையை அரங்கேற்றம் செய்ய முடியாமல் துன்புற்ற நிலையில் ஆலிப்புலவர் கோட்டாற் றினைச் சென்றடைய அங்கு ஷெய்கு சுலைமான் லெப்பை ஆலிம்ஸாகி பொலியுல்லா, குஞ்ஞு அலி மன்னான் ஸாகிபொலியுல்லா, மஷாயிகு பகீர் மன்னான் முகம்மது ஸாகிபொலியுல்லா போன்ற பல ஒலிமார்கள்

(இறைநேசச் செல்வர்கள்) கோட்டாற்றில் இருந்தனர். அத்தருணத்தில் மஷாயிகு குஞ்னு அலி மன்னான் ஸாகிபொலியுல்லா அவர்கள் வேத மொழி தவறாது ஆண்டவனைப் புகழ்ந்து வரும்போது றஜபு (ஏழாவது இஸ்லாமிய மாதம்) மாதம் முதல் தேதி திங்கள் இரவு நாயகம் சல்லல்லாகு அலைகி வசல்லமவர்களை முஷாஹதாவிலிருக்கும் போது தரிசித்தார்கள். முஷாஹதா என்பது அறபுச்சொல்லாகும். தோற்றம், வெளிப்பாடு என்று பொருள்படும். குறிப்பாக ஆன்மீக வெளிச்சம் அல்லது ஞானம் எய்தப்பெறுவதைக் குறிப்பிட சூபிகளும் இறைநேசச் செல்வர்களும் இச்சொல்லை பயன்படுத்துகின்றனர். ஓர் இறைநேசச் செல்வர் தம்முடைய ஆன்மீக நெறியில் தம்மை மறந்திருந்து இறைவழிபாட்டில் ஈடுபட்டிருப்பதை முஷாஹதாவில் உள்ளார் என்பர். இவ்வாறு குஞ்னு அலி மன்னான் ஸாகிபொலியுல்லா தம்முடைய முஷாஹதாவில் நாயகத்தை சந்தித்தபோது நபி (சல்) அவர்கள் இம்மாதம் 12ந்தேதி வெள்ளிக்கிழமை ஆலிப்புலவரின் எண்ணத்தை நிறைவேற்றுவதற்காக தாம் அவ்விடத்திற்கு வருவதாகத் திருவாய் மலர்ந்தருளினார்கள். இச்செய்தி ஊரெங்கும் பரவி அந்நாளை எதிர்பார்த்து அனைவரும் காத்திருந்தனர். அந்நாளில் நபி (சல்) அவர்கள் கோட்டாற்றில் உள்ள செய்யிது பாவா காசிம் ஸாகிபொலியுல்லா அவர்கள் பள்ளிக்கு வந்தருளி தங்களுடன் வந்த பிலால் முஅத்தீனை (அடிமைகளுள் முதன் முதலாக இஸ்லாத்தை தழுவியவர்) அனுப்பி ஆலிப்புலவரை அழைத்து வரும்படி செய்வித்து பெருமைப்படுத்தி புலவரை மிகுறாசு மாலையை அரங்கேற்றும்படி செய்வித்தார்களாம். வந்திருப்பது நாயகம் நபி (சல்) அவர்கள் என்பதையறியாது தம் பாடல்களை ஆலிப்புலவர் அரங்கேற்றம் செய்துகொண்டு வரும்போது அவ்வாயிலோடு 'பைத்துல் முகத்தீ சழகு மிகுமென்ற' 111 வது பாட்டையும் ஏறிய வாசியைத் தூண்டுளையிற் கட்டியின் சொல் விண்ணோ' ரென்கிற 112வது பாட்டையும் பாடும்போது அப்பாடற் செய்தி புலவருக்கு எவ்வாறு தெரியுமென்று பெருமானார் (சல்) அவர்கள் வினவினார்களாம். அதுவரையில் யாரென்றறியாத ஆலிப்புலவர் நடுங்கி உவகையால் பொங்கி அண்ணலாரின் பாதத்தை முத்தியிட்டுத் 'தேவரீருங்கள் பாதத்தூளெனது போதத்திலுற்றிருந்ததால் நாவிற் பிறந்த தென்றார்'. பின் நாயகத்தின் முன்னிலையில் தன்னுடைய மிகுறாசு மாலையை அரங்கேற்றம் செய்வித்த ஆலிப்புலவர் நபியைக் கண்ட கண்ணாலினிய புவியைக் காணமாட்டேன் என்று கூறி தமது கண்ணை குருடாக்கிக் கொண்டு தமது இறுதிநாள் வரையில் வாழ்ந்தாராம். எவ்வாறாயினும் மிகுறாசு மாலையின் அரங்கேற்றம் கோட்டாற்றில் நிகழ்ந்திருப்பதில் ஐயமில்லை. நூலினுள் புலவர்கள் பலர் சூழ்ந்திருக்க அவர்களின் முன்னே தமது மிகுறாசு மாலையை அரங்கேற்றியதாக ஒரு பாடலின் செய்தி காணப்படுகிறது.

குங்குமச்செஞ் செற்றினுக்குக் குழைசேறொப்
பெனப்பிரதி கூறல் போல் வான்
மங்கையர்க்குப் பிரதியென்று வளர்த்த விலைப்
பெண்ணையொப்பு வைப்பார் போலுங்
கங்கையுற்ற கடலினுக்குங் கனமழைக்கும்
புகைப்பனி நேர் கவலல் போலுஞ்
சங்கமுற்ற புலவர்முன்னே தமிழறியாச்
சிறியனிந்நூற் சாற்று மாறே.

(மிகுறாசு மாலை: 22)

ஆலிப் புலவர் மிகுறாசு மாலையை இயற்றுவித்ததற்கும் அதனை அரங்கேற்றியதற்குமிடையே சிறிய கால வேறுபாடு இருந்திருக்க வேண்டும். தம் அளப்பரிய இஸ்லாமிய தமிழின் பற்றால் இனிய காவியத்தை இயற்றி முடித்த ஆலிப் புலவர் அதனைப் புலமை சான்ற புலவர் மத்தியிலே அரங்கேற்றம் செய்வித்துத் தம் இஸ்லாமியத் தமிழின் பெருமையை எடுத்துரைக்கவே விரும்பியிருக்கிறார். அன்றைய காலச்சூழலில் ஆலிப் புலவரின் விருப்பத்தை நிறைவு செய்தது கோட்டாறு எனலாம்.

நாயகம் (சல்) அவர்களின் விண்ணேற்ற நிகழ்வினை எடுத்துரைப் பதற்கு ஆலிப் புலவருக்குக் கிடைத்திருக்கும் இலக்கிய வடிவம் மாலை யாகும்: மாலை என்பது சிற்றிலக்கியப் பிரிவுகளுள் ஒன்றாகக் கருதத் தக்க அளவில் பல்வேறு பெயர்களுடனும் இணைந்து வந்துள்ளது. மாலை என்பதற்குமட்டும் உள்ள இலக்கண வரையறையை பாட்டியல் நூல்கள் தரவில்லை. ஆனால் இணைமணிமாலை, இரட்டை மணி மாலை, பல்சந்த மாலை, மும்மணி மாலை, நான்மணி மாலை, நவ மணி மாலை, தாரகை மாலை, செந்தமிழ் மாலை' போன்ற பல வடிவங்களுக்குரிய இலக்கண விளக்கங்களைப் பன்னிரு பாட்டியல் போன்ற நூல்கள் எடுத்தியம்புகின்றன. ஒரு நிகழ்ச்சியை அல்லது ஒரு தொடர் கருத்தினை ஒன்றன் பின் ஒன்றாக நிரல்படத் தொகுத்து அமைத்து வெளியிட்ட பல்வேறு இலக்கியங்களும் அந்தந்த கருத்துக் களுடன் மாலை என்ற பெயரினையும் தமிழிலக்கியங்களில் சேர்த்து அமைத்துக்கொண்டிருப்பதைப் பார்க்க முடிகிறது. மாலை என்ற பெயரிலமைந்த இலக்கியங்களைக் காணும்போது இப்பிரிவின்கீழ் அமையும் தமிழ் இலக்கியங்களுக்கு இன்ன யாப்பமைதி இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இருப்பதாகத் தெரியவில்லை. மேலும் பாடல் எண்ணிக்கைகளிலோ இலக்கிய வடிவமைப்பிலோ மாலை இலக்கியங்களுக்கு எவ்வித கட்டுப்பாடும் இல்லை. இவ்வாறு வடிவமைப்பிலும், யாப்பமைப்பிலும் எவ்வித இலக்கண வரையறையும் இல்லாதிருப்பதாலோ என்னவோ இஸ்லாமிய தமிழிலக்கியப் பிரிவு பல நூற்றுக்கணக்காண மாலை இலக்கியங்களைப் பெற்றுள்ளது.

இஸ்லாமியத் தமிழில் எண்ணிக்கை அளவில் ஒரே இலக்கிய வடிவத்தின் கீழ் அதிகமான இலக்கியங்களைப் பெற்றுள்ள சிற்றிலக்கியப் பிரிவான மாலை இலக்கிய வடிவத்திற்கு இஸ்லாமியத் தமிழிலக்கியத்துள் முன்னோடியாக அமைந்தது மிகுறாசு மாலையே ஆகும்.

மிகுறாசு மாலையை ஆலிப் புலவர் கடவுள் வாழ்த்து உள்பட 744 செய்யுள்களில் யாத்துள்ளார். இது தவிர்த்து காப்பு என்ற தலைப்பில் ஒரு செய்யுள் மட்டும் அமைந்துள்ளது. ஆக 745 செய்யுள்களைக் கொண்ட மிகுறாசு மாலையில் அறுசீர் கழி நெடிலடியாசிரிய விருத்தம், எழுசீர்கழி நெடிலடியாசிரிய விருத்தம், எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம், கலி விருத்தம், நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை, கொச்சகக் கலிப்பா, கட்டளைக் கலிப்பா, வஞ்சி விருத்தம், கலி வெண்பா, பஃறொடை வெண்பா, தாழிசை, கலி நிலைத்துறை, நில மண்டில வாசிரியப் பா முதலான 14 வகையான யாப்பமைப்பில் செய்யுள்கள் நூல் முழுவதும் பரவிக்கிடக்கின்றன. இத்தனை வகையான யாப்பமைப்பில் செய்யுள்கள் இடம் பெற்றிருப்பது ஆலிப் புலவரின் தமிழ்ப் பாண்டித்தியத்தைத் தெற்றென விளங்கச் செய்கிறது. மேற்குறித்த யாப்பமைப்பில் அதிகமான பாடல் எண்ணிக்கைகள் நேரிசை வெண்பா, எழுசீர் கழிநெடிலடியாசிரிய விருத்தம், கலி விருத்தம், அறுசீர் கழிநெடிலடியாசிரிய விருத்தம் முதலான நான்கு வகைகளுக்குள்ளேயே காணப்படுகின்றன. கலி நிலைத்துறை, நில மண்டிலவாசிரியப்பா வகைகளைச் சார்ந்தனவாக ஒரு சில செய்யுட்களே காணப்படுகின்றன. ஒரு தொடர் கருத்தினை எடுத்துரைக்கும் போது அதன் உணர்வோட்டத்தில் வெளிவரும் பா வகைகள் பெரும்பாலும் ஓரினத்தை சார்ந்தனவாகவே இருக்கும். ஆனால் ஆலிப் புலவரின் புலமைத்திறம் வியக்கத்தக்க முறையில் ஒரு கருத்தமைவிற்கு உருவமளிக்கும்போது பல்வேறு யாப்புக்களைப் பெற்றமைகின்றன. சான்றாக மிகுறாசு மாலையில் இடம் பெறும் பைத்துல் முகத்தீசியலை எடுத்துக் கொள்வோம். இதில் அண்ணல் நபி (சல்) அவர்கள் வானவர் ஜிப்றயீல் (அலை) அவர்களுடன் புறாக் என்னும் புரவியில் ஏறி பைத்துல் முகத்தீசிற்குச் சென்று அங்குள்ள புனிதப் பள்ளியில் தொழுகை நடத்தும் செய்தி விவரிக்கப்படுகிறது. இச்செய்தியை ஆலிப்புலவர் தொண்ணூற்று மூன்று செய்யுள்களால் விரித்துரைக்கின்றார். இத்தொண்ணூற்று மூன்று பாடல்களுள் எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம், அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துறை, கொச்சகக் கலிப்பா, கலி விருத்தம், கட்டளைக் கலிப்பா, நேரிசை வெண்பா, வஞ்சி விருத்தம் முதலான எட்டு வகையிலான யாப்பமைப்பில் பாடல்கள் விரவிக்கிடக்கின்றன. ஆலிப்புலவரின் தமிழ்த் திறமும் இஸ்லாமியப் புலமையும் அவரது எண்ண உணர்வோட்டத்திற்குத் தகுந்தாற்போல் அமைந்திருப்பது

சிறப்புடைத்ததாகும். அதுவும் குறிப்பாக வேற்றுமொழியான அறபு மொழிப் பின்புலத்திற்கேற்ப ஒரு வரலாற்று நிகழ்ச்சியை தம் தாய் மொழியான தமிழ் மொழியில் சற்றும் தொய்வில்லாமல் பல்வேறு யாப்பு வகைகளினால் எடுத்துரைக்கிறார் ஆலிப்புலவர். ஆசிரியர் எடுத்துரைக்கக்கருதும் விண்ணேற்றப் பயண நிகழ்ச்சியை அறபுச் சொல்லாட்சி இன்றி செய்யுள் வடிவமாக்குவது கடினமாகும். எனவே மிகுறாசு மாலையில் அறபு சொல்லாட்சி தவிர்க்க முடியாததென்றே கூற வேண்டும். ஒரு பாடலில் எத்தனை அறபுச் சொற்கள் இடம் பெற்றிருப்பினும் அப்பாடலின் தமிழ் யாப்பு சிறிதும் சிதைவுறாமல் இருப்பதைக் காணலாம். சான்றாக அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தத்தில் கடவுள் வாழ்த்து பகுதியில் அமைந்த பின்வரும் பாடலினை எடுத்துக்கொள்வோம்.

பாலிலாப் பழங்கள் போலப் பருகிய பான மானால்
ஹாலெல்லாங் கல்பிற் றோன்றுங் கருதியே கமலத் துன்னி
யேலெல்லாம் லாயி லாக இல்லல்லாகு முகம்ம துற்ற
சூலுல்லா கியென்று ணாடித் தொழுமவர் சுவர்க்கத் தோரே

(மிகுறாசு மாலை : 3)

இச்செய்யுள் ஆசிரிய விருத்தத்திற்குரிய அளவொத்த கழிநெடிலடி நான்காய் வந்துள்ளது. ஐந்து சீர்கொண்ட அடிகளிலிருந்து பதின் சீரின் மிக்க அடிகளாலும் கூட ஆசிரிய விருத்தம் வரப்பெறும் என்னும் விதிக்கேற்ப மெற்சொன்ன செய்யுள் ஆறு சீர்களைப் பெற்றமைந் திருப்பதால் அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம் என்னும் யாப்பு வகையினைச் சார்ந்து வந்துள்ளது. பாலும் பழமும் சேர்ந்திருக்க வேண்டும் என்பதுபோல் இன்பமும் துன்பமும் மனிதனை வந்தடைவது இறைவனின் கற்பனையே. இதனை நெஞ்சில் நிறுத்தி அல்லாஹ் வையும் அவனது திருத்தூதர் பெருமானார் நாயகம் (சல்) அவர்களை யும் தொழுதிருப்பவர் சொர்க்கம் புகுவோர்' என்பது மேற்சொன்ன பாடலின் திரண்ட கருத்தாகும். இக்கருத்தமைவினை தமிழ் யாப் பமைப்பில் நான்கடிச் செய்யுள் வடிவத்தில் தரும்போது ஆலிப்புலவர் ஹால், கல்பு, லாயிலாக இல்லல்லாகு முகம்மது றசூலுல்லா முதலான அறபுச் சொற்களைக் கையாண்டுள்ளார். ஹாலெல்லாம் என்னும் இரண்டாமடிச் சொற்றொடரின் வரும் ஹால் என்ற அறபுச்சொல் எல்லாம் என்ற தமிழ்ச் சொல்லுடன் இணைந்து ஒரே சீராக 'ஹாலெல்லாம்' என இடம்பெற்றுள்ளது. ஹால் என்பதன் நேரடி யான பொருள் மனோநிலை என்பதாகும். ஆனால் தமிழ் சூபிகள் (இறைநேசச் செல்வர்கள்) இச்சொல்லை ஒருவருக்கு அவர் விருப்ப மின்றி ஏற்படும் இன்பம், துன்பம், அச்சம் முதலான நிலைகளைச் சுட்டுவதற்குப் பயன்படுத்துகின்றனர். எனவே ஹாலெல்லாம் என் பது ஒருவருக்கு அவரது கட்டுப்பாட்டிற்கு அப்பால் ஏற்படும் இன்பம்

துன்பம் அனைத்தையும் குறிப்பதாகும். இச்சொல்லுக்கு அடுத்துள்ள 'கல்பு' என்னும் அறபுச்சொல் இதயம் என்பதைச் சுட்டும். 'லா இலாக இல்லல்லாகு முகம்மதுற் றசூலுல்லாஹி' என்பது இஸ்லாத்தின் மூல மந்திரமான 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை முஹம்மது (சல்) அவர்கள் அவனுடைய திருத்தூதர் ஆவர்' என்னும் பொருளைக் குறிக்கும். இது 'லா இலாஹ இல்லல்லாஹு முஹம்மதுற் றசூலுல்லாஹ்' என்னும் முதல் கலிமா (சொல்-சிறப்பாக கலிமா என்பது இஸ்லாத்தின் மூலமந்திரமாக குறிப்பிடப்படும் ஐந்து அடிப்படைத் தத்துவங்களைக் குறிக்கும்) ஆகும். மேற்குறித்த பாடலில் இடம் பெற்றுள்ள கலிமாவில் லாஇலாஹ இல்லல்லாஹு என்னும் முதல் பகுதி அல்குர்ஆனில் சூரத் முஹம்மது என்னும் அத்தியாயத்திலும் (அல் குர்ஆன் 47 : 19) முஹம்மது றசூலுல்லாஹி என்னும் இரண்டாவது பகுதி சூரத் அல்பத்ஹு என்னும் 48-வது அத்தியாயம் 29-வது திருவசனத்திலும் இடம் பெற்றுள்ள பகுதிகளாகும். இஸ்லாத்தின் ஒன்றே இறை என்னும் அடிப்படை மூல மந்திரத்தை வலியுறுத்தும் இக்கலிமாவை கடைப் பிடித்துத் தொழுது நடப்பவர் சுவர்க்கம் புகுவோர் என்றே இங்கு ஆலிப்புலவர் உரைக்கின்றார். முதல் கலிமாவான இதனை கலிமா தையிபா என்று அழைப்பர். இதனை தம் செய்யுளில் அப்படியே இடம் பெறச் செய்யும் ஆலிப்புலவர் தம்முடைய செய்யுளின் தமிழ் யாப்பமைப்பிற்கு ஏற்ப லாஇலாக இல்லல்லாகு முகம்ம துற்ற சூலுல்லா கியென்று 7 சீர்களாகப் பிரித்தமைத்துள்ளார். ஆக அறபு சொல்லாட்சியைத் தமிழ் யாப்பிற்கேற்ப சீர் பிரித்தமைப்பதில் ஆலிப் புலவருக்கு எவ்வித இடர்ப்பாடுகளும் ஏற்படாத காரணத்தினாலேயே தம் கருத்திற்கேற்ப பொருள் வளம் மிக்க அறபு மொழிச் சொற்களை பல்வேறு யாப்பு வகைகளுடனும் கலந்தமைக்க முடிகிறது. அத்துடன் அறபு மொழிச் சொற்களின் கலப்பால் தமிழ் சந்தங்களும் சிதை வுறாமல் காட்சியளிப்பதைக் காணலாம்.

காப்பு செய்யுள் ஒன்று நீங்கலாக உள்ள 744 பாடல்களைக் கொண்டுள்ள மிகுறாசு மாலையில் கடவுள் வாழ்த்து உள்பட பதின் மூன்று தலைப்புகள் இடம் பெற்றுள்ளன. இப் பதின்மூன்று தலைப் புக்களுள் முதல் நான்கினைத் தவிர ஏனைய ஒன்பது தலைப்புக்களும் இயல் என்னும் பெயரினையும் தலைப்புக்களின் பெயர்களுடன் சேர்த்துப் பெற்றுள்ளன. மிகுறாசு மாலையில் இடம் பெறும் பாடல்கள் முறையே கடவுள் வாழ்த்து, நாட்டுச் சிறப்பு, பொருளடக்கம், நூல், புறாக்கியல், பைத்துல் முகத்தீசியல், மிகுறாஜேணியியல், எழுவானி யல், நரகத்தியல், சொர்க்கத்தியல், அறுஷியல், நபி நாயகம் பனீயிசுறாயீல்களைக் கண்டவியல், நபிநாயகம் மக்கா வந்தவியல் முதலான 13 உட்பிரிவுகளின் கீழ் அமைந்துள்ளன. இவ்வொவ்வொரு

உள் தலைப்புக்களும் முறையே 23, 19, 5, 10, 25, 93, 132, 98, 59, 60, 126, 30, 165 பாடல் எண்ணிக்கைகளைப் பெற்றுள்ளன. இத்தலைப்புக்களின் கீழ் அமைந்துள்ள உள்ளடக்கச் செய்திகளை ஒன்றன்பின் ஒன்றாகக் காண்போம்.

மிகுறாசு மாலையின் கடவுள் வாழ்த்துப் பாடல் இஸ்லாமிய ஏகத்துவ இறைவழிபாட்டு நெறிமுறையை நன்குணர்த்துகிறது. இஸ்லாம் அறபு தேசத்தில் முதன் முதலில் கால் கொள்ளத் தொடங்கிய நாளில் பல தெய்வ உருவ வழிபாடு மக்களிடையே பரவலாக இருந்தது. இத்தருணத்தில் இருளில் தோன்றிய ஒளியென பெருமானார் நாயகம் (சல்) அவர்கள் மூட நம்பிக்கைகளுக்கு மத்தியில் இஸ்லாம் என்னும் மார்க்கத்தை போதித்தார்கள். அவரது போதனை அன்றைய கால கட்டத்தின் இறைவழிபாட்டு நெறிமுறைகளுக்கு முற்றிலும் மாறான உருவமற்ற இறைவணக்கத்தையும் ஒன்றே இறை என்ற ஏகத்துவக் கொள்கையையும் அடிப்படையாகக் கொண்டு பரவத் தொடங்கியது. அல்லாஹ் என்பவன் உருவமற்றவன் உணர்வுகளுக்கு அப்பாற்பட்டவனாவான். அல் குர் ஆன் குறிப்பிடும்போது 'அல்லாஹ் எத்தகையோன் என்றால் அவனைத் தவிர வணக்கத்திற்குரியோன் வேறு இல்லை. அவன் நித்திய ஜீவன் என்றும் நிலையானவன்' (அல்குர்ஆன் 3 : 2) என்றும் 'நிச்சயமாக வணக்கத்திற்குரியன் அவன் ஒருவன் தான் (அவனுக்கு) நீங்கள் இணை வைப்பதிலிருந்து நான் நிச்சயமாக அப்பாற்பட்டவன்' (அல் குர் ஆன் : 6 : 19) என்றும் அல்லாஹ் பற்றி பலவேறாக கருத்துக்கள் காணப்படுகின்றன. அல் குர்ஆனில் அல்லாஹ் பற்றி 2584 இடங்களில் பல்வேறு செய்திகள் குறிக்கப்பட்டுள்ளன. இச்செய்திகளின் சாரத்தை சுருக்கித் தருவதுபோல் ஆலிப்புலவரின் கடவுள் வாழ்த்துப் பகுதியில் அல்லாஹ் பற்றிக் குறிப்பிடும் பாடல் அமைந்துள்ளது.

உருவிலியா யுணவிலியா யுள்ளொளிக்கு
    மேலொளியா யொன்றோ டொன்றா
தருவிலியா யயர்விலியா யண்டபகி
    ரண்டமத னடுக்கி லில்லா
வெருவிலியா யெங்குமொரு மெய்ப்பொருளாய்
    விளங்கிய அல் ஹம்தாய் நின்ற
வொருபொருளைப் பெரும் பொருளென் றெவருமுளக்
    கருத்தினில் வைத் துணரு வீரே

(மிகுறாசு மாலை : 1)

இங்கு 'எங்குமொரு மெய்ப்பொருளாய் விளங்கிய அல்ஹம்தாய்' என்னும் சொற்றொடர் அனைத்துப் புகழும் மெய்ப்பொருளாக விளங்கும் அல்லாஹ்வுக்கே என்பதைக் குறிக்கிறது. அல்ஹம்து என்பது

'எல்லாப் புகழும்' என்பதைக் குறிக்கும். இது சிறப்பாக அல்ஹம்து எனத் துவங்கும் அல் குர் ஆன் ஆயத்தைக் (அல்குர்ஆன் வசனம்) குறிப்பதாகும். அல்லாஹ்வின் திருமறையாம் அல் குர் ஆனின் முதல் அத்தியாயத்தில் முதல் ஆயத்து 'எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே...' (அல் குர் ஆன் : 1 : 1) எனத் தொடங்குகிறது. இச் சிறப்பினை வலியுறுத்திக் காட்டும் பொருட்டே தம் கடவுள் வாழ்த்துப் பாடலில் மெய்ப்பொருளாகிய இறைவன் அல்ஹம்தாக நிற்கும் நிலையை ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார், அல்லாஹ்வுக்கு நிகர் அவனே யன்றி வேறு யாருமில்லை என்பதை

தன்னையன்றி தனக்குநிகர் தானிலியே
யோரிடத்துந் தரிக்கி லானே
..................
தன்னையன்றி வணங்கவுரி யவரிலை

என ஆலிப்புலவர் கூறுகின்றார். தமது இறை நம்பிக்கையை உணர்த்தும்போது

பாலிலாப் பழங்கள் போலப் பருகிய பான மானால்
ஹாலெல்லாங் கல்பிற் றோன்றுங் கருதியே கமலத் துன்னி
யேலெல்லாம் லாஇ லாக இல்லல்லாகு முகம்ம துற்ற
சூலுல்லா கியென்று ணாடித் தொழுமவர் சுவர்க்கத்தோரே (3)

என இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாட்டில் நம்பிக்கை கொள் வோர் சுவர்க்கம் புகுவோர் என ஆலிப்புலவர் உரைக்கின்றார்.

அல்லாஹ்வின் பெருமைதனையும் அவன் வகுத்துக்காட்டும் இஸ்லாம் மார்க்கத்தின் நன்நெறியையும் தமது கடவுள் வாழ்த்துப் பகுதியில் புகழ்பாடும் ஆலிப் புலவர் அல்லாஹ்வின் தூதுவராக இவ் வுலகில் தோன்றிய நல்லோர் பலரையும் புகழ்ந்துரைக்க மறந்துவிட வில்லை. அல்லாஹ்விற்கு அடுத்தபடியாக இறைவன் தன் முதல் கலிமாவில் சுட்டுவதற்கேற்ப அல்லாஹ்வின் இறுதித் தூதராம் முகம்மது இறசூலுல்லா அவர்களின் மீது தமக்குள்ள பற்றினை வெளிப்படுத்தும் வகையில் நாயகத்தை நினைத்து மனம் வைப்போ மானால் சுவர்க்கம் புகுவது திண்ணமே என்ற பொருளில் பாடல் கருத்தினை அமைத்துப் பாடுகின்றார்.

நறைசூழ் கமலவட்ட மலர்மா ளிகைதரித்த
நலமா துளன்பு யர்த்தினோ
ரிறசூ லுறுமறைக்கு ளுரியோ ரிரவலர்க்கு
நிதிவீ சியகொ டைக்கையா
ருறுசூன் முகில்கவிழ்த்த நிலன்மீ திடை நடக்கு
முரவோ ரிறைவி டுத்ததூ

திறகு லிருபதத்தை மனமே நினைகிடைக்கு
மிதமா தொடு சுவர்க்கமே

(மிகுறாசு மாலை : 4)

நாயகம் (சல்) அவர்களை தம் கடவுள் வாழ்த்துப் பகுதியில் நினைவு கூர்ந்து இறைஞ்சுவதுபோல அண்ணலாரின் மருமகனார் உதுமானை யும் முணர்வாம் எனவும் நான்கு கலிபாக்களுள் ஒருவரான நற்புலி யலியைப் புகல்வாமே எனவும் பொற்படை யலிபெறு புத்திரர் அசனு சைனைப் புகல்வாம் எனவும் ஒவ்வொருவராக நினைவு கூருகின்றார் ஆசிரியர். இவ்வாறு பல்லோரையும் நினைவுகூரும்போது மகுதூம் அலாவுதீனைப் போற்றினால் நல்லறிவு பொங்குமே என்ற கருத்தமை வில் உள்ள பாடல் இங்கு குறிக்கத் தக்கது.

வேத மோதிய கிறாஅத் தேழுடன்
மிக்க தானதப் சீறுக்கும்
நாத மேவிய சொனகுபு சறுபுட
னல்ல இல்முபதி னாலுக்குஞ்
சீத மேவிய சொலெழுத்தி லக்கணஞ்
செப்பிடும் பதினெண் பாடைக்கும்
போத வல்லம குதூம லாவு தீனைப்
போற்ற நல்லறிவு பொங்குமே

(மிகுறாசு மாலை : 14)

இப்பாடலில் பல்வேறு இஸ்லாமிய கருத்துக்கள் அறபு மொழிச் சொற் களால் சுட்டப்பட்டுள்ளது. ‘வேதமோதிய கிறாஅத்’ என்னும் முதல் அடியில் உள்ள கிறாஅத் என்பது ஓதுதல் என்று பொருள்படும். இது சிறப்பாக முஸ்லிம் மக்களின் திருமறையான அல்குர்ஆனை ஓது வதையே குறிக்கும். அல்லாஹ்வின் கட்டளையானது அவ்வப்போது பெருமானார் நாயகம் (சல்) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. இவ் வாறு அல்லாஹ்வால் அருளப்பட்ட வசனங்களை நபி (சல்) அவர்கள் தொகுத்துக் கூற அதுவே இஸ்லாத்தின் வேதநூலான அலகுர்ஆனாக உருப்பெற்றது. இவ்வாறு உருப்பெற்ற அல்குர்ஆன் உலக முஸ் லிம்கள் அனைவருக்கும் பொதுமறையாகும். இப்பொது மறையை பல்வேறு நாடுகளையும், மொழிகளையும் சார்ந்தவரும் அறபு எழுத்து முறையைப் பின்பற்றி ஓதும்போது அவ் வசனங்களின் உச்சரிப்பு பலவேறாக வேறுபட்டமைந்துள்ளது. திருக்குர்ஆனை ஓதும் வேறு பட்ட ஒலிப்பு முறை உலகில் ஏழுவிதமாகப் பரந்துபட்டுக் காணப் படுகின்றது. இது தொடர்பாக அண்ணல் நபி (சல்) அவர்கள் ‘எனக்கு திரு குர்ஆனை ஒரேவிதமாக ஓதுமாறே இறை கட்டளை அறிவிக்கப் பட்டது. அப்பொழுது நான் அல்லாஹ்வை நோக்கி என்னுடைய உம்மத்து (இனம்)களுக்கு அல்குர்ஆனை ஓதுவதை எளிதாக்கித்

தருவாயாக என வேண்டிக் கொண்டேன். அதன் பின் அவ்வேண்டு கோளை ஏற்று அதனை ஓதும் முறைகளை மாற்றி ''அதனை ஏழு வகைகளில் ஓதுவீராக!'' என்று அல்லாஹ் அறிவித்தான்' என அல்ஹதீதுகளில் குறிப்பிடுகிறார்கள். எனவே அல்குர்ஆன் அறபு மொழியிலே முஸ்லிம் மக்கள் அனைவராலும் பின்பற்றப்படினும் உலகில் ஏழு வகையான உச்சரிப்பு வேறுபாடுகளுடன் ஓதப்படுவதையே 'கிறாஅத்தேழு' என ஆலிப்புலவர் இங்கு குறித்துள்ளார். இரண்டா மடியில் உள்ள தப்சீர் என்பது தப்ஸீர் என்னும் அறபுச் சொல்லாகும். இதன் பொருள் விரிவுரை என்பதாகும். சிறப்பாக தப்ஸீர் என்பது திருக்குர்ஆனின் விரிவுரைகளையே குறிப்பதாகும். மூன்றாமடியில் உள்ள 'சொனகுவு சறுபு......' என்பதில் சொல், நஹ்வு சர்பு என்னும் மூன்று சொற்கள் இடம் பெறுகின்றன. நஹ்வு, சர்பு என்னும் அறபுச் சொற்கள் முறையே சொற்புணர்ச்சி இலக்கணம் என்பவற்றைக் குறிப்பதாகும். நான்காமடியில் உள்ள இல்மு பதினாலு என்பது அருங்கலைகள் பதினான்கு எனப்பொருள்படும். எனவே மகுதூம் வல்ல அலாவுதீனை ஏற்றிப் போற்றினால் கிறாஅத் ஏழும் ஓதக்கூடிய திறமும், உயர்வான திருமறையான அல்குர் ஆனிற்கு விளக்கவுரையளிக்கும் அறிவும் அத்துடன் சொற்புணர்ச்சி இலக்கணம், சொல் லிலக்கணம், அருங்கலைகள் பதினான்கு முதலான வற்றில் நல்லறிவும் பொங்குமே எனப்புகழ்ந்து போற்றுகின்றார் ஆலிப்புலவர். கடவுள் வாழ்த்துப் பகுதியில் எல்லாம் வல்ல அல் லாஹ்வையும் அவனது கட்டளைகள் அடங்கிய அல்குர்ஆனையும் அல்லாஹ்வின் திருத்தூதர்களையும், ஒலிமார்களையும் ஏற்றிப் போற்றுவதுடன் இப்பகுதியின் இறுதியில் அமைந்த எட்டுப்பாடல் களிலேயே ஆலிப்புலவர் தமது மிகுறாசு மாலை உருப்பெற்ற காலம், அரங்கேற்றம் பற்றிய குறிப்புக்களைத் தருவதுடன் மிகுறாசு மாலை இயற்றுவதற்கு உறுதுணையாக இருந்தவர்கள் பற்றிய கருத்துக் களையும் குறித்துள்ளார்.

கடவுள் வாழ்த்துக்கு அடுத்த 'நாட்டுச் சிறப்பு' என்னும் தலைப் பில் அமைந்துள்ள பகுதி பத்தொன்பது பாடல்களைப் பெற்றுள்ளது. மிஃகுராஜ் நிகழ்வு மக்கமா நகரில் அண்ணல் நபி (சல்) அவர்கள் வீட்டிலிருக்கும் போதே நடைபெற்றது. மேலும் பாட்டுடைத் தலைவர் சார்ந்த ஊர் மக்கமா நகர் என்பதனாலேயே அந்நகரின் எழில்வளம் பற்றி எடுத்துரைக்க நாட்டுச் சிறப்பு என்ற தனிப்பகுதியை ஆலிப்புலவர் தம் மிகுறாசு மாலையில் அமைத்துள்ளார். ஆலிப்புலவர் மிகுறாசு மாலையை இயற்றுவித்த காலச் சூழலில் பிற சமயங்கள் காப்பியங்களைப் பெற்றிருந்த நிலையில் தமது இஸ்லாமிய சமயத்தி லும் ஒரு காப்பியம் இடம் பெறவேண்டும் என்ற ஆதங்கத்தின் விளை வாக பிற சமய தமிழ்க் காப்பியங்களைப் பின்பற்றி தம் மிகுறாசு

மாலைக்கும் காப்பியத் தகுதி அமையவேண்டும் என்ற நோக்கில் நாட்டுச் சிறப்பினை அமைத்தும் பாடியிருக்கலாம். மக்கமா நகரின் வளம் பாடப் புகுந்த ஆலிப்புலவரின் உள்ளத்தில் பொங்கி வழிவதோ தமிழ்த் தென்றலும் அத்தென்றல் உலாவிடும் தமிழ் நிலப்பரப்பும்தான். எனவே ஆசிரியரின் அவ்வுணர்வு எறிதணல் தெறிக்கும் கொடும் பாலையையும் குளிர்வித்துக் காட்டுகிறது நமக்கு. தமிழ் நிலப்பரப் பின் ஐவகை பாகுபாடும் மக்கமா நகரில் நிறைந்து வளமையைப் பறை சாற்றுவதாகப் பாடல்களைப் பாடியுள்ளார் ஆசிரியர்.

கொம்பு சுற்றும் பனைமரக் கூட்டம்வே
ரம்பு சுற்றிச் சுழிக்கு ளமைத்துளே
பம்ப ரங்க ளெனச்சுழல் வித்து நீள்
வெம்பு கானற் குறிஞ்சி விரைந்ததே

பாலை வந்து பரந்து பசும்புனற்
சோலை நின்ற மருதஞ் சொரிதலா
னீல வண்டுஞ் சுரும்பு நெருங்கிமா
கோல வன்னக் குருகு மலிந்ததே

வல்லை சேர்தன மங்கையர் மூழ்குநீர்
முல்லை சென்று முதுநெய்தல் வாவியிற்
செல்லச் செங்கயற் சீறிக் குதிப்பது
கல்லைச் சேர்ந்த கடலெனக் காட்டுமே

(மிகுறாசு மாலை : 28, 29, 30)

இத்தகு குறிஞ்சி, பாலை, மருதம், முல்லை, நெய்தல் வளம் வாய்ந்த மக்கமா நகரின் தெருவெங்கும் ஊசல் ஓசையும் குரவைக் கூத்தாடும் ஓசையும் பெண்கள் பாடும் அம்மானைப் பாட்டின் ஓசையும் பரவை ஓசையும் நிறைந்திருக்குமாம். தெருவின் நிலையே இவ்வாறெனில் மக்கமா நகரின் காடு, வீடு, நாடு, கோடு முதலான இடங்களின் சூழலை ஒரு பாடலில் இவ்வாறு எடுத்துரைக்கின்றார்.

காடு தோறுங் கனகப் பெரும்பயிர்
வீடு தோறும் விருந்தும் வதுவையு
நாடு தோறு நபிசல வாத்திசை
கோடு தோறுங் குயிலினங் கூவுமே

(மிகுறாசு மாலை : 35)

நபி சலவாத்து என்பது நபியின் புகழ் பாடுதல் என்பதாகும். தொடர்பாக அல்லாஹ் தன் திருமறையில் 'நிச்சயமாக அல்லாஹ்வும் அவனுடைய மலக்குகளும் நபியின்மீது ஸலவாத்துச் சொல்லுகின்றார்கள். ஆகவே விசுவாசிகளே! நீங்களும் அவர்மீது ஸலவாத்துச் சொல்லி ஸலாமும் கூறிக்கொண்டிருங்கள்' (அல்குர்ஆன் : 33 : 56)

என்று குறிப்பிடுகின்றான். நான் உங்கள் மீது அன்பு செலுத்த வேண்டுமென்றால் குர்ஆனை அதிகமாக ஓதுங்கள், அல்லாஹ் உங்கள் மீது அன்பு செலுத்த வேண்டுமென்றால் ஸலவாத்தை அதிகமாகச் சொல்லுங்கள் என அண்ணல் நபி அவர்கள் கூறியுள்ளார்கள். நபியின் புகழ் பாடுதலுக்கு அல்லாஹ்வால் இத்தகு முக்கியத்துவம் இஸ்லாத்தில் தரப்பட்டுள்ளதால் அதனைக் கருத்தில் கொண்டு, மக்கமா நகரில் உள்ள மக்கள் அனைவரும் சலவாத்துச் சொல்லுகிறார்கள் என்ற கருத்தமைவில் நாடு தோறும் நபி சலவாத்திசை கேட்பதாக ஆலிப்புலவர் குறித்துள்ளார். மக்கமா நகரின் இயற்கை எழிலையும் வளத்தையும் கூறும்போது சங்கப் பாடல்களை நினைவுறுத்தும் வண்ணம்

மாங்கனியின் செழுந்தேறன் மடைச்சாடி
வயற்கரும்பின் வந்து பாயப்
பூங்கரும்பின் கணுக்கடொறும் புதுத்தரளந்
தனையீன்று புளகித் தேகித்

தேன்கதலி யுடனிகலிச் செவ்விமுகம்
புதைத்து நிற்குஞ் செந்நெற் சீடர்
பாங்கருடன் குருபாதம் பணிவதுபோற்
றலைசாய்த்துப் பணியு நாடே

(மிகுறாசு மாலை: 42)

என நாட்டுச் சிறப்பினை எடுத்துரைக்கின்றார் ஆசிரியர். நாட்டுச் சிறப்பினை எடுத்துரைக்கும் பகுதியில் அறபுச் சொற் கலப்பு ஏனைய பிற பகுதிப்பாடல்களை ஒப்பிடும்போது வெகு குறைவாகவே உள்ளது. ஏனெனில் புலவர் மக்காநகர் சூழலை எடுத்துரைக்கக் கருதியிருப்பினும் அவர்தம் உள்ளத்தில் நிறைந்திருக்கும் தமிழகத்தின் வளமே ஆலிப் புலவரின் பாடல்களில் தலை தூக்குவதால் அவ்வுணர்வு வெளிப் பாட்டிற்கு உருவம் அளிக்கும்போது அறபுச் சொல்லாட்சி தேவையின்றி அமைந்துவிடுகிறது. ஒரு கவிஞனின் பாடுபொருளுக்கும் அவனது நடைக்கும் உள்ள நெருக்கத்தை நாட்டுச் சிறப்புப் பகுதிப் பாடல்கள் தெளிவாக உணர்த்தி நிற்கின்றன. மிகுறாசு மாலையின் ஏனைய பிற பகுதிப் பாடல்களின் உள்ளடக்கும் முழுக்க முழுக்க அறபு நாட்டுச் சூழலையும், அங்கு வாழ் மக்களையும் பற்றியதாகவே அமைவதால் அதற்கேற்ப ஆலிப்புலவரின் நடையிலும் அறபுச் சொல்லாட்சி இடம் பெற்றுவிடுகிறது. ஆனால் நாட்டுச் சிறப்புப் பகுதிப் பாடல்களில் ஆலிப்புலவர் மக்கா வளத்தையே எடுத்துரைக்க விரும்புகின்றார் என்று நாம் உணரலாமே தவிர அங்குள்ள உண்மை நிலப் பகுதிக்குத் தகுந்தவாறு அமையவில்லை என்பது தெளிவாகும்.

நாட்டுச் சிறப்புப் பகுதிக்கு அடுத்த நிலையில் பொருளடக்கம் என்ற தலைப்பின் கீழ் ஐந்து அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தப் பாக்கள் இடம் பெற்றுள்ளன. இப் பகுதியில் முதற் பாடலில்,

அந்நகர் தன்னில் வாழு மகுமது நபிக்குச் சொர்க்க
முன்னிகழ் மிகுறா ஜேணி முழுமையு மிறக்கும் வாறும்......
(மிகுறாசு மாலை : 43)

எனத் துவங்குவதின் மூலம் பொருளடக்கப் பகுதியையும் அதற்கு முன் அமைந்த மக்கா நகர் வளம் பாடும் நாட்டுச் சிறப்புப் பகுதியையும் ஆசிரியர் இணைத்துக் காட்டுகின்றார். இப்பகுதியில் இனி என்னென்ன செய்திகள் இடம் பெறப் போகின்றது என்பதையே ஆலிப் புலவர் தொகுத்துச் சுருக்கித் தருகின்றார். இதனை பொருளடக்கப் பகுதியின் இறுதிப் பாடலில்

..............................
முன்பினா லுதித்த வெங்கண் முகம்மது மிகுறா ஜேறு
மின்பமாங் கதைத்திரட்டு வாறினை யியம்பக் கேண்மோ
(மிகுறாசு மாலை : 47)

என்று உரைத்திருப்பதிலிருந்து உண்மையான மிஃராஜ் வரலாற்று நிகழ்வினை எடுத்துரைக்கும் பாடற் செய்திகள் 48-வது பாடலிலேயே துவக்கம் பெறுவதை அறியலாம். மிகுறாசு மாலையில் முதல் 47 பாடல்கள் தவிர்த்து பின் வரும் 697 பாடல்களின் திரண்ட கருத்தினை சுருக்கி ஐந்து பாடல்களில் 20 வரிகளில் ஆலிப்புலவர் பொருளடக்கம் என்ற தலைப்பின் கீழ் அமைத்துள்ளது சிறப்பிற்குரியதாகும். சில காப்பியங்களில் வருபொருள் உரைத்தியல் பாயிரம் என அமைந்து விடுகிறது. இத்தகு அமைப்பு முறையை ஏனைய பிற இஸ்லாமிய தமிழிலக்கியங்களில் காணுதல் அரிதாகும். எனவே பொருளடக்கம் என்ற தனித்த தலைப்பமைத்துப் பாடும் பாடல் உத்திக்கு வழிகாட்டியாக அமைந்தவர் ஆலிப்புலவர் என்றே கூறலாம். இவ்வமைப்பு முறை நூலின் திரண்ட கருத்தினை வெகுசில வரிகளில் படிப்போர் புரிந்துகொள்ள வழிவகை செய்கிறது.

பொருளடக்கத்தில் அடங்கியிருக்கும் மிஃராஜ் நிகழ்வுகளின் முறையான துவக்கமான 48-வது பாடல் முதல் 57-வது பாடல் முடிய உள்ள 10 செய்யுட்கள் நூல் என்னும் தலைப்பினைப் பெற்றுள்ளன. அண்ணல் நபி (சல்) அவர்களின் விண்ணேற்றப் பயணம் தொடங்க இருக்கும் சூழல் இப்பத்து பாடல்களில் விவரிக்கப்படுகிறது. விண்ணேற்றப் பயணத்தின் முதற்கட்டம் வானவர்கோன் ஜிப்றயீல் (அலை) அவர்கள் நபிகள் நாதரிடம் மிஃராஜ் அழைப்பை சமர்ப்பித்தலாகும். இத்தகு அழைப்பை இறை கட்டளைப்படி ஜிப்றயீல் (அலை)

அண்ணலாருக்கு அறிவிக்கும்போது நாயகம் அவர்கள் மக்காவிலுள்ள சபா மறுவா என்னும் மலைகளுக்கிடையே வாசம் செய்து வந்த செய்தி யுடனேயே நூல் என்னும் தலைப்பினை ஆலிப்புலவர் தொடங்கு கின்றார்.

தன்னைநிக ரற்றவனு யர்த்துநபி தஞ்சிறிய
  தாதையரப் பாசு மகனார்
மின்னுபுகழ் சேரபுதுல் லாவெனுநல் வேதியர்
  விளம்பினர் மிகப்பி ரியமாய்

மன்னர்நபி சொன்னதென வன்செறி சபாமறுவா
  வட்டமலை ரண்டி னிடைபோ
யின்னிலகு கண்டுயிலு மப்பொழுது கங்குன்மின்
  னிடிபல மிகுந்த விரவே

(மிகுறாசு மாலை: 48)

ஹிஜ்றி வரலாறு தொடக்கம் பெறுவதற்கு முன் மக்காவில் பல்வேறு இன்னல்களையும் நாயகம் அவர்கள் எதிர்கொள்ள வேண் டியதாயிற்று. பெருமானார் நபி (சல்) அவர்களை அழித்துவிட எண்ணி கொலை முயற்சியில் குறைஷிகள் பெரும் ஆர்வம் காட்டிய சூழலி லேயே நபிகளார் அவர்கள் மக்கா நகரிலிருந்து அப்பால் உள்ள மலைகளில் வசிக்க வேண்டியதாயிற்று. இத்தருணத்திலேயே விண் ணேற்றப் பயணத்திற்குரிய இறை கட்டளை அறிவிக்கப்பட்டு செய லாக்கப்பட்டது. இத் தருணத்தில் நபிகளார் சபா மறுவா என்னும் குன்றுகளில் வசித்து வந்ததாக ஆலிப்புலவர் குறித்துள்ளார். சபா, மறுவா என்னும் இரண்டு குன்றுகளும் மக்காவிலுள்ள கஅபாவிற்கு அருகில் அமைந்துள்ளன. இக்குன்றுகள் இஸ்லாமிய வரலாற்றில் முக்கிய இடம் பெறுகின்றன. இவ்விரு குன்றுகளும் சுவர்க்கத்தின் இரு தலைவாயில்களாகக் கருதப்படுவதால் இங்கிருந்து அல்லாஹ் விடத்து வேண்டப்படும் முறையீடுகள் ஏற்றுக்கொள்ளப்படும். இம் மலைகள் பற்றி அல்குர்ஆன் 'மெய்யாகவே ஸஃபா மலையும் மர்வா மலையும் அல்லாஹ்வின் மார்க்க அடையாளங்களில்' உள்ளவையா யிருக்கின்றன. ஆகையால் எவர்கள் 'க அபா' என்னும் அவ்வீட்டை 'ஹஜ்ஜை' அல்லது உம்றா செய்தார்களோ அவர்கள் அவ்விரண்டை யும் சுற்றிவருவது குற்றமல்ல......' (2 : 158) எனக் குறிப்பிடுகிறது. இஸ்லாமியர்களின் புனிதப் பயணமான ஹஜ்ஜை மேற்கொள்வோர் சபா, மர்வா என்னும் இவ்விரண்டு மலைகளுக்குமிடையே ஏழு தடவைகள் தொங்கோட்டம் ஓடுவது கட்டாயக் கடமையாகும். ஏனெனில் குழந்தை இஸ்மாயீல் (அலை) அவர்களுக்காகத் தண்ணீர் தேடி இவ்விரண்டு குன்றுகளுக்கிடையே ஹாஜறா அம்மையார் ஏழு தடவைகள் ஓடினார்கள். அப்பொழுது ஹாஜறா அம்மையார் தெய்வ

பிரார்த்தனை அல்லாஹ்வால் ஏற்றுக்கொள்ளப்பட்டு என்றும் வற்றாத நீருற்றினையுடைய ஸம்ஸம் கிணறு தோன்றியது. இக்கிணறு இன்னும் கஃபாவிற்கருகில் காட்சியளிக்கிறது. எனவே அதன் நினைவாகவே முஸ்லிம் மக்களால் சபா, மறுவா குன்றுகளுக்கிடையே ஏழு தடவைகள் தொங்கோட்டம் ஓடவேண்டும் என்பது கட்டாயக் கடமைகளுள் ஒன்றாகக் கடைப்பிடிக்கப்படுகிறது. இதனை முஸ் லிம்கள் ஸயீ எனக் குறிப்பர். இத்தகு முக்கியத்துவம் வாய்ந்த சபா, மறுவா மலைகளுக்கிடையே அண்ணல் பெருமானார் (சல்) அவர்கள் மக்கா நகர் குறைஷிகளால் புறக்கணிக்கப்பட்டு தங்கி இருக்கும் தறுவாயில் ஓர் இரவு வானவர் ஜிப்றயீல் (அலை) அவர்கள் விண் ணேற்றப் பயணம் குறித்த அல்லாஹ்வின் கட்டளையை நிறைவேற்ற வந்து தோன்றினார்கள். ஜிப்றயீல் (அலை) அவர்களின் வருகையை ஆலிப்புலவர் கால எல்கையுடன் குறிப்பிடுகின்றார்.

மக்கத்தி னின்றுநபி வண்மைஹிசு றத்தினுக்குத்
திக்குமதி னாவினிடை செல்லுமுன்—மிக்குடைய
நாலிரண்டு திங்க ணடக்குமுன் னேகினார்
கோலமிகு றாஜிடை கூர்ந்து. (மிகுறாசு மாலை: 55)

எனவே ஆலிப்புலவரின் கருத்துப்படி மிகுறாசு நிகழ்வு ஹிஜ்றி பயணம் துவக்கம் பெறுவதற்கு நாலிரண்டு திங்கள்களுக்கு முன்பே நிகழ்ந் திருக்கிறது. நபிகளார் மக்காவிலிருந்து மதீனம் வந்தடைந்த ஹிஜ்றத் ஆண்டிற்கு இணையான கிறித்துவ ஆண்டு அறுநூற்றி இருபத்தி ஒன்றாகும். எனவே மிகுறாசு மாலையின் உள்ளடக்கச் செய்யுளின்படி விண்ணேற்ற நிகழ்வு கிட்டத்தட்ட இதே ஆண்டில் நடைபெற்றிருக்கிறது. இக்காலத்தை குறிப்பிட்டு விட்டு ஆலிப்புலவர் நாயகத்தை விண்ணுலகுக்கு அழைத்துச் செல்ல வரும் வானவர்கள் பற்றிக் குறிப்பிடுகிறார்.

விண்ணவர்கள் கோமான் விரும்பியெம் மைக்கூட்டி
நண்ணி யிரவி னடந்தளவே—மண்ணுலகில்
வாக்காக வேகும் வழிதனிலே வானினின்று
மீக்காயீல் வந்தார் விரைந்து

மீக்காயில் தம்பிறகே விண்ணில்றூக் காயிலெனும்
வாக்கா மலக்குபு றாக்கதனைத்—தாக்காகக்
கொண்டுவரக் கண்டேன் குதிரை வடிவதனை
விண்டுசொலக் கேளிர் விரைந்து.

(மிகுறாசு மாலை: 56, 57)

மீக்காயில் (அலை) என்பது சிரியா மொழிச் சொல்லாகும். பத்து முக்கியமான வானவர்களுள் ஒருவரான இவர் வானில் இரண்டாவது பாதுகாவலர் ஆவர். யூதர்களும், கிறித்துவர்களும் மீக்காயிலை

மனித இனத்தின் பாதுகாவலாகக் கருதுகின்றனர். இவ் வானவரின் பணி படைப்பினங்களுக்கு உணவளித்தல், கருவிலுள்ள குழந்தை களுக்கு உருவமளித்தல், மழை பொழிவித்தல் முதலான இன்னபிற உயிரினங்களுக்கு உதவும் வேலையாகும். அல்குர்ஆனில் ஒரே ஒரு இடத்தில் அல்லாஹ் மீக்காயில்பற்றி இவ்வாறு குறிப்பிடுகின்றான்: 'உங்களில் எவரேனும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய மலக்குகளுக் கும், அவனுடைய தூதர்களுக்கும், ஜிப்றயீலுக்கும், மீக்காயிலுக்கும் விரோதியாகி அவர்களை நிராகரித்துவிட்டால் அந்நிராகரிப் போருக்கு நிச்சயமாக அல்லாஹ்வும் விரோதியாகவே இருப்பான். (அல்குர்ஆன் 2 : 98) இத்தகு சிறப்புப் பொருந்திய வானவர்களான ஜிப்றயீல் (அலை), மீக்காயீல் (அலை) றூக்காயில் (அலை) ஆகியோர் விண்ணேற்றப் பயணத்திற்காக நாயகம் (சல்) அவர்களை அழைத்துச் செல்ல புறாக் என்னும் குதிரையுடன் வந்து அழைப்பதாக ஆலிப் புலவர் குறித்துள்ளார். இச்செய்தியுடன் பொருளடக்கம் பகுதி நிறைவு பெறுகிறது.

இதன் பின் புறாக்கியல் என்னும் பகுதியில் அமைந்த பாடல்களில் வானவர்கள் கொண்டுவந்த விண்ணேற்றப் பயணத்திற்கான புறாக் என்னும் புரவியின் பல்வேறு இயல்புகள் விவரித்துக் கூறப்படுகின்றன. புறாக் என்னும் அறபுச்சொல்லின் நேரடியான பொருள் மின் என்ப தாகும். இச்சொல் 'பர்க்' என்னும் வேர்ச் சொல்லின் அடியாகத் தோன்றியதாகும். இதன் தோற்றத்தை வர்ணிக்கும்போது 'கழுதையி னுயர்கோ வேறு கழுதையிற் பணிந்து தோற்றும்' எனவும் 'மாட்டின் வால் போல வாலு மதகரிக்கால்போற் காலும்' எனவும், மானிடர் வடிவைப்போல வகுத்தவன் படைப்புக்குள்ளே யானதோர் படைப்பு மில்லை' எனவும் பல்வேறாக ஆலிப்புலவர் கூறுகின்றார். இத்தகு சிறப்பம்சம் பெற்ற புறாக்கின் நிறம் வெண்ணிறமாகவும் மற்றும் அதன்

செவிதான்மர கதநீள்விழி திகழ்தாரகை யொளிபோல்
நவமாமணி யதனால்வெரி நன்னெஞ்சு கழுத்தே
(மிகுறாசு மாலை : 66)

இப்புரவி விடும் மூச்சோ 'வெம்பரி விடுமூச்சது மனுமூச்சிடு வதுபோல்' எனச் சுட்டுகிறார் ஆசிரியர். இத்தகு அற்புத பிராணியின் மீது வந்தமர்ந்து தம் பயணத்தை தொடரும்படி ஜிப்றயீல் (அலை) அவர்கள் பெருமானார் நாயகம் (சல்) அவர்களிடம் கூறினார்கள்.

முன்னிற்பரி கொடுவந்தவர் முகில்வானறூக் காயி
லுன்னிப்பிற கேநின்றன ருடையோன்ஜிபு ரீல் தாம்
வன்னித்த படைப்புக்களில் வரிசைப்பெறு பவரே
மின்னத்துள நபியேபரி மேற்கொண்டிடு மென்றார்
(மிகுறாசு மாலை : 71)

ஜிப்றயீல் (அலை) அவர்களின் அழைப்பை ஏற்று புறாக் வாகனத்தில் நாயகம் (சல்) அவர்கள் ஏறி அமர்ந்தவுடன் தம் பயணத்தை தொடங்கும்முன் புறாக் வெருண்டு பாய இதனைக் கண்ட ஜிப்றயீல் (அலை) அவர்கள்,

மேலிடை தரிக்குமுன் வெருண்டவகை யேதால்
ஆலநபி தம்மையரி யோனருளின் வண்ணங்
கோலமுட னேசுமந்து கொண்டுநட வாகின்
மேலவன் வெறுப்பனென மெய்ந்நடுங்கி நின்ற

(மிகுறாசு மாலை : 73)

எனவுரைக்க அதற்கு அப்புறாக்கானது கியாமத்து நாளில் (இறுதி நாளில்) இறைவனிடத்து தனக்காக நாயகம் (சல்) அவர்கள் பரிந்துரைக்க வேண்டும் என கேட்டுக்கொண்டது. அம்மொழியைக் கேட்ட நாயகம் (சல்) அவர்கள் அப்புரவியின் விருப்பத்திற்கிசைவினைத் தெரிவிக்க அதனை புறாக்கிடத்து பின்வருமாறு வானவர் கோன் ஜிப்றயீல் (அலை) மொழிந்தார்.

கந்துகம தாகிய புறாக்கதனை வானவர்கோன்
 கைய மர்த்தி யேது மொழிவார்
முந்தபுதுல் லாமகன் முகம்மதிவ ராதமகன்
 முன்னவர்பின் னோரி னுயர்ந்தோர்
பிந்தவுநன் முத்திரை பெறுந்நபி நலத்தோடு
 பெலத்தநபிப் பட்ட மிறங்கும்
அந்தநல தூதர்களி லேதலைய ராதலினல்
 ஆதிமுன்மன் றாடுவர் நமையே

(மிகுறாசு மாலை : 80)

ஆதிபிதா ஆதம் நபி (அலை) அவர்கள் முதற்கொண்டு ஈசா ரூஹுல்லா (அலை) அவர்கள் ஈறாக உள்ள அனைத்து நபி மார்களுள் இஸ்லாம் மார்க்கத்தை இவ்வுலகில் பூரணமாக்கியது அண்ணலெம் பெருமானார் முஹம்மது (சல்) அவர்களே ஆவார்கள். அதனால் ஆலிப்புலவர், நாயகம் (சல்) அவர்களை இறைத்தூதர்களிலேயே தலையாயர் எனக் குறிப்பிட்டுள்ளார். அத்துடன் இறை தூதர்களுள் தங்களுடைய உம்மத் (தம்மைப் பின்பற்றுபவர்) தினரின் நன்மையை நினைவுகூர்ந்து அல்லாஹ்விடத்து சபாஅத்து (மன்றாட்டம்) செய்பவரும் நபி (சல்) அவர்களே ஆகும். இதனையே 'ஆதிமுன் மன்றாடுவர்' எனச் சுட்டியுள்ளார் ஆசிரியர். இவ்வாறு நாயகம் (சல்) அவர்களின் கருணையையும் பெருமையையும் ஜிப்றயீல் (அலை) அவர்கள் புறாக்கிற்கு எடுத்துரைத்த பின்னர் அப்புரவியானது தன் வெருண்ட நிலையைப் போக்கி மெத்தவும் பணிவுடன் நபி (சல்)

அவர்களைத் தன் முதுகில் இருத்திக்கொண்டு அல்லாஹ்வின் கட்டளைப்படி பைத்துல் முகத்தீசை நோக்கிப் புறப்பட்டது.

புனித மக்காவிலிருந்து துவங்கும் அல்இஸ்றாப் பயணம், பைத்துல் முகத்தீஸைச் சென்றடைந்து அங்கு பெருமானார் நபி (சல்) அவர்கள் இறை வழிபாட்டினை நிகழ்த்தும் நிகழ்வுகளும், அல்இஸ்றாப் பயணத்தின்போது மக்கமா நகருக்கும் பைத்துல் முகத்தீஸிற்கும் இடைப்பட்ட நிலையில் நாயகம் அவர்கள் எதிர்கொள்ளும் நிகழ்ச்சிகளும் பைத்துல் முகத்தீசியல் என்னும் தலைப்பின் கீழ் விரிவாக ஆலிப் புலவரால் விவரிக்கப்படுகின்றன. பைத்துல் முகத்திஸ் என்பது அறபு மொழியில் 'பைத்துல் முகத்தஸ்' (Baitul-Muqadas) என்றழைக்கப்படுகிறது. இதன் பொருள் 'புனித இல்லம்' என்பதாகும். இப்பெயர் இன்று பலஸ்தீன தேசத்தில் உள்ள ஜெருசலத்தைக் குறிப்பதாகும். பைத்துல் முகத்திஸ் என்பது ஜெருசலத்தில் உள்ள புனிதப் பள்ளியைக் குறிக்கும் சிறப்புப் பெயராகும். இப்பள்ளியின் சிறப்பால் அப்பள்ளி சார்ந்த ஜெருசலமும் பைத்துல் முகத்திஸ் என்றே அழைக்கப்பட்டது. இஸ்லாமிய வரலாற்றில் பைத்துல் முகத்திஸ் முக்கிய சிறப்பிடம் பெறுகிறது. இங்குதான் சுலைமான் (அலை) அவர்கள் நிறுவிய பள்ளி வாசல் உள்ளது. இதனை ஹீப்ரு மொழியில் 'பெத் ஹம்மிக் தஷ்' என்றழைப்பர். இதுவே பின் அறபில் பைத்துல் முகத்தஸ் என்றழைக்கப்பட்டது. பெருமானார் நாயகம் (சல்) அவர்கள் நபிப் பட்டம் பெற்று அல்லாஹுத் தஆலாவைத் தொழ ஆரம்பித்த நாள் முதல் பலஸ்தீன தேசத்தில் உள்ள பைத்துல் முகத்தஸ் என்னும் இவ்வாலயத்தையே கிபுலா (முன்னோக்கும் ஒன்று. பொதுவாக கிப்லா என்பது தொழும் திசைக்கே கூறப்படுகிறது) வாகக் கொண்டு தொழுது வந்தார்கள். நபி (சல்) அவர்கள் மதீன நகரம் வந்தபின்கூட அப்படியே பைத்துல் முகத்திஸ் ஆலயத்தை நோக்கியே தொழுது வந்தார்கள். காரணம் அதுவரையில் கருபத்துல்லாஹ்வை முன்னிலையாக்கித் தொழும்படியான அல்லாஹ்வின் கட்டளை பிறப்பிக்கப்படவில்லை. நாயகம் (சல்) அவர்கள் மதீனம் வந்தடைந்த இரண்டாமாண்டு ஷஃபான் மாதம் (எட்டாவது இஸ்லாமிய மாதம்) பதினைந்தாம் தேதி செவ்வாய்கிழமை லுகர் வேளையிலேயே இறைவனின் கிப்லா மாற்றம் பற்றிய கட்டளை பிறப்பிக்கப்பட்டது. ஆக, ஹிஜ்றி வரலாறு துவங்கி இரண்டு ஆண்டுகள் எட்டு மாதம் வரையிலும் நபிகளார் (சல்) அவர்களும் அவர் வழி நின்ற முஸ்லிம்களும் பைத்துல் முகத்திஸ் ஆலயத்தை நோக்கியே அல்லாஹ்வை தொழுது வந்தனர். மிஃறாஜ் நிகழ்ச்சியும் கிப்லா மாற்றம் பற்றி அறிவிப்பு வருவதற்கு முன்பேயே நடைபெற்றதால் முறையான விண்ணேற்றம் தொடங்கும் முன்பு அண்ணல் நபி (சல்) அவர்களின் தொழுகையை நிறைவு செய்யும் பொருட்டே ஜிப்றயீல் (அலை) அவர்கள் நாயகம் (சல்) அவர்களை பைத்துல்

முகத்திஸிற்கு அழைத்துச் சென்றார்கள். இன்றும் முஸ்லிம்களுக்கு மக்கா, மதீன நகர்களுக்கு அடுத்தபடியாக புனித நகரமாக பைத்துல் முகத்திஸ் விளங்குகிறது. இத்தகு முக்கியத்துவம் வாய்ந்த பைத்துல் முகத்திஸை சென்றடைந்து இறைவழிபாடு நடாத்தும் முன்னர் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு பல செய்திகளை ஜிப்றயீல் (அலை) அவர்கள் உணர்த்துகின்றார்கள். பைத்துல் முகத்திஸிற்குச் செல்லும் வழியில் எதிர்ப்பட்ட தூர் சீனாய் மலையினைக் கண்டநபிகளார் அவர்கள் ஜிப்றயீல் (அலை) அவர்களிடம் அதுப்பற்றி வினவ அதற்கு வானவர் கோன் பதிலளிக்கின்றார்கள்.

மேரிதி யாதஃதே சொலு வீரென விண்ணவ ரோதினர்மா
தூரிசி னாமலை யாமிது மூசா தொடர்ந்துமல் லாவுடனே
வீரிய மாய்வச னித்தது மிம்மலை மீதினி லேதவுறாத்
தேரருள் வேத மிறங்கிய தும்மிது தன்னிடை யென்றனரே
(மிகுறாசு மாலை : 86)

மூசா (அலை) அவர்கள் பனூ இஸ்ராயீல் மக்களிடையே தோன்றிய இறைத்தூதராவார். றசூலுன் கரீமுன் (கண்ணிய மிக்க தூதுவர்) என்றழைக்கப்படும் இவர்கள் இறைவனுடன் உரையாடியதன் காரணமாக 'கலீமுல்லாஹ்' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டார்கள். எகிப்து தேசத்தில் தோன்றிய மூசா (அலை) அவர்கள் அல்லாஹ்வின் ஆணைப்படி அன்று எகிப்தில் இருந்த உருவ வழிபாட்டினை எதிர்த்து ஒன்றே இறை என்ற எண்ணத்தை மக்கள் மனத்தில் ஏற்படுத்தினார்கள். இதே போல் சிரியா நாட்டிலும் உருவ வழிபாட்டினைப் போக்க அரும்பாடு பட்டார்கள். இறைவன் வழிப்படி தூர்ஸினாய் சென்று இறை வழிபாட்டில் நிலைத்திருந்தபோது அங்குள்ள மலையில் அல்லாஹ் 'தௌறாத்' என்னும் வேதத்தை ஹீப்று மொழியில் அருளினான். 'தௌறாத்' என்பதன் பொருள் 'சட்டம்' என்பதாகும். தௌறாத் வேதத்தில் அன்றைய காலச் சூழலுக்கு ஏற்ப சட்ட திட்டங்களை அல்லாஹ் அருளியிருந்தான். அல்குர்ஆனின் தோற்றத்திற்குப் பின் தௌறாத் வேதம் 'பழைய ஏற்பாடு' என முஸ்லிம்களால் வழங்கப்படுகிறது. இத்தகைய வேதத்தை அல்லாஹ், மூசா (அலை) அவர்களுக்கு அருளித்தந்த காரணத்தினால் இவ்வேதம் இறங்கிய மலைக்கு தூர்ஸினாய் என்று வழங்கப்பட்டது, சுர்யானி மொழியில் தூர் என்றால் மலை என்றும் ஸினாய் என்றால் பயனுள்ளது என்றும் பொருள்படும். அக்காலச் சூழலில் பயனுள்ள சட்டதிட்டங்களான தௌறாத் வேதம் அல்லாஹ்வால் இம்மலையில் மூஸா (அலை) அவர்களுக்கு அருளப்பட்டதால் பயனுள்ள மலை என்னும் பொருளில் தூர்ஸினாய் என்றழைக்கப்பட்டது. இம்மலை எகிப்துக்கும் பலஸ்தீனத்துக்கும் நடுவில் உள்ளது. சுமார் ஏழாயிரத்து நானூறு அடி

உயரமுள்ள தூர்ஸினாய் மலையின் உச்சியில் உள்ள ஒரு குகையிலேயே மூஸா (அலை) அவர்களின் நாற்பது நாள் நோன்பினை அல்லாஹ் ஏற்று தௌறாத் வேதத்தை அருளினான். இவ்வேதம் குறித்து பல இடங்களில் தன் திருமறையில் அல்லாஹ் குறிப்பிடுகின்றான். ஓரிடத்தில் 'தவ்றாத் (என்னும் வேதத்)தையும் நிச்சயமாக நாம் தாம் இறக்கி வைத்தோம். அதில் நேர் வழியுமிருக்கின்றது பிரகாசமுமிருக்கின்றது. (அல்லாஹ்வுக்கே) முற்றிலும் வழிபட்டு நடந்த நபிமார்கள் அதனைக்கொண்டே யூதர்களுக்கு மார்க்கக் கட்டளையிட்டு வந்தார்கள். (அவர்களுடைய பண்டிதர்களாகிய) 'ரிப்பிய்யூன்'களும், (குருமார்களாகிய) 'அஹ்பார்'களும் அல்லாஹ்வுடைய வேதத்தைக் காப்போர் என்ற முறையில் (அதனைக் கொண்டே தீர்ப்பளித்து வந்தார்கள்) அதற்குச் சாட்சிகளாகவுமிருந்தார்கள்...' (அல்குர்ஆன் 5 : 44) என அல்லாஹ் குறிப்பிடுகிறான். இத்தகு முக்கியத்துவம் பெற்ற தௌறாத் வேதத்தைப் பற்றியும் அது வந்து இறங்கிய தூர்ஸினாய் மலையைப்பற்றியும், வேதம் அருளப்பட்ட மூசா (அலை) அவர்கள் பற்றியுமே ஆலிப்புலவர் மேற்சொன்ன செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். தூர்ஸினாய் மலையின்கண்ணே உள்ள ஒரு மரத்தில்தான் அல்லாஹ் அருட்பிழம்பாகத் தோற்றந்தந்து மூஸா (அலை) அவர்களுக்கு தௌறாத் வேதத்தை அருளினான். அச்செய்தியையும் ஜிப்றயீல் (அலை) அவர்களுடைய கூற்றின் மூலமாகவே ஆலிப்புலவர் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

> துரிசினா மலையின் கண்ணே சொற்புகழ் மூசா தம்மைப்
> பெரியநா யகன ழைத்துப் பேசினா னிதழ்நா வின்றி
> யரியநா வலர்கள் போற்று மகுமது நபியைத் துய்ய
> வரிசையா லரிய வேழாம் வானின்மே லழைத்து மாதே

(மிகுறாசு மாலை : 87)

தூரிஸினாய் மலையினைக் கடந்து சென்றபோது தங்களுக்கு எதிர்பட்ட வாசலினை நாயகம் (சல்) அவர்கள் கண்டார்கள். அவ்விடத்திலே உடனடியாக தொழுகை நடத்தும்படி ஜிப்றயீல் (அலை) அவர்கள் தெரிவித்ததாக ஆலிப்புலவர் குறிப்பிட்டுள்ளார்.

> அந்தம காமலை யைப்புற மிட்டுற வப்புற மாகையிலே
> வந்தொரு வாசல் தெரிந்தது வாமது மையிரு ளாய் வனமாய்ச்
> சிந்திய முட்பல சேரிட மாமதி லேஜிபு ரீலெமைநீர்
> சந்தப மின்றியிரண்டுறக் காத்திங்ஙன்றான்றொழு மென்றனரே

(மிகுறாசு மாலை : 92)

இரண்டு றக்காஅத் என்பது தொழுகையின்போது நிகழ்த்தப்படும் செயலினை (தக்பீர்கட்டி நின்று ஓத வேண்டியவற்றை ஓதி ருக்கூவு செய்து அப்பால் இரண்டு முறை சுஜூது செய்தலைக் கொண்டது)

குறிப்பதாகும். இத்தகு தொழுகையை நபி (சல்) அவர்கள் ஜிப்றயீல் (அலை) அவர்களின் கூற்றுப்படி நிறைவேற்றியபின் அவ்விடம் யாது என வினாவுகின்றார்கள்.

வணங்கிப்பு றாக்கினிலேறிய போது முகம்மத னாரழகே
ரிணங்கிய வானவ ரேசொலு மித்தல மெத்தல மோவெனவே
மணங்கொள் சடங்க ளெழுப்பிய ஈசாபிறந்திட மென்றனர்பின்
மணங்கொண் முகம்மத ரேகின ரங்ஙன் வலத்தொரு சத்தமதே
(மிகுறாசு மாலை : 93)

இப்பாடலில் குறிக்கப்பட்டிருக்கும் ஈசா (அலை) அவர்கள் அல்லாஹ்வால் 'இஞ்சீல்' என்னும் வேதம் அருளப்பட்ட இறைத்தூதராகும். அன்னை மர்யம் அவர்களின் புதல்வராகப் பிறந்த ஈசா (அலை) அவர்கள் பைத்துல் முகத்திஸில் நிலவிய உருவ வழிபாட்டுக் கொள்கையை மாற்றியமைத்து உருவமற்ற இறைவழிபாட்டினைப் போதித்தவராவார்கள். மூசா நபியவர்களுக்கு அடுத்தபடியாக அல்லாஹ் ஈசா (அலை) அவர்களுக்கே இன்ஜீல் என்னும் வேதத்தை இறக்கினான். இதனை திருமறை 'மர்யமுடைய மகன் ஈஸாவே! உம்மீதும் உம் தாய்மீதும் (நான் புரிந்து) உள்ள என்னுடைய அருளை நீர் நினைத்துப்பாரும்...இன்ஜீலையும் நான் உமக்கு கற்பித்ததையும் நினைத்துப் பாரும்' (5 : 110) என வசனிக்கின்றது. அல்லாஹ் தன்னுடைய 'ஆகுக' என்ற சொல்லைக் கொண்டே மர்யமுடைய புதல்வராக ஈசா (அலை) அவர்களை இவ்வுகில் பிறக்கச் செய்தான் இதனை அல்லாஹ் தன் அல்குர்ஆனில் இவ்வாறு கூறுகின்றான். ''மர்யமே, நிச்சயமாக அல்லாஹ் தன்னுடைய (ஆகுக என்ற) ஒரு வார்த்தையைக் கொண்டு உனக்கு (ஒரு மகவை அளிக்க) நன்மாராயங் கூறுகின்றான். அதன் பெயர் 'மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹ்' என்பதாகும். இவர் இம்மை மறுமையில் மிக்க கப்பீரமானவராகவும் (இறைவனுக்கு) மிக்க நெருங்கியவர்களில் ஒருவராகவும் இருப்பார்'' (3 : 45) இத்தகு சிறப்புப் பெற்ற ஈசா (அலை) அவர்களுக்கு அருளப்பெற்ற வேதமே இன்ஜீல் என அழைக்கப்படுகிறது. இச் சொல் அல்குர்ஆனில் பன்னிரண்டு இடங்களில் ஆளப்பட்டுள்ளது. இன்ஜீல் வேதம் முதல் முறையாக அல்லாஹ்வால் சிரிய மொழியில் அருளப்பெற்றது. அதன் பின் பதினேழு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டது. (ஆனால் ஸஹீஹுல் புகாரியில் இன்ஜீல் வேதம் ஹீப்ரு மொழியில் முதன் முதலில் அருளப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.) இவ் வேதம் ரமலான் மாதம் (ஒன்பதாவது இஸ்லாமிய மாதம்) 13.ந் தேதி அருளப்பட்டதென்று வஹப் இப்ன் முனப்பிஹ் (Wahab ibn Munabbih) ஷமஹ்சரி (Zamak shari) ஆகியோர் குறிப்பிட்டுள்ளனர். இவ்வேதத்தில் இறைவன் காட்டும் நெறி முறைகளும், அக்காலத்திற்கேற்ற சட்ட திட்டங்களும் அடங்கியிருந்தன. இத்தகு சிறப்புப் பெற்ற வேதத்தை

அருளப்பெற்ற ஈசா (அலை) அவர்கள் பிறந்த இடத்திலேயே பெருமானார் நாயகம் (சல்) அவர்கள் தொழுகை நடத்தியதாக ஆலிப்புலவர் குறிப்பிட்டுள்ளார். இவ்விடத்தில் ஜிப்றயீல் (அலை) அவர்களுடன் சேர்ந்து தொழுகை நடாத்தியபின் நபி (சல்) அவர்கள் பல்வேறு நிகழ்வுகளையும் எதிர்கொண்டபின் வானவர்கோன் ஜிப்றயீல் (அலை) அவர்களுடன் சேர்ந்து மீண்டும் தம் அல்இஸ்றாப் பயணத்தை தொடர்கின்றார்கள்.

பைத்துல் முகத்தீஸை சென்றடைந்த பின் அங்குள்ள அழகுமிகு பள்ளியின் தூணில் துளை செய்து புறாக்கினைக் கட்டுகின்றார்கள். அங்கே பைத்துல் முகத்திஸில் ஆதிபிதா ஆதம்நபி முதற்கொண்டு ஈசா ரூஹுல்லா ஈறாக உள்ள ஒரு லட்சத்து இருபத்தி நாலாயிரம் நபிமார்களும் ஒருங்கிணைந்து நின்று அண்ட சராசரங்களை எவர் பொருட்டால் படைக்கப்பட்டு அவை அழிந்துவிடாமல் பாதுகாக்கப்பட்டு பராமரிக்கப்பட்டு வருகின்றதோ அந்தக் காரண நபியுல்லா (சல்) அவர்களைத் தரிசிக்க காத்திருந்தனர்.

அவ்வாய லோடும் பைத்துல் முகத்தீ சழகுமிகுஞ்
செவ்வான பள்ளித் திருவாய லாமதிற் சென்றுமதிற்
றவ்வாம லங்ங னகத்தா கவிபுதர் தங்களின் கோன்
சவ்வான தூணைக் கைவிர லாற்றமர் தானிட்டரோ

ஏறிய வாசியைத் தூண்டுளை யிற்கட்டி யின்சொல்விண்ணோர்
மீறிய பாங்கு சொலியெமைக் கூட்டி மிகுந்ததவத்
தீறிய பள்ளியி னுட்சென்ற போதங் கிலட்சமொடுங்
கூறு மிருபத்து நாலா யிரநபி கூடியுற்றார்

(மிகுறாசு மாலை : 111, 112)

ஆலிப்புலவர் மேற்குறித்த பாடல்களை அரங்கேற்றம் செய்விக்கும் போதே அண்ணல் நபி (சல்) அவர்கள் அருட்பிழம்பாக ஆலிப்புலவருக்குக் காட்சியளித்ததாக மிகுறாசு மாலையின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ள உரை நடைப்பகுதி கூறுகிறது. உலகம் தோன்றியதிலிருந்து தான் ஒருவன், உருவமற்றவன் தன்னையே வணங்க வேண்டுமென்பதை மக்களுக்கு எடுத்துக்கூறி நெறிப்படுத்துவதற்காக அல்லாஹ் இவ்வுலகிற்கு ஒரு லட்சத்து இருபத்தி நாலாயிரம் நபிமார்களை அனுப்பி வைத்துள்ளான் என்பதை அல்ஹதீது தெரிவிக்கிறது. இத்தனை நபிமார்களுள் உலகில் தோன்றிய முதல் நபி ஆதம் (அலை) அவர்களாகும். இறுதி நபி, அருட் கடாட்சங்களனைத்திற்கும் முழுப் பொருளாகத் திகழ்ந்த அஹமது முஸ்தபா முஹம்மது சல்லல்லாகு அலைஹிவசல்லம் ஆகும். இந் நபிமார்களின் ஷரீஅத் (மதக்கட்டளைகள்) வெவ்வேறாக இருந்தபோதிலும் அவர்களின் ஈமான் (இறை நம்பிக்கை) ஒன்றாகவே அமைந்திருந்தது. அல்குர்ஆனில் இருபத்தி

ஐந்து நபிமார்களின் பெயர்களே குறிக்கப்பட்டுள்ளது. இறுதி நபி யான நாயகம் (சல்) அவர்களைத்தரிசிக்கும் பொருட்டே ஏனையோர் குழுமி இருந்ததாக ஆலிப்புலவர் தம் மிகுறாசு மலையில் குறிப்பிட்டுள் ளார். இங்ஙனம் கூடியிருந்த நபிமார்கள் அனைவரும் ஒருவர் பின் ஒருவராக வந்து நபி (சல்) அவர்களுக்கு சலாமுரைக்கின்றார்கள்.

ஆத முதலொடுக் கம்மிற சூலிடை யாகவுள்ள
போத மிகுநபி மார்க்கெமைக் காட்டினன் போற்றும் வல்லோன்
சீத மிகுந்திடு பள்ளியி லேயிவர் சேர்ந்தரிய
நாத மிகுந்த சலாமுரைத் தாரென்மு னாடி வந்தே

(மிகுறாசு மாலை : 113)

இத்தருவாயில் நபிமார்களின் சலாமை ஏற்றுப் பதிலுரைத்தபின் நாயகமவர்கள் தம் உம்மத்தோர்களுக்குக் கிருபை உண்டாகவென துவா இறஞ்சினார்கள். பின் அனைத்து நபிமார்களுக்கும் முன் நின்று இமாமாக (தொழுகை நடத்துவார்) உம்மி நபியாகிய நாயகம் (சல்) அவர்கள் இரண்டு ரக்காஅத்துக்களை தொழ வைத்தார்கள். ஒவ்வொரு நபியும் பல்வேறாக அல்லாஹ்வுக்கு புகழாரம் சூட்டி மகிழ்ந்தனர். இப்பாடல்கள் அந்தந்த நபிமார்களின் கூற்றாகவே மிகுறாசு மாலையில் இடம் பெற்றுள்ளன. ஆதம் அலை ஹிஸ்ஸலாம் அவர்கள் கூறும்போது 'தனது நேரடிப்பார்வையில் தன்னைப் படைத்தும் தனக்கு அறிவுப் பெருந்திறனை ஈந்ததுடன் அல்லாஹ் தன் மேன்மையினால் தான் படைத்த அமரர்களான மலக்குகளை எனக்கு (ஆதம் (அலை) அவர்களுக்கு) மரியாதை செய்யும்படி செய்தும் அத் துடன் தமக்கு சுவர்க்க பெரும் பதவியளித்து தாம் செய்த பிழைகளை பொறுத்தவன் அல்லாஹ்' என்று கூறுகிறார்கள். மேலும் அடுத்த செய்யுளில்,

என்னுடைய தெளபாவை யேற்றுக் கபுலாக்கி
மன்னுஞ் சுவர்க்கமின் வாழ்வும் பரகதியும்
பின்னு மெனக்களித்தான் பகரும் வடிவுருவ
மின்னுதென்னா நாயனவற் கேயெப் புகழ்ச்சியுமே

(மிகுறாசு மாலை : 125)

என உரைக்கின்றார்கள். தெளபா என்பது மீளுதல் என்று பொருள் படும். ஒருவன் ஒரு பாவத்தை செய்வானாகில் அவன் அதன் பின் அவன் செய்த பாவத்தை குறித்து மனம் வருந்தி அதனை மீண்டும் செய்வதில்லை என்ற உறுதியுடன் அப்பாவத்திலிருந்து நீங்கி இறைவ னிடம் மன்னிப்புக் கேட்பானாகில் அவனுடைய பாவங்கள் அல்லாஹ் வால் மன்னிக்கப்பட்டு அவனுக்கு பாவத்திலிருந்து மீட்சியளிக்கப் படும் என்பது இஸ்லாமிய நெறியாகும். இந்நெறியைக் குறிப்பதே தெளபா என்பதாகும். தெளபா பற்றி அல்லாஹ் 'எவர்கள் தங்கள்

மடமையினால் பாபத்தைச் செய்து அதனைப் பாபமென அறிந்து பின்னர், பச்சாத்தாபப்பட்டு அதி சீக்கிரத்தில் அதிலிருந்து நீங்கி விடுகின்றார்களோ அத்தன்மையாரை மன்னிப்பதுதான் அல்லாஹ் வின்மீது கடமையாகி விடுகின்றது' (அல்குர்ஆன்: 4 : 17) என வசனிக்கின்றான். ஆதம் (அலை) அவர்களின் தௌபாவை அல் லாஹ் ஏற்றுக்கொண்டதையே 'கபுலாக்கி' என்னும் அறபுச் சொல் லால் ஆலிப்புலவர் குறித்துள்ளார். கபுல் (Qabul) என்பதன் நேரடி யான பொருள் ஏற்றுக்கொள்ளல், சம்மதம் என்பதாகும். இதன் பின் இபுறாகீம் நபியவர்கள் அல்லாஹ்வின் பெருமைதனை எடுத்துரைப்ப தாக இரு செய்யுள்கள் மிகுறாசு மாலையில் இடம் பெற்றுள்ளன.

எந்தநன் மகனிசு மாயில் தம்மையே
வந்தநல் லேவலால் வதைக்கக் கத்தியைக்
கந்தரத் திருத்திய காலந் தன்னிலே
யந்தநற் கத்திகொண் டறுப்ப தன்றியே

தாக்கிய கத்தியின் றாரை மேல்வர
வாக்கியுஞ் செம்மறி யருங்கி டாய்தனை
நோக்கியே விடுத்துமென் நூறு மைந்தனைக்
காக்குநா யனுக்கெல்லாப் புகழுங் காணுமே

(மிகுறாசு மாலை: 129, 130)

இங்கு ஆலிப்புலவர் இஸ்லாமிய வரலாற்றில் ஓர் உன்னதமான முத்திரையைக் குறிப்பிடுகிறார். பெரும்பான்மையான நபிமார்கள் இப்றாகீம் நபி அவர்களின் வழித்தோன்றல்களாக இருப்பதால் அவரை 'அபுல் அன்பியா' (நபிமார்களின் தந்தை) என சிறப்புடன் அழைப்பர் முஸ்லிம்கள். இஸ்லாமிய வரலாற்றில் இறுதி நபி நாயகம் (சல்) அவர்கள் வரை எண்ணற்ற நபிமார்கள் தோன்றியிருப்பினும் அல்லாஹ்வால் மார்க்க சட்டங்கள் அனுப்பி வைக்கப்பட்டு பெருமைப் படுத்தப்பட்ட ஆறு நபிமார்களுள் இப்றாகீம் நபியும் ஒருவராகும். அல்குர்ஆனில் பல இடங்களில் இப்றாகீம் நபி பற்றிய வசனங்கள் இடம் பெறுகின்றன. இத்தன்மைகள் பெற்ற இப்றாகீம் நபியவர்கள் தம்முடைய 86-வது வயதில் அல்லாஹ்விடம் துவா இறைஞ்சி ஹாஜறா அம்மையாரின் வயிற்றில் ஒரு மகவைப் பெற்றார்கள். இவரே இஸ்மாயில் நபியாகும். பெறற்கரிய தவத்தில் பெற்ற தம் மகன் இஸ்மாயிலை தம் கைகளாலேயே அறுத்து அல்லாஹ்வுக்கு குர்பான் (பலி) கொடுப்பதாகக் கனவு கண்டு அவ்விதமே நிறைவேற்ற சித்தம் கொண்டு தம் எண்ணத்தை மகன் இஸ்மாயீல் அவர்களிடம் கூற அதற்கு அல்லாஹ்வின் ஆணைப்படியே செய்யும்படி இஸ்மாயீல் (அலை) அவர்கள் பதிலளித்தார்கள். இதன்படி இப்றாகீம் நபி யவர்கள் இஸ்மாயீல் நபியை கத்திகொண்டு அறுத்து குர்பானிட முனைந்த போது அக்கத்தி அறுக்கவில்லை. அதுகண்டு வெகுண்ட

இப்றாகீம் நபி கோபமுற்று அருகிலிருந்த பாறையில் கத்திகொண்டு அடிக்க அது இரண்டாகப் பிளந்தது. ஜிப்றயீல் (அலை) அவர்கள் தோன்றி ஓர் ஆட்டைக் கொணர்ந்து அதனை குர்பானியிடுமாறு கூற, அவ்வாறே இப்றாகீம் நபி அவர்கள் செய்தார்கள். இவ்வாறு குர்பானி கொடுப்பதை அல்லாஹ் தன் திருமறையின் மூலமாக ஒவ்வொரு முஸ்லிம்களுக்கும் கடமையாக்குகின்றான். 'அல்லாஹ் அவர்களுக்குக் கொடுத்திருந்த ஆடு, மாடு, ஒட்டகங்கள் மீது அவன் பெயரைக் கூறும்படி செய்வதற்காகவே ஒவ்வொரு வகுப்பாருக்கும் குர்பானி செய்வதை நாம் கடமையாக ஏற்படுத்தியிருந்தோம்' (அல்குர்ஆன் 22 : 34) முஸ்லிம்களின் இத்தகு கடமைக்கு முன்னோடியாக இருந்து காட்டியவர்கள் இப்றாகீம் நபியவர்களாவார். அவர்கள் தம் மகனையே அல்லாஹ்வுக்காகக் குர்பான் கொடுக்க முனைந்த நாள் துல்ஹஜ் மாதம் (பன்னிரெண்டாவது இஸ்லாமிய மாதம்) 10-வது நாளாகும். முஸ்லிம்களின் ஐம்பெரும் கடமைகளுள் ஒன்றாகிய ஹஜ் (மக்கா புனித யாத்திரை) நிகழ்வுறும் மாதமாதலால் பன்னிரெண்டாவது இஸ்லாமிய மாதம் துல்ஹஜ் என அழைக்கப் படுகிறது. இப்றாகீம் நபி அவர்கள் அல்லாஹ்வின் ஆணைப்படி தம் மகனைக் குர்பான் கொடுக்க முன்வந்த நிகழ்ச்சியை நினைவு கூரும் வகையிலேயே ஈதுல் அள்ஹா என்னும் பண்டிகையை முஸ்லிம்கள் கொண்டாடுகின்றார்கள். இதனை 'குர்பான் ஈத் பெருநாள்' என்றும் 'பக்ரீத் பண்டிகை' என்றும் அழைப்பர். இத்திருநாளில் முஸ்லிம்கள் ஆட்டையோ, மாட்டையோ, ஒட்டகத்தையோ அவரவர்களின் வசதிக்கேற்ப அல்லாஹ்வுக்கு குர்பான் கொடுப்பர். இவ்வாறு குர்பானிட்ட இறைச்சியில் மூன்றில் ஒரு பகுதியை தங்களுக்கும் மற்றொரு பகுதியை உறவினர்களுக்கும் பிறிதொரு பகுதியை ஏழை எளியவர்களுக்கும் வழங்குவர். இத்தகு முக்கிய நிகழ்ச்சியைத் தான் ஆலிப்புலவர் இப்றாகீம் நபியவர்களின் கூற்றின் மூலமாக மேற்குறித்த இரண்டு பாடல்களிலும் தெரிவித்துள்ளார்.

இதற்கடுத்து, நபிகள் பலரும் எல்லாம் வல்ல நாயகனான அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தபின் நசுறானிகள் (ஒரு கிறித்தவ கூட்டத்தாரின் பெயர்) தொடர்பான ஜிப்றயீல் (அலை) அவர்களின் ஐயப்பாடுகளை நாயகம் (சல்) அவர்கள் தீர்த்து வைத்தார்கள். உருவமற்ற இறைவழிபாட்டினை வலியுறுத்துவதுடன் மூட நம்பிக்கைகளை அகற்றவேண்டும் என்ற தம் எண்ணத்தை ஆசிரியர் அண்ணல் நபி (சல்) அவர்களின் கூற்றின் வாயிலாக இவ்வாறு தருகின்றார்.

உதிரத்தை யெருத்தினை யும்மொருகூ
றதுவாக் கொடு போனவ ராரெனிலோ
அதிர்கின்ற நெருப்பையல் லாவெனவே
மதிகொண்டு வணங்கிடு மானிடரே

எருவுந் துவர் மேவு மிரத்தமுநீள்
வருகின்ற நஜீசையும் வாரிமிகப்
பருகும்படி கைம்மமிசை பற்றிடுவோ
ரருளொன்றுமில் துப்பர வற்றவரே

(மிகுறாசு மாலை: 152, 153)

நஜீசு என்பது இஸ்லாமிய நெறியில் ஒதுக்கப்பட்ட அசுத்தங் களைக் குறிப்பதாகும். இது பொதுவாக கலீளா (கடுமையானது), கஃபீஃபா (இலேசானது) எனப் பிரிக்கப்படும். கலீளாவானது இரத்தம், மலஜலம், இந்திரியம், உண்பதற்கு ஹறாமான (விலக்கப் பட்ட) மிருகங்களின் மூத்திரம், சாராயம், மிருகங்களின் எச்சில், கழிவு, பன்றியின் சகல அம்சங்கள் முதலான இன்ன பிறவாகும். கஃபீஃபா என்பது உண்பதற்கு அனுமதிக்கப்பட்ட பிராணிகளின் மூத்திரம், உண்ண அனுமதிக்கப்படாத பறவைகளின் எச்சம் முதலான இன்ன பிறவாகும். இங்கு ஆலிப்புலவர் முஸ்லிம்களின் நெறிப்படி நஜீஸ் அடிப்படையில் எருமையினுடைய சிறுநீரைக் குடிப்பதை கண்டித்துள்ளார். இவ்வாறு பல்வேறான நிகழ்வுகளுக்குப் பின் ஜிப்றயீல் (அலை) அவர்களும் பெருமானார் நபி (சல்) அவர்களும் பைத்துல் முகத்திஸிலிருந்து வெளிவரும்போது மலக்குகள் சூழ்ந் திருக்கிறார்கள்.

முற்பட வொளிப்பலகை மீதினில் விதித்தவன்
முடிப்பதை விலக்கு பவரா
ரிப்படி யுரைத்துட னெழிற்சிபுரி யீல் நபிகை
யின்பொடு பிடித்து நலவா
ரப்பளியி னுற்றவெளி யானபொழு தேபெரிய
தாயொரு கலுந்தெ ரியவே
தப்பற மலைக்கலை மலக்குகள் வளைந்துதசு
பீகுதகு லீலு சொலினார்.

(மிகுறாசு மாலை: 172)

தஸ்பீஹ் என்பது 'ஸபஹ' என்ற அறபுச் சொல்லின் அடியாகப் பிறந்ததாகும். அல்குர்ஆனில் பல இடங்களில் இச்சொல் அல்லாஹ் வைப் புகழ்வதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஓரிடத்தில் 'வானங்களிலும் பூமியிலுமுள்ள அனைத்தும் அல்லாஹ்வை தஸ்பீஹ் செய்கின்றன' (அல்குர்ஆன் 57 : 1) எனக் குறிக்கப்பட்டுள்ளது. வானவர்களுக்கும் மலக்குகளுக்கும் தஸ்பீஹ் செய்வதே உணவாகும். இதனை அவர்கள் மறந்துவிடின் இறந்து விடுவர் என்பது இஸ்லாமிய நெறியாகும். இதற்கேற்பவே இங்கு மலக்குகள் தசுபீகு செய்ததாக ஆலிப்புலவர் குறிப்பிட்டுள்ளார். தகுலீலு என்பது 'தஹ்லீல்' என் னும் அறபுச் சொல்லாகும். இது முஸ்லிம்களின் அடிப்படையான

ஏக தெய்வ இறை வணக்கத்தை வலியுறுத்தும் மூல மந்திரமான 'லா இலாஹ இல்லல்லாஹ்' என்னும் வசனத்தை மீண்டும் மீண்டும் கூறுவதையே குறிக்கும். இம்மூல மந்திரத்தை ஒருவன் கூறுவதையே குறிக்கும். இம்மூலமந்திரத்தை ஒருவன் நூறு தடவை கூறின் நூறு நன்மைகள் செய்த பயனையும் அவன் நூறு பாவங்களிலிருந்து விடுவிக்கப்பட்ட நன் மதிப்பையும் பெற்றவனாகின்றான், அண்ணல் நபி (சல்) அவர்களின் பொன்மொழிகளில் 'நீங்கள் தஸ்பீஹ், தஹ்லீல் முதலியவற்றை கைவிடவேண்டாம் விரல்கொண்டு அவற்றை எண்ணிக்கொள்ளுங்கள் ஏனெனில் அவை மறுமையில் கியாமத்து நாளில் சான்று பகரும்' எனக் கூறப்பட்டுள்ளது. எனவே பெருமானாரின் வாய்மொழியையே மலக்குகள் இதனால் செயல்படுத்துவதாக ஆலிப்புலவர் செய்யுள் செய்துள்ளார்.

மேற்குறித்த மிகுறாசு மாலைச் செய்யுளில் ஆசிரியர் பைத்துல் முகத்திஸிலுள்ள அல் ஸஹ்ராஹ் (Al Sakhrah) என்னும் மலை பற்றிய செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். இம்மலையின் உச்சியில் உமர் (றலி) அவர்களின் பெயரிலமைந்த பள்ளியுள்ளது. இம்மலை சொர்க்கத்திலிருந்து வந்தது என்றும் உலகத்தின் அடித்தளமாகவும் கருதப்படுகிறது. தீர்க்கதரிசிகளின் அனைவரது இறைவழிபாட்டுத் தலமாகவும் கஃபாவிற்கு அடுத்தபடியாகக் கருதப்படும் புனிதப் பள்ளியுமாகும். இத்தகு மலையைப்பற்றியே மேற்சொன்ன பாடலில் பைத்துல் முகத்திஸ் ஆலயத்திலிருந்து வெளிவந்தவுடன் கல் தெரிவதாகவும் அதனைச் சுற்றிலும் மலக்குகள் தசுபீகு, தகுலீலு சொல்லிக் கொண்டிருப்பதாகவும் ஆசிரியர் குறித்துள்ளார். இவ்வாறு அனைத்து இறைத்தூதுவர்களும் அல்லாஹ்வை தொழுதுபின் அல்ஸஹ்ராஹ் மலைமீது இருந்து பெருமானார் நபி (சல்) அவர்களும் தொழுதார்கள்.

அக்கலை மிதித்தெமை யமைத்தவிறை யைத் தொழுமென்
றானஜிபு றீலு ரைசெய்தே
யொக்கவுமி ரண்டுறக்கு அத்தவர் விருப்பஃ
துறத்தொழுது பின்னு மொழிவார்
மிக்குள மலைக்கலு மிகப்பெருமை பெற்றதிதன்
வெற்றிவரி சைப்ப லனெனே
தக்கபுவி யாவையு மதிற்செறி படைப்பையுமெய்
தன்னிடை சுமந்த திதுவே

(மிகுறாசு மாலை : 173)

இவ்வாறு நபி (சல்) அவர்கள் தொழுத மலையின் சிறப்பையும் அம் மலை உலகம் யாவைக்கும் அடித்தளமாக விளங்குவதையும் ஆலிப் புலவர் பின்வருமாறு எடுத்துக்காட்டுகிறார்.

மண்டல மியானவையு மதிற்செறி படைப்பையும்
வகுத்தவன் விதிப்பி னுரமேற்
கொண்டசுமை தன்னிலொரு கோணமின் முறிந்ததுகல்
கொற்றநபி யேயெ னவானோர்
விண்டனர்பின் மாலையணி வள்ளனபி யோடவண்
விளக்கமுற வுற்ற கலுமே
தண்டியெனை யாவரு மிதிக்கவிலை நீரலது
தானென வுரைத்த ததுவே.

(மிகுறாசு மாலை: 174)

இச் சிறப்புள்ள மலையில் பெருமானார் நபி (ஸல்) அவர்கள் துவா இறைஞ்சுவதுடன் பைத்துல் முகத்தீஸியல் முடிவடைகிறது.

இதற்கடுத்துத் தொடரும் மிகுறாஜேணியியல் மிகுறாசு மாலையில் அதிகமான பாடல் எண்ணிக்கையைப் பெற்றிருப்பதில் இரண்டாவது இடத்தைப் பெறுகிறது. இவ்வியல் முழுவதும் அண்ணல் நபி (ஸல்) அவர்களை விண்ணுலகுக்கு ஏற்றிச் சென்ற ஏணியின் பல்வேறு சிறப்பியல்புகள் விவரித்துக் கூறப்படுகிறது. ஏணியின் ஒவ்வொரு படிகளிலும் பெருமானார் (சல்) அவர்கள் ஏறும்போது அவரை எதிர் கொண்டு வரவேற்ற வானவர்கள் பற்றியும், அவர்களது தொழில் பற்றியும் ஆலிப்புலவர் விவரித்துக் கூறியிருப்பதிலிருந்து ஆசிரியரின் இஸ்லாமிய நெறிமுறைகள் பற்றிய பரந்துபட்ட அறிவு, தெற்றெனப் புலப்படுகிறது. முதலாம் படி முதல் ஐம்பத்தி ஐந்தாம் படியீறாக ஒவ்வொரு மிகுறாஜேணியின் படிக்கும் குறைந்தது இரண்டு பாடல்களை யாத்துள்ளார். இவ்வாறு நபி (சல்) அவர்கள் ஜிப்றயீல் (அலை) அவர்களுடன் ஒவ்வொரு படியாக ஏறிச்செல்லும்போது நபி (சல்) அவர்களின் பல ஐயப்பாடுகளுக்கும் ஜிப்றயீல் (அலை) பதிலளிப்பது போன்று பல செய்யுள்கள் இடம் பெற்றுள்ளன. படிகள் தோறும் வந்து பல்லாயிரக்கணக்கான மலக்குகள் பெருமானார் நபி (சல்) அவர்களை ஆலாத்தியெடுத்து வரவேற்பதாக ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

பைத்துல் முகத்திஸ் ஆலயத்திலிருந்து வெளிவந்தவுடன் ஜிப்றயீல் (அலை) அவர்கள் சுவனத்தின் அதிபதியான றிலுவான் (அலை) அவர்களை அழைத்து அண்ணலெம் பெருமானாரை வானிற்கு அழைத்துச் செல்லும்பொருட்டு மிகுறாஜேணியினை இறக்கும்படி வேண்டுகின்றார்கள்.

சொர்க்கத்தின் முன்னிச் சுகந்தறிலு வானிதமை
வர்க்கமுடன் கூவியெந்தம் வண்மைச் சலாமுரைத்தே
நற்கஸ்தூ ரிப்புயத்தார் நம்மிறகு லங்குவரு
தற்கு மிகு றாஜேணி தனையிறக்கச் சொல்லுமென்றார்.

(மிகுறாசு மாலை: 181)

இவ்வாறு வானவர் கோனின் கட்டளையைக் கேட்ட வானின் மலக்கு மற்ற மலக்குகளான மன்சாயில், ஜம்ஹாயில், கல்காயில், நூறாயில், கறுக்காயில், முகறுயாயில் முதலானோர்க்கு ஒருவர் பின் ஒருவராக ஜிப்றயீல் (அலை) அவர்களின் கட்டளையைத் தெரியப்படுத்தினார். அதன்பின் மலக்குகள் சேர்ந்து மிகுறாஜேணிதனை இறக்கி னார்கள்.

வல்லோ னுடைய மலக்காகு மன்னவர்க
ளெல்லோருஞ் சொர்க்கத் தியல்பாம் பிருதவுசின்
மெல்லா யிருக்கும் விறலேணி தன்னையிணை
யில்லா னருளா லினிதா யிறக்கினரே

(மிகுறாசு மாலை : 182)

பிருதவ்ஸ் என்பது பூங்கா என்று பொருள்படும். இது குறித்து அல்லாஹ் 'எவர்கள் மெய்யாகவே விசுவாசங்கொண்டு நற்கருமங்கள் செய்கிறார்களோ அவர்கள் 'பிர்தவ்ஸ்' எனும் சுவனபதிகளில் (விருந்தினராக) உபசரிக்கப்படுவார்கள்' (அல் குர்ஆன் 18 : 107) என்று கூறுகிறான். சுவர்க்கத்தில் உள்ள படித்தரங்களில் நடுநாயக மாக இருப்பது 'ஜன்னத்துல் பிர்தௌஸ்' என்பதாகும். எனவே இதனை 'அல்லாஹ்விடம் நீங்கள் இறைஞ்சிப் பெறுங்கள்' என்று வலியுறுத்துகின்றன நபிகளாரின் பொன்மொழிகள். எனவே சொர்க்கத்தின் இயல்பு எல்லாம் ஒருங்கே பொருந்திய ஏணியையே நபி (சல்) அவர்கள் விண்ணிற்கு வருவதற்காக ஏறி வரும் பொருட்டு மலக்குகள் இறக்கினார்கள்.

இத்தகு சிறப்புப் பெற்ற ஏணியின் தன்மைகளை ஆலிப்புலவர் பலவாறாக விதந்தோதுகின்றார். பொன்னாலும், மணியாலும் ஆன ஒவ்வொரு படிகளையும் கொண்ட மிகுறாஜேணியில் உள்ள சிறப் பம்சம் அதன் படிகளுக்கு இடையே உள்ள தூரமாகும். விரைவாகச் செல்லும் பரி நாற்பது வருடங்களில் செல்லும் தூரத்தை இரு படிகளுக்கிடையே இடைவெளியாகப் பெற்றுள்ளதாக ஆலிப்புலவர் குறிப்பிடுகிறார்.

ஏணித்திரு நிலைபொன்னதி னிலங்கும்பல மணிகள்
சேணுற்றிடு மதனின்படி செப்பும்பதி னோரைந்
தேணிப்படி யொன்றொன்றினி னிடையே செலுதூரங்
கோணத்திடை தேசிப்பரி கொடு நாற்பது வருடம்

(மிகுறாசு மாலை : 184)

இத்தகு மிகுறாஜேணியின் சிறப்பினை பல பாடல்களில் ஆலிப்புலவர் எடுத்துரைக்கின்றார். பின் ஜிப்றயீல் (அலை) பெருமானார் நபி (சல்) அவர்களிடத்தே விண்ணுலக்குக்குச் செல்ல வேண்டி பிசுமில்

சொல்லி வலக்காலினை முதற்படியில் எடுத்து வைக்கும்படி பின் வருமாறு கூறுகிறார்கள்.

இம்மத்துள நபியேயென வேத்திச்சிபு ரீல்நும்
மும்மத்தவ ருக்கேமிக வுயரும்வரி சையதாம்
அம்முற்றிடு முன்னிப்படி யதிலேபிசு மிலொடு
செம்மைப்பெறும் வலக்காலிதை வைத்தேறிடு மென்றார்

(மிகுறாசு மாலை : 187)

முஸ்லிம்கள் எந்தவொரு காரியத்தையும் தொடங்குமுன் 'பிசுமில்' கூறி தொடங்கவேண்டும். இச்சொல் 'பிஸ்மில்லா ஹிற்றகுமானிற் றஹீம்' என்னும் அறபுச் சொற்றொடரின் குறுகிய வடிவமாகும். இதன்பொருள் 'அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனு மாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்' என்பதாகும். எனவே எச் செயலும் அல்லாஹ்வின் திருநாமத்தாலேயே தொடக்கம் பெற வேண்டும் என்பதற்கேற்பவே மிகுறூஜேணியில் ஏறும்படிக் கூறும் ஜிப்றயீல் (அலை) அவர்கள் 'பிசுமிலொடு வலக்காலினை எடுத்து வைக்கும்படி பெருமானார் நபி (சல்) அவர்களிடம் கூறினார்கள். பொதுவாக ஒரு மங்கலமான காரியத்தைத் தொடங்கும்போது வலது காலினை முன் எடுத்து வைத்துச் செல்லவேண்டும் என்ற பழக்க வழக்கத்திற்கேற்பவே ஆலிப்புலவர் மேற்குறித்த செய்யுளிலும் அத னைப் புகுத்தியுள்ளார். ஜிப்றயீல் (அலை) அவர்களின் வேண்டு கோளுக்கிணங்க நாயகம் (சல்) அவர்கள் வலக்காலினை மிகுறாஜேணி யில் எடுத்து வைத்தவுடன் சொர்க்கப்பதியில் உள்ள மலக்குகள் ஆயிரம் பேர் ஆலாத்தி எடுத்தார்கள்.

வலக்காலதை முன்னின்படி வைத்தேறின ரப்போ
தலமாகிய சொர்க்கப்பதி தனிலேயுள துகிலால்
நலமாமதி முகமானதை நறையோடுது டைத்தே
யலராலிமை யவராயிர ராலாத்தி யெடுத்தார்

(மிகுறாசு மாலை : 188)

இங்ஙனம் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் படிகள் தோறும் ஏறிச்செல்லும்போது பல்லாயிரக்கணக்கான சொர்க்கத்து மலக்குகள் ஆலாத்தி எடுத்ததாக ஆலிப்புலவர் பல செய்யுள்களில் குறிப்பிடுகிறார். மங்களகரமான நிகழ்ச்சிகள் நடைபெறும்போது அந்நிகழ்ச்சிக்குக் காரணமானவர்களின் மீது பிறரது கண்பார்வை பட்டுவிடக்கூடாது என்பதற்காக நிகழ்ச்சிக் குரியவர்களை ஆலாத்தி எடுப்பது தமிழகத்தில் உள்ள அனைத்து சமூகப் பழக்க வழக்கங்களுக் கும் உரியதாகும். ஆனால் இஸ்லாமிய நெறியில் ஆலாத்தி எடுப்பது எங்கும் சுட்டப்படவில்லை. எனினும் தமிழக கலாச்சாரத்திற்கேற்ப ஆலிப்புலவர் பெருமானார் நபி (சல்) அவர்கள் மிகுறாஜேணியில்

ஒவ்வொரு படிகளிலும் ஏறும்போதும் வானவர்கள் ஆலாத்தி எடுத்த தாகக் குறிப்பிட்டுள்ளார். புலவரின் சமூகச் சூழல் அவர் தம் படைப்பு களிலும் தலைதூக்கிவிடும் என்பதற்கு இது ஒரு சான்றாகும்.

ஒவ்வொரு படிகள்தோறும் நபிகளார் சந்திக்கும் வானவர்களைப் பற்றி விரிவாக ஆலிப்புலவர் குறிப்பிடுகிறார். இவ்வாறு நாயகம் இருபத்திரெண்டாவது படிக்கு செல்லும்போது

......நபியிருபத்திரு வேணிப்படி செலவே
மருவானவர் சேனைக்கொரு மன்ஸாயிலு வந்தார்

(மிகுறாசு மாலை : 203)

இங்ஙனம் வரவேற்ற மன்ஸாயீல் பற்றி விரிவாக ஆலிப்புலவர் இருபத்திநான்கு அடிகளில் அமைத்த கலிவெண்பா செய்யுளில் விவரித் துள்ளார். பின் இருபத்திநான்காம் படியில் றக்குத்தாயீலையும் இருபத்தி ஏழாம் படியில் மன்சாயீலையும் நபி (சல்) அவர்கள் சந்தித் தார்கள். விண்ணுலகில் இவர்களது பணியும் விரிவாக இடம்பெறு கிறது. இருபத்தொன்பதாம் படியில் றுக்கியாயீல் என்னும் வான வரும் முப்பத்தியொன்றாம் படியில் ஜறுசாயில் என்பவரும் முப்பத்தி மூன்றாம் படியில் ஜெபுறாயீல் என்பவரும் பல்லாயிரக்கணக்கான வானவர்களுடன் அண்ணலெம் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களை எதிர்கொண்டு வரவேற்று சொர்க்கத்தின் பல்வேறான இயல்புகள் பற்றியும் எடுத்துரைத்தனர். முப்பத்திமூன்றாம் படியில் ஜெபுறாயீல், நபி (சல்) அவர்களை எதிர்கொண்டழைக்கும்போது சொர்க்கத்திலுள்ள பூவையர்களும் வந்ததாக ஆசிரியர் குறிப் பிட்டுள்ளார்.

முப்பதொரு முப்படியில் முன்னிநபி செல்லு
மப்பொழுது சொர்க்கமுன்னி லானவர்க டம்மிற்
செப்புமவர் பேருஜெபு றாயிலவர் கூடப்
பொற்பதியி னின்றுசத பூவையவர்கள் வந்தார்

(மிகுறாசு மாலை : 225)

இவ்வாறு வந்திருந்த சொர்க்கப்பதியின் மங்கையர் அழகு வெகு சிறப்பாக வர்ணிக்கப்பட்டுள்ளது.

...செங்குவளை யன்னவிழி கொண்டுதெரி சித்தார்
மங்கையர்மு கங்கண்முனின் வானினிடை தோன்றிற்
றிங்களென மண்ணுலகு சேரவொளி வீசும்

(மிகுறாசு மாலை : 228)

இவ்வழகு மங்கையரின் வாழ்வுபற்றி, நபி (சல்) அவர்களுக்கு எடுத் துரைப்பதுபோல் பூவையர்களின் கூற்றில் உள்ள இரு செய்யுள்கள்

விண்ணுலக மங்கையரின் குணங்களைத் தெளிவாக நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

அந்தமட மங்கையரு மாதியிர சூல்பால்
வந்தணி சலாஞ்சொலிநன் வாய்திறந்து சொன்னார்
சுந்தர மிகுந்தவெங்கள் சொல்லரிய வாழ்வு
நந்தலிலை யாவிகொடு நாங்கண்மிக வாழ்வோம்
எங்கள் கண வன்றனுகை யப்படி நடப்போம்
எங்களை மவுத்தடர்வ தில்லையொரு காலும்
எங்களுண வுக்குடை தனக்கழித லின்றால்
எங்கள்சலா நுங்களும்மத் தோர்க்கருளு மென்றே
(மிகுறாசு மாலை : 229, 230)

உம்மத் என்பது உமம் என்னும் அறபுச் சொல்லின் அடியாகத் தோன்றியதாகும். இவ்வேர்ச் சொல்லின் நேரடியான பொருள் 'நாடுதல்' என்பதாகும். ஆனால் உம்மத் என்னும் சொல் ஒரே மார்க்கத்தை நாடிச் சொல்லும் மக்கள் அனைவரையும் குறிக்கப் பயன் படுத்தப்படுகிறது. இஸ்லாமிய வரலாற்றில் அந்தந்த காலங்களில் தோன்றிய நபிமார்களின் மார்க்க வழி முறைகளுக்கேற்ப பின்பற்றிய முஸ்லிம்கள் உம்மத்துக்கள் என்றழைக்கப்பட்டனர். எனவே 'நபி உம்மத்தோர்கள்' என்பது நபி (சல்) அவர்கள் பின்பற்றும் இஸ்லாமிய மார்க்கத்தின் கீழ் அடங்கும் முஸ்லிம்களைக் குறிப்பதாகும்.

நாயகம் (சல்) அவர்களும் ஜிப்றயீல் (அலை) அவர்களும் நாற்பத் தோராம் படிக்குச் சென்றபோது அவர்களை எதிர்கொண்டு வரவேற்ற வானவர்களின் எண்ணிக்கை எண்ணும் தரத்ததன்று என்பதை ஆலிப்புலவர் உவமை நயத்துடன் எடுத்துரைக்கும் தன்மை இங்கு குறிப்பிடற்பாலது.

மண்ணை யெண்ணினு மண்கலை யெண்ணினு
மழையை யெண்ணினு மன்னு மிராப்பக
லெண்ணை யெண்ணினு நாழிகை யெண்ணினு
மிலங்கு நாற்பத்தொன் றாம்படி தன்னிலே
விண்ணின் வானவர் ஸப்புஸப் பாகவே
மிகுந்தி றங்கிய தெண்ணத் தொலையுமோ
நண்ணும் வானவர் தசுபீகி னோடுற
நபியுல் லாஜிபு ரீலொடு கேட்டனர்.
(மிகுறாசு மாலை : 249)

ஸப்பு என்பது 'ஸஃப்' என்னும் அறபுச் சொல்லாகும். இதன் பொருள் அணி என்பதாகும். இது பொதுவாக தொழுகைக்கு அணி யணியாக நிற்பதையே குறிக்கும். இப்பொருளிலேயே நபியுல்லா (சல்)

அவர்களை தரிசிக்க வானவர்கள் ஸப்பு ஸப்பாக நின்றதாக ஆசிரியர் குறித்துள்ளார். அவ்வாறு நின்றவர்கள் அல்லாஹ்வின் புகழினை ஓதிக்கொண்டே இருந்ததையே 'தசுபீகினோடுற' என்னும் சொற்றொடரால் ஆலிப்புலவர் குறித்துள்ளார்.

மின்பெற்றிடு நாலாம்வெளி விண்ணோரடி பணிய
அம்பத்தொரு படிமீதினி லானாரபு துல்லா
மன்பெற்றிடு மகனாகிய வடிவார்முகம் மதர்பால்
பொன்பெற்றிடு படியிற்சில புகழ்வானவர் வந்தார்

(மிகுறாசு மாலை : 284)

இவ்வாறு ஐம்பத்தி ஐந்து படிகளை ஏறிக்கடந்தபோது பல்வேறு காட்சிகளையும் நாயகம் (சல்) அவர்கள் கண்டுற்றபின்

எழுவானி னின்று படுவானி லேகி
லெழுபூடு மூர்வை பறவை
குழுவாம னித்த ரொடுமொக்க வெந்து
குகையேவெ டித்த புகையாம்
முழுவாரி தன்னை யிறையந்த ரத்தில்
முன்னாள்வி ரித்து லவைமே
னழுவாத மைத்து மறைவாக்கி னனென்று
நரருக்கு நன்றி செயவே

(மிகுறாசு மாலை : 307)

என ஆலிப்புலவர் இயம்புகின்றார். இப்பாடலுடன் மிகுறாஜேணியியல் முடிவுற்று அடுத்த எழுவானியல் தொடக்கம் பெறுகிறது.

எழுவானியல் தலைப்பின்கீழ் அமைந்த செய்யுள்களில் ஆலிப் புலவர் நாயகம் (சல்) அவர்கள் ஏழு வானத்திலும் கண்ட புதுமை களையும், அல்லாஹ்வின் பெருமைகளையும் எடுத்துக் கூறுகிறார். ஒவ்வொரு வானத்திலும் பல நபிமார்களை நாயகம் (சல்) அவர்கள் சந்தித்தார்கள் என விரிவாக மிகுறாசு மாலையில் இடம்பெற்றுள்ளது. முதல் வானத்திற்கு நாயகம் (சல்) அவர்கள் சென்றபோது அங்கு பல மாட மாளிகைகளை கண்டார்கள். அம்மாளிகைகள் யாருக்காக அமைக்கப்பட்டிருந்தன என்பதையும் ஆலிப்புலவர் குறிப்பிடுகிறார்.

மணங்கொள் மசாகின் மகளாசி யாவுக்
கிணங்குமணி மாட மெழுபான்—கணங்கொண்முகிற்
செங்கைக் குவைலீது செல்விகதி ஜாதமக்குச்
சங்கைமா டம்மெழுப தாம்

(மிகுறாசு மாலை : 320)

இவ்வாறு இம்றான் மகள் மரியமுக்கும் பிறருக்கும் மாளிகைகள் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு மாட மாளிகைகளைக்

கண்டு உவந்த நாயகம் (சல்) அவர்கள் அங்கிருந்து பூமியை நோக்கி னார்கள். நாயகத்தின் காட்சிக்கு தென்பட்ட பூமியின் உருவம் ஒரு சிறிய விளக்குப்போல் இருந்ததாக எளிய சிறந்த உவமை நயத்துடன் ஆலிப்புலவர் குறிப்பிடுகிறார்.

அங்குநின்று மித்துனியா வாலமதை நன்நயினார்
செங்குவளைக் கண்ணாற் றெரிசித்தா—ரங்கே
சுருக்கமாய்க் கிந்திலொன்று தோன்றுவது போல
இருக்கின்ற திப்பூ விடம்

(மிகுறாசு மாலை : 322)

(கிந்தீல் - விளக்கு) துன்யா என்பது இவ்வுலகம் என்று பொருள்படும் இச்சொல் 'தன்யு' என்ற அறபுவேர்ச் சொல் மூலத்திலிருந்து தோன்றியதாகும். இத்தகு எழில் மிகுந்த காட்சியை கண்டு மகிழ்ந்த நபி (சல்) அவர்கள் சற்று நேரத்தில் பச்சை சட்டையிட்டிருக்கும் ஒருவரைக்கண்டு அவர் யாரென்று ஜிப்றயீல் (அலை) அவர்களிடத்து வினவினார்கள்.

பழகாப் புதிய பசுங்குப்பா யந்தொட்
டழகா யிருக்குமிவ ராரென்றே—நிழல்காணா
வேதநபி கேட்டதற்கு விண்ணவர் வேந்தர்
ஆதமிவ ரென்றார் அமர்ந்து

(மிகுறாசு மாலை : 325)

பெருமானார் (நபி) சல் அவர்களைக் கண்டுற்ற ஆதம் (அலை) அவர்கள் பலவாறாகப் புகழ்ந்தபின் நபி (சல்) அவர்கள் வானில் எஹியா நபி, ஈசா நபி, யாகூப் நபி, யூசுப் நபி, தாவுது நபி, சுலைமான் நபி முதலானவர்களை ஒருவர்பின் ஒருவராகச் சந்தித்து உரையாடும் பகுதிகள் விரிவாக இடம்பெறுகின்றன. மூன்றாம் வானில் இசுறாயில் (அலை) அவர்களைச் சந்தித்தபோது அவரது தொழில் பற்றி ஆசிரியர் கூற்றில் அமைந்த பாடல் விவரிக்கின்றது.

எல்லாப் பிராணியவை யின்னுயி ரைப்பற்றி
வல்லா னருட்படியே வாங்குவார்—நல்லாரென்
றாகுமவர் தம்முயிரை யானபெரும் வல்லியத்தால்
வாகுபெற வாங்கிவிடு வார்.

(மிகுறாசு மாலை : 353)

இவ்வாறு பல்வேறு பட்டவர்களின் செயல்களையும் எழு வானின் அற்புத நிகழ்வுகளையும் அண்ணல் நபி (சல்) அவர்கள் கண்டுற்றதை ஆலிப்புலவர் இவ்வாறு விவரிக்கின்றார்,

பலபுதுமை கண்ட பயஹாம்பர் தம்மோ
டிலகுஜிபு ரீல்நின் றிசைத்தா—ருலகமைத்த
வல்லவன்றன் றூதேயிவ் வான்புதுமை மானிடர்க்குச்
சொல்லவிதி யல்லவென்றே சூழ்ந்து

(மிகுறாசு மாலை: 387)

இதன்பின் நரகத்தின் காட்சிகளை நாயகம் (சல்) அவர்கள் கண்டதைப் பல செய்யுள்களில் ஆசிரியர் விவரித்துக் காட்டுகிறார். நரகின் காட்சிகள் பலவிதமாக வர்ணிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு தண்டனையைக் கண்டபோதும் நபி (சல்) அவர்கள் இவர்களுக்கு ஏன் இந்தத் தண்டனை என்று வினவுவதாகவும், அதற்கு வானவர்கோன் பதிலளிப்பதாகவும் செய்யுள்களின் போக்கு அமைந்துள்ளது.

பேசுநர கிற்சிலர் பெருத்ததலை யைத்தீ
யாசமியில் வைத்துற வரைக்குவது கண்டே
தேசுருபி யாவரிவ ரென்னஜிபு ரீல்தாந்
தேசரின்கைக் கூலிபற்றித் தின்றவர்க ளென்றார்

(மிகுறாசு மாலை: 437)

இம்மண்ணுலகில் கணவன் சொல் கோளாமல் தம் மனம்போன போக்கில் திரியும் மடமங்கையர்கள் வெந்நரகில் படும் அவலத்தை பின் வருவாறு விவரிக்கின்றார்.

நீலநர கிற்சில நெடுங்கண்மட வார்கள்
மேலின்றலை கீழினுற வேதனை படக்கண்
டாலநபி வானின்ஜிபு ரீலினொடு மின்னார்
ஞாலமதிற் செய்பிழை நமக்குரைமென் றாரே

(மிகுறாசு மாலை: 448)

அண்ணல் நபி (சல்) அவர்களின் இத்தகு கேள்விக்கு ஜிப்றயீல் இவ்வாறு பதிலளித்தார் எனப்பாடப்பட்டுள்ளது.

மண்ணுலகி னிந்தமட வார்கள்புரு டன்சொல்
வண்ணமதி கழ்ந்துமிகு வம்பினவர் தங்க
ளெண்ணமது போனடந்து மேவன்முறை யான
புண்ணிய மறந்து திரி பூவையர்க ளென்ருர்

(மிகுறாசு மாலை: 449)

என ஆலிப்புலவர் நரகின் காட்சிகளை விவரிக்கும் திறம், படிப்போர் உள்ளத்தே அச்சவுணர்வினை ஏற்படுத்தும் வண்ணம் உள்ளது. நரகில் உள்ள அவலக் காட்சிகளைக் கண்டபின் அங்கு தொழுகை நடத்திவிட்டு நாயகம் அங்கிருந்து புறப்பட்டார்கள்.

வள்ளல்தொழு வித்தபின்னர் வானவர்கோன் வள்ளலைக்கொண்
டுள்ளங் களியா யுயரவே—மெள்ளவெழுந்
தாரங்கே நின்றெழுப தாயிரமா நல்வருடத்
தூரங்கொண் டேபறந்தார் சூழ்ந்து (மிகுறாசு மாலை: 464)

நரகின் அவல உணர்வினை விவரித்த ஆசிரியர் அது படிப்போர் உள்ளத்தே ஏற்படுத்திய அச்சம் மறையும் வண்ணம் நரகத்தியலுக்கு அடுத்தபடியாக சொர்க்கத்தின் இனிய காட்சிகளையும், நடைமுறை களையும் எடுத்துக்காட்டுகிறார். ஜிப்றயீல் (அலை) அவர்கள் நபிகள் நாயகம் அவர்களை சொர்க்கத்திற்கு அழைத்துச் சென்றார்கள்.

தானமதி னின்று தனித்தோ னருட்படியே
தீனவர்கள் போற்றுஞ் சிபுரீல்தாம்—ஞானமிகு
மக்கத்திற் கெண்டிசைக்கு மன்னர் முகம்மதரைச்
சொர்க்கத்திற் கொண்டுசென்றார் சூழ்ந்து
(மிகுறாசு மாலை: 469)

சொர்க்கத்தினுள் நுழைந்து நாற்றிசையும் நோக்கிய நபி (சல்) அவர்கள் சொர்க்கத்தின் பரப்பை ஏழு வானும், ஏழு புவியும் சேர்ந் தாற்போல் உள்ளது என்று மகிழ்ந்துரைத்தார்கள். சொர்க்கத்தின் கண் உள்ள மாளிகைகள், அருவிகள், அங்குள்ள நன்மணம் கமழும் சூழல்கள் சொல்லும் திறத்தன்று.

பொற்பதிமேற் றட்டின் புகலரிய மாளிகையு
மற்பயிலு கின்றமணி வாயில்களும்—பற்பலவு
மொள்ளிதா யோங்கி யொளிவிரிவாய் வீசுமுயர்
வெள்ளியா லேபடைத்தான் வேந்து
(மிகுறாசு மாலை: 472)

மாளிகைகளின் வாசல்களே இவ்வாறாயின் மாளிகைகளுக்குள் இருக் கும் காட்சிகள் எப்படியிருக்கும்! அதனையும் ஆலிப்புலவர் பின்வரு மாறு எடுத்துக்கூறுகிறார்.

மின்னாருங் கட்டில்களின் மேல்விரித்த மெத்தைபசும்
பொன்னாலி ரத்தினத்தாற் பூவாடை—பன்னாளும்
வீசுகின்ற பல்லணியின் மேற்கட்டி மற்றவெல்லா
மாசகன்ற முத்து மணி
(மிகுறாசு மாலை: 477)

இவ்வாறாக மின்னிலங்கும் பொற்பதியில் பல்வேறு வாழ்வுகளைக் கண்டதற்குப்பின்

...........பொன்னிலங்கும்
பூவிலே நன்றியரைப் போற்றுசிது றத்துல் முந்த
ஹாவிலே கொண்டு சென்றார் காண்
(மிகுறாசு மாலை: 490)

சித்ரத்துல் முன்தஹா என்பது ஏழாவது சொர்க்கத்திலுள்ள பிரமாண்ட மான ஒரு மரமாகும். கஸ்தூரிக் கலவையினால் வேரூன்றியுள்ள மரமாகும். இம்மரத்தின் நிழலில் அகிலத்து மனிதர்கள் அனைவரும் நிழல்பெற்றிட முடியும். விண்ணுலக மரத்தின் அளவினை ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார்.

எழுபஃதிலையுள திதுவென விசைநபி யினிதொடு சொலினார்
பழுதறு மொரு விலையிடையுள வெளியது பகரிலெவ்வளவுளதென்
றெழிலுறுமிருப தொடிருபது வருடமதிய லொடு செலுதொலைநேர்
முழுமரம் மதிலுள விலைதரு மொளிமயின் முதுகுள வொளிநிறமே
(மிகுறாசு மாலை : 492)

இத்தகு மரத்தின் ஒவ்வொரு இலையிலும் ஒவ்வொரு மலக்குவீதம் சாட்டப்பட்டு உள்ளனர் என்பது போன்ற பல்வேறு விவரங்களையும் ஆலிப்புலவர் எடுத்துரைக்கின்றார். சித்றத்துல் முன்தகாவில் அதிசயக் காட்சிகளைக் கண்டபின் சித்றரத்தின் கடைசி எல்லையான 'ஹிஜா புல் அக்பர்' என்னும் இடத்தை நபிகள் (சல்) அவர்களும் ஜிப்றயீல் (அலை) அவர்களும் அடைகின்றனர். இத்தருவாயில் ஜிப்றயீல் (அலை) அவர்கள் நபி (சல்) அவர்களுடன் தொடர்வதை நிறுத்திவிட அதுகண்டு வினவிய நபி (சல்) அவர்களுக்கு ஜிப்றயீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் கட்டளையை தெரிவித்தார்கள்.

.........மதிபோன்முக முடையீர்நமையுடையோ
னுயர்வார்மர மிதின்மேல்வர வுத்தாரமி லென்றார்
(மிகுறாசு மாலை : 501)

இவ்வாறு கூறியதுடன் அவ்விடம் தாண்டினால் தம் நிலை குறித்தும் எடுத்துரைத்தார்.

இங்கிவ்விடம் விட்டந்தர மேகின்னிறை யொளியாற்
பங்கம்பட வெந்தேகரி படுவேனென விண்டா
ரங்கம்மொழி நபிகேட்டுள மறவேபய முறலாற்
றுங்கஞ்செறி ஜிபுரீலிற சூல்தம்மனந் தேற
(மிகுறாசு மாலை : 502)

எனவே அதுவரையில் தமது விண்ணேற்றப் பயணத்திற்கு துணையாக வந்த ஜிப்றயீல் (அலை) அவர்களை விட்டுவிட்டு ஹிஜாபுல் அக்பரின் அருகே தன்னந்தனியாக நபி (சல்) அவர்கள் நின்றார்கள். அப் போது வானவர் நால்வர் தோன்றி ஒரு சிங்காசனத்தை சுமந்துவந்து அதிலேறும்படி நபி (சல்) அவர்களை பணித்தார்கள். ஒலியையும் மிஞ்சும் வேகத்தையுடைய அதில் ஏறி திசைகளைக் கடந்து சென் றார்கள். இவ்வாறு செல்லும்போது இடையில் ஹஜ்றத் மீக்காயில் (அலை) ஹஜ்றத் இஸ்ராபீல் (அலை) ஹஜ்றத் ரூஹ் (அலை) ஆகிய

வானவர்களை சந்தித்தபின் இறுதியாக அல்லாஹ்வின் அறுஷை நாயகம் நபி (சல்) அவர்கள் அடைகின்றார்கள். பெருமானார் அறுஷினைக் கண்ட காட்சியை ஆலிப்புலவர் பின்வருமாறு எடுத்துக் காட்டுகிறார்.

நண்ணார்கள் போற்று நபியே தலையெடுத்தங்
கண்ணாந்து பாருமென் றேயறையக்—கண்ணால்
வரிசைதனைக் கண்ட முகம்மதனார் பார்க்க
அருஷதனைக் கண்டா ரமர்ந்து

(மிகுறாசு மாலை : 527)

அல்லாஹ்வின் சிம்மாசனமே அறுஷ் என அழைக்கப்படுகிறது. இத் தகு சிறப்புப்பெற்ற அறுஷ் பற்றி தன் திருமறையில் ‘அல்லாஹ்வே எனக்குப் போதுமானவன் ; அவனைத் தவிர வேறு நாயனில்லை ; (என் காரியங்கள் யாவிலும் அவன்மீது நான் பூரண நம்பிக்கை கொண்டுள்ளேன் ; ) அவன்தான் மகத்தான ‘அர்ஷின் அதிபதி’ ( அல்குர்ஆன் : 9 : 129 ) என அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான். இப்பெருமை பெற்ற அறுஷினை தம் கண்களால் கண்ட ஜோதி நபியவர்கள் அதன் பெருப்பங்கொண்ட வரிசைகளைச் சொன்னார் வடித்து.

மண்ணுலக மேழும் வானேழு மங்கவையி
லெண்ணும் படைப்புகளி யாவு—நண்ணும்
அறுஷ“தனி னோர்வெளியி னாழிவைத்தாற் போலத்
தெரியுகிற தென்றே தெளிந்து

(மிகுறாசு மாலை : 535)

வியந்துரைத்த நபி (சல்) அவர்கள் அல்லாஹ்வின் சிங்காசனத்திற் கருகில் சென்று வல்லான் றகுமத்தின் ஒளியினைக் கண்டார்கள்.

அல்லா திருமுன்பு சிங்கா சனஞ்சென் றகுமதை
மெல்லாக வைத்ததற் பின்பெமை யாள்கின்ற வேந்தனுயர்
வல்லான் றகுமத் தொளியான தையின்ன வன்னமென்ப
தல்லாமற் கண்டனர் நம்மிற சூலுளத் தாசை வைத்தே

(மிகுறாசு மாலை : 579)

இக்காட்சியின்பத்தை தம் நாவினாற் சொல்லும் திறத்தன்று என பெருமானார் (சல்) அவர்கள் கூறுவதாகவே ஆசிரியர் எடுத்துக் கூறுகிறார். இவ்வாறு யாருக்கும் கிடைத்தற்கரிய காட்சியைக் கண்ட நபி (சல்) அவர்கள் எல்லாம் வல்ல நாயனிடம் தமக்கும் தம் உம்மத்துக்களுக்கும் உரிய இறைக்கட்டளைகள் பலவற்றைப் பெற்றதை ஆலிப்புலவர் அறுஷியலில் விவரித்துக் கூறுகிறார். விண்ணேற்றத்தில் விதிக்கப்பட்ட இறைவனது கட்டளைகளுள் முக்கிய மானது முஸ்லிம்களுக்கு விதிக்கப்பட்டுள்ள ஐந்து நேரத் தொழுகை

யாகும். அல்லாஹ், நாயகம் (சல்) அவர்களிடம் பல்வேறு கட்டளைகளையும் உரித்தாக்கிய பின் இறுதியாக நபி (சல்) அவர்களுக்கும் அவரது உம்மத்தோருக்கும் ஐம்பது நேரத் தொழுகையை உரித்தாக்கினான்.

வல்லாய் பறுலை விதித்தியென் றோத வரிசைநபி
அல்லா மொழிந்தன நன்னபி யேதின மன்புவைத்துச்
சொல்லாரு மைம்பது நேரத் தொழுகையைத் தூய்புவியின்
மெல்லாய்த் தொழுமென நன்நபி யோம்பட்டு மீண்டனரே

(மிகுறாசு மாலை : 630)

இத்தகு கட்டளையைப் பெற்று மீண்டிடும்போது வழியில் மூசா நபி அவர்களை பெருமானார் சந்தித்தபோது அல்லாஹ்வின் கட்டளையை எடுத்துக்கூற அதற்கு மூசா நபி அவர்கள் நபி (சல்) அவர்களின் உம்மத்தோர் இத்தகு எண்ணிக்கையில் தொழுகையை செய்ய இயலாதவர்கள் என்று எடுத்துக்கூறி மீண்டும் அல்லாஹ்விடம் சென்று கேட்கும்படிக் கூறினார்கள்.

துய்யோன் றினமொன்றிற் கைம்பது நேரந் தொழவிதித்தான்
கையேற்று வந்தனன் யானென்று சொல்லக் கழறுவர்தாஞ்
செய்சீர் நபியே நுமதுவும் மத்தினர் செய்யப் பற்றார்
மெய்யா னிடஞ்சென்று கேளுமென் றார் மீண்டுசென்றே

(மிகுறாசு மாலை : 634)

மூசா நபியவர்கள் சொல்லிற்கிணங்க மீண்டும் எல்லாம் வல்ல அல்லாஹ்வின் அறுஷிடத்துச் சென்று நாயகம் இறைஞ்சினார்கள். அண்ணல் நபி (சல்) அவர்களின் இறைஞ்சுதலை ஏற்ற வல்ல அல்லாஹ்,

ஆராரும்போற்று முகம்மத ரேயுமக் கானவெந்த
மாராய முங்கொடுத் தேன்களி கூர்ந்திட மாவணக்கஞ்
சீராக வைம்ப தொகுத்துத் தொழுமச் செயவரிசை
நேராக வைந்தொகுத் திற்றந் தனன்றொழு நித்தமுமே

(மிகுறாசுமாலை : 641)

இவ்வாறு நாயகம் நபி (சல்) அவர்கள் இறுதியாகப் பெற்று வந்த இறை கட்டளையே முஸ்லிம்களால் அன்றிலிருந்து ஐந்துநேர இறை வணக்க வழிபாடாகப் பின்பற்றப்பட்டு வருகிறது.

அல்லாஹ்வின் அறுஷிடமிருந்து மீண்டுவந்த நபி (சல்) அவர்கள்,

சிறைவிரியப்படு வானெழு வானொடு சேரவே வெளிப்படவங்
கறைபொழில் ரண்டு மிருட்டிரள் ரண்டுமேயடர்ந்துற நந்நபிகள்
இறையரு டங்கிய வான்ஜிபு ரீலோ டிருள்பொழி லேதெனவே
வுறமொழி யும்மென வேவிட விண்ணவ ரோதிட லாயினரே

(மிகுறாசு மாலை : 646)

இங்ஙனம் வந்துள்ள நபி (சல்) அவர்கள் பனியிசுறாயீல்களை அங்கு கண்டுற்ற செய்தியை தனித்ததொரு இயலாக விவரித்துள்ளார் ஆலிப் புலவர். இதன் பின் தம் மிகுறாசுப் பயணத்தை இனிதே முடித்து மக்கமா நகரம் மீண்ட செய்தியை 'நபியுல்லா மக்கம் வந்த வியல்' என்னும் தலைப்பின் கீழ் ஆசிரியர் விவரித்துள்ளார். இவ்வியல் மிகுறாசுமாலையுள் இடம் பெற்றுள்ள உட்தலைப்புக்களுள் நூற்றி அறுபத்தியைந்து செய்யுள்களைப் பெற்றுள்ள பெரியதோர் இயலாகும். இவ்வியலின் இறுதியில் உள்ள மூன்று பாடல்களில் தம் மிகுறாசு மாலை இயற்றுவதற்கு உறுதுணையாய் அமைந்தோருக்கு நூலின் முகப்பில் கூறியது போல் நன்றி கூறுவதுடன் மிகுறாசுமாலையை படிப்போருக்கும் அல்லாஹ் கிருபை அளித்தருள்வான் எனக் கூறி ஆலிப்புலவர் நிறைவு செய்துள்ளார்.

---

# ஆறாம் இயல்

## திருநெறி நீதம்

அகப்பொருள் இலக்கியமாக அமைந்த பல்சந்தமாலையை முதற்கண் பார்த்தோம். தமிழகச்சித்தவைத்திய முறையைப்பயின்று ஆற்றலும் அனுபவமும் பெற்று கவிதைகள் மூலம் அவற்றை விளக்கிய யாகோபு சித்தர் பாடல்களைஆராய்ந்தோம். இஸ்லாமிய கொள்கைகளை வினாவிடை வடிவில் அமைத்துப் பாடப்பெற்ற ஆயிரமசலா என்னும் அதிசய புராணத்தைப் படித்துப்பயனடைந்தோம். பெருமானார் முகம்மது(சல்) அவர்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாபெரும் நிகழ்ச்சியாகக் கருதப்படும் விண்ணேற்றம் என்னும் மிகுறாஜ் சம்பவத்தைப் பற்றி விரிவாக அறியமுயன்றோம். இப்பொழுது நாம் மேற்சொன்னவற்றிலிருந்து வேறுபட்ட இஸ்லாமியக் கொள்கைகளை மீண்டும் வினாவிடை முறையில் விளக்கத் தோன்றிய திருநெறி நீதத்தை எடுத்துக்கொள்வோம்.

திரு+நெறி+நீதம் என்னும் மூன்று சொற்களைக் கொண்டது திருநெறிநீதம் என்னும் சொற்றொடர். திரு என்னும் சொல்லுக்குப் பல கருத்துக்கள் உண்டு. அழகு, புனிதத்தன்மை, செல்வம், திவ்விய போன்ற பல கருத்துக்கள் உண்டு. நெறி என்றால் வழி, சமயம், விதி, நல்லொழுக்கம் முதலிய பல பொருள்களைக் குறிக்கும். நீதம் என்பது தகுதியானது, நீதி என்பனவற்றைச் சுட்டும். நல்லொழுக்க நீதிகளை விவரிக்கும் புனித நூல் என்பது திருநெறிநீதம் என்பதன் விளக்கம் எனலாம். திருநெறிநீதம் என்னும் தலைப்புக் குறிப்பிடுவது போன்று இந்நூல் புனிதமான இஸ்லாமிய சமய நல்லொழுக்க நீதிகளைத் தன்னிடத்தே கொண்டுள்ளது.

தமிழில் எழுதப்பட்ட இஸ்லாம் பற்றிய வேறு நூல்களில் கூறப்படாத இஸ்லாமிய நல்லொழுக்க முறைகள் திருநெறி நீதத்தில் இடம் பெற்றுள்ளன. இங்கு விளக்கப்படும் இஸ்லாமிய ஒழுக்கங்கள் வினாவிடைகளாக அமைந்துள்ளன. யூதர்கள் நபிகள் பெருமானார் முகம்மது (சல்) அவர்களிடம் கேட்ட கேள்விகளும் அவர்கள் அவற்றிற்கு அளித்த விடைகளும் இடம்பெற்றுள்ளன. அத்தோடு பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் விடையில் விளக்கம் தேவைப்படின் பெருமானாரின் தோழர்களின் அவ்விளக்கத்துக்கான வினாக்களும் அவ்வினாக்களுக்கு பெருமானார் அளித்த விடைகளும் இங்கு இடம் பெற்றுள்ளன.

திருநெறிநீதம் நான்கு பெரும்பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. நான்கு படலங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதற்படலத்தில் பொதுப் படையான இஸ்லாமிய கொள்கைகளும் இரண்டாவது படலத்தில்

ஆண் பெண் இருபாலாரும் பற்றிய அனுமதிக்கப்பட்டனவும் விலக்கப் பட்டனவுமாகிய விதிமுறைகள் விவரிக்கப்பட்டுள்ளன. திருமணம் நிகழ்த்தப்படும் விவரங்களும் இப்படலத்தில் தரப்பட்டுள்ளன. மூன் றாம் படலத்தில் இஸ்லாத்தில் விலக்கப்பட்ட கருமங்களில் ஈடுபடுபவர் அறியும் வகையில் அவ்வாறு பாவ நடவடிக்கைகளில் ஈடுபடுபவர் களுக்கு அளிக்கப்படும் தண்டனைகளும் வரையறுக்கப்பட்டுள்ளன. அத்தோடு முஸ்லிம்களிடையே சொத்துப் பிரிக்கப்படவேண்டிய நியாயமான விதிமுறைகளும் இப்படலத்தில் விதந்தோதப்பட்டுள்ளன. நான்காவது படலம் இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதலாவது பிரிவில் இறுதிநாளின் அடையாளங்களும் அந்நாள் எவ்வாறு அமை யும் என்னும் முறையும் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளன. நான்காம் படலத்தின் இரண்டாம் பிரிவில் உலகம் அழிந்தபின் இஸ்லாமிய போதனைகளுக்கு இணங்க மறுமை நாளில் ஏற்படும் நிகழ்வுகளும் அவற்றின் தாத்பரியங்களும் நுணுக்கமாக வருணிக்கப்பட்டுள்ளன.

திருநெறிநீதம் என்னும் நூலில் உள்ள நான்கு படலங்களிலும் ஈராயிரத்து இருநூற்றிருபத்தாறு செய்யுட்களே இடம் பெற்றுள்ளன. ஆனால் இப்பொழுது பதிக்கப்பட்டுள்ள நூலில் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை ஈராயிரத்து இருநூற்றிருபத்தொன்பது எனக் குறிப் பிடப்பட்டுள்ளது. நான்காம் படலத்தின் இரண்டாம் பாகத்திலுள்ள நானூற்றுத் தொன்னூற்றிரண்டாம் செய்யுளுக்குப் பின்னர் இடம் பெற்றுள்ள மூன்று செய்யுட்களும் திருநெறி நீத ஆசிரியரால் இயற்றப் பட்டவை போல் தோன்றவில்லை. அதன் பதிப்பாசிரியரால் தாம் நிறுவ வேண்டி உள்ள ஒரு குறிக்கோளை நிறுவுவதற்காகப் பின்னால் சேர்க்கப்பட்டவை என்று கூறலாம். அம்மூன்று பாடல்களின் யாப்பமைதியும் அம்மூன்று பாடல்களும் இடைச்செருகல்களாகவே கொள்ளப்படவேண்டியவை ஆகும் என்பதை வலியுறுத்துவதாகும்.

திருநெறி நீதம் என்னும் இந்த நூலின் பெயரைப் பல இடங்களில் அதன் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். தாம் கூறக்கருதிய பொருளை விவரிக்கையில் நூலின் பெயரை மாற்றி அமைத்துக் குறிப்பிட்டுள்ளார். முஸ்லிம்களாகிய தீனோர் நடக்க வேண்டிய வழிமுறைகள் இவை இவை என வரையறை செய்துள்ளார்கள் எம்பெருமான் முகம்மது (சல்) அவர்கள். இவ்வாறு பெருமானார் பகுத்து வகுத்துக்காட்டிய நீதிநெறி முறைகளே இங்கு குறிப்பிடப்படுகின்றன என்பார் ஆசிரியர். இக்கருத்துக்கள் அமைந்த செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

வேதமே நெறியின் விளங்கிய தீனோர்
விதமிது நடக்கவும் விதியென விதித்து
நீதமே திருநெறியென நிறுத்தி
நீர்நிலத் தோரர சாளவும் நிரையா

பாதமே தரையி லுறைந்திடா வள்ளல்
பயகாம் பருக்கி றையவன் பகுத்த
வீதமா வேதத்தின் பலபல வுக்கும்
விலத்திடும் தமிழி தின்வி தமே

(முதலாம் படலம் : 5)

திருநெறி நீதங்களை முஸ்லிம் மக்கள் அறிந்திருத்தல் அவசியமாகும். அவற்றை அத்தகையோர் அறியாமல் இருக்கக்கூடாது எனவேதான் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

திட்டமாத் திருநெறி நீதந் தன்னை
தீனவ ரறிந்தி டாதிருக் கொண்ணாது

(முதலாம் படலம் : 7)

நான்கு வேதங்களிலும் அநேக சாஸ்திரங்களிலும் உள்ளவற்றை எல்லாம் அறியவேண்டின் புறுக்கான் வேதத்தை அடிப்படையாக வைத்து எழுந்த நீதிமுறைகளை இங்கு விளக்குவதாகவும் அந்த நீதி முறைகளைச் செவ்வனே கடைப்பிடித்தால் சுவர்க்கப் பதவி நிச்சயம் கிடைக்கும் என்றும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர் :

அறிந்திடு வேத நாலும்
அநேக சாத்திரங்களெல்லாம்
தெரிந்ததின் பொருளைப் பார்க்க
திருநெறி நீத மென்றும்
வருந்திய புறுக்கான் றன்னை
வணங்கிடில் சுவர்க்கமென்றும்
அறைந்ததில் இருந்த தாலே
அனேக முஞ்சரி யதாமே.

(முதலாம் படலம் : 104)

திருநெறி நீதத்தில் உள்ள விஷயங்கள் அனைத்தும் முகம்மது றசூல் (சல்) அவர்கள் திருவாய் மலர்ந்தருளியவையே என்றும் அவையே திருநெறி நீதமாக அமைந்துள்ளன என்றும் உலகத்தாசை வெறுத்தவனே ஈடேற்றம் பெறுவான் என்றும் அவ்வாறு உலகத் தாசைகளை வெறுக்காவிட்டால அவனுடைய ஈமானும் வணக்கமும் அவனைவிட்டேகிவிடும் என்றும் கூறப்பட்டுள்ளது. இக்கருத்துக் களைக் கொண்ட பின்வரும் பாடலில் திருநெறிநீதம் என்னும் சொல் நூலைக் குறிக்காது, நூலில் உள்ள பொருளினை இயம்புவதாக அமைந்திருப்பதைக் காணலாம்.

வள்ளலாரிறசூ லுல்லா வவரிரு பேரைச் சேர்ந்த
தெள்ளிய மறையோர்க் கெல்லாம் திருநெறி நீதஞ்சொல்வார்
உள்ளத் திலுலகத் தாசை உகந்திடான் சரகுக் கேறான்
கள்ளனாம் வணக்க மீமான் கருத்தை விட்டே குமென்றார்

(இரண்டாம் படலம் : 8)

திருநெறி நீதம் என்பதை ஆசிரியர் தீனெறி நீதம் என்றும் குறிப் பிட்டுள்ளார். தீன் என்னும் சொல் இஸ்லாத்தைக் குறிக்கும். ஆதலால் தீனெறி நீதம் என்பது இஸ்லாமிய நெறி முறைகளைப் பற்றிய நீதிகள் எனப்பொருள்படும். திருநெறி நீதம் என்னும் இந்நூலுக்கே தீனெறி நீதம் என்னும் பெயரும் சூட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

தேறியே இருந்து வாழத் தீனெறி நீதம் தன்னில்
(இரண்டாம் படலம் : 84)

என்றும்

திருத்திய மணமி ணங்கத் தீனெறி நீதம் தானே
(இரண்டாம் படலம் : 243)

என்றும் வந்துள்ளமை காண்க.

திருநெறி நீதம் என்று திக்கெலாம் விளங்கி யோங்கும்
(மூன்றாம் படலம் : 24)

என்றும்

சொல்லு வாரிரு பதிக்கும் திருநெறி நீதம் ஆளும்
வல்லவன் தூதர னைவர்க்கும் வார்த்திக ரிறசூலுல்லா
(மூன்றாம் படலம் : 58)

வகைபெரு மிறைய னாதி கியா மத்திடு மமளி
துகைபெரு திருநெறி நீதம் துவங்கிட நாலாம் படலம்
(நான்காம் படலம் : முதலாம் பாகம் : 8)

என்றும்

தீனவர்க்கும் யாவர்க்கும் சோபனமே
திருநெறி நீதமறிந்தவர்க்குச் சோபனமே.
(நான்காவது படலம் : இரண்டாம் பாகம் : 442)

என்றும்

திருநெறி நீதமெட்டுத் திக்கெலாம் விளங்குமணியை
(நான்காவது படலம் : இரண்டாம் பாகம் : 467)

என்றும்

திடம்பெறு முலகத்தினர்க்குந் திசைகம்பம்
திருநெறி நீதத்தை நாட்டே
(நான்காவது படலம் : இரண்டாம் பாகம் : 490)

என்றும் நூலின் பெயர் வந்துள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

திருநெறி நீதம் என்னும் நூலில் அடங்கியுள்ள பொருள் அனைத்தையும் முதன் முதலில் உலகுக்களித்தவர் முகம்மது நபி (சல்) அவர்களே யாவர். திருநெறி நீதம் என்னும் நூலிலே பல தடவைகள் திருநெறி நீதர் என அழைக்கப்பட்டுள்ளார்.

தெரிந்தவ ரறிய வள்ளல் திருநெறி நீதம் சொன்னார்
(இரண்டாம் படலம் : 104)

......பின்னும் திருநெறி நீதர் சொல்வார்
(மூன்றாம் படலம் : 95)

திக்கெலாம் மறைநெறி போற்றும் திருநெறி நீத ரானோர்
(மூன்றாம் படலம் : 98)

தெரிசினை உலகோர்க்கெல்லாம் திருநெறி நீதர் சொல்ல
(நான்காவது படலம் : முதலாம் பாகம் : 2)

......திருநெறி நீதரான
(நான்காவது படலம் : முதலாம் பாகம் : 458)

திட்டமாந் திருநெறி நீதர் முகம்மது நபியே மெய்தான்
(நான்காவது படலம் : இரண்டாம் பாகம் : 4)

எனப் பல பாடல்களில் பெருமானார் திருநெறி நீதர் என அழைக்கப்பட்டுள்ளார்.

திருநெறி நீதம் என்பது தீனெறி நீதம் என எவ்வாறு அழைக்கப்பட்டதோ அதே போன்று திருநெறி நீதர் என்பதும் தீனெறி நீதர் என்றும் இந்நூலில் இவ்வாறு அழைக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்.

தெரிந்தபின் விலக்கச் சொல்லித்
தீனெறி நீதர் சொன்னார்
(இரண்டாவது படலம் : 119)

முகம்மது நபி (சல்) அவர்கள் பல பாடல்களில் திருநெறி நபி என்றும் வருணிக்கப்பட்டுள்ளார்.

......திருநெறி நபியையும் நினைந்தான்
(இரண்டாம் படலம் : 155)

......திருநெறி நபியே மெய்தான்
(மூன்றாவது படலம் : 201)

சில சமயங்களில் திருநெறி நீதம் என்பதில் உள்ள நீதம் குன்றி திருநெறி என்றும் வழங்கப்படுகிறது.

......திருநெறி அறியச் சொல்லும்
(இரண்டாவது படலம் : 16)

தேடிய வேசை யாரும் திருநெறி தப்பி னாளே
(இரண்டாம் படலம் : 288)

உரைத்திடுந் திருநெறி மூன்றாம் படலத்தில்
முதல் வருந்திட்டம்
(மூன்றாவது படலம் : 37)

ஈதென் திருநெறி மூன்றாம் படலத்தில் மூன்றாந்திட்டம்
(மூன்றாவது படலம் : 53)

தீன்குலம் திருநெறி மூன்றாம் படலத்தில் நாலாந்திட்டம்
(மூன்றாம் படலம் : 76)

திரங்கொள்ளுந் தீனோர்க் கெல்லாம் திருநெறி மூன்றாம் படலம்
(மூன்றாம் படலம் : 84)

என திருநெறி என்னும் சொற்றொடர் அமைந்துள்ளது.

திருநெறி நீதம் என்னும் நூலின் ஆசிரியர் பீர் முகம்மது என்பவர். இந்நூலைப் பதிப்பித்தவர்கள் இது தற்கலை பீர் முகம்மது சாஹி பொலியுல்லாஹ் அவர்கள் திருவாய் மலர்ந்தருளியது எனக் குறிப் பிட்டுள்ளனர். இது 1929 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது. இதன் சுருக்கமான வேறொரு பதிப்பும் உண்டு. திருநெறி நீதத்தில் உள்ள எந்தப் பாடலிலும் பீர் முகம்மது சாகிபு ஒலியுல்லாஹ் அவர்களைப் பற்றிய செய்தியைக் காண முடியாது. ஒருசில பாடல்களிலே பீரு முகம்மது என்னும் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. பீர் என்பது பாரசீகச் சொல். ஆன்மீகக் குருவை அல்லது தலைவரைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இந்நூலின் முதலாவது படலத்தில் இடம் பெற்றுள்ள பதினைந் தாம் பாடலில் புலவர் தம் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். இந்தப் பாடலில் இறசூலுல்லாஹ்வின் வாழ்க்கையில் அறுபத்திரண்டாம் ஆண்டு நிகழ்ந்த சம்பவங்களை வருணிப்பதாகக் கூறித் தமது பெயரையும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

மீதனி யிறசூ லுல்லா இருந்துல காளு நாளில்
ஆதி யின்நபி வயத றுபத்தி ரண்டா மாண்டில்
காதலன் விளங்கும் வள்ளல் காரண கவிதை யாகப்
பேதையென் றெளியேன் பீரு முகம்மதன் பேசு குருவே

பீரு முகம்மது என்னும் இவ்வாசிரியர் பெயர் பெருமானார் முகம்மது (சல்) அவர்களையும் குறிக்கு முகமாக ஒரு பாடலில் பயன் படுத்தப்பட்டுள்ளது. திருநெறி நீதம் என்னும் நூலை இயற்றிய பீரு முகம்மது அவர்களையும் குறிக்கும். திருநெறி நீதம் வகுத்த பெருமானார் (சல்) என்னும் பீர் முகம்மது என அவர்களையும் குறிக்கும். அவ்வாறு இரண்டு பெயர்களையும் குறிக்குமுகமாக இந் நூலாசிரியர் பீர் முகம்மது என்னும் அச்சொற்றொடரை தமது நூலில் உள்ள ஒரு பாடலில் இவ்வாறு அமைத்துப்பாடியுள்ளார்.

நூறொளி துலங்கும் முகம்மதர் பவனியின் வருந்திரள் சூழ்சபையில்
பீரு முகம்மதன் திருநெறி நீதம் பிரபந் தமனர் சபையறிய
கூறவு முகம்மத ரிறசூல் மகிழ்ச்சி கொண்டன பேறாமே புகழ
பெருமைய மிகுபதி யறிய பிரியம் வைத்தடி யேனைப் பேணி

(நான்காவது படலம் : இரண்டாம் பகுதி : 378)

மற்றொரு பாடலில் ஆசிரியர் தம்மைக் 'கவி' என்று மாத்திரமே குறிப்பிட்டுள்ளார். எல்லோரும் பெருமானார் முகம்மது (சல்) அவர் களைப் புகழும் இறுதி நாளில் தாமும் பெருமானாரைப் புகழ்வதாக இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

கவியும் முகம்மது நபிபதம் புகன்றே
காரண சோபன முரைப்பார்

(நான்காவது படலம் : இரண்டாம் பகுதி : 438)

நான்காவது படலம் இரண்டாம் பகுதியில் உள்ள 477வது செய்யு ளிலும் 47வது செய்யுளிலும் ஆசிரியர் தமது பெயரைச் சுட்டாது தாம் இயற்றிய நூல் எத்தகையது என்பதைக் குறிப்பிட்டுள்ளார். தாம் கூறுவது எத்தகைய பிசகையும் கொண்டதன்று என்றும் நிசமானது என்றும் சத்தியமானது என்றும் உறுதிமொழி பகர்ந்துள்ளார் ஆசிரியர்.

வேறொரு பாடலில் தம்மால் எழுதப்பட்ட நூலில் உள்ள கவிதை களின் மொத்த எண்ணிக்கையைக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் இன்று கிடைத்துள்ள திருநெறி நீதத்திலுள்ள கவிதைகளின் எண் ணிக்கையுடன் அது பொருந்துவதில்லை. காலப்போக்கில் சில அழிந் திருக்கலாம். அந்தப்பாடலில் ஆசிரியர் இவ்வாறு கூறி உள்ளார்.

திட்டமாம் திருநெறி நீதம்
தீனவர் தீன்வகை யறிய
பாட்டுமாய் தீனோர்க் காக
படித்தரங் கேற்றி னேனே.

(நான்காவது படலம் : இரண்டாம் பகுதி : 491)

முழுமை பெற்றது என்னும் பொருளில் முத்தாய்ப்பு என்பர். அவ்வாறு இவ்வாசிரியரும் ஒரு முத்தாய்ப்புச் செய்யுளைப் பாடி உள்ளார். அதுதான் அவருடைய கவிதைத் தொகுதியில் இறுதிக் கவியாக அமைந்துள்ளது.

படிப்பது உலகோர் முன்னே பணந்திரள் பவுசுக் கல்ல
எடுப்பவர் படிப்போர் எவர்களும் ஆலி மான
அடுப்பவர் நபிச ரகை அனைவருந் தீனிலாக
படித்திடும் காவியம் திருநெறிநீதம் பீர்முகம்ம துரைத்தார் முத்தே.

(நான்காவது படலம் : இரண்டாவது பாகம் : 492)

திருநெறி நீதத்தில் பீர் முகம்மது சாகிபு ஒலியுல்லாஹ் அவர்களைப் பற்றிய குறிப்பு எதுவும் காணப்படவில்லை. 1929 ஆம் ஆண்டு பதிப் பிக்கப்பெற்ற திருநெறிநீதத்தின் முன்னுரையிலும் திருநெறி நீதத் தின் நான்காவது படலம் இரண்டாம் பகுதியில் உள்ள (492) முத்தாய்ப்புச் செய்யுளுக்குப் பின்னர் இடம் பெற்றுள்ள மூன்று செய் யுட்களிலும் தக்கலை பீர் முகம்மது சாகிபு அவர்கள் பற்றிய சில குறிப்புக்கள் இடம் பெற்றுள்ளன. இக் குறிப்புக்கள் இடம் பெற்றுள்ள செய்யுட்கள் திருநெறி நீத ஆசிரியர் பீருமுகம்மது அவர்களுடைய தாகத் தோன்றவில்லை. பதிப்பாசிரியரால் பின்னர் சேர்க்கப்பட்டவை எனவே தோன்றுகின்றன. இம்மூன்று செய்யுட்களின் அமைப்பு ஏனைய செய்யுள்களிலிருந்து வேறுபட்டிருப்பதைக் காணலாம். தக்கலை பீர் முகம்மது சாகிபு ஒலியுல்லாஹ் அவர்களின் வாழ்க்கை குறிப்புக்கள் நூலில் இடம் பெறவில்லை என்பதைக் கண்ட பதிப் பாசிரியர் இவ்விவரங்களை இங்கே சேர்த்துள்ளார் என்பது புலனா கின்றது. தக்கலை பீர் முகம்மது சாகிபு ஒலியுல்லாஹ் அவர்களின் ஞானமணிமாலை போன்ற ஏனைய ஞானப்பாடல் நூல்களில் அவற்றின் ஆரம்பத்திலேயே பீர் முகம்மது சாகிபு ஒலியுல்லாஹ் பற்றிய குறிப்புக்கள் இடம் பெற்றிருப்பதை காணலாம். ஞானப் புலவர் அவர்களே அவற்றைச் சேர்த்திருப்பதைக் காணலாம். ஆக, திருநெறிநீதம் இயற்றிய பீர் முகம்மதுப் புலவர் என்பவர் தக்கலைப் பீர் முகம்மது சாகிபு ஒலியுல்லாஹ்விலிருந்து வேறுபட்டவர் என்பதே தெள்ளிதிற் புலனாகின்றது.

திருநெறி நீதம் இயற்றப்பட்ட காலம் ஒரு பாடலில் குறிப்பிடப் பட்டுள்ளது. இப்பாடலுக்கியைய திருநெறி நீதம் ஹிஜ்றி 1022 ஆம் ஆண்டு றபியுல்லாகிர் இருபதாம் நாள் வெள்ளிக்கிழமை பாடி முடிக்கப்பட்டது என்பது புலனாகின்றது. இக்குறிப்புக்கள் ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

குருநபி கிசுறத் தாகி குவலயத் தாயி ரத்தின்
இருபத் திரண்டா மாண்டி லியம்பிடும் றப்பி யுலா
கருமென் றிருபதன்று காரண வெள்ளி நாளில்
திருநெறி நீதம் பாடத் திருவருள் பெருகத் தானே (17)

இங்கே குறிப்பிடப்பட்டுள்ள ஹிஜ்றி ஆண்டுக்குச் சமமான ஆங்கில ஆண்டு கி.பி. 1613 ஆம் ஆண்டாகும். அந்த ஆண்டில் இஸ்லாமிய மாதமான றபியுலாஹிர் மாதம் முதலாம் பிறை (அதாவது முதலாம் நாள்) மே மாதம் 10 ஆந்தேதி ஆகும். எனவே றபியுலாகிர் 20 ஆம் நாள் ஜூன் மாதம் 7 ஆந்தேதியாகும். இதற்கிணங்க திருநெறி நீதம் கி.பி. 1613 ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஏழாம் நாள் வெள்ளிக் கிழமை இயற்றப்பட்டதாகும்' இந்தத் தேதியை அடிப்படையாக வைத்துப் பார்க்கும்பொழுது திருநெறி நீதத்தில் இடம் பெற்றுள்ள 16வது செய்யுள் இடைச்செருகலாகப் புகுத்தப்பட்டுள்ள ஒரு செய்யு ளாகும். இந்தப் பதினாறாவது செய்யுள் சதக்கத்துல்லா (றலி) அவர்கள் திருநெறி நீதம் இயற்ற அதன் ஆசிரியருக்கு உரை வழங் கினார் எனக் குறிப்பிடுகிறது. ஆனால் இக்குறிப்பு உண்மைக்கு முரணாக அமைந்துள்ளது.

செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள் ஹிஜ்றி 1042 ஆம் ஆண்டில் பிறந்தார்கள். இது ஆங்கில ஆண்டு 1632/1633 க்குச் சமமாகும். ஹிஜ்றி 1042 இல் பிறந்த செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள் ஹிஜ்றி 1022 இல் பீர் முகம்மதுப் புலவரால் இயற்றப்பெற்ற திருநெறி நீதத்துக்கு உரை வழங்கி இருக்க முடியாது. எனவேதான் சதக்கத்துல்லா அப்பா அவர்கள் உரை வழங்கியதாகக் கூறப்படும் கூற்று இடம் பெற்றுள்ள திருநெறி நீதச் செய்யுள் (17) இடைச் செருகலாகும். நடைபெற்றிராத ஒரு நிகழ்ச்சியை குறிப்பிடும் ஒரு செய்யுளாகும். பேரறிஞர் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்களைத் தத்தம் நூல்களுடன் தொடர்பு படுத்திக்கொள்வது மரபாக இருந்தது. இதனையே திருநெறி நீதம் பதிப்பாசிரியரும் பயன்படுத்தி உள்ளார் என்று கூறுவது தவறாகாது. பதிப்பாசிரியர் சதக்கத்துல்லா அப்பா அவர்களின் பிறந்த ஆண்டைக் கருத்தில் கொள்ளாது இச்செய்யுளை இங்கே சேர்த்துள்ளார் என்றே கூறுதல் வேண்டும்.

திருநெறி நீதத்தின் முன்னுரையில் அதன் பதிப்பாசிரியர் மற்றொரு தவறான செய்தியையும் குறிப்பிட்டுள்ளார், 'காயல் பட்டணத்து குதுபு செய்கு சதக்கத்துல்லா லெப்பை ஆலிம் அவர்கள்... தற்கலைக்கு வந்த காலம் கொல்லம் 620 ஆம் ஆண்டு என்று சொல்லப் படுகின்றது. பீர் முகம்மது சாய்பு அவர்கள் சரித்திரத்தில் செய்கு சதக்கத்துல்லா செய்கு பீர் முகம்மது சாய்பு அவர்களுக்கு இதைப்பாட

உத்தரவு கொடுத்தார்கள். நல்மாராயம் பெற்றார்கள்' என்று முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். கொல்லம் ஆண்டின் ஆரம்பம் கி.பி. 825 ஆகும். இதன் அடிப்படையில் கொல்லம் 620 ஆம் ஆண்டு கி.பி. 1445 க்குச் சமமாகும். கி.பி. 1445 ஆம் ஆண்டு ஹிஜ்றி ஆண்டு 849 க்குச் சமமாகும். ஹிஜ்றி 1042 ஆம் ஆண்டில் பிறந்த செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள் ஹிஜ்றி 849 ஆம் ஆண்டுக்குச் சரியான கொல்லம் ஆண்டு 620 இல் தற்கலைக்கு வந்திருக்க முடியாது. வந்த தாகக் கூறுவது பெருந்தவறாகும். இதனைக் கொண்டு பார்க்கும் பொழுதும் திருநெறி நீதம் பாட சதக்கத்துல்லா அப்பா அவர்கள் உரை வழங்கினார் என்பது ஏற்கமுடியாத ஒரு கூற்றாக அமை கின்றது. பொருத்தமற்ற குறிப்பாகி விடுகிறது.

திருநெறி நீதத்தில் இடம் பெற்றுள்ள பாடல்கள், தலைசிறந்த பல்வேறு ஆசிரியர்களின் கருத்துக்களை கொண்டனவாகத் திகழ் கின்றன. பல்வேறு அறபுக் கிரந்தங்களில் கூறப்பட்டுள்ளனவற்றைத் தழுவியனவாய் அமைந்துள்ளன. மௌலானா றூமி அவர்களினதும் இமாம் கஸ்ஸாலி அவர்களினதும் நூல்களில் உள்ள கருத்துக்கள் திருநெறிநீதப் பாடல்களுக்குக் கருவாக அமைந்துள்ளன. இமாம் கஸ்ஸாலி அவர்களைப் பல பாடல்களிலே திருநெறிநீத ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். (மூன்றாம் படலம்: 149; 171; 185) நான்கு மதுகபுகளிலும் அவற்றை நிறுவிய இமாம்கள் கூறியுள்ளனவை திருநெறிநீதம் என்னும் நூலுக்கு அடிப்படையாக அமைந்துள்ளன. (முதலாம் படலம்: 7:10) பல நூல்களைத் தழுவியே திருநெறிநீதம் இயற்றப்பட்டுள்ளது. அவை பல பாடல்களில் (1:1; 2:229; 334; 363; 389; 436; 3:53; 76; 84; 97; 139; 149; 211; 541) பெயர் சூட்டப்பட்டுள்ளன.

திருநெறி நீதத்திலுள்ள பாடல்கள் அனைத்தும் அந்தாதித் தொடையாக அமைந்திருப்பதைக் காணலாம். திருநெறிநீதத்திலே இடம் பெற்றுள்ள முதற் படலத்திலே உள்ள முதல் பத்தொன்பது பாடல்களும் ஏனைய இஸ்லாமியத் தமிழ் நூல்களில் இடம் பெறும் கடவுள் வாழ்த்துக் செய்யுட்களாகவே அமைந்துள்ளன. திருநெறிநீத ஆசிரியர், பீர் முகம்மது அவர்கள் அப்பாடல்களைக்கொண்ட படலத் தைக் கடவுள் வாழ்த்துப் படலம் என அழைக்கவில்லை. ஆனால் அப்பத்தொன்பது செய்யுட்களும் கடவுள் வாழ்த்தில் இடம் பெறும் செய்யுட்களைப் பெரிதும் ஒத்திருக்கின்றன. கன்சுல் ஆரிபீன் தமது திருநெறிநீதம் என்னும் நூலுக்கு மூலாதாரமாக அமைந்தது என்பதை முதலாம் செய்யுளில் ஆசிரியர் பீர் முகம்மது அவர்கள் இவ்வாறு பாடியுள்ளார்.

திருநெறி நீதமென் றுரைத்திடும் வாசகந்
திசையெங்கும் படைத்திடும் திறலோன்
அருமறைப் பொருளை அகமதா யிருந்த
அனைத்தையு மறிந்துல மாக்கள்
குருமறைப் பொருளாய்க் கூறிய பலதும்
கோர்வையென் றெடுத்தன ரிமாமுலஃலம்
விரிவொடு சுன்சுல்ப் பலமுறை விதமும்
விரித்திடு தமிழிதின் விதமே (1)

இந்நூலின் இரண்டாவது பாடல் அல்லாஹ்வின் அருளை வேண்டுவதாய் அமைந்துள்ளது. அல்லாஹ்வின் ஆற்றல்களையும் அவனது படைப்புக்களையும் குறிப்பிட்டு இந்நூலை நிறைவு செய்ய அவனது துணையை விரும்பிப் பாடியுள்ளதாக அமைந்துள்ளது. அப்பாடல் வருமாறு :

விதனமொன் றணுகா வித்தினில் விளையா
விண்ணகம் மண்ணகம் விளங்கப்
பதிதனில் புறுகான் படைப்பினுக் கிணையா
பலபல மொழியையும் பகுத்த
மதிகதி ரமைத்த மறைகளு முரைத்த
மார்க்கமென் றனைத்துமே அறிய
விதிதனில் வரியா எழுதிய இறையே
வேந்தனே துணைசெய் வாயே (2)

மூன்றாவது பாடலும் இறை துதியாகவே அமைந்துள்ளது. இந்தப் பாடலில் உள்ள இறைதுதி 'மக்கமாநபியே' என்ற விளியுடன் முடிவடைகிறது.

திருநெறிநீத ஆசிரியர் பீர் முகம்மது அவர்கள் ஏனைய கவிஞரைப் போன்று கடவுள் வாழ்த்தில் இடம் பெறும் பெரியோர்கள் ஒவ்வொருவரையும் பற்றி ஒவ்வொரு பாடல் இயற்றவில்லை. மாறாக ஒரே பாடலில் பல பெரியார்களைப்பற்றிப் புகழ்ந்துள்ளார். ஒரே பாடலில் அவர்கள் அனைவருடைய ஆசீர்வாதத்தை நாடி உள்ளார். பீர் முகம்மதுப் புலவர் அவர்கள் தமக்கே உரிய பாணியில் கடவுள் வாழ்த்தைப் பாடி உள்ளார் என்பது இதிலிருந்து புலனா கின்றது. அப்பாடலில் முகம்மது நபி (சல்) அவர்களையும் அவர் களைத் தொடர்ந்து வந்த நான்கு கலீபாக்களையும் பெருமானார் (சல்) அவர்களின் திருப்பேரர் இருவர்களையும் முகையதீன் அப்துல் காதிர் (றலி) அவர்களையும் ஏனைய இறைநேசச் செல்வர்களையும் மறையோர்களையும் புகழ்ந்து பாடி உள்ளார். முதல் நான்கு கலீபாக்களையும் புகழவந்த ஆசிரியர், பீர் முகம்மதுப் புலவர்

அவர்கள் ஒரு புதிய உத்தியைக் கையாண்டுள்ளார். அந்தக் கலீபா நால்வரினதும் பெயரைக்கூடக் குறிப்பிடவில்லை. ஆனால் ஆசிரியர் குறிப்பிட்டுள்ள முறையிலிருந்து அவர்கள் யாவர் என்பது தெற்றத் தெளிவாக விளங்குகிறது. அந்த நான்கு கலீபாக்களுள் முதல் இருவரும் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் மாமனாராகும் பாக்கியத்தைப் பெற்றவர்கள். அபூபக்கர் (றலி) அவர்களின் புதல்வி ஆயிஷா அம்மையார் அவர்களையும் உமறு கத்தாப் (றலி) அவர்களின் புதல்வி ஹப்ஸா அம்மையார் அவர்களையும் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் திருமணம் புரிந்தமையினால் அபூபக்கர் (றலி) அவர்களும் உமறு கத்தாப் (றலி) அவர்களும் பெருமானாரின் மாமனாராகும் பாக்கியத்தைப் பெற்றார்கள். குலபாஉ றாசிதீன் வரிசையில் வந்த நால்வருள் கடைசியாக வந்த இருவரும் அண்ணல் நபி (சல்) அவர்களின் மருமகராகும் வாய்ப்பைப் பெற்றவர்களாவார்கள். மூன்றாவது கலீபாவாகிய உதுமான் இப்னு அப்பான் (றலி) அவர்கள் அண்ணல் நபி (சல்) அவர்களின் றுகைய்யா அம்மையார், உம்முகுல்தூம் அம்மையார் ஆகிய இரண்டு புதல்வியர்களை ஒருவர்பின் ஒருவராகத் திருமணம் முடித்தார்கள். நான்காவது கலீபாவாகிய அலி இப்னு அபூதாலிப் (றலி) அவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் இளைய புதல்வி பாத்திமா அம்மையார் அவர்களைத் திருமணம் புரிந்தார்கள். இதன் பயனாக உதுமான் இப்னு அப்பான் (றலி) அவர்களும் அலி இப்னு அபீத்தாலிப் (றலி) அவர்களும் அண்ணல் நபி (சல்) அவர்களின் மருமகராகும் வாய்ப்பைப் பெற்று விளங்கினர். இந்நால்வரையுமே பீர் முகம்மதுப் புலவர் அவர்கள் ' மாமருமிருபேர் மருகருமிருபேர் ' எனக் குறிப்பிட்டுள்ளார். இனி இக்கருத்துக்களைக்கொண்ட பாடலைப் பார்ப்போம்.

மக்கமா நகரில் வள்ளல் முகம்மதர்
இருபதத் தையும் போற்றி
மாமரு மிருபேர் மருகரு மிருபேர்
இருபதத்தையும் போற்றி
திக்கெல் லாம்பு கழும சனுசன்
இருபதத் தையும் போற்றி
தீன்கொ டிமுகை யதீனப்துல் காதிர்
பதமென் சிரசி லேற்றி (4)

இப்பாடலில் அடுத்த இரண்டு அடிகளிலும் ஏனைய இறை நேசர்களும் பெரியோர்களும் புகழப்பட்டுள்ளனர். போற்றப்பட்டுள்ளனர்.

திருநெறி நீதம் என்னும் நூலில் கூறப்பட்டுள்ளவை வினாவிடையாகவே அமைந்துள்ளன. மேற்குத் திசையிலுள்ள மஃறிப் நாட்டில் இருந்து வந்த யூதர்கள் பெருமானார் (சல்) அவர்களிடம் இஸ்லாம்

பற்றிய கேள்விகள் கேட்க அவ்வினாக்கட்கு அண்ணல் நபி (சல்) அவர்கள் இறுத்த விடைகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. வினாக் கேட்டவர்கள் மஃறிபு நாட்டைச் சேர்ந்த யூதர்கள். இவர்களைப் பற்றிய குறிப்பு பல பாடல்களில் வந்துள்ளன. (முதலாம் படலம் : 32; 33; 34; 36; 43; 44; 45) அவர்களைப் பற்றிக் குறிப்பிடும் முதல் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

போதவ மிருந்து புகழ்மறை தீனு கந்து
வேதமு மிலங்கும் போலவிண் ணெலாம் சுடர்துலங்கு
ஆதவன் கிழக்கெ ழும்ப அஹமதிறசூல் முன்னே
சூதர் களிருவர் தம்மை சூழ்ந்தவர் அனைவரும் வந்தார் (32)

யூதர்களைப் பற்றிய மற்றொரு பாடல் அந்த யூதக் கூட்டத்தின் தலைவர் இருவரும் தம்மை இன்னார் இன்னார் என அறிமுகப் படுத்துவதாக அமைந்துள்ளது. மகரீபை ஆள்கின்றவருடைய பெயர் வாரீ என்பவர் ஈன்ற தய்யூசு என்பவராவார். அவருடைய இரண்டு புதல்வர்களே தாம் என யூதர்கள் கூறியதை வைத்து பீர் முகம்மது புலவர் அவர்கள் இவ்வாறு பாடியுள்ளார்.

நாமமென் னுடைய கோமான்
    நகர்மக ரீபை யாண்ட
தாமவன் வாரீ யீன்ற
    தய்யூ செனுமர சன்பங்கில்
பூமெனு மொலியா வென்னும்
    புதல்வனா யிருவர் யாங்கள்
சேமமும் கலைக ளாய்ந்த
    செம்மலர் குழுவெல்லோரும் (44)

யூதர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் கேள்வி கேட்கத் தலைப்படுமுன்னர் சில நிபந்தனைகளை விதித்தனர். தாம் கேட்க வந்த கேள்விகட்கெல்லாம் திருப்தியளிக்கத் தக்க முறையில் விடைகள் அமைந்துவிட்டால் தாம் எல்லோரும் இஸ்லாத்தைப் பின்பற்றுவ தாகவும் தாம் வினாவும் வினாக்கட்குத் தகுந்த விடை கிடைக்கவில்லை யானால் அல்லது பெறப்படவேண்டிய விவரங்களுள் எதுவாயினும் குறைந்தால் தாம் அதனைப் பறைசாற்றி, ‘நீர் நபியல்ல’ என்று பலருக்கும் அறிவித்துவிடுவதாகவும் அந்த யூதர்கள் குறிப்பிட்டனர். இக்கருத்துக்களையே திருநெறிநீத ஆசிரியர் இவ்வாறு விவரித் துள்ளார்,

அறைந்திடும் பொருளை எல்லாம்
அனைவரும் தீனிலாவோம்
நிறைந்தொரு பொருள் குறைந்தால்
நீர்நபி அல்லவென்றும்
சிறந்திடும் மகரி பென்ற
தேசம் பலர்க்குந் தோன்ற
அறிந்திட முரச டிப்போம்
இன்னவ ருரைக்கும் போது (53)

யூதர்கள் தாம் நினைத்து வந்த செய்திகளை எல்லாம் அண்ணல் நபி (சல்) அவர்கள் முதலில் கூறினார்கள். இதனால் மகிழ்ச்சி அடைந்த அந்த யூதர்கள் அடுத்து இஸ்லாமிய மூலமந்திரமான கலிமாவைப்பற்றிக் கேட்டனர்.

சொல்வது நபியே வும்மை
சுவனம் வாழ்கலி மாதன்னில்
எல்லையி லெழுத்த தென்ன
எழுத்ததின் பொருள்தா னென்ன
வல்லவன் தூதே சொன்னீர்
வாழ்த்திய சூதர் கேட்க
தொல்லையொன் றணுகி டாதாம்
தூதரு மேது ரைப்பார் (96)

அடுத்து மூன்று செய்யுட்களில் பெருமானார் (சல்) அவர்கள் கலிமாவின் தாத்பரியத்தை விளக்கிய முறை விவரிக்கப்பட்டுள்ளது. கலிமாவின் முதற்பகுதி 'லா இலாஹ இல்லல்லாஹ்' என்று கூறினர்கள். அண்ணல் நபி (சல்) அவர்கள், 'லா இலாஹ' என்றால் 'நாயனே ஒருவன்' என்றும் 'இல்லல்லாஹ்' என்றால் 'அழிவில்லாதவன்' என்றும் விளக்கினார்கள் என திருநெறிநீத ஆசிரியர் பீர் முகம்மதுப் புலவர் அவர்கள் இவ்வாறு மூன்று செய்யுட்களைப் பயன்படுத்தி உள்ளார்.

உரைப்பவர் கலிமா கேளும்
ஓதுவர் லாயிலாஹ
சிறப்புடன் இல்லல் லாஹு
என்றி டுமிறை நாமம்
மறை புகழிதன் பொருளை
மார்க்க மிலறிய வென்றால்
நறைபுகழ் லாயி லாஹ
நாய னேவொரு வனென்றும் (97)

ஒருவனென் றுரைப்ப தல்லார்
ஒருவருமிணை யுமில்லை
சரியிணை ஒருவ ரில்லை
சகலமும் படைத்த கோமான்
வருவிய அவனைப் போல
அதிலொரு படைப்பு மில்லை
உருவுக ளொன்றைப் போல
உடலு யிருள்ளோ னல்ல (98)

நல்லவர் புகழ நாயன்
நாடெங் கும்நிறைந் திருப்பான்
எல்லகம் நினைவி லுள்ளான்
எவ்வுயிர்க் கிரண மீவோன்
இல்லல்லா அழிவில் லாதான்
என்பது கலிமா வாகும்
சொல்லிய எழுத்தீ ராறும்
தொகுத்தறி எழுத்துக் கொண்டே (99)

இங்கே லாயிலாக இல்லல்லாஹ் என்னும் சொற்றொடரிலே பன்னிரண்டு அறபு எழுத்துக்கள் உள்ளன என்பதும் 'எழுத்தீராறு' என்பதனால் உணர்த்தப்பட்டிருப்பதைக் காணலாம். கலிமாவின் சிறப்புகள் பற்றியும் அதன் முக்கியத்துவம் பற்றியும் அதன்கண் பொதிந்துள்ள ஆழ்ந்த அறிவு பற்றியும் முகம்மது நபி (சல்) அவர்கள் விளக்கி யூதர்கள் கலிமாபற்றி எழுப்பிய ஒவ்வொரு வினாவுக்கும் விடை இறுத்தார்கள்.

அபுலாதூன் வரலாறு முதலாம் படலத்தில் உள்ள 151 ஆம் பாடல் முதல் 214 ஆம் பாடல் வரை விவரிக்கப்பட்டுள்ளது. இது பிளேட்டோ (Plato) என்னும் தத்துவ மேதையைப் பற்றியது என்பர். அதேபோன்று 215 ஆம் பாடலிலிருந்து 267 ஆம் பாடல் வரை அத்தாத் என்பவரின் விவரங்கள் தரப்பட்டுள்ளன. தவுறாத்து வேதத்தில் வருணிக்கப்பட்டுள்ள அபுலாதூனின் விவரமும் சபூர் வேதத்தில் விவரிக்கப்பட்டுள்ள சத்தாது பற்றிய குறிப்புக்களும் கன்சுல் ஆரிபீனிலிருந்து எடுக்கப்பட்டதாக இந்நூலின் அடிக்குறிப்பு ஒன்று சுட்டுகிறது.

அரிதானது எது என்பதை 26 செய்யுட்களிலும் (268—293) பெரிது எது என்பதை 28 செய்யுட்களிலும் (294—321) சிறிது எது என்பதை 8 செய்யுட்களிலும் (322—329) உரிது எது என்பதை 5 செய்யுட்களிலும் (330—334) எது கொடிது என்பதை 26 செய்யுட்களிலும் (335—360) ஆசிரியர் நுணுக்கமாக வருணித்துள்ளார்,

அரிது, பெரிது, சிறிது, உரிது, கொடிது என இவ்வைந்தினையும் விளக்குமாறு யூதர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் வினவினர். அவற்றை படிப்படியாக அதே முறையில் விளக்கினார்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள். இக்கருத்தினையே பீர் முகம்மதுப் புலவர் இவ்வாறு ஒரு பாடலில் வருணித்துள்ளார்.

அரிதொரு பெரிதே என்றும் அருகிய சிறிதே என்றும்
உரிதொரு கொடிதே என்றும் உலகினிலுகமை யாக
பெரியவன் தூதே ஐந்தும் பேசுமென்றரசர் கேட்க
சரியிணை இல்லான் தூதர் சாற்றினார்கே ளரிதே (268)

இவை ஒவ்வொன்றையும் விவரிக்கும்பொழுது பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்கள் முன்னைய நபிமார் காலத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியை எடுத்துக்காட்டியே புலப்படுத்துவார்கள். ‘அரிது ரெண்டுலக மீதில் அருங்குபிர் கடன்’ என்பதை விளக்க ஈசா நபி (அலை) அவர்கள் காலத்தில் நிகழ்ந்த ஒரு சம்பத்தைச் சுட்டிக்காட்டி உள்ளார். பீர் முகம்மதுப் புலவர் அதேபோன்று எது பெரிது என்பதை விவரிக்க சுலையுமான் நபி (அலை) அவர்களுடைய காலத்தில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியை விளக்கி உள்ளார். அவ் வரலாற்று நிகழ்ச்சியை விளக்கிவிட்டு பெரியது எது எனக் குறிப்பிட்டு அத்தகைய பெரியது ஒன்றை நிறைவேற்றினால் ஏற்படும் நன்மை களையும் விவரித்துள்ளார். எளியவர்களுக்கு உணவு அளித்தல் அத்தகைய பெரிய கருமம் என்றும் அவ்வாறு அதனை நிறைவேற்றி னால் பொருள் சேரும்; பிழைகள் பொறுக்கப்படும்; வணக்கத்தினால் நன்மைகள் ஏற்படும்; மரணத்தை விலக்கி வைக்கும்; இறந்தவருக் காக அந்நற்கிரியை மறுமையில் மன்றாடும். இக்கருத்துக்களையே பீர் முகம்மதுப் புலவர் அவர்கள் இவ்வாறு வருணித்துள்ளார்.

அறிவது எளியோர்க் கெல்லாம்
அசன மாரீந் திட்டாலும்
புரிந்திரு முதலைச் சேர்க்கும்
பிழைகளும் பொறுக்கு மென்று
மறந்திடா வணக்கஞ் சேரும்
மரணமும் விலக்கி வைக்கும்
இறப்பவர் தனைமன் றாடும்
இதுபெரி தாகு மென்றார் (321)

சிறிதுடைய வகையைக் கூறவந்த ஆசிரியர் பெருமானாரின் கூற்றாக, இப்றாகீம் நபி (அலை) அவர்களுடைய காலத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியை எடுத்துக்காட்டி உள்ளார். அவ்வாறு விளக்கும் பொழுது ஐயம் இரப்பது சிறிது என்பதுடன் நின்றுவிடாது இரப்ப

வர்க்கு இல்லை என்று கூறுவதும் சிறுமையே என இவ்வாறு ஒரு செய்யுளைப் பாடி உள்ளார் இந்நூலாசிரியர்.

வருத்த மாஇறை தூதான
    வல்லவ ரிபுறா கீமும்
உரைத்திட எளியோன் தீனை
    உகந்தவ னுறுதி பெற்றான்
கருத்துட லொடுங்கி ஐயம்
    இரப்பவர் சிறிதே காண
இரப்பவர்க் கில்லை யென்று
    இயம்பி யமொழி சிறிதே (329)

உரிமையானது உரிது எனப்படும். 'உரிதினின்னோடுடன் பிறப் புண்மையின்' (2:40) என்கின்றது சிலப்பதிகாரம். எது உரிதானது என்பதனை ஒரு பாடலின் கடைசி இரண்டு அடிகளில் பீர் முகம்மதுப் புலவர் இவ்வாறு விளக்கி உள்ளார்.

மனதினி லொருநி னைவா
    மகிழொடு வணக்கந் தன்னை
இணக்கமும் உரிதா மின்று
    யாற சூலியம் பினாரே. (334)

கொடிதானவற்றை அடுத்து விவரித்துள்ளார் இந்நூலாசிரியர். பல நபிமாரின் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகள் எவ்வாறு கொடிதாக அமைந்தன என்பதை அண்ணல் நபி (சல்) அவர்கள் விளக்கியமையை இந்நூலாசிரியர் சுட்டிக்காட்டி உள்ளார். ஆதம் நபி (அலை) அவர்களைப் பொறுத்தவரையில் கொடிய நிகழ்ச்சியாக அமைந்தது ஆதம் நபி (அலை) அவர்கள் அவர்களுடைய இல்லத்தரசியின் வேண்டுகோளுக்கு இணங்கத் தடைசெய்யப்பட்ட கனியை உண்டமையே என ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

ஆகிய நபிதா னாதம் அரம்பையர் மொழியே கேட்டு
தாகிய கனியே உண்டு தனுமைய னேகம் பட்டார்
ஏகிய மடவாள் சொல்லை எவருங் கேட்டிட லாகும்
பாகிய கொடிதே என்று பாரினி லறிய வேண்டும் (338)

சுலையுமான் நபி (அலை) அவர்கள் பெரும் செல்வந்தராக விளங்கியவர். கடைசியாக அவர்கள் பரதேசியாக மாறிவிட்டார்கள். ஊரெல்லாம் திரிந்து இரந்து உண்டார்கள். உலகில் இத்தகைய தன்மை ஏற்படுவது கொடியதாகும். இதனையே ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

பாரினில் சுலையு மானார்
படைத்திடுந் தனத்தைப் பார்த்து
ஆரவர் பொருளை எண்ணி
அறிவது உலகி லுண்டோ
மீறிய பெருமை எண்ணம்
இவர்பர தேசி யாக
ஊரெல்லா மிரந்தே யுண்டார்
உலகி னிலிது கொடிதே. (339)

அய்யூபு நபி (அலை) அவர்கள் உடல் முழுவதும் புண் ஏற்பட்டுத் துன்பப்பட்டார்கள். அந்தப் புண்களிலிருத்து சீழும் புழுவும் சொரியலாயின. அத்தோடு தங்களது நகரை இழந்தார்கள்; நாட்டை இழந்தார்கள். ஆனால் அவர்கள் நல்ல நெறியை மறக்கவில்லை. நாடெல்லாம் இரந்தே உண்டார்கள். உலகினில் அய்யூபு நபி (அலை) அவர்கள் இன்னல்களுக்காளானார்கள். அவர்கள் அனுபவித்த இடையூறுகள் சொற்களால் வருணிக்க முடியாதவையாகும். அவ்வாறு அய்யூபு நபி (அலை) அவர்கள் அனுபவித்த துன்பங்கள் சொல்லொணாக் கொடியனவாகும். இதனையே இந்நூலாசிரியர் இவ்வாறு விவரித்துள்ளார்.

உலகினில் நபிஅய் யூபு
உடலெலாம் பிதன மாக
சலமொடு புழுவுஞ் சொரிய
தன்ன கர்பதியி ழந்து
நல்நெறி மறந்தி டாமல்
நாடெலாம் இரந்தே உண்டார்
உலகினில் இவர்படும் பாடு
உரைகொணாக் கொடிதே யாகும் (340)

ஈசா நபி (அலை) அவர்களைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது அவர்கள் பலரின் பசியை ஆற்றினார்கள். அவர்கள் தங்கள் வாழ்க்கையில் முப்பது ஆண்டுகள் மிடிமையிலே நடந்தன. அவர்கள் மிடிமையிலே காலந் தள்ளினார்கள். ஆகவே இந்த உலகிலே மிடிமை கொடியதாகும். இக்கருத்துக்கள் இரண்டு செய்யுட்களில் (343, 344) விவரிக்கப்பட்டுள்ளன. இரண்டாவது பாடலில் உள்ள கடைசி அடி

வாடிய மிடிமை இந்த
வையகங் கொடிதா மென்றார் (344)

இக்கருத்தினைக் கொண்டு திகழ்வதைக் காணலாம்.

மற்றொரு கொடிய நிகழ்ச்சி கல்மனம் கொண்டிருத்தலாகும். இதற்கு உதாரணமாக அபூஜகில் என்னும் கொடியவனின் உள்ளம் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. அவன் இஸ்லாத்தை ஏற்கவுமில்லை, ஈமான் கொள்ளவுமில்லை. அத்தகைய கல்மனம் இருத்தல் கொடிதாகும். இக்கருத்துக்களையே திருநெறிநீத ஆசிரியர் பீர் முகம்மதுப் புலவர் அவர்கள் இவ்வாறு பாடியுள்ளார்.

கொடுமைகள் மலியப் பொங்கும்
 குணத்த பூசகில் மனதை
படிதனில் வணங்க னேர்மை
 பட்டதும் பாழல் லாது
நொடிப்பொழுது அவனு மீமான்
 நோக்கவும் வணக்க மில்லை
கடினமா யிணங்கிக் கொள்ள
 கல்மனங் கொடிதாம் என்றார் (345)

இவ்வாறு அரிது, பெரிது, சிறிது, உரிது, கொடிது என்னும் ஐந்து கருமங்களையும் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் விளக்க மேற்கு (மஃறிபு) நாட்டு பேரறிஞர் இருவரும் அவற்றைக் குறித்துக் கொண்டனர். சரியானவை என விளக்கங்களை ஏற்றுக்கொண்டனர். இதனையே இந்நூலாசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

நடைகொடி தாகும் பின்னே
 நாடியே அறிவீ ரின்று
இடங்களும் நாளும் கண்டு
 இயம்பிடக் கெடுவும் இரண்டு
படங்களி லெழுதிக் கொண்டார்
 யாரெலாம் படைத்தோன் தூதர்
திரம்புறக் கரும மைந்தும்
 செப்பினர் சரியே என்றார் (360)

முதலாம் படலத்தினுள்ள 517 செய்யுட்களுள் ஏனையவை உலகம் படைக்கப்பட்ட விதத்தினையும் அப்படைப்போடு தொடர் புடைய மற்றைய விவரங்களையும் கொண்டனவாக அமைந்துள்ளன. வரிசையாக எண் இடப்பட்ட 39 பகுதிகளைக் கொண்டது. திருநெறி நீதத்தில் இடம் பெற்றுள்ள இரண்டாம் படலத்தில் 20ஆம் பகுதிக்கும் 21ஆம் பகுதிக்கும் இடையே உள்ள ஒரு பகுதி எண் இடப்படாமல் இருக்கக் காணலாம். பொருளடக்கத்திலும் இவ்விடைவெளியைக் காணலாம். இந்தப் படலத்தில் மாத்திரமே அதன் பல்வேறு பகுதிகள் வரிசையாக எண் இடப்பட்டுள்ளன.

இரண்டாம் படலத்தில் மனித இயல்பான விதிமுறைகள் விதந் தோதப்பட்டுள்ளன. ஆண் பெண் இருபாலாரையும் பற்றிய ஒழுக்க முறைகள் இப்படலத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. கணவன் மனைவி உறவு, அனுமதிக்கப்பட்ட (சுரிகத்)வைப்பாட்டிகளின் விவரம், விலக்கப்பட்ட (ஹறாம் ஆன) பெண்களின் தன்மை, விரும்பத்தகாத (மக்ரூஹ் ஆன) பெண்களின் தன்மை, அனுமதிக்கப்பட்ட (ஹலால் ஆன) பெண்களின் தன்மை, எந்தெந்த ஆண்கள் எந்தெந்தப்

பெண்களை மணக்கக்கூடாது, விரும்பத்தகாத கணவரின் தன்மை, அனுமதிக்கப் பெற்ற கணவரின் தன்மை முதலியன இப்படலத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. திருமணச் சடங்கு (நிக்காகு) எவ்வாறு நிறை வேற்றப்படல் வேண்டும். அதற்கான இன்றியமையாத நிபந்தனை கள் எவ்வாறு நிறைவேற்றப்படல் வேண்டும். அதன் அத்தியாவசிய நிபந்தனைகளான மகர் (மணமகளுக்குச் செலுத்தப்பட வேண்டிய பணம்) என்பதன் அளவு, அம்மகர் கடனாகும் விதம், திருமணச் சடங்கை நடத்துபவர்களின் பண்புகள், சாட்சியாக அமைபவரின் தகைமைகள், அவ்வாறு அமையக்கூடாதவர்கள், திருமணநாள் அறி யும்வகை, சுபநாளின் பலாபலன்கள், கணவன் மனைவியைக் கட்டுப் படுத்த வேண்டிய முறைகள் முதலிய இல்லற வாழ்க்கையுடன் தொடர் புள்ள பல்வேறு விஷயங்கள் இப்படலத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. விவாக விலக்கு (தலாக்), விவாக விலக்கு பற்றிய ஆண்களின் உரிமை களும் பெண்களின் உரிமைகளும், மறு விவாகத்துக்குரிய நிபந் தனைகள், கணவன் இறந்தால் அல்லது விவாக விலக்குக்கு ஆளா னால் மனைவி அனுட்டிக்க வேண்டிய (இத்தா) மறைந்து வாழும் முறைபற்றிய விவரங்கள் முதலியனவும் இப்படலத்தில் விவரிக்கப்பட் டுள்ளன.

திருமணச்சடங்கு என்னும் நிக்காகு எவ்விதம் நடத்தப்படல் வேண்டும் என்று உமறு கத்தாப் (றலி) அவர்கள் குறுக்கிட்டுக் கேட்ட னர். யூதத்தலைவர்கள் பிரதானமாக கேள்விகளைக் கேட்க அபூபக்கர் (றலி), உமறுகத்தாப் (றலி), உதுமான் (றலி), அலி (றலி) போன் றோர் குறுக்கிட்டு மேலும் விளக்கங்கோரிய பல சந்தர்ப்பங்கள் திருநெறி நீதத்தில் இடம் பெற்றுள்ளன. அத்தகைய ஒரு சந்தர்ப் பத்தில் தான் உமறுகத்தாப் (றலி) விளக்கங்கோர இறசூல் நாயகம் (சல்) அவர்கள் நிக்காகு முறையைத் தெளிவுபடுத்தினார்கள். 96 பாடல்களில் (127-222) இத்தகைய விவரங்கள் தரப்பட்டுள்ளன. அத்தகைய பாடல்களுள் ஒன்று நிக்காகுச் சடங்கின்போது என்ன என்ன ஓதப்படல் வேண்டும் என்பதை இவ்வாறு விவரிக்கிறது.

வேதமே இறையினாமம்
விதிமுறை வகையும் ஓதி
ஆதியின் நாம முன்னே
அகமதர் பேரும் ஓதி
ஆதம்பின் நபிக ளான
அம்பியா பேரும் ஓதி
சோதியின் கலிமா ஆமீன்
சொல்லிட முகியுந் தானே (2 : 133)

ஆமீன் (அப்படியே ஆகுக) என்று கூறுவதுடன் திருமணச் சடங்கு முடிவுறும் என்று இவ்வாறு கூறி உள்ளார் திருநெறி நீத ஆசிரியர் பீர் முகம்மதுப் புலவர் அவர்கள்.

ஒரு வருடத்தில் வரும் மாதங்களைப்பற்றி இந்தப் படலத்தில் குறிப்பிட்டுள்ளார். அந்த அந்த மாதங்களின் பலாபலன்களை விவரித்துள்ளார். எந்த மாதத்தில் எந்த நாளில் எந்தக் கிழமையில் திருமணம் நடந்தால் நன்றாயிருக்கும்; எந்த எந்தத் தினங்களில் திருமணம் நடக்கக்கூடாது. அத்தகைய நாட்களில் திருமணங்கள் நடைபெற்றால் அவற்றினால் ஏற்படக்கூடிய பலாபலன்கள் நன்மை தீமைகள் இப்படலத்தில் வரும் 20வது பகுதியில் விவரிக்கப்பட்டுள்ளன. இப்பகுதியில் உள்ள முதலாம் பாடலில் இறுதி அடியில்

ஆண்டுடன் மணமி ணங்கு
மாச முந்தெய் தியென்ன (3 : 212)

என முழுத்தம் பார்க்கும் பழக்கம் சுட்டப்பட்டுள்ளதைக் காணலாம்.

ஒரு வருடத்தில் வரும் இஸ்லாமிய மாசங்களை எடுத்துக்காட்டி அவ்வம் மாசங்களில் திருமணம் நடந்தால் அதன் பலாபலன்கள் எவை என்பதை இப்படலத்தில் உள்ள மூன்று பாடல்களில் ஆசிரியர் விளக்கி உள்ளார். இஸ்லாமிய ஆண்டிற்குரிய முதலாம் மாதம் முஹறம் ஆகும். இந்த முஹறம் மாதம் திருமணம் நிகழ்ந்தால் இல்லம் மாறி வாழ்வார்கள். இரண்டாவது மாதமான சபர் மாதத்தில் திருமணம் செய்துகொள்ளும் அனைவரும் வறியராவர். றபியுலவ்வல் என அழைக்கப்படும் மூன்றும் மாதத்தில் நடக்கும் திருமணங்களில் சம்பந்தப்படுபவர்களுக்கு இடைஞ்சல் ஏற்படும். இம்மூன்று மாதங்களையும் அவற்றின் திருமணப் பலாபலன்களையும் பற்றி இவ்வாறு ஒரு பாடலில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

மாச மாவரு டமுந்த
முஹறமில் மணமி ணங்கும்
பேதை மார்மறு புறத்தில்
பிறந்தவள் வாழலாகும்
சாதகம் சபர்மணங்கள்
சகலரு மிடிய ராக்கும்
பேதலம் றப்பியு லவ்வல்
பேதையி னிடைஞ்சல் ஆவான் (213)

அடுத்து வருவது நான்காம் மாதமான றபியுலாகர் மாதமாகும். இந்த மாதத்தில் திருமணம் முடிப்பவர்களுக்கும் இடைஞ்சலுண்டு. உடல் ஊனமுறும். ஐந்தாம் மாதமான ஜமாதுல் அவ்வல் மாதம் திருமணம் புரிபவர்கள் திடமான வாழ்க்கை நடத்துவர். ஜமாதுல் ஆகிர்

மாதத்தில் விவாகமாகிறவர்கள் சன்மார்க்க வாழ்க்கையில் சிறப்புறுவர். அதே போன்று உலக வாழ்க்கையிலும் சிறந்து விளங்குவர். ஏழாம் எட்டாம் மாதங்களான றஜபு மாதத்திலும் சகுபான் மாதத்திலும் மணமாகிறவர்கள் பரதேசி யாவார். இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு ஒரு பாடலில் அமைத்துப் பாடி உள்ளார்.

இடைஞ்சலு வருத்தம் தோன்றும்
றப்பியு லாகர் மாதம்
சடங்கெட இடைஞ்ச லுண்டு
ஜமா துலவ்வல் மாதம்
திடங்கொள் ளும் ஜமா திலாகிர்
தீன்து னியா வளரும்
மடங்கிய றஜபு சகுபான்
அவன்பர தேசி யாவான் (2 : 214)

இஸ்லாமிய மாதங்களுள் ஒன்பதாவது றம்ளான் ஆகும். றம்ளான் மாதத்தில் திருமணமானால் பெண் வீட்டாரால் சண்டை ஏற்படும். சிறப்பான வாழ்வை எய்துபவர்கள் பெரும்பாலும் சவ்வால் மாதத் திலே மணமானவர்களாவர். பதினோராம் மாதமான துல்கைதா மாதத்தில் மணம் புரிந்தால் தம்பதிகள் மலடாவர். பிள்ளைகள் இல்லை. இஸ்லாமிய இறுதி மாதமான துல்ஹஜ் மாதம் திருமணம் புரிந்தவர்களுக்குச் சகல பாக்கியங்களும் கிடைக்கும். எல்லாப் பவுசும் உண்டாகும். இக்கருத்துக்களை மற்றொரு பாடலில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப்பாடி உள்ளார்.

ஆகிய றம்ளான் மாதம்
அரம்பையர் அகத்தால் சண்டை
ஏகிய சவ்வால் மாதம்
இலங்கிய வாழ்வுண் டாகும்
ஆகிய துல்கை தாவில்
மலடல் லால்மக் களில்லை
பாக்கியம் பவுசுண் டாகும்
படைத்தவன் ஹஜ்ஜு தானே (215)

அடுத்தடுத்த பாடல்களில் (216-222) ஒவ்வொரு மாதத்திலும் இன்ன இன்ன நாட்களில் திருமணம் நடந்தால் நன்மை பயக்கும்; இன்ன இன்ன நாட்களில் திருமணம் நடைபெறக்கூடாது; இன்ன இன்ன கிழமைகளில் திருமணம் நடைபெற்றால் இன்ன இன்ன விளைவுகள் ஏற்படும் என்றும் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். ஞாயிறு-நன்மை குறையும்; திங்கள்-செல்வம் வளரும்; செவ்வாய்-விவாக விலக்கு; புதன்-பழவினை ஏற்படும்; வியாழன்-கொலு வாழ்வு; வெள்ளி-ஈனம் அணுகா, இரவு ஏற்றமுடையது; சனி-கானக வாழ்வு

ஏற்படும். ஒவ்வொரு நாளிலும் இன்ன இன்ன நேரம் (ஸாஅத்) திருமணம் நடைபெற்றால் இன்ன இன்ன விளைவுகள் ஏற்படும். சுபநாள்கள் அல்லாத கரி (நஹூசு) நாள்கள் இவை என்பதையும் ஆசிரியர் விளக்கி உள்ளார். நஹூசு நாள்களை இவ்வாறு ஒரு பாடலில் ஆசிரியர் விவரித்துள்ளார் :

நாளினில் முஹறந் தன்னில்
நானில மமைத்த பத்தும்
மீளவும் றம்ளான் நோன்பு
முப்பதும் பெருநா ளிரண்டும்
காளையர் ஹஜ்ஜு கூட்டும்
களரியும் அறபா நாளும்
ஏழுந குசுடன் புரையும்
இடகட நாளறியும் மாசம் (2 : 222)

வசுறாஹ் என்பது ஓர் அறபுச்சொல். இச்சொல் ஐந்து எழுத்துக்களைக் கொண்டது. வசுறாஹ் என்பது அல்லாஹூத்த ஆலா குறிப்பிட்டுள்ள மணமுறைகளும் ஒன்றாகும். இந்த வசுறாஹ் என்னும் அறபுச்சொல்லில் உள்ள ஐந்து அறபு எழுத்துக்களும் திருமணக்கிரியை (நிக்காஹூ)க்கு இன்றியமையாத ஐந்து அம்சங்களைக் குறிப்பதாக அமைந்துள்ளன. வசுறாஹ் என்னும் திருமண வழியை 141வது செய்யுளில் அறிமுகப்படுத்திய பீரு முகம்மதுப் புலவர் அவர்கள் அச்சொல்லில் இடம் பெற்றுள்ள ஐந்து எழுத்துக்களையும் அவை குறிக்கும் திருமணத்துக்கு இன்றியமையாத அம்சங்களையும் விவரித்துள்ளார். ஐந்து அறபு எழுத்துக்களையும் வாவ் (26வது எழுத்து). சீம் (13வது எழுத்து), றே (10வது எழுத்து) அலிப் (முதலாவது எழுத்து), ஹே (27வது எழுத்து) என அறிமுகப்படுத்தி அவ்வெழுத்து ஒவ்வொன்றும் எவற்றைக் குறிப்பிடுவன என்பதையும் ஆசிரியர் விளக்கி உள்ளார். வசுறாஹ் என்னும் அறபுச்சொல்லில் இடம் பெற்றுள்ள ஐந்து அறபு எழுத்துக்களையும் இவ்வாறு ஒரு செய்யுளில் ஆசிரியர் விளக்கி உள்ளார்.

வல்லவ னுரைத்த வேத
வாக்கி னால்வசு றாக்கென்று
சொல்லிய எழுத் தஞ்சும்
சோதித்தால் வாவும் சீமும்
எல்லை யில்றே அலிபும்
இயம்பிய ஹாவ தஞ்சும்
தொல்லையோன் றனுகான் சொன்னான்
தொகுத்ததின் பொருளின் வாறே. (3 : 142)

ஐந்து அறபு எழுத்துக்களையும் தொகுத்துச் சொன்ன ஆசிரியர் அவை ஒவ்வொன்றையும் வகுத்து அடுத்துக் கூறி உள்ளார். வாவ் என்னும் அறபு எழுத்தினால் வக்கீல் (பிரதிநிதி), வலி (நெருங்கிய உறவினன்) என்னும் இரண்டு அறபுச்சொல் தொடங்குகின்றன. சீம் என்னும் அறபு எழுத்தால் ஆரம்பிக்கிறது ஷாஹித் (சாட்சி) என்னும் அறபுச்சொல். ஒவ்வொரு திருமண (நிக்காஹ்) சடங்குக்கும் இரண்டு சாட்சிகள் அவசியமாகின்றனர். பொருந்திக் கொள்ளுதல் என்று பொருள்படும் ஆண்பாலாயின் றாளி என்றும் பெண்பாலாயின் றாளியா என்றும் வழங்கும் இரண்டு சொற்களும் றா என்னும் அறபு எழுத்தை (றேயும் அலிபும்) முதலில் கொண்டுள்ளன. ஹா என்னும் அறபு எழுத்தை முதலில் கொண்ட ஹாபு என்னும் அறபுச்சொல் மணவாட்டிக்கு தரவேண்டிய மகர்ப்பணத்தை (மணமகளுக்குரிய பணத்தை)க் குறிக்கின்றது. இங்ஙனம் இவ்வைந்து எழுத்துக்களும் குறிப்பனவற்றை ஒரு செய்யுள் மூலம் இவ்வாறு விளக்கி உள்ளார் ஆசிரியர் பீர் முகம்மதுப் புலவர்.

வாவென் னும்வரைந் தெழுத்து
வக்கிலது வலியுமாகும்
சாவென் னுமெழுத் திரண்டு
சாட்சியென் றுரைக்கலாகும்
றாவென் றெழுத்தே றாளி
றாளியா யவள்பொருந்தி
ஆவென் றெழுத்து ஹாபும்
அவளுக்குடைய வாறீயவேணும் (3 : 143)

இல்லற வாழ்க்கையின் நுணுக்கங்களை விவரித்த பீர் முகம்மதுப் புலவர் அவர்கள் மூன்றாம் படலத்தில் இல்லற வாழ்க்கைக்குப் புறம்பான வாழ்க்கையை நடத்தியவர்களின் வாழ்க்கை பற்றியும் அத்தகைய வாழ்க்கையின் விளைவுகளைப் பற்றியும் விளக்கி உள்ளார். விபசாரம் முதலிய துர்நடத்தையில் ஈடுபடுபவர்களினால் ஏற்படும் தீய விளைவுகளையும் அத்தகையோரை அடையாளங்கண்டு அறியும் விதத்தையும் திருநெறிநீதம் விளக்குகிறது. அனந்திரச் சொத்துக்களை உரித்தானவர்களுக்கு எவ்வாறு பிரிக்கவேண்டும் என்பதையும் இந்நூல் விவரிக்கிறது. விலக்கப்பட்ட பொருள்களை எவ்வாறு அறியலாம் என்பது பற்றிய விவரங்களையும் இந்நூலில் காணலாம். சிலை வணக்கத்தில் ஈடுபடுபவர்கள் அடையும் தீய விளைவுகளையும் தீனுல் இஸ்லாம் என்னும் நேர்வழியைப் பின்பற்றி ஒழுகுபவர்கள் பெறும் நற்பேறுகளையும் ஒன்றன்பின் ஒன்றாக வருணித்துள்ளார் இந்நூலாசிரியர்.

விபசாரத்தில் ஈடுபடுவதன் தீமை இந்நூலில் முக்கியமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அன்னிய பெண்களைப்பற்றி நினைத்தலே பாவம்

வருத்தும் செயல் என்பது இந்நூலில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. தமக்குச் சொந்தமில்லாத ஒரு பெண்ணைப்பற்றி உள்ளத்தில் நினைத்ததற்காக ஒரு நபி தமது நபிப்பதவியை இழந்ததோடு சிறைவாசம் செய்யவும் நேரிட்டது என்பது இங்கு விளக்கப்பட்டுள்ளது. யூசுபு நபி (அலை) அவர்கள் சுலைகா அம்மையாரைப்பற்றி மனதிலே நினைத்தமை காரணமாக அவர்கள் தங்களது நபிப்பதவியை இழந்ததோடு ஏழு வருடங்கள் சிறையில் வாசம் செய்யவும் நேரிட்டது என்பது ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

அதிகவெண்மதி அழகு
அரம்பை யாள்சுலைகாவை
மதியது தவறீ சூபு
மனதினில் நினைத்த தாலே
பதியினில் விருதும் வெற்றி
பயகாம் பரென்றருமை போகி
இதங்கெடச் சிறையிலானார்
இருமூன் றொடொரு வருசம் (3 : 43)

இதே காரணத்துக்காக முஸ்லிம் அல்லாத ஓர் அரசன் அடைந்த இன்னல் மற்றொரு பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. அலி பாத்துஷா என்பவருக்கு ஒரு மகள் இருந்தாள். முஸ்லிம் அல்லாத ஓர் அரசன் அவளைப்பற்றி கருத்தில் நினைத்தான். அதன் பயனாக அவனுடைய உடல் ஊனமுற்றது. காலும் கையும் குறைந்து போயின. அதனால் அவன் வருத்த முற்றான். அலிபாத்துஷாவின் வரத்தினால் இன்னல் குறைந்தான்; இதனையே ஒரு பாடலில் ஆசிரியர் இவ்வாறு விவரித்துள்ளார்.

பொருத்தில் லாஅலி பாதுஷாதான்
பூவையைக் குபிர ரசன்
கருத்தினில் நினைத்த தாலே
கையொடு காலும் குறைந்து
வருத்தமு மலிபாது ஷாதான்
வரத்தி னாலெளிதுமானார்
கருத்தினால் சனாவை நத்த
கைப்பலன் தவறிப்போமே (3 : 51)

விபசாரம் அறபு மொழியில் சனா என்று அழைக்கப்படுகிறது. விபசாரத்தில் ஈடுபடுவோருக்கு அல்குர்ஆன் கடுமையான தண்டனையை விதிக்கிறது.

விபசாரம் செய்தபெண், விபசாரம் செய்த ஆண்—
இவர்களில் ஒவ்வொருவரையும் நூறுகசையடி
அடியுங்கள். மெய்யாகவே நீங்கள் அல்லாஹ்வையும்,

இறுதிநாளையும் விசுவாசங்கொண்டவர்களாக இருந்தால் அல்லாஹ் விதித்த இக்கட்டளையை நிறைவேற்றுவதில், அவ்விருவர்களுடைய விஷயத்தில் உங்களுக்கு இரக்கம் ஏற்படக்கூடாது, அவர்களுக்கு (த்தண்டனையாக) வேதனை கொடுக்கும் சமயத்தில் விசுவாசிகளில் ஒரு குழுவினர் (அதற்குச்) சாட்சியாக அங்கு இருக்கவும். (24 : 2)

விபசாரத்தில் (சனாவில்) ஈடுபடுவோருக்கு இத்தகைய தண்டனை விதிக்கப்படும் என்று திருநெறிநீதம் கூறும். சனாச் செய்தவருக்குக் கசையடி அளிக்கப்படல் வேண்டும் என இவ்வாறு குறிக்கப்பட்டுள்ளது.

செய்தவர்க் கடியும் நூறு
செய்யுமப் பதியும் விட்டு
பையவே காதமொன்று
அகற்றியே கால மொன்று
வையமு னகரந் தன்னில்
வருகாலம்.............. (3 : 60)

விபசாரத்துக்குரிய தண்டனை வழங்கும்போது பாரபட்சம் காட்டப்படமாட்டாது. ஆண்டானுக்குத் தண்டனை அளிப்பது போல் அடிமைக்கும் தண்டனை அளிக்கப்படும். ஆனால் அந்த தண்டனையில் வேறுபாடு உண்டு. ஆண்டான் புரிந்த குற்றத்துக்குரிய தண்டனையில் பாதியே அடிமைக்கு அளிக்கப்படும்.

அய்யமில் அடிமையான
ஆண்பெண் சனாச் செய்தால் (3 : 60)

அளிக்கப்படும் தண்டனை பற்றிய விவரம் அடுத்த பாடலில் இவ்வாறு தரப்பட்டுள்ளது.

செய்திட சனாவில் பாதி
சிறந்தடி ஐம்ப தாகும்
அய்யமாங் காத மூன்று
அகற்றியே மாத மூன்று
வய்யகம் வரலாம் இன்னம்
அதிலொன்று அடிமை இல்லை
செய்வது அவர வர்க்குச்
செய்வது இருவி தமே (3 : 61)

விபசாரத்தில் ஈடுபடுவோர் இருவரில் ஒருவர் அடிமையாக இருந்தால் அந்தத் தண்டனை இருவருக்கும் இருவிதமாகவே இருக்கும் என்றும் இப்பொழுது குறிப்பிடப்பட்ட பாடலில் இறுதி அடி இயம்புகிறது. இவ்வாறு பல்வேறு நிலைகளில் நிகழ்த்தப்படும் விபசாரக் கிரியை

களுக்கெல்லாம் வெவ்வேறு தண்டனைகள் திருநெறி நீதத்தில் அதன் ஆசிரியர் விதந்தோதி உள்ளார்.

அடுத்து அனந்திரச் சொத்துக்களை அவற்றைப் பெற உரித்தோர்க்கிடையே பகிர்ந்தளிக்க வேண்டிய முறைமை திருநெறி நீதத்தில் விளக்கப்பட்டுள்ளது. ஒருவரிடம் சொத்து இருந்தால் அவற்றை எல்லாம் தொகுத்து அவற்றிலிருந்து நாற்பதிலொன்றைக் சக்காத் (கட்டாயகொடை) கொடுத்த பின்னரே அந்தச் சொத்து ஏனைய உரித்துடையவர்களுக் கிடையே பகிர்ந்தளிக்கப்படல் வேண்டும் என்று வலியுறுத்துகிறது திருநெறி நீதம் என்னும் நூல். அதனை இவ்வாறு குறிப்பிட்டுள்ளது.

ஆரா கிலு மொருவ ருற்ற
    ஆதனத் துடைய ராகில்
கராகரன்தேடு மற்றக்
    கனதனந் தனைத்தொ குத்து
பராபரத் திறைசக் காத்துப்
    பகிர்வது நாற்பதி லொன்றே (3 : 101)

இவ்வாறு நாற்பதிலொன்றை இறைவன் பேரில் கட்டாய கொடை (சக்காத்) ஆக வழங்கப்படல் வேண்டும். உலகத்திலுள்ள வறியவர்களுக்கு அளிக்கப்படல் அவ்வாறு ஈந்தபின்னர் எஞ்சியுள்ள வற்றை அரசன் தனது ஆட்சியில் வைத்துக் கொள்ளல்வேண்டும். அந்தச் சொத்துக்குரியவரின் தந்தை, தாய், மக்கள் முதலியோர்க்கும் ஈயவேண்டி இருப்பின் அத்தகைய சூழ்நிலைக்கும் இஸ்லாம் ஓர் ஏற்பாட்டைச் செய்துள்ளது. குடும்பத்தில் மூத்தவன் விருப்பப்படி அந்தச் சொத்தினைப் பகிர்ந்தளிக்கலாம். குடும்பத்திலுள்ள அனைவரிலும் மூப்புள்ளான் உள்ளம் விரும்புவது போல் பகிர்ந்து வழங்கலாம். இக்கருத்துக்கள் அடங்கிய ஒரு பாடல் திருநெறி நீதத்தில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

நாற்பதில் ஒன்றிறை சக்காத்து
    நானிலத் தெளியோர்க் கீந்து
கோப்புள்ள முதல்கள் முற்றும்
    கொற்றவ னாளலாகும்
தகப்பனுந் தாயும் மக்கள்
    எவர்களுக் கீய வேண்டில்
மூப்புள்ளான் மனது போலே
    முதலையும் கொடுக்க லாமே (3 : 102)

பங்கு பிரிப்பது பற்றிய விரிவான விளக்கம் மூன்றாம் படலத்தில் உள்ள பங்கு விபரம் என்னும் பகுதியில் இடம் பெற்றுள்ளது. ஒருவன்

இறந்துவிட்டால் அவனுடைய சொத்திலிருந்து அவனது ஆண் பிள்ளைக்கு இரண்டு பங்கு வீதமும், பெண் பிள்ளைக்கு ஒரு பங்கு வீதமும் பிரிக்கவேண்டும் என்பது இஸ்லாமியப் பங்கு பிரிக்கும் முறைமையாகும். அதேபோன்று அடுத்த மூன்று பங்கும் தாய்க்கும் தகப்பனுக்கும் உரித்தாகும் என்று திருநெறி நீதத்தில் உள்ள ஒரு செய்யுள் இவ்வாறு விளக்குகிறது.

இருந்திடில் ஒருபெண் ணாகிய
ஈவது பாதி யாகும்
சிறந்தொரு ஆணும் பெண்ணும்
செகந்தனி லிருக்கு மாகில்
புறந்திடு முதலா றுபங்கில்
பெண்ணொன் றாணி ரண்டு
இருந்திடும் பங்கு மூன்றும்
எடுப்பது தாயும் தகப்பனும் (3 : 122)

இஸ்லாமிய முறைப்படி அனந்திரச் சொத்துக்களைப் பிரிக்கும் விதிகள் பற்றிய விளக்கம் திருநெறி நீதத்தின் மூன்றாம் படலத்தில் இடம்பெற்றுள்ள 102 செய்யுட்களில் (98-199) பொதிந்திருப்பதைக் காணலாம். 240 செய்யுட்களைக் கொண்ட மூன்றாம் படலத்தில் எஞ்சியுள்ள 41 செய்யுட்களில் விலக்கப்பட்ட (ஹறாமான) பொருள்கள் எவை என்பது பற்றியும் சிலை வணக்கத்தின் தீமையும் இஸ்லாமிய முறைப்படி ஒழுகுவதனால் ஏற்படும் நன்மையும் விவரிக்கப்பட்டுள்ளன. எனினும் 212 செய்யுட்களுடன் மூன்றாம் படலம் முடிவடைகின்றபோதிலும் 240 வரையுள்ள 28 பாடல்களும் பிற்சேர்க்கையாக அமைந்துள்ளன. அவற்றுள்ளும் 213 முதல் 217 வரை உள்ள செய்யுட்கள் எந்த தலைப்புக்குள்ளும் அமையவில்லை. திருநெறி நீதத்தில் 212 ஆம் பாடலுடன் மூன்றாம் படலம் முற்றுப்பெற்றது என்று கூறிவிட்டு மேலும் 28 பாடல்கள் முடிந்தபின்னர் மூன்றாம் படலம் முற்றுப்பெற்றது எனக்குறிப்பிடப்பட்டுள்ளது.

அறிந்திட பதினெண் ணாயிரம்
ஆலங்கள் அனைத்தும் செங்கோல்
நிறைந்திரு பதிக்கும் கோமான்
முகம்மத ருரைத்தார் முத்தே (3 : 240)

என இந்தப்படலம் முற்றுப்பெறுவதைக் காணலாம்.

திருநெறி நீதத்திலுள்ள மிகு நீண்ட படலம் நாலாவது படலம் ஆகும். இந்த நான்காவது படலம் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதலாம் பாகத்தில் 541 செய்யுட்களும் இரண்டாம் பாகத்தில் 'பீர் முகம்மதுருரைத்தார் முத்தே' என்னும் செய்யுள்வரை 492 செய்யுட்களும் இடம் பெற்றுள்ளன. நாலாவது படலம்

முழுமையாக இஸ்லாமிய சமயத்துக்கிணங்க இறுதி நாள் பற்றிய விரிவான விளக்கமாக அமைந்துள்ளது. ஆகிர் சமான் என்பது கடைசி யுகம் அல்லது இறுதிக் காலம் எனப்பொருள்படும். இந்த ஆகிர் சமான் எப்படி அமையும் என நபிபெருமானின் தோழர்கள் நபி பெருமானாரிடம் கேட்க விளக்கம் தரப்பட்டது என பீரு முகம்மது புலவர் குறிப்பிட்டுள்ளார். நபிகள் பெருமானாரிடம் அசுகாபித் தோழர்கள் இவ்வாறு வினாக்கள் கேட்டனர் என்பதை இந்நூலாசிரியரின் ஒரு செய்யுளில் இவ்வாறு விவரித்துள்ளார்.

நபிகளின் நாயக நவமணிச் சுடரே
நானிலத் தவர்க்கறி வுரைத்தீர்
புவியினில் மனுக்குல மடங்கலும் நடக்கும்
புகழ்ச்சியும் மகிழ்ச்சியும் உரைத்தீர்
கெவிமலை புவிவான் அனைத்தையும் அழிக்க
கியாமத் துக்கிறை விடுமமளி
இவ்வுல கழிவது மினிவரு மமளியும்
எங்களுக் குரையுமென் றுரைப்பார் (4 : 1 : 3)

இங்கே கெவி என்பது பள்ளம் என்பதைக் குறிக்கும்.

இவ்வாறு அசுகாபித் தோழர்கள் கேட்க நபிகள் பெருமானார் விளக்க முற்பட்டார்கள். அண்ணல் (சல்) அவர்களுடைய விளக்கம் ஆரம்பிப்பதற்கு முன்னர் ஆசிரியர் பெருமானாரின் சிறப்பியல்புகளைக் குறிப்பிட்டுள்ளார். அச்சிறப்பியல்புகளை வருணிக்கும் பொழுது அண்ணலார் நிகழ்த்திய அற்புதங்கள் அப்பாடலில் சுட்டப்பட்டுள்ளன. மக்காவுக்கு வந்த ஹபீபரசன் வேண்டுகோளுக்கிணங்க சந்திரனை அழைப்பித்து இரண்டாகப் பாகுபடச் செய்தமையும் இருள் கடலமைத் தமையும் தங்களது வீட்டை முற்றுகை இட்டிருந்த குறைஷி எதிரிகளின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டு அங்கிருந்து சென்றமையையும் அதன் பயனாக எதிரிகளின் ஆற்றல் குன்றியமையையும் மிஃறாஜ் என்னும் விண்ணுலக யாத்திரையை மேற்கொண்டமையையும் இப்பாடலில் விவரித்துள்ளார் ஆசிரியர். அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

எங்களுக் குரையுமென் றனைவரு முரைக்க
யாறப்பி லாலமின் தூதர்
திங்களைப் பகுத்தவர் இருள்கட லழைத்தவர்
திருக்கரத் தெடுத்திடும் மணலால்
அங்குள்ள குபிர்க்குல மனைத்தையு மழித்தோர்
அடிமுடி அறுசின் மேலுயர்ந்தோர்
எங்குள்ள பதினெண் ணாயிர மாலம்
யாவுமே நிறைந்திடும் கோமான் (4 : 1 : 4)

இந்தப் பகுதியில் அல்லாஹ்வைப் பற்றியும் அல்லாஹ்வைப் புகழ்ந்தும் பாடப்பட்ட பாடல்களும் இடம் பெற்றுள்ளன. சிறப்பாக இப்படலத்திலுள்ள 9 ஆம் 10 ஆம் பாடல்களைக் குறிப்பிடலாம். நரகத்தை அடைகிறவர் செய்யும் பாவங்கள் பஞ்சபாதகத்தின் விபரம் என்னும் பகுதியில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இறுதி நாளின் அடையாளங்கள் முதலியன இப்படலத்தில் இடம் பெற்றுள்ளன. இறுதிநாள் எவ்வாறு அமையும் என்பது நுணுக்கமாக இப்படலத்தில் வருணிக்கப்பட்டுள்ளது.

உலகத்தில் உள்ளவர்கள் அனைவரும் மறைந்துவிட்டனர். உலகம் அழிந்தவுடன் ஒருவரும் இல்லையே என்ற வருத்தம் தெரிவிக்கப்பட்டுள்ளது. நபிமார்கள் எவரும் இல்லை என்பது இப்படலத்தில் 514ஆம் 515ஆம் செய்யுள்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. நபிகள் நாயகம் (சல்) அவர்களும் அவர்களைத் தொடர்ந்து ஆட்சி பீடத்தில் அமர்ந்த நான்கு கலீபாக்களும் இறுதி நாளன்று இல்லையே என வருந்தும் நிலைமையை ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார்.

அறிவினில் பெரியவர் இறையபு பக்கர்
    ஆண்மையில் பெரியவர் அறுசினில் புலியாம்
மறையினில் பெரியவ ரிறையவ னுதுமான்
    மார்க்கத்தில் பெரியவ ரிறையவ னுமறு
உரைத்திடும் கருமங் களனைத்துமே நிறைந்த
    உடையவன் முகம்மது நபி நயினாராம்
ஒருத்தரு மிருந்தா ரில்லையே னிலையா
    யுலகினி லிருக்கவு மினிமனம் வருமோ (4 : 1 : 516)

இவர்கள் எவரும் இல்லையாதலால் உலகில் எவரும் வாழ விரும்ப மாட்டார்கள் என்பது தொனிக்க இப்பாடல் அமைந்துள்ளமையைக் காணலாம்.

நிலையான மறுமை வாழ்வைப் பற்றிக் கூறுகிறது திருநீதத்தின் நான்காவது படலத்தில் உள்ள இரண்டாம் பாகம். எழுபிறப்பு அறியும் விபரத்தை இரண்டாம் பகுதியாகக் கொண்டுள்ளது நான்காவது படலத்தின் இரண்டாவது பாகம். முதல் பிறப்பு ஒளியிலிருந்து பிறந்தது. கடலுடன் சேர்ந்த பிறவி இரண்டாவதாகும். மழை மூன்றாம் பிறவியாகும். இவற்றினால் தானியம் உண்டானது. தானியமாயுயிர்கள் தரணியெல்லாம் நிறைந்து பூணிய விளைந்துயிர்கள் இருந்தமை நான்காம் பிறவியாகக் கணிக்கப்படுகின்றது. தாய் வயிற்றினிலுருப் பொருத்தி வளர்ந்தது ஐந்தாம் பிறப்பாகும். உலகத்திலுள்ள உயிரனைத்தும் ஒன்றாய் சேர்ந்து உருவாகிப் பிறந்து உடலும் ஆவியும் சேர உள்ள பிறவி ஆறாம் பிறப்பாகும். இவ்வாறு

உலகில் வாழ்ந்து, இறந்து பின்னர் இறுதிநாளில் மீண்டும் பிறப்பது ஏழாம் பிறப்பாகக் கொள்ளப்படுகிறது. 10 முதல் 14 வரை உள்ள செய்யுட்களில் ஏழு பிறப்புக்களையும் குறிப்பிட்ட ஆசிரியர் உலகம் நிலையற்றது மறுமை நிலையானது என்பதனை 16 ஆம் பாடலில் உறுதிப்படுத்தி உள்ளார். பிறப்பது மறு உலகில் இறப்பது இவ் வுலகில் இது உண்மை. பிறப்பு, இறப்பு இரண்டும் உண்மையே. சதா வாழலாம் என்று இருப்பது பொய்யாகும். ஆனால் இறப்பது உண்மையேயாகும். தத்துவ அடிப்படையிலான இக்கருத்துக்களை பீரு முகம்மதுப் புலவர் அவர்கள் ஒரு பாடலில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

பிறப்பது கியாம மீதில்
இறப்பது உலக மீதில்
பிறப்பிறப் பிதுதான் இரண்டும்
பொய்யில்லை நிசமே யாகும்
இருப்பது பொய்யே யாகும்
இறப்பது நிசமே யாகும் (4 : 2 : 16)

உயிர் பற்றிய விவரங்களும் ரூஹ் என்னும் ஆன்மா பற்றிய விளக்கங்களும் இப்படலத்தில் இடம் பெற்றுள்ளன. கடைசியாக நபிகள் பெருமானாரின் ஆட்சி மறுமை நாளில் நிலவும் விதம் வருணிக் கப்பட்டுள்ளது. எப்போதும் சுவனபதி செங்கோல் என்னும் பகுதி பெருமானார் மறுமை நாளில் நிகழ்த்தும் ஆட்சி பற்றி வருணிக்கிறது. அப்பகுதியில் உள்ள ஒரு செய்யுள் மறுமையின் தன்மையை இவ்வாறு விளக்குகிறது.

இறப்பொடு பிறப்பு மில்லை
எப்போ துமழிவே யில்லை
இறந்து நீமறு பிறவி
எடுப்பது ஒருவரு மில்லை
இருப்பவர் ஊழிகாலம்
எண்ணில்லா துள்ள நாளும்
தரிப்பிடம் தரிப்ப தல்லால்
தலம்விட்டுப் பிசகி டாரே (4 : 2 : 477)

திருநெறி நீதத்தில் உள்ள கருத்துக்களை இறசூல் (சல்) அவர்கள் விளக்கும்பொழுது இடையே குறுக்கிட்டு நாயகத் தோழர்கள் விவரங்கள் கோரியதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அபூபக்கர் (றலி) அவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் (2 : 45) விளக்கங் கோரியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. பல தடவைகள் உமறுகத்தாப் (றலி) அவர்கள் பெருமானார் (சல்) அவர்களிடம் சிக்கலான பிரச்சினைகளுக்கு விளக்கம் கோரினார்கள் என திருநெறி நீதம் குறிப்பிட்டுள்ளது

(2: 78; 85; 106; 127; 286; 368; 391; 406; 413; 3 : 147; 4 : 1 : 458; 459; 460) உமறுகத்தாப் (றலி) அவர்கள் சில பாடல்களில் மாமர் (2 : 166; 285; 342) என்று சிறப்பாகவும் வேறொரு பாடலில் சோதி தன் மாமா (2: 390) என்று வேறுவிதமாகவும் குறிக்கப் பட்டுள்ளதைக் காணலாம். அலி இப்னு அபித்தாலிபு (றலி) அவர்கள் வினா எழுப்பிய சந்தர்ப்பமும் இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. (2 : 16)

திருநெறி நீதம் என்னும் நூலில் இடம் பெற்றுள்ள நாலாவது படலம் முதலாம் பாகத்தில் நாட்டுச் சிறப்பு என்னும் ஒரு பகுதி அமைந்துள்ளது. இப்பகுதியில் இடம் பெற்றுள்ள பதினெட்டுச் செய்யுட்களுள் முதற்கண் உள்ள பத்துப் பாடல்களில் மக்க மதீனாச் சிறப்பு வருணிக்கப்பட்டுள்ளது. அந்நாட்டின் சிறப்பு பற்றி ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

சத்தியம் நிறைந்த நாடு தர்மம் தழைக்கும் நாடு
புத்திக ளுயர்ந்த நாடு பொன்மழை பொழியும் நாடு
பத்தினி யதிக நாடு பழவகை யதிக நாடு
முத்துகள் கொழிக்கும் நாடு முந்திரி பழுக்கும் நாடே
(4 : 1 : 170)

மற்றொரு பாடலில் நாட்டு வளம் இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

வண்டுகள் இசைகள் பாட மந்திகள் கனிதின்றாட
தண்டலை நிரவி சூட தாமரை மலர்ந்து நீட
மண்டல மதியுமோட மலரெல்லாம் மலர்ந்து கூடத்
துண்டுமங் குலத்தைக் கண்ட தோகையும் நடமிட்டாட
(4 : 1 : 171)

தீன் என்பது இஸ்லாம் மார்க்கம். தீனைப்பயிருக்கு உருவகித்தல் முஸ்லிம் கவிஞர் மரபு. திருநெறி நீதத்திலும் இவ்வுபயோகம் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

திருத்தியே உலகங்க ளனைத்தும்
தீன்பயிர் விளைத்திடக் கோமான் (4 : 1 : 98)
எழும்பியே உலகு செங்கோல்
எங்குந் தீன் பயிர்விளைத்து (4 : 1 : 99)
திசைபுக ழொலிமார் எல்லாம்
தீன்பயிர் தருமிறை எனவே (4 : 1 : 109)
பதியெலாந் தீன்பயிர் விளங்க
பண்டுபோல் செலுத்தியே வருவார் (4 : 1 : 132)
விளைந்திடும் தீன்பயிர்
தழைத்திடும் உலகை (4 : 1 : 245)

திரையிட உலகமுத் தனைத்தும்
தீன்பயிர் விளைத்திடும் திடமே (4 : 1 : 266)
உரைத்த முன் புறுக்கான் வேதம்
உலகெலாம் தீன்பயிர் விளைப்பார் (4 : 1 : 359)

இங்ஙனம் தீனினைப் பயிருக்கு உருவகிக்கும் சந்தர்ப்பங்கள் பல திருநெறி நீதத்தில் இடம் பெற்றுள்ளன.

இறுதிநாளின்போது பஞ்சகாலம் போன்ற தோற்றம் ஏற்படும். பெரியோர் சிறியோர் என்னும் பாகுபாடு இருக்காது. எல்லோரும் படிப்படியாக மடிவர். ஊருக்கு ஒரு தலைவன் ஏற்படுவான். பஞ்சைகள் பஞ்சாகப் பறப்பர். எளியோர் அருகிப்போவர். அத்தகையோர் காற்றில் பஞ்சு பறப்பதுபோன்று தரிப்பிடம் இல்லாமல் அலைந்து திரிவர். இவர்கள் இவ்வாறு அலைந்து திரிவது பஞ்சு காற்றில் பறப்பதற்கு இவ்வாறு உவமித்திருப்பதைத் திருநெறி நீதத்தில் காணலாம்.

பெருகிடுமிச் சாமகாலம் பெரியவர் சிறியவ ராவர்
ஒரு ஊர்க் கொருவர் சாவார் ஊருக்கொரு தலைவ னாவான்
அருகியே எளியோர் காற்றில் ஆடும் பஞ்சதுபோல் பறந்து
தரிப்பிடும் நிலையில் லாமல் தரணிமுற் றெளியரும் பார்ப்பர்
(4 : 1 : 76)

குயவன் மண்ணினால் பலபொருள்களை உருவாக்குவான். அவை அழிக்கப்பட்டால் பின்னரும் அவை மண்ணேயாகும். அதே போன்று மண்ணால் படைக்கப்பட்ட மனிதரும் அழிக்கப்பட்டால் மண்ணேயாக அனைவரும் மாறிவிடுவர். உலகத்தில் உள்ள உயிர்கட்கெல்லாம் அல்லாஹ்வின் ஒளிவு ஒன்றேயாகும். மண்ணினால் தயாரிக்கப்பட்ட பாண்டங்கள் அல்லாஹ்வினால் படைக்கப்பட்ட மனித இனத்துக்கு இவ்வாறு திருநெறி நீதத்தில் உவமிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

உண்டென்ன குசவன் மண்ணால்
எடுத்திடும் அனந்த பாண்டம்
மண்டலத் தலையும் பேரும்
அழித்திடில் மண்ணேயாகும்
மண்டலத் துயிர்கட் கெல்லாம்
அவனொளி ஒன்றேயாகும் (4 : 2 : 99)

பாலில் மத்தையிட்டுக் கடைந்தால் நிணம் திரண்டெழும். பாலைக் கடைந்தால் நெய்பெறப்படும். அதேபோன்று கயாத்துல் கைபார் என்னும் கடலில் இறைவனால் படைக்கப்பட்ட படைப்பினம் அனைத்தும் மிதக்கும். உயிரில்லாது உடல் எழும்பும். இரண்டுக்கும்

உவமை கூறியுள்ளார் பீரு முகம்மதுப் புலவர் தமது திருநெறி நீதத்தில் இவ்வாறு :

மத்திட்டுக் கடைந்த பாலில்
நிணந்திரண் டெழுந்தாற் போல
எத்திசை கயாத்துல் கைபார்
எங்குமே மிதக்க யாவும்
எத்தனை கோடா கோடி
இறையவன் படைப்ப னைத்தும்
உத்தம மிறையின் படைப்பு
உயிரில் லாதுட லெழும்பும் (4 : 2 : 117)

எந்த முஸ்லிம் கவிஞரும் அல்லாஹ்வையும் அவனது அழகிய திருநாமங்களையும் அவன் தன் பண்புகளையும் வருணிக்காமல் விடுவதில்லை. கலிமாவை விளக்கும்பொழுது முகம்மது நபி (சல்) அவர்கள் அல்லாஹ்வை வருணித்தார்கள் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அத்தகைய வருணனைகள் 'அவன் ஒருவன், அவனுக்கு இணை எதுவும் இல்லை, எவருமில்லை; அவனே எல்லாவற்றையும் படைத்தான். அவனைப்போன்ற பிறிதொன்றும் இல்லை, அவன் எந்த உருவத்தைப் போன்றும் அமையவில்லை. உருவமற்றவன்; உடலற்றவன்; உயிரற்றவன் அவனுக்கு நிகர் அவனே' என ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

ஒருவனென் றுரைப்ப தல்லால்
ஒருவரு மிணையு மில்லை
சரியிணை யெதுவு மில்லை
சகலமும் படைத்த கோமான்
வருவிய அவனைப் போல
அதிலொரு படைப்பு மில்லை
உருவுக ளொன்றைப் போல
உடலுயிர் உள்ளோன் அல்லன் (98)

ஆதி, இறை, இறைவன், நிகரில்லான், தக்கவன். பெரியவன் முதலிய அடைமொழிகளால் அல்லாஹ்வை வருணித்த ஆசிரியர் சிறப்பான சொற்றொடர்களால் அல்லாஹ்வின் பண்புகளை விளக்கத் தவறவில்லை. எப்பொழுதும் நிலைத்தவன் என்னும் பொருளில் 'சாகாத வேதன்' (102) என்றும் எல்லாம் படைத்தவன் என்னும் பொருளில் 'வானமும் புவியமைத்து வகுத்தனன்' (152) என்றும் தொழுகை முறையை அமைத்தவன் என்னும் பொருளில் 'வணக்கமும் நெறியமைத்த வல்லவன்' (331) என்றும் வந்துள்ளமை காண்க. நாலாவது படலத்தின் முதலாம் பாகத்தில் உள்ள இரண்டு பாடல்களில் அல்லாஹ்வின் பண்புகள் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

அவ்விரு பாடல்களும் ஓசை நயம் ததும்பப் பாடப்பட்டுள்ளன. அவ்விரண்டு பாடல்களும் வருமாறு :

முன்னுள்ள படைப்புக் கெல்லாம்
முன்னுள் ளான் முதன் மையுள்ளான்
அன்னுள்ள படைப்புக் கெல்லாம்
ஆதியே முதல னாதி
எண்ணுள்ள படைப்புக் கெல்லாம்
எப்போது மிருக்கு நாயன்
பின்னுள்ள படைப்புக் கெல்லாம்
பின்னையு மிருக்கும் நாயன்
முன்னுள்ளான் முதன்மை யுள்ளான்
முன்னும் பின் னவனே யுள்ளான்
அன்னுள்ளான் இன்னு முள்ளான்
எப்போது மினியு முள்ளான்
என்னுள்ளான் இருதயத் துள்ளான்
யாவர்க்கும் நினைவி லுள்ளான்
தன்னுள்ளான் தானவன் தானே
தானி றைந்த நாயன் (4 : 1 : 9-10)

இப்படலத்தில் உள்ள 11 ஆம் பாடல் தொடங்கி 22 ஆம் பாடல்வரை உள்ளன முழுமையாக அல்லாஹ்வினைப் புகழும் செய்யுட்களாகவே அமைந்துள்ளன.

மற்றொரு பாடலில் அவனின் சிறப்புத் தன்மை விதந்தோதப் பட்டுள்ளது. ஓர் அணுவினுக்குள் எல்லாவற்றையும் அடைத்துவிடும் தன்மை வாய்ந்தவன் அல்லாஹ். அத்தகைய தன்மைகள் இவ்வாறு ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளன.

கடுகுக்குள் எழுகடலை யிட்டு
அணுவில் அகல்வெளி யைப் பூட்டி
கடுகுக்குள் கயாத்துல் கைபார்
கடலையே அடைக்கும் நாயன்
இடமென்று நிலைமை யில்லான்
எங்குமே யவனே யாக
இடமெல்லாம் நிறைந்த நாயன்
ஏகனே ஒருவன் தானே (4 : 1 : 21)

அல்குர்ஆனில் வரும் இக்லாஸ் என்று பெயரினை உடைய 112 வது அத்தியாயத்தில் வரும் கருத்துக்களையும் அமைத்து அல்லாஹ்வின் தன்மைகள் மற்றொரு பாடலில் இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

தானொரு உருவில் லாதான்
தாய்தம ரொருவ ரில்லான்
ஆணில்லான் பெண்ணு மில்லான்
ஆணும்பெண் ணவனே யுள்ளான்
ஈனமொன் றணுகி டாதான்
யாவர்க்கு மூப்பா முன்னோன்
ஆனவ னிறைவ குத்த
ஆலங்க ளனைத்தும் தானே (4 : 1 : 14)

உலகத்தில் உள்ள அனைவரையும் அன்னம் அளித்துக் காக்கின்றவன் அல்லாஹ் என்பதனை,

உலகத்தில் பசி தெளிக்க
உணவினை வகுத்தான் வல்லோன்

எனக் கூறியுள்ளார் ஆசிரியர் பீரு முகம்மதுப் புலவர் அவர்கள்

**அண்ணல் நபி (சல்):**

திருநெறி நீதத்தில் அண்ணல் நபி (சல்) அவர்கள் பல இடங்களில் பெயர் சுட்டப்பட்டும் பெயர் சுட்டப்படாதும் அண்ணலாரின் பெண் மக்கள் சுட்டப்பட்டும் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். அகுமது (1: 22; 23; 32; 86; 87; 110; 111; 217; 362; 2: 9; 55; 79; 85; 106; 133; 155; 193; 229; 237; 286; 404; 3: 3) என்றும் முகம்மது (4: 18; 22; 26; 35; 46; 77; 520) என்றும், பீரு முகம்மதி றசூலுல்லா (3:3) பீரு முகம்மது (4:2; 138; 142; 153; 195) என்றும் இன்னும் பல பெயர்களாலும் அழைக்கப்பட்டுள்ளார். பெருமானார் (சல்) அவர்களின் இயல்புகளை மாத்திரம் வருணித்து அண்ணலார் அவர்கள் சுட்டப்பட்டுள்ளார்கள். அண்ணல் நபி (சல்) அவர்களுடைய சிறப்பியல்புகளுள் ஒன்று அவர்களுடைய பாதம் தரையில் படுவதில்லை என்பதாகும். இதனையே பீரு முகம்மதுப் புலவர் தமது திருநெறி நீதத்தில்,

பாதமே தரையி லுறைந்திடா வள்ளல் (5)

என வருணித்துள்ளார்.

அண்ணல் (சல்) அவர்களின் உடல் கஸ்தூரி நறுமணம் கமழுவதாகும். கள்ளங்கபடமற்றவர்கள் அவர்கள். பொய் பேசாதவர்கள். விலக்கப்பட்ட (ஹறாமான) வற்றிலிருந்து அப்பாற்பட்டவர்கள். உலோபி (பஹீல்)த்தன்மை அற்றவர்கள். புன்சிரிப்பே யன்றி வெடிசிரிப்பு அற்றவர்கள். யாவரும் காணாதவகையில் மலஞ்சலங் கழிப்பார்கள். கோபம் கொள்ளாதவர்கள். பெருமை இம்மியும் அற்றவர்கள் என்றும் இன்னோரன்ன நற்பண்புகளைக் கொண்டு அண்ணல் நபி (சல்) அவர்கள் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளார்கள்.

காதமே மணக்கும் கத்தூ ரியின் வாசம்
கபடுபொய் ஹறாம் பஹீல் காணார்
வேதநன் னபியார் வெடிசிரிப் புரையார்
வெளியில் மலஞ்சலங் காணார்
ஏதொரு கோபம் பெருமை அற்றார்
ஏகனி லாஞ்சினை தரித்தோர்
நீதவா மேனி பளிங்கியி னிறத்தால்
நிழலடி சாய்ந்தது மில்லை (24)

எல்லோருக்கும் குருவானவர்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள் என்பதனை ஆசிரியர்,

வல்லவன் தூதரான வாத்தியா ருரைத்த வாறே (2 : 314)
வாகா யிறையவன் வாத்திய ரான வள்ளல் (1 : 66)

என்றும் நீதிக்கு இருப்பிடமானவர்கள் பெருமானார் என்பதனை வருணித்துள்ளார்.

**ஏனைய நபிமார்கள் :**

பல நபிமார்களின் பெயர்கள் திருநெறி நீதத்தில் இடம் பெற்றுள்ளன. நபி ஆதம் (அலை) (9, 21; 121; 337; 338; 409; 433; 445; 447; 449; 451; 453; 460; 463; 464) பல பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளார். இபுறாகீம் நபி (அலை) பல பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளார். இபுறாகீம் நபி (அலை) அவர்களும் இஸ்மாயீல் நபி (அலை) அவர்களும் (124; 125) பல செய்யுட்களில் பாடப்பட்டுள்ளனர். மூசா நபி (அலை) அய்யூப் நபி (அலை) தாவூது நபி (அலை) ஈசா நபி (அலை) கிளுறு நபி (அலை) இல்யாசு நபி (அலை) முதலிய பல நபிமார்கள் பீரு முகம்மதுப் புலவரின் கவனத்தை ஈர்க்கத் தவறவில்லை. இதே போன்று இமாம் சாபி, இமாம் கசாலி, இமாம் அகமது ஹன்பல் முதலியவர்களும் உக்காசு (றலி) போன்ற அண்ணலாரின் தோழர்களும் திருநெறிநீதத்தில் இடம் பெற்றுள்ளனர்.

**மார்க்கத்தை எதிர்த்தோர் :**

காலத்துக்குக்காலம் நபிமார்களை எதிர்த்த பிர்அவுன், நமுறூது, சத்தாது போன்றவர்களும் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்கள் அனைவரும் ஒரே பாடலில் அவரவருடைய இயல்புகளும் வருணிக்கப்பட்டு இவ்வாறு பாடப்பட்டுள்ளனர்.

அறிவுகளாய்ந்து குலைந்திபு லீசு
அடத்தினில் பெரியவ னம்றூத்
திரவியத் ததிக வேந்தன் சத்தாது
தீங்கினில் பெரியவன் பிரஊன்

உரத்திலும் பெலத்திலும் பெரியவன் தச்சால்
உலகத்தில் பேச்சினில் திறவான்
கருவினில் பெரிய அகிலத்தில் காரூன்
கவருள்ள வருமக்கொடியவ னெசீதே (4 : 1 : 517)

பல இடங்களில் சைத்தான் என்றும் இபுலீசு என்றும் அசாசீல் என்றும் சாத்தான் வருணிக்கப்பட்டுள்ளான். துஸ்மன் என்றும் அவன் சுட்டப்பட்டுள்ளான். பல பாடல்களில் பாடப்பட்டுள்ள சபிக்கப்பட்ட இபுலீசு என்பவனைப்பற்றி ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு பாடியுள்ளார் :

குணத்தி னால்நரி யொழுங்கும்
கொடு விச மரவு தந்தம்
தனத்திடு தலையில் கொம்பு
தானது நடுவே யொன்று
களைத்திடு மும்மதக் கரியின்
பாங்கென வாலும் காலும்
கனத்த கோல்கையி லேந்திக்
கசடனும் பிறந்தா னப்போ (407)

இபுலீசு ரூபத்தின் விவரம் என்னும் பகுதியில் ஐந்து செய்யுட்களுள் இதுவும் ஒன்றாகும்.

**சொல்லாட்சி :**

பீரு முகம்மதுப் புலவர் தமது திருநெறி நீதம் என்னும் நூலில் சொல்லாட்சியில் தமக்குள்ள சொல்வன்மையைக் காட்டி உள்ளார். உகமை என்ற சொல்லை எடுத்துக்கொள்வோம். உவமை என்று பொருள்பட உகமை என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார். சில சமயங்களில் முஸ்லிம்கள் தமது பேச்சு வழக்கில் மகன் என்பதை மவன் என்பர். உவமையை உகமை என்பது இவ்வழக்குக்கு நேர்மாறாக இருக்கிறது. உவமையில்லான் என அல்லாஹ்வை வருணிக்க வந்தஇந்நூலாசிரியர் உவமையில் என்பதற்குப் பதிலாக உகமையில் என இவ்வாறு வருணித்துள்ளார்.

உகமையில் நிலையில்லாதான்
உடையவன் தூதர் சொல்வார் (488)

உகமை என்னும் சொல் உவமை என்னும் பொருளில்

உகமையி லசலுடமை ஒருவனு மருந்தானாகில் (2 : 204)

எனவும் வந்துள்ளது.

உகையம் என்னும் சொல் விருப்பம் என்னும் பொருளில் இந் நூலில் வந்துள்ளது. உகத்தல் (விரும்புதல்) என்னும் சொல்லே உகயம்

என வந்து உகையம் ஆகி உள்ளது. இந்த உகையம், விருப்பம் என்னும் பொருளில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது.

உகைய மென்றுரைத் ததெல்லாம்
ஓதிய குறானைப் பாரும் (2 : 29)

நாடிய கலால் சுரிகத்தும் நடந்திட உகையமாகும் (2 : 44)

மறுமைக்கு முகைய மானேன் (2 : 129)

தோகைய ருகைய மாகித்
துலங்கவேயவ ளுரைக்க (2 : 136)

ஹக்கன் அபுதாலிப் புதல்வன் காளைய ரலிதனக்கு
மிக்க வேமண முடிக்க இறையவ னுகைய மாகி(2 : 169)

.........இதுக்கவ ருகையமானார் (2 : 172)

உபாயமில் விலக்கி வைக்க உலகவ
ருகைய மில்லார் (2 : 211)

எண்டொடி மார்கள் தம்மை
உகைய மாமன துவைத்தால் (2 : 241)

சொல்லிய விதத்தைக் கேட்டு
சொந்தய ருகைய மில்லார் (2 : 245)

காவல னுகையத் தோடு
கன்னிமார்களைத் தானும் (2 : 709)

வாழ்ந்திட அடியுமில்லை
வையகர்க் குகையத் தானே (2 : 362)

திருநெறி நீதத்தில் அருமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ள மற்றொரு சொல் ஊணுதல் என்பதிலிருந்து பெறப்பட்டதாகும். உணவு கொடுத்துப் பேணுதல் என்பது ஊணுதல் என்பதன் பொருளாகும். ‘உழலையாக்கையை யூணுமுணர்விலீர் என்கிறது தேவாரம். (திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் பதிகம் : 126 திருவீழிமிழலை : 6) இதே கருத்தில் ஊணியே என்பது

உண்டிட உணவால் வேங்கை ஊணியே பருகும் பாலன் (227)

என்றும்

ஊணியே ஆபில் தன்னை உலகினில் காபி லென்போர்
கூன் கொலை செய்த தாலே குபிர்க்குல மதிகமாச்சே (3 : 42)

என்றும்

ஊணியே பெரும் ஹறாத்தை உண்டவர்க் கெழுப தாகும் (3 : 79)

என்றும் திருநெறி நீதத்தில் ஆளப்பட்டுள்ளது. இதே சொல் ஊணிய என்னும் உருவத்தில்

ஊணிய உச்சம் ஏற ஓங்கும் சிங்கார சித்திரம் (245)

என்றும்

ஊணிய சடத்தி னுள்ளே உயிர்றஹி மானீயாமே (475)

என்றும்

ஊணிய வணக்கஞ் செய்ய
உகந்தவ னிருப்பா னாகில் (2 : 121)

என்றும்

ஊணிய தரித்த பிள்ளை
உலகினில் பிறந்திட்டாலும் (2 : 228)

என்றும்

ஊணிய கருமஞ் செய்ய
உடையவன் சொன்னதாமே (2 :244)

என்றும்

ஊணிய கரும மில்லை
உம்மத் தென்றுரைக் கொண்ணாதே (2 : 316)

என்றும் வந்துள்ளது. இதனை மூன்றாம் படலத்தில் பல இடங்களில் (16; 42; 79; 185; 190) ஆண்டுள்ளார் என்பது ஈண்டு நோக்கற்பாலது.

பீர் முஹம்மதுப் புலவரின் நூலில் காணப்படும் மற்றொரு சொல் தனுமை என்பதாகும். தனு என்றால் சிறுமை என்பது பொருள் எனப் பிங்கலநிகண்டு குறிப்பிடுகிறது. இன்னல்கள் அல்லது சிறுமைகள் என்னும் பொருளில் தனுமைகள் என்னும் சொல்

ஆகிய நபிதாம் ஆதம் அரம்பை மொழியே கேட்டு
தாகிய கனியே யுண்டு தனுமைக ளனேகம் பட்டார் (338)

என ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம்.

ஒரே செய்யுளில் தெகுட்டும், தெகுட்டா என இரண்டு சொற்கள் அருமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. பணத்தையும் அறிவையும் ஒப்பிடும்பொழுது இவ்விரு சொற்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. பணம் தெகுட்டும் என்றும் அறிவு தெகுட்டாது என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது. உட்கொண்ட உணவு வாந்தியாக வெளிப்படுவதுபோல ஒன்று சேர்க்கப்பட்ட பணம் மறைந்துவிடும். ஆனால் அறிவு அவ்வாறு மறையாது மேலும் மேலும் அதிகரிக்கும். இவ்வாறு பணத்துக்கும் அறிவுக்கும் உள்ள வேறுபாட்டை முஹம்மது நபி (சல்) அவர்கள் யூதர்களுக்கு விளக்கினார்கள் எனத் திருநெறி நீதம் என்னும் நூலில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

நெழிந்திடு முதல்வர நிறுத்ததைப் பார்ப்பார்
நீதியு மறிவையு நிறுக்கார்
ஒழிந்திடு முதலிந்த வுலகினில் தெகுட்டும்
உடையவன் அறிவு ஒருக்காலும் தெகுட்டா
அழிந்திடு முதலே அவர்வைத்து நோவார்
ஆதியின் அறிவை அனைவரும் நோகார் (65)

கலிமாவைப் பொறுத்தவரையில் அது கடுகைவிடச் சிறியதாகும். அம்பைவிடக் கூர்மையாகும். அது மனதைவிட வேகமாகும். மயிரிலும் அதிகம் நேர்மையாகும். நிலத்தைவிடப் பொறுமை உடையதாகும். கண்களைவிட ஒளியுடையதாகும். பஞ்சாமிர்தம் போன்றதாகும். பளிங்கைப் பார்க்கிலும் தெளிவாக இருக்கும். இங்கே கலிமா இனிமையில் பஞ்சாமிர்தம் போன்றது என்று ஆசிரியர் கூறி உள்ளார். வாழைப்பழம், தேன், சக்கரை, நெய், திராட்சை என்னும் இனிய பண்டங்களால் ஆக்கியதும் அபிஷேகத்திற்கு உபயோகிப்பது மான பண்டம் பஞ்சாமிர்தம் எனப்படும். சுவையில் பஞ்சாமிர்தத்தை ஒத்திருக்கும் கலிமா இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

ஆகிய கடுகில் அதில் சிறிதாகும்
அம்பிலும் அதிகமாங் கூர்மை
மாய்கையா மனதில் வேகம தாகும்
மயிரிலு அதிகமாம் நேர்மை
தோகையா மண்ணிலும் பொறுமைய தாகும்
தோத்திய விழியிலும் ஒளிவாம்
பாகிய பஞ்ச அமிர்தமி லாஞ்சனை
பளிங்கியில் பார்க்கவுந் தெளிவே (89)

பஞ்சை என்னும் சொல்லை ஏழை என்னும் பொருளில் இந்நூலாசிரியர் உடயோகித்துள்ளார். இறைவன் ஏழைகளுக்கு ஈவதைக் கட்டாய கடமையாக்கி உள்ளான் என்பதைக் கூறவந்த நூலாசிரியர்

பஞ்சையா யிருபேர்க் கீய
படைத்தவன் பருளே சொன்னான் (2 : 258)

என்று பஞ்சை என்னும் சொல்லை ஏழை என்னும் பொருளில் உபயோகித்துள்ளமையைக் காணலாம்.

மானியம் என்னும் பொருளில் மானிபம் என்னுஞ் சொல் இந்நூலில் பயன்படுத்தப்பட்டுள்ளது. விரும்பத்தகாத பெண் யார் என்பதனைக் கூறும் பகுதியில் இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. விரும்பத்தகாத பெண்ணின் இலக்கணங்களைக் கூறப்போந்த ஆசிரியர் ஒருவன் ஈந்த பணத்தைப் பெற்றவர் எனக் குறிப்பிடும்பொழுது இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

மானிபம் ஒருவ ரீய
அதுக்குமுன் எடுத்த பேரும் (2 : 72)

அடுத்து விதனம் என்னும் சொல்லைப் பார்ப்போம். திருப்புகழிலே விதனம் என்னும் சொல் துக்கம் என்னும் பொருளில் ‘ உளம் விதன முறலாமே ’ (134) என வந்துள்ளது. திருக்குறளிலே எழு வகைக்குற்றங்கள் (566) விதனம் எனச் சுட்டப்பட்டுள்ளது. கம்பனும் துன்பம் என்று பொருள் பட விதனம் என்னும் சொல்லைத் தமது இராமாயணத்தில் (முதற்போர்புரி படலம் : 32) ஆண்டுள்ளார். பீரு முகம்மதுப் புலவர் தமது திருநெறி நீதம் என்னும் நூலில் இறைவனின் துணையை நாடிப்பாடிய இரண்டாது பாடலிலேயே விதனம் என்னும் சொல்லை ‘குற்றங்கள் எதுவும் அணுகாதவன்’ இறைவன் என்பதனைப் புலப்படுத்த

விதனமொன் றணுகா வித்தினில் விளையா
விண்ணகம் மண்ணகம் விளங்க (2)

எனப்பாடியுள்ளார். அதே கருத்தில் மற்றோர் இடத்தில்

விதனமும் வருத்தமும் போக்கி
மேதினி எளியோர்க் கெல்லாம்
அதுமுத லசன மாக
அனைத்துமே ஈந்தான் அப்போ (299)

வின்னம் என்பது சிதைவு என்று பொருள்படும். விரும்பத்தகாத பெண்களைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது சிதைந்த உறுப்புக்களை உடையவர்கள் அத்தகையோருள் அடங்குவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இரண்டு பாடல்களைத் தொடர்பு படுத்தும் சொல்லாய் வின்னம் என்பது அமைந்துள்ளது.

கரங்கில்லாக் கழுத்தும் கண்ணும்
கண்டிடும் உறுப்பின் வின்னம் (2 : 70)
வின்னமாம் பாவை யாகும்
வேந்தனுக் கியைந்து சொல்லின் (2 : 71)

என வின்னம் என்னும் சொல் வந்துள்ளமையைக் காணலாம்.

பல்வேறு வகையான விருத்தப்பாக்கள் திருநெறி நீதத்தில் இடம் பெற்றுள்ளன. ஆனால் சில பாடல்கள் நான்கடிக்கு மேற்பட்டனவாயும் வேறு சில பாடல்கள் நான்கடிக்குக் குறைவானவையாயும் அமைந்துள்ளமையை இந்நூலில் காணலாம். முழுமையானவையாக அமையாத செய்யுட்களை 185; 273; 2 : 156; 3 : 167; 204; 4 : 2 : 34; 224; எனச் சுட்டிக் காட்டலாம். அதே போன்று நான்கடிகளுக்கதிகமாக உள்ள செய்யுட்களை 297; 3 : 5; 200; 4 : 1; 168; 4 : 2 : 41; 80; 211; 466 என அடையாளம் கண்டு கொள்ள முடியும். இவற்றுள்

4 : 1 : 168 ஆம் செய்யுளும் 4 : 2 : 466 என்னும் செய்யுளும் ஒவ்வொன்றும் ஆறடிகளைக் கொண்டனவாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

சில பாடல்களில் சீர் அமைப்பு அடிக்கு அடி வேறுபடுவதை இங்கு காணலாம். இந்நூலைப் பதிப்பித்தவர்கள் தமது பணியைச் செம்மையாகச் செய்யவில்லை என்றே தோன்றுகிறது. அவர்கள் ரகர, றகர வேறுபாட்டையோ நகர, ணகர, னகர வித்தியாசத்தையோ, லகர, ழகர, ளகர உபயோகத்தில் உள்ள முரண்பாட்டையோ கருத்திற்கொண்டார்கள் எனத் தோன்றவில்லை. இந்நூலின் மற்றொரு பதிப்பில் திருநெறி நீதம் என்னும் பெயரில் உள்ள வல்லின றகரம் இடையின ரகரமாக அமைந்துள்ளமை இக்குறைபாட்டுக்கானத் தகுந்த எடுத்துக்காட்டாகும்.

எனவே இந்நூல் திருத்தப்பட்டுப் புதிய ஒரு பதிப்பாக வெளி வந்தால் அதனை ஆராய்ச்சி செய்கிறவர்களுக்கு மாத்திரமின்றி அதனைப் படித்துப் பயனடைய உள்ளவர்களுக்கும் பெரிதும் உதவியா யிருக்கும் எனின் அது மிகையாகாது.

---

# ஏழாம் இயல்

## கனகாபிசேகமாலை

ஓர் இலக்கியத்தின் தலை சிறந்த இலக்கிய வடிவமாகத் திகழ்வது காப்பியம். ஒருமொழியின் தொன்மையும், அதன் இலக்கியத் தரமும் அங்கு இடம் பெற்றுள்ள சொல் வளமும், அங்கு அமைந்துள்ள கூருணர்வுத்திறனும், அதன் சிறப்புத்தன்மையும் அம்மொழியில் தோன்றி உள்ள காப்பியங்களில் பிரதிபலிப்பதைக் காணலாம். உண்மையிலேயே ஒரு சில மொழிகளே அத்தகைய சிறப்புக்குரியனவாகும். நிச்சயமாகத் தமிழ் மொழி அத்தகைய மொழிகளுள் ஒன்றாகும்.

**சமயங்களும் காப்பியங்களும் :**

தமிழ் மொழியிலே தோன்றி உள்ள காப்பியங்களின் எண்ணிக்கையைப் பொறுத்த வரையில் தமிழைவிடச் சிறந்த மொழி இல்லை என்றே கூறிவிடலாம். தமிழ் மொழியில் தோன்றி உள்ள காப்பியங்களில் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு தனிச்சாயல் அடிப்படையாக அமைந்துள்ளது. சைவ, வைணவப் பிரிவுகளைக்கொண்ட இந்து மதக் கருத்துக்களும், பௌத்த மதக் கோட்பாடுகளும், சமண மதக்கொள்கைகளும் கிறித்தவ மத நெறிமுறைகளும், இஸ்லாம் மத போதனைகளும் அத்தகைய காப்பியங்களிலே தனித்தனியே இடம் பெற்றுள்ளன. இவ்வாறு பார்க்கும்பொழுது உலகிலே உள்ள பிரதானமான மார்க்கங்களின் பங்களிப்பினை அக்காப்பியங்களிலே காணக் கூடியதாக இருக்கின்றது. அத்தகைய காப்பியங்களுள் சில காலத்தால் முற்பட்டவை. மற்றும் சில இடைக்காலத்தைச் சார்ந்தவை. வேறு சில காலத்தால் பிற்பட்டவை. இவ்வுண்மையைத் தமிழ் இலக்கிய வரலாறு தெள்ளிதிற் புலப்படுத்திக் கொண்டிருக்கிறது.

பொதுவாக இலக்கியம் என்னும் கட்டிடத்தின் கொடுமுடி மகுடமாக அவ்விலக்கியத்தின் காப்பியங்களைக் கொள்ளலாம். சிற்பியாகிய கவிஞன் அதனை அலங்கரிக்கத் தன்னிடம் உள்ள எல்லாவற்றையும் பயன்படுத்த முற்படுவான். அதில் எவ்வித குறையும் இருப்பதை அச்சிற்பியாகிய கவிஞன் விரும்பமாட்டான். அது இயற்கையே. அவ்வாறு உருவாக்கும் பொழுது மற்றையவர்களைவிடத் தான் மிஞ்சிவிடவேண்டும் என்றும் மற்றவர்கள் தம்மை மிஞ்சிவிடக் கூடாது என்றும் முயற்சிப்பவன் கவிஞன். தலைசிறந்த ஆற்றலுள்ள எந்த ஒரு கவிதைச் சிற்பியும் அத்தகைய விழுமிய இலக்கையும் பேரார்வத்தையும் கொண்டிருப்பது இயற்கையே.

காப்பியங்கள் பலமொழிகளிலும் தோன்றி உள்ளன. கீழைத்தேய மொழிகளைப் போலவே மேலைத் தேய மொழிகளும் காப்பியங்களைக்

கொண்டு திகழ்கின்றன. சில சமயங்களில் மேற்கு நாட்டு மொழிகளில் தோன்றிய காப்பியங்களின் வரைவிலக்கணம் கிழக்கு நாட்டு மொழி களில் தோன்றிய காப்பியங்களின் வரைவிலக்கணத்திலிருந்து வேறு பட்டவையாக இருக்கும். எனவே பல்வேறு மொழிகளில் தோன்றிய காப்பியங்களையும் அவை எந்த அடிப்படையில் தோன்றியுள்ளன என்பதையும் முதலில் பார்ப்போம்.

மேனாட்டு இலக்கிய விமர்சகர் 'ஒரு காப்பியக்கவிதை ஓரளவு நீளமான ஒரு கதை' என்றும் 'சில முக்கியமான பெரும் நிகழ்ச்சிகளை அது விவரிக்கிறது;' என்றும் கூறி உள்ளார். அதில் வரும் நிகழ்ச்சி களும் பாத்திரங்களும் மனித சாதனையில் நமது நம்பிக்கையை வலுப் பெறச் செய்வதோடு மனிதனின் மேன்மையிலும் உயர்பண்பிலும் உள்ள நமது விசுவாசத்தை அதிகரிக்கச் செய்கிறது.

எங்கு தோன்றினாலும் உண்மையான ஒரு காப்பியம் கதை சொல்லும் கவிதையாகவே இருக்கும். வீரதீரச் செயல்களையும் வீர தீரர்களையும் விவரிக்கும் பாணியில் அமைந்ததொன்றாக விளங்கும். அது வருணிக்க முற்பட்டுள்ள கருப்பொருளின் தன்மைக்கு இயைய அதன் நடை அமைந்திருக்கும். அது வருணிக்கும் பாத்திரங்களையும் நிகழ்ச்சிகளையும் மிக உயர்வாக எடுத்துக்காட்டும். நிகழ்ச்சிகளைப் பெருக்கி அதனை அலங்கரிக்கும்.

ஒரு காப்பியம் கலைச்சுவைத் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடியதாக இருத்தல்வேண்டும். காப்பியம் என்பதன் கருத்து எதுவாயிருப்பினும் அது பளு உடைமையையும் செறிவு உடைமையையும் சுட்டுகிறது. பெரு நிகழ்ச்சிகளும் சிறந்த பாத்திரங்களும் காப்பியத்துக்கு இன்றி யமையாத மேன்மைத் தன்மையை அளிக்கிறது. அவை இல்லை எனின் அதனைக் காப்பியம் என்று கூறமுடியாது. கருப்பொருளுக் குரிய கருத்தமைவு சற்று மேம்படுமாயின் காப்பியம் சிறந்து விளங்கும்.

மக்கள் பயன்படுத்தும் பல இலக்கிய வடிவங்களைக் கிரேக்கர் முதலில் இயற்றினர். துன்பக் கதை, நகைச்சுவைக் கதை, காப்பியம், அழகிய கட்டுக் கதை என்பன அவற்றுள் சிலவாம். மேற்கு நாடு களைப் பொருத்தவரையில் கிரேக்கர் அவர்களுக்கு முன்னோடிகளாக விளங்கினர்.

ஆங்கிலேயக் காப்பிய மரபுக்கு இயைய வாய்மொழியாகவும் இலக்கிய வடிவமாகவும் வந்த கவிதைக் கதைகள் காப்பியங்களாகக் கணிக்கப்பட்டன. பண்டைக்காலத்தில் வாய்மொழி இலக்கியம் பாடகர் வாயிலாகப் பேணப்பட்டன. அவற்றிற்கு எந்தக் கவிஞரும் உரிமை கோரவில்லை. காலத்துக்குக் காலம் அவற்றின் கருப்பொருள் மாறுபட்டன. காப்பிய மரபில் ஈடுபாடுடைய கவிஞனால் இலக்கிய மாகக் காப்பியங்கள் இயற்றப்பட்டன. இரண்டுக்கும் அடிப்படை

வேறுபாடு எதுவும் இல்லை. வாய்மொழிக் காப்பியங்களை இயற்றிய பாடகர்களும் இலக்கியக் காப்பியங்களை இயற்றிய கவிஞரும் ஒரே குறிக்கோளினால் உந்தப்பட்டவர்களாகவே இருந்தனர்.

மேனாட்டார் கண்ணோக்கில் பார்க்கும்பொழுது காப்பியத்தின் பொதுப்படையான வரைவிலக்கணம் அது ஓரளவு நீண்ட கதைக் கவிதை என்பதேயாகும். அத்தகைய காப்பியம் இறந்த காலப் பின்னணியில் இயற்றப்படுகிறது. அத்தகைய இறந்த காலம் வீரச்செயலுக்குப் புகழ்பெற்றதாய் இருக்கலாம் அல்லது தெய்வம் பற்றிய கட்டுக்கதைக்குப் பேர் பெற்றதாய் இருக்கலாம். அது ஒன்றில் வீர தீரச் செயல்களை வருணிக்கும் அல்லது இயற்கை கடந்தனவற்றை விவரிக்கும். எதனை வருணித்தாலும் அத்தகைய வருணனை உணர்ந்தோ உணராமலோ தேசீய அல்லது சமயக்கருத்தியற் பாங்கினைப் பிரதிபலிப்பதாகவே அமைந்திருந்தது.

ஐரோப்பாவின் ஏனைய நாடுகளின் முதுசொமாகக் கருதப்படும் முக்கியமான காப்பியங்கள் எவை என்பதைப் பார்ப்போம். கிரேக்க காப்பியங்களான இலியட் உம் ஒடிசியும் கால எல்லையைக் கடந்து விளங்கின. அவ்வாறு திகழவே அவை இரண்டும் இயற்றப்பட்டன.

குலப்பாடகர்கள் நான்காம் நூற்றாண்டிற்கும் ஐந்தாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட கால எல்லையில் பல காப்பியங்களை இயற்றுவதில் முன்னோடிகளாக விளங்கினர் என ஆங்கில இலக்கிய வரலாறு கூறுகின்றது. பியோவுல்ப் (Beowulf) என்பதும் முழுமையாகப் பெறமுடியாது. மற்றொன்று இரண்டைத் தவிர பழைய ஆங்கில இலக்கியத்திலிருந்து வேறு எதுவும் கிடைக்கவில்லை எனக் கூறப்படுகிறது.

பியோவுல்ப் என்பது ஆங்கிலத்தில் இயற்றப்பட்ட கவிதை நூல் எனினும் அது இங்கிலாந்தைப் பற்றியதன்று. ஆங்கிலேயரைப் பற்றியும் குறிப்பிடப்படாதது. அக்கவிதை நூலை ஆங்கிலேயரே இங்கிலாந்துக்கு கொண்டு வந்தனர். அது ஸ்காண்டிநேவியக் கதையை ஆங்கிலத்தில் எழுதிய கவிதையாகும். அளவிலும் மதிப்பீட்டிலும் காப்பியத்தை ஒத்திருக்கும் பியோவுல்ப் உடன் ஒப்பிடக்கூடிய நூல் எதனையும் பண்டைய ஆங்கில இலக்கியத்தில் காண முடியாது.

ஆங்கிலோசக்ஸன் (Anglo-Saxon) இனத்தைச் சேர்ந்தவர்களின் காப்பியமான பியோவுல்ப் ஏறத்தாழ மூவாயிரம் அடிகளைக் கொண்டது. அவ்வடிகள் அசையழுத்தமானவையாகவும் ஒலியொத்து இசைகின்றனவாயும் அமைந்துள்ளன. ஒவ்வொரு வரியிலும் உள்ள முதற் பாதி இரண்டு பிரதான அசையுற்றக் குறியிடப்பட்டதாய் இருக்கும். பியோவுல்பின் வீரச் செயல்களை அக்காப்பியம் வருணிக்கிறது.

முதலில் ஒருதகர் (Hrothegar) என்பவனாலும் செவிண்ட் (Sevind) என்பவனாலும் ஆட்சி செய்யப்பட்ட டேன் மக்களைத் துன்புறுத்திய கோர உருவத்தினை உடைய கிரண்டெல் (Grandel) உடனும் அவனது தாயாருடனும் போர் புரிந்தமைபற்றி அக்காப்பியம் விவரிக்கிறது. தன்னுடைய இனத்தவரான கீட்ஸ் (Geats) மக்கள் வாழ்ந்த நாட்டையும் மக்களையும் சூறையாடிப் பாழ்படுத்திய நெருப்புயிர்க்கும் பிராணியுடன் அவன் நடத்திய போர்கள் பின்னர் விவரிக்கப்படுகின்றன. அப்போர்களிலே பியோவுல்ப் உயிர் நீத்தான். கி.பி. 520 இல் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியை அடிப்படையாக வைத்தே இக்காப்பியம் இயற்றப்பட்டுள்ளது. கி. பி. ஐந்தாம் ஆறாம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்துக்கு வந்து குடியேறுவதற்கு முன்னர் ஆங்கிலோ சக்ஸன் பாடகன் ஒருவனால் அக்காப்பியம் இயற்றப்பட்டிருக்கலாம். அவ்வாறு இயற்றப்பட்ட அக்காப்பியம் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பூரணத்துவம் பெற்றிருக்கலாம். அதற்குச் சற்றுப்பின்னர் அது எழுத்துருப் பெற்றிருக்கலாம்.

முதலது நீண்ட மூவசைச்சீர் சார்ந்த அறுசீர்ச் செய்யுளடியைக் கொண்ட பாக்களாலான இருபத்து நான்கு தொகுதிகளை உடையது இலியட் (Iliad) என்னும் காப்பியம். தலைசிறந்த கிரேக்க வீரனான அசிலிஸ் கோபத்தினால் டிரோய் (Troy) நகரம் கைப்பற்றப்பட்ட பொழுது கிரேக்க சேனைக்கு நேர்ந்த மாபெரும் இழப்புகளை அது வருணிக்கிறது. அது ஹோமர் (Homer) என்பவரால் கி.மு. ஒன்பதாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது எனக்கொள்ளப்படுகிறது. அதன் நடை முனைப்பானது; உயிர்த்தோற்றங்குன்றாதது. இலியட்டைப்போன்ற அதே யாப்பில் இருபத்து நான்கு தொகுதிகளாக இயற்றப்பட்டது ஒடிஸி (Odyssey) என்னும் மற்றொரு காப்பியம். டிரோய் சூறையாடப்பட்டதன் பின்னர் ஒடிஸியின் அலைச்சல்களையும் திரிச்சல்களையும் வருணிக்கிறது அக்காப்பியம். கற்பனைத்திறமுடைய வீரகாதைக்குரிய நடையில் எழுதப்பட்டுள்ளது. இலியட் போன்ற பாவகையைக் கொண்டது. அதே காலத்தைச் சேர்ந்த அதே ஆசிரியரால் இயற்றப்பட்டது என்பர். அவை இரண்டும் கிரேக்கரின் தலைசிறந்த பெருங்காப்பியங்களாகும்.

பிரெஞ்சு மொழியில் றோலண்டின் பாடல் என்னும் ஒரு காப்பியம் உண்டு. நான்காயிரம் அடிகளைக் கொண்டது அக்காப்பியம். ஒவ்வோர் அடியும் பத்து அசைகளைக் கொண்டிருந்தது. இவ்வடிகள் ஒலியியைவுக்கமைய (உயிரொலிகள் மட்டும் இசையும் எதுகைக் கமைய) வேறுபட்ட அளவுகளை உடைய செய்யுட்கூறுகளாக பிரிக்கப் பட்டுள்ளன. சார்லிமேனின் மருமகனான றோலண்ட் பிரனீஸ் கணவாய் யுத்தத்திலே எவ்வாறு அறபு மக்களால் (சராசன்) தோற்கடிக்கப்பட்டான் என்பதை அக்காப்பியம் விவரிக்கிறது. கி.பி. 778

ஆகஸ்ட் மாதம் 15ஆந் தேதி றோலண்ட் தோற்கடிக்கப்பட்டமையால் அக்காப்பியம் பத்தாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது என ஊகிக்கப் படுகிறது.

இஸ்பானிய மொழியில் உள்ள ஒரு காப்பியம் த சிட் (The Cid) என்பது. பிரபு என்னும் பொருளைக் கொண்ட செய்யிது என்னும் அறபுச் சொல் திரிந்தே சிட் என வந்துள்ளது. முகம்மது நபி (சல்) அவர்களின் வழித்தோன்றல்கள் செய்யித் என இன்றுவரை அழைக் கப்பட்டு வருகின்றனர். ஒலியியைவுக்கமைய வேறுபட்ட அளவு களைக் கொண்ட செய்யுட்கூறுகளாகப் பிரிக்கப்பட்டுள்ள ஒழுங்கற்ற யாப்பு முறையிலான ஏறத்தாழ மூவாயிரத்து எழுநூறு அடிகளைக் கொண்டது அக்காப்பியம். சிட் அல்லது பிரபு எனப் பட்டஞ் சூட்டப் பட்ட றொட்றிகோ டயஸ் டி பைரர் (Rodrigo Dias de Birer) என்ப வருடைய வீரச்செயல்களை அது வருணிக்கிறது. விவரிக்கப்பட் டுள்ள அந்நிகழ்ச்சிகள் கி.பி. பதினோராம் நூற்றாண்டைச் சார்ந்தன வாதலால் அக்காப்பியம் பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றி இருக்கலாம் என்பர்.

ஆங்கிலக் கவிஞன் மில்டன் (Milton) இயற்றியது பாரடைஸ் லொஸ்ட் (Paradise Lost) என்னும் காப்பியம். இழந்த சுவர்க்கம் என்பது அதன் பொருள். அது கி.பி. 1667 இல் வெளியிடப்பட்டது. மீட்கப்பட்ட சுவர்க்கம் எனப் பொருள்படும். பாரடைஸ் றிகெய்ன்ட் (Paradise Regained) என்பது முன்னதன் இணைக்காப்பியம். கி.பி. 1671 இல் மில்டனால் இயற்றப்பட்டது. பின்னையதை விட முன்னை யது இலக்கியச் சுவை மிக்கது என வருணிக்கப்பட்டுள்ளது.

பண்டைய கீழைத்தேயக் காப்பியங்களுள் தலை சிறந்து விளங்கு வன மகாபாரத, ராமாயண என்னும் இரண்டுமே. 215,000 அடி களை உடைய மகாபாரத, பாரத வழித் தோன்றல்களான திருத ராட்டிர, பாண்டு என்னும் இரண்டு சகோதரர்களின் புதல்வர்களுக் கிடையே ஏற்பட்ட போட்டியையும் பூசலையும் விவரிக்கிறது. இருசாராரும் சந்திர வமிசத்தைச் சேர்ந்தவர்கள். பதினெட்டுத் தொகுதிகளைக் கொண்டஅக்காப்பியம் ஹரிவன்ச என்னும் அனுபந் தத்தையும் கொண்டுள்ளது. முழு நூலையும் வியாச முனிவர் இயற்றினார் எனக் கூறப்படுகிறது.

வால்மீகியால் இயற்றப்பட்டது இராமாயணம். ராமசீதை வர லாற்றினைக் கூறுகிறது. ஏழு காண்டங்களைக் கொண்ட வடமொழி ராமாயண என்னும் நூலில் இருபத்திநாலாயிரம் செய்யுட்கள் உள்ளன. முதலாம் காண்டத்தின் ஒரு பகுதியும் ஏழாம் காண்டமும் பிற்சேர்க் கைகள் எனக் கருதப்படுகின்றன. ஒன்று கூடிய ராமாவும் சீதாவும் அயோத்தியை ஆட்சி செய்த வரலாறு ஏழாம் காண்டத்தில் விவரிக்கப் படுகிறது. பவபூதியினால் உத்தர ராம சரித எனப் பின்னர் நாடக

நூலாக இயற்றப்பட்டது. முழுமையான ஒரு மனிதனுக்கு இருக்க வேண்டிய பண்புகள் ராமாவிடத்தில் இருந்ததாக வருணிக்கப்பட்டுள்ளது. வால்மீகி ஒரு பிராமணன் என்றும் அயோத்திய அரச குடும்பத்துடன் தொடர்பு கொண்டிருந்தார் என்றும் கூறப்படுகிறது.

காலத்துக்காலம், இடத்துக்கிடம் நாகரீக வரலாற்றிலே தோன்றியுள்ள வீர வாழ்வுக்காலத்தை வரலாற்றாசிரியர் குறிப்பிட்டுச் சென்றுள்ளனர். வீர வாழ்வுக்காலம் பற்றிய சிறந்த எடுத்துக்காட்டுக்கள் மூன்று குறிப்பிடப்பட்டுள்ளன. கிரேக்க வீர வாழ்வுக்காலம், இந்திய வீர வாழ்வுக்காலம், டியுட்டானிக் வீர வாழ்வுக்காலம் என்பன அம் மூன்றுமாகும். கிரேக்க வீர வாழ்வுக்காலம் கிரேக்க நாட்டில் கி.மு. இரண்டாயிரம் ஆண்டு முடிய நிகழ்ந்த காலமாகும். கிரேக்க வீர வாழ்வுக்காலத்தை நூறாண்டு காலத்தால் பிந்திய இந்திய வீர வாழ்வுக்காலம் இந்திய உபகண்டத்தில் நிலவியது. வட ஐரோப்பாவில் பெரும்பகுதியினை உள்ளடக்கிய டியுட்டோனிக் வீர வாழ்வுக்காலம் கி. பி. நான்காம் நூற்றாண்டிலிருந்து கி.பி. ஆறாம் நூற்றாண்டு வரை நிகழ்ந்தது. சமூக அமைப்பிலும் அரச அமைப்பு முறையிலும் மதக் கொள்கையிலும் நுண்கலை வெளிப்பாட்டு உணர்ச்சியிலும் அம் மூன்று வீர வாழ்வுக் காலங்களும் பெருமளவில் ஒத்திருந்தன என வரலாற்றாசிரியர் கூறுவர்.

அம்மூன்றையும் தவிர சுமேரியன் வீர வாழ்வுக்காலம் என்று ஒன்றும் உண்டு. சுமேரிய வீர வாழ்வினை விவரிக்கும் கதைக் கவிதை காப்பிய இலக்கியத்தை உருவாக்கியுள்ளது. அத்தகு காப்பிய இலக்கியம் மூலம் உலக வரலாற்றுக்கும் இலக்கியத்துக்கும் சுமேரியன் வீரவாழ்வுக்காலம் அறிமுகப்படுத்தப்படுகிறது, அந்த சுமேரிய வீர வாழ்வுக்காலம் கி.மு. 3250 க்கு முன்னர் நிகழ்ந்திருக்கவேண்டும் என வரலாற்றாசிரியர் கருதுவர். அஃது அவ்வாறாயின் மிகப்பழமையான மூன்று இந்து-ஐரோப்பிய வீர வாழ்வுக்காலங்களை விட ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுக்களால் சுமேரிய வீர வாழ்வுக்காலம் முந்தியது என வரலாற்று ஆசிரியர் முடிவுகட்டி உள்ளனர்.

அந்த நான்கு வீரவாழ்வுக்காலங்களினதும் குறிப்பிடத்தக்க சாதனையாக அமைந்துள்ளது வீரவாழ்வு பற்றிய கதைகளைக் கவிதை உருவில் வடித்துத் தந்துள்ளமையேயாகும். கிரேக்க, இந்திய, டியுட்டோனிக் காப்பியக் கருப்பொருளைப் போன்றே சுமேரிய வீரவாழ்வுக் காலக் கவிதைகள் அமைந்துள்ளன. எஸ். எம். கிரேமா என்பவர் தம் கருத்துப்படி, சுமேரியரின் கதைக் கவிதைகளை எந்த கோணத்திலிருந்து பார்த்தாலும் நான்கு வீரவாழ்வுக் காலங்களிலும் அது முதன்மையானதாகும். காப்பிய இலக்கியத்தின் ஆரம்பத்தை சுமரில் காணலாம் என்றும் அவர் அபிப்பிராயப்பட்டுள்ளார்.

எனினும் சுமேரியக் காப்பிய இலக்கியப் பொருளுக்கும் கிரேக்க, இந்திய, டியுட்டோனிக் காப்பிய இலக்கியப் பொருளுக்கும் இடையே வேறுபாடு உண்டு. சுமேரியக் காப்பிய இலக்கியத்தில் இருக்கக் கூடிய பெண்கள் இடம் பெறுவது அருமையாக உள்ளது. ஆனால் இந்து—ஐரோப்பியக் காப்பிய இலக்கியங்களில் அத்தகையோர் நிறையப் பங்கேற்றுள்ளனர். அவர்கள் முக்கிய பங்கு வகித்துள் ளனர். சுமேரியக் கவிஞர் யாப்பமைதியைப் பொருட்படுத்துவ தில்லை. ஆனால் யாப்பமைதி இந்து ஐரோப்பியக் காப்பிய இலக்கி யங்களின் சிறப்பியல்பாகும்.

தொல்காப்பியர் காப்பிய இலக்கணம் வகுப்பதற்கு அவர் காலத் திற்கு முன்னர் இன்றைய நிலையில் உள்ள காப்பியங்கள் தோன்ற வில்லை எனலாம். எனவே செய்யுளியலில் காப்பிய இலக்கணங்கள் குறிப்பிடப்படவில்லை. ஆனால் செய்யுளுக்குரிய உறுப்புக்கள் தொல்காப்பியத்தில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. முப்பத்து நான்கு செய்யுளுறுப்புகள் கூறப்பட்டுள்ளன. இம்முப்பத்து நான்கு உறுப்புக்களுள் முதல் இருபத்தாறும் ஏனைய எட்டு உறுப்புக்களி லிருந்து வேறுபடுகின்றன. இரண்டையும் பிரித்து வேறு வேறாக ஒரே சூத்திரத்தில் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். மாத்திரை, எழுத்து, அசை, சீர், அடி, மரபு, தூக்கு (ஓசை), தொடை, நோக்கு, பா, அளவியல், திணை, கைகோள், பொருள், கேட்போர்களின் காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், பயன், முன்னம், பொருள், துறை, மாட்டேறு, வண்ணம் என்பன முதல் இருபத்து ஆறு உறுப்புகளில் அடங்கும். பின்னைய எட்டுமான அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைவு, புலன், இழைபு என்பன தமிழ் இலக்கி யத்தின் வனப்புக்களாகக் கணிக்கப்பட்டுள்ளன. ஓர் இலக்கியத்தின் உறுப்புக்கள் பூரணத்துவம் அடைந்து திகழ்வதையே வனப்பு என்பர்.

சிலவாய் மெல்லியலாகிய மொழியினானே தொடுக்கப்பட்ட அடிநிமிர்வில்லாத செய்யுள் அம்மை எனப்படும், செய்யுட்குரிய சொல் லாய் இருத்தல் வேண்டும். அச்சொல்லினால் சீரைப் புணர்த்துத் தொடுப்பின் அமையும் அவ்வகைப்பட்ட செய்யுள் அழகு என்பதாம். தொன்மை என்றால் பழமை. எனவே தொன்மை என்பது உரை யொடு பொருந்திப் போந்த பழைமைத்தாகிய பொருள் மேல் வருவன. அத்தகையன இராம சரிதம், பாண்டவ சரிதம் முதலாகியவற்றின் மேல் வரும் செய்யுள்களாகும். ஒரு செய்யுள் இழும் என்ற மொழி யால் அமைந்திருத்தல் வேண்டும். அதோடு விழுமிய பொருளைக் கூறு வதாக இருத்தல் வேண்டும். அத்தகைய செய்யுள் தோல் என வழங் கப்படும். பரந்த மொழியினால் அடி நிமிர்ந்து ஒழுகும் செய்யுளும் தோல் என்னும் பிரிவில் சேர்க்கக்கூடியதாகும். தோல் வனப்புக்குரிய தொடர்நிலைச்செய்யுட்கள் பண்டைய வரலாற்று நிகழ்ச்சிகளைக்

கருப்பொருளாகக் கொண்டிருக்கும். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பயன் பெறக்கூடிய போதனைகளைக் கொண்டிருக்கும். புதிது எனப் பொருள் தருவது விருந்து என்னும் சொல். எனவே இலக்கிய வனப்பான விருந்தாவது முன்புள்ளார் சொன்ன நெறி போயப் புதிதாகச் சொன்ன யாப்பினை உடையதாகும். ஒருவன் சொன்ன நிழல்வழியின்றித் தானே தோற்றுவித்தலையே புதிதாகப் புனைதல் என்பர். ஙஞணநமன என்னும் மெல்லொற்றெழுத்துக்களும் ஈறாகவரும் செய்யுள் இயைபு என்னும் செய்யுளாகக் கருதப்படும். இயைபு என்னும்பொழுது பொருளும் இயைந்து சொல்லும் இயைந்து வரும் என்பது கருத்து. புலன் என்னும் செய்யுள் வழக்கச் சொல்லி னால் தொடுக்கப்படுவது. சேரிச் சொல் வினா தொடுக்கப்படுவது என்றும் கூறலாம். இழைபு வனப்பு இனிய நடையில் அமையும் செய்யுளையே குறிக்கும். அத்தகைய செய்யுட்களில் பெரும்பான்மை யாக ஒட்டெழுத்துக்களும் மெல்லொற்றுக்களும் லகர ளகர இடை எழுத்துக்களும் இடம் பெறும். இழைபு வனப்பிலே வல்லொற்றுக்கள் தவிர்க்கப்படுகின்றன. இக் கருத்துக்களையே தொல்காப்பியர் செய்யு ளியலில் உள்ள முதலாவது சூத்திரத்தின் இறுதியில் இவ்வாறு குறிப் பிட்டுள்ளார் :

அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெருனா அப்
பொருந்தக் கூறிய எட்டொடுந்தொகை இ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப் பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத்தனரே.

நச்சினார்க்கினியர் உரை எழுதிய நூல்களுள் சீவகசிந்தாமணியும் ஒன்று. திருத்தக்கதேவரால் இயற்றப்பட்ட சீவகசிந்தாமணி என் னும் தலைசிறந்த காப்பியம் தொல்வனப்பின் பாற்படும் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிட்டுள்ளார்.

பெருங்காப்பியம் என்றும் காப்பியம் என்றும் இதிகாசம் என்றும் புராணம் என்றும் தமிழ் இலக்கியத்திலே காப்பியங்கள் வகைப்படுத் தப்பட்டுள்ளன. வீர வரலாற்றுக் கதைகளைக் கொண்ட தொடர் நிலைச்செய்யுள்கள் இதிகாசம் என்றும் புனிதமான கதைகளைக் கூறும் தொடர்நிலைச்செய்யுள் புராணம் என்று வழங்கப்பட்டு வருகின்றன.

பாரதம், இராமாயணம் என்பன இதிகாசங்களாகக் கருதப்படு கின்றன. இதிஹா என்பது இதிகாசமாயிற்று. 'உண்மையே இது', 'மரபுக்கிணங்க' என்பனவே இதிஹா என்பதன் கருத்தாகும். கதை, கட்டுக்கதை, மரபுக்கதை, வரலாறு, மரபுவழியிலான முற்கால நிகழ்ச் சிகள், வீர வாழ்க்கைச் சம்பவங்கள், என்னும் பொருள்களும்

இதி+ஹா என்பதற்கு உண்டு. 'உண்மையிலே அது அவ்வாறே இருந்தது' என்பதுதான் அதன் நேரடிக் கருத்தாகும்.

முன்பு பதினெட்டுப் புனிதக்கதைகளைக் குறிப்பிடவே புராணம் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டது. பின்னர் அடியார்களின் வாழ்க்கை வரலாற்றினையும் புனிதத் தலங்களின் சரிதையையும் பக்திச்சுவை ததும்ப வருணிக்கும் நூல்கள் இவ்வாறு அழைக்கப் பட்டன. பண்டைய காலத்தில் உலகின் தோற்றம், மூதாதையர் பரம்பரை, மனுயுகம் முதலியன பற்றிய கதைகளைக் கூறவே புராணம் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டது.

காப்பியம் என்றும் இதிகாசம் என்றும் புராணம் என்றும் பெயர் பெற்ற காப்பியங்களின் சிறப்பியல்புகள் எவை? தமிழ் இலக்கிய மரபுக்கியைய அவை எவ்வாறு தோன்றலாயின? அவற்றிற்கு அடிப் படையாக அமைந்த இலக்கண நூல்கள் எவை? இன்று நமக்கு கிடைக்கக்கூடியனவாக இருக்கின்ற முழுமையான காப்பியங்கள் உரு வாவதற்கு அடிப்படையாக அமைந்த நூல்கள் எவை? காப்பியங் களின் சிறப்பியல்புகளை வரிசைப்படுத்தும் அத்தகைய இலக்கண நூல்கள் எவ்வாறு பின்பற்றப்பட்டுள்ளன? அத்தகைய இலக்கண நூல்களில் விவரிக்கப்பட்டுள்ள சிறப்பியல்புகள் எந்த அளவுக்கு தமிழ் இலக்கியத்தில் உள்ள காப்பியங்களில் பின்பற்றப்பட்டனவாக அமைந் துள்ளன? என்ற இன்னோரன்ன வினாக்களுக்கு விடைகளைக் காண முயல்வோம்.

தமிழ் இலக்கியத்தில் முழுமையான காப்பியங்கள் என்று தகுதி பெற்றனவாகக் கருதப்படுவன தண்டியலங்காரத்தில் விவரிக்கப் பட்டுள்ள காப்பிய இலக்கணங்களைக் கொண்டே தோன்றி உள்ளன எனலாம். யாப்பிலக்கணம் பற்றிப் புகழ் பெற்ற தண்டின் என்பவர் வடமொழியில் எழுதிய காவிய தர்சம் என்னும் நூலைத் தழுவியே தமிழில் தண்டியலங்காரம் தோன்றி உள்ளது. கி.பி. 12 ஆம் நூற் றாண்டில் தோன்றிய தண்டியலங்காரத்தை அடியொற்றியே தமிழில் பல காப்பியங்கள் தோன்றின எனலாம். தண்டின் தமது காவியதர்ச என்னும் கிரந்தத்தில் சிறந்த ஒரு காப்பியம் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதை விவரித்துள்ளார். தண்டியலங்காரமும் அதே கருத்தை விவரிப்பதாக அமைந்துள்ளது.

ஒரு காப்பியத்தின் முகப்பு எவ்வாறு அமைய வேண்டும் என்பதைத் தண்டியலங்காரம் குறிப்பிடுகிறது. வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல் என்பனவற்றுள் ஒன்றினைக் கொண்டதாக ஒரு காப்பியம் ஆரம்பிக்கப்படல் வேண்டும். மக்கள் பின்பற்றக்கூடியதாக நூற்பயன் அமைதல் வேண்டும். அத்தகைய குறிக்கோள்கள் நான்கு. அறம், பொருள், இன்பம், வீடு என்பன அவை. காப்பியத்தில் இருக்க

வேண்டிய மற்றொரு பண்பு வருணனை. மலை, நிலம், கடல், ஆறு, நாடு, நகரம், பருவங்கள், சூரியோதயம், சூரிய அஸ்தமனம், சந்திரோதயம் முதலியன பற்றிய இயற்கை வருணனை முதலிடம் பெறுதல் வேண்டும். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஒரு தலைவனின் வாழ்க்கையைப் பற்றியதாகக் காப்பியம் அமைதல் வேண்டும். தன்னிகரில்லா அத்தகைய தலைவனின் குடிமரபு, பிறப்பு, இளமை, திருமணம், பூஞ்சோலை நுகர்வினாலும் நீர்நிலைக்களியாட்டங்களினாலும் பெற்ற இன்பம், காதல், ஊடல், மகப்பேறு, முடிசூட்டல், ஆட்சி, அரசியல் தொடர்பு, போர், வெற்றி முதலியன வருணிக்கப்பட்டிருத்தல் வேண்டும். அத்தகைய தலைவனின் இல்லற வாழ்க்கையும் அரசியல் வாழ்க்கையும் முழுமையாக இடம் பெறுதல் வேண்டும். உணர்ச்சி ததும்புவனவாய்க் கதை சொல்லும் முறை காப்பியத்தில் அமைதல் வேண்டும். அத்தகைய காப்பியம் சருக்கம், இலம்பகம், பரிச்சேதம், படலம் எனப் பகுக்கப்பட்டிருத்தல் வேண்டும். பல்சுவையும் மிளிர்வதாகவும் அமைதல் வேண்டும். மெய்ப்பாடுகளும் இடம் பெறுதல் வேண்டும்.

காப்பியத்தின் சிறப்பியல்புகளாகத் தண்டி என்பவர் வடமொழியில் வருணித்த அத்தனையும் தமிழில் வந்த தண்டியலங்காரத்தில் இடம் பெறவில்லை எனப் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

எது எவ்வாறாயினும் இஸ்லாமிய அடிப்படையிலே முஸ்லிம் புலவர்களால் தோற்றுவிக்கப்பட்ட தமிழ்க்காப்பியங்கள் தண்டியலங்காரத்தில் விவரிக்கப்பட்டுள்ள சிறப்பியல்புகளைக் கொண்டுள்ளன எனக் கூறலாம். தண்டியலங்காரம் தோன்றுவதற்கு முன்னர் தோன்றியனவாகக் கருதப்படும் சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி முதலிய காப்பியங்களில் தண்டியலங்காரம் வருணிக்கும் பாணியில் காப்பிய இலக்கணங்கள் அமைந்திருக்கவில்லை எனலாம். அதே ஒழுங்குமுறை பின்பற்றப்படவில்லை எனலாம். ஆனால் வடமொழிக் காப்பிய இலக்கணங்களுக்கு அமைய தமிழில் காப்பியங்கள் தோன்றின எனவும் கூறுகின்றனர். அத்தகைய காப்பியங்களுள் சிலப்பதிகாரம் என்பது முதலாவது என்றும் கூறுகின்றனர். சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியன முழுமையான காப்பியங்கள் அல்ல என்று கூறுவாரும் உள்ளனர்.

கம்பராமாயணம், பெரியபுராணம், கந்தபுராணம், பாரதம், திருவிளையாடற்புராணம் முதலியன தமிழ் மொழியில் சிறந்து விளங்கும் காப்பியங்களாகக் கருதப்படுவனவாகும்.

**முதல் முஸ்லிம் காப்பியம் :**

இஸ்லாமிய அடிப்படையிலே முஸ்லிம் புலவர்களால் தோற்றுவிக்கப்பட்ட தமிழ்க்காப்பியங்களுள் காலத்தால் முந்தியது கனகாபிஷேக

மாலையாகும். ஒரு காப்பியத்தின் ஆசிரியர் யார்? அவர் அக்காப்பியம் இயற்றிய காலம் எது? காப்பிய நாயகரான பாட்டுடைத் தலைவர் யார்? அக்காப்பியத்தை இயற்றுவதற்கு அக்காப்பிய ஆசிரியருக்கு கொடை வள்ளலாக இருந்தவர் யாவர்? அக்காப்பியத்தை அப்புலவர் இயற்றுவதற்குத் தூண்டுகோலாக இருந்தவை எவை? எந்தெந்த நூல்களை அடிப்படையாக வைத்து அப்புலவர் தமது காப்பியத்தை உருவாக்கினார்? வேற்றுமொழியில் இருந்த நூல்களைத் தமிழில் பெயர்த்து அப்புலவருக்கு உதவியவர் யாவர்? காப்பியத்துக்கு இன்றியமையாத செய்திகளைத் தொகுத்து அப்புலவருக்கு வழங்கியவர் யார்? அக்காப்பியம் தோன்றுவதற்கு வேறு பல வழிகளால் உதவி புரிந்தோர் யாவர்? அத்தகைய காப்பியம் எங்கே, எப்பொழுது, யார் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது? என்பன போன்ற வினாக்களுக்கு நாம் விடை காணுதல் வேண்டும். பெரும்பான்மையான காப்பிய ஆசிரியர்கள் அத்தகைய விவரங்களைத் தத்தமது காப்பியங்களில் உள்ள கடவுள் வாழ்த்துப்படலங்களில் தரத்தவறுவதில்லை. அத்தகைய பாடல்களை அடிப்படையாக வைத்தே நாம் எந்த முடிவுக்கும் வர முடியும்.

**ஆசிரியர் :**

முதலில் கனகாபிஷேகமாலை யாரால் எப்பொழுது இயற்றப்பட்டது என்பதைப் பார்ப்போம். இதனைக் கண்டுபிடிக்கக் கனகாபிஷேகமாலையில் செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. கனகாபிஷேகமாலையை இயற்றியவர் கனகவிராயர். இது இவருடைய சிறப்புப் பெயர். இவருடைய இயற்பெயர் இங்கு குறிப்பிடப்படவில்லை. இராஜகம்பீரன் என்னும் ஊரைச் சேர்ந்தவர். முகவை மாவட்டத்தில் உள்ள ஊர் அது. பாண்டி நாட்டைச் சேர்ந்தது இவ்வூர். இவ்விவரங்கள் ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

மாதரு வரசர் மணிமுடி புனைந்த வாறெலாம் வகைவகை யாக
வேதிய ரிருவர் விரித்துரை செய்யும் விழுப்பொருள் உளத்தினில் தரித்து
ஏதிலார்க் குதவு பாண்டிமா தேசத் திராஜகெம் பீரநன் னாடன்
பூதலம் புகழும் கனகவி ராயன் புகன்றனன் புதுமொழி தமிழால்
(கடவுள் வாழ்த்துப் படலம் : 22)

நிலை மண்டில ஆசிரியப் பாவாக அமைந்துள்ள சிறப்புப் பாயிரத்தில் கனகாபிஷேகமாலை ஆசிரியர் சிறப்புப்பெயர் இவ்வாறு சுட்டப்படுகிறது.

மாசிலா மனத்தினர் வதிந்திடும் அழகிய
ராஜகம் பீர மெனநவி லூரினர்
புலவர்கண் மதிக்கும் பூசித நாவலர்
கலைபல தேர்ந்த கனகவி ராயர்,

மற்றொரு பாடலில் கனகவிராயரின் இயற்பெயர் குறிப்பிடப் படுவதைக் காணலாம். அந்தச் செய்யுளிலே கனகாபிஷேகமாலையில் கருப்பொருளாக அமைந்த நிகழ்ச்சியும் குறிப்பிடப்படுகிறது. நபிகள் பெருமானாரின் பேரரான உசைன் (றலி) அவர்களின் வரலாறு இங்கே காணப்படுகிறது. கனகாபிஷேகமாலை பாடிய கனகவிராயரின் இயற்பெயர் செய்கு நயினார் கான் என்பதாகும். இக்குறிப்புக்களைக் கொண்ட பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

நபிகள்தம் பெருமான் நல்லொளி மேனியில்
தழீஇய பெயரர்தம் மொழீஇய சரிதம்
கனியெனத் தேனெனக் கண்டென இயற்றுப
காரணத் தொருபெயர் கனகா பிஷேக
மாலை என் றாக்கிய மாண்புசெய் புலவர்
புவியெலாம் கனக கவிராயர் என்னும்
மெய்வரும் செய்கு நயினார்கான்.

(கவிச் சக்கரவர்த்திகளுக்கெல்லாம் பொன் போன்றவர் என்று பொருள்பட) கனககவிராயர் என்னும் சிறப்புப்பெயர் காலப்போக்கில் கனகவிராயர் எனச் சுருங்கியது என்பர். இப்புலவர் அவர் தம் சிறப்புப்பெயராலே யன்றி இயற்பெயரால் அறிமுகப்படவில்லை என்பது புலனாகின்றது. கனகாபிஷேகமாலையில் ஆசிரியரின் பெயர் கனகவிராயர் என்றே குறிப்பிடப்படுவதால் அச்சொற்றொடர் கனக+ இராயன் என இருந்து கனகவிராயன் (கனகராஜன்) ஆக மாறியுள்ளது. கனக என்னும் சொல் இந்நூலுக்கும் இந்நூலாசியருக்கும் புரவலருக் கும் அடைமொழியாக அமைந்திருப்பது இன்று நோக்கற்பாலது. இவருடைய பரம்பரையில் வந்தவர் மஸ்தான் சாகிபுப் புலவர் என்றும் கூறப்படுகிறது.

**கொடைவள்ளல் :**

கனகாபிஷேகமாலை தோன்றுவதற்குக் காரணமாயிருந்தவர் மதுரையைச் சேர்ந்தவர். கொந்தாலகான் என்னும் பெயரினை உடையவர். அவர் கொடை வள்ளல். பெருஞ் செல்வந்தர். வரை யாது வழங்கும் மழை போன்ற வள்ளண்மையை உடையவராயிருந்த வர். செய்யதுகான் என்பவரின் புதல்வர். இவ்விவரங்களும் சிறப்புப் பாயிரத்தில் இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

இமிழவாழ் தண்டலை யேர்கன்னி நாடுசூழ்
திருவாழ் கூடலில் திகழொரு வள்ளல்
பொருவே இல்லாப் புகழ்பெற் றோங்கிய
செய்துகான் தவத்திற் சேயென வந்த
மையினைப் பழித்த வண்மையார் கரத்தன்
கனககொந் தாலகான் கணக்கிலாப் பொருள்கள்
மனமகிழ்ந் தளித்து வந்து கேட்டபடி

கனகாபிஷேகமாலையிலும் அதன் ஆசிரியர் தமது புரவலரை இரண்டுமுறை கடவுள் வாழ்த்துப் படலத்தில் குறிப்பிட்டுள்ளார். இஸ்லாமிய நெறி முறை மாறாமல் இக்காப்பியம் பரிணமிக்க இருவர் உரை வழங்க, அவ்வாறு வழங்கப்பட்ட உரையினை அடிப்படையாக வைத்து உலகெலாம் விளங்கக் கனகாபிஷேகமாலையை எல்லோ ராலும் புகழத்தக்கதொன்றாய் இயற்ற இல்லை யெனாது நிதி அளித் தான் கனககொந்தாலகான் என்னும் கொடை வள்ளல்.

சரகினில் நெறிவ ழாமல் தாங்குநூ லிருவர் சொல்லும்
உரையினைத் தமிழில் கூறி உலகெலாம் விளங்கச் செய்ய
விரைவினில் கருணை கூர்ந்து விஞ்சை நாவலர்கள் போற்றக்
கரையிலா நிதிய முய்த்தான் கனககொந் தாலகானே.

(கடவுள் வாழ்த்து : 23)

என மேலே கூறப்பட்ட கருத்துக்கள் அமைந்துள்ளமையைக் காணலாம்.

கடவுள் வாழ்த்திலுள்ள மற்றொரு பாடலிலும் தமது கொடை வள்ளலைக் குறிப்பிட்டுள்ளார் கனகாபிஷேகமாலை ஆசிரியர்.

நபிமுதல் எண்மர் வேத நாயகர் ஆகி என்றும்
கவினுறு உலகில் செய்த கனகா பிஷேக மாலை
புவியினில் தமிழி னாலே புகலமா நிதிய முய்த்தான்
தவமுய லறிவன் கூடல் சைதுகொந் தால கானே.

(கடவுள் வாழ்த்துப்படலம் : 24)

இச்செய்யுளிலே எட்டு அரசரின் வரலாறு கூறப்பட உள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. முகம்மது நபி (சல்), அபூபக்கர் (றலி), உமறு (றலி), உதுமான் (றலி), அலி (றலி), ஹஸன் (றலி), ஹுஸைன் (றலி), செயனுலாபிதீன் (றலி) ஆகியோரே அவ்வெட்டு அரசருமாவர். அத்தகையோருடைய வரலாற்றைத் தமிழில் பாடவே செய்யது கொந்தாலகான் என்பவர் தமக்குப் பெருமளவு பணம் தந்தார் எனக் குறிப்பிட்டுள்ளார், ஆசிரியர். நூலிலே பல இடங்களில் கொடைவள்ளலின் பெருமை பேசப்படுகிறது. அதனைப் பின்னர் பார்ப்போம்.

கனக+அபிஷேக+மாலை என இச்சொற்றொடரைப் பிரிக்க லாம். கனகம் என்றால் பொன். அபிஷேகம் என்றால் குளித்தல், ஸ்நானம் செய்தல், சிறப்பாக அபிஷேகம் என்னும் சொல் புனித மான அல்லது அரசு சார்ந்த குளித்தலைக் குறிப்பிடும் என்பர். ஓர் அரசனை முடிசூட்டும் பொழுது குளிக்க வைத்தலையும் அபிஷேகம் செய்தல் என்பர். அபிஷேகம் என்னும்பொழுது தலையில் வார்த்தல் என்றும் பொருள்படும் என்பர், கனகாபிஷேகம் என்று குறிப்பிடும்

பொழுது பொன்னை வார்த்தல் என்று பொருள்படும். பொன்னால் குளிப்பாட்டுதல் என்றும் பொருள் கொள்ளலாம். பொதுவாகப் பார்க்கும் பொழுது அபிஷேகம் என்னும் சொல் பரந்த அடிப்படையில் ஒரு மன்னன் முடி சூட்டப்படுவதைக் குறிக்கும் எனக் கொள்ளலாம். இக்கனகாபிஷேகமாலையில் எட்டு மன்னர்கள் ஒருவர் பின் ஒருவராக ஆட்சிப் பொறுப்பை ஏற்கின்றனர். எனவே முடி சூட்டப்படுகின்றனர். அபிஷேகம் செய்யப்படுகின்றனர். அந்த எட்டு மன்னர்களின் ஆட்சிக்கு வருவது பற்றிய விவரங்கள் கனகாபிஷேக மாலையில் சிறப்பாக ஒரு மாலை போன்று தொடுக்கப்பட்டு இடம் பெறுவதால் அந்நூல் அப்பெயர் பெற்றுள்ளது எனலாம். வடமொழிச் சந்திமுறைக்கு இயங்க 'அ'வை இறுதியிலே உடைய சொல்லோடு 'அ'வை முதலிலே உள்ளசொல் புணரும் பொழுது இடையிலே 'ஆ' தோன்றும். கனக+ அபிஷேகமாலை = கனகாபிஷேகமாலை.

**முதல் நூல் :**

கனகாபிஷேகமாலையைப் பாடுவதற்குக் கனகவிராயருக்கு அடிப் படையாக அமைந்தது 'முக்கத்திலூசன்' என்னும் கித்தாபே (நூலே). உசைன் (றலி) அவர்களின் படுகொலை பற்றியது இந்நூல். முக்கத் தலுஹூசைன் என்னும் அறபுச் சொற்றொடரின் பொருளும் அதுவே. இந்நூல் அறபு மொழியிலும் பார்ஸி மொழியிலும் உள்ளது. ஆசிரி யருக்கு முதல் நூலாக அமைந்த இந்நூல் பஹாவுத்தீன் மகுதூம் என்ப வரின் படைப்பாகும். இவ்விவரங்கள் இவ்வாறு தரப்பட்டுள்ளன.

வயவரி உசன்வா றெல்லாம் வகாவுத்தீன் மகுதூம் உள்ளத்து
அயர்வுறா மரபி னூலாம் அறபுபா ரிசிலும் தேர்ந்து
முயலுமுக் கத்தி லூசன் கித்தாபினை முதனூ லாக்கி
வியவராய் விரித்து ரைத்தார் வேதியர் இருவ ரன்றே.

(கடவுள் வாழ்த்துப்படலம் : 17)

அறபு, பாரசீக மொழிகளிலிருந்த செய்திகளை எல்லாம் கன கவிராயருக்கு உரையாக வழங்கியவர்கள் இருவர் என்பது முன்னைய செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்விருவரைப்பற்றியும் ஆசிரியர் இரண்டு வெவ்வேறு செய்யுட்களில் குறிப்பிட்டுள்ளார். ஒருவர் ஆலிம் செய்கு முகம்மது மகுதூம் என்பவர். இவர் அப்துல் காதிர் என்பவரின் புதல்வர். இவர் மராட்டிக்கு அதிபதியாக இருந்தவர். கல்வி கேள்விகளில் சிறந்தவர். இவ்விவரங்கள் ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன :

அருமறை தெரிம ராட்டிக் கதிபதி அப்துல் காதிர்
வரமுறு மாலிம் செய்கு முகம்மது மகுதூம் என்போர்
பரிவுறும் உசன்வா றெல்லாம் பகரமுற் றுரைவி ரிக்க
ஒருமுறை வழாமல் செய்தேன் உலகெலாம் புகல மிக்கேன்.

(கடவுள் வாழ்த்துப் படலம் : 18)

ஆசிரியருக்கு உசைன் (றலி) அவர்களைப்பற்றி மற்றச் செய்திகளைத் தந்தவர் மகுதூம் என்பவர். அத்தபாயைச் சேர்ந்தவர். அத்தபாய் மகுதூம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளார். இவர் கானுமிய்யா இலெப்பையின் புதல்வர். வயல்கள் சூழ்ந்த காவிரியின் மேற்குப் பக்கத்தில் உள்ள அத்தபாய் என்னுமிடத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இக்கருத்துக்களே :

கயலமர் பழனஞ் சூழ்மேற் காவிரி யத்த பாயில்
இயல்பெறு கானுமிய்யா விலெப்பை மாமதலை வேதப்
பயனுரை தெரியு மத்த பாய்மகு தூம்வன் பாரில்
உயருசன் கதையின் பாக முரைத்திட உரைக்க லுற்றேன்.

(கடவுள் வாழ்த்துப் படலம் : 19)

என இப்பாடலில் அமைந்துள்ளமையைக் காணலாம்.

**காலம் :**

கனகாபிஷேகமாலை இயற்றப்பட்ட காலம் ஒரு செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது. தமிழ் வருடக் கணிப்புக்கிணங்க 'நரபதி சகாத்தம் ஆயிரத்து ஐந்நூற்றறுபத்து நான்கு' கழிந்து விட்ட பின்னர் இயற்றப்பட்டுள்ளது. அதற்குச் சமமான ஹிஜ்றி ஆண்டு ஆயிரத்து ஐம்பத்தெட்டு எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த ஹிஜ்றி ஆண்டு முகம்மது நபி (சல்) அவர்கள் மக்கத்தை விட்டு மதீனமாநகருக்குச் சென்ற நிகழ்ச்சியிலிருந்து ஆரம்பமாகிறது. அவ்வாண்டு இந்து வருடமான விரோதிகிருது என்பதற்குச் சமமானதாகும். இக்குறிப்புக்களைக் கொண்ட செய்யுள் இதுதான் :

நரபதி சகாத்த மாயிரத் தைஞ்நூற்
றறுபத்து நான்கினு மேலாய்
வரபதி இறசூல் மக்கம் விட்டெழுந்து
மாமதி தினாவினின் வைகி
முருகவிழ் தொடையல் புனைந்தவா யிரத்து
முப்பதோ டிருபத்தெட் டினிலே
விரவிய விரோதி கிருதெனும் வருடம்
விளம்பினன் பெருங்கதை சிறியேன்.

(கடவுள் வாழ்த்துப் படலம் : 20)

இங்கே ஹிஜ்றி ஆண்டு 'ஆயிரத்து முப்பதோ டிருபத்தெட்டு' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது ஹிஜ்றி ஆயிரத்து ஐம்பத்தெட்டையே குறிக்கிறது. இதற்குச் சமமான ஆங்கில ஆண்டு ஆயிரத்து அறுநூற்று நாற்பத்தெட்டாகும்.

**அவையடக்கம் :**

கனகவிராயர் அவர்கள் அவையடக்கம் கூறும்பொழுது கற்பனையின் உச்சநிலையை அடைந்தமையினாலோ என்னவோ இஸ்லாத்துக்கு முரண்பாடான ஒரு செய்தியைக் குறிப்பிடுகிறார். பணி என்பது

பணத்தை உடையது. பணம் என்பது பாம்பின் படம். ஆயிரம் படங்களால் தரை எல்லாம் தாங்கிக் கொண்டிருக்கிறது ஆதிசேடன் என்று குறிப்பிடுகிறார். அந்த மாபெரும் ஆதிசேடன் முன்பு மண் புழு (நாங்குழு) போன்று தாம் இருப்பதாக உவமிக்கிறார். தமது சிறுமையைச் சுட்டிக்காட்டவே அவ்வாறு குறிப்பிடுகிறார். அதோடு அவர் நின்றுவிடவில்லை. அரசர்கள் முடிபுனைந்துள்ளனர். அவர்களுடைய முடிகளிலே விலை மதிக்கமுடியாத மணிகள் தொங்கிக் கொண்டு இருக்கின்றன. அந்த மணிகளின் முன்னிலையில் சிறார்கள் அரையிலே அணியும் சின்னஞ்சிறு புரிமணி போன்றது தமது நிலை என ஆசிரியர் குறிப்பிடுகிறார். பெரிய ஆதிசேடன் முன்னர் ஒரு மண் புழு (நாங்குழு) போலும் மணிமுடிமுன் அரை நாண் புரிமணி போலும் தமிழ் கல்வி கேள்விகளிற் சிறந்த பண்டிதர் முன்னிலையில் சிறியவனாகிய ஆசிரியர் தமிழிற் கவிதை புனைய முற்பட்டார் என இவ்வாறு அவையடக்கம் கூறுகிறார் ஆசிரியர் :

தன்னிலை தளரா தாயிரம் பணத்தால்
தரையெலாம் தாங்கிய பணியின்
முன்னிநாங் குழுவிங் கிணையெனல் போலும்
முடிபுனை அரசர்க ருக்கு
நன்னிலை மணியின் முனஞ்சிறார் அரையின்
நான்றிடும் புரிமணி போலும்
பன்னிய தமிழின் பெரியர்முன் சிறியேன்
பாடுதற் றுணிந்திடுந் திறனே.

(கடவுள் வாழ்த்துப் படலம் : 21)

சொர்க்கத்தைக் குறிப்பிடவும் கனகம் என்னும் அடைமொழியைக் கனகவிராயர் பயன்படுத்தி உள்ளார். கனகநாடு எனக் குறிப்பிட்டுள்ளார். முகம்மது நபி (சல்) அவர்களை முதல்வராகவும் செயினுலாபுதீன் (றலி) அவர்களை இறுதியாகவும் கொண்டு அவர்கள் உலகினை ஆண்ட வரலாற்றினைக் கூறுகிறது கனகாபிஷேகமாலை. இந்த வரலாற்றினை சிறந்த முறையில் கற்பவர்களும் அதனைப் படிப்பதைக் கேட்பவர்களும் கனகநாட்டை (சொர்க்கத்தை)ப் பெறும் முகமாக இந்த உலகத்தில் வாழ்வார்களாக என்று வாழ்த்துகிறார் ஆசிரியர். அவ்வாழ்த்தே இவ்வாறு ஒரு செய்யுளில் அமைந்துள்ளது.

திருநபி முன்னும் செய்னு லாபிதீன் பின்னு மாக
இருநிலம் புரந்து செங்கோல் இயற்றிய காதை தன்னைக்
கருதியே கற்போர் கேட்போர் கனகநா டனைத்தும் கொள்ள
மருவிய தலைவ ராகி வாழ்வர்மா நிலத்தி லன்றே.

(கடவுள் வாழ்த்துப் படலம் : 25)

**அரங்கேற்றம் :**

கனகாபிஷேகமாலை என்னும் நூல் பேட்டை மாநகரிலே அரங் கேற்றப்பட்டது. இயற்கை வளம் பொருந்தியது அப்பேட்டை. அங்கே உள்ள மன்றில் இந்த நூல் அரங்கேற்றப்பட்டது. இந்நூலில் இடம் பெற்ற காதை கோமகன் எசீது காதை எனக் குறிப்பிடப்பட் டுள்ளது. ஏனைய இடங்களில் கண்டிக்கப்படும் எசீது என்பவர் இங்கே கோமகன் என வருணிக்கப்பட்டுள்ளார். இது பதிப்பா சிரியரின் தவறினால் ஏற்பட்டிருக்கலாம். உசைனார் என இருக்க வேண்டியது எசீது எனப் பதிப்பிக்கப்பட்டிருக்கலாம். புலவர் அவர் கள் தமது நூல் அரங்கேற்றப்பட்ட விவரத்தைக் கூறுவதோடு தமது சிறப்புப் பெயரையும் ஒரு செய்யுளில் இவ்வாறு பாடியுள்ளார். இங்கே 'கோமகன் உசைனார்' என இருப்பின் 'கோமகன் எசீது' என்பதைவிடப் பொருத்தமாகும். ஏனெனில் இங்கே ஆசிரியர் கூற வந்தது உசைனாரில் காதையேயன்றி எசீதின் காதையை யன்றான மையினாலேயே.

தேமலர் மரப மாலைத் தீனுளோர் பெரிது வாழ
மாமலர் வாவி சூழும் வயலகம் பேட்டை மன்றில்
கோமகன் எசீது காதை குலத்தமிழ் அரங்கஞ் செய்தான்
காமரு காளை யன்ன கனகவி ராயன் மாதோ.

(கடவுள் வாழ்த்துப் படலம் : 26)

கனகாபிஷேகமாலை அச்சுவாகனம் ஏறி நூற்றிருபது வருடங்கள் ஆகிவிட்டன. சீறாப்புராணம் தோன்றுவதற்கு முன்னர் இயற்றப் பட்டது கனகாபிஷேகமாலை என அதன் கடவுள் வாழ்த்தில் உள்ள முத்திரைச் செய்யுள் மூலம் அறியக்கிடக்கிறது. எனினும் 1842 இல் சீறாப்புராணம் அச்சியற்றப்பட்டு இருபது ஆண்டுகளுக்குப் பின்னரே கனகாபிஷேகமாலை அச்சாகி உள்ளது என்பது புலனாகின்றது. கன காபிஷேகமாலையின் முதலாம் பதிப்பு ஹிஜ்றி 1278 ஆம் ஆண்டு றமலான் மாதம் ஐந்தாந்திகதி வெள்ளிக்கிழமை அச்சாகி வெளிவந் துள்ளது. இது கி.பி. 1862 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 7 ஆந் தேதி ஆகும். கனகாபிஷேகமாலையின் இரண்டாம் பதிப்பு ஹிஜ்றி 1309 ஆம் ஆண்டு ஜமாதுல் அவ்வல் மாதம் 7 ஆந் தேதி வெள்ளிக்கிழமை வெளிவந்துள்ளது. இது கி.பி. 1891 ஆம் ஆண்டு டிசெம்பர் மாதம் 11 ஆந் தேதி ஆகும். இதிலிருந்து ஏறத்தாழ முப்பது ஆண்டுகளில் கனகாபிஷேகமாலை இரண்டு பதிப்புக்களைக் கொண்டுள்ளது என்பது புலனாகிறது. இரண்டாம் பதிப்பு சென்னை இட்டா நாராயணசாமி நாயுடு அவர்களது ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பட்டுள்ளது.

**காப்புச் செய்யுள் :**

கனகாபிஷேகமாலையில் இடம் பெற்றுள்ள காப்புச் செய்யுளை எடுத்துக் கொள்வோம். அந்தக் காப்புச் செய்யுளிலே நிர்மலனாகிய

அல்லாஹ்வை நினைவு கூர்ந்து அன்புடையவர்களாய்ப் பணிவோம் என்று கூறுகிறார். எல்லா உலகங்களையும் படைப்பவன்; அனைத்து உயிர்களையும் சிருட்டிப்பவன். எல்லாத் தொழிலையும் உண்டாக்குபவன். குன் என (ஆகுக என்று) கூறியவுடன் எல்லாம் ஆகிவிடுகின்றன. அத்தகைய இறைவனாகிய அல்லாஹ் எங்கும் இருக்கிறான். எல்லாவற்றிலும் இருக்கிறான். பூவும் மணமும் ஒன்றி இருப்பது போல் வேறாகாமல் இருக்கின்றான். நீலநிறமாகிய ஆகாயத்திலே சஞ்சரிக்கும் சந்திரன் போன்று வேறாகியும் இருக்கின்றான். அழகுமிக்க புளியம்பழத் தோட்டினைப் போன்று இரண்டறக் கலந்தும் வேறாகப் பிரிந்தும் இருக்கிறான். எல்லாவற்றிலும் இருக்கின்ற அல்லாஹ்வையே இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டு அதனைக் காப்புச் செய்யுளாகப் பாடி உள்ளார்.

சீர்கொளெவ் வுலகுஞ் சீவனும் தொழிலும்
  திகழ்ந்திடும் தன்னவென் றுரைக்க
வேர்கொளெவ் வரரு மிறைமைகொண் டலரி
  னறுமண மென்னவே நின்றும்
கார்கொளந் தரத்தின் சசியென வேறா
  கியுங்கவின் எகின்பழத் தோட்டை
நேர்கொளக் கலந்தும் பிரிந்தும்யா வினுமார்
  நிமலனை நினைபன்பிற் பணிவாம்

கனகாபிஷேகமாலை என்னும் காப்பியத்தின் முதற்செய்யுளாக இது அமைந்துள்ளது.

**நூற்பயன் :**

கடவுள் வாழ்த்தினை ஆரம்பிக்கு முன்னர் காப்புச் செய்யுளைத் தொடர்ந்து மற்றொரு செய்யுளைப் பாடியுள்ளார் கனகவிராயர். அது நூற்பயன் கூறுவதாக அமைந்துள்ளது. உசைன் (றலி) அவர்களின் வாளின் வலிமை கூறுவோர் பல நன்மைகளை அடைவர். வலிமையில் புலியைப் போன்ற அலி (றலி) அவர்களின் புதல்வரான உசைன் (றலி) அவர்களின் வீரத்தைப் புகழுவோர் பல பாக்கியங்களைப் பெறுவர். கயவருள்ளும் மிக்க கயவரான எசீது என்பவரின் மிகுதியான படையைத் தாக்கி அழித்த உசைன் (றலி) அவர்களின் சிறப்பினைப் போற்றுவோர் பெரும்பேறுகளைத் தமதாக்கிக் கொள்வர். அத்தகையோரின் புயத்தில் வலிமை ஏற்படும்; கல்வியின் மேம்பாடு உண்டாகும்; புகழ் எல்லாத் திசைகளிலும் மிகுந்து பரவும்; புலமை வளரும்; செல்வம் மிகும்; திருமறைப் பொருளை நன்குணர்ந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைக்கும். அத்தகையோர் சுவனபதியை எய்துவர். இக்கருத்துக்களையே கனகவிராயர் இவ்வாறு பாடிப் பெருமிதம் அடைகிறார்,

புயவலி கல்வி மேன்மைப் புகழ்மிகு புலமை செல்வ
மியன்மறைப் பொருளோர் வுண்டா மெழில்பெறு சுவன மெய்தும்
கயவரி னுயரெ சீது கணப்படை மடியத் தாக்கும்
வயவரி யலியு சைனின் வாள்வலி கூறு வோர்க்கே.

இவ்வாறு நூற்பயன் கூறும் முறைமையை ஏனைய பல காப்பியங்களில் காணமுடியாது. சில சமயங்களில் வண்ணக்களஞ்சியப் புலவர் போன்றோர் இரண்டு செய்யுட்களைக் காப்புப் பாடல்களாக அமைத்து இரண்டாவது காப்புப் பாடலில் வருபொருள் உரைத்து இறைவனின் பாதுகாப்பினை நாடுவதைக் காணலாம். பல காப்பியங்களில் காப்புச் செய்யுள் தனிச் செய்யுளாகவே அமைந்து காணப்படுகிறது.

**கடவுள் வாழ்த்து :**

காப்பிய இலக்கணங்கள் ஒருங்கே அமையப்பெற்ற தமிழ்க் காப்பியங்கள் வாழ்த்து அல்லது வணக்கம் அல்லது வருபொருள் உரைத்தல் என்பனவற்றுள் ஒன்றைக் கொண்டே ஆரம்பிக்கின்றன. காப்பியங்களுள்ளே மிகப்பழமை வாய்ந்தது எனவும் இரட்டைக் காப்பியங்கள் எனக் கணிக்கப்படுவனவற்றுள் காலத்தால் முந்தியது எனவும் கருதப் படும் சிலப்பதிகாரம், மங்கள வாழ்த்துப் பாடலுடன் ஆரம்பிக்கிறது. திங்களையும், ஞாயிறையும், மழையையும் புகார் நகரையும் முறையே போற்றுவதாக மங்கள வாழ்த்துப்பாடல் அமைந்துள்ளது. திங்களைப் போற்றும் சிலப்பதிகாரம்,

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்ந் தார்ச் சென்னிகுளிர் வெண்குடை போன்றிவ்
வங்க ணுலகளித்தலான் (1 - 3)

என வாழ்த்துக் கூறுகிறது. சூரியனைப் புகழும் பொழுது

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரி போல் பொற்கோட்டு
மேறா வலந்திரிதலான் (4 - 6)

என சூரியனின் 'உலகவலம்' மங்கள வாழ்த்தில் இடம் பெற்றுள்ளது. உலக வளத்துக்கு இன்றியமையாத மழையைச் சிலப்பதிகார ஆசிரியர்,

மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலியுலகிற் கவனளிபோல்
மேனின்று தான் சுரத்தலான் (7 - 9)

என மங்கள வாழ்த்துக் கூறுகிறார். இறுதியாக தமது காப்பியத்துக்கு நிலைக்களனாக அமையும் புகார் நகரை இளங்கோவடிகள் இவ்வாறு வாழ்த்துகிறார்.

பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலியுலகில் கலன் குலத்தோ
டோங்கிப் பரந் தொழுகலான் (10 - 12)

மக்கள் தம் வாழ்க்கைக்கு இவை நான்கும் மிக அவசியமானவை எனக் கருதப்படுதலால் இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தை அந்நான்கையும் வாழ்த்தி ஆரம்பித்துள்ளார்.

தமிழ் இலக்கியத்தில் உள்ள தலைசிறந்த காப்பியமாக எல்லோராலும் கணிக்கப்படும் சீவகசிந்தாமணி சமண சமய மக்களிடையே நன்மதிப்பைப் பெற்ற சீவகன் என்பவனைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு திகழ்கிறது. சமண சமயத்தைப் பரப்பும் முகமாகத் தோன்றிய அக்காப்பியத்தில் உள்ள கடவுள் வாழ்த்தில் சமண நெறிமுறைப் படியே கடவுள் வாழ்த்து அமைகிறது. சமண சமயத்திலே அருக சரணம், சித்தசரணம், சாதுசரணம், தன்மசரணம் என அடைக்கலம் கோரும் நெறிமுறை நான்கு வகைப்படுகிறது. அந்நான்கும் முறையே அருகன், சித்தன், சாது, தன்மம் எனச் சமணப் பெரியார்களையும் அவர்தம் தருமத்தையும் குறிக்கின்றன. சமணர்களின் தெய்வம் அருகன் எனப்பட்டது. முழுமையானவன் என்பதைச் சித்தன் குறிக்கிறது. சமண முனிவர் சாது எனப்பட்டார். அருகனுடைய போதனைகள் தன்மம், தருமம் என வழங்கப்படலாயிற்று. சமண சமயத்தினுள் இந்த ஒழுங்கு முறையைப் பின்பற்றியே அடைக்கலம் கோரப்படுதல் வேண்டும். ஆனால் இந்த ஒழுங்கு முறையைத் திருத்தக்க தேவர் மாற்றி அமைக்கிறார். தமது சீவகசிந்தாமணியில் இடம் பெற்றுள்ள கடவுள் வாழ்த்துப் பகுதியில் அவர் கடவுள் வாழ்த்தில் முதலில் அருகனைக் குறிப்பிடாது சித்தனைக் குறிப்பிடுகிறார். சித்தனிடம் அடைக்கலம் கோருவதாக அமைந்துள்ளது சீவகசிந்தாமணியில் உள்ள இப்பாடல்,

மூவா முதலா உலகம் ஒரு மூன்றும் ஏத்தத்
தாவாக இன்பந் தலையாயது தன்னில் எய்தி
ஓவாது நின்ற குணத்தொன்னிதிச் செல்வன் என்ப
தேவாதி தேவன் அவன் சேவடி சேர்து மன்றே

இரண்டாவது செய்யுளிலே முதலாவதாக இடம் பெறவேண்டிய அருக சரணம் கூறப்படுகிறது. அச்செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

செம்பொன் வரைமேற் பசும்பொன் னெழுத்திட்டதேபோல்
அம்பொன் பிதிர்வின் மறுவாயிரத்தெட் டணிந்து
வெம்புஞ் சுடரில் சுடருந் திருமூர்த் திவிண்ணோர்
அம்பொன் முடிமேல் அடித்தா மரைசென் னிவைப்பாம்.

கடவுள் வாழ்த்தில் உள்ள மூன்றாவது செய்யுளில் திருத்தக்கதேவர் சமணநெறி முறைப்படி மூன்றாவதான சாது சரணத்தை நான்காவதாகவும் நான்காவதான தன்மசரணத்தை மூன்றாவதாகவும் மாற்றிப் பாடியுள்ளார். அச்செய்யுள் வருமாறு :

பன்மாண் குணங்கட் கடனா யப்பகைநண் பொடில்லான்
தொன்மாண் பமைந்த புனைநல் வரத்துன் னிநின்ற
சொன்மாண் பமைந்த குழுவின் சரண்சென் றுதொக்க
நன்மாண்பு பெற்றே னிதநாட்டு தன்மாண் புபெற்றேன்.

தர்மத்தை முதலிலும் அத்தர்மத்தைப் பின்பற்றி ஒழுகும் முனிவர்களைப் பின்னரும் போற்றுதலே சிறந்த முறை எனத் திருத்தக்கதேவர் கருதி இருக்கலாம்.

விஷ்ணுவின் அவதாரமான இராமபிரானின் வரலாற்றைக் கூற முற்பட்ட கவிச்சக்கரவர்த்தி கம்பன் தமது இராமாயணத்தின் கடவுள் வாழ்த்துப் படலத்தில் உள்ள முதலாவது பாடலில் படைத்துப் பாது காத்து எல்லா வல்லமையையும் தன்னிடத்தே கொண்ட கடவுளைக் குறிப்பிடுகிறார். இங்கே எந்தக் கடவுளினதும் பெயர் சுட்டப்படவில்லை. கடவுளை 'அவர்' என்று மாத்திரமே குறிப்பிடுகிறார். இந்த அவர் என்பது மரியாதைப்பன்மையாக ஒருமையை குறிக்க வந்துள்ளது. அந்தப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே.

மற்றொரு கடவுள் வாழ்த்துப்பாடலில் கம்பர் விஷ்ணுவின் பெயரைக் குறிப்பிடாது அவர்தம் பண்புகளைக் குறிப்பிட்டுள்ளார். தலைசிறந்த குணத்தை உடையவர் என்ற கருத்தை வெளிப்படுத்தியே விஷ்ணுவைச் சுட்டி உள்ளார் கம்பன். அப்பாடல்,

சிற்குணத்தவர் தெரிவரு நன்னிலை
எற்குணர்த்த அரிது; எண்ணிய மூன்றினுள்
முற்குணத்தவரே முதலோர் அவர்
நற்குணக் கடல் ஆடுதல் நன்றரோ

என அமைந்துள்ளது. கடவுள் வாழ்த்தில் கடைசி வாழ்த்துப் பாடலில் விஷ்ணுவை அரி எனக் குறிப்பிட்டுப் பாடி உள்ளார்.

ஆதி அந்தம் அரியென யாவையும்
ஓதினார் அலகு இல்லன உள்ளன
வேதம் என்பன மெய்ந்நெறி நோன்மையன்
பாதம் அல்லது பற்றிலர் பற்றிலார்.

என வந்துள்ளது அச்செய்யுள்.

திருத்தொண்டர் புராணம் என அழைக்கப்படும் பெரியபுராணத்தில் கடவுள் வாழ்த்துக்குப் பதிலாகப் பாயிரம் வந்துள்ளது. சைவ நாயன்மாரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் பெரிய புராணத்தில்

உள்ள முதல் இரண்டு பாடல்களில் சிவபெருமான் போற்றப்பட்டுள்ளார். ஒரு பாடல் 'அம்பலத்தாடுவான்' என சிவ பெருமானைக் குறிப்பிடுகிறது. அப்பாடல்,

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்

என வந்துள்ளது. மற்றுமொரு பாடலில் சேக்கிழார் சுவாமிகள் சிவ பெருமானை 'தில்லையுள் மாநடஞ்செய்வரதர்' எனப்போற்றி உள்ளார். அப்பாடல்,

ஊனடைந் தவுடம் பின்பிற வியே
தானடைந் தவுறு தியைச்சா ருமாற்
றேனடைந் தமலர்ப் பொழிற்றில் லையுண்
மாநடஞ் செய்வர தர்பொற் றாடொழ.

பாயிரத்தில் இடம் பெற்றுள்ள மற்றொரு பாடலில் விநாயகர் போற்றப்பட்டுள்ளார். அதனைத் தொடர்ந்து பல்வேறு சைவ நாயன்மார் புகழப்பட்டுள்ளனர். அவர்களுடைய பாதுகாப்பு ஆசிரியரால் கோரப் பட்டுள்ளது.

பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம் என்னும் நூலிலும் கடவுள் வாழ்த்து இடம் பெற்றிருப்பதைக் காணலாம். சிவபெருமானின் திருவிளையாடல்களை வருணிக்கும் அந்த நூலில் எல்லாம் வல்ல இறைவனை ஆசிரியர் முதற்கண் போற்றுகிறார், அந்த வருணனையிலே சிவபெருமான் சக்தியாகவும் சிவமாகவும் இருக்கும் பாங்கு விவரிக்கப்படுகிறது. அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பிர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குஞ்
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

அப்பாடலைத் தொடர்ந்து பல்வேறு தெய்வங்களும் நாயன்மாரும் ஒரு குறிப்பிட்ட ஒழுங்கு முறையில் பல்வேறு செய்யுட்களில் புகழ்ந்து பாடப்பட்டுள்ளனர்.

இவ்வாறு பார்க்கும்பொழுது கடவுள் வாழ்த்துப்படலம் அமைந்துள்ள முறை காப்பியத்துக்கு காப்பியம் வேறுபடுகின்றது. இறைவனை மாத்திரம் புகழ்வனவாய் அமைந்தன சில. பல தெய்வங்களைப் பாடுவனவாய் வேறு சில விளங்குகின்றன. தெய்வீக சக்தி உடையவர்களைப் போற்றுவனவாக மற்றும் சில திகழ்கின்றன.

சமயப் பெரியார்களை விதந்து வருணிக்கும் பாங்கைக் கொண்டன வாய் இன்னும் சில மிளிர்கின்றன. பஞ்சபூதங்களை வருணிப்பன வாய் அமைந்துவிடுகின்றன ஒரு சில. சமயப் பெரியாரைப் போற்று வனவாய் அமைந்த பாடல்களைக் கொண்டு காட்சி அளிக்கின்றன வேறு சில. தமிழில் தோன்றிய காப்பியங்களில் இடம் பெறும் அவற் றின் கடவுள் வாழ்த்துப் படலங்களிலும் பாயிரங்களிலும் ஒற்றுமை யைக் காணமுடியாது. அத்தகைய காப்பியங்கள் உள்ளடக்கிய கருப் பொருளைப் பொறுத்தே அத்தகைய வேறுபாடுகள் தோன்றி உள்ளன எனலாம்.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க்காப்பியங்களில் கடவுள் வாழ்த்தைப் பொறுத்தவரையில் ஒரு சீரான ஒழுங்குமுறை கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. முதற்கண் ஏக இறைவனான அல் லாஹ் கடவுள் வாழ்த்தில் வருணிக்கப்படுகிறான். அவனுடைய பண் புகள் விளக்கப்படுகின்றன. அவன் தன் ஆசியைப் பெறவே கவிஞர் அவ்வாறு பாடுகின்றனர். அதனைத் தொடர்ந்து தீர்க்கதரிசிகள் என பொருள் கொள்ளப்படும் நபிமார் வருணிக்கப்படுகின்றனர். நபி மாரைக் குறிப்பிடும்பொழுது முகம்மது நபி (சல்) அவர்கள் வாழ்த்தப் படுகிறார். அவர்களைத் தொடர்ந்து முன்னூற்றுப் பதின்மூன்று முறுசலான (தூதரான) நபி மார்களும் ஓரிலட்சத்து இருபத்து நாலா யிரம் நபிமார்களும் வருணிக்கப்படுகின்றனர். துணிந்தவர்கள் எனப் பொருள் படும் உலுல் அஸ்மி என்னும் நபிமார் வருணிக்கப்படு கின்றனர்.

நபிமார்களுக்குப் பின்னர், அபுபக்கர் (றலி) அவர்களும் உமறு (றலி) அவர்களும் உதுமான் (றலி) அவர்களும் அலி (றலி) அவர்களும் முறையே வருணிக்கப்படுகின்றனர். அப்புறம் வருணிக்கப்படுபவர்கள் நபிகள் பெருமானாரின் திருப்பேரர்களான அசன் (ஹஸன்) (றலி) அவர்களும் (ஹுஸைன்) உசன் (றலி) அவர்களும் புகழப்படுகின்றனர். கடவுள் வாழ்த்துக்களில் பின்னர் இடம் பெறுபவர்கள் நபிகள் நாயகம் அவர்களின் தோழர்களாவர். பெருமான் முகம்மது (சல்) அவர்களின் வீட்டைச் சேர்ந்தவர்களும் கடவுள் வாழ்த்தில் இடம் பெறுவதுண்டு. இஸ்லாமியச் சட்ட நுணுக்கங்களை விளக்கும் முகமாக மதுகபுகளை நிறுவிய இமாம்கள் (தலைவர்) நால்வரையும் பற்றிய குறிப்பு இடம் பெறும். அடுத்து இறை நேசர்கள் எனப்படும் வலிமார் (அவுலியா) கடவுள் வாழ்த்தில் துதிக்கப்படுகின்றனர். முகியித்தீன் ஆண்டவர், சாகுல் கமீது ஆண்டவர், செய்கு சதகத்துல்லா அப்பா ஆகியோர் அடுத்தடுத்துப் போற்றப்படுகின்றனர்.

கனகாபிஷேகமாலை காலத்தால் முற்பட்டது எனக் கொள்வதற்கு முத்திரைக்கவி மூலம் சான்றுகள் கிடைக்கப்பெறுவதால் இஸ்லாமிய

அடிப்படையிலே தோன்றிய முதற்காவியமாக அதனைக் கொள்ளலாம். கனகாபிஷேகமாலையில் இடம்பெற்ற கடவுள் வாழ்த்தில் உள்ள முதல் மூன்று செய்யுட்களிலும் அல்லாஹ் வாழ்த்தப்படுவதைக் காணலாம். அவற்றுள் ஒன்றினை எடுத்துக்கொள்வோம்.

தூய்மையான நிலையில் எல்லாக் களங்கங்கயையும் அகற்றி அல்லாஹ்வை வணங்குவோர் சுவனபதியைச் சேர்ந்தவர்களே ஆவர். அந்த அல்லாஹ் எத்தகையவன்? உருவற்றவன்; முதலானவன்; ஆதியென்றும் நடுவென்றும் முடிவென்றும் ஒன்றும் இல்லாதவன்; கண் இன்றிப்பார்ப்பவன், காதின்றிக் கேட்பவன் போன்ற உருவ மாய்ப் பிரகாசமாய் ஆராய்ந்து உணரக்கூடியவர்களுக்கு ஒப்பற்ற பொருளாய் அமைந்தவன்; ஆணுமாகாது பெண்ணுமாகாது ஆக இரண்டும் அல்லாத ஒன்றுமாகாது பண்டு தொட்டு நிற்கும் முன் னோன். அவனைத் தொழுவோருக்கு சுவனபதி நிச்சயம் கிடைக் கும். இக்கருத்துக்களையே கனகவிராயர் இவ்வாறு தமது கனகாபி ஷேகமாலையில் அமைத்துப்பாடி உள்ளார்.

அருவமாய் முதலா யாதி நடுமுடி வில்லா னாகி
உருவமாய் ஒளிவாய் ஆய்ந்தோர் உணரொரு பொருளு மாகிப்
பருவமா கியபெண் ஆணல் லதுவெனப் படா முன்னோனை
மருவுமால் அனைத்து நீங்கி வணங்குநர் சுவர்க்கத் தோரே.

(கடவுள் வாழ்த்து : 2)

உருவம் இல்லாத இறைவனை உருவமாய் என விவரித்தல் இஸ் லாமிய வரம்பை மீறியதாகும். அடுத்த மூன்று பாடல்களில் பெரு மானார் முகம்மது நபி (சல்) அவர்களின் திருவடிகளின் பெருமை புகழப் பட்டுள்ளது. ஏழாவது பாடலில் எல்லா நபிமார்களையும் அவற்றுள் தூதுவராக வந்த முறுசலான நபிமார்களையும் ஒன்று சேர்த்துப் பாடி யுள்ளார் கனகவிராயர். ஏனைய கவிஞர்கள் இவ்விரு சாராரையும் வெவ்வேறாகவே புகழ்வர். கனகவிராயர் இவர்களை ஒன்று சேர்த்து இவ்வாறு பாடியுள்ளார்.

உறைபசுங் கனக நாட்டுக் குரியவர் பெரிய நீரார்
மறைதெரி முறுச லானோர் மலர்ப்பத முடியில் தாங்கி
இறையவன் அருளு நூறா யிரத்திரு பத்து நாலாய்
நிறைதரு நபிகள் பாத நித்தமும் வழுத்து வாமே.

(கடவுள் வாழ்த்து : 7)

இங்கே நூறுக்கும் இருபத்து நாலுக்கும் பொதுவாக ஆயிரத்தை அமைத்து முழு நபிமாரின் எண்ணிக்கை நூறாயிரமும் இருபத்துநாலு ஆயிரமும் சேர்ந்ததே எனச் சுருங்கக் கூறி விளங்க வைக்கிறார்.

முகம்மது நபி (சல்) அவர்களுக்குப் பின்னர் அவர்களின் கலிபா (பிரதிநிதி) ஆக ஆட்சி புரிந்த நான்கு சிறந்த கலிபாக்களை நான்கு செய்யுட்களில் புகழ்ந்த ஆசிரியர் நபி பெருமான் (சல்) அவர்களின் தோழர்களுள் மிகச் சிறந்தவர் எனக் கருதப்பெற்ற தோழர் பதின் மரை (அஷறதுல் முபஷ்ஷறீன்) கனகவிராயர் வாழ்த்துகிறார். அந்தப் பதின்மரும் நிச்சயம் சுவர்க்கம் புகுவர் எனப் பெருமானார் முகம்மது (சல்) அவர்களிடமிருந்து நன்மாராயம் பெற்றோர் ஆவர். அப்பதின்மருள் முதல் நான்கு கலிபாக்களும் அடங்குவர். ஏனை யோர் நபித் தோழர்களான தல்ஹா (றலி), ஸுபைர் (றலி), அப்துல் றகுமான் (றலி), சஅத் இப்னு அபீவக்காஸ் (றலி), சஈத் இப்னுஸைத் (றலி), அபூஉபைதா (றலி) என்போராவர். அவர்களை மொத்த மாக ஐயிருவர் என இவ்வாறு ஒரு பாடலில் ஆசிரியர் அமைத்துப் பாடி உள்ளார்.

மெய்யிரு மறையின் தீஞ்சொல் விளம்பிய விறகு லுல்லா
வையகம் காக்கும் நாளில் மகிழ்ந்துடன் வரிசை தாங்கித்
துய்யவன் அழைக்கும் முன்னம் சொர்க்கமா ராயம் பெற்றோர்
ஐயிரு வரையும் என்றன் அகத்தினில் வழுத்து வேனே.

(கடவுள் வாழ்த்து : 13)

நான்கு இமாம்களையும் வாழ்த்திய பின்னர் நாகூர் ஆண்டகை சாகுல் ஹமீது (றஹ்) அவர்களைப் புகழ்ந்து ஒரு பாடல் இயற்றப் பட்டுள்ளது. அப்பாடலில் சாகுல் ஹமீது ஆண்டவரின் தலையாய சாதனைகள் விவரிக்கப்பட்டுள்ளது. ஒருமுறை தீர்க்க முடியாத ஒரு நோயினால் தஞ்சையில் ஆட்சிபுரிந்த ஒரு மன்னன் வருந்திக்கொண் டிருந்தான். அவனுடைய அத்நோயை தீர்த்தார்கள் சாகுல் ஹமீது (றஹ்) அவர்கள். ஜின் என அழைக்கப்படும் பூதம் போன்ற ஒரு முனியைக் கூசா ஒன்றனுள் அடைத்து கடலுக்குள் எறிந்து விட் டார்கள் நாகை ஆண்டகை அவர்கள். அத்தகைய பெரியாரின் பாதங்களைத் துதிப்போம் என்று கனகவிராயர் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்துக்களைக் கொண்ட அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

வட்டமாம் பூவிற் தஞ்சை மன்னனின் பிணியைத் தீர்த்துத்
துட்டமா முனியைக் கூசிற் சுருண்டுற அடைத்து வாரி
மட்டமாய்க் கவிழ்த்து மேன்மை வளங்கொடு நாகை மேவிக்
கட்டமா லகற்றும் சாகுல் கமீ திணை யடி துதிப்போம்

(கடவுள் வாழ்த்து : 16)

கனகாபிஷேகமாலையில் கடவுள் வாழ்த்தில் இருபத்தேழு செய் யுட்கள் உள்ளன. அவற்றுள் பதினாறு செய்யுட்களே அல்லாஹ்வை யும் (3) முகம்மது நபி (சல்) அவர்களையும் (3) ஒவ்வொரு செய்யு

ளில் முறையே ஏனைய நபிமார்களையும் (1) அபுபக்கர், உமறு, உதுமான், அலி (றலி) அவர்கள் ஒவ்வொருவரையும் (4) அசன், உசைன் (றலி) இருவரையும் (1) நன்மாராயம் பெற்ற நபித்தோழர் பதின்மரையும் (1) நான்கு இமாம்களையும் (1) முகியித்தீன் ஆண்ட வரையும் (1) நாகூர் ஆண்டவரையும் (1) மாத்திரமே புகழ்ந்து ஆசிரியர் பாடியுள்ளார். கடவுள் வாழ்த்தில் உள்ள ஏனைய செய் யுட்கள் கொடைவள்ளலையும் உரை வழங்கியவர்களையும் இயற்றப் பட்ட ஆண்டையும் நூல் ஆசிரியரின் பெயரையும் நூலாசிரியரின் அவையடக்கத்தையும் நூல் அரங்கேற்றப்பட்ட வரலாற்றையும் கூறு வனவாக அமைந்துள்ளன.

கனகவிராயர் தமது கனகாபிஷேகமாலையில் சதகத்துல்லா அப்பா அவர்களைக் குறிப்பிடவில்லை. ஏனைய காப்பியங்களில் சதக்கத் துல்லா அப்பா அவர்கள் கடவுள் வாழ்த்தில் இடம் பெறத் தவறுவ தில்லை. கனகாபிஷேகமாலையில் அப்பெரியார் விடுபட்டமைக்குரிய காரணத்தை அலசி ஆராயும்பொழுது அப்பெரியார் கனகாபிஷேக மாலை ஆசிரியரை விடச்சற்றுக் காலத்தால் பிந்தியவர் என்பது புலனாகின்றது. கனகாபிஷேகமாலை அது இயற்றப்பட்டது ஹிஜ்றி 1058 எனக் குறிப்பிடுகிறது. இது கி.பி. 1648 ஆகும். சதக்கத் துல்லா அப்பா ஹிஜ்றி 1042 இல் பிறந்தார் எனக் கூறப் படுகிறது. இது கி. பி. 1632 ஆகும். சதக்கத்துல்லா அப்பாவுக்குப் பதினாறு வயதாக இருந்தபொழுதே கனகாபிஷேகமாலை இயற்றப் பட்டது. சதக்கத்துல்லா அப்பா அவர்களின் புகழ் பரவாத காலம் அது. சதக்கத்துல்லா அப்பா அவர்களின் ஆற்றலை அறியும் வாய்ப்பு கனகவிராயருக்குக் கிட்டவில்லை. கனகவிராயர் காலத்தால் முந்தி விட்டார். ஆக இக்கூற்றும் கனகாபிஷேகமாலை என்னும் காப்பியம் உமறுப்புலவரின் சீறாப்புராணத்தைப் பார்க்கிலும் காலத்தால் முந்தியது என்பதனை உறுதிப்படுத்துகின்றது.

**நாட்டுச் சிறப்பு**

வழக்கமாகக் காப்பியங்களில் உள்ளவற்றைப் போன்று கனகாபி ஷேகமாலையிலும் கடவுள் வாழ்த்தைத் தொடர்ந்து நாட்டு நகர வருணனைகள் இடம் பெற்றுள்ளன. நாட்டுப்படலத்தில் பத்தொன் பது செய்யுட்களும் நகரப்படலத்தில் இருபத்தெட்டுச் செய்யுட்களும் அமைந்துள்ளன. நாட்டுப்படலத்தில் பாட்டுடைத் தலைவரின் பிறந்த நாடான அறபு நாடும் நகரப்படலத்தில் அவர் பிறந்த நகரான மதீன மாநகரும் வருணிக்கப்பட்டுள்ளன. ஆனால் அறபு நாட்டு வளம் கூறுமுன்னர் அவ்வறபு நாடு நபிகள் பெருமானாரின் நாடு என்றே அறிமுகம் செய்து வைக்கிறார். தமிழ் இலக்கிய மரபுக்கிணங்க,

மேகந்திரண்டு சலராசி மீதிற் புகுந்து சூன்முதிர்ந்து (2)

என மேகம் தோன்றியமையையும்

மாரியெ னவிற்குனித் துமழை மாரி சொரிய வளிவீச (3)

என மழை சோனாவாரியாகப் பொழிவதையும்

..............அருளி பலவாம் வளக்குறிஞ்சி
நிலங்கடமுழுவி யெழுபாலை நீந்தி நிரை போல் வெகுண்டு (4)

என வெள்ளப்பெருக்கையும்

மள்ளர் திரண்டு களிகூர்ந்து வந்து பெருங்காலணை மறிப்ப (5)

என வெள்ளம் வீணாகப் போகக்கூடாதே என அணைகட்டி அதனைத் தடுத்து நிறுத்தினமையையும்

வாவியை நிறைத்துக் கஞ்ச வனத்திடை எழுந்த செய்ய
காவியை முடித்து (6)

என காட்டைக் கழனியாக்கினமையையும்

.................வயலெலாமுழுது செந்நெல்
வித்தினர் சிறப்பினாலே................. (7)

என மழைநீர் கிடைத்தமையால் உள்ளம் பூரிப்புற்றவர்களாக கமக்காரர் வயலை உழுது நெல்லை விதைத்தமையையும் குறித்த காலத்தில் முளைத்து எழுந்த

.....................நாற்றைப்
பறித்தனர் களமர் பற்றி உழத்தியர் பல்லர் கூடிச்
செறித்தனர் முடியை வாரிச் சிந்தினர் கமலக் கையால் (8)

என நாற்று நடுவதையும் நெல்கதிர்கள் வளரத்தலைப்படதும்,

மோட்டிளங் களபக் கொங்கை உழத்தியர் முற்ற நாரை
ஓட்டினர் பறவை எல்லாம்.............. (9)

என அங்கு வந்த பறவைகளை ஓட்டியமையையும்

தேன் பயில் கமலங் கொய்து செறிகளை கட்டினாரே (10)

என களைகட்டப்பட்டமையையும்

.................. செந்நெல்
மேவிய பசும்பாம் பென்ன விளங்கொளி துளங்க வீன்று (11)

என நெற்பயிர்கள் ஈனத்தலைப்பட்டமையையும்

கற்புடை மகளிர் போலக் கதிர்தலை குனிந்து வீன
.......................................
பற்பல வுயிரு மோம்பப் படியின் மேல் சாய்ந்த வன்றே (12)

என ஈன்று பருத்து இருந்தமையால் அவை நிலத்தில் சாய்ந்து இருந்தமையையும்

> கிளையுட னெழுந்து மள்ளர் கீற்றிளம் பிறைவா ளேந்தி
> ..................................
> ........................நெற்கா டரிகிறார் அரிகிறாறே (13)

என கமக்காரர் முற்றிய நெற்பயிர்களை இளம்பிறை போன்ற வாளால் அறுவடை செய்தமையையும்

> மண்டமர் வயவர் போரா மலையென வரிந்து சேர்த்தார் (14)

என நெற்போர்கள் கட்டப்பட்டு ஒன்று சேர்க்கப்பட்டிருந்தமையையும்

> வண்ணமா வடுக்கிச் செந்நெல் வரையென உயர்த்தினாரே (15)

என ஒவ்வொன்றாக வரிந்து கட்டப்பட்ட நெற்போர்கள் மலை போன்று காட்சி அளித்தமையையும்

> .............. பொருப்புமொத் தனைய போரை
> மன்னிய பகடி ணக்கித் திரித்துவை களைந்து தூற்றி
> ..................................
> மன்னிலை வளரத் தத்த மனையெலா மியற்றி னாரே (16)

எனப் போர் அடிக்கப்பட்டு நெல் பிரிக்கப்பட்டு அவை உரியவர்களின் இல்லங்களில் வைக்கப்பட்டமையையும் உவமைநயம் மிக்கனவாய் கனகவிராயர் தமது கனகாபிஷேகமாலையில் பாடியுள்ளார்.

நாட்டுப்படலத்தில் ஆசிரியர் இஸ்லாத்துக்கு முரணான சில செய்திகளை ஒரு பாடலில் சேர்ந்துள்ளமையைக் காணலாம். மள்ளர் என அழைக்கப்பட்ட கமக்காரர் அறுவடைக்குத் தயாராகும் பொழுதும் அவர்கள் மேற்கொள்ளும் ஒழுக்கமுறையினை ஆசிரியர் விவரித்துள்ளார். மள்ளர் மதுவை வயிறு நிறைய உண்டனர். குவளை மலர்களைச் சூடினர். கூட்டத்தாருடன் சென்றனர். அவர்கள் கைகளிலே அறுவடைக்குப் பயன்படுத்தப்படும் அரிவாள்கள் இருந்தன. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு இளம்பிறைக்கீற்று போல காட்சி அளித்தது. வயலுக்குச் சென்றதும் அவர்கள் உடனடியாக அறுவடையில் ஈடுபடவில்லை. முதலில் அவர்கள் சூரியனை வணங்கினர். வழிபட வணங்கினர். விளைச்சல் பெருகவேண்டும் என்றுதான் வணங்கினர். பின்னர் நெற்கதிர்களை அரிந்தவராக இருந்தனர். இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிடுகிறார் :

> விளைமது நிறையத் தேக்கி விரிமலர்க் குவளை சூடிக்
> கிளையுடன் எழுந்து மள்ளர் கீற்றிளம் பிறைவா ளேந்தி
> வளர்வயற் குறுகி ஆத வனை வழிபட வணங்கி
> அளவற விளையநெற்கா டரிகிறா ரரிகிறாரே
> (நாட்டுப் படலம் : 13)

மது உண்ணுதலும் ஏக இறைவனையன்றி வேறு எவரையோ எதனையோ வழிபடுவதோ வணங்குவதோ இஸ்லாத்திற்கு முரணான ஒரு செயலாகும், பாவத்தை வருவிக்கும் ஒரு சம்பவமாகும். இப்பாடலில் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய, பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் முதல் அவர்களைத் தொடர்ந்து பெரியார் களைப் புகழ்ந்து பாடப்பட்டுள்ள, ஒரு காப்பியத்தில் வரும் மள்ளர் என்னும் விவசாயிகள் மது உண்டனர் என்றும் சூரியனை வழிபட்டு வணங்கினர் என்பதும் இஸ்லாத்துக்கு முற்றிலும் முரணான செய்கை களாகும். இவ்வாறு பாடும் பொழுது இவ்வாசிரியர் ஒரு பொழுது இஸ்லாத்தை மறந்து தமிழ்ப் பண்பாட்டுக்கு முக்கியத்துவம் கொடுத்த தால் தான் இத்தகைய மாற்றம் ஏற்பட்டிருக்கலாம் என்று சமாதானம் கூறலாம் எனக் கூறுவோரின் கருத்தும் கருத்திற் கொள்ளற்பாலது.

நாட்டுப் படலத்தில் உள்ள ஒரு பாடலில் அறபு நாட்டுக்கு இணையாக வேறெந்த நாடும் இல்லை என்கிறார் ஆசிரியர். அதிலும் மதீனம் என்னும் நகரைப் பெற்றிருப்பதே அறபு நாட்டின் தனிப் பெரும் சிறப்பாகும். காரணம் அங்குதான் இறையவன் தூதர் அரசோச்சினார்கள். அங்கே அல்லும் பகலும் தணியாத ஓசைகள் முழங்கிக் கொண்டிருந்தன. இக்கருத்துக்களே கனகாபிஷேகமாலை யில் உள்ள நாட்டுப்படலக் கடைசிப் பாடலில் இவ்வாறு அமைக்கப் பட்டுள்ளன :

மறைவழி முறைவ ழாமல் மங்கலக் கடிப்புப் பொங்கி
அறையொலி முழவின் ஓசை அல்பக லவிகி லாமல்
நிறைதர உலகம் செய்யும் நெடியவன் நபிம தீனத்
திறைபுரி அறபு நாட்டுக் கிணையிலை மற்ற நாடே
(நாட்டுப் படலம் : 19)

**பதிகப் படலம்**

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏனைய காப்பியங்கள் பெரும்பாலானவற்றுள் இல்லாத ஒரு படலத்தை கனகவிராயர் தமது கனகாபிஷேகமாலையில் சேர்த்துள்ளார். பதிகப்படலம் என்பது அப்படலம். முப்பத்தெட்டுச் செய்யுட்களைக் கொண்டதாகப் பதிகப் படலம் அமைந்துள்ளது. இப்படலம் நாட்டுப் படலத்துக்கும் நகரப் படலத்துக்கும் பின்னர் வருகின்றது. இப்படலம் வருபொருள் உரைத்தலாக அமைந்திருப்பதைக் காணலாம். கனகாபிஷேகமாலை யில் இடம் பெற்றுள்ள முப்பத்தைந்து படலங்களில் இரண்டாயிரத்து எழுநூற்று தொண்ணூற்றொரு பாடல்கள் உள்ளன. அந்த முப்பத் தைந்து படலங்களிலும் வரும் செய்திகள் எல்லாவற்றையும் படிப் படியாகப் பதிகப் படலத்தில் குறிப்பிடுகிறார். எல்லாப் பாடல்களிலும் ‘வாறும்’ என்னும் சொல்லைப் பயன்படுத்தி அப்பதிகப் படலத்தில் உள்ள இறுதிச் செய்யுளின் ஈற்றடியில்

இசையடைந் திட்டவாறு முறையுடன் இயம்பு வாமால் (38)

என முடித்துள்ளார் கனகவிராயர்.

பதிகப்படலத்தில் உள்ள ஏழாம் செய்யுளில் நபிகள் நாயம் (சல்) அவர்களுடைய வாழ்க்கையின் இறுதி காலக்கட்டத்தில் நிகழ்ந்த சில சம்பவங்கள் குறிப்பிடப்படுகின்றன. அச்சம்பவங்களைப் பின்னர் விளக்கப் போவதாகவே அங்கு அவ்வாறு அவை குறிப்பிடப்படு கின்றன. இரட்டை நாக்குடைய பாம்போடு உரையாடியவர் நபிகள் பெருமானார் அவர்கள். அவர்களுக்கு சுரம் ஏற்பட்டது. கட்டிலில்-தளிமத்தில்-தங்கவேண்டி அவர்களுக்கு ஏற்பட்டது. அப்பொழுது அங்கு வந்தவர்களுக்கு இறுதி உபதேசம் செய்தார்கள். உயிர் பிரியுந் தருவாயில் கூறப்படும் இறுதி உபதேசம் இஸ்லாமிய பரிபாஷையில் 'வசிய்யத்' என வழங்கப்படுகிறது. தாங்கள் சுகவீனமுற்றிருப்பதால் தொழுகையை நடத்துவதற்கு இமாமாக-தலைவராக-அவர்களுடைய இணைபிரியாத் தோழர் அபூபக்கர் (நபி) அவர்களை நியமித்தார்கள். பின்னர் அண்ணல் முகம்மது (சல்) அவர்களுடைய ஆவி பிரிந்தது. அவர்கள் சுவர்க்கப்பதி அடைந்தார்கள். இந்த விவரங்களைத் தாம் பின்னர் கூறப்போவதாகக் கனகவிராயர் தமது கனகாபிஷேகமாலை யில் உள்ள பதிகப் படலத்தின் ஏழாம் செய்யுளில் குறிப்பிடுகிறார். அந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

அரவினைப் பேசச் செய்தோர்க் கார்சுரம் வந்த வாறும்
திருவினர் தளிமம் புக்கோர் வசியத்துச் செப்பு வாறும்
பெருமி மாமாய் அபூ பக்கரைப் பெட்பினாக்கு வாறும்
ஒருநபி உடல நீங்கி உயர்சொர்க்கம் புக்க வாறும்

இவ்வாறு கனகாபிஷேகமாலையில் தாம் விவரிக்க உள்ள எல்லாப் பிரதானமான நிகழ்ச்சிகளையும் பதிகத்தில் ஒன்றன் பின் ஒன்றாய்க் குறிப்பிட்டுள்ளார் கனகவிராயர். சிலப்பதிகாரத்தில் இத்தகைய ஒரு பதிகம் இடம்பெற்றுள்ளமையைக் காணலாம்.

கனகாபிஷேகமாலையிலே பாட்டுடைத் தலைவராக அமைபவர் பெருமானாரின் பேரரான உசைன் (றலி) அவர்கள் ஆனமையினால் அவரையும் அவருடைய சகோதரரையும் பற்றிய செய்திகளுக்கே இக்காப்பியத்தில் முதலிடம் அளிக்கப்பட்டுள்ளது. நபிகள் பெருமானார் ஆட்சி புரிந்தமையையும் அவர்கள் நோய்வாய்ப்பட்டமையையும் இறைவனடி சேர்ந்தமையையும் நல்லடக்கம் செய்யப்பட்டமையையும் வருணிப்பதாக அமைந்துள்ளது முதன்முறைப்படலம். இந்த முதன் முறைப்படலத்திலும் அசன், உசைன் (றலி) அவர்கள் இருவரினதும் செய்தியே முதன்மையாக இடம் பெற்றுள்ளது. அசன், உசைன் (றலி) ஆகிய இருவர் பற்றிய துக்ககரமான செய்தியே பெருமானார் நோய் வாய்ப்பட்டமைக்குரிய காரணம் என முடிவுகட்டுமளவுக்கு அவ்விருவர்

பற்றிய சோகச் செய்திக்கு முதன்முறைப்படலத்தில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

ஒரு நாவலாசிரியன் தனது நாவலின் பிற்பகுதியில் நிகழக்கூடிய சம்பவங்களுக்குக் களன் அமைக்கும் முயற்சியில் முன்கூட்டியே சில செய்திகளைச் சொல்லி வைப்பான். அது கற்பனையாயின் அவனுக்கு அவ்வாறு சொல்லுதல் மிக எளிதானதொன்றாகும். கனகாபிஷேக மாலையிலே அதன் ஆசிரியர் ஓர் உண்மை நிகழ்ச்சியை வருணிக்க முற்பட்டிருப்பதால் கற்பனைக் கண் கொண்டு அவரால் பார்க்க முடியாது. ஆதலினால் முன்கூட்டியே சில செய்திகளைக் கூறுவதற்கு உண்மை நிகழ்ச்சிகளையே பயன்படுத்தி உள்ளார். வானவர் கோமான் ஜிபுறீல் (அலை) அவர்கள் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் முன்னிலையில் கூறிய சில விவரங்களையே கனகவிராயர் தமது காப்பியத்துக்கு முன் நிகழ்ச்சியாகக் குறிப்பிட்டுள்ளார்.

ஒரு நல்ல நாளன்று குறைஷி குலச் சிறுவர்கள் புத்தாடை அணிந்து மகிழ்ச்சியாக இருந்தனர். ஆனால் சிறு பாலகராய் இருந்த அசன், உசைன் (றலி) இருவரும் அத்தகைய வாய்ப்பைப் பெறாததால் மனம் வருந்தி வீடடைந்து அழுதுகொண்டிருந்தனர். அப்பொழுது முகம்மது நபி (சல்) அவர்கள் அவ்விருவரும் அழுவதற்கான காரணத்தை அவர்களிடம் வினவினார்கள். அவர்களிருவரும் தமக்குப் புத்தாடை கிடைக்கவில்லை என்று கூறினர். தங்களிடம் அச்சிறார்கள் இருவரின் கவலையைப் போக்கக்கூடிய பட்டாடைகள் இல்லாமையினால் அண்ணல் நபி முகம்மது (சல்) அவர்களும் மனம் வருந்தினார்கள். அச்சந்தர்ப்பத்தில் இறைவனின் ஆணைப்படி வானவர் கோமான் ஜிபுறீல் (அலை) அவர்கள் இரண்டு வெள்ளை ஆடைகளை ஒரு தட்டிலே ஏந்தியவர்களாக அங்கு வந்தார்கள்.

நித்தி லத்திரு நபியிருந் தயருமந் நேரம்
கத்த னேவலிற் றட்டில் வெண்கலை இரண்டேந்திச்
சத்த வானவர்க் கரசிழிந் தியனபி தன்பால்
வைத்தி ருந்தபின் மதலையர்க் கிவையென மகிழ்ந்தார்

(முதன்முறைப் படலம் : 26)

இவ்வாடைகளைப் பெற்றுக்கொண்ட நபிகள் பெருமானார் அவர்கள் அவற்றை தங்கள் பேரர் இருவருக்கும் வழங்கினார்கள். ஆனால் சிறுவர்களாக இருந்த அசன், உசைன் (றலி) இருவரும் ஆடைபற்றிய தமது விருப்பு வெறுப்புக்களைக் காட்டினர். வெள்ளை ஆடைகளை விரும்பவில்லை என்று இருவரும் கூறினர். நிற ஆடைகளையே தாம் விரும்புவதாகக் கூறினர். உடனே நபிகள் நாயகம் (சல்) அவர்கள் அல்லாஹ்வைத் தொழுதுவிட்டு அந்த வெள்ளாடைகளைப் பார்த்தனர். அவ்வாறு பார்த்த மாத்திரத்தே அந்த வெள்ளை

ஆடைகள் இரண்டும் வெள்ளை நிறம் மாறி வேறு இரண்டு நிறங் களினால் விளங்கக் காணப்பட்டன.

வள்ளல் செங்கையி லேந்தியங் கவர்க்கிவை வழங்க
வெள்ளை மேகலைப் பொருந்திலர் வன்னமே விரும்ப
வெள்ளி லாநபி இறைவனைத் தொழுதவை நோக்க
உள்ள தந்நிறங் கரந்து வேற் றிழையினா லொளிரும்

(முதன்முறைப் படலம் : 27)

அவ்வாடைகளுள் ஒன்று பச்சையாகவும் மற்றது சிவப்பாகவும் மாறி இருந்தன.

இவ்வாறு நிறம் மாறின பச்சை ஆடையையும் சிவப்பு ஆடையையும் பெருமானார் அவர்கள் தங்களது பேரப்பிள்ளைகளுக்குத் தாம் விரும்பியதை எடுத்துக் கொள்ளுமாறு கூறினார்கள். பசுமையாக இருந்த பட்டாடையை அசன் (றலி) அவர்கள் எடுத்தார்கள். செம்பட்டினை உசைன் (றலி) அவர்கள் எடுத்தார்கள். அவற்றை இருவரும் அணிந்து கொண்டார்கள்.

பலவி தம்பெறு பச்சையுஞ் சிவப்புமா யிருந்த
கலையி னின்மனங் கருதிய தெதுவதை யெடுமென்
றலைவி லார்சொலப் பசுந்தபட் டசனெடுத் தணிந்தார்
விலையி லாதசெம் பட்டினை உசைன்விரைந் தெடுத்தார்

(முதன்முறைப் படலம் : 28)

அச்சந்தர்ப்பத்தில் வானவர் தலைவர் ஜிபுறீல் (அலை) அவர்கள் முகம்மது நபி (சல்) அவர்களை விளித்து அசன் (றலி) அவர்கள் பச்சைப்பட்டை விரும்பி எடுத்தமைக்கும் உசைன் (றலி) அவர்கள் சிவப்பு நிறமான பட்டை விரும்பி எடுத்தமைக்கும் உள்ள தாத்பரியத்தை எடுத்து விளக்கினார்கள். அசனார் அவர்கள் ஆட்சிசெய்யும்பொழுது நஞ்சூட்டப்பட்டுக் கொல்லப்படுவார்கள் என்று கூறினார்.

ஏடார் சுவர்க்கத் திலங்கு பசும்பட் டெடுத்துச்
சூடாது சூடின தாற்றோ ழுருடனே கூடி
நீடா ழிப்பா ரினெறி நடத்திமிக் கபல
நாடாளு நாளில் அசனஞ் சாலிறப் பரென்றார்

(முதன்முறைப் படலம் : 31)

உசைனார் அவர்கள் சிவப்பு நிறமுடைய பட்டாடையை மிகவும் விரும்பி எடுத்து அணிந்து கொண்டார்கள். அதன் தாத்பரியம் என்னவெனில் நாடல்லாத காட்டிலே பாதகன் ஒருவனால் கொல்லப்படுவார்கள் என்று ஜிபுறீல் (அலை) அவர்கள் கூறினார்கள்,

நானந் தருந்தோ ணபியே நபிக்க ரசே
ஆனந் தமாக வளரு மதியே உசைனார்
சேனந் தொடர் வேலார் செம்பட் டெடுத்ததினால்
கானந் தனிலே கருவியான் மாய்வ ரென்றார்.

(முதன்முறைப் படலம் : 33)

இச்செய்தியை ஜிபுறீல் (அலை) அவர்கள் மூலமாகக் கேட்டதும் அனைவரும் துயரில் ஆழ்ந்தனர். இந்த நிகழ்ச்சியை இரங்கற் சுவை மிகக் கனகவிராயர் வருணித்துள்ளார். அசனார் நஞ்சினாலும் உசைனார் கொலையினாலும் இறப்பர் என்ற செய்தியைக் கேட்டு எல்லோரும் இரங்கலானார்கள். அந்த இரங்கற் காட்சியை வருணிக்கும்போது ஆசிரியர் ஓசைநயம் அமைய விவரித்துள்ளார். அந்தப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

பண்ணி ரங்க வேதப் பயனி றசூல் வேதாம்பர்
கண்ணி ரங்க யார்கள் கனிந்திரங்கக் காரிரங்க
விண்ணி ரங்க நால்வர் மெலிந்தி ரங்க வெற்பிரங்க
மண்ணி ரங்க மற்றெவை யும்வா யிரங்க வேயழுத.

(முதன்முறைப் படலம் : 35)

இங்கே யார்கள் என்றது நபி பெருமானாரின் தோழர்களைக் குறித்தது. இயற்கையே இரங்கியது; கண்ணீர் வடித்தது; வருந்தி அழுதது எனப் புலவர் தம் கற்பனையில் உச்சநிலையை அடைகிறார். துக்கத்தை வருத்தும் ஒரு சம்பவம் நிகழ்ந்த பின்னர் அதனைத் தடுத்திருக்கலாம்; அதனைத் தடுக்கமுடியவில்லையே என இரங்கி அழுவது சர்வசாதாரணமாகும். வரவிருக்கும் துக்ககரமான சம்பவம் ஒன்றைப் பற்றி முன்கூட்டியே அறிந்த பின்னர் அதனை நிகழாது தடுக்க எல்லா முயற்சிகளையும் மேற்கொள்வதும் சர்வசாதாரணமாகும். அத்தகைய ஒரு நிலையை இங்கே கனகவிராயர் உருவாக்கி உள்ளார். தங்களது திருப்பெயரர் உசைன் (றலி) அவர்கள் எங்கே (5 : 39) யாரால் (5:41) கொல்லப்படுவார் என்பதனை நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் வானவர்கோன் ஜிபுறீல் (அலை) அவர்கள் மூலம் அறிந்து கொண்டார்கள். இவ்விவரங்களைத் தங்களது அருமைத் தோழர்களுக்கு உரைத்தார்கள். இதனைக் கேட்டு வருந்திய தோழர்கள் அவ்விடத்தை விட்டகன்றனர். முஆவியா (றலி) அவர்கள் அச்சம்பவம் பற்றி ஏனைய விவரங்களைப் பெருமானாரிடம் கேட்டார். அதனைக் கேட்ட முகம்மது நபி (சல்) அவர்கள் இவ்வாறு விடை பகர்ந்தார்கள் எனக் கவிஞர் கனகவிராயர் இங்ஙனம் வருணித்துள்ளார்.

என்மக ளுதவு பாலர்க் கிவண்பகை ஞர்வே றில்லை
நின்மகன் றானென் றோத நெடுநிலத் தறைந்து வீழ்ந்து
வன்மமும் கொலையும் பொய்யு மறமுமுற் றறமி லாத
தன்மசண் டாளி யானே னெனமனங்க கவலித் தாரே.

(முதன்முறைப் படலம் : 56)

இதனைக்கேட்ட முஆவியா (றலி) அவர்கள் தமது புதல்வனால் நபிகள் பெருமானாரின் பேரருக்கு ஆபத்து வரக்கூடாது எனத் தமது மனைவியை திருமண விலக்கு (தலாக்கு)ச் செய்துவிட்டார் (5 : 57) இதனால் மகிழ்ச்சியுற்ற அண்ணல் நபி (சல்) அவர்கள் முஆவியா (றலி) அவர்களை சாம் (சிறியா) நாட்டு ஆளுநராக நியமித்து அங்கு அனுப்பினார்கள். (5 : 58, 59)

மதீன மாநகரிலே சிறுவர்கள் வீடுகளிலே சிறு தேருருட்டி விளை யாடினார்கள் எனக் கனகவிராயர் ஒரு காட்சியைத் தீட்டி உள்ளார். அலி (றலி) அவர்களுடைய இரண்டு புதல்வர்களும் அபூபக்கர் (றலி) அவர்களின் மைந்தர்களும், உமறு (றலி) அவர்களின் பாலர்களும், உதுமான் (றலி) அவர்களின் புத்திரர்களும் எல்லோரும் சேர்ந்து அங்கு விளையாடிக்கொண்டிருந்தனர். அதோடு அவர்கள் வில் வளைத்தல், அம்பெய்தல் முதலிய பல தொழில்களைப் பழகிக் கொண் டிருப்பவர்களாகவும் காட்சி அளித்தனர். இக்காட்சியையே ஆசிரியர் இவ்வாறு விவரித்துள்ளார்.

அலிதரு புதல்வ ரீரோன் பானபூ பக்கர் மைந்தர்
மலிபுகழ் உமறு பாலர் மறை தெரி உதுமான் மக்கள்
பலருமோர் முகமாய்க் கூடிப் பாண்டிலும் தேரும் ஊர்ந்து
சிலைபயி றொழிலு மற்றும் சிரமமும் பயின்று வாழ்ந்தார்
(முதன்முறைப் படலம் : 62)

முஆவியா (றலி) அவர்கள் கனகாபிஷேகமாலையிலே கனகவிராய ரால் மாபியா எனவே அழைக்கப்பட்டுள்ளார். அவருடைய ஆட்சியின் மாட்சியைப் பற்றிப் புகழ்ந்துள்ளார் ஆசிரியர். நீதி முறை வழுவாது செங்கோலோச்சி வந்தார் என வருணிக்கப்பட்டுள்ளது. தஞ்சம் புகுந்தவரைக் காத்து ஆட்சி செலுத்திய முறைமையை இவ்வாறு பாடியுள்ளார் கனகவிராயர்.

வஞ்சமும் களவும் பொய்யு மறமுடன் கொலையும் போக்கி
அஞ்சலித் தறஞ்செய் தொப்பி லறநெறி பலவும் வித்தி
விஞ்சையி னிறைகோ லோச்சி வெண்குடை யானி ழற்றித்
தஞ்சமென் றவரைக் காத்து மஆபியாத் தலைமை செய்தார்
(முதன்முறைப் படலம் : 66)

இறைவழியில் நின்று அரசு செய்தார் முஆவியா என மற்றொரு பாடல் (5 : 67) அவரை வருணிக்கிறது.

**காவியக் கட்டுக்கோப்பு**

ஒரு கற்பனைக் கதையை எழுதும் ஒரு கதைஞர் தாம் பின்னர் கூறப்போகும் ஒரு நிகழ்ச்சிக்கு ஆதாரமாக அமையக் கதையின் தொடக்கத்திலே முக்கியமான விவரங்கள் சிலவற்றை முன் கூட்டியே கூறிவிடுவர். அவ்வாறு கூறுவதாகத்தான் கனகாபிஷேகமாலையில்

முதன்முறைப் படலம் அமைக்கப்பட்டுள்ளது எனலாம். 'ஊழ்வினைப் பயன்' என்று பிற மதத்தவர் கூறுவதைப்போன்ற ஒரு நிகழ்ச்சியை கனகவிராயர் இங்கே உருவாக்கி உள்ளார். முஆவியா (றலி) அவர் களின் புதல்வன் எசீது என்பவர் ஆட்சியில் அவருடைய ஏவலாளனால் உசைன் (றலி) அவர்கள் இறாக் நாட்டில் உள்ள கர்பலா என்னும் போர்க்களத்திலே கொல்லப்படுகிறார்கள். இது வரலாற்று நிகழ்ச்சி. ஆனால் நபிகள் பெருமானாரின் வார்த்தையைக் கேட்ட முஆவியா (றலி) அவர்கள் தமது மனைவியை விவாகவிலக்குச் செய்துவிட்டார் என முன்பு குறிப்பிடப்பட்டது. முஆவியா (றலி) அவர்களுக்கு ஒரு மகன் அமையவேண்டும். அம்மகனுடைய ஆட்சியிலே உசைன் (றலி) அவர்கள் கொல்லப்படவேண்டும். முஆவியா (றலி) அவர்கள் மறு மணம் செய்தேயாகவேண்டும். இதற்கு முதன்முறைப்படலத்திலே களம் அமைத்துள்ளார் கனகவிராயர்.

அப்பொழுது 'கார்மு கந்தெறி குளிர்மழை மிகுந்தகார் காலம்' (5 : 69) முஆவியா (றலி) அவர்கள் வெளியே வந்தார்கள். சிறுநீர் கழிக்கவேண்டி ஏற்பட்டது. ஒரு சுவரண்டை அடைந்தார். அப் பொழுது நிகழ்ந்ததை கனகவிராயர் இவ்வாறு வருணித்துள்ளார்.

வளரு மாபெருஞ் சுவரினி லாண்குறி வைக்க
அளவி லாதவன் செயலினால் பறப்பனொன் றணுகித்
தளர்வி லாதுறத் தீண்டிற்றுத் தீண்டலு ந் தரியாது
உளமும் ஆவியும் துடித்தனர் உறுகணீர் சொரிந்தார்

(முதன்முறைப் படலம் : 71)

இங்கே பறப்பன் என்பது விஷம் கக்கும் தேளைக் குறித்தது. இக் கடுமையான நஞ்சினை அகற்ற எவ்விதத்திலும் முடியாமல் போய் விட்டது. அச்சந்தர்ப்பத்தில் ஒரு மருத்துவன் ஓர் ஆலோசனையைக் கூறினான். மருத்துவன் எந்த ஆலோசனையைக் கூறினாலும் இந்த வலியைப் போக்க எது வேண்டுமானாலும் செய்வேன் என்றார், முஆவியா (றலி) அவர்கள். அந்த தேளின் விஷத்தைத் தீர்க்கக்கூடிய மருந்து எவ்வாறு இருக்கும் என்பதை விளக்கிய விதம் ஒரு பாடலின் இறுதி இரண்டு அடிகளிலும் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது :

கொந்து லாவிய நறைமலர்ச் சுரிகருங் கூந்தல்
விந்தை மாமுலைத் தழுவிலிவ் விடமகன் றிடுமே.

(முதன்முறைப் படலம் : 78)

இச்செய்தியைக் கேட்டதும் முஆவியா (றலி) அவர்கள் 'இரண்டுங் கெட்டான்' நிலையை அடைந்ததாகக் கனகவிராயர் வருணித் துள்ளார். ( 5 : 79 - 80 ). தமது வலி தீரத் திருமணம் செய்தாக வேண்டும். திருமணம் செய்தால் தமக்குப் புதல்வர் பிறக்கக்கூடாது. ஏனெனில் புதல்வன் பிறந்தால் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்

களின் பேரர் உசைன் (றலி) அவர்களுக்கு அப்புதல்வனால் ஆபத்து ஏற்படும் என்பது நபிகள் பிரானின் கூற்று (5 : 79-80). இந்தத் தமது நிலையை மருத்துவனிடம் கூறினார் முஆவியா (றலி) அவர்கள். இந்த நிலைமையிலிருந்து விடுதலை பெற ஒரு வழியைக் கூறினான் அந்த மருத்துவன். அவன் இவ்வாறு கூறினான் எனக் கனகவிராயர் கூறுவதைக் கேட்போம். அப்பாடலின் இறுதி அடிகள் இரண்டும் இவை :

கற்பனை மிகத் தெரிந்துள சிந்தையன் கணித்துக்
கர்ப்ப வேதிலா விருத்தையைச் சேரெனக் கலைஞன்

(முதன்முறைப் படலம் : 80)

இந்த ஆலோசனையை முஆவியா (றலி) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். ஹபசி குலத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணைத் திருமணம் செய்ய முஆவியா (றலி) அவர்கள் முடிவுகட்டினார்கள். அவள் பிள்ளைப்பேறு அற்றவளாயிருத்தல் வேண்டும் என விரும்பினார்கள். ஐம்பது வயதைக் கடந்தவளாதல் வேண்டும் என எண்ணினார்கள். ஹயில் இலாதவளாய் இருத்தல் வேண்டும் என ஆசைப் பட்டார்கள். ஹயில் என்றால் துடக்கு என்பது பொருள். மாதவிடாய் அற்றவளாய் அவள் இருத்தலையே நாடினார்கள். அத்தகைய தன்மைகளை உடையவளை முஆவியா (றலி) அவர்கள் திருமணம் செய்தார்கள் எனக் கூறவந்த கனகவிராயர் அவள் மாறுகண்ணளாகவும் நரைத்த கூந்தலை உடையவளாயும் இருந்தாள் என்று இவ்வாறு ஒரு செய்யுளில் பாடியுள்ளார்:

கூற முன்னிலை கொண்டவள் அபசிமா குலத்தின்
வீறு பெற்றவள் ஹயிலிலாள் ஐம்பதின் மேலாப்
பேறு பெற்றிடா வயதினள் நரையொளி பிறங்கு
மாறு கண்ணினாள் தன்னையே மாபியா மணந்தார்.

(முதன்முறைப் படலம் : 81)

திருமணத்தின் பின் தேளின் விடம் நீங்கியது. முஆவியா (றலி) அவர்களின் வலியும் அகன்று விட்டது (5 : 82).

முஆவியா (றலி) அவர்கள் எதனை விரும்பவில்லையோ அது நடந்துவிட்டது. அந்தப் பெண்மணி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அந்தப் பிள்ளைக்கு முஆவியா (றலி) அவர்கள் எசீது எனப் பெயரிட்டார்கள். கனகவிராயர் இந்நிகழ்ச்சியை இவ்வாறு வர்ணிக்கிறார்.

பாரில் தாள்பட வருவருத் தனள்விழிப் படனீர்
சோர வார்குழல் சுவன்மிசை தூயபொற் கமல
மார மீந்தென அரும்பெறல் ஆண்மக வீன்றாள்
ஏரர் மாபியா எசிதென நாமமிட் டனரே

(முதன்முறைப் படலம் : 84)

நாம் ஒன்று நினைக்க அல்லாஹ் அதற்கு நேர் மாறான ஒன்றைச் செய்துவிடும் ஆற்றல் உடையவன் என்னும் உண்மையும் இந்நிகழ்ச்சி மூலம் வலியுறுத்தப்படுவதைக் காணலாம். முஆவியா (றலி) அவர்கள் பெருமானாரின் தோழர்களில் ஒருவர். அவர்களுடைய நற்பண்பு களுக்குக் களங்கம் ஏற்படக்கூடாது. ஆனால் யாருடைய ஆட்சியில் யாருடைய தூண்டுகோலின் பேரில் உசைன் (றலி) அவர்கள் கொல்லப் பட்டார்களோ அவரும் தோன்றியாதல் வேண்டும். எனவேதான் எசீது அவர்களின் பிறப்பை எதிர்பாராத ஒரு நிகழ்ச்சியாகப் புலவர் விவரித் துள்ளார். எசீது பிறந்தமையைக் குறிப்பிட்ட கனகவிராயர் அடுத்த இரண்டு பாடல்களில் (5 : 85; 86) எசீது எவ்வாறு வளர்க்கப்பட்டார் எவ்வாறு பல்கலைகள் பயிற்றப்பட்டார் என்பதை வருணித்துள்ளார்.

அடுத்து கனகவிராயருடைய கண்ணோட்டம் மதீனமா நகருக்குச் செல்கின்றது. அங்கே ஒரு காட்சி. முஆவியாவுக்கும் எசீதுக்கும் உற்ற தோழனாக அமையப்போகின்றான் மறுவான் என்பவன். அவன் உமையா மரபினைச் சேர்ந்தவன். அவன் அபூ பக்கர் (றலி) அவர்களுடைய புதல்வனும் சபா என்பவரும் விளையாடிக் கொண்டிருக்கும் இடத்துக்கு வந்தான். அவர்களைத் துன்புறுத் தினான். இதன் காரணமாக அவன் மதீனமாநகரிலிருந்து அப்புறப் படுத்தப்பட்டான். இந்த நிகழ்ச்சி கனகாபிஷேகமாலையில் ஆறு செய்யுட்களில் வருணிக்கப்பட்டுள்ளது. (5 : 87 - 92). அவன் மதீனாவிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டமையால் அவன் சிறியா சென்றான். அங்கு உமையாக்களுடன் ஒன்று சேர்ந்தான். உமையா வமிசத்தவரான முஆவியா (றலி) அவர்களுக்கும் எசீதுக்கும் உற்ற தோழனானான். மதீனாவில் வாழ்ந்தவர்களின் பகைவனாக மாறினான். இறுதியில் உசைன் (றலி) அவர்களுடன் பகையை மூட்டுவதில் வெற்றியும் பெற்றான்.

**துன்பியல்**

கனகவிராயர் தமது பாட்டுடைத்தலைவருக்கு நேர இருக்கும் துன்பத்துக்கு வழிகோல உள்ளவர்களைப் பற்றிக் குறிப்பிட்டுவிட்டு அப்பால் நபிகள் பெருமானாரின் இறுதிகால வாழ்க்கையை விவரிக்க ஆரம்பிக்கிறார். நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் அன்னை மைமூனா அவர்களின் இல்லத்தில் இருக்கும்பொழுது காய்ச்சலால் பீடிக்கப்பட்டார்கள். எல்லா மனைவியரையும் அழைத்து அவர்களின் அனுமதியுடன் அன்னை ஆயிஷா அவர்களின் இல்லத்திற்குச் சென்றார்கள். அங்கே இருக்கும் பொழுது எல்லோரையும் அழைத்து இறுதி உபதேசம் செய்தார்கள் (5 : 117-130). பெருமானார் சுகவீனம் கடுமையாகியது. அவர்களைத் தொட்ட காய்ச்சல் நீங்கு வதாக இல்லை. இதனை அறிந்ததும் பெருமானாரின் புதல்வியார் பாத்திமா (றலி) அவர்கள் தம் நிலை இழந்து அழுது புலம்பி ‘முதலில்

அன்னையாரை இழந்தேன் ; இப்பொழுதோ எனக்கருந்துணையாக இருந்த தந்தையாரை இழக்கின்றேன். என்னால் இனி வாழ முடியாது, என்னையும் உங்களுடன் அழைத்துச் செல்லுங்கள்' என்று கூறினார்கள். இக்கருத்துக்களைக் கனகவிராயர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்,

அன்னையை இழந்த பாவிக் கருந்துணை யிருந்த தந்தை
நின்னையும் இழந்து வாழப் பொருந்துவேன் கொல்லே நீயிவ்
வென்னையும் நின்னு டன்கொண் டேகுதி என்னப் போற்றித்
தன்னையு மறந்தார் கண்ணீர் தாரைவிட் டொழுக நின்றார்

(முதன்முறைப் படலம் : 137)

இதனைக் கேட்டதும் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பதிலளித்தார்கள். மனம் உருகி உடல் வாடித் திகைப்புடன் பார்த்துக்கொண்டிருந்த பாத்திமா நாயகியை நோக்கி 'நான் இறந்து ஆறுமாதங்களில் நீ என்னுடன் சேர்வாய்' என்று திருவாய் மலர்ந்தருளினார்கள். அவ்வாறே நிகழ்ந்தது என வரலாறு கூறுகிறது. இங்கே கனகவிராயர் இதே கருத்துக்களை இவ்வாறு தருகிறார் ஒரு பாடலில்,

வன்னியின் மெழுகுபோல மனமுரு கியுடல் வாடிச்
சென்னியி லங்கை சேர்த்தித் திகைத்தமான் முகத்தை நோக்கி
நன்னிலைக் குரிய தேனே நாரியர்க் கரசே நீயென்
பின்னறு மதியில் சேர்வாய் என்றனர் நபியப் போதில்

(முதன்முறைப் படலம் : 138)

இங்கே ஆறுமாதங்கள் என்பது அறுமதி எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பின்னர் பெருமானாரின் உயிர் பிரிகிறது. அதனைக் கனகவிராயர் நுணுக்கமாக விவரிக்கிறார். (5 : 146) இதனால் விண்ணுலகம் அகமிக மகிழ்ந்தது. பெருமானார் விண்ணுலகம் வந்துவிட்டார் என்னும் செய்தி விண்ணுலகம் எல்லாம் மகிழ்ச்சியை அளித்தது. (5 : 150)

பெருமானாரின் மறைவு அவர்களுடைய அறுபத்து மூன்றாவது வயதில் நிகழ்ந்தது. அது இஸ்லாமிய மாதத்தில் றபீஉல் அவ்வல் பன்னிரண்டாம் தேதியாகும். இதனையே புலவர் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

சிறந்திடும் றபியு லவ்வல் செப்புமத் திங்கட் டேதி
உரைவதாம் பன்னி ரண்டி னுயர்மதி நாளின் மேன்மை
நிறைந்திடும் லுகாவின் மூன்று நிகழ்ந்திடும் அறுப தாண்டே
அறைந்திடும் வயதில் வள்ளல் ஆதியின் ஹலு றத்துற்ருர்.

(முதன்முறைப் படலம் : 148)

காலைப்பொழுதில் குறிப்பிட்ட ஒரு நேரம் லுஹா என அழைக்கப் படுகிறது. இறைவனின் சமுகத்தை அடைந்தார் என்பதையே ஆசிரியர் 'ஆதியின் ஹலு றத்துற்றார்' எனக் குறிப்பிட்டுள்ளார்.

பெருமானாரின் மறைவு நாட்டைத் துயரத்தில் ஆழ்த்தியது. அத்தகைய நிலையை ஆசிரியர் பல பாடல்களில் வருணித்துள்ளார். (5 : 149-157) அவற்றுள் ஒரு பாடலில் எல்லாரும் இரங்கி அழுதனர் ; எல்லாம் இரங்கி அழுதன எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. உசைன் (றலி) அவர்கள் கொல்லப்படுவார்கள் என்பதைக் கேட்டபோது மக்கள் எவ்வாறு இரங்கி அழுதனர் ; மற்றவை எவ்வாறு இரங்கி அழுதன என்பதை வருணிக்க உபயோகிக்கப்பட்ட அதே உத்தியைப் பெருமானார் இறை அடி சேர்ந்தார்கள் என்னும் செய்தியைக் கேட்டதும் மக்களும் மற்றவையும் பெற்ற தாக்கத்தை விவரிக்கக் கனகவிராயர் பயன்படுத்துவதைக் காணலாம். அச்செய்தியைக் கேட்டதும் வான் இரங்கி அழுதது ; வானோர் இரங்கி அழுதனர் ; மதி, சூரியன், நட்சத்திரம் இரங்கி அழுதன. மழை இரங்கி அழுதது ; கடல் இரைந்து இரங்கி அழுதது ; நெருப்பு இரங்கி அழுதது ; காற்று இரங்கி அழுதது ; பூமி கரைந்து இரங்கி அழுதது ; பொழுது இரங்கி அழுதது ; உணவு வகைகள் இரங்கி அழுதன ; எல்லாமே திகைத்து இரங்கி அழுதன. உலகில் உயிருள்ளன உயிரற்றனவும் எல்லாமே இரங்கி அழுதன என்று இவ்வாறு பாடியுள்ளார் ஆசிரியர்.

வானி ரங்க வானோர் மதிபா னுடுவிரங்க
வானி ரங்க வாரி யயர்ந்தி ரங்கத் தீவிரங்கக்
கானி ரங்கப் பூமி கரைந்தி ரங்கப் போதிரங்கத்
தீனி ரங்க யாவும் திகைத்தி ரங்கி யேயழுத.

(முதன்முறைப் படலம் : 152)

இங்கே தீன் என்பது இஸ்லாம் மார்க்கம் என்றும் பொருள் கொள்ளக் கூடியவாறு அமைந்திருப்பதைக் காணலாம்.

முகம்மது நபி (சல்) அவர்களின் மறைவை அறிந்த மதீனமாநகர மக்கள் செயலிழந்து காணப்பட்டனர் எனக் கனகாபிஷேகமாலையில் வருணிக்கப்பட்டுள்ளது. கை கால்கள் அவற்றின் பாவங்களை இழந்தன ; பிள்ளைகள் பால் குடிப்பதை மறந்தன. உள்ளங்கள் சிந்திக்க மறந்துவிட்டன ; அடுப்புக்கரையிலே புகையைக் காணமுடிய வில்லை ; பறவைகள் துயிலவில்லை ; மக்கள் கண் அயர மறந்தனர் ; உடல் இயங்க மறுத்தது. அவ்வூரே செயல் இழந்துவிட்டது. இவ் வாறு பாடுகிறார் கனகவிராயர்.

பண்ம றந்த கைகால் பகர்பான் மறந்தபிள்ளை
எண்ம றந்த உள்ளம் புகையே மறந்த சுல்லி
கண்ம றந்த புட்கண் மறந்தார் கள்கண் படுதல்
திண்ம றந்த வாக்கை செயலே மறந்த தவ்வூர்

(முதன்முறைப் படலம் : 153)

இந்தச் செய்யுளைப் படிக்கும்பொழுது புதுகுச்சாம் ஞாபகம் வருகிறது. நபிகள் நாயகத்தின் மறைவைப் பற்றிப் பாடப்பட்ட படலத்தில் செய்கு அப்துல் காதிறு நெயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் இதே போன்ற செய்யுளை இயற்றி உள்ளார். அந்தச் செய்யுளில் பெருமானாரின் மறைவைக் கேட்ட மதீனாவாசிகள் செயலிழந்துவிட்டனர் என வருணிக்கப்பட்டுள்ளது. அந்தப் பாடல் இதுதான்,

பாவினை மறந்த கைகால் பான்முலை மறந்த பிள்ளை
ஆவியை மறந்த வாக்கை யடுபுகை மறந்த சுல்லி
காவினை மறந்த புட்கள் கண்படை மறந்த பள்ளித்
தீவிகை மறந்த வில்லஞ் செய்தொழின் மறந்த மூதூர்
(நபி நாயகம் உபாத்துப் படலம் : 48)

செய்கு அப்துல் காதர் நயினார் லெப்பை ஆலிம் புலவர் காலத்தால் பிந்தியவர். கனகாபிஷேகமாலை இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் தோன்றிய காப்பியங்களுள் காலத்தால் முந்தியதாகும். ஆதலினால் செய்குனாப் புலவரைப் பின்பற்றி கனகவிராயர் இப்பாடலை இயற்றி இருக்கலாம் என்று கூறமுடியாது. அதே போன்று நான்கு காப்பியங்களை இயற்றிய சேகுனாப் புலவர் கனகாபிஷேக மாலையை அடியொற்றி இப்பாடலை இயற்றி இருக்கிறார் என்று கூற முனைவதும் பொருந்தாக் கூற்றாகும். இது ஒரு இடைச் செருகலாகத் தான் இருத்தல் வேண்டும்.

கனகாபிஷேகமாலையை இரண்டாம் பதிப்பாக வெளியிட்ட கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் அவர்கள் தமது பதிப்பின் அட்டைப் பக்கத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார். 'பின்னோர் பின்னோர் எழுதுந் தன்மையினால் பிரதிகள் பலவாறு சிதைந்து கேவலமாய்க் கிடந்ததை கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் அவர்களால் முன்னர் பாடவேண்டியவைகளைப் பாடியும் நீக்கவேண் டியவைகளை நீக்கியும் ஒழுங்காக்கி அச்சிட்ட படிக்கு மேற்படி புலவர் களாலே பார்வையிட்டு இட்டா நாராயணசாமி நாயுடு அவர்களது ஸ்ரீபத்மநாப விலாச அச்சுக்கூடத்தில் பதிக்கப்பட்டது.' இக்கூற்றின் அடிப்படையில் பார்க்கும்பொழுது இப்பாடலும் ஒரு வேளை பதிப் பாசிரியரால் இந்நூலில் சேர்க்கப்பட்டது என்றும் கூறலாம்.

நபிகள் பெருமானார் நல்லடக்கம் செய்யப்பட்ட வரலாறு அடுத்து வருணிக்கப்பட்டுள்ளது. (5 : 159-168) எல்லாச் சமயச் சடங்குகளும் நிறைவேற்றப்பட்டன.

### பெருமானாருக்குப் பின்

முதன்முறைப் படலத்தைத் தொடர்ந்து அபூபக்கர் (றலி) அவர்கள் கலிபாப் பதவி வகித்தமையையும் அவர்களின் மரணத்தின் பின்னர் உமறு கத்தாப் (றலி) அவர்கள் அரசு புரிந்தமையையும் வருணித்த

கனகவிராயர் உசைன் (றலி) அவர்களுக்கு மனைவியாக அமையப் போகும் பெண்ணின் வரலாற்றுப் பின்னணியைக் குறிப்பிட்டுள்ளார்.

அறபு நாட்டுக்கு அணித்தாயுள்ளது கைசர் என்னும் இடம். அதனை ஆட்சி செய்பவன் நவசேருவான் எனப்பெயரை உடையவன். (7 : 39) முஸ்லிம்களுக்கும் அவனுக்குமிடையே போர் மூண்டது. இது நிகழ்ந்தது உமறு கத்தாப் (றலி) அவர்களின் பதவிக்காலத்தில். அலி (றலி) அவர்களும் அமுசா (ஹம்ஸா) (றலி) அவர்கள் முதலானோரும் முஸ்லிம்கள் சார்பில் போர் புரிந்தனர். நவசேருவானின் படைகள் தோல்வி கண்டமையைப் பல உவமைநயங்களுடன் இவ்வாறு பாடுகிறார் கனகவிராயர்.

ஆதவன் ஒளிமுன் ஆன அடர்பனி எனவும் வான
மீதவிர் மதிமுன் ஆன மிகுமிருள் எனவும் ஆலி
ஓதரும் அமுசா முன்னாய் உறுபகை வர்களாம் சேனை
பாதகர் சிலரே தப்பிப் பார்த்திபன் முன்னம் வந்தார்.
(நவசேருவான் வதைப்படலம் : 37)

இப்போரிலே நவசேருவான் தோற்கடிக்கப்பட்டான். அங்கே மகதி என்பவரை அரசனாக்கினர் முஸ்லிம் படைகள். அரண்மனையிலிருந்து இரு கன்னிப்பெண்கள் பிடிபட்டனர். அவர்களிருவரும் நாசுநூசு, சகருவான் என அழைக்கப்பட்டனர். இவர்கள் இருவரும் உமறுகத்தாப் (றலி) முன்னிலைக்கு அழைத்து வரப்பட்டனர் எனக் கனகவிராயர் குறிப்பிட்டுள்ளார். (9 : 52)

**கேசாதிபாத வர்ணனை :**

கவிஞர்கள் பெண்களை வருணிக்கும்பொழுது அவர்களைக் கேசாதி பாதமாக அல்லது பாதாதி கேசமாக வருணிப்பர். இத்தகைய வருணனைகள் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்களில் மிக அருமையாகவே பயன்படுத்தப்படுவதைக் காணலாம். இஸ்லாமியத் தமிழ்க் காப்பியங்களின் காப்பிய நாயகர்களின் துணைவியரை இவ்வாறு வருணிப்பது இஸ்லாத்திற்கு முரணானது என முஸ்லிம் புலவர்கள் கருதினர். ஆதலினால் அத்தகைய வருணனைகளை அவர்கள் விடவேண்டிய நிர்ப்பந்தம் அவர்களுக்கு ஏற்பட்டது. ஆனால் அத்தகைய வருணனைகள் காப்பிய அமைப்புக்கு இன்றியமையாதன எனக் கருதப்பட்டன. எனவே அத்தகைய வருணனைகளைச் சமயம் வாய்க்கும்பொழுது கவிஞர்கள் தமது காப்பியங்களில் வருணித்தனர். முஸ்லிம் அல்லாத பெண்களையே அவ்வாறு தமது காப்பியங்களில் வருணித்தனர். முஸ்லிம்களால் வெற்றி கொள்ளப்பட்ட நவசேருவானின் புதல்விகள் இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளாத நிலையில் அத்தகைய வருணனைகளுக்கு இலக்காக்கப் பட்டனர். கனகவிராயர் இச்சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்தி உள்ளார். நவசேருவானின்

புதல்வியரைக் கேசாதிபாதமாகக் கனகவிராயர் தமது காப்பியத்தில் வருணித்துள்ளார். மகதி அரசியற் படலத்தில் அத்தகைய வருணனைகள் இடம் பெற்றுள்ளன. சகருவான், நாசுநூசு என்பன அவர்களின் பெயர்கள்.

முதலில் அப்பெண்களின் கூந்தல் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது :

நிறையும் பசிய சைவலமோ நீலமுகிலோ நெடியதிரை
முறையிற் கொழிக்கும் கருமணலோ மொய்யார் பிடியின்
கொழுங்கரமோ
நறைக ளூட்டிப் புழுகுநறு நானம் வகுள முதற்றிமிர்ந்து
குறையில் லாத மருமலர்கள் வனைந்து விளங்குஞ்
செழுங்கூந்தல் (53)

அடுத்துப் புருவத்தைப் பாடியுள்ளார், ஆசிரியர் இவ்வாறு :

மன்னும் வனப்பி னிளம்பிறையோ
வனப்பா ரொருசிந் துரத்திலகப்
பொன்னங் கணிச்சி யோகொலிவர்
புகழ்கொ ணுதன்மன் மதனிரதி
என்னு மிருவர் மதிக்கு டைக்கீ
ழிருந்து குனித்த விருசி லைகொல்
பன்னும் கரிய கொடியெதிர்வு
கொல்லோ பகரு மிவர் புருவம் (54)

அவ்விருவருடைய விழிகள் அடுத்து வருணிக்கப்பட்டுள்ளன இவ்வாறு:

கயலைக் கடுவைக் கதிர்வாளைக் கரிய குவளைக் கடிமலரை
அயிலைக் கடலை வடுப்பிணையை அளியைச் சமனை முனிந்துகதிர்
பயினற் குழையை யெதிர்நடந்து பரந்து குமிழின் மேன் மறிந்து
மயலுற் றிடவா டவற் படுத்து மரையே போலு மிவர் விழிகள் (55)

கன்னத்தினை விவரிக்கும் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

வள்ளை யனைய காது கண்டார் மகிழ்ந்தா டியபொன் னூசல்
கொலோ
விள்ளு மணிக்கத் தரிகை கொலோ விளங்குநாசி குமிழே கொல்
எள்ளின் மலர்கொல் சண்பகமென் றிசைக்கு மலர் கொல்
தற்பணங்கொல்
எள்ளில் விழிவா டீட்டவுறுஞ் சாணை யேகொல் இவர் கன்னம் (56)

அவ்விரு பெண்களினதும் இதழ்கள் தனிச்சிறப்புடன் விளங்கின. அவற்றை ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார் :

விளங்கும் பவள மேகொலெழின் மேவுந் தொண்டைக்
கனிகொல்லோ
வளங்கொண் முருக்கு மலர்கொல்லோ மலர்நல் இலவுகொல்
லோவோர்
களங்குந் தனது கடை யாராக் கவினார் கோபமே கொல் கண்டார்
உளம்பன் னுடலை யுருக்குமிவ ரொளிர் செவ்வாம்ப னேரிதழ்கள்
(57)

இதழ்களுக்குப் பின் தோன்றுவது பற்கள். அதன் பின்னர் கழுத்து. மாலைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது கழுத்து. இவற்றை அடுத்துப் பாடியுள்ளார்.

முருந்தோ தளவ மேகொலிவர் முத்து நிரைத்த வனநகைகள்
பொருந்தா வுவமைக் கெழின்மதியும் புகல்பங் கயமுமன் னமுகந்
திருந்தோர் பணிலஞ் சலம் புகுந்துந் திகழுங் கமுகு காப்புகுந்தும்
வருந்தா விருக்க வனப்பினைப் பெற்றிருக்கு மிவர்கண்
மணிக்களங்கள் (58)

அவ்விருவருடைய மொழி பற்றி அடுத்துப் பாடப்பட்டுள்ளது இவ்வாறு:

கதலீ யேகொல் வருக்கை கொலோ கரும்பு கொல்லோ சருக்கரை
கொல்
உதவு மினிமை மாங்கனிகொ லுவக்குந் தேன்கொல் அமுதம்
கொல்
முதுகற் கண்டு பால் கொல்லோ மொழியுங் கிள்ளை குயிலே கொல்
இதமன் றருயாழ் குழலேகொ லெவரு மேங்க விவர் சொன்மொழி
(59)

தோள்கள், அணிந்துள்ள நகைகள், அகங்கை, விரல், நகம் முதலியவற்றைச் சேர்த்து ஒரு பாடலில் வருணித்துள்ளார் கனகவி ராயர் இவ்வாறு :

விஞ்சு மெழில்சேர் கன்னலினை வேயைப் பழிக்குமிவர் தோள்கள்
விஞ்சை யிறைவன் யாழ்கொல்லோ விளங்கும் தொடியார்
முன்னகைகள்
கஞ்ச மலரைக் காந்தளினைப் பழிக்கும் அகங்கை கயக்கெளிறே
அஞ்சச் செவந்த விரல்கள் கிளியணிகொள் மூக்கே யிவருகிர்கள்(60)

அடுத்து அப்பெண்களின் தனங்கள் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளன.

கருப்புச் சிலைவேண் மகுடமெனக்
கவின்கொண் டெழுந்து புடைபரந்து
பொருப்பு வனசஞ் சூதிளநீர்
திருப்பொற் கலசங்குடம் வேழ
மருப்புச் செப்புக் கோங்கரும்பு
வனமார் தாளம் பந்திவையை
முருக்கு மிவர்க ளடர்ந்துதிரண்
டிருக்குஞ் சுணங்கு படர்முலைகள் (61)

உந்தியினின்று மேற்செல்லும் உரோமாவளியை மயிரொழுக்கு என்பர். அப்பெண்கள் இருவரின் மயிரொழுக்கு எவ்வாறு இருந்தது என்பதை இவ்வாறு வருணிக்கிறார் கனகவிராயர் :

நெருங்கு முபய வரைதாங்கி நிற்கு மொரு சலாகை கொலோ
கரும்பொன் னாக மேகொன்முலைக் கயங்கள் பிணித்த சங்கிலி
கொல்
மருங்கு மதனன் மலைக்குமெழின் மனைக்குந் திருத்து மயநூலோ
விரும்புந் துதிக்கை யெறும்பொழுக்கு கொல்லோ மேவுமயி
ரொழுக்கே (62)

எந்தப் பெண்ணையும் வருணிக்கும்பொழுது அந்தப் பெண்ணின் இடையை எவரும் வருணிக்கத் தவறுவதில்லை. கனகவிராயரும் அப்பெண்கள் இருவரினதும் இடைகளை இவ்வாறு வருணித்துள்ளார்:

ஓரா விலையோ இவர் வயிறு நீரின் சுழியோ இவருந்தி
வாரார் களபமுலை தாங்கி மகிழ்ந்து கவிஞர் தமக்குதவும்
சீரார் சைது கொந்தால்கான் சீமான் தன்னைப் புகழ்ந்தி வன்பாற்
சேரார் உடல்போ லுண்டிலைகொ லென்னச் சிறுத்தது இவர்
மருங்குல் (63)

உண்டோ இல்லையோ என்று கூற முடியாத அளவுக்குச் சிறியன வாக இருந்த இடைகளைத் தொடர்ந்து அப்பெண்களின் தொடை களையும், முழங்கால்களையும், கணைக்கால்களையும் கவிஞர் இவ்வாறு வருணிக்கிறார் :

களிறின் துதிக்கை யோமிகவுங் கவின்கொண் டிருக்கு
மரம்பைகொலோ
அளவு படுத்தற் கரியவி வரழகு தொடைகள் அலவன் கொல்
உளவா முழங்கால் கள்விரால்கொல் ஒளிகொள் கணைக்கால்
பரடிரண்டு
வளமே வியத ராசுகொலோ மதிக்குங் குதிகந் துகமேயோ (64)

கேசாதிபாத வருணனையில் இறுதியாக அப்பெண்களின் கால் விரல்களையும் அவர்களின் நடைச்சாயலையும் வருணித்துள்ளார். கடைசிப் பாட்டின் இறுதி அடியில் அவ்விரு பெண்களும் இவ்வாறு கலிபா உமறுகத்தாப் (றலி) அவர்கள் சபையின் முன் காட்சி அளித் தனர் எனக் குறிப்பிட்டுள்ளார். இதுதான் அந்தப் பாடல் :

கலைகண் டெழுதும் புத்தகமோ கமடப் புறமோ புறவடிக
டொலைவில் லெழிலு மொளிவுமுறுந் துகிரோ இவர்கண்
மணிவிரல்கள்
அலைகொள் வாவி அனநடையா ரழகு மிகுந்த மயிற்சாயல்
நிலையி னிறுத்தும் பிரதமைபோல் உமறி னவைமுன்
னிவர்நின்றார் (65)

இவ்விரு பெண்மணிகளையும் இஸ்லாத்தை ஏற்கும்படி உமறு கத்தாப் (றலி) அவர்கள் கூறினதாகவும் (9 : 67) அதற்குப் பதிலளிக்குமுகமாக அவ்விருவரும்

தீயிடை தள்ளினும் எத்தீங் குகளையே செயினும் நுந்தீன்
வாயுறு கலிமாச் சொல்லேம் வல்லது செய்க என்றார் (9 : 68)

எனக் கூறியதாகவும்

துணிவுறும் இவர்க டம்மைச் சிரந்துணித் திடுமின் என்றார் (9:69)

என்று உமறுகத்தாப் (றலி) அவர்கள் உத்தரவிட்டதாகவும், தண்டனையை நிறைவேற்ற இவர்கள் அழைத்துச் செல்லப்பட்ட பொழுது அதனைக் கண்டு ஏனைய பெண்கள் அனுதாபப்பட்டனர் என்றும் (9 : 70-77) அப்பெண்கள் அவ்விருவரையும் விடுவிக்குமாறு அலி (றலி) அவர்களிடம் வேண்டிக்கொண்டனர் என்றும் (9 : 79) அலி (றலி) அவர்களும் அதற்கிணங்கி உமறுகத்தாப் (றலி) அவர்களிடம் சென்று நிலைமையை விளக்கி, இவ்விருவருக்கும் இஸ்லாமிய மதம் முறைப்படி விளக்கப்பட்டால் அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொள்வர் என்றும் கூறியதாகவும் அதற்கு இசைந்த உமறுகத்தாப் (றலி) அவர்கள் தண்டனையை நீக்கி அவ்விரு பெண்களையும் அலி (றலி) அவர்களிடம் ஒப்படைக்க உத்தரவு இட்டதாகவும் (9 : 84) அலி (றலி) அவர்கள் அவ்விருவரையும் அன்னை உம்முசல்மா (றலி) அவர்களிடம் ஒப்படைத்து அவர்களுக்கு இஸ்லாமிய மத போதனை புரியுமாறு அவ்வம்மையாரைக் கேட்டுக் கொண்டதாகவும் விவரித்துள்ளார் கனகவிராயர் (9 : 89). இப்பாடல்களிலிருந்து கனகவிராயர் ஒரு திட்டப்படிதான் அலி (றலி) அவர்களை வாசகர்முன் வைத்துள்ளார் என்பதனை உணர முடிகிறது.

தமது பாட்டுடைத் தலைவரின் எதிர்காலத் துணைவியார் இவ்வாறு தண்டனை விதிக்கப்பட்டு மாமனாராகப் போகிறவரின் வேண்டுகோளுக்கு இணங்க விடுவிக்கப்பட்டார் என்றும் வருணித்துக் கதைத் தொடர்பினை சுவைமிக்கதாக ஆக்கி உள்ளார் கனகாபிஷேகமாலை ஆசிரியர் கனகவிராயர்.

**அரவணைப்பு:**

அன்னை உம்மு சல்மா (றலி) அவர்கள் சகருவான், நாசுநூசு என்னும் இரு பெண்மணிகளையும் நன்றாகக் கவனித்து அவர்களுக்கு இஸ்லாத்தின் ஆரம்பப்பாடங்களை எல்லாம் செவ்வனே பயிற்றுவித்து, அவர்களை இஸ்லாத்தில் சேர்த்தார்கள். அதன் பின்னர் நடந்தவற்றைக் கனகவிராயர் உசைனாருக்கு மாலையிட்ட படலத்தில் விவரித்துள்ளார். இப்படலத்திலே அந்நிகழ்ச்சியைக் குறிக்க வருணனைகளை ஒரு பீடிகையுடன் ஆரம்பித்துள்ளார். உமறுகத்தாப் (றலி) அவர்கள் சகருவான் அம்மையை மணமுடிக்க முன் வந்தார் என்றும் அதற்காகப் பெண்களைத் தூதியராக, அப்பெண்களை

இஸ்லாத்தில் சேர்த்த அன்னை உம்மு சல்மா (றலி) அவர்களிடம் அனுப்பினார்கள் என்பதை இவ்வாறு வருணிக்கிறார்.

தூதிய ருமறு வேந்தர் சொன்னதை நயினார்க் குற்ற
வாதரந் துய்த்த தேவி யனைதமக் கியம்ப வன்னை
மாதருக் கரசிக்கோத மறுத்தனள் சகரு வானிற்
றீதுரை மன்ன ருக்குச் செப்பினர் தூதி மார்கள்.
(உசைனாருக்கு மாலையிட்ட படலம் : 22)

இவ்வேண்டுகோளுக்கு விடைபகர்ந்த சகருவான் அம்மையார்,

.................எமக்கோ ரில்ல
நற்றகை யுடனே இந்த நகரினுட் கட்டு விக்க (10 : 35)

என்று வேண்டி அவ்வாறு கட்டித்தந்தால்

.................நானென்
றன்னுளம் விழைந்த வர்க்குத் தார்மலர் புனைந்து மாதோ
(10 : 36)

மணவாழ்வில் ஏற்றுக்கொள்வேன் என்றும் கூறியதன் காரணமாக அத்தகைய வீடொன்று கட்டிக்கொடுக்கப்பட்ட தென்றும்

நன்றிஃதிதனால் ஞாலந் தெரிதர நமக்கே மிக்க
மன்றல் சேர் மாலை சூட்டு வாளென நினைந்து மாதோ
(10 : 37)

நினைத்தார்கள் உமறுகத்தாப் (றலி) அவர்கள் என்றும் கனகவிராயர் தமது வருணனையில் குறிப்பிட்டுள்ளார். தமது காவியமாகிய கனகாபிஷேகமாலைக்கு மேலும் மெருகூட்டுவதற்காகவே இத்தகைய கற்பனைகளை இங்கு புகுத்தியுள்ளார் ஆசிரியர்.

**சுயம்வரம் :**

கம்பராமாயணத்திலும் நளவெண்பாவிலும் இடம்பெற்ற திருமண சுயம்வரம் போன்று ஒரு சுயம்வர விழாவை இங்கு ஒழுங்கு செய்துள்ளார் ஆசிரியர். இதுவும் காப்பியத்துக்கு அழகூட்டுவதற்கேயாம். சுயம்வர நாள் குறிக்கப்பட்டு எல்லா மன்னர்களுக்கும் அறிவிக்கப்பட்டது. உமறுகத்தாப் (றலி) அவர்களின் உத்தரவின் பேரில் எல்லா மன்னர்களுக்கும் முடங்கல் அனுப்பப்பட்டன. இதனையே கனகவிராயர் இவ்வாறு வருணிக்கிறார்.

சேருவா னினிது தந்தகன் னியது
திருமணம் கருதி சுயவரம்
மாருநா ளிதென அட்டதிக்குள
அரச ரானவர்க் கெலாம்
சீரதாகிய முடங்கல் போக்குகெனச்
செப்பி னாரும றமைச்சர்க்
கேருலா மதிய மைச்சரன் னதையியற்
றினா ருலகு வக்கவே.
(உசைனாருக்கு மாலையிட்டப் படலம் : 42)

இதற்காகக் கட்டப்பட்ட வீடு அலங்கரிக்கப்பட்டது. மணிமண்டபம் அணி செய்யப்பட்டது. அதனைச் சார்ந்த வீதி அழகு செய்யப் பட்டது. கண் கவரக்கூடிய விதமாகப் புனையப்பட்டது. இவ்வருணனைகள் (5 : 45-51) பல பாடல்களில் இடம் பெற்றுள்ளன. சகருவானின் மாலையை அணியப்பெற

வாசி மீதில் முப்பத்து மூவாயிரர் வந்தார் (10 : 52) எனக் கற்பனையின் உச்ச கட்டத்தை அடைகிறார் கனகவிராயர். சகருவான் அலங்கரிக்கப்பட்ட விதத்தை மிகு நுணுக்கமாக வருணிக்கிறார். (10 : 54-63) சகருவானின் மாலையைப் பெற வந்தவர்களை ஒருவர் பின் ஒருவராக வருணிக்கும்பொழுது ஆசிரியரின் கற்பனை நயம் பளிச்சிடுவதைக் காணலாம்.

தன்னிகர் பரிமே லேறித் தையன்முன் உமறு வந்தார் (10 : 63) சகருவான் மாலை அணிய மறுத்தாள். தனது முன்னோனைக் கொன்றவர் எனக் குற்றம் சாட்டி,

எங்கணும் விளங்கும் கீர்த்தி யியலுது மானும் வந்தார் (10 : 65) சகருவான் உடன்படவில்லை.

வெங்கயமனையார் நல்லோர் வேங்கையே யனைய ராலி

......................

மங்கையர்க் கரசியான சகருவான் முன்னம் வந்தார் (10 : 67)

தன்னைத் தண்டனையிலிருந்து காப்பாற்றியவராதலினால் தனது தந்தையைப் போன்றவர் அவர் ஆதலினால் 'பொலனுறு மாலை சூட்டேன்' (10 : 68) என்றார் சகருவான். இங்கே உற்று நோக்கத் தக்கதொன்றுண்டு. அலி (றலி) அவர்களைப் பொறுத்தவரையில் மாத்திரமே ஒரு நல்ல காரணத்தைக் காட்டி மறுத்தாள் என்று புலவர் வருணித்துள்ளமை அவர் அலி (றலி) அவர்களிடமும் அவர்களுடைய குடும்பத்தினர் பாலும் அவர்க்குள்ள நன்மதிப்பை எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது.

ஏனைய சுயம்வரம் நிகழ்ச்சிகளில் நடப்பது போன்று ஒவ்வொருவரும் சகருவான் முன்னிலையில் வரும்பொழுது அவர் அறிமுகம் செய்யப்பட்டுள்ளார். இவ்வாறே ஒருவர் பின் ஒருவராகப் பலர் வந்ததாயும் அவர்கள் அனைவரையும் ஏற்க மறுத்தாள் என்றும் ஒருவருக்கும் மாலை அணியவில்லை என்றும் கனகவிராயர் பல பாடல்களில் வருணித்துள்ளார் (10 : 69-90). உசைன் (றலி) அவர்களையும் எசீது அவர்களையும் தவிர எல்லோரும் சுயம்வர விழாவுக்கு வந்துவிட்டனர் என்று கூறுவதனால் படிப்போர் உள்ளத்தில் ஓர் அலாதியான எதிர்பார்ப்பினை ஏற்படுத்தி உள்ளார் ஆசிரியர். போரில் உசைனாருக்குப் பகைவராக அமைவது போன்று இந்த சுயம்வர விழாவிலும் உசைனாருக்குப் போட்டியாக எசீது வந்துள்ளார் ஆதலால்

முடிவு எப்படி இருக்குமோ என்னும் சந்தேகத்தை முதலில் உருவாக்கியுள்ளார். இருவரும் எத்தகைய அழகுடையவராய் இருந்தனர் என்றும் இருவருக்கிடையே வேறுபாடு அவ்வளவாகத் தோன்றவில்லை என்றும் கூறும்பொழுது படிப்போரிடையே ஏற்படுத்தும் ஆசங்கையைத் தீவிரமாக்கி உள்ளார்.

உசைனாரும் எசீதும் ஒரே இயல்பினராய் இருந்தமையினால் (10 : 92) சகருவான் தெரிவு செய்வதில் சிக்கல் ஏற்படும் எனக் கருதிய அங்கிருந்தோர் இருவருக்கிடையே ஒரு போட்டியை ஏற்படுத்தினர். இப்போட்டியில் யார் வெல்கிறாரோ அவருக்குத்தான் மாலை அணிவிக்கப்படும் என்றும் முடிவு செய்யப்பட்டது (10 : 93, 94). குதிரை ஓட்டப்போட்டி ஆரம்பித்தது.

செம்மல் சே யெசீது வாசி சென்றது சிறிது முந்தி (10 : 95)

இதனை அறிந்த உசைனார் அல்லாஹ்விடம் மன்றாடினார்கள்.

ஆதியே றப்பே என்றும் அழிவிலாதவனே எங்கும்
சோதியா யிருப்பாய் ஞானத் தூயனே பழுதில் லாத
நீதியாய் எசீதின் வாசி நிலம்பிடித்திடச்செய் கென்றார் (10 : 96)

அவருடைய வேண்டுகோள் நிறைவேற்றப்பட்டது. உசைனாருடைய குதிரை முந்திவிட்டது.

கள்ளவி ழுங்குழ லாள்கடி மாலை
வள்ளல் புயத்தி லணிந்திட வானோர்
உள்ள மகிழ்ந்தனர்.............. (10 : 98)

தாம் புறக்கணிக்கப்பட்டதை உணர்ந்த எசீது, இது உசைனாரின் சூழ்ச்சியே எனக் கருதி 'எப்பொழுதும் நாம் இவருக்குப் பகையாய் இருப்போம்' என்று வஞ்சினம் கூறியதாக கனகவிராயர் இவ்வாறு பாடி உள்ளார்.

வஞ்சக மேவு மனத்தன் எசீது
விஞ்சையி னாலுசன் மேவிது செய்தான்
நஞ்சனை யாற்கு நமக்குமெஞ் ஞான்றும்
எஞ்சில தாம்பகை யுண்டினி யென்றான் (10 : 111)

இரு சாராருக்கும், உசைன் (றலி) அவர்களின் வமிசத்தாருக்கும் உமையா வம்சத்தினருக்கும் பகைமை இவ்வாறு ஏற்பட்டது எனக் கூறி மகிழ்கிறார் கனகவிராயர்.

**திருமணம் :**

அடுத்து நடைபெற்றது திருமண விழா. உசைனாருக்கு மணம்புரி படலத்தில் திருமண விழா சிறப்பாக நடைபெற்றது என வருணித்து உள்ளார் கனகவிராயர். மணநாள் நிச்சயிக்கப்பட்டதாம். வீடுகளையும் மாடமாளிகைகளையும் அலங்கரிக்கும்படி உத்தரவிடப்பட்டதாம். பறையர்கள் பறையறைந்தனராம். அங்கு பறையர்கள் பறையறைய

ஒட்டகங்கள் மீதில் சென்றனர். இக்காட்சியையே கனகவிராயர் இவ்வாறு வருணிக்கிறார் :

பறையினை இனிது சாற்றும் பறையரொட் டகங்கள் மேலே
பறையினை ஏற்றி வானப் பனிமுகில் உலவு மாட
மறுகினில் எங்கும் போந்து வாளலி மகரு சைனுக்கு
அறைமணக்கோல மைந்தா நாளினில் ஆத லாலே.
(உசைனாருக்கு மணம்புரிபடலம் : 6)

இங்கே மகன் என்பது மகர் என வந்துள்ளமை காண்க.

இந்த அறிவித்தலை ஏற்ற மதீன மாநகர மக்கள் விழாக்கோலம் பூணத் தலைப்பட்டனராம். வீடுகளை எல்லாம் பெருக்கித் தூசி அகற்றினார்களாம். வெண்மையான சுதையைத் தீட்டினார்களாம். சித்திரங்களை வரைந்தார்களாம். பிரகாசமான விளக்குகளை ஏற்றினார்களாம். சிறந்த சந்தனத்தால் வீட்டை மெழுகினார்களாம். அழகான கோலங்களை இட்டார்களாம். சுவர்க்கலோகம் போன்று காட்சி அளிக்க நகரத்தை அலங்கரித்தார்களாம். இவ்வருணனைகளைக் கொண்ட பாடல் இதுதான் :

வீடெல்லாம் தூசி போக்கி விளங்கு வெண் சுதைக டற்றி
பாடுசித் திரங்க டீட்டிப் பகன்மணி விளக்கம் ஏற்றி
தேடுசந் தனத்தால் பூமி மெழுகிச் சீர்க்கோ லமிட்டு
நாடுபொன் னாடே போல நகரெலா மலங்கரித்தார்
(உசைனாருக்கு மணம்புரி படலம் : 13)

இங்கே சித்திரங்களை வீடுகளில் வரைதலும் அழகான கோலங்களை இடுதலும் இஸ்லாத்திற்கு முரணானவையாய் இருந்தும் கூட அவற்றைப் பொருட்படுத்தாது அவை எல்லாம் இடம் பெற்றிருந்தன என வருணித்துள்ளார். காப்பிய அமைப்புக்கு இத்தகைய வருணனைகள் இன்றியமையாதன என்பதனால் தான் ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

இனி மணமகனின் திருமண உலா வருணிக்கப்படுகிறது. எல்லோரும் அங்கு வந்து குழுமினர் 'விரிதிரை அனைய மாட வீதிகள் நிறைந்தவம்மா' (11 : 30). எல்லா வீதிகளும் நிறைந்துவிட்டன. ஏழு பருவத்தைச் சார்ந்த பெண்களும் திருமண ஊர்வலத்தைக் கண்டு ரசிக்க அங்கே ஒன்று கூடி விட்டனர்.

அந்த ஏழு பருவத்தைச் சார்ந்த பெண்களும் இவ்வாறு ஒன்று திரண்டனர் என ஆசிரியர் இவ்வாறு பாடிஉள்ளார் :

பேதையர் பெதும்பை மாதர் மங்கையர் பெருமடந்தை
கோதையர் அரிவை நல்லோர் தெரிவையர் குழாங்கொண் டாரும்
போதுறு மணஞ்செய் மாலைப் புயருசைன் தம்மைப் போற்றிக்
காதலங் கடலுள் தாழ்ந்து கரைபெறா ராயினாரே.
(உசைனார் மணம்புரி படலம் : 32)

இஸ்லாமிய முறைப்படி திருமணம் நடைபெற்றமைக் குறிப்பிடப் படுகிறது. அபூகுறைறா (றலி) அவர்கள் வலியாக நின்று கடமை யாற்றினார்கள். வலி என்றால் மணவாட்டியின் பிரதிநிதியைக் குறிக்கிறது. திருமண உடன்பாட்டிற்கு மணமகளின் சம்மதம் அவசிய மாகிறது. மணமகளின் தந்தை அல்லது குறிப்பிட்ட நெருங்கிய உறவினர் மணமகளிடமிருந்து சம்மதத்தைப் பெறுவர். சகருவான் அம்மையாரின் தந்தை இறந்துவிட்டமையால் அபூகுறைறா (றலி) அவர்கள் வலியாகக் கடமையாற்றிச் சம்மதத்தைப் பெற்றார் என கனகவிராயர் குறிப்பிட்டுள்ளார்.

ஆதி மாமறை ஓதிய அபூகுறை றாவை
மாது சம்மதம் கேண்மென்றார் கேட்டொலி நவில
வேத நூல்வழி யேயுது மானெனு மேலோர்
ஓது மாமணங் கன்னிக்கும் உசைனுக்கும் முடித்தார்
(உசைனார் திருமணப் படலம் : 42)

இங்கே வலி என்பது ஒலி என வந்துள்ளது. வகரத்தால் ஆரம்பிக்கும் அறபுச் சொற்களைப் பெரும்பாலும் முஸ்லிம் புலவர்கள் ஒகரமாக்கியே பயன்படுத்துவர்.

இத்திருமணம் நிகழ்ந்தது உமறு கத்தாப் (றலி) அவர்களின் ஆட்சி காலத்தில். உமறு கத்தாப் (றலி) அவர்களின் ஆட்சி பன் னிரண்டரையாண்டுகள் நீடித்தது.

பாரெலாம் புகழ்ந்து பேசப்
பன்னிரண்டரையாண் டாண்டு
சீரெலாம் இருக்கச் செங்கோல்
செலுத்திவந் தவராங் கோர்நாள்
(உமறு கத்தாப் வதைப் படலம் : 24)

உமறு கத்தாப் (றலி) அவர்கள் அபூலூலு என்னும் அடிமையினால் கத்தியால் குத்தப்பட்டார். அவர்களுடைய ஆவி பிரிந்தது. அவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்ட இடத்தின் பக்கத்திலே கல்லறையைப் பெறும் பாக்கியத்தை அடைந்தார்கள். உமறு கத்தாப் அவர்களின் மறைவினால் ஏற்பட்ட நிலைமையைக் கனகவிராயர் இவ்வாறு வருணித்துள்ளார்.

ஆயிலாக் காலி போலும் அறிவிலாப் புலமை போலும்
தாயிலாக் குழவி போலும் தமிழிலாத் தமிழே போலும்
வேயிலாத் திகிரி போலும் விதுவிலா இரவே போலும்
மேயவோ ரரசு மில்லா திடர்படுங் குடிக ளானார்
(உதுமானாரரசுப் படலம் : 3)

**உமறு (றலி)க்குப் பின் :**

உமறுகத்தாப் (றலி) அவர்களின் மறைவுக்குப்பின்னர் உதுமான் (றலி) அவர்கள் கலிபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அவர்களும்

கொல்லப்பட்ட பின்னர் அலி (றலி) அவர்கள் நான்காவது கலிபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். எண்பத்திரண்டு திருவிருத்தங்களில் அபூபக்கர் அரசு புரிந்த வரலாற்றையும் தொண்ணூற்றொரு பாடல் களில் உமறுகத்தாபு அரசு புரிந்த வரலாற்றையும் எழுபது செய்யுட் களில் உதுமான் (றலி) அவர்கள் ஆட்சி புரிந்த வரலாற்றையும் பாடிய கனகவிராயர் அலி (றலி) அவர்களின் ஆட்சியை இருநூற்றறுபத்தொரு பாடல்களில் பாடி மகிழ்கிறார். தமது பாட்டுடைத் தலைவரின் தந்தையார் என்பதனைக் கருத்திற்கொண்டு இவ்வாறு பாடியிருக்க லாம். அலி (றலி) அவர்களும் கொல்லப்பட்டார்கள். அதன் பின்னர் அவருடைய மூத்த புதல்வர் அசன் (றலி) அவர்கள் அரசு கட்டில் ஏறினார்கள். அந்த வரலாறும் நூற்றி அறுபத்தேழு செய்யுட்களில் விவரிக்கப்பட்டுள்ளது. முஆவியா (றலி) அவர்களும் மரணமடைய ஷாம் நாட்டு ஆளுநர் பொறுப்பை அவர்தம் புதல்வர் எசீது ஏற்றார். இவ்விரு நிகழ்ச்சிகளும் முறையே பதினெட்டுப் பாடல்களையும் பதின் மூன்று பாடல்களையும் கொண்டுள்ளன.

முன்னர் குறிப்பிடப்பட்டது போன்று அசன் (றலி) அவர்களுக்கு நஞ்சூட்டப்பட்டது. எசீதின் வேண்டுகோளின் பேரில் வயது முதிர்ந்த ஒரு கிழவியினால் நஞ்சு கலந்த பானம் அசனாருக்கு அளிக்கப்பட்டது.

பஞ்சு போல் வெளுத்த கூந்தல் விருத்தைபா னக்கம் செய்து
மஞ்சுறு மேலங் கண்டு வகைமிகக் கூட்டி னாடா
னஞ்சிட லறிந்து கொள்ளா துண்ணுவானஞ் சும் சேர்த்தாள்
அஞ்செறி வள்ளம் வாக்குபு ஆயிழை கரத்தின் ஈந்தாள்.
(அசனார் கொலைப் படலம் : 43)

கனகாபிஷேகமாலையின் பாட்டுடைத் தலைவரான உசைன் (றலி) அவர்களின் ஆட்சி பற்றிய படலத்தில் இருநூற்றறுபத்தேழு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. உசைனாரின் ஆட்சியிலே எசீதுக்கும் உசைனாருக்கும் இடையே போர்கள் நிகழ்ந்தன. அத்தகைய ஒரு போரில் அசனாருடைய புதல்வர் காசீம் கொல்லப்பட்டார். அப்பொழுது உசைனாரின் மனநிலை இவ்வாறு பாடப்பெற்றுள்ளது.

வள்ளல் உசைனார் அவிறந்த மாற்றங் கேட்டுமக னேயென்
உள்ளக் களியே கண்மணியே உயிரே பகைவர்க் கரியேறே
பிள்ளைக் கலியைத் தீர்த்தவனே எனை எண்ணாமல் பிறரெல்லாம்
எள்ளும் படிஉன் றனைப் பகைவர்க் கிரையீந் தேனென்செய்வேனே.
(உசைனாரரசுப் படலம் : 261)

உசைனார் சஹீதான படலத்தில் உசைன் (றலி) அவர்கள் கொல்லப் பட்ட விதத்தினை பல நயங்களுடன் விளக்கி உள்ளார் கனகவிராயர்.

**சுன்னத், சியாக் கொள்கை :**

முஸ்லிம் மக்களிலே இருபெரும் பிரிவுகள் உள்ளன. ஒன்று சுன்னத் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்கள். மற்றது சியாக் கொள்கை உடையவர்கள். நபிகள் பெருமானாரின் வாழ்க்கை முறைகளை—நடை உடை பாவனைகளைப் பின்பற்றுபவர் சுன்னத் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்கள் என அழைக்கப்பட்டனர். இவர்களையே ஆங்கிலத்தில் Sunni என்று அழைக்கின்றனர். முகம்மது நபி (சல்) அவர்களின் மறைவுக்குப் பின்னர் ஆட்சி பீடத்தில் அமர்ந்தவர் அபூபக்கர் (றலி) அவர்கள். ஆனால் முகம்மது நபி (சல்) அவர்களின் பின்னர் ஆட்சிப் பதவியை வகித்திருக்கவேண்டியவர் அலி (றலி) அவர்கள் என்று ஒரு கூட்டத்தினர் வாதாடினர். அவ்வாறே அவர்கள் சுன்னத் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்களினின்றும் பிரிந்து சென்றனர். அத்தகையோரே சியா வகுப்பினர் என அழைப்படுகின்றனர். அவர்கள் அண்ணல் (சல்) அவர்களுக்குப் பின்னர் அலி (றலி) அவர்களுக்கே பிரதானமான இடத்தை அளிக்கின்றனர்.

கனகாபிஷேகமாலை ஆசிரியரான ககனவிராயரும் சியாக் கொள்கைகளில் ஓரளவுக்கு ஊறித் திளைத்தவர்போலத் தோன்றுகின்றது. இக்காப்பிய வருணனைகளிலே அத்தகைய அவருடைய கருத்துக்கள் மறைந்திருக்கக் காணலாம். அத்தகைய கருத்துக்களுக்கு ஆதாரமாக சில வருணனைகள் ஏற்கனவே சுட்டிக் காட்டப்பட்டன.

எசீது படையைச் சேர்ந்த ஒருவனுக்கும் தோகாந்துறுக்கு என்பவனுக்கும் இடையே நடைபெற்ற ஒரு வாக்குவாதத்தை ஆசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார். (30 : 29-34) தோகாந்துறுக்கு வாயிலாக சியாக் கருத்தொன்றை ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். உலகத்திலே வாழ்ந்த 'அமீறுல் மூமினீன்' என அழைக்கப் பட்டவர் அலி (றலி) அவர்கள் ஒருவர் மாத்திரமேயாம். அந்த மொழி பெறக்கூடியவர் மற்றொருவர் உளரேல் அது அவர்கள் தம் புதல்வரேயாம். எசீதுக்கு உரித்தாகாது என அமைத்து இவ்வாறு ஒரு செய்யுளில் பாடியுள்ளார்.

மண்ணின்மே லமீறுல் மூமின் வாளலி ஒருவர் அன்றோ
எண்ணுமோ ரந்த நாமம் எழிலவர் புதல்வர்க் கல்லால்
உண்ணிறை விலருக் கெல்லா மேற்குமோ இவணீ யோதல்
திண்ணிய சிங்கமென்று பூனையைச் செப்பல் போலும்.
(முகம்மது கனிபா விசிக்கிலானுக்குவந்த படலம் : 33)

இங்கே நேர்வழி நடந்த முதல் நான்கு கலீபாக்களும் அமீறுல் மூமினீன் (நம்பிக்கை கொண்டவர்களுக்கெல்லாம் தலைவர்) எனச் சிறப்பாக அழைக்கப்பட்டனர் என்பது நோக்கற்பாலது.

**பாத்திரப் படைப்பு :**

ஒரு காப்பியத்தின் சிறப்புக்களில் ஒன்று அந்தக் காப்பியத்தில் இடம் பெறுபவர்களின் குணநல இயல்புகளைப் பற்றிப் பாடுவதாகும். தாம் விரும்பியவர்களின் குணநல இயல்புகளை வானளாவப் புகழ்வர் காப்பிய ஆசிரியர். அத்தகையோர் பெரும்பாலும் பாட்டுடைத் தலைவராகவும் அவரைச் சேர்ந்தவர்களாகவும் இருப்பர். ஆனால் பாட்டுடைத் தலைவரின் எதிரியைக் காப்பிய ஆசிரியர் எப்பொழுதும் வெறுப்பர். அதன் காரணமாக அத்தகைய எதிரியைப் பாடும்பொழுது அக்கவிஞருடைய பாடல்களில் அவர் பேரில் வெறுப்புணர்ச்சி தொனிப்பதைக் காணலாம். கனகாபிஷேகமாலையில் பாட்டுடைத் தலைவராக வருபவர் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் திருப்பேரர் உசைன் (றலி) அவர்கள். அவர்களின் பரமவிரோதியாய் அமைபவர் நபிகள் பெருமானாரின் நெருங்கிய தோழர்களுள் ஒருவரான முஆவியா (றலி) அவர்களின் புதல்வர் எசீது என்பவர். இவர்கள் இருவரையும் கனகாபிஷேகமாலையில் அதன் ஆசிரியர் கனகவிராயர் எவ்வாறு பாடி உள்ளார் என்பதை இப்பொழுது பார்ப்போம்.

கனகவிராயர் தமது பாத்திரங்களை மிக சுருக்கமாகவே வருணித்துள்ளார். உசைன் (றலி) அவர்களை

சீலமுற்றவர் உசைன் (21 : 10) என்றும்
உசைனாங் கோன் (21 : 18) என்றும்
வரம்பெறு உசைனார் (21 : 38) என்றும்
உத்தமர் உசைன் (21 : 40) என்றும்
திருவார் அலியார் மகர் உசைனார் (21 : 76) என்றும்
பேசும் புகழார் உசைனரசர் (21 : 80) என்றும்
அலியார் மைந்தராம் உசைனார் (21 : 89) என்றும்
அருந்தமர் குழுவி னாப் பண் அலிதரு புதல்வரான
விரும்பிய மறையு சைனார் (21 : 96) என்றும்
அலிமகன் உசைனென் பானார் (21 : 101) என்றும்
இறைவ ராமுசை னிமாமத்தாய் (21 : 119) என்றும்
பெருமை மேவிய உசைன் (21 : 131) என்றும்
சுந்தர உசைனார் (21 : 135) என்றும்
திருவுறும் உசைனார் (21 : 153) என்றும்
பூவுய ரரியே றொத்தார் புவிபுக ழுசைனார் (21:175) என்றும்
வானவண் மதியம் போன்ற முகத்துசைனார் (21:202) என்றும்
மாவலி உசைனார் (21 : 230) என்றும்
நவமார் உசைனார் (21 : 248) என்றும்
வள்ளல் உசைனார் (21 : 262) என்றும்
எழில் உசைனார் (21 : 265) என்றும்

அடைமொழியுடன் உசைன் (றலி) அவர்களை ஆசிரியர் வருணித்துள்ளமைக் காணலாம். மற்றொரு பாடலில் வீரத்தில் ஆண் சிங்கத்தை ஒத்தவரானவரான உசைன் (றலி) அவர்களுக்கு விண்ணவர் கோன் ஜிபுறீல் (அலை) அவர்கள் ஏவல் செய்பவராக இருந்தார் என்றும் அவ்வுசைனார் அறத்தையே கடைப்பிடித்து வாழ்ந்தார் என்றும் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

விறல்கொள் அரியேறு எனஇருந்தார்
விண்ணோர்க்கு அரசர் ஏவல் செய்யும்
அறவா ழியனார் உசைனார்................... (21 : 266)

உசைனார் அவர்களின் இரக்கத்தன்மை மற்றொரு பாடலில் வருணிக்கப்பட்டுள்ளது. ஒரு பசு தன் கன்றுக்கு இரங்கி என்னென்னவெல்லாம் செய்கிறதோ அதேபோன்று உசைனார் அவர்களும் எல்லோருக்கும் எல்லாவிதமான நன்மைகளையும் செய்து வந்தவராவர் என இப்பாடலில் விளக்கப்பட்டுள்ளது :

கன்றினுக் கிரங்கி யாச்செய் கவின்பெறு வருமை போல
நன்றுறு மருமை செய்யு நவிலுசை னார்
(உசைனார் சகீதானபடலம் : 21)

இனி பாட்டுடைத் தலைவருக்கு எதிரியாக இங்கு வருணிக்கப்படும் எசீது அவர்களை எவ்வாறு புலவர் வருணிக்கிறார் என்பதைப் பார்ப்போம். நூற்பயன் கூறும் இரண்டாம் பாடலிலே எசீது என்பவனைக் 'கயவரி னுயரெசீது' என கயவர்களுள்ளே உயர்ந்தவன் என அறிமுகப்படுத்துகிறார் ஆசிரியர். எசீது என்பவரை வஞ்சக மனத்தை உடையவன் என்பதை 'வஞ்சக மேவு மனத்தன் எசீது' (10 : 111) எனவும் 'வஞ்சகன்' (17 : 64) எனவும் 'பொல்லான் எசீது'(21 : 32) எனவும் 'தீங்கினன் எசீது' (26 : 14) எனவும் 'தீங்கியற்றும் வஞ்சக குணந்தினன் எசீது' (26 : 32) எனவும் 'வஞ்சகன் எசீது' (29 : 7) எனவும் 'தீது பொருந்தும் மனத்தெசீது' (30 : 11) எனவும் இம்மை மறுமை இரண்டிலும் தீமையை அடையும் பாவி எனவும் எசீது வருணிக்கப்பட்டுள்ளார். இம்மையில் பாவம் செய்தால் மறுமையில் அப்பாவங்களின் விளைவுகளை அனுபவிக்கவேண்டி இருக்கும். இதனையே ஆசிரியர் இவ்வாறு கூறி உள்ளார்.

எம்மையும் தீய பாவி இயலிலா எசீது தானும்
(அசனாரரசுப் படலம் : 38)

இக்கருத்தினையே 'பலங்கொள் நெஞ்சினான்' (17 : 91) எனவும், 'கூர்பலத்தெசீது என்பவன்' (20 : 1) எனவும் 'மாசுறாத் தீனை மாறிப் பவஞ்செயும் எசீது' (21 : 140) எனவும் 'அரும்பிய பலத்தெசீது' (26 : 6) எனவும் 'பாவியாம் எசீது' (27 : 4) எனவும் 'எசீதுத்

தீயவன்' (27 : 23) எனவும் 'தறுகணாளனா, மன்னவன் மறம் புரியெசீதுப்பாவியே' (27 : 29) எனவும் 'தீமை, தங்கிய மனத் தெசீது .......' (27 : 50) எனவும், 'எசீது பாவி' (28 : 1), (28 : 6) எனவும், 'வெங்கொடிய பாபத், தாழ்ந்தவன் எசீது (29 : 32) எனவும் 'பொருவறு பவங்கள் எல்லாம் புரிந்திடும் எசீது' (29 : 38) எனவும் 'தீயவன் எசீது' (29 : 85) எனவும், 'முற்றிய பவத்தெசீது' (29 : 52) எனவும் 'முற்றிய பவமாம் வாரி மூழ்கிய எசீது மன்னன்' (29 : 56) எனவும், 'பாவமலி எசீது' (29 : 104) எனவும், 'பாவி யெசீது' (30 : 3) எனவும், 'கொடுமை கூர் பாவியான எசீதுகோன்' (30 : 65) எனவும், 'பவமனன் எசீது' (31 : 38) எனவும், 'பாவியாம் எசீது' (51 : 85) எனவும் வந்துள்ளமை காண்க.

எசீது புத்தியில் குறைந்தவன் என்பதை

'ஏழைமை மதியெ சீது' (17 : 107) எனவும் 'கெடுமதி எசீது' (29 : 34) எனவும் 'பேயனாம் எசீது' (31 : 39) எனவும் ஆசிரியர் வருணித்துள்ளார்.

அவன் மிகவும் இழிந்த குணத்தை உடையவன் என்பது 'ஈன னாகிய எசீது' (21 : 18) எனவும், 'கள்ளன் எசீது' (21 : 35) எனவும் 'புன்மை மனத்திலுறும் எசீது' (28 : 17) எனவும், 'தீயவன் எசீது' (30 : 49) எனவும் கனகாபிஷேகமாலையில் குறிப்பிடப்பட்டுள்ளமைக் காணலாம்.

அவனது பிறப்பு மிகவும் கீழான பிறப்பு என்பதை அவன் தேள்க் கடி காரணமாகப் பிறந்தவன் எனக்காட்ட

'வெய்ய தெறுக்காலினிற் பிறந்த வீணன்' (21 ; 24) என்றும் 'பறப்பனின் விடத்தாற் பெற்ற பாவி' (29 : 1) எனவும் 'பறப்பன் விடத்திற் பிறந்தோன்' (28 : 18) எனவும் ஆசிரியர் குறித்துள்ளமை யைக் காணலாம். தெறுக்கால், பறப்பன் என்பன தேளைக்குறிக்கும் சொற்கள். தமிழ் பேசும் முஸ்லிம் மக்கள் வாழும் சில பகுதிகளில் ஒருவனின் இழிய தன்மையைக் குறிப்பிட தேள்கடிப் பிறப்பான் என இன்றும் வழங்கப்படுவதுண்டு என்பர். எசீது என்பவன் வேத நெறியை அறியாதவன் ; விழலன் என,

'வேத நுண்பொரு ளு ணர்ந்திடா விழல னெசீது' (21 : 115) எனவும், 'புல்லனாம் எசீது' (28 : 27); (29 : 84) எனவும் 'வெய்ய எசீது' (30 : 8) எனவும், 'நீதியில் எசீது' (38 : 46) எனவும் 'புலைஞ னாம் எசீது' (32 : 4) எனவும் 'புத்தியில் எசீது' (32 : 61) எனவும் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

ஈவிரக்கம் அற்றவன் எசீது என்பவன் என்பதை ஆசிரியர்,

கமையே இல்லாதவன் எசீது (21 : 77) என்று குறிப்பிட்டுள்ளார். நரகத்துக்கு உரித்துடையவன் எசீது என்பதை

நபிதருந் தீனை மாறு நரகபாத்திரம் எசீது (21 : 146) என்றும் வந்துள்ளமை ஈண்டு குறிப்பிடத்தக்கது.

எவ்விதத்தகுதியும் இல்லாதவன் எசீது. எவருடைய நலனையும் அவன் பொருட்படுத்தாதவன். அத்தகைய எசீதை இங்ஙனம் வருணிக் கிறார் கனகவிராயர் :

......................தகையிலாதான்
எவார்நலந் தானு மில்லான் எசீது.................. (24 : 1)

மேலும் 'நலமே இல்லா எசீது' (28 : 16) எனவும், 'நலமிலாததை விரும்பும் நசை எசீது' (30 : 29) எனவும், 'நல்வினைகளிலான் எசீது' (30 : 40) எனவும் 'நவமிலா எசீது' (30 : 59) எனவும் வந்துள்ளது. எல்லாராலும் இகழப்பட்டவன் எசீது என்பதை 'திசையிகழ் எசீது' (25 : 18) எனவும் 'மறாமதிக் கொடியவன்' (25 : 20) எனவும் 'எள்ளிடப்படும் எசீததனை' (27 : 32) எனவும் 'கசடன் எசீது' (28 : 15) எனவும், 'கடல்சூழ், காசினி முழுதும் இகழ்ந்திடும் எசீது' (30 : 37) எனவும், 'எவர்களும் இழிவு சொல்லும் எசீதை' (32 : 37) எனவும், வருணிப்பதில் கனகவிராயர் மகிழ்வுறுவதைக் காணலாம்.

சில சமயங்களில் எசீது புகழப்பட்டிருப்பதையும் காணலாம். 'புகழ் எசீது' (29 : 44) எனவும் 'திருமிகு, எசீது மன்னன்' (29 : 30) எனவும், 'அசர செசீது' (30 ; 9) எனவும், 'மன்னவன் எசீது' (30 : 12) எனவும் 'பொருந்திறல் எசீது' (31 : 33) எனவும், 'வென்றி மன் எசீது' (31 : 50) எனவும் வந்துள்ளன.

கலபு இராச்சியத்து மன்னன் கலபு என்பவனின் மைந்தன் எசீதின் படையை நடத்தி தலைமை தாங்கி வந்தான். அவன் எசீதின் புகழைக் கூறுமாப்போல் ஒரு செய்யுளை ஆரம்பித்துள்ளார் கனகவிராயர். 'கடலினால் சூழப்பட்ட உலகில் வாழும் மூமின்களாகிய விசுவாசிகளுக் கெல்லாம் அரசனாக உள்ளவன் எசீது. அவன் வள்ளல். அவனது உத்தரவின் பேரில் போர் புரிய வந்தேன்' என அவன் கூறும் கூற்றாகப் புலவர் இவ்வாறு பாடுகிறார்.

காலிபு மைந்தன் மாவே மாப்பொடுங் கடல்சூழ்வைய
மேலுள மூமின் கட்கெல் லாம் விய னரச ரான
மாலுறு மெசிது வள்ளல் அளித்தவுத் தரவின் வண்ணம்
ஞாலமே லுமையெல் லாம் சங் கரிக்கவந் தனனான் என்றான்
(30 : 32)

**காப்பியப் போக்கு :**

கனகவிராயர் தமது கனகாபிஷேகமாலை என்னும் காப்பியத்தில் ஆதி முதல் அந்தம் வரை கதை சொல்லும் போக்கைத்தான் கடைப் பிடித்திருக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். தொடர்ச்சியான இயற்கை வருணனைகள் அருமையாகவே இடம் பெற்றுள்ளன. தாம் விளக்க எடுத்துக்கொண்ட கதையைக் கூறி முடிக்கவே அவர் தம் ஆற்றல் அனைத்தையும் பயன்படுத்தி உள்ளார். இயற்கை வருணனை யையும் விரிவாக இடம் பெறச் செய்திருந்தால் அவருடைய காப்பியம் நீண்டதொன்றாக முடிந்திருக்கும். தாம் விளக்க வந்த செய்திகளை நயம்படக் கூறுவதற்குப் பல உவமைகளைக் கையாண்டுள்ளார் கனகவிராயர். ஒருவருடைய துக்கத்தினையும் அதனால் ஏற்படும் வருத்தத்தினையும் விளக்கப் பல இடங்களில் 'வெந்த புண்ணில் வேல் பாய்ச்சினாற் போல' என்னும் கருத்துத்தொனிக்க உவமைகளை அமைத்துப் பாடியுள்ளார்.

அசன் (றலி) அவர்கள் நஞ்சூட்டப்பட்டும் உசைன் (றலி) அவர்கள் கொல்லப்பட்டும் இறப்பெய்துவர் என முகம்மது (சல்) அவர்கள் தமது மகளும் அவர்களிருவரின் தாயாருமான பாத்திமா (றலி) அவர்களுக் குக் கூறியதும் அவருடைய நிலைமையை ஆசிரியர் 'புண்மேற்கடுங் காரம் போட்டாரெனப் புலம்பி' (5 : 34) எனப்பாடியுள்ளார். உசைன் (றலி) அவர்கள் போருக்குப் புறப்படுவதை ஆசிரியர்,

> கனலின் வெந்தபுண் டனையினி தாற்றுவான் கருதி
> முனைவல் வேலினால் கிளறல் போல்.......... (9 : 5)

என நயம் மிக்கதாய் விளக்கி உள்ளார். உதுமான் (றலி) அவர் களைக் கொன்றவனைப் பழிவாங்க வேண்டும் என்று முஆவியா (றலி) அவர்கள் அலி (றலி) அவர்களிடம் விட்ட தூதுக்கு அலி (றலி) அவர்கள் அனுப்பிய பதில் 'புண் தனில் தீ இட்டது ஒத்தது' (15 : 64) எனக் கனகவிராயர் குறிப்பிட்டுள்ளார். உசைன் (றலி) அவர் களுடைய புதல்வன் கொல்லப்பட்ட நிலைமையை வருணிக்கப்போந்த ஆசிரியர், 'புண்ணில் கோல் இட்டால் என' (21 : 220) என்று வருணித் துள்ளார். அபூஜஹ்பர் (றலி) அவர்கள் உசைனாரின் கொலையைப் பற்றிக் கேள்விப்பட்டதும் 'புண்ணினைக் கருவியாற் கிண்டல் போலே' (25 : 16) அளவிலாத் துயரில் மூழ்கினார், மிகவும் வருத்தப்பட்டார் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். மற்றொரு சந்தர்ப்பத்தில் துயரை வருணிக்கப் புகுந்த ஆசிரியர் 'புண்ணின் மேன் ஞெகிழியாலே சுட்டது போன்ற தன்னார்' (27 : 53) என வருணித்துள்ளார். இவ்வாறு ஒரே கருத்துடைய ஓர் உவமையை பல்வேறு வகையாகக் கூறிச் செல் வதில் மகிழ்ச்சி அடைந்துள்ளார் ஆசிரியர்.

பாத்திமா (றலி) அவர்கள் மறைவு நபிகள் பெருமானாரின் மறைவின் பின்னர் ஆறுமாதங்களில் நிகழ்ந்தது. இந்த சகித்துக்கொள்ள முடியாத அன்னையாரின் பிரிவை ஏற்ற அசனார் உசைனார் ஆகிய இரு புதல்வரினதும் நிலைமையை விவரிக்க வந்த ஆசிரியர் அந்நிலைமையைப் பசுவைப்பிரிந்த கன்றுகளுக்கு ஒப்பிட்டுள்ளார்.

வரைமலர் புயத்தா ரான மேன்மக ரிருவர் தாமும்
புரியுமா சுரபி நீத்துப் புலம்பிய குழக்கன் றேபோல்
இருவிழி யினுநீர் சிந்தி இரங்கிவாய் வெருவி நின்றார்.
(அபூபக்கரரசுரிமைப் படலம் : 45)

உமறுகத்தாப் (றலி) அவர்கள் கொலை செய்யப்பட்டதைக் கேள்வியுற்ற அப்துல்லா (றலி) அவர்களும் ஹம்சா (றலி) அவர்களும் 'கறவை ஆன் வராக் கன்றெனப் புலம்பினர் கதறி' (12 : 49) என அவ்விருவரின் நிலையும் பாடப்பட்டுள்ளது. உமறுகத்தாப் (றலி) அவர்களை இழந்த மக்கள் 'ஆயிலாக்காலி போல்' (13 : 3) ஆனார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. முஆவியா (றலி) அவர்களின் மறைவும் மக்களை 'ஆ நீங்கிய கன்றென்னவும்' (19 : 2) ஆக்கிவிட்டது என ஆசிரியர் உவமித்துள்ளார். உசைனார் (றலி) அவர்களின் ஆட்சியை வருணிக்க வந்த கனகவிராயர் அதனை 'கன்றினுக்கிரங்கி ஆச் செய் கவின் பெறு மருமைபோல்' (22 : 21) என வேறொரு விதமாக பசுவையும் கன்றையும் சேர்த்து உவமை கூறி உள்ளார். ஒவ்வொரு முறையும் சொற்களை மாற்றி உவமையைக் கையாண்டுள்ள முறைமை கூர்ந்து கவனிக்கற்பாலது.

நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் நோயுற்றமையைக் கேட்டு அவர்கள் தம் குடும்பத்தவரும் ஏனையோரும் வருந்தியமையைப் பல உவமைகளைக் கொண்டு விளக்கி உள்ளார் ஆசிரியர். அவ்வுவமைகள் அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்ற பாடல் இவ்வாறு உள்ளது.

வாடினார் இரவி காணாப் பகலென வருந்தி யங்கண்
மூடினார் அசனி போல முழங்கினார் உயிர்கா ணாமல்
தேடினார் போல நின்று தியங்கினார் மயங்கித் துன்ப
நீடினார் மதிய மில்லா இரவினைப் போல நின்றார்.
(முதன்முறைப் படலம் : 134)

அன்னை ஆயிஷா (றலி) அவர்கள் அண்ணல் முகம்மது நபி (சல்) அவர்கள் காய்ச்சலினால் வருந்தும்பொழுது அண்ணலாரின் தலையைத் தொட்டுப் பார்த்தார்கள். அக்காட்சியையே ஓர் உவமையை அமைத்து 'தாமரைப் பழிக்குங் கையால் தலையினைத் தொட்டுப் பார்த்தார்...........தேமலராயிஷா' (5 : 136) என வருணித்துள்ளார்.

தாமரையைப் போன்ற கை எனக் கூறாது தாமரையைப் பழிக்குங்கை எனக் குறிப்பிட்டுள்ளமை நோக்கற்பாலது.

பாத்திமா நாயகி அவர்களின் மறைவு அலி (றலி) அவர்களைப் 'பிடியிழந் தயருஞ் செங்கட் பெருந்திறல் வேழம் ஒத்தே' (6 : 46) இருந்தது என கனகவிராயர் வருணித்துள்ளார். அத்தருணத்தில் அலி (றலி) அவர்களும் புதல்வர்களும் இருந்த தன்மையை ஒரு கூட்டில் புலியும் அதன் குட்டிகளும் இருக்கும் காட்சிக்கு இவ்வாறு ஒப்பிடுகிறார் ஆசிரியர்.

பஞ்ச ரத்தினில் பல்பொறி யின்புலி
எஞ்சு தன்குரு ளையொடி ருத்தல்போல்
நெஞ்ச வீரம ழிந்துநின் றாரலி
அஞ்சொல் மக்களோடு.................. (6 : 62)

நவசேருவானிடம் ரத, கஜ, துரக, பதாதியாகிய நாற்படையும் இருந்தன. அந்நான்கு விதமான படையைச் சேர்ந்தவர்களும் ஒருங்கே திரண்டுவரும் காட்சியை வருணிக்க முற்பட்ட கனகவிராயர் அக் காட்சியை ஒரு மாபெரும் கடலுக்கும் அந்த நாலு வகைப்படையும் எழுப்பும் முழக்கத்தை கடலின் பேரோசைக்கும் ஒப்பிட்டுள்ளார். அந்த செய்யுள் இவ்வாறு நயம் மிளிர அமைந்துள்ளமையைக் காணலாம்.

வாசி மீதினும் வாரண மீதினும்
வீசு நீள்கொடித் தேரினும் வீரர்கள்
ஓசை மாக்கட லொத்த பதாதியொடு
ஆசை மேவி அணியெனச் சென்றனர் (8 : 26)

முஸ்லிம் படைகள் சென்ற தன்மையை மற்றொரு செய்யுளில் வேறுவிதமாக அமைத்துப் பாடியுள்ளார் ஆசிரியர். சூரியன் முன் பனி போலவும் சந்திரன் முன் இருள் போலவும் அலி (றலி) அவர்களும் ஹம்சா (றலி) அவர்களும் முஸ்லிம் படையை நடாத்திச் சென்றனர். அதனை இவ்வாறு பாடியுள்ளார் ஆசிரியர்,

ஆதவ னொளிமுன் னான அடர்பனி எனவும் வான
மீதவிர் மதிமுன் னான மிகுமிருள் எனவும்......... (8 ; 37)

நவசேருவானின் நான்கு வகைச் சேனையும் மடிந்தொழிந்தன. இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தது. அவ்வெள்ளத்தில் பகைவரின் மூளைகள் மிதந்தன. அவ்வாறு இரத்த வெள்ளத்தில் மூளைகள் மிதந்த காட்சி செம்மை பொருந்திய வானிலே உதித்த சந்திரனைப் போலக் காட்சி அளித்தது என கனகவிராயர் இவ்வாறு ஒரு பாடலில் வருணித்துள்ளார்.

மொய்க்கு நால்வகைத் தானை மடிந்தபின்
ஒக்க வாரியென் றோங்கிய சோரிமேல்
செக்கர் வானி னுதித்தெழு திங்கள் போல்
மிக்க வீரர்கண் மூளை மிதந்தவே. (8 : 57)

தீன் என்பது அறபுச்சொல். அது இஸ்லாம் மார்க்கத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்படுவதொரு சொல். அதனைப் பெரும்பாலும் பயிருக்கு உருவகிப்பர். அதே போன்று கனகவிராயரும் தீனுல் இஸ்லாம் என்னும் பயிர் என்னும் பொருளில் 'தீன்பயிர்' (1 : 2; 10; 9 : 44; 12 : 51) எனப் பாடியுள்ளமையைக் காணலாம்.

நவசேருவான் கொல்லப்பட்டதும் அவருடைய இரு பெண் மகளிரும் கைது செய்யப்பட்டனர். அவர்கள் முறையே சகருவான் என்றும் நாசு நூசு என்றும் பெயரை உடையவர்கள். அவர்களை வருணிக்கும்பொழுது அவ்வருணனைகள் கேசாதிபாதமாக அமைந் திருந்தன என முன்னர்க் குறிப்பிட்டோம். அந்த கேசாதிபாத வருணனைகளுக்கு மெருகூட்டுமாப் போல பல உவமை, உருவக நயங்களை அப்பாடல்களில் காணக் கூடியதாக இருக்கின்றது. ஒவ் வொரு பாடலிலும் ஒன்றுக்கு மேற்பட்ட உவமை உருவகங்களை அமைத்து நயம் மிக்கனவாய் அவை திகழக் கனகவிராயர் வழி வகுத் துள்ளனர். அவை சுவை மிக்கனவாக அமைந்துள்ளமை கனகவிராய ரின் கற்பனை வளத்திற்குத் தகுந்த எடுத்துக்காட்டுக்களாக உள்ளன எனின் அது மிகையாகாது.

கனகாபிஷேகமாலையில் இடம் பெற்றுள்ள முஸ்லிம் பெரியார் களைப்பற்றிப் பாடும்பொழுது அவர்கள் அனைவரையும் பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்களுடன் இணைத்தே பாடுவார் புலவர். அத்தகைய சந்தர்ப்பங்களில் பெருமானாருடைய சாதனைகள் நினைவு கூரப்படுகின்றன. அவை பெரும்பாலும் கிளைக் கதைகளாகக் கொள்ளத் தக்கனவாய் அமைந்து விடுகின்றன.

இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் அயல் நாட்டு மன்னன் ஒருவன் பெருமானார் முகம்மது (சல்) அவர்களிடம் ஓர் அற்புதம் செய்து காட்டுமாறு கூறினான். அன்று அமாவாசை நாள். சூரியனும் சந்திரனும் ஒரே நிலைக்கு வரும் நாள். அன்று பிறை தென்படாது. அத்தகைய ஒரு நாளில் அம்மன்னன் வேண்டுகோளை நிறைவேற்றச் சந்திரனை அழைப்பித்தவர் என்று புகழப்படுபவர் முகம்மது நபி (சல்) அவர்கள். இக்கருத்தினையே புலவர் இவ்வாறு அமைத்துப் பாடி யுள்ளார்.

ஓது மதியை இரவிமதி
உறுசங் கமநா டனில் அழைத்தார் (12 : 1)

அம்புலி தனையிந் தில்லா
தந்தநா ளழைத்த மேலோர் (13 : 12)

அழைத்தமர் மதியைக் காணற் கருந் தினத்தளவில் சீர்த்தி
தழைத்த நந்நயினார்............ (13 : 56)

இருளுறுங் காலம் இந்தினை அழைத்தவோர்
திருநபி............ (20 : 2)

சமையில் நிலவை அழைத்தோர் (28 : 12)

அமாவாசை இரவில் சந்திரனைப் பார்க்க முடியாது. அத்தகைய இரவைக் குறிப்பிட சந்திரனும் சூரியனும் ஒரே கோட்டில் வரும் இரவு எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். இக்கருத்தினையே இவ்வாறு கூறி உள்ளார்.

இந்துவோ டிரவி கூடுந் தினத்திலுந் தான்கா ணாத
பந்தமா மிருளை............ (27 : 42)

**போதனைகள் :**

காப்பியங்கள் பாட்டுடைத் தலைவரின் வாழ்க்கையை விவரிப்பதோடு நின்றுவிடாது பல அரிய பெரிய போதனைகளைப் போதிப்பதாகவும் அக்காப்பியங்கள் அமைந்துவிடுகின்றன. பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் தாம் இறையடி சேர்ந்து ஆறு மாதங்களில் தமது அருமைப் புதல்வியார் பாத்திமா (றலி) அவர்கள் தமது கணவரான அலி (றலி) அவர்களுக்கு இறுதி உரை பகர்ந்தார்கள்.

துங்கநற் கொழுநர் நோக்கி துவர்நிகர் வாய்திறந்து
தங்கியற் றாதை முன்னா ளுரைத்தவர் மரணஞ் சாற்றி
(அபூபக்கரரசுரிமைப் படலம் : 41)

அந்த இறுதி உபதேசத்தில் ஓர் உண்மையையும் கூறினார்கள். உலகத்திலே பிறக்கின்ற உயிர்கள் எல்லாம் என்றோ ஒரு நாள் இறப்பது திண்ணம் என்றும் மொழிந்தார்கள். இதனையே பாத்திமா (றலி) அவர்கள் மூலமாக இவ்வாறு கூறினார் கனகவிராயர்.

உலகினின் மனுவா யுற்றோ ரியாவரும் இறப்பது உண்மை
(அபூபக்கரரசுரிமைப் படலம் : 42)

இக்கருத்து அல் குர்ஆனிலே இரண்டு இடங்களில் வலியுறுத்தப் பட்டிருப்பதைக் காணலாம். அல்குர் ஆனிலே உள்ள ஓர் வசனத்தின் ஒரு பகுதி

''எல்லோர் ஆத்மாவும் மரணத்தைச்
சுகித்தே தீரும்'' (3 : 185)

என்றும் மற்றொரு வசனத்தில் ஒரு பகுதி

'' நீங்கள் எங்கிருந்த போதிலும்,
மரணம் உங்களை அடைந்தே தீரும் ;
மிகப்பலமான உயர்ந்த (கோட்டை)
கொத்தளங்களின் மீது நீங்கள் இருந்த
போதிலும் சரியே '' (4 : 78)

என்றும் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.

'மூப்புக்கு மருந்தில்லை' என்பது பெருமானார் பொன்மொழி. எல்லா நோய்களுக்கும் மருந்து உண்டு. அவற்றைக் குணப்படுத்தி விடலாம். ஆனால் ஒருவன் வயது முதிர்ச்சி அடைந்துவிட்டால் அவனை அந்நிலையிலிருந்து காப்பாற்றுவதற்கு எவ்வித மருந்தும் பயன்படாது. உமறுகத்தாப் (றலி) அவர்கள் கொடியவன் ஒருவனால் வாளால் குத்தப்பட்டுக் குற்றுயிராய் இருந்தபொழுது அவர் தம் புதல்வர் அப்துல்லா (றலி) அவர்களும் அமுசா (றலி) அவர்களும் அங்கிருந்தனர். அவர்களை நோக்கி உமறு கத்தாப் (றலி) அவர்கள் இறுதி உபதேசம் செய்தார்கள். அந்த இறுதி உபதேசத்தை விளக்கவே பெருமானாரின் பொன்மொழி ஒன்றினை ஆசிரியர் இங்கு மேற்கொண்டுள்ளார். அந்தப் பொன்மொழியை மேற்கோள் காட்டு வதோடு நின்று விடாது அதனை விளக்க வேறொரு உவமையையும் கையாண்டுள்ளார். ஒரு மரம் வளர்ந்து பல நாட்களுக்குப் பின்னர் பூத்துக் காய்க்கும். அவ்வாறு காய்த்த காய்கள் முற்றிக் கனிந்து கனியாகும். அவ்வாறு கனிந்த கனிகள் பின்னர் காயாகாது போவது போல மனிதரும் மூப்பெய்திய பின்னர் இறந்து விடுவர். இக்கருத்துக் களையே கனகவிராயர் இவ்வாறு அமைத்து விளக்கி உள்ளார்.

மாய்க்கு நாள்வரின் மருந்திலை மரத்தினி னாளாய்க்
காய்க்குங் காய்களே கனிந்தபின் காயென வாகா.
நீக்குக வாகுல நெஞ்சினில் அஞ்சன்மின் என்று
சேய்க்கும் ஏனையோர்க் கும்திடம் செப்பினர் சோர்ந்தார்.
(12 : 50)

திருக்குறள் கருத்துக்கள் கனகாபிஷேகமாலையில் இடம் பெற் றுள்ளன. ஒரு மன்னனுக்கு இன்றியமையாதன பல. அவனுக்குப் படை வலிமை இருத்தல் வேண்டும். குடிமக்களது அன்பை அவன் பெற்றிருத்தல் அவசியம். விளைவுப் பெருக்கம் அவனுடைய நாட்டில் இருத்தல் வேண்டும். அவனுடன் இருக்க வேண்டிய மற்றொரு அமிசம் சிறந்த அமைச்சராகும். பலரது நட்பும் அத்தகைய அரசனுக்கு இன்றியமையாதது. அவனது நாட்டைக் காக்கும் அரண்கள் அவனுக்கு மிகமிக அவசியம். இந்த ஆறு சிறப்புக்களும் உடையவனே

அரசருக்கெல்லாம் சிங்கம் போன்றவன் ஆவான். இக்கருத்துக் களையே இவ்வாறு சுருங்கக் கூறி விளங்க வைத்துள்ளார் திருவள்ளுவர் தமது திருக்குறளில்.

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு

(39 : இறைமாட்சி : 1)

இஸ்லாமிய வரலாற்றிலே சிறப்பு மிக்க இரண்டாம் கலீபாவாக ஆட்சி புரிந்தவர் உமறுகத்தாப் (றலி) அவர்கள். அப்பெரியாரின் ஆட்சியை வருணிக்கப் போந்த கனகவிராயர், உமறுகத்தாப் (றலி) அவர்களின் ஆட்சி சிறப்புற்றோங்கியமைக்குரிய காரணம் அவரது ஆட்சியில் திருக்குறளில் விதந்தோதப்பட்டுள்ள ஆறு சிறப்புக்களும் குறையாது இருந்தமையாகும் என இவ்வாறு வருணித்துள்ளார் :

ஊன்றுபெரும் படைக்குடி கூழமைச் சரொடு
நட்பர ணாறுடை யராகி

(உமறுகத்தாப் அரசு நிலைப்படலம் : 11)

கைசர் என்னும் நாடு அறபு நாட்டுக்கு அணித்தாய் இருந்தது. அதனை அறபு மொழியில் கொஸ்றொஸ் (Chosroes) என அழைக்கப் பட்டது. அந்நாட்டை ஆட்சி செய்து வந்தவன் நவசேருவான் என்ற பெயரை உடையவன். அவனை வருணிக்கும் பொழுதும் கனகவி ராயர் மேற்கூறிய குறளின் கருத்துக்களைப் பயன்படுத்துகிறார். யானை, குதிரை முதலிய படைகள் அவனிடமிருந்தன. குடிமக்கள் செழுமையோடு வாழ்ந்தார்கள். ஒப்பிடமுடியாத அளவுக்கு விளைச்சல் அங்கு இருந்தது. கல்வி கேள்விகளில் சிறந்த அமைச்சர்கள் அவனைச் சூழ இருந்தனர். அவனுக்கு எப்பொழுதும் பெரியவர்களுடைய நட்பு இருந்தது. வலிமை மிக்க அரண்கள் அவன் நாட்டைப் பாதுகாத்துக் கொண்டிருந்தன. குறளின் கருத்தை அமைத்து விரிவாக இவ்வாறு பாடியுள்ளார் கனகவிராயர்.

கரிபரி முதல வான கருதருஞ் சேனை என்னும்
திரைகட லுள்ளான் ஆளுஞ் செழித்திடும் குடிக ளுள்ளான்
பொருவருங் கூழு ளான் சூழ் புந்திகூர் அமைச்சுமுள்ளான்
பெரியவர் நட்பு ளான்மால் பிறங்கிய அரணு ளானே

(உமறுகத்தாபு அரசு நிலைப்படலம் : 38)

ஒரு மன்னனிடம் இருக்கவேண்டிய மற்றொரு பண்பு தனது குடிமக்கள் எளிதாக வந்து அதனைக் காண்பதற்கு ஏற்றவனாக இருத்தலாகும். அக்குடி மக்கள் கூறும் குறைகளைக் கேட்டுக் கடுஞ் சொல் வழங்காதவனாகவும் அவன் திகழ்தல் வேண்டும். அத்தகைய

மன்னனையே உலகம் மிகுதியாகப் போற்றும். இக்கருத்தினையே திருவள்ளுவர் தமது குறளில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

காட்சிக் கெளியவன் கடுஞ்சொல்வ னல்லனேல்
மீக்கூறும் மன்ன னிலம்
(39 : இறைமாட்சி : 6)

இத் திருக்குறட் கருத்துக்களையும் பயன்படுத்தி ஆசிரியர் நவசேருவானை இவ்வாறு பாடி உள்ளார் :

காண்டலுக் கெளிய னியாதுங்
கடுஞ்சொல்லே இல்லான்.........
(உமறுகத்தாபு அரசு நிலைப்படலம் : 39)

நவசேருவான் தோற்கடிக்கப்பட்ட பின்னர் மகதி என்பவர் ஆட்சி பீடத்தில் அமர்த்தப்பட்டார். மகதி அரசனை வருணிக்கும் பொழுதும் மேற்கூறிய இரண்டு குறள்களிலும் உள்ள கருத்துக்களை ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார். அவர் செங்கோல் நடத்திய முறைமை இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

படைகுடி கூழ மைச்சு நட்பரண் படைத்தி யாதும்
கடுமொழி இலராய்க் காட்சிக் கெளியராய்க் கைச றுள்ளார்.
இடறில ராகி யோங்க எவர்க்குமே சரியாய்த் தஞ்சீர்
குடையினா னிழற்றிச் செங்கோல் சிறிதுங் கோடாது காத்தார்.
(மகதி யரசியற் படலம் : 26)

நவசேருவானின் புதல்வியின் அழகில் மயங்கிய பலர் அப்பெண் மணியை மணக்க முன்வந்தனர். அத்தகையவருள் ஒருவர் உமறு கத்தாப் (றலி) அவர்கள் எனக் கனகவிராயர் தமது கனகாபிஷேக மாலையில் (10 : 21 - 28) குறிப்பிட்டுள்ளார். இக்கூற்றுக்கு வரலாற்றுச் சான்றுகள் இல்லை. எனினும் தமது காப்பியத்தில் படிப்போர் ஈடுபாடுடையவராய் அமைய அவர் இவ்வாறு பாடி இருக்கலாம். உமறு கத்தாப் (றலி) அவர்கள் பல பரிசில்கள் அனுப்பிய தாகக் குறிப்பிட்டுள்ளார் (10 : 28). உமறுகத்தாபு (றலி) அவர்களே அரச உடைமைகளைப் பயன்படுத்துவதில் மிகச் சிக்கனமாகப் பயன் படுத்தியவர் எனப் புகழப்பெற்றவர். அரசப் பொதுச் சொத்திலிருந்து பொருள்கள் அனுப்பப்பட்டன என்று இவ்வாறு கனகவிராயர் குறிப் பிட்டுள்ளார்.

பன்னுமிக் கருத்துட் கொண்டு பைத்துல்மால் கணக்க ரான
தென்னரொக் காசு தம்மை விளித்துத் தேமொழியார் சொந்தப்
பொன்னையன் னவர்க்குச் சேர்த்து விடுகவென் றிறைபு கன்றார்
அன்னவர்க் கெனவ ரைந்த சீட்டினி லறைந்த வண்ணம்
(உசைனாருக்கு மாலையிட்ட படலம் : 32)

இத்தகைய ஒரு சந்தர்ப்பத்தில் கூறப்பட்டதாக ஒரு பாடல் அமைந்துள்ளது. உமறு கத்தாப் (றலி) அவர்களின் மனநிலையை வருணிப்பதாக அப்பாடல் அமைந்துள்ளது. சீயாக் கொள்கைகளுக்கு முதலிடம் அளிக்கும் இந்நூலாசிரியர் இவ்வாறு உமறு கத்தாப் (றலி) இத்தகைய மனநிலையை உடையவராக இருந்தார் என்று கூறுவதில் வியப்பொன்றும் இல்லை. அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

எண்ணியொன் றினைமுன் பின்னர் துணிவதேர் துணிந்த பின்னர்
எண்ணுவம் என்ப தென்று மிழுக்கின தேயா மியாதும்
எண்ணிடாத் துணிந்தே னிங்ங னினிப் பொருட் செலவுக் கஞ்சல்
மண்ணகத் தரசு பூண்ட மன்னவர்க் கழகன் றாமால்.

(உசைனாருக்கு மாலையிட்ட படலம் : 28)

இப்பாடலில் அமைந்துள்ள முக்கிய கருத்தினைத் திருக்குறளில் காணமுடியும். நன்றாக ஆராய்ந்தே ஒரு தொழிலில் ஈடுபடத் துணிக, துணிந்தபின் ஆராய்வோம் என்பது குற்றம் ஆகும் என்னும் கருத்தினைத் திருவள்ளுவர் :

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.

(47 : தெரிந்து செல்வகை : 7)

எனப் பாடி உள்ளார்.

அலி (றலி) அவர்களின் மற்றொரு புதல்வரான முகம்மது கனிபா என்பவர் உசைன் (றலி) அவர்களைக் கொன்றது மூர்க்கத்தனமான செயல் என்றும், அது தீர ஆலோசிக்காமல் செய்யப்பட்டது என்றும், அந்த மாபெரும் தவறை இப்பொழுது நினைத்து வருந்துவது தகாது என்றும் கூறியதாக ஒரு பாடல் கனகாபிஷேகமாலையில் இடம் பெற்றுள்ளது. அந்தப் பாடலிலும் கனகவிராயர் அதே குறளை எவ்வித மாற்றமும் செய்யாமல் ஆண்டுள்ளமையைக் காணலாம். அப்பாடல் வருமாறு :

எண்ணித் துணிக கருமந் துணிந்த பின்னர்
எண்ணுவ மென்ப திழுக்கென் றியற்பெரியோர்
கண்ணி யுரைத்தமொழி கருதாமல் புரிந்தீர்
அண்ணியுறும் ஆழ மறியாமற் காலிட்டீர்.

(அப்துல்லா சையாது மரணப்படலம் : 72)

இங்கே 'ஆழம் தெரியாமல் காலை விட்டுக்கொண்டது போல்' என்னும் பழமொழியும் அதே கருத்தில் இடம் பெற்றுள்ளமையையும் காணலாம்.

சங்ககாலச் செய்யுளிலே உள்ள கருத்துக்களையும் கனகவிராயர் ஆங்காங்கே சுட்டிச் செல்வதைக் காணலாம். குறுந்தொகையிலே

வருகின்ற ஒரு நிகழ்ச்சி. தலைவன் பொருளீட்டச் செல்கின்றான். தலைவனை விரைவாகத் திரும்பிவந்து தலைவியைத் திருமணம் முடித்துக்கொள்ளுமாறு தோழி தலைவனை வேண்டுகிறாள். தலைவனை நோக்கித் தலைவி கூறும்பொழுது ஓர் உதாரணத்தை எடுத்துக் காட்டுகிறாள் தோழி. 'ஒரு தாய் மாறுபட்டுத் தனது குழந்தையைத் துன்புறுத்தும் பொழுதும் அக்குழந்தை தன் வாயைத் திறந்து அம்மா என்றே அழைக்கிறது. தாயிடமே அடைக்கலம் தேடுகிறது அக்குழந்தை. தாய்க்கும் குழந்தைக்கும் உள்ள தொடர்பு தான் உனக்கும் என் தலைவிக்கும்' என்று கூறுகிறாள் தோழி. பிள்ளைகள் எச்சந்தர்ப்பத்திலும் தாயாரிடமே அடைக்கலம் புகுவர் என்பதை உறுதிப்படுத்தவே இக்கூற்று குறுந்தொகையில் உள்ள அம்மூவனாரால் இயற்றப்பட்ட பாட்டில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

தாயுடன் றலைக்கும் காலையும் வாய்விட்
டன்னா லென்னும் குழவி......... . ......

(குறுந்தொகை : 397 : 4-5)

இதே கருத்தைச் சற்றுத் திரித்து ஆண்டுள்ளார் கனகவிராயர். எசீது என்பவனின் கொடுங்கோலிலிருந்து தங்களைக் காப்பாற்ற வேண்டும் என்றும் நபிகள் நாயகத்தின் எஞ்சி இருந்த தோழர்கள் முகம்மது அனிபா அவர்களிடம் வேண்டுகோள் விடுத்தார்கள். அந்த வேண்டு கோளைக் குறிப்பிடும்பொழுதுதான் ஆசிரியர் பிள்ளைகள் தாயாரிட மல்லாது வேறு யாரிடம் இரந்து கேட்பார்கள் என அமைத்துப் பாடுகிறார். இக்கருத்து இடம்பெற்ற செய்யுள் முழுமையாக இவ்வாறு அமைந்துள்ளது.

இந்நகர் தன்னில் நம்மோர்க் கிடஞ்சல் செய்பகை வேறில்லை
மன்னவர் மன்ன எங்கட் காமன மிரங்கி ஈதை
வன்னியிற் சுட்டெரிக் காவகைபுரிந் திடுதல் வேண்டும்
அன்னைபா லன்றிச் சேய ராரிடம் இரந்து கேட்பார்.

(எசீது பதுங்கிய படலம் : 66)

மன்னருக்கு இருக்கவேண்டிய தகுதியைப்பற்றிக் குறிப்பிட்டுள் ளார் கனகவிராயர். தமது ஆட்சியில் உள்ளவர்களுக்குத் தாய் போன்று கடமை ஆற்றவேண்டியவர் அம்மக்களின் மன்னர் என மன்னருடைய சிறப்பினை விவரித்துள்ளார். கடலால் சூழப்பட்ட உலகினில் வாழ்கின்றவர்களுக்கு அவர்களுடைய மன்னன் தாய்போல் பணிபுரிய வேண்டும் என்று பாடியுள்ளார். சுயநலத்தையே மறந்து தனது பிள்ளைகளின் நலமே தன்னலம் என வாழ்கின்றவள் அல்லவா தாய்? அத்தகைய தாய்க்கு அரசனை ஒப்பிட்டுள்ளார். உதுமான் (றலி) ஆட்சியைப்பற்றிக் குறிப்பிட வந்த ஆசிரியர் இக்கருத்தினை

ஒரு செய்யுளில் முதலிரண்டு அடிகளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

தோயமா ருவரி சூழ்ந்த வசுமதி உறுவோரி யார்க்கும்
தாயென இருந்து காக்குந் தகுதியே மன்னர்க் காகும்.
(உதுமான் வதைப்படலம் : 85)

(தோயம்-நீர் ; உவரி-கடல் ; வசுமதி-வசுதை-பூமி)

அரசன் தாயைப்போன்று தன் குடிமக்களைப் பாதுகாக்க வேண்டும் என்னும் கருத்து சங்க காலத்திலே நிலவியது. இதற்கு ஆதாரமாகச் சங்க இலக்கியங்களிலே பாட்டுக்கள் அமைந்துள்ளமையைக் காண லாம். தாயைப் போல் மன்னன் தானே விருந்தினருக்கு உணவு ஊட்டுதல் பற்றிச் சங்ககால இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. சிறுபாணாற்றுப்படையில்

விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி
ஆனா விருப்பிற் றானின் றூட்டி (244-245)

என்றும் பெரும்பாணாற்றுப்படையில்

மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்
தானா விருப்பிற்றானின் றூட்டி (478-479)

என்றும் மலைபடுகடாம் என்னும் பாட்டில்

நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி
துவந்த வுள்ளமோடமர்ந்தினிது நோக்கி (359-360)

என்றும் தாய் தன் பிள்ளைகளைப் பாதுகாப்பது போன்று மன்னன் தன்னை வந்து அடைந்தவர்களை எவ்வாறு உபசரித்தான் என்பது விளக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

உசைன் (றலி) அவர்களின் மறைவுக்குப் பின்னர் வாழ்ந்த அசுகாபித் தோழர்கள் அலி (றலி) அவர்களின் மற்றொரு புதல்வ ரான முகம்மது ஹனீபா என்பவரை அண்மி உசைன் (றலி) அவர்கள் மறைவுக்குக் காரணமாயிருந்த எசீது என்பவனிடமிருந்து நாட்டைக் காப்பாற்றும்படி வேண்டிக்கொண்டார்கள். அவ்வாறு வேண்டும் பொழுது சில உண்மைகளைக் கூறினார்கள் எனக் கனகவிராயர் குறிப்பிட்டுள்ளார். யாருக்கு யார் தெய்வம் என்பது பற்றியவையே அவ்வுண்மைகள். பெரியோர் கூறிய அவ்வுண்மைகளை அசுகாபித் தோழர் வாயிலாகப் புலவர் கூறுகிறார். பத்தினிப் பெண்டிர்க்குத் தெய்வம் அவர் தம் கணவரே. புதல்வருக்கு மனிதத்தெய்வம் தந்தை யும் தாயுமே. துறவோர்கட்குத் தெய்வம் அவர்தம் குருவே. மற்ற வர்களுக்கெல்லாம் தெய்வம் ஆட்சிபுரிகின்ற அரசனே. இத்தகைய கருத்துக்களைக் கனகவிராயர் கனகாபிஷேகமாலையில் புகுத்தி

உள்ளார். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஒரு காப்பியத்தில் இத்தகைய கருத்துக்களை இடம் பெறச் செய்வது ஏற்புடைத்தா என்பதை ஆசிரியர் சிந்திக்கத் தவறிவிட்டார். ஆசிரியர் இங்கே தெய்வம் என்னும் சொல்லுக்கு இறைவன் என்னும் பொருளை மனதில் கொண்டிருந்தாரேயானால் அவர் கூறியது தவறானதாகும். தெய்வம் என்னும் சொல்லுக்குக் கடவுள், தெய்வத்தன்மை, தெய்வத் தன்மை உள்ளது எனப் பல கருத்துக்கள் அகராதியில் தரப்பட்டுள்ளன. ஆசிரியர் கடவுள் எனத் தெய்வம் என்னும் பதத்தை இங்கே ஆண்டிருப்பின் அது இஸ்லாமிய ஏக தெய்வக் கொள்கைக்கு முரணானதாகும். அன்றியும் இஸ்லாமிய ஓர் இறைவன் என்னும் கொள்கையில் ஊறித் திளைத்த அசுகாபி தோழர்கள் வாயிலாகக் கூறுவதாயின் அது மிகப் பெருந் தவறாகி விடுகின்றது. கனகவிராயர் தமது கனகாபிஷேகமாலையில் இக்கருத்துக்களை அமைத்து இவ்வாறு பாடி உள்ளார்.

குலமக டனக்குத் தெய்வங் கொழுநனே புதல்வருக்கு
நலமிகுந் தந்தை தாயே நரர்த் தெய்வந் துறவோர் கட்குப்
பலநலக் குருவே தெய்வம் பகரியா வர்க்குந் தெய்வம்
இலைமுக வணிமன் னேயென் றியம்புவர் பெரியோ ரையா
(எசீது பதுங்கிய படலம்: 64)

குமரகுருபரசுவாமிகளும் தமது நீதிநெறி விளக்கத்தில் இத்தகைய கருத்துக்களை அமைத்துப் பாடி உள்ளார். அவரும் குலமகளுக்குத் தெய்வம் கணவன் என்றும் புதல்வருக்குத் தெய்வம் தந்தையும் தாயும் என்றும் அறவோர்க்கு அடிகளே தெய்வம் என்றும் எல்லோருக்கும் தெய்வம் அரசனே என்றும் ஒரு வெண்பாவில் பாடிப் போந்துள்ளார். அவர் பின்பற்றிய பண்பாட்டிற்கு இயைய இக்கூற்றுப் பொருத்த மானதே. குமரகுருபர சுவாமிகளுடைய இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூ ணிறை.
(நீதிநெறி விளக்கம்: 26)

இரண்டு பாடல்களுக்கிடையே ஒரு சிறு மாற்றம் இருப்பதைக் காணலாம். பிள்ளைகளுக்கு நலமே புரியும் அவர் தம் தாய் தந்தையே மனிதத் தெய்வம் என்னும் பொருள்படி 'புதல்வர்க்கு, நலமிகுந் தந்தை தாயே நரர்த்தெய்வம்' என்று கனகவிராயர் அவர்களும் நிச்சயமாக பிள்ளைகளுக்குத் (தெய்வம்) தந்தையும் தாயுமே என்று பொருள்பட,

'மன்ற புதல்வர்க்குத் தந்தையும் தாயும்' என்று குமரகுருபர சுவாமி களும் பாடியுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது. பிள்ளைகளுக்குத் தந்தையும் தாயும் மனிதத் தெய்வம் எனக் கனகவிராயர் கூறியமை இஸ்லாமிய இறைக் கொள்கையை நினைவிற்கொண்டதனாலா யிருக்கலாம்.

'இலைமுகவணிமன்' என்று கனகவிராயரும் 'இலைமுகப்பைம் பூண் இறை' என்று குமரகுருபர சுவாமிகளும் மன்னனைச் சுட்டி உள்ளனர். இரண்டு பாடல்களிலும் 'இலைபோன்ற வடிவத்தை உடைய' என்னும் பொருளில் இலைமுக என்ற தொடரும் மாறாது இருக்கின்றது. இத்தொடர் அடையாக உள்ள ஆபரணத்தை கனகவி ராயர் 'அணி' என்றும் குமரகுருபர சுவாமிகள் 'பைம்பூண்' என்றும் வருணித்துள்ளனர். அரசனைச்சுட்ட முன்னவர் 'மன்' என்னும் சொல்லையும் பின்னவர் 'இறை' என்னும் சொல்லையும் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம். குமரகுருபர சுவாமிகள் தமது பாடலில் 'அறவோர்' என துறவாது விரதங்காப்போரைக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் கனகவிராயர் தமது பாடலில் 'துறவோர்' என துறந் தோரைக் குறிப்பிட்டுள்ளார்.

தாம் விவரிக்க வந்த பொருளைத் தெளிவாக விளக்குவதற்குப் பழமொழிகள் பலவற்றைக் கனகவிராயர் தமது காப்பியத்தில் பயன் படுத்தி உள்ளார். 'கல்லி னாருரிப் போமென்று கழறல்போல்' (6 : 69); 'கான மயில்போல் நிகரில்லாக் கவினேகொளும் வானுடுப் போல' (10 : 61) ; 'தமிழிலாத் தமிழே போலும்' (13 : 3) ; 'நன் வினைத் தீமை வந் தெதிர்த்தன மானவே' (15 : 89) ; 'குடகட றன்னி னோடும் குணகட லெதிர்ந்த தேபோல்' (15 : 166) ; 'வடகடலும் தென்கடலும் வந் தொன்று கூடியதுபோல்' (8 : 45) ; 'புலியினுக் குதித்த வொன்று பூனையின் குட்டி யாமோ' (27 : 37) ; 'என்றுஞ் சோறு தருமலர்க்கே இரண் டகஞ் செய்ப் படுபாவி' (17 : 35); 'நினைந்தனன் கொம்பி லார்ந்த நிகரிலா வினிமைத்தேனுக், கினைந் தவோர் முடவன் என்றாங்கு' (17 : 43) ; 'முடவன் கொம்பி னிலார் தேனுக்கு வந்திடின் முடியுங்கொல்லோ (26 : 32) ; 'நின்றன முடம் பெடுத்தோ நினைந்தனம் கிணறு வெட்டல், ஒன்றுதல் பூதமாங்கே உணர்ந்தில மானோம்' (17 : 113) ; 'ஊருடன் பகைக்கில் வேரொடுங் கெடுமெனத் தேரானோ' (21 : 42); பெரியர் ஏவாமக்கள் மூவா மருந்தென்ன (22 : 4); என்பன அத்தகைய பழமொழிகளுள் சிலவாம்.

**தற்குறிப்பேற்றவணி :**

அணிகள் பலவகைப்படும். கவிஞர்களால் பெரிதும் பயன்படுத்தப் படுவது தற்குறிப் பேற்றவணி, சூரியன் மறைதல் போன்ற இயற்கையான ஒரு நிகழ்ச்சிக்குத் தான் விரும்பும் ஒரு காரணத்தைக் கற்பித்துப்பாடும் பாடல்களில் தற்குறிப்பேற்ற வணியைக் காணலாம்.

பொருளிடத்து இயற்கையாக நிகழும் தன்மையை ஒழித்துக் கவிஞன் வேறொரு வகையை ஏற்றிச் சொல்லும் அணி எனத் தற்குறிப்பேற்ற வணிக்கு வரைவிலக்கணம் கூறப்படுகிறது.

எசீதின் படையினர் உசைனாரின் படையின்மீது விழுந்து வெட்டினர். காசிம் என்பவர் கொல்லப்பட்டார்கள். மற்றவர்கள் அங்கும் இங்கும் ஓடிவிட்டனர். இந்த நிகழ்ச்சியைக் காணமுடியாத நிலையை அடைந்தான் சூரியன். அங்கிருந்து ஓடியேவிட்டான். மேற்கே உள்ள கடலுள் மூழ்கி மறைந்தான். சாதாரணமாக மாலை வேளையில் சூரியன் மேற்கே மறைகின்றான். இது இயற்கையான நிகழ்ச்சி. அந்த மறைவுக்கு ஒரு காரணத்தைக் கூறுகிறார் கவிஞர். முஸ்லிம் மக்கள் அனுபவிக்கும் இன்னலைக் காண்பதைச் சகிக்காத சூரியன் மறைந்தான் என்பதைக் கனகவிராயர் தமது காப்பியத்தில் உள்ள பாடலின் முதலிரண்டு அடிகளிலும் இவ்வாறு பாடியுள்ளார்.

இரவியிங் கிதனைக் காண நைந்தனன் போல மேல்பாற்
றிரைநெடுங் கடலுட் டாழ்ந்தான்...... ..........

(உசைனாரரசுப் படலம் : 200)

மற்றொரு போர்க்காட்சி. அங்கு இறந்தவர்களின் புண்ணான உடலைத் தனது கரத்தால் கதிரினால்—தொடக்கூடாது என்று எண்ணிய சூரியன் தனது கரத்தைச் சுருட்டிக் கொண்டான். மேற்கே சென்றுவிட்டான். மக்கள் குடிக்கத்தகாத உப்புநீர் மிகுதியாக உள்ள கடலினுக்குள் சூரியன் புகுந்தான். மேற்கில் உள்ள கடலுக்குள் புகுந்து மறைந்துவிட்டான். இக்கருத்துக்களையே ஒரு பாடலில் இவ்வாறு அமைத்துள்ளார் கனகவிராயர்.

நண்ணா ருயிரை வாங்கினவ ரவர்க ணாப்ப ணிறந்தனரே
புண்ணா ருடலந் தனைக்கரத்தால் தொடுதல் பொருந்தா வகையென்று
விண்ணார் பருதி தன்கரத்தைச் சுருக்கி மேல் பாலடைந்ததென்ன
உண்ணா உவர்நீர்க் குடகடலிற் புகுந்தான்.................

(உசைனாரரசுப் படலம் : 260)

**கொடைநாயகர் சிறப்பு :**

கனகாபிஷேகமாலையைப் பாடுவதற்கு கனகவிராயருக்குப் பொருளுதவி புரிந்தவர் கனக கொந்தாலகான் என்பவர். இவர் சைது கான் என்பவரின் புதல்வர். கூடல் மாநகரென்றும் வழங்கப்படும் மதுரை மாநகரைச் சேர்ந்தவர். இவரைப் பற்றி பல இடங்களில் புகழ்ந்து பாடியுள்ளார். தவத்தில் உயர்ந்தவர், அறிவுடையவர் என்று அவர் இவ்வாறு புகழப்பட்டுள்ளார்.

தவமுயர் அறிவன் கூடல் சைதுகொந் தாலகான் (1 : 24)
தங்கிய அறிவன்கூடல் சைது கொந் தாலகான் (2 : 17)

மதீன மாநகரிலே உள்ள மதிள் புரவலர் கொந்தாலகான் அவர் களின் புகழ்போல் வானோங்கி இருந்தது என கொந்தாலகான் அவர் களின் புகழும் மதீன மாநகர மதிளின் உயர்ச்சியும் இவ்வாறு ஒப்பிடப் பட்டுள்ளது.

....................மன்க னகொகொந் தாலகானார்
நிலவுகீர்த்தியை நேர வான் சென்றது மதிளே (3 : 8)

புரவலர் ஒவ்வொரு பாடலிலும் வெவ்வேறுவிதமாகப் புகழப்பட் டுள்ளார்.

....................சீர் புகழ்ச்
சுந்தரன் மதுரைத்துரை செய்யிது
கொந்தா லகான் கொடுக்கும் கொடையைப்போல் (6 : 15)

தென்மதுரை வரும் செயது கனக கொந் தாலகான்
செல்வம் போல் (7 : 5)

மையார் கடல் சூழ் புவியிலுளோர்
......... ..வள்ள லெனச் சொல் லிடக் கொடையில்
பொய்யா சைது கொந்தாலம் புகழ் போல் (7 : 48)

சீரார் செய்து கொந்தாலகான் சீமான் (9 : 63)

சீரார் சைதுகொந் தாலகான் றேசுகொள் வார்போல் (11 : 47)

மதுரை மூதூர் பொற்புக்கொந்தாலகானல் (15 : 8)

தென்மதுரை யில் வாழ்வள்ளல் கனககொந் தாலன் (29 : 106)

.................தகையுலா மதுரை மேவும்
கனககொந் தால கான்.................. (30 : 64)

புரவலரின் ஈகையைப் பற்றிப் பாடப்போந்த புலவர் அவருடைய நகரத்தையும் இவ்வாறு வருணித்துள்ளார்.

...............மேக
மன்னுதண் டலைசூழ் கூடன் மருவு கொந்தால கானென்
மன்னவ னிடத்தி லீகை வாங்கினோர் மகிழ்ச்சி போல (10 : 20)

மதுவிரி தோன்றி மாலை வணிகரின் மானம் காத்த
சதுமறை நெறிதேர் கூடற் சைதுகொந் தால கான்றன்
முதிர்பெறுஞ் செல்வம் என்ன.................. (11 : 15)

பார்த்திபன் சைதுகான் புதல்வன் பாரெலாம்
ஏத்துகொந்தாலகான் ஈகை போலவே
கோத்திர மடங்கலும் பிரியங் கொண்டிடத்
தாத்திரி முதலிய தான நல்கினார் (13 : 47)

கலைபயில் சைதுகான் சேய் கனக கொந் தாலகான் (15 : 103)

திசை புகழ் சைது கனககொந் தாலச் சித்தசன் (17 : 6)

அசனார் தம் கொடைச் சிறப்பை ஒத்திருந்தது மதுரை கொந்தால கானின் வள்ளன்மை எனப் பாடியுள்ளார் புலவர்.

மங்கல மகிழ்ந்து வேந்தர சனவண் வழங்கு தானம்
பொங்கொளி நிதியும் பூணும் தூசுமாப் பெற்றோ ரெல்லாம்
தங்கிய புகழாள் கூடற் சைதுகொந் தால கான்பூச்
செங்கையிற் பரிசு பெற்றா ரெனத்திரு வடைந்து வாழ்ந்தார்
(அரசனாரரசுப் படலம் : 8)

வானம் போன்று இல்லையென்னாது தானம் வழங்கும் கொந்தால கான் என்னும் புரவலர் சைது என்பவரின் மகனாக இருப்பதோடு மதுரையின் அதிபதியாக-மதுரேசனாக-விளங்கினார் என்றும் வருணிக்கப்பட்டுள்ளது.

வால வாரணத் திறைசை தருண்மது ரேசன்
மேலு லாமுகில் வியன்கைக்கொந் தாலகான் கடல்சூழ்
ஞால மீதினில் தருகொடை ..............
(உசைனாரரசுப் படலம் : 111)

காவலன் சைது கான்சேய் கனக கொந் தாலகான்
பாவலர் வாழ்த்தல்போல்... ......... (21 : 176)

பல்வேறு கலைகளுக்குப் பேர் பெற்றது மதுரை. அத்தகைய மதுரையில் வாழ்ந்தவர் கனககொந்தாலகான். அவரிடமிருந்து பெற்றால் வறியவரின் மிடி ஓடி விடும். அத்தகைய சிறந்த ஒரு கொடை வள்ளல் அவர் என இவ்வாறு புலவர் பாடியுள்ளார்.

கலைவளர் மதுரை மன்னும் கனககொந் தால கான்கைந்
நிலவிய பொருள் பெற்றோரி னெடுமிடி ஓடல் போல
அலிமகர் உசைனார்க் கஞ்சி ஓடிய அவர்க ளியாரு
மலர்மரு துடவை சூழும் வாவியங் கரையில் சேர்ந்தார் (22 : 85)

வந்தவர்க் கெலா மணிக்கல னாடைகள் வழங்கி
அந்த மார்மன மகிழுவான் செய்தன ரரசர்
கொந்து லாவுபூம் பொழில்வளை கூடலார் மகிபன்
இந்து சைதுகொந் தாலகான் எவரையுஞ் செயல் போல (27 : 3)

பண்ணுந் திருவும் பலவளமும் தழைத்த
மதுரைப் பதியினில் வாழ்
அண்ணல் உறுஞ்சீர்க் கனககொந் தாலகான்......... (32 : 38)

செய்னுலாபுதீன் அவர்கள் ஆட்சி சிறப்பான தொன்றாக அமைந்தது. எல்லோரையும் இன்சொலால் உபசரித்தார்கள் செய்னுலாபுதீன் அவர்கள். விருந்திட்டார்கள். உடை முதலிய பல்வேறு வெகுமதிகளை வழங்கினார்கள். இவற்றை எல்லாம் செய்து மகிழ்ந்தார்கள். இச்செய்கைகள் அனைத்தும் கனகாபிஷேகமாலைப் புரவலராக

அமைந்த கனக கொந்தாலகான் அவர்களின் தருமச்செயல் போன்றிருந்தன என்று கனகவிராயர் இவ்வாறு புகழ்கின்றார்,

எண்ணிலா வாதுலர் களுக்கு மிகுதியான் மனம்
வெறுக்கவின் சொல்லி
னுண்ணிட விருந்து முடைபணி வெறுக்கை
உவமையி லாவெகு மதியும்
கண்ணிட உலகோர் செய்துள மகிழ்ந்தார்
கனககொந் தாலகான் மதுரை
வண்ணமா நகரி னியற்றுபு விருந்தோர்
மகிழ்வுகண் டுளமகிழ்தலென

(செயனுலாபிதீன் அரசுப்படலம் : 21)

**சொல்லாட்சி :**

இனி கனகவிராயரின் சொல்லாட்சியைப் பற்றி சிறிது ஆராய்வோம். அவருடைய சொல்லாட்சி பொருட்செறிவு உடையதாய் அமைந்திருக்கின்றது. சில சமயங்களில் சில சொற்களை அருமையாகவே உபயோகித்துள்ளார். ஏனைய தமிழ் இலக்கியங்களிலும் கூட காண்பதற்கு அரிதான சில சொற்களையும் தமது காப்பியத்தில் பயன்படுத்தி உள்ளார்.

அத்தகைய சொற்களுள் ஒன்று அசனம். இது உணவைக் குறிக்கின்றது. அறுசுவை உணவு அளிக்கப்பட்டது எனக் கூறவந்த ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார்.

ஆதுலர்க் கசன மிட்டா ரறுவகை ருசியும் தோன்றும் (11 : 14)

அசனார் கொல்லப்பட்ட பின்னர் உசைனார் ஆட்சி பீடத்தில் அமர்ந்தார்கள். இது திமிஷ்கில் வாழ்ந்த எசீதின் மனத்தை உறுத்தியது. அவர் ஒரு கடிதம் எழுதினார். முகம்மது நபி (ஸல்) அவர்களின் கூற்றுக்கிணங்க அரசு தனக்கே உரியது என்றும் ஆதலினால் உசைன் அவர்கள் தமது சுற்றத்தவரோடு அம்மதீனா நகரைவிட்டு அகன்றுவிடவேண்டும் என்றும் எசீதின் அந்தக்கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. தன்னிடம் அரசு ஒப்படைக்கப்படவில்லை எனின் தீங்குதான் நேரும் என்றும் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. இக்கடிதம் உசைன் (றலி) அவர்களின் கைக்கெட்டியதும் அவர்கள் சிந்திக்கத் தலைப்பட்டார்கள். இந்தக் கடிதம் கர்வத்தோடு எழுதப்பட்டுள்ளது என்று எண்ணினார்கள். இந்தக் கடிதத்தையும் அங்கு அக்கடிதத்தில் எழுதப்பட்டுள்ளவற்றையும் தம்மால் பொறுத்துக்கொள்ள முடியாது என்ற முடிவுக்கு வந்தார்கள். பொறுத்துக் கொண்டிருக்க முடியாத ஒரு கடிதம் என்பதனையே கனகாபிஷேகமாலை ஆசிரியர் அருமையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சொல்லைப் பயன்படுத்தி விளக்குகிறார். 'சமித்தல்' என்னும் சொல்லைப் பயன்படுத்துகிறார்.

சமித்தல் என்பதன் பொருள் பொறுத்தல் என்கிறது பிங்கலந்தை நிகண்டு. அச்சொல்லை இவ்வாறு உபயோகிக்கிறார் கனகவிராயர்.

சமித்தி டற்கருங் கடிதமிச் சமையத்தில் விட்டான் (21 : 19)

மிகவேகமாகச் செல்வது குதிரை. சில சந்தர்ப்பங்களில் குதிரை பாய்ந்து செல்லும் வேகம் காற்றுக்கு ஒப்பிடப்படுகிறது. கனகவிராயரோ குதிரையின் வேகத்தை காற்று வீசும் வேகத்துடன் ஒப்பிடுவதில் திருப்தி அடையவில்லை. வேகமாக அடிக்கும் காற்றைவிட வேகமாகக் குதிரை சென்றது என்று குறிப்பிட்டுள்ளார். குதிரையையும் அடை அமைத்தே குறிப்பிடுகிறார். வெற்றியை அளிக்கும் குதிரை அது. அதனாலேயே அது சயப்பரி என அழைக்கப்பட்டுள்ளது. காற்றைவிட வேகமாகக் குதிரை சென்றது என்று குறிப்பிட்டுள்ளார். காற்று என்று சொல்லவுமில்லை. பிங்கலந்தை நிகண்டில் காற்று என்பது சலனன் என்னும் சொல்லுக்குப் பொருளாக அமைந்துள்ளது. எனவே தான் குதிரை வேகமாக அடிக்கும் காற்றை விடவே வேகமாகச் சென்றது என்பதனைக் கனகவிராயர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் கனகாபிஷேகமாலையில்.

..................வேகச்
சலனனின் கடிதிற் செல்லும் சயப்பரி தூண்டினாரே (22 : 56)

பிங்கலந்தையில் நீருண்ட மேகம் என்பது சிமூதம் என்னும் சொல்லுக்குப் பொருளாய் அமைந்துள்ளது நீருண்ட மேகத்தைக் குறிப்பிட கனகவிராயர் தமது கனகாபிஷேகமாலையில் இரண்டு இடங்களில் சிமூதம் என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார். கடவுள் வாழ்த்திலே முகம்மது நபி (சல்) அவர்களைக் குறிப்பிடவந்த கனகவிராயர் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு மேலால் மேகம் நிழல் அளிக்க வீற்றிருப்பவர்கள் என்பதனை,

.................. சிமூத நிழல் மேலார்
நபிகள் பெருமான் முகமதி றசூல் நபியி னிருதாளே (1 : 5)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

கோபம் என்னும் பொருளில் செயிர் என்னும் சொல்லைக் கனகவிராயர் பயன்படுத்தி உள்ளார். செயிர் என்பதனைப் புறநானூற்றிலும் பயன்படுத்தி உள்ளனர் சான்றோர்.

செற்றன் றாயினுஞ் செயிர்த்தன ராயினும்

என்கின்றது புறநானூறு (226). கோபம் என்னும் கருத்தில் செயிர் என்னும் சொல்லைக் கனகவிராயர் இவ்வாறு தமது காப்பியத்தில் ஆண்டுள்ளனர்.

தேன்மொழிப் பாலெலாஞ் செயிரிற் கொண்டனன் (17 : 76)
இவ்வகைச் செயிரவள் மேலி யம்பினன் (17 : 77)
எவரொடு மனைவிமேற் செயிரி சைக்கவே (17 : 81)
நிகழ்ந்தவச் செயிரெலா நீக்கி னாரவர் (12 : 145)

பக்கணம் என்பது ஊர் எனச் சூடாமணி நிகண்டு குறிக்கிறது. கனகவிராயரும் இதே கருத்தில் பக்கணம் என்னும் சொல்லை ஆண்டுள்ளார்.

தேசறு மிசிக்கி லான் சீர்ப் பக்கணம் தன்னினாளும் (26 : 3)

கனகவிராயர் வைத்தியன் என்னும் பொருளில் பிடகன் என்னும் சொல்லைத் தமது காப்பியத்தில் பயன்படுத்தி உள்ளார். எசீது நோய்வாய்ப்பட்டான். அவனைக் குணப்படுத்த வைத்தியர்கள் அழைக்கப்பட்டனர். அத்தகைய ஒரு சந்தர்ப்பத்தை விளக்கவே வைத்தியன் என்னும் பொருளில் பிடகன் என்னும் சொல்லைப் பயன் படுத்தி உள்ளார்.

கண்டுதீ மறுவா னுள்ளம் களித்தப் பிடகனை நோக்கி (33 : 30)
பித்தினன் சினமுட் கொள்ளாப் பிடகன் ஹாசீம் குலத்தோன் (33 : 32)

கனகவிராயர் மிக அருமையாகப் பயன்படுத்தும் மற்றொரு சொல் மகர் என்பது. இது ஒரு பன்மைச் சொல். மகன் என்பதன் பன்மை யாக ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார். பல பாடல்களில் மகர் என்பது பயன்படுத்தப்பட்டுள்ளது. பாத்திமா நாயகி அவர்களின் இரு பிள்ளைகளான அசனாரையும் உசைனாரையும் குறிப்பிட இம்மகர் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

பானயத் தமுதச் செஞ்சொற் பாத்திமா நாச்சி யார் தம்
………… ………… …………
வானினை யனைய செங்கை மகரச னுசைனை நோக்கி (6:36)
அன்னைதன் மலர்த்தாள் பற்றி யழுத தம் மகர்தஞ் சத்தம் (6 : 39)
விரைமலர்ப் புயத்தாரான மேன் மக ரிருவர் தாமும் (6 : 45)
மாற்றலர் படையலி மகரைச் சூழ்ந்துதம் (8 : 12)
திடமுடன் சமர்க்கு நின்ற திருமகர் தம்மை நோக்கி (15:98)

சில சமயங்களில் மகன் என்ற சொல்லின் பன்மையாகப் பயன் படுத்தப்பட்டுள்ளது. மற்றுஞ் சில சமயங்களில் கௌரவப் பன்மை யாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. சாதாரண வழக்கில் மகனார் என்று கௌரவப் பன்மையில் கூறுவது போன்று கனகாபிஷேகமாலையில்

உசைன் (றலி) அவர்களைக் குறிப்பிட மகர் என்ற சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது.

வாளலி மகரு சைனுக்கு (11 : 6)

மகருசை னென்பவர் வாகு சென்னியில் (11 : 17)

அசனார் அவர்களைக் குறிப்பிடவும் இச்சொற்பிரயோகம் பயன் படுத்தப்பட்டுள்ளது.

ஆதி யுமறுது மானலி மகர சனாரும் (11 : 25)

இசையலி மகரிற் சேஷ்ட ராகியவ
ரியன் மறைப் பொருடெரி புலவர்
அசனெனும் பெயரா ரரசு செய்தலினா
லறபுமுன் னான நாடெல்லாம் (17 : 6)

அலி (றலி) அவர்களுடைய ஏனைய புதல்வர்களும் வந்தார்கள் எனக் குறிப்பிட மகர் என்னும் சொல் பன்மையில் உபயோகிக்கப் பட்டுள்ளது.

சிலையார் கரமரு வார்படை யழியும்படி செயுஞ்சீ
ரலியார் மகர்பதி னெண்மரு மரியேயென வந்தார் (13 : 20)

உரமிகு மசன்முன் னாம் ஈரொன்பது மகருஞ் சூழ (15 : 120)

இங்கே கவனிக்கத்தக்கதொன்று உண்டு. அலி (றலி) அவர்களின் புதல்வர் ஒருவரையோ பலரையோ குறிப்பிடுவதற்கு மாத்திரமே கனகவிராயர் தமது கனகாபிஷேகமாலையில் மகர் என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

அவ்வியன் பரி மேல் வீரரைத் துணித்தார்
அவர்மகர் மகனிவ னதனால் (22 : 33)

அசன் (றலி) அவர்களின் புதல்வரும் அவ்வாறே மகர் எனக் குறிப் பிடப்பட்டுள்ளார்.

மருவலர் அடர்ந்த தன்மைகண் டசனின்
மகரலி யக்குபர் வீரர் (22 : 35)

வடிவுறு மசனார் திருமகர் சகிதாய் (22 : 37)

திகழலி மைந்த ரசன்மக ரான
செயினுலா பிதீன்றமக் கதிக
புகழுறு மரசவாடை யாபரணம்...... (35 : 15)

மகன் என்பதன் பன்மையாக மகர் என்பதைப் பல செய்யுட்களில் அமைத்துப் பாடிய கனகவிராயர் ஒரு செய்யுளில் அப்பன்மைச் சொல்லுக்கே கள் என்னும் பன்மை விகுதியையும் சேர்த்துப் பாடி உள்ளார். அலி (றலி) அவர்களின் பல புதல்வர்களைக் குறிப்பிடவே

அவ்வாறு பன்மை விகுதிகளைச் சேர்த்துப் பாடி உள்ளார். அந்தப் பாடல் இதுதான் :

வேந்தர்க டுதிக்க வாசிமோ ரெல்லா
மிகமன முவக்கமா வலியார்
காந்திகொ ணெடுவா ளார்ந்த மாவலியார்
கவின்மகர் களுமில் லோர் யாரும்
ஆழ்ந்த வோரின் பக் கடலிடை யழுந்தி
கரைபெறா ராகியே இருக்க (35 : 18)

மதுரைத் தமிழ்ப் பேரகராதியில் மகர் என்னும் சொல் இடம் பெற வில்லை. வின்ஸ்லோவின் தமிழ் ஆங்கில அகராதியில் மகன் என்ற சொல்லின் பன்மை வடிவமாக மகர் என்னும் சொல் இடம் பெற்றிருப் பதைக் காணலாம். பண்டை இலக்கியங்களிலும் மகன் என்பதின் பன்மை வடிவமாக மகர் என்பது இடம் பெற்றதாகவும் தெரியவில்லை. மகர் என்னும் சொல்லை பன்மைச் சொல்லாகவும் கௌரவப் பன்மைச் சொல்லாகவும் பயன்படுத்திய கனகவிராயர் ஒரே ஒரு இடத்தில் மகார் என்னும் சொல்லை மகனைக் குறிக்கப் பயன்படுத்தி உள்ளார்.

என்றுதங் கமலக் கையா லியலறு சுவைப தார்த்தச்
சொன்றியு மப்ப வர்க்கங் களுஞ்சமைத் தெழிற்சு தர்க்கு
நன்றுறப் படைத்துண் மின்க ணன்மகா ரென்னமைந்தர்
கன்றின மனத்த ராகிக் கலுழ்ந்தன ரனைதாள் பற்றி
(அபூபக்கரரசுரிமைப் படலம் : 38)

இங்கே மகார் என்னும் சொல் விளிவேற்றுமையில் பயன்படுத்தப் பட்டுள்ளமையைக் காணலாம்.

பிள்ளைகள் என்னும் பொருளில் மகார் என்னும் சொல் சங்ககால இலக்கியங்களிலே பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். சில சமயங்களில் அளபெடையுடன் கூடியதாக அச்சொல் அமைந்திருக் கிறது.

மகா அரன்ன மந்தி (சிறுபாணாற்றுப்படை : 55)

செம்மறியாட்டினையொத்த புக்கென்ற தலையினை உடைய பிள்ளை களோடே என்பது மலைபடுகடாத்தில் இவ்வாறு வந்துள்ளது.

துருவி னன்ன புன்றலை மகாரோடு (217)

புன்றலை என்பது சிவந்த மயிருள்ளதலை என்பதையும் குறிக்கும். இதே சொல் மலைபடுகடாத்தில் 'வளைகையி னின்றும் போதற்குக் காரணமான சிவந்த தலையினை உடைய பிள்ளைகளோடே' என்பது இவ்வாறு அமைந்துள்ளது.

புட்கை போகிய புன்றலை மகாரோடு (253)

பிள்ளையைப் பெற்றால் வளையிடாராகலின், வளை போதற்குப் பிள்ளைகள் காரணமாயினார் என்பர். புள் என்னும் சொல் வளை என்னும் பொருளில் இங்கு வந்துள்ளது. அதே நூலில் மற்றோர் இடத்தில் கன்றுகளைப் பிணைத்துக் காந்தளினது துடுப்புப் போலும் கமழுகின்ற மடலாலே அடித்துக் கடாவிடும் பிள்ளைகளுடைய ஆரவாரம் என்னும் பொருளில்,

காந்தட் டுடுப்பிற் கமழ்மட லோச்சி
..........................
கன்றுகடா அவுறுக்கு மக ரோதை. (336, 339)

'கடிய பறையினையுடைய கூந்தருடைய பிள்ளைகள்' என்பது மலைபடு கடாத்தில்,

கடுபறை கோடியர் மகாஅர்......... (236)

என வந்துள்ளது.

'மாடு மேய்க்கின்ற சிறிய தொழிலைச் செய்கின்ற சிறுவர்கள்' என்னும் பொருள்பட சங்ககால இலக்கியங்களில் இவ்வாறு அமைந்துள்ளமையைக் காணலாம்.

சிறுதொழில் மகாஅர்............... (அகநானூறு : 206 : 5)

இந்த மகார் என்னும் சொல் பிள்ளைகள் என்னும் பொருளில்

வீழ்ந்த திங்களை விசும்பு கொண்டேறுந்
தெய்வ மகாரி னையுறத் தோன்றி.
(பெருங்கதை : 1 : 40 : 74-75)

என்றும் வந்துள்ளது.

மைந்தன் என்னும் பொருளில் மஞ்சன் என்னும் சொல்லைக் கனகவிராயர் தமது காப்பியத்தில் பயன்படுத்தி உள்ளார். மஞ்சன் சொல் அந்தப் பாடலுக்கு இன்றியமையாத ஒன்றாக அமைந்துள்ளது. வஞ்சகன், நெஞ்சினில், அஞ்சிடாது என்ற சொற்களோடு ஓசை ஒத்திருப்பதாக அமையவேண்டி இருந்தது எனவே மஞ்சன் என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

வஞ்சக னின்னவா வழுத்தக் கேட்டமன்
நெஞ்சினில் தகாத தொன்றினை நினைந்தனன்
மஞ்சனென் றெண்ணுபு மைந்த யாதுக்கும்
அஞ்சிடா தறைகநீ நினைந்த யாவையும்
(அசனாரரசுப் படலம் : 64)

மஞ்சன் என்னும் சொல் மைந்தன் என்னும் சொல்லின் மருஉ என்பர். கம்பரும், இராமாயணத்தில் இச்சொல்லைப் பயன்படுத்தி உள்ளார். சீதா பிராட்டியாரின் கூற்றாக அமைந்துள்ள இந்தப்

பாடலில் இலக்குவனைக் குறிப்பிடவே சீதை மஞ்சன் என்னும் சொல்லைப் பயன்படுத்தினாள் எனக் கம்பர் பாடி உள்ளார்.

வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கியென்
மஞ்சனை வைதுபின் வழிக்கொள் வாயெனா
(சுந்தர காண்டம் : உருக்காட்சி படலம் : 17 (505))

எழுந்தனர் மஞ்சு தோய்புய மஞ்சரே
(அயோத்தியா காண்டம் : கைகேயி : 55)

திருவிளையாடற் புராணத்திலும்

சுந்தரி தரு மஞ்சன்

என மஞ்சன் என்னும் சொல் புதல்வன் என்னும் பொருளில் வந்துள்ளமை காண்க.

அழுத என்னும் சொல் பெயரெச்சமாகவும் வரும். அஃறிணைப் பலவின் பால் வினைமுற்றாகவும் வரும். ஈழத்து முஸ்லீம் மக்களின் ஒரு சாராரின் பேச்சு வழக்கில் அழுத போன்ற சொற்கள் வினை முற்றாகவே பயன்படுத்தப்பட்டு வருவதைக் காணலாம். திணை வேறுபாடோ, பால் வேறுபாடோ, இட வேறுபாடோ, கால வேறுபாடோ இன்றி அத்தகைய சொற்கள் அவர்கள் தம் பேச்சு வழக்கிலே பயன்படுத்தப்படுகின்றன. பண்டைய தமிழிலக்கியத்திலே இன்று வினை எச்சம் எனக் கருதப்படும் வந்து போன்ற சொற்கள் வினை முற்றுக்களாகவே கணிக்கப்பட்டு வந்தன. இத்தகைய நிலை மலையாளத்தில் இன்றும் நிலவுகிறது.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களிலும் அழுத போன்ற சொற்கள் வினை முற்றுக்களாக வந்துள்ள சந்தர்ப்பங்களைக் காண்கின்றோம். கனகவிராயரும் இதற்கு விதிவிலக்காக அமையவில்லை. அழுத போன்ற இத்தகைய சொற்களை உயர் திணைப் பெயர்களுக்கும் அஃறிணைப் பெயர்களுக்கும் பொதுவான வினை முற்றுக்களாக உபயோகித்துள்ளார். அத்தகைய ஒரு சந்தர்ப்பத்தை முகம்மது நபி (சல்) அவர்களின் மறைவினால் ஏற்பட்ட நிலைமையை வருணிக்கும்பொழுது கனகவிராயர் ஏற்படுத்தி உள்ளார். அழுத என்னும் சொல்லையே இவ்வாறு ஒரு பாடலில் பொது வினை முற்றாகப் பயன்படுத்தி உள்ளார்.

பண்ணி ரங்க வேதப் பயனி றசூல் வேதாம்பர்
கண்ணி ரங்க யார்கள் கனிந்தி ரங்கக் காரிரங்க
விண்ணி ரங்க நால்வர் மெலிந்தி ரங்க வெற்பிரங்க
மண்ணி ரங்க மற்றெவை யும்வா யிரங்க வேயழுத
(முதன்முறைப் படலம் : 35)

அஃறிணை வினைமுற்று என்று கூறக்கூடிய முறையிலும் அத்தகைய ஒரு சொல் இவ்வாறு அமைந்திருப்பதைக் காணலாம்.

சிந்தின னம்பு கொன்றா னம்படை முழுதுஞ் சீரார்
மந்திரி தனையுங் கொன்றான் வாளினம் படைமுறிந்த
(உமறுகத்தாபு அரசுநிலைப் படலம் : 91)

இது மற்றோர் எடுத்துக்காட்டு.

வீரரு மியாவு மங்க ணடைகுவான் விடுத்தார் தூதர்
பாரது நெளிய நான்கு படைகளுந் திமிசில் வந்த
(அலியாரரசுப் படலம் : 222)

மற்றொரு சந்தர்ப்பத்தில் பேய்கள் (வெறிகள்) ஆடிப்பாடி மகிழ்ந்தன என்பதை

............................வெறிகள் கூடி
ஆண்டலி வலியைப் பேசி ஆடினபாடி ஆர்த்த
(அலியாரரசுப் படலம் : 245)

என்று பாடி உள்ளார் கவிஞர்.

இருந்த என்பது மற்றொரு பாடலில் அஃறிணை வினைமுற்றாக இவ்வாறு அமைந்துள்ளது :

வளத்த பரிகள் கரிகள் பலமடிந்து
மலைகள் ஒத்திருந்த. (எசிது பதுங்கிய படலம் : 34)

முற்றிலும் உயர்திணைச் சொற்களையே கொண்டுள்ள ஒரு பாடலில் பயனிலை அஃறிணை பலர்பால் வினைமுற்று என்று அழைக்கப்படும் ஒரு சொல்லாக அமைந்துள்ளமையை மற்றொரு கனகாபிஷேகமாலைப் பாடலில் காணலாம்.

அந்த வேளையினின் மற்றோர் அடலுறும் வீர னோடி
வந்தன னெசிதின் முன்னே முகமது கனிபா வாதி
சுந்தர மன்ன ரோடுந் துகளப்துல் லாசை யாது
வெந்திற லுமறு சாது வேந்தனும் பொருது பட்ட.
(எசிது பதுங்கிய படலம் : 15)

உசைனாருக்கு மாலையிட்ட படலம் உண்மையிலேயே சகருவானின் சுயம்வரம் பற்றிய படலமாகவே அமைந்துள்ளது. மணிமாடம், மண்டபம் முதலிய அலங்கரிக்கப்பட்டமையைக் கனகவிராயர் விவரமாக பாடி உள்ளார். ஏழு பாடல்களில் (10 : 45-51) அவை அலங்கரிக்கப்பட்ட முறையினை நுணுக்கமாகப் பாடி விவரித்துள்ளார், கனகவிராயர். ஒரு பாடலிலே அங்கு தொங்கவிடப்பட்ட விளக்குகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். முத்தினால் அழகான பந்தல் அமைக்கப்பட்டிருந்தது. பல்வேறு படங்கள் பத்திபத்தியாக எல்லாப் பக்கங்களிலும் வரிசையாகத் தொங்கவிடப்பட்டிருந்தன. ஒளிபரப்பிப்

பளபளப்புடன் விளங்கும் விளக்குகளும் அங்கு தொங்கவிடப்பட்டிருந்தன. நவமணிக் குஞ்சங்களும் ஒளி பரப்பிக்கொண்டிருந்தன. இக்காட்சியையே கனகவிராயர் இங்கு இவ்வாறு பாடி உள்ளார்.

முத்தி னாலெழிற் பந்தரே யமைத்தனர்
மொழிந்திடு நாற்புறமும்
பத்தியாகவே நிரைத்தனர் விசித்திரப்
படங்களை நிறமேவு
லத்த ராநிறம் பலகொள் குளோப்புகள்
நலமிகச் செறித்தார்கள்
மத்தி யாகவே நவமணிக் குஞ்சங்கள்
வாகொடு மொளிசெய்ய (10 : 46)

இப்பாடலில் 'லத்தராம்நிறம் பல கொள் குளோப்புகள்' என்னும் சொற்றொடர் பளபளப்புடன் விளங்கிய விளக்குகளைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம். இங்கே 'லத்தர்' என்பதும் 'குளோப்' என்பதும் பிறமொழிச் சொற்கள். 'குளோப்' என்னும் இனத்தைச் சேர்ந்த விளக்குகள் இன்றும் முஸ்லிம் வணக்கத் தலங்களை அலங்கரித்துக்கொண்டு இருப்பதைக் காணலாம். முஸ்லிம் பெருவழக்கிலும் 'குளோப்' என்றே வழங்கப்படுகிறது. எண்ணெய் வார்த்துத் திரி இட்டு எரிக்கக் கூடியனவாகவும் மெழுகு திரி பொருத்தி எரிக்கக்கூடியனவாகவும் அத்தகைய 'குளோப்'கள் அமைந்துள்ளன. சில சந்தர்ப்பங்களில் மின் குமிழ்களைக் கொண்டும் அவை ஒளி பரப்பிக் கொண்டிருக்கின்றன. 'லஸ்தர்', 'குளோப்' என்னும் இருசொற்களும் ஆங்கிலச் சொற்கள். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதி லஸ்தர் என்பதற்கு அலங்காரத் தொங்கல் எனக் கருத்துத் தருகிறது. அது ஓர் ஆங்கிலச் சொல் என்றும் குறிப்பிடுகிறது. கண்ணாடியாலான தொங்கவிடப்படும் ஒருவகை அலங்கார விளக்கு என்றும் கூறுகிறது. 'குளோப்' என்பதும் கண்ணாடியாலான தொங்க விடப்படும் ஒருவகை விளக்காகும். இங்கே 'லஸ்தரா நிறம் பல கொள் குளோப்புகள்' என்று கூறும்பொழுது பளபளப்பாகக் காட்சி அளிக்கும் பல நிறங்களைக் கொண்ட கண்ணாடி விளக்குகள் என்றே பொருள் கொள்ளவேண்டி இருக்கிறது.

கனகாபிஷேகமாலை இயற்றப்படும் காலத்தில் அதாவது பதினேழாம் நூற்றாண்டின் மத்திய காலத்தில் சரியாகக் கூறப்போனால் 1648 ஆம் ஆண்டளவில் இத்தகைய விளக்குகள் பள்ளிவாசல்களில் பயன்படுத்தப்பட்டிருத்தல் வேண்டும். பதினேழாம் நூற்றாண்டு ஆகும்பொழுது மேனாட்டுச் செல்வாக்குக் கீழைநாடுகளில் பரவத் தொடங்கி விட்டது. எனவேதான் கனகவிராயரும் அலங்கார

விளக்குகளைக் குறிப்பிட 'லஸ்தரா நிறம் பல கொள் குளோப்புகள்' எனக் குறிப்பிட்டுள்ளார் எனக் கொள்ளலாம்.

அந்தக்கால எல்லையில் அவ்வாறு இருந்திருக்க முடியாது என்ற வாதம் ஏற்றுக்கொள்ளப்பட்டால் இச்சொற்றொடர் ஓர் இடைச் செருகல் என்றே கொள்ளல்வேண்டும். கனகாபிஷேகமாலையில் பதிப்பாசிரியர் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் அவர்கள் 'பாட வேண்டியவைகளைப் பாடியுள்ளதாக'க் குறிப்பிடுவதால் இச்சொற்றொடரை அவர் ஓர் இடைச்செருகலாகப் புகுத்தி இருத்தல் வேண்டும்.

இஸ்லாமிய அடிப்படையிலே தோன்றிய தமிழ்க்காப்பியங்களுள் தலைக்காப்பியம் என்று அழைக்கப்படும் பெருமை கனகாபிஷேக மாலையையே சாரும். உமறுப்புலவர் பிறந்து ஆறு வருடங்களில் கனகாபிஷேகமாலை கனகவிராயரால் இயற்றப்பட்டுள்ளது. ஆக, காலத்தால் பிந்திய உமறுப்புலவர் அவர்களால் இயற்றப்பட்ட நூல்களை இனி எடுத்துக் கொள்வோம்.

---

# எட்டாம் இயல்

## சக்கூன் படைப்போர்

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வடிவங்களுள் ஒன்றே படைப்போர் என்னும் புதுவகை இலக்கியங்களாகும். கிஸ்ஸா, நாமா, மசஅலா, முதலிய இஸ்லாமிய புதுவகை இலக்கியங்கள் போன்று படைப்போர் இலக்கியங்களும் இஸ்லாமியக் கருத்துக்களை மட்டுமே பெற்று தமிழிலக்கியங்களுள் சிறக்கின்றன. உலக இலக்கியங்கள் பல வற்றிலும் ஏதாவது ஒரு போர் நிகழ்வுகள் மையமாக அமைந்து சிறப்பதை நாம் காணலாம். தமிழில் புறப்பாடல்களிலும் கம்ப ராமாயணம் போன்ற இன்ன பிற இதிகாசங்களிலும் போர்ச் செய்திகள் முக்கியத்துவம் பெற்றமைந்துள்ளன. இதேபோல் ஷேக்ஸ்பியரின் பல காவியங்களிலும் ஹோமரின் இலியட்டிலும் போர் நிகழ்வுகள் முக்கியத் துவம் பெற்றுள்ளன. சங்ககால புறப்பாடல்களுள் போர் செய்திகள் இடம் பெற்றிருப்பினும் அவைகள் முழுக்க முழுக்க போர்களையே மையமாகக் கொள்ளவில்லை என்றே கூறலாம். இக்கூற்றுப் பொய்கை யாரின் களவழி நாற்பதுக்கும் கூட பொருந்தும். காரணம் இதில் இடம் பெற்றிருப்பது முழுக்க போர்க்களத்தின் வருணனையே தவிர போர்ச் செய்திகள் அல்ல. போர்ச் செய்திகளையே முழுமையாகக் கொண்ட இலக்கியம் என்ற நிறைவு தமிழுலகில் கி.பி. பன்னி ரெண்டாம் நூற்றாண்டிலேயே நிறைவு பெற்றதெனலாம். காரணம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் கி.பி. பன்னிரெண் டாம் நூற்றாண்டு வரை சோழப் பேரரசர்கள் தமிழகத்தில் மிகச் செழிப்பாகவும் வீரத்துடனும் ஆட்சி செலுத்தினர். கடல் கடந்து சென்றும் தம் வீரத்தினை நிலை நாட்டினர். இவர்களது ஆட்சிக் காலம் தமிழக வரலாற்றில் வீரம் மிகுந்த காலமாக விளங்கிற்று. எனவே அக்காலத்திய புலவர்கள் அவர்களின் வீர உணர்விற்கு இலக்கிய உருவமளிக்கும் மன எழுச்சியைப் பெற்றார்கள். இதன் விளைவாகவே பரணி இலக்கியங்களின் தோற்றம் கலிங்கத்துப் பரணியின் மூலமாகத் தொடக்கம் பெறலாயிற்று. இதனைத் தொடர்ந்து தக்கயாகப் பரணி, அஞ்ஞவதைப் பரணி, மோகவதைப் பரணி, பாசவதைப் பரணி, இரணியன் வதைப் பரணி, திருச்செந்தூர் பரணி முதலான இலக் கியங்கள் தோன்றின. தமிழிலக்கியத்துள் போர்ச் செய்திகளைக் கொண்டு எழுந்துள்ள பரணி இலக்கியத்தின் புறப்பொருள் பற்றிப் பன்னிரு பாட்டியல்

.........எஞ்சி மலைந்த உழிஞை முற்றித்
தும்பையிற் சென்ற தொடுகழல் மன்னனை
வெம்புசின மாற்றான் தானை வெங் களத்தில்
குருதிப் பேராறு பெருகும் செங்களத்து
ஒரு தனி ஏத்தும் பரணியது பண்பே

(பன்னிரு பாட்டியல் : 142)

எனக் கூறுகிறது. அதாவது பரணி என்னும் நூலின் இயல்பாவது வஞ்சிமாலையைச் சூடிப் பகைவர் நாட்டினைக் கொள்ளுதற் பொருட்டு அவர் மேற்சென்ற மன்னன் பின் உழிஞை மாலை சூடிப் பகைவனுடைய மதிலை முற்றுகையிட்டுத் தும்பைமாலை அணிந்து அப் பகைவனுடன் போர் செய்வான். அப் போர்க்களத்தில் அவனை எதிர்த்தவனது ஊர்கள் மடியக் குருதிப் பேராறு பெருக்கெடுத்து ஓடும் அச் செங்களத்தில் படையெடுத்துச் சென்று வாகைமாலை சூடிய அவ் வேந்தனின் வீரத்தை விளம்புதலே பரணியின் பண்பாகும். எனவே தமிழிலக்கியத்துள் பெருமளவில் போர்ச் செய்திகளை பெற்றுச் சிறக்கும் இலக்கிய வடிவமாகப் பரணி இலக்கியங்களையே நாம் கொள்ளலாம்.

**படைப்போரும் பரணியும் :**

போர் இலக்கியமாக பரணி இலக்கியங்களுக்குப் பின் வேறு தமிழிலக்கியங்கள் தோன்றவில்லை என்ற கருத்தே தமிழிலக்கிய உலகில் பெரிதும் நிலவுகின்றது. (கா. ப. அறவாணன் ; பரணி ஒரு மதிப்பீடு : பக். 55) ஆனால் இது பெரும் தவறுதலாகும். இத் தவற்றிற்குக் காரணம் இஸ்லாமியத் தமிழிலக்கியங்களுக்குரிய முக்கியத்துவம் தமிழிலக்கிய வரலாற்றில் அளிக்கப்படாததே ஆகும். பரணி இலக்கியங்களுக்குப் பின் இஸ்லாமிய வரலாற்றில் நடைபெற்ற பல்வேறு போர்ச் செய்திகளையும் உள்ளடக்கமாகக் கொண்டு எழுந்துள்ள இலக்கியங்களே நாம் புதுவகை இஸ்லாமியத் தமிழிலக்கியங்களாக குறித்துள்ள படைப்போர் இலக்கியங்களாகும். படைப்போர் இஸ்லாமியத் தமிழிலக்கியங்கள் போர்ச் செய்திகளையே மையமாகக் கொண்டுள்ளன. இவற்றை ஆங்கிலத்தில் கூறும் "War Ballad" என்பதற்கு இணையாகக் கூறலாம். இஸ்லாமிய வரலாற்றின் ஆரம்ப கால கட்டத்தில் இஸ்லாம் இவ்வுலகில் வேரூன்றுவதற்கும் பரவுவதற்கும் முட்டுக்கட்டையாக இருந்தவர் பலர். அவர்கள் பல்வேறு வழிமுறைகளில் இஸ்லாத்தை எதிர்க்கலாயினர். பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் ஆரம்ப காலத்தில் சந்தித்த எதிர்ப்புகளும், இன்னல்களும் எண்ணற்றவைகளாகும். தாம் பிறந்து வளர்ந்த மக்கமா நகரினைவிட்டே வெளியேற வேண்டிய கடும் துன்பத்திற்கும் ஆளாகி இருந்தார்கள். இத்தகு சூழலில் நபி (சல்) அவர்களை அரவணைத்து இஸ்லாத்தின் ஏகோபித்த இறைவணக்கத்தையும் கொள்கைகளையும் ஏற்றுத் தலை வணங்கியவர்கள் மதீன நகர் மக்களே ஆவர். இத்தகு சூழலில் இஸ்லாத்திற்கும் அதனை எதிர்ப்பவர்களுக்குமிடையே எண்ணற்ற போர்கள் நடைபெற்றுள்ளன. அப்போர்களில் எல்லாம் அண்ணல் நபி (சல்) அவர்கள் வெற்றி பெற்ற பின்பே இஸ்லாம் இவ்வுலகில் தலை நிமிர்ந்து நிற்கத் தொடங்கிற்று. எனவே இஸ்லாமிய வரலாறு

எண்ணற்ற போர்களைப் பின்னணியாகப் பெற்றமைந்துள்ளது. அத்தகு போர்ச் செய்திகள் பலவும் படைப்போர் என்னும் தமிழ் இலக்கிய வடிவங்களில் முஸ்லிம் புலவர்களால் விரித்துரைக்கப் பட்டுள்ளன.

போர்ச் செய்திகள் இலக்கியத்துள் மையக் கருத்தாக இடம் பெறும் நிலையில் பரணி, படைப்போர் இலக்கியங்களிடையே ஒற்றுமை காணப்படினும் படைப்போர் இஸ்லாமியத் தமிழிலக்கியங்கள் பரணி இலக்கியங்களிலிருந்து பெரிதும் வேறுபட்டுள்ளன. இவ்வேறுபாடுகள் உருவம் உள்ளடக்கம் என்ற இரு நிலைகளிலுமே காணப் படுவதால் படைப்போர் இலக்கியங்களைப் பரணி இலக்கியங்கள் என்று கூறுதற்கியலாது. ஏனெனில் படைப்போர் இலக்கியங்களைத் திறனாய்வு செய்யப்புகுவோர் இதுவும் பரணி வகையைச் சார்ந்தது தான் என்று கருதுகின்றனர் (அதிரை அஹ்மத் : இஸ்லாமிய இலக் கியச் சிந்தனை பக்கம் 165) ஆனால் இம் முடிவு பரணி, படைப்போர் இலக்கியங்களை மேலோட்டமாகப் பார்த்ததன் விளைவே ஆகும். இவ்விரு இலக்கிய வடிவங்களின் உருவ உள்ளடக்க ஆய்வு, இவை யிரண்டினையும் தனித்தனி இலக்கிய வடிவங்கள் என்பதை தெளிவு படுத்தும். பரணி இலக்கியத்திற்குரிய இலக்கணம் கூறும்போது முதலிரண்டு அடிகளில் பரணியின் உருவம் பற்றி விளக்கத்தைத் தரு கிறது பன்னிரு பாட்டியல்.

மயக்கறு கொச்சகத் தீரடி இயன்று
நயப்புறு தாழிசை உறுப்பிற் பொதிந்து
...........................

(பன்னிரு பாட்டியல் : 142)

பரணி இலக்கியம் அமையவேண்டும் எனக் கூறுவதால் கலிப்பாவின் இனமாகிய கலித்தாழிசைகளால் பாடப்பெறும் கவிஞனுடையது பரணி இலக்கியங்களாகும். இத் தாழிசைகள் கொச்சக ஒரு போகின் வகை யின என்பர். இதனை 'தாழிசைக் கொச்சகமாகிய பரணிச் செய்யுளும்' எனப் பேராசிரியர் கூறுவதால் (தொல்காப்பியம் பொருள் : செய்யுளி யல் : சூத்திரம் 156) அறியலாம். எனவே பரணித் தாழிசை இரு சீரடி, முச்சீரடி நீங்கலாக ஏனைய சீர்களால் இரண்டு அடியால் பாடப் பெறும் பாங்குடையதாகும். இவ் யாப்பமைதிக்கேற்ப எந்தவொரு படைப்போர் இஸ்லாமியத் தமிழிலக்கியமும் அமையவில்லை என்பது குறிக்கத்தக்கதாகும். மேலும் படைப்போர் இலக்கியங்கள் ஒரு குறிப்பிட்ட யாப்பமைப்பில் காணப்படவில்லை. சக்கூன் படைப்போர் கண்ணிகளாகவும், செய்யிதத்துப் படைப்போர் விருத்தப் பாக்களா கவும், சில நாட்டுப்புறப் பாடல்கள் போலவும் காணப்படுகின்றன. இவற்றையெல்லாம் காட்டிலும் பிறிதொரு முக்கிய இயல்பு

படைப்போர் இலக்கியம் வசன நடையிலும் இடம் பெற்றிருக்கும் நிலையாகும். சான்றாக செய்யிதத்துப் படைப்போர் வசன காவியத்தைக் கூறலாம். பெருமானார் நபி (சல்) அவர்களுடைய முதல் மாணவரின் மகனான அப்துல் ரகுமான் அவர்களுடைய வீர வாழ்க்கையை கருப்பொருளாகக் கொண்டதே இவ்வசன நூலாகும். இதனை இயற்றியவர் நெயினான் முகமது பாவலராவார். இதே கருப்பொருளைக் கொண்ட படைப்போர் இலக்கியம் ஒன்றும் குஞ்சு மூசுப் புலவரால் செய்யுள் நடையில் இயற்றப்பட்டுள்ளது. எனவே படைப்போர் இலக்கியங்கள் இன்ன குறிப்பிட்ட யாப்பமைதியைப் பெற்றிருக்க வேண்டுமென்றோ செய்யுள் நடையில்தான் அமைந்து வரவேண்டும் என்றோ கூறுதற்கியலாது. இவ்வியல்பு பரணி இலக்கியங்களிலிருந்து படைப்போர் இலக்கியங்களை பெரிதும் வேறுபடுத்துகிறது. பரணி இலக்கியம் தொடர்பாக பன்னிரு பாட்டியல் குறிப்பிடும் நான்கு நூற்பாக்களுள் முன் சொன்ன நூற்பா தவிர்த்த ஏனைய மூன்றில் ஒன்று 'பரணியின் கூறப்படுவன இவை எனல்' (பன்னிரு பாட்டியல் : 143) என்னும் தலைப்பிலும் இறுதி இரண்டும் 'பரணி பெறுந்திறம்' என்னும் தலைப்பிலும் (பன்னிரு பாட்டியல் : 144 : 145) காணப்படுகின்றன. இந்நூற்பாக்கள் பரணி இலக்கியத்திற்குரிய உள்ளடக்கம் பற்றிப் பேசுவனவாகும். பரணி இலக்கியத்துள் கடவுள் வாழ்த்து, கடைத் திறப்பு, காடு பாடியது, கோயில் பாடியது, தேவியைப் பாடியது, பேய்களைப் பாடியது, பேய் முறைப்பாடு, காளிக்குக் கூளி கூறியது, களம் பாடியது, கூழடுதல் முதலான பத்து உறுப்புக்களும் இடம் பெறுதல் வேண்டும். இவ்வுறுப்புக்களும் அவை சார்ந்தொழுகும் பொருள்களும் படைப்போர் இலக்கியங்களுள் காணப்படவில்லை. புறப்பொருள் இலக்கியமான பரணி இலக்கியங்களுள் கடைத்திறப்பு என்னும் பகுதி காதற்சுவை ததும்பும் சிறப்புடையதாக இருப்பதால் அகப் பொருட் சுவையையும் பரணி இலக்கியங்கள் பெற்றுவிடுகின்றன. ஆனால் படைப்போர் இலக்கியங்கள் முழுமையும் புறப்பொருள் சுவையுடனேயே விளங்குகின்றன. பெரும்பாலான படைப்போர் இலக்கியங்கள் நபி (சல்) அவர்களின் வாழ்வியலில் நடைபெற்ற போர் நிகழ்ச்சிகளையே மையமாகக் கொண்டுள்ளன. மேலும் பரணி இலக்கியங்களுக்கும் படைப்போர் இலக்கியங்களுக்குமிடையே உள்ளடக்கக் கருத்துக்களுக்குரிய காரணங்களிலும் வெளிப்பாடுகளிலும் மிகுந்த வேற்றுமைகள் காணப்படுகின்றன. பொதுவாக பரணி இலக்கியங்களில் இடம் பெறும் போர்களுக்குரிய காரணம் ஆதிக்க ஆசையும் பிற நாட்டின் மீது கொண்ட பகைமை வெறியுமாகவே உள்ளன. ஆனால் படைப்போர் இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கும் போர் நிகழ்வுகளுக்கு இறைவழிபாட்டுக் கொள்கை வேறுபாடுகளே காரணமாகின்றது. ஒன்றே இறை என்னும் இஸ்லாத்தின் வழிபாட்டு நெறி முறையை பகைவர்கள் ஏற்றுக் கொண்டவுடன்

அவர்கள் இழந்த நாடு அவர்களிடமே மீண்டும் ஒப்படைக்கப் படுகிறது. படைப்போர் இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கும் இச்செய்தி பரணி இலக்கியங்களிலிருந்து பெரிதும் வேறுபட்டுள்ளது. இன்னும் இலக்கியங்களுக்கு பெயரிடுவதிலும் கூட பரணி இலக்கியங்களிலிருந்து படைப்போர் இலக்கியங்கள் வேறுபட்டுள்ளன. போரில் வெற்றி பெற்றவனைப் புகழ்ந்து பாடுவதே பரணி இலக்கியங் களாயினும் போரில் தோற்றவனின் பெயரைச் சார்ந்திருப்பதே பெரும் பாலான பரணி நூல்களாகும். இதற்குச் சான்றாக சூரன்வதைப் பரணி, இரணியன் வதைப் பரணி, போன்றவற்றைக் கூறலாம். இன்னும் சில பரணி நூல்கள் கலிங்கத்துப் பரணி என்பது போன்று போர் நடைபெற்று வெற்றி பெற்ற இடத்தின் பெயர்களைப் பெற்றுள்ளன. ஆனால் படைப்போர் இலக்கியங்களுள் பெரும்பாலான போரில் வெற்றி பெற்றவர்களின் பெயரையே தலைப்பாகக் கொண் டுள்ளன. இன்னும் சில படைப்போர் இலக்கியத்திற்குரிய மையக் கருத்தை வெளிக்காட்டும் வகையில் நபுஸூ படைப்போர், (சூறாவளிப் படைப்போர்) எனப் பெயரிடப்பட்டுள்ளன. சில படைப்போர் இலக்கியங்களே போரில் தோல்வி பெற்ற மன்னர்களின் பெயரைத் தலைப்பாகப் பெற்றுள்ளன. போர்களின் மையக் கருத்தைத் தலைப் பாகக் கொண்ட எந்தவொரு பரணி நூல்களும் இல்லை. அதேபோல் போர் நிகழும் இடங்களின் பெயரைத் தலைப்பாகக் கொண்ட எந்தவொரு படைப்போர் இலக்கியங்களும் இல்லை. கடவுள் வாழ்த்துப் பகுதியில் கூட பரணி படைப்போர் இலக்கியங்களுக்கிடையே வேறுபாடுகள் காணப்படுகின்றன. பரணி நூல்களில் உள்ள கடவுள் வாழ்த்துக்கள் நூல் இனிது முடிதல் வேண்டும் என்ற முறையில் அமையவில்லை. இந்நூலினை இயற்றக் காரணமாயிருக்கும் பாட்டுடைத் தலைவன் பெருவாழ்வு வாழவேண்டும் என்ற அமைப்பில் காணப்படுகின்றன. ஆனால் படைப்போர் இலக்கியங்களில் எல்லாம் வல்ல அல்லாஹ்வின் பெருமைகளும், அவன் வழிவந்த இறைநேசச் செல்வர்களும் புகழ்ந்து பாடப்பட்டுள்ளனர். மேலும் பரணி இலக்கி யங்களில் உள்ள அதீதக் கற்பனைகளும் இன்பச் சுவைகளும் இஸ்லாத்திற்கு ஏற்றதாக இல்லாமலிருப்பதால் படைப்போர் இலக்கி யங்களில் அவற்றிற்கு முஸ்லிம் புலவர்கள் இடமளிக்கவில்லை. எனவே போர் நிகழ்ச்சிகளைப் பாடுவதால் என்ற ஒரு நிலையில் மட்டுமே பரணி இலக்கியங்களை படைப்போர் இலக்கியங்கள் ஒத்துள்ளனவேயன்றி பிற உருவ உள்ளடக்கங்களில் பெரிதும் வேறு பட்டிருப்பதால் படைப்போர் இலக்கியங்களை பரணி இலக்கியங் களிலிருந்து வேறுபட்ட புதிய இலக்கிய வடிவமாகக் கொள்ளலாம். இப்படைப்போர் இலக்கியங்கள் இஸ்லாமியக் கருத்துக்கள் அல்லாத வேறு நிலைகளில் காணப்படாததால் இவற்றை 'புதுவகை இஸ்லாமியத் தமிழிலக்கிய வடிவம்' என்றே குறிப்பிடலாம்.

**மூலநூல் :**

அறபு மொழியில் 'கிதாபுல் மகாசி' என்னும் நூல் முகமது இப்னு உமருல் வாக்கிதி என்பவரால் இயற்றப்பட்டுள்ளது. கிதாபுல் மகாசி என்பதன் பொருள் போர்களின் நூல் என்பதாகும். இது பெருமானார் நபி (சல்) அவர்கள் நிகழ்த்திய போர்களை விரித்துரைக்கிறது. இந்நூலே முஸ்லிம் புலவர்களுக்கு படைப்போர் என்னும் புதுவகை தமிழிலக்கியங்களை உருவாக்குதற்கு தூண்டுதலாக இருந்தது எனலாம். இதன் அடிப்படையில் இஸ்லாமிய வரலாற்றில் எதிர் கொண்ட பல போர் நிகழ்ச்சிகளையும் படைப்போர் என்னும் இலக்கிய வடிவத்தில் அடிப்படையில் முஸ்லிம் புலவர்கள் விவரித்துள்ளனர். இதுவரையில் படைப்போர் இலக்கிய வடிவத்தின் அடிப்படையில் பதின்மூன்று இலக்கியங்களை இஸ்லாமியத் தமிழிலக்கியம் பெற்றுள்ளது. இவற்றுள் முதற்கண் தோன்றிய பெருமையைப் பெறுவது சக்கூன் படைப்போர் என்னும் இலக்கியமே ஆகும். ஏனையன சையிதத்துப் படைப்போர், இரவு சுல்கூல் படைப்போர், காஸீம் படைப்போர், உசைன் படைப்போர், இபுனியன் படைப்போர், உச்சி படைப்போர், வடோச்சி படைப்போர், தாகி படைப்போர், இந்திராயன் படைப்போர், நபுஸு படைப்போர், மலுக்கு முலுக்கின் படைப்போர், சூறாவளிப் படைப்போர் என்பனவாகும். இனி சக்கூன் படைப்போர் பற்றிய கருத்துக்களைக் காண்போம்.

**கதை :**

சக்கூன் படைப்போர் முஸ்லிம் அல்லாத கூட்டத்திற்கும் முஸ்லிம் கட்கும் நடைபெற்ற போரினையே விவரிப்பதாகும். சக்கூன் என்பவன் முஸ்லிம் அல்லாதவர்களின் கூட்டத்திற்கு தலைவனாவான். இது பெருமானார் நபி (சல்) அவர்கள் காலத்தில் நடைபெற்ற போர் களுள் ஒன்றாகும். முஸ்லிம் அல்லாத அரசனான சக்கூன் இறாக் நாட்டின் அரசனாக இருந்தவன். அவனிடத்து பெருமானார் நபி (சல்) அவர்கள் இஸ்லாத்தின் ஏகத்துவ இறைவழிபாட்டு நெறிமுறை களை வலியுறுத்த வேண்டி மேற்கொண்ட முயற்சியின் பயனாகவே போர் நிகழ்கிறது. போரில் சக்கூன் தோற்கடிக்கப்பட இறுதியில் சக்கூனும் அவனது கூட்டத்தாரும் நபி (சல்) அவர்களுக்கு கீழ்ப் படிந்து இஸ்லாத்தின்மீது ஈமான் கொண்டு முஸ்லிமாக மாறுகின்றனர். இறுதியில் இஸ்லாத்தின் ஏற்றத்தை சக்கூனும் அவனைச் சார்ந்தவர் களும் ஏற்றுக்கொண்டதால் அவன் இழந்த நாட்டினை அவன் வசமே மீண்டும் ஒப்படைத்து அவனையே அரசனாக இருந்து இஸ்லாத்தின் வழியில் ஆட்சி புரியும்படி செய்வித்தார்கள் நபி (சல்) அவர்கள். இதுவே சக்கூன் படைப்போரின் கதையம்சமாகும்.

**ஆசிரியர் :**

சக்கூன் படைப்போர் மதுரை நாளெட்டில் வென்றானென்றும் பீர்கானென்றும் வழங்காநின்ற முகம்மதுப் புலவரவர்கள் குமாரர் வரிசை முகியித்தீன் புலவரவர்களால் இயற்றப்பட்டதாகும். இவ்விலக்கியம் முதன் முதலில் காயற்பட்டினம் கண்ணகுமதுமகுதூ முகம்மது புலவரவர்களால் பார்வையிடப்பட்டு ஏ. குப்புசாமி நாயுடு அவர்களால் 1908 ஆம் ஆண்டு தமது சென்னை கருணாநிதி அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

சக்கூன் படைப்போரின் காப்புவெண்பா செய்யுளிலேயே ஆசிரியர் நபி பெருமானார் (சல்) அவர்கள் சக்கூனை வென்ற கதை இஃது என்பதை கூறுகிறார்.

பொன்னுலகு கண்டநபி போர் பொருது சக்கூனை
இந்நுலுகில் வென்றகதை யான்பாட—முன்னூல்கள்
பூணவரிதான பொற்புள தெல்லாம் படைத்துங்
காணவரி தாகிநின்றோன் காப்பு
(சக்கூன் படைப்போர் : காப்பு-வெண்பா)

**கடவுள் துதி :**

இக்காப்புச் செய்யுளைத் தொடர்ந்து கடவுள் துதி என்ற தலைப்பில் முதல் பத்து கண்ணிகள் அமைந்துள்ளன. இக் கண்ணிகள் அல்லாஹ்வின் பெருமையினையும் அவனது ஆற்றல்களையும் தெள்ளத் தெளிவாக எடுத்துரைப்பனவாக உள்ளன.

வானும்புவியு மலைகடலுஞ் சந்திரனும்
பானுமுடுவும் பனிமுகிலுங் காற்றதுவும்
அறுசுகுறுசுலவ்கு அம்கலம் சுவர்க்கம் நரகம்
வரிசை மலக்குகளு மண்ணிலுள்ள மாந்தர்களும்
தேவு சயித்தானும் ஜின்களொடு ராட்சதரும்
மேவு பறவைகளும் விலங்கினமு மூர்வனமும்
எல்லாம் படைத்தே யிரணமிக ஈபவனே
அல்லா வேயுன்றன் அருளுதவி செய்வாயே
மக்காபுரத்தார் முகம்மதுற்றசூல் நயினார்
சக்கூனை வென்ற சரித்திரத்தை யான் பாட
எக்காலுமுள்ள வேகனே காத்தருள்வாய்.
(கடவுள் துதி : வரி 1-11)

ஆசிரியரின் இவ்வரிகள் அல்லாஹ்வின் படைப்பாற்றல் திறத்தையும் என்றும் அழிவில்லாத தன்மையையும் எடுத்துக் காட்டுகின்றன. இதில் மூன்றாம் வரியில் ஆசிரியர் குறித்துள்ள 'அறுசு குறுசு' என்பன இஸ்லாத்தில் அதி உன்னத முக்கியத்துவம் பெறுவதாகும்.

அறுசு என்னும் அறபுச் சொல்லின் பொருள் சிம்மாசனம் என்பதாகும். எல்லாம் வல்ல அல்லாஹ் இங்கிருந்தே அகில அண்ட கோளங்களுக்குமான ஆணைகளை பிறப்பிக்கின்றான். படைப்புக்கள் அனைத்தும் இதில் அடங்கியிருக்கின்றன. அர்ஷ் பற்றி அல்லாஹ் அல்குர்ஆனில் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளான். ஒரு ஆயத்தில் ('மனிதர்களே') உங்கள் இறைவனாகிய அந்த அல்லாஹ் தான் வானங்களையும் பூமியையும் ஆறு நாட்களில் படைத்து, 'அர்ஷின்' மீது தன் ஆட்சியை நிலை நாட்டினான். (இவை சம்பந்தப் பட்ட) சகல காரியங்களையும் அவனே திட்டமிட்டு நிர்வகித்தும் வருகின்றான். (10 : 3) என்று குறிப்பிட்டுள்ளான். இதே கருத்தை அடுத்த பதினோராவது அத்தியாயத்தில் ஏழாவது திருவசனம் 'அவன் தான் வானங்களையும் பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான் (அச்சமயம்) அவனுடைய அர்ஷு நீரின் மீதிருந்தது' எனக் குறித் துள்ளது. மேற்குறித்த அல்குர்ஆனின் பத்தாவது அத்தியாயம் மூன்றாவது திருவசனத்தையே மீண்டும் அல்லாஹ் 20-வது அத்தி யாயம் நான்கு ஐந்தாவது திருவசனங்களிலும் உறுதிப்படுத்தி யுள்ளான். எனவே அர்ஷு என்பது அல்லாஹ்வின் சிம்மாசனம் என்ற பெருமையையும் சிறப்பையும் பெறுவதாகும். குர்ஸ் என்பது இறைவன் படைத்துள்ள எட்டாவது வானத்தின் பெயராகும். அல்லாஹ் ஒன்பது வானங்களைப் படைத்துள்ளான். அவற்றுள் முதல் இரண்டு வானங்களும் முறையே இறை நம்பிக்கையாளர்களின் ஆன்மாக்களுக்காகவும், தன்னை வணக்கம் செய்பவர்களின் ஆன்மாக் களுக்காகவும் அமைக்கப்பட்டுள்ளன. மூன்றாவது வானம் துறவி களின் ஆன்மாக்கள் தங்குமிடமாகும். நான்காவது வானம் ஞானி களின் ஆன்மாக்களுக்குரியது. ஐந்தாவது, ஆறாவது வானங்கள் நபிமார்களின் ஆன்மாக்களுக்காக ஏற்படுத்தப்பட்டது. ஏழாவது வானம் இறசூல்மார்களின் ஆன்மாக்களுக்குரியதாகும். இதற்குமேல் உள்ள எட்டாவது வானமே 'குர்ஸு' என்று அழைக்கப்படுகிறது. இது உலுல் அஸ்மியான நபிமார்களின் ஆன்மாக்கள் தங்குமிடமாகும். உலுல் அஸ்ம் என்பதன் பொருள் துணிந்தவர்கள் என்பதாகும். உலகில் தோன்றிய 124000 நபிமார்களுள் மூஸா (அலை), இப்றாகீம் (அலை), நூஹு (அலை), ஈஸா (அலை), முகம்மது நபி (சல்) ஆகிய ஐவரையும் 'உலுல் அஸ்ம்' என்று குறிக்கப்படுகிறது. நபிமார் களுள் முதன்மைத் தகுதி பெறுபவர்களும் இவர்களே ஆவர். இவர் களது ஆன்மாக்களுக்காக படைக்கப்பட்ட வானமே குர்ஸ் எனப் படுகிறது. இதற்குமேல்தான் அல்லாஹ்வின் சிம்மாசனமான 'அர்ஷ்' எனப்படும் ஒன்பதாவது வானம் உள்ளது. இவ்விரண்டினையுமே இங்கு வரிசை முகையத்தீன் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

இறைத் துதியைத் தொடர்ந்து நந் நபியினடிமலரையும், வள்ளல் அபூபக்கர் சித்தீக் (றலி), உமறு கத்தாபு (றலி) ஆகியோரின் திருவடிகளையும் போற்றுகின்றார் ஆசிரியர். அத்துடன் இறைநேசச் செல்வர்களான பகுதாது வாழ் செய்யிது முகியித்தீன் முதலானவர் களையும் நினைவுகூர்ந்து

அறிவையறியாத வடியேனென் பாடலிலே
நிறையும் பிழையகற்றும் நிலையார் பெரியவரே

என முதல் இருபது கண்ணிகளில் வரிசை முகியத்தீன் புலவர் தமக்குச் சக்கூன் படைப்போர் பாடுதற்கு நல்லருள் புரியுமாறு பல்லோரையும் வேண்டுகின்றார். இவ்வாறு வேண்டுதல் நிகழ்த்தியபின் ஆசிரியர் தான் சார்ந்த ஊரினைப்பற்றியும் தம் முன்னோர்களைப் பற்றியும் கூறுகின்றார்.

வைகைநதி பூரணமாய் வளமோடு சூழ்ந்த நல்ல
செய்கையுள்ள கூடற் றிருநகர்க் கதிபதியாய்
வாழுமிசுலானுடைய மைந்தன யினானுதவும்
ஆளும் நயினார் தமக்கும் அன்பான புத்திரனாம்
மிக்கபுகழுடைய மீறான் மனமகிழ்ந்து
அக்கனுதவியினா லநேகங் கொடை கொடுத்து
சந்தோஷமாகத் தான்பாடி கேட்டதனாற்
சிந்தாகுலந்தவிரச் செப்பினேனிக் கதையை

(சக்கூன் படைப்போர் : கடவுள்துதி கண்ணி : 21-24)

நூலின் இவ்வகச் சான்றுகளிலிருந்து புலவர் மதுரையைச் சேர்ந்தவர் என்பது பெறப்படுகிறது. மேலும் நயினார் என்பவரின் புத்திரரான மிக்க புகழுடைய மீறான் என்னும் பெரியார் மனமகிழ்ந்து அல்லாஹ்வின் உதவியினால் பல கொடை கொடுத்தே வரிசை முகியித்தீன் புலவரை சக்கூன் படைப்போர் பாடச் செய்துள்ளார் என்ற செய்தியையும் அறிய முடிகிறது. தாம் சக்கூன் படைப்போர் இயற்றப் பொருளுதவி செய்த புரவலரைப் பெருமைபடுத்தும் வகையிலேயே ஆசிரியர் நூலின் முகப்பிலேயே மீறான் அவர்களைப்பற்றிக் குறித்துள்ளார்

**காலம் :**

நூலின்கண் அகச் சான்றுகளுள் புரவலர் பற்றிக் குறிப்பிடும் கண்ணிகளுக்கு அடுத்த நிலையில் உள்ள கண்ணிகள் சக்கூன் படைப் போரின் காலத்தைத் தெளிவாக வரையறை செய்கின்றன.

வல்லநயினார் மாமதீனமூர் போகச்
செல்லுமாண்டாயிரமுஞ் செப்புந் தொண்ணூற் றெட்டதிலே
அச்சய வருடமதிலானதிங்க ளாவணியில்—
இச்சை கொளுந் தெய்தி யிருபத்தைந்தானதிலே
மெத்த புகழ் பெருகும் வெள்ளிக்கிழமை யன்று
குத்து பாப்பின்னர் கூறினேனற் தமிழால்
நூறுத்தீனென்பவரி னோக்க முறுமைந்தனல்ல
மீறிசுமாயில் விளங்கப் படித்திருந்த
விருத்தத்தை வேண்டாவை மேதினியிலே தெளிவாய்த்
திருத்தமுடன்தனைச் சேர்த்தேன் தெரிந்தெடுத்து
பெரியோனுதவியினாற் பீருகானின் புதல்வன்
வரிசை முகியித்தீன் மகிழ்வாகப் பாடினனே.
(சக்கூன் படைப்போர் : கடவுள் துதி : கண்ணி 25-30)

இவ்வரிகள் சக்கூன் படைப்போர் இயற்றப்பட்டது ஹிஜ்ரி 1098ஆம் வருடம் என்பதை தெளிவாக உணர்த்துகின்றன. ஹிஜ்ரி ஆண்டான இதற்கு இணையான கிறித்துவ வருடம் 1686ஆகும். வருடத்தைக் குறித்ததற்குப்பின் ஆசிரியர் மாதம், தேதி, கிழமைகளையும் நமக்கு உணர்த்துகின்றார். நூலின் அகச் சான்றுகளின்படி 1686ஆம் வருடம் ஆவணி மாதம் இருபத்தியைந்தாம் தேதி வெள்ளிக்கிழமை நண்பகல் நேர குத்துபா தொழுகைக்குப் பின்னரே வரிசை முகியித்தீன் புலவரவர்கள் சக்கூன் படைப்போரை அரங்கேற்றம் செய்துள்ளார். எனவே சக்கூன் படைப்போர் இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றில் கால அடிப்படையில் கனகாபிஷேகமாலைக்கு அடுத்துள்ள எட்டாவது இடத்தைப் பெறுகிறதெனலாம். கனகாபிஷேகமாலை தோன்றிய காலத்திற்குப்பின் முப்பத்தெட்டு ஆண்டுகள் கழிந்த பின்னரே சக்கூன் படைப்போர் தோன்றியுள்ளது. இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றில் காலத்தால் எட்டாவது இடத்தைப் பெரினும் படைப்போர் இலக்கிய வடிவங்களுக்கு முன்னோடியான முதன்மை இடத்தை சக்கூன் படைப்போர் பெறுகிறது. எனவே ஒரு புதுவகை இலக்கிய வடிவத்தை தமிழிலக்கிய உலகிற்கு அறிமுகம் செய்வித்த பெருமை வரிசை முகியித்தீன் புலவரையே சாரும்.

**கதையோட்டம் :**

சக்கூன் படைப்போரின் முதல் முப்பது கண்ணிகள் நிறைவு பெற்ற பின்பே முப்பத்தோராவது கண்ணியிலிருந்தே சக்கூன் படைப்போரின் கதையோட்டம் தொடர்கிறது. சக்கூன் படைப்போரில் மொத்தம் எண்ணூற்று எண்பது கண்ணிகள் அமைந்திருப்பினும் முதல் முப்பது கண்ணிகள் நூலின் கதைப் பகுதியுடன் நேரடியானத் தொடர்புடையதன்று. இனி சக்கூன் படைப்போரின் உள்ளடக்கத்தை விரிவாகக் காண்போம்.

சக்கூன் படைப்போரின் தொடக்கம் இவ்வாறு உள்ளது.

பாருலகில் வல்ல பயகாம்பர் தாமிருந்து
சீருடனே யெங்குந் தீனிசுலாந்தான் வளர
நன்மையது வளர நற்புகழேயோங்கி வரத்
திண்மையகல வெகு திட்டாந்தரங்கள் செய்தார்
நாயனருளாலே நபிப்பட்டந் தானிரங்கி
தூய ஜிபுரீலுந் தூதுநிதம் வந்து சொல்ல
இயல்பாகக் காபிர்களை யெங்குங் கருவறுத்துப்
பயகாம்பர் தீனைப் பயிரேற்றும் நாளையிலே.

(கண்ணி : 1-4)

என குறித்திருப்பதின் மூலம் சக்கூன் படைப்போர் நடைபெற்ற காலக் கட்டத்திற்குரிய பின்புலத்தை ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். பெருமானார் நபி (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் வந்து தீனுல் இஸ்லாத்தை வளர்த்துவரும் காலக் கட்டத்திலேயே சக்கூன் படைப்போர் நடைபெற்றிருக்க வேண்டும். சக்கூன் படைப்போர் நபி (சல்) அவர்கள் தம் வாழ்வில் இஸ்லாத்தைப் பரப்புவதற்காக மேற்கொண்ட போர் எனக் குறிப்பிடும் ஆசிரியர், எப்பொழுது நடைபெற்றது என்பதை கால வரையறை செய்து காட்டவில்லை. ஆனால் நபிப்பட்டம் பெருமானார் நபி (சல்) அவர்களுக்கு வந்ததற்குப் பின் என்று குறித்திருப்பதிலிருந்து பெருமானார் நபி (சல்) அவர்களின் நாற்பதாவது வயதிற்குப் பின்பே சக்கூன் படைப்போர் நிகழ்வுற்றிருக்க வேண்டும். ஏனெனில் அண்ணலெம் பெருமானார் (சல்) அவர்களுக்கு நபிப் பட்டம் அல்லாஹ்வால் அருளப்பட்டது அவர்களின் நாற்பதாவது வயதிலேயே ஆகும். எனவே இஸ்லாமிய வரலாற்றுத் துவக்கமான ஹிஜ்ரி ஆண்டுத் துவக்கத்திற்குப் பின்னரே சக்கூன் படைப்போர் பெருமானார் நபி (சல்) அவர்களின் வாழ்வில் நடைபெற்றிருக்க வேண்டும்.

**முன்மாதிரியான நபி (சல்) :**

பெருமானார் நபி (சல்) அவர்களது வாழ்வியல் நிகழ்வுகள் ஒவ்வொன்றும் அல்லாஹ்வின் மேலான கட்டளைகளுக்கிணங்கவே நடைபெற்றிருக்கின்றன. இறைமொழி பெற்று நபி (சல்) அவர்கள் அல்லாஹ்வின் வழி தம் செயல்கள் அனைத்தையும் மேற்கொண்டதால் அவர்கள் ஈடுபட்ட காரியங்கள் அனைத்தும் பெரும் வெற்றியாக முடிந்தது. உலகுக்கு ஓர் முன்மாதிரியாகவே நபிகள் நாயகம் (சல்) அவர்களின் வாழ்வியலை உலகுக்கு அல்லாஹ் அமைத்துக் காட்டியதால் அன்னாரின் வாழ்வில் எந்தவொரு செயலும் அல்லாஹ்வின்

முன்னறிவிப்புடனேயே நடைபெற்றது. இதற்கேற்பவே சக்கூன் படைப்போருக்குரிய முன்னறிவிப்பும்கூட அல்லாஹ்விடமிருந்து வருவதாகவே வரிசை முகியித்தீன் புலவர் குறிப்பிட்டுள்ளார். நபி (சல்) அவர்களுக்கு அல்லாஹ்வின் கட்டளைகள் அனைத்தையும் அருள்பவர் இறைத்தூதர் ஜிப்றயீல் (அலை) அவர்களே ஆவார். அதற்கேற்பவே சக்கூன் படைப்போர் பற்றிய அறிவிப்பையும் ஜிப்றயீல் (அலை) அவர்கள் பெருமானார் நபி (சல்) அவர்களுக்குக் கூறுகின்றார்கள்.

வல்லவன்றன் றூதர் முகம்மதுற்றசூல் நயினார்
நல்ல அசுகாபியவர் நாற்பத்தீரா யிரரும்
வானமதிதன்னை வான்மீன்கள் சூழ்ந்ததுபோல்
ஈனந்தனையகற்றி யெழில் நெறிகள் சொக்கையிலே
வானோர் ஜிபுரீல்தான் வல்லான்றிருநபி முன்
நானமுடன் வந்திறங்கி நம்மாதிதானுரைத்தே
துய்யசலாமெனவே துரிதவகையையுரைத்தங்
கையமில்லாதவன் சொல் லதைக்கேளும் நந்நபியே
இந்தப் புவியி லிறாக்கென்னு மண்டலத்தில்
அந்தமாரும் மலையொன்றதின் மேலொரு கோட்டை
முப்பதின் காதவழி முதுபுரிசையின்னீட்டஞ்
செப்பமுடன் காதஞ் சிறப்பா யெழுபதுண்டும்
இக்காத மொன்றாழ மிலங்குமதிலுயரம்
மிக்கான கொத்தளங்கள் மிகுதிபதினாயிரமாம்
அந்தப் பூமிதன்னி லதிபதி சக்கூனரசன்
சிந்தைக் குரியனல்ல ஜின்பதினான் காயிரங்கள்
பாயும் புரவிகளும் பதினாறிலக்க முண்டுஞ்
சேயுமரசனுக்குத் திறலுடையோர் நால்வருண்டும்
வல்ல படைத்தலைவன் மகாபலஅு சுனாபிலுண்டும்
சொல்லரிய சக்தியுள்ள சூரரொரு நால்வருண்டும்
இவ்வுலகின் மன்ன ரிவற்கெதிரி யாருமில்லை
அவ்வரசன் பாரி லாண்மையுடனே நடந்து
சென்று குபிர் களைந்து தீன் பயிரங்கேற்று மென்றார்

(கண்ணி 34-46)

இங்கு சக்கூன் அரசன் பற்றியும் அங்கு சென்று இஸ்லாத்தின் ஏற்றம் கூறி தீன் பயிரங்கேற்றும் என்றும் கூறும் ஜிப்றயீல் (அலை) அவர்கள் சக்கூன் அரசன் பற்றிய விவரங்களையும் அவனது படைத்திறமை களையும் வலிமைகளையும் கூறுவதாக உள்ளது. ஜிப்றயீல் (அலை) அவர்களின் கூற்றின் மூலமாகவே சக்கூனரசன் இறாக் நாட்டினைச் சார்ந்தவன் என்பது பெறப்படுகிறது. மேலும் சக்கூன் படைப்

போரில் முக்கியமாக சக்கூனரசன் பொருட்டு தலைமையேற்று போர் செய்யும் படைத்தளபதி சுனாபீல் மற்றும் சக்கூனரசனுடைய புதல்வர்கள் நால்வரையும் ஆசிரியர் சக்கூன் படைப்போரின் ஆரம்பத்திலேயே ஜிப்றயீல் (அலை) அவர்களின் கூற்றின் மூலமாகவே அறிமுகம் செய்வித்து விடுகின்றார். சக்கூன் அரசனுடைய படை வலிமையை படிப்போர் உணரத்தக்க விதத்தில் அவற்றின் வர்ணனைகள் அமைந்திருப்பதால் பெருமானார் நபி (சல்) அவர்கள் எதிர்கொள்ளப்போகும் பகைவருடைய படை வலிமையையும் முன்னறிவிப்புச் செய்து விடுகின்றார் வரிசை முகியித்தீன் புலவர். அத்துடன் ஜிப்றயீல் (அலை) அவர்கள் கூறும் 'இவ்வுலகின் மன்னர் இவருக்கெதிரி யாருமில்லை' என்னும் கூற்றும் அத்தகையோனை எதிர்த்துத் தீன் பயிர் அங்கு ஏற்றுக என்னும் கட்டளையையும் நிகழப்போகும் போர்ச் சிறப்பையும், நபி (சல்) அவர்களின் போர் வலிமையையும் உணர்த்துவதாக உள்ளது. போர் படைகள் பல பெற்றும், நாட்டில் உள்ள மன்னர்கள் அனைவரும் வணங்கத்தக்க பெருமை பெற்றவனாயினும் சக்கூனரசன் இஸ்லாத்திற்கு முரணான இறைவழிபாட்டு நெறிமுறைகளை பின்பற்றி வந்ததால் ஜிப்றயீல் (அலை) அவர்கள் அவன் பற்றிக் கூறும்போது 'சிந்தைக் குரியனல்ல' என்று கூறுவதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். மேற்சொன்ன ஜிப்றயீல் (அலை) அவர்களின் கூற்றின் இறுதியில் 'குபிர் களைந்து தீன் பயிரங்கேற்றும்' என்னும் அடியில் உள்ள குபிர் என்பதன் நேர் பொருள் உண்மை மறைத்தல் என்பதாகும். எனினும் குப்ர் என்பது அல்குர்ஆனில் அல்லாஹ்வை மறைத்தல், நிராகரித்தல் என்னும் பொருளில் பயன்பட்டுள்ளது. அல்லாஹ் ஒருவனேயன்றி வேறில்லை என்பதைக் கேட்டவர்கள் சிலர் அதனை வார்த்தையால் கூட ஏற்றுக் கொள்ளாது எதிர்ப்புக் குரல் எழுப்பி விடுவார்கள். அவர்கள் இறை ஒன்றே என்பதற்கு எதிராக வன்முறையிலும் கூட இறங்கத் தயங்கமாட்டார்கள். அத்தகையோர்கள் 'குப்ர் ஜஹித்' என அழைக்கப்படுவார்க்ள். இறை ஒன்றே என்பதற்கு எதிர்ப்புக் காட்டும் இத்தகைய குப்ரை எதிர்த்து நிற்குமாறு அல்லாஹ் கூறுகின்றான். எனவே இதற்கேற்பவே அல்லாஹ்வின் கட்டளைகளை இவ்வுலகில் நடைமுறைப் படுத்த அனுப்பி வைக்கப்பட்ட நம் நபி பெருமானாருக்கும் சக்கூன் அரசனுடைய குப்ர் அகற்றும்படியான கட்டளையை ஜிப்றயீல் (அலை) அவர்கள் தெரிவித்தார்கள்.

ஜிப்றயீல் (அலை) அவர்களின் கட்டளையை கேட்டவுடன் அல்லாஹ்வின் ஆணைதனை சிரம் தாழ்த்தி ஏற்று மனம் மகிழ்ந்து காபிர்களைக் களைந்தெறியவேண்டி வீரர்கள் திரண்டு வரும்படி பறைசாற்ற நந்நபி நயினார் அவர்கள் கட்டளை பிறப்பித்தார்கள். அவர்களின் கட்டளையை பறைசாற்றக் கேட்ட அசுகாபிமார்கள் நபி

பெருமானார் (சல்) முன் வந்து குவிந்தார்கள். அவ்வாறு வந்தடைந்த வீரர்களுள் முக்கியமான சிலரும் அடங்குவர்.

அவ்விசளங்கேட்டு யார்களசுகாபிகளும்
ஆலநபிமாமர் அபூபக்கரு முமறும்
சீலநபிமருகர் திருவுதுமானும்மலியும்
வீராதிவீரர்களும் திறலசுகாபிமாரும்
தீராதிநந் நபிமுன் சென்றார்களப்போது

(கண்ணி : 51-53)

**நான்கு யார்கள் :**

இங்கு குறிப்பிடப்பட்டிருக்கும் அபூபக்கர் (றலி) அவர்களும் உமறு (றலி) அவர்களும் இஸ்லாத்தின் ஆட்சியை இவ்வுலகில் நபி (சல்) அவர்கள் நிலைபெறச் செய்து மறைந்தபின் இஸ்லாமிய நெறியில் ஆட்சி செலுத்திய முதல், இரண்டாவது கலிபாக்களாவர். இதுபோல் உதுமான் (றலி) அவர்கள் மூன்றாவது கலிபாவாகவும் அலி (றலி) அவர்கள் நான்காவது கலிபாகவும் இருந்து ஆட்சி புரிந்தவர்களாவர். இவ்வாறு கலிபாவாகத் திகழ்ந்த நால்வரும் ஏனைய அசுகாபிமார் களும் பெருமானாரின் அறிவிப்பைக் கேட்டு அவர்களை வந்தடைந்து சூழ்ந்தனர். அவர்களிடத்து நபி (சல்) அவர்கள் அல்லாஹ்வின் கட்டளையை ஜிப்றயீல் (அலை) அவர்கள் அறிவித்த செய்தியனைத் தையும் உரைத்தார்கள்.

ஒன்றான ஜிபுரியிலிங் குரைத்தவிசளமெல்லாம்
வகைவகையாய்ச் சொல்ல மகிழ்ந்தார்கள் யார்களெல்லாம்
பகையான காபிர்கள்மேற் படைநடத்த வேண்டுமென்று
நான்கியார்கள் தாமும் நயினார் முகம்மதுடன்
தீன்புகுதும் நல்ல திறலசு காபிகளும்
மொழியு முப்பத்து மூவாயிரம் பரியும்
வழியிற் பிசகாத வரிசை வணக்கத்தோடும்
அருந்தவங்கள் செய்யு மலியார் குமாரர்களும்
பெருந்தனமாய்ச் சேரப் புறப்பட்டார் எல்லோரும்.

(கண்ணி : 55-57)

நான்கியார்கள் என்பது மேற்சொன்ன நான்கு கலிபாக்களையே குறிப் பதாகும். அசுகாபிமார்கள் என்பது அண்ணல் நபி (சல்) அவர்கள் தோழர்களைக் குறிப்பதாகும். பெருமானார் (சல்) அவர்களுடன் பழகியவர்களின் ஒருவரைக் குறிப்பதற்கு சகாபி என்பதும் பலரைக் குறிப்பதற்கு அசுகாபி என்ற சொல்லும் பயன்படுத்தப்படுகிறது. ஆனால் ஈத் இபுனுல் மௌஷியா (Id-ibnul Musaiya) குறிப்பிடும் பொழுது அசுகாபி என்பது பெருமானார் (சல்) அவர்களுடன் பழகிய

வர்களுள் ஒரு வருடமும் அதற்கும் மேற்பட்ட நிலையிலும் பழகியவர் களையும் நபி (சல்) அவர்களுடன் இஸ்லாத்தைப் பரப்புவதற்காகப் போர்க் களத்தில் பங்கு பெற்றவர்களையுமே குறிக்கும் என்று கூறப் பட்டுள்ளது. இதற்கேற்ப சக்கூன் படைப்போரில் பெருமானாருடன் பங்குபெறப் போவோரையும் வரிசை முகியித்தீன் புலவர் அசுகாபிகள் என்ற சொல்லின் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

**போர்ச் சிறப்பு** :

இவ்வாறு அனைவரும் சக்கூன் அரசனை எதிர்ப்பதற்காக புறப் பட்டபின் அவர்கள் சென்ற வழியையும் பெருமானார் (நபி) அவர் களுடன் சென்ற போர்ப்படைகள் பற்றிய வர்ணனையையும் ஆசிரியர் பல கண்ணிகளில் விரிவாக எடுத்துக் காட்டியுள்ளார்.

வில்லோடு வில்லிடற வேலோடு வேலிடற
லல்லாதயுதங்க ளெல்லாம் வானமீன் போற்றுலங்க
வாசிவிதம் விதமாய் வாகுநடை செய்துவரத்
தூசி மிகவெழும்பிச் சூரியனைப் போய்மறைக்க
தோழர் மிக மகிழச் சுபமங்கலங் கூறிவர
வாழும்வானோர் சுற்றிவர மன்சலாத் தோதிவர
சேனைமிக மகிழச் சிங்கக்கொடி பிடிக்கத்
தானைமிக மகிழத் தகுலீற்றசுபீ குரைக்க

(கண்ணி : 62-65)

போருக்குச் செல்லும் சேனைகளைக் கூறும்போது 'தகுலீற்ற சுபீகுரைக்க'ச் சென்றனர் எனக் கூறப்பட்டுள்ளது. தகுலீல், தசுபீகு ஆகிய இரு சொற்களும் அறபு மொழியாகும். ஆழ்ந்த பொருள் உடையனவாகும் இவ்விரு சொற்களும். அறபியில் தஹ்லீல் என்பது அல்லாஹ் இன்றி வேறு தெய்வமில்லை என்று பொருள்படும் 'லாயிலாக இல்லல்லாஹ்' என்னும் அறபுச் சொற்றொடரை உச்சரித்தலை உணர்த்துவதாகும். இவ்வறபுச் சொற்றொடரே இஸ் லாத்தின் மூல மந்திரம். இதுவே இஸ்லாத்தில் முதல் கலிமா என அழைக்கப்படுகிறது. தசுபீகு என்பது அல்லாஹ்வை புகழுதல் என்று பொருள்படும். முஸ்லிம்கள் எந்தவொரு சிறு காரியத்திலும் ஈடு பட்டால் தகுலீல், தசுபீகு ஆகிய இரண்டினையும் சொல்லல் வேண்டும். அதற்கேற்பவே சக்கூன் அரசனை எதிர்க்கச் செல்லும் பெருமானார் (சல்) அவர்களின் படை வீரர்கள் இஸ்லாத்தின் மூல மந்திரத்தை முழங்கிக் கொண்டும் அல்லாஹ்வை துதி செய்துகொண்டும் சென் றார்கள் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

இத்தகு முறையில் படை வீரர்களை பெருமானார் நபி (சல்) அவர்கள் நடாத்தி வரும்போது கடல் ஒன்று எதிர் திசையில் வழி மறிக்க எப்படிச் செல்வது என்று திகைப்படைந்தார்கள்,

சேனையோடு நந்நபிதாந் திரண்டுவரும் வழியில்
தானைமுக முடைய சமுத்திரமொன்றங்கு கண்டார்
பார்த்தார் வழிகள் பலதிக்குங் காணாமல்
வேர்த்துத் தவித்தார் வேதாம்பர் தம்முடையோர்
திக்குதிசை காணாமற் றிருமுகங்கள் தான் வாடி
அக்கனருளென்றங் காலநபிதா மிருந்தார்

(கண்ணி : 75-77)

அண்ணல் நபி (சல்) அவர்களின் ஏக்கமும், தயக்கமும் இறையருளால் நீக்கப்பெற்றபின் சக்கூனரசனிருக்குமிடத்தை அடைந்தார்கள். பின் நபி (சல்) அவர்கள் முறையாக சக்கூனிடத்து தூதுவரை அனுப்பி மிக்கான இஸ்லாத்தின்மேல் ஈமான் கொள்ளும்படி வேண்டுகோள் விடுத்தார்கள்.

அந்தச் செய்தி சொல்ல வங்கொருத் தரையழைத்துச்
சந்தமணிப் புயத்தான் சக்கூன் முகத்தினிற்போய்
சென்று நமதுடைய தீனிலேதானழையும்
நன்று கலிமாவை நான் மொழியே னென்றானேல்
நாளைப் போரென்றே நடந்திங்கண் வாருமென்றார்

(கண்ணி : 131-133)

இவ்வாறு நபி (சல்) அவர்கள் தூதனுப்பும் செய்தியை தெரிவிப்பதற்கு முன்னர் ஆசிரியர் சக்கூனரசனது படை வலிமையையும், திறமையையும் பல கண்ணிகளில் எடுத்துரைத்துள்ளார். நபி (சல்) அவர்கள் தூதாக அனுப்பும் தூதுவனும் சக்கூன் நாட்டின் பல வீதிகளை கடந்து செல்கின்றான். அங்கு பல்வேறு வகைப்பட்ட கடைகளையும் பல சாதிப் பிரிவினர்களையும் பார்த்துச் செல்லும் தூதுவன் சக்கூனரசனின் கொலுமண்டபத்தை இறுதியாகச் சென்றடைகின்றான். இச்செய்திகள் விரிவாக 29 கண்ணிகளில் விளக்கம் பெற்றுள்ளன. சக்கூன் அரசனின் முன் சென்ற தூதவரை யாரென்று கேட்க அதற்கு அத்தூதுவர் பெருமானார் நபி (சல்) அவர்களின் வாழ்வியல் வரலாற்று சிறப்புக்கள் பலவற்றை எடுத்துக்கூறி அத்தகு புகழ்மிக்க நபி (சல்) அவர்களின் தூதுவன் என்றும் பின் தான் தூதுவந்த காரணத்தையும் பின்வருமாறு உரைக்கலானார்.

அல்லாவின் தூத ரகுமதுற்றசூல் நயினார்
என்னைத் தூதாக ஏவினாருன்னருகே
யுன்னைக் கலிமாவை யோதென்றுரைத்தனரே
ஓதினால்நாய னுதவிமிச்சம் நீ பெறுவாய்
நீதியுள்ள சொர்க்கமது நீ பெறுவாயென்றுரைத்தார்
அல்லாதுபோனா லருநரகில் நீ விழுந்து

பொல்லா அதாபுடனே புரளுவாயென்று பின்னும்
இந்தவகை சொன்னே னீமான் கொள்ளாயாகில்
வந்துபடைபொருத வரச் சொன்னாரெங்கள் நபி
வாரால் படைபொருத மாட்டையேலாமாகில்
வீராதிவீரருன்னை விட்டுவிட மாட்டார்கள்

(கண்ணி : 165-170)

தூதுவரின் வார்த்தைகளைக் கேட்டு பெரும் சினமுற்ற சக்கூனரசன் பெருமானாரின் படைத் திறமையை ஏளனமாகப் பேசி இஸ்லாத்தின் மீது ஈமான் கொள்ள மறுத்திட வந்த தூதுவரும் மாநபி (சல்) அவர்களிடம் திரும்பிச் சென்று எந்த வகையாலும் சக்கூன் ஈமான் கொள்ள மாட்டான் என்பதை விளக்கிக் கூறினார். அதுகேட்டுப் போருக்குத் தயாராகும்படி தம் படை வீரர்களுக்குக் கட்டளையிட்டார்கள். நபி (சல்) அவர்களின் கட்டளையைத் தம் பணியெனக் கருதி அனைவரும் போருக்குத் தயார் ஆகும் நிலையை ஆசிரியர் விரிவாக எடுத்துக் கூறுகிறார்.

வந்துபதம் பணிந்து மாநபியே கேளுமென்றார்
எந்தவகையாலும் ஈமான் கொள்ளானவனே
படைநடத்த வேணுமென்றார் பயகாம்பர் தான்கேட்டு
விடை கொடுத்திராணுவங்கள் வேறே பிரிக்கலுற்றார்
மாமாவிருவருடன் வாசிபதினாயிரமும்
தாமமா நந்நயினார் தம்வலங்கையாக வைத்தார்
குருவாம் நபியிறசூல் கூறுமருகர் தம்மை
யொரு பதினாயிரம் பரியோ டுற்றயிடபாலில் வைத்தார்
மின் போற் பரக்கும்பரி வீரர்பதினாயிரரைப்
பின்னேயிறசூல்தாம் பேணியாய் வைத்தனரே
மூவாயிரம் பரியை முன்னணியிலே நிறுத்தித்
தாவேது மில்லாத தாசீம் நபிதானிருந்தார்
சக்கூனரசன் வார்த்தை தான்கேட்டங்கேது செய்தான்
மக்காபுரம் வாழ் முகம்மதுக்குத் தூதுவிட்டான்
சண்டைக்குத்தான் வாறோம் தயாரா இருமெனவே

(கண்ணி : 181 : 188)

இவ்வர்ணனை போருக்கு ஆயத்தமாகும் நிலையை எடுத்துக்காட்டுவதுடன் பெருமானார் நபி (சல்) அவர்களுடைய அசுகாபிமார்களது பேரணியையும் விளக்குகிறது. மேற்குறிப்பிட்ட பகுதியில் காணப்படும் 'பயகாம்பர்' என்ற சொல் பார்ஸி மொழியைச் சார்ந்ததாகும். இதனுடைய பொருள் 'நபி' என்பதாகும். ஆனால் இது சிறப்பாக முகம்மது நபி (சல்) அவர்களையே குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

சக்கூன் படைப்போரின் 191-வது கண்ணியிலிருந்து போர் நிகழ்ச்சிகள் விவரிக்கப்படுகின்றன. சக்கூன் அரசன் சுனாபீல், சுகாபீல் என்னும் படைத் தலைவர்களும் தம் மக்கள் நால்வரும் தலைமையேற்க நபி (சல்) அவர்களைச் சென்று பொருதுகின்றான். சக்கூன் அரசன் படைகளோ எண்ணற்ற எண்ணிக்கையில் காணப்படு கின்றன. படைத் தலைவர் பதினாறிலக்கமும், பரிகள் ஆறிலக்கமும், காலாட்கள் எண்பதாயிரமும் தம்பட்டங்கள் ஐயாயிரத்து முன்னூற்று அறுபதும் ஆக அனைத்தும் ஒன்றுபட்டு நாயகம் பெருமானார் (சல்) அவர்களின் படைகளை எதிர்த்தனர். இந்நிலையில் சக்கூனரசனுடைய படைத் தளபதிகளுள் ஒருவனான மாலிக் என்பான் நபி (சல்) அவர் களின் படைகளைக் கண்ணுற்று இப்படை எனக்கு ஒப்பாகுமோ என்று வீரம் பேசிட அது கண்ட தாசீம் நபி அவர்கள் அலி (றலி) அவர் களைப் பார்த்தார்கள். இக்காட்சியை வரிசை முகியித்தீன் புலவர் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றார். இஸ்லாமிய வரலாற்றில் போர் என்றவுடன் நம் நினைவிற்கு வருபவர்கள் பெருமானார் நபி (சல்) அவர்களுடைய மகளான அன்னை பாத்திமாவின் கணவரான அலி (றலி) அவர்களே ஆவார். இஸ்லாம் எதிர்கொண்ட பத்ருப் போர், உஹுத் போர், கைபர் போர் போன்ற பிற முக்கியமான போர்களில் தம் வீரத் திறமையினால் இஸ்லாத்திற்கு எண்ணற்ற வெற்றிகளை ஈட்டித் தந்த பெருமையை உடைய அலி (றலி) அவர்களுடைய போர்த் திறமையை பெரும்பாலான கண்ணிகளில் ஆசிரியர் எடுத்துக் காட்டி விளக்குகிறார். மாலிக் என்னும் படைத் தளபதியின் அகங்கார வார்த்தைகளைக் கேட்டு தாசீம் நபி புலி அலி (றலி) அவர்களை நோக்க அவனை எதிர்ப்பதற்கு முன் அனுமதியை வேண்டினார்கள் அலி (றலி) அவர்கள். அவ்வாறு அனுமதி வேண்டும்போது பல்வேறாகப் பெருமானார் நபி (சல்) அவர்களைப் புகழ்ந்துரைக் கின்றார்கள்.

மடித்தமன மாலிக்கென்போன் மண் மீதிழிந்து வந்தான்
அப்போசுனாபிலவ னகமகிழ்ந்தங்கேது சொல்வான்
இப்போதிங்குங்கள் படை என்றனக்கும் போதாதென்றான்
தப்புள்ளோன் சொன்னமொழி தாசீம் நபி கேட்டுடனே
யொப்பில்லான் தன்னலியை யுவந்தங்கு பார்த்தனரே
வந்தாரலிபுலிதான் முகம்மதரின் தாள் பணிந்து
இந்துமுகத்தோரே எங்களிறசூல் நபியே
எல்லாவும் மத்தோர்களையு மீடேற்றும் நாயகமே
பொல்லாதென்னாளும் பொருதாத புண்ணியரே
கானகத்திலாக்கைக் கடுகவழைப்பித்தவரே
வானகத்திற்கப்பால் வல்லோன் முன் சென்றவரே
வேத நயினாரே விடையருளு மென்றுரைத்தார்

ஆதி நபியிறசூலது போல்விடை கொடுத்தார்
பிடித்துவரவோவவனைப் பிளந்துவரவோவவனை
யடித்துவரவோவவனை யறுத்துவரவோவவனை
என்றே மனத்துணிவா யிறைவனைத்தான் புகழ்ந்து
நன்றார் சலவாத்தை நாவிலெடுத்தோதி
வீரபட்டங்கட்டி மேற்ஜோடு தானணிந்து
தூரமுகிற் பறக்குந் துல்துல் மிசையேறினரே

(கண்ணி : 231-240)

புலி அலி (றலி) அவர்களுடைய கூற்றில் நாயகத்தை புகழும்போது 'எல்லா உம்மத் தோர்களையு மீடேற்றும் நாயகமே' என்பதில் உள்ள உம்மத் என்பது உம்முன் என்னும் சொல்லிலிருந்து தோன்றியதாகும். அதன் பொருள் நாடுதல் என்பதாகும். ஒன்றே இறை என்று ஒரே மார்க்கத்தை நாடி நிற்போரை இச்சொல் குறிக்கிறது. காலந் தோறும் தோன்றிய நபிமார்களையும் அவர்களது போதனைகளையும் பின்பற்றி வந்த மக்களையும் குறிக்கத்தக்க வகையில் இச்சொல் உம்மத் இப்றாகீம், உம்மத் ஈஸா, உம்மத் முகம்மது என்று அந்தந்த நபி மார்களுடைய பெயர்களுடன் இணைத்து வழங்கப்படுகிறது. இச்சொற்கள் அந்தந்த காலத்து நபிமார்களின் பின் நடந்த மக்களையே குறிப்பதாகும். இத்தகைய முறையில் உம்மத் என்னும் வார்த்தை அறுபதுக்கும் மேற்பட்ட இடங்களில் அல்லாஹ்வின் திரு மறையான அல்குர்ஆனில் பயன்படுத்தப்பட்டுள்ளது. எல்லாம் வல்ல அல்லாஹ் தன்னுடைய உம்மத்துக்களுள் சிறந்தவராகவும், மேன்மை யானவராகவும் பெருமானார் நபி (சல்) அவர்களையே தேர்ந்தெடுத் துக் கொண்டான். அதனை அல்குர்ஆன் '(விசுவாசிகளே! நன்மை யான காரியங்களைச் செய்யும்படி மனிதர்களை) ஏவி, பாபமான காரியங்களிலிருந்து (அவர்களை) விலக்கி, மெய்யாகவே அல்லாஹ்வை விசுவாசிக்கின்ற நீங்கள்தாம் மனிதர்களில் தோன்றிய சமுதாயத்தார் களிலெல்லாம் மிக்க மேன்மையானவர்கள்' (3 : 110) எனக் கூறு கிறது. இத்தகு மேன்மையையும் மனிதர்களுள் அல்லாஹ்வின் அருளைப் பெறுவதில் முதன்மையையும் பெற்ற பெருமானார் நபி (சல்) அவர்கள் தம்மைப் பின்பற்றி நடப்போருக்காக எப்போதும் அல்லாஹ்விடம் துவா (வேண்டுதல்) இறைஞ்சுகின்றார்கள். அத்துடன் ஷஃபாஅத் (பரிந்துரைத்தல்) என்னும் மன்றாட்டத்தையும் இறுதிநாளில் நம் உம்மத்தோர்களுக்காக அல்லாஹ்வின்முன் மேற் கொள்வோரும் இறசூல் நாயகம் (சல்) அவர்களே ஆவார். தம் உம்மத்தோர்கள் ஒவ்வொருவருடைய பாபங்கள் குறித்து அவர்கள் இறந்தபின் அல்லாஹ்வின்முன் அவர்களது பாபங்களை மன்னிக்கும் படி பரிந்துரைப்பவர்கள் பெருமானார் நபி (சல்) அவர்களாதலால் சக்கூன் படைப்போரில் புலி அலி (றலி) அவர்களின் கூற்றாக 'எல்லா

உம்மத்தோர்களையும் ஈடேற்றும் நாயகமே' என புகழ்ந்துரைக்கும்படி ஆசிரியர் குறித்துள்ளார். மேலும் நபி (சல்) அவர்களை புலி அலி (றலி) அவர்கள் புகழ்ந்துரைக்கும்போது 'வானகத்திற்கப்பால் வல்லோன்முன் சென்றவரே' என்பது அண்ணல் நபி (சல்) அவர்களின் மிஃறாஜ் பயணத்தை (விண்ணேற்றப் பயணம்) குறிப்பதாகும். இவ்வாறு பல்வேறாக புகழ்ந்துரைத்து பெருமானார் நபி (சல்) அவர்களின் அனுமதியைப் பெற்றபின், புலி அலி (றலி) அவர்கள் வீரப் பட்டங்கட்டி மேல்ஜோடும் அணிந்து தூரமுகிற் பறக்குந் துல்துல் மிசையேறிச் சென்றதாக குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். துல்துல் என்பது கோவேறு கழுதையின் பெயராகும். இது எகிப்து நாட்டு முகௌகிஸ் என்னும் மன்னர் பெருமானார் நபி (சல்) அவர்களுக்கு அளித்ததாகும். பெருமானார் பங்கேற்ற போர்களில் இதன்மீதமர்ந்தே சென்றார்கள். பெருமானார் அவர்கள் அலி (றலி) அவர்களுடைய போர்த் திறமையைக் கண்டு அவர்களுக்குப் போரிட இதனை அளித்தார்கள். அது முதற்கொண்டு அலி (றலி) அவர்கள் பங்கேற்று வெற்றி எய்திய பல்வேறு போர்களிலும் துல்துல் கோவேறு கழுதையை பயன்படுத்தினார்கள். அதற்சேற்பவே சக்கூன் படைப்போரிலும் துல்துல் கோவேறு கழுதையின் மீதமர்ந்து அலி (றலி) அவர்கள் போரிடச் செல்வதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்வாறு துல்துல் என்னும் குதிரையில் ஏறி கடும்போர் புரியத் தொடங்கிய அலி (றலி) அவர்களின் போர்த் திறமையை கண்ணுற்று ஏளனம் பேசிய சுனாபீல் என்னும் படைத் தளபதி,

வானிடியைக் கண்ட மஞ்ஞைகள் போலே மயங்கித்
தானைகளதெல்லாந் தான் மயங்கி வீழ்ந்ததுவே
நின்றான் சுனாபீல் நினைத்தான வனிங்கேதான்
என்றே பயந்தங் கிடிக்குரல் விட்டீது சொல்வான்
ஜின்னோ பரியோ தேவோ பெருங்கணமோ
மின்னோ இடியோ விளம்புகன்ற அலியோ நீ

(கண்ணி : 244-246)

என ஐயமும் பீதியும் அடைந்து திகைப்புற்று அஞ்சி நின்றான். அவனது நிலைகண்ட புலி அலி (றலி) அவர்கள் ஏளனம் பேசிய அவனது இழி செயலை போர்க்களத்தில் சுட்டிக் காட்டி தம்முடைய புகழ்பெற்ற துல்ஃபிகார் என்னும் வாளால் சுனாபீலுடைய பரியினை வெட்டி வீழ்த்தி கீழே விழுந்தவனை தம் வலிமை மிக்க கைகளால் சுழற்றி வீசியடித்து நபி பெருமானார் (சல்) அவர்களுடைய பாதங்களை பணியும்படி நாயகத்தின்முன் சுனாபீலை கிடத்தினார்கள்.

...........................அலியுல்லாதாம்
தன்றாய்க் குறுஞ்சிறிப்பு நகைத்தவனைத் தானோக்க
போதனைகேட்டாய் நீ போபெரிய போர்க்களத்திற்
போரதனிற் பேர் கேட்கப் புத்தியில்லையோ உனக்கு
செய்வாயுத்த மென்றலியார் செப்பினாரப்போது
கையிலிருக்கிற கதையை மிகச் சுழற்ற
வீசியடித்தானவனை வீரப்புலியலியார்
வாசமுறு துல்புக்கறா வாளாலே வெட்டினரே
வெட்டிபரிமுறித்து விழுந்தான் பரியோடே
அட்ட திசையும் புகழும் அலியாம் பெரும்புலியும்
தரையில் விழுந்தவனைத் தன் கையைத் தீட்டி
விரலிலே தூக்கி மேலாகத்தான் சுழற்றி
கொண்டு நபியிறசூல் குரு முன்னிலையில் விட்டார்
(கண்ணி : 247 : 253)

இங்கு ஆசிரியர் புலி அலி (றலி) அவர்கள் சுனாபீலின் பரியை வெட்டிய தாகக் குறிப்பிடும் 'வாசமுறு துல்புக்றா' என்னும் வாள் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகும். புலி அலி (றலி) அவர்கள் போரிட்ட வாளின் பெயரே துல்புக்கறா என்பதாகும். புகழ்பெற்ற இவ்வாள் துல்ஃபிகார் என்றும் துல்ஃபகார் என்றும் உச்சரிக்கப்படுகின்றது. இது அல் ஆலி இப்னு நாபிஹ் அல்ஹஜ்ஜாஜ் என்பவருடையதாகும். கைப்பிடி வெள்ளியாலும் தங்கத்தாலும் ஆன இவ்வாள் இரு முனைகள் கொண்டதாகும். ஃபிக்ரா என்றால் முதுகெலும்பு என்பதாகும். இதன் பன்மை ஃபகார் அல்லது ஃபிகார் என்று வழங்கப்படுகிறது. துல்ஃபிகார் என்றால் இரு முதுகெலும்புகளை உடையது என்பதாகும். புகழ்பெற்ற இவ்வாளின் நுனிப்பாகம் இரண்டு பிரிவுகளைக் கொண் டுள்ளதால் இவ்வாள் துல்ஃபிகார் என வழங்கப்படலாயிற்று. இஸ்லா மிய சகாப்தம் எதிர்கொண்டதும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது மான பதுறுப்போரில் அல் ஆலி கொல்லப்பட்டபோது அப் போரில் கைப்பற்றப்பட்ட பொருள்களுள் இவ்வாளும் ஒன்றாகும். இதனை அகழ்ப்போரின்போது 1000 வீரர்களுக்கு நிகரான வலிமையுடையவ ரான வீரர் அம்ர் இப்னு அப்தூதின் சவாலை எவரும் ஏற்காதபோது அதனை மும்முறையும் ஏற்ற அலி (றலி) அவர்களின் கையில் பெருமானார் நபி (சல்) அவர்கள் துல்ஃபிகார் வாளினை அளித்து அனுப்பி வைத்தார்கள். துல்ஃபிகார் வாளினைக்கொண்டு அலி (றலி) அவர்கள் வெற்றிபெற்ற செய்தியைக் கேட்டவுடன் அண்ணல் நபி (சல்) அவர்கள் அலி (றலி)யைத் தவிர வீரரு மில்லை துல்ஃபிகாரைத் தவிர வாளுமில்லை என்று பொருள்படும் 'லா ஃபத்தா இல்லா அலீ; லாஸைஃப இல்லா துல்ஃபிகார்' என்னும் வாசகத்தை மொழிந்து அலி (றலி) அவர்களையும் துல்ஃபிகார்

வாளினையும் பெருமைபடுத்தினார்கள். அன்று முதல் இஸ்லாம் எதிர்கொண்ட போர்களில் அலி (றலி) அவர்கள் பங்கேற்றபோது அவருக்கு வெற்றியைச் சூட்டித் தந்தது இவ்வாளே ஆகும். இத்தகு சிறப்புப் பெற்ற துல்ஃபிகார் வாளினைக்கொண்டே சக்கூன் படைப் போரிலும் சக்கூன் அரசனுடைய படைத் தளபதியான சுனாபீல் என்போனுடைய பரியினை வெட்டி வீழ்த்தினார்கள் அலி (றலி) என இங்கு வரிசை முகியித்தீன் அவர்கள் குறித்துள்ளார். அலி (றலி) அவர்களின் வீரத்தையும் விவேகத்தையும் கண்டுற்ற சுனாபீல் அச்சமும் மனமாற்றமும் பெற்று பெருமானார் (சல்) முகம்மது அவர்களின் பாதம் பணிந்து இஸ்லாத்தின்மீது ஈமான் கொண்டான். சக்கூன் படைப்போரில் எதிரிகள் இஸ்லாத்தின்மீது ஈமான் கொள்ளும் வரிசையில் முதன் முதலில் இஸ்லாத்தை தழுவியது சுனாபீல் ஆவார். இதனை ஆசிரியர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

........................... சுனாபீல் மனமகிழ்ந்து
நல்ல கலிமாவை நாவுகொண்டு சொல்லலுற்றான்
வாமமுடன் போனான் மன்னன் சூனாபீல்த் தாம்
செம்புவருதனை விட்டுத் தீன்வழியிலான பின்பு
ஆகாக்கு பிரெனவே யகற்றிப் புகழுடனே
வாகாகச் சிந்தையிலே வல்லோன்தனைப் புகழ்ந்து
வரிசை நபிமுன்னில் வந்து வள்ளலே நாயகமே.

(கண்ணி : 238-242)

என எடுத்துரைத்து பல்வேறாக பெருமானாரின் புகழினை வரலாற்று நிகழ்ச்சிகளுடன் கூறி பெருமைப்படுத்தி எதிரிகளை வெட்டிவர தனக்கு அனுமதி அளிக்குமாறு பெருமானார் நபி (சல்) அவர்களிடம் வேண்டி நின்றான்.

புந்தியறியாத வென்னைப் புகழ்பெருகும் ஈமானின்
நற்றவமாய்ச் சேர்த்தோரே நாயகமே காபிர்களை
வெட்டிவர வெனக்கு விடை தாருமென்றுரைத்தார்.

(கண்ணி : 244-245)

சுனாபிலுடைய வேண்டுதலை ஏற்ற பெருமானார் நபி (ஸல்) அவர்கள் புத்தியில்லாக் காபிர்களை பொருதவிடை கொடுத்தார்கள். எதிரிகளின் மனமாற்றத்திற்கு வழி வகுத்த சுனாபீல் காபிர்களையே (முஸ்லிம் அல்லாதோர்) எதிர்த்துப் போராடச் செல்கிறான். போரிடச் சென்றவன் போர்க்களத்தில் சக்கூனரசன் எதிர்பட அவனிடம் இஸ்லாத்தின் ஏற்றத்தையும் காபிர்களின் செயல்தனையும் வன்மையாகக் கண்டித்து சக்கூனரசனையும் இஸ்லாத்தின்மீது ஈமான் கொள்ளும்படி எடுத்துரைக்கலானான். இஸ்லாமிய படைப்

போர்களின் நோக்கம் முஸ்லிம் அல்லாதோரை இஸ்லாத்தின்மீது ஈமான் கொள்ளும்படி செய்வித்தலாகும். எனவே இப்படைப் போர்களை எடுத்துரைக்கும் இலக்கிய ஆசிரியர்களும் காபிர்களின் மனமாற்றத்திற்கு முக்கியத்துவம் அளிக்கும் வகையில் கருத்துக் களைத் தம் நூல்களுள் அமைத்துக் கொண்டனர். காபிர்களின் மன மாற்றத்திற்குரிய தேவையை விரிவாக படைப்போர் ஆசிரியர்கள் எடுத்துரைக்கின்றனர். இவ்வகையில் சக்கூன் படைப்போரில் இதனை சுனாபீல் கூற்றின் மூலமாகவே வரிசை முகியத்தீன் புலவர் நிறைவு செய்வதுபோல் உள்ளது.

கூடிமுகம்மதுடன் குறித்தென்னைப் போர் பொருத
நாடி வந்தாய் நீயெனவே நரனங்கு தானுரைத்தான்
அப்போசுனாபீல் அவ்வரசைத் தானோக்கி
இப்போதியானிங் கியம்பக்கேள் மன்னவனே
பூசை செய்ய வேண்டுமென்று புதுக்கோபுரங்கள் கட்டி
வாசமலர் தூக்கி வன்னமிகவே விளக்கி
பசும்பொன்றனை யுருக்கிப் பருக்கவுருச் சமைத்து
அசிம்பின் புனற்கொணர்ந் தங்கதனை முழுக்காட்டி
தூமமிகக் கொடுத்துச் சுடர்விளக்குத் தானேற்றி
நாமமிகச் சாத்தி நறுமலருந்தான் சூட்டி
வாசனைப் புனுகத்தரும் வழுத்துங்குங்குமச் சாந்தும்
நேசநல்லி சந்தனமும் நிதநிதமுந்தான் சாத்தி
பலகனியும் நெய்யும் பால்பழமுஞ்சக்கரையும்
இலகுமறச் சாறும் இனி நல்ல பூந்தேனும்
இத்தனையும் கூட்டி இன்பமுடன் தான்படைத்து
நித்தமுந்தான் நீர் முழுகி நேசத் துணிதுவைத்து
கும்பிட்டெழுந்திருந்து குலுக்கி மணி தானாட்டி
வம்பிட்ட நற்குறிகள் மந்திரமுந் தானோதி
என்னேரந்தானே இதுவே தொழிலாக
நன்னே ரொன்றில்லாமல் நாடியிருந்தனையே
உத்தரங்கள் சொன்ன துண்டோ வுரைக்குமந்த புத்துகள்தான்
புத்தியற்ற மார்க்கமதைப் போடேயொரு நினைவாய்
வல்லவன்றன் றூதர் முகம்மதுற்ற சூலிடம்போய்
நல்லகலிமாவோதி நானிசுலாமாயினனே
சொல்லுமிது போலுந் துற்குண மெல்லா மொழித்து
வெல்லும் பெருக்க வெண்ணி வேம் நரகிற் போகாமல்
சூரத்தனத்தைவிட்டுச் சுருக்கில்ஈமான் கொள்ளுமென்று
சாரத்தனமில்லாத சக்கூனுக்கோதிப் பின்னர்
ஓதுங்கலிமாவை யுறுதி கொள்வையா மாகில்
சோதிப் பெரியவனற் சுவர்க்க பதிதந்தருள்வான்
அல்லாதே போனா லனலே கொழுந்ததெரியும்
பொல்லாத நரகமதிற் புகுவை யென்று தானுரைத்தார்.

(கண்ணி : 256 - 257)

சுனாபீலின் இக்கூற்றில் முஸ்லிம் அல்லாதோரின் இறைதெய்வ வழி பாட்டு முறைகள் விளக்கப்பட்டுள்ளன. ஒன்றே இறை என்றும் ஏக தெய்வ இறைவழிபாட்டு நெறி முறையை விட்டுவிட்டு விக்ரகம், மற்றும் பாம்பு புத்துக்கள் இவைபோன்ற பலவற்றை வணங்கும் நிலையை விடுத்து இறசூல் நபி (சல்) அவர்களிடம் சென்று நல்ல கலிமாதனைக் கூறி எல்லாம் வல்ல அல்லாஹ்வின் பாதையிலே இஸ்லாமை ஏற்றுப் போற்றும்படியான விரிவான செய்திகள் மேற் குறித்த பகுதியில் இடம் பெற்றுள்ளன. அவ்வாறு இஸ்லாத்தை ஏற்றுப் போற்றாமல் இருப்போருக்குரிய தண்டனையையும் சுனாபீல் சுட்டிக் காட்டியுள்ளான். ஒன்றே இறை என்னும் கோட்பாட்டில் பற்றுக்கொண்டு நம்பிக்கை கொள்வோமாகில் சுவர்க்க பதவியை அடைவது திண்ணம் என்றும் இங்கு சுட்டிக் காட்டியுள்ளான். தன் படைத் தளபதியான சுனாபீலே மனமாற்றம் கொண்டு இஸ்லாத்தின் ஏற்றத்தை எடுத்துரைப்பதைக் கண்ட சக்கூனரசன் வெகு சினம் கொண்டு அவனை வெட்டி வீழ்த்தக் கட்டளையிட அவர்கள் அனை வரையும் எதிர்த்துப் போரிட்டு வெற்றியும் ஈட்டுகின்றான். இதன் பின் சக்கூனரசனின் மகன் பெரும்படையுடன் சென்று அலி (றலி) அவர்களுடன் எதிர்த்து நிற்கும் நிலையையும் அப்போரின் விளைவு களையும் பல கண்ணிகளில் ஆசிரியர் விளக்கியுள்ளார். அலி (றலி) அவர்களின் போர்த் திறமையும், அவர்கள் போரிட்ட முறைமையும் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

நாசனலியார் நவிலுகின்ற கெச்சிதமாய்
ஆயன்பசுக்கிடையி லரும்புலிபோலே பாய்ந்து
ஆனைப்படைகளங்ங னலறிக் கொண்டோடிடவே
சேனைத்திரல்வர்களுந் திகைத்தங்ஙனோடிடவே
அலிபுலியாரங்ஙனடர்ந்து வெட்டி யார்ப்பரித்தார்
மெலிவாகக் காபிரெல்லாம் வெருண்டே மிகப் பயந்தார்
கூட்டமதகரியின் கொம்பையலிபிடிங்கிப்
போட்டாரங்கங்கே புகலுமலைபோலே
ஆலையிலே விட்டங் காட்டுங் கரும்பதுபோல்
மேலான யானைகளை வெட்டிக் குவித்தாரே
ஆறாயிரங் குஞ்சரத்தை யரைநொடியிற் சீரலியார்
மாறாதுவெட்டி மலைபோற்குவித்தாரே
கொம்பு பிடுங்கப்பட்ட குஞ்சரங்கள் நான்காயிரம்
அம்பொற்குடற் சரிந்த ஆனைகளிரண்டாயிரம்
மீண்டும் புலியலி மேற் வெம்பரிகள் நூறாயிரம்
தூண்டியஙங்ஙன் வந்தே சுற்றி வளைந்ததுவே
அப்போதலியா ரகுமதரைத் தானினைந்தார்
இப்போது போரிலவ ரெங்ஙனிற் கின்றாரெனவே

ஒருவர்க் கொருவ ருதவியின்றிப் போர் பொருகில்
வரிசை நயினாரு மாக்களுந் தோழர்களும்
என்ன செய்கிறாரோ வென்றெண்ணி மனமழன்று
வன்னியிடுமெழுகாய் வாடினாரப்போது
அசுவங்கள் வந்தங் கலியாரைத் தான்சூழ
கொசுகளிஃ தென்றே கொக்கு மாப்பிவராஜாளி
பாய்ந்தடித்த லொப்பாகக் கண்பாரலியாரங்
காய்த படை தொழிலா லதட்டி வெட்டினார் பரியை
வெம்பரிகள் சேர அலி வெட்டிக் கருவறுத்தார்
தும்பியிறந்ததுவுந் துரைகள் மடிந்ததுவும்
மண்டலிகர் மாண்டதுவு மாந்தர் மடிந்ததுவும்
கண்டங்கரச ரெல்லாம் கடுக மறையலுற்றார்
அந்திபட்ட வேளையிலே யரசன்படைகளைத்தான்
வந்திடுங்களென்றே வரவழைத்தான் அப்போது
(கண்ணி : 316 - 330)

ஆசிரியரின் இப்போர் வர்ணனைத் திறம் அலி (றலி) அவர்களின் உன்னதமான வலிமையையும் போரிடும் திறமையையும் நன்கு விளக்கு கிறது. போர்கள் வெளிப்பாட்டினை மிக எளிய உவமைகளின் மூலம் எடுத்துரைத்து அதன் சிறப்பை உணர்த்தியுள்ளார் ஆசிரியர். ஆலை யில் கரும்பினை கசக்கி பிழிவதுபோல் போர்க்களத்தில் உள்ள யானைகளைப் புலி அலி (றலி) அவர்கள் வெட்டிக் குவித்ததாகக் கூறப்பட்டுள்ள நயம் சிறப்புடையதாகும். அலி (றலி) அவர்களின் இத்திறம் கண்ட சக்கூனரசன் தம் ஏனைய மக்கள் மூன்று பேரையும் அழைத்து ‘கொஞ்சம் மனிதர்கள் என்று குறைவாக நாம் நினைத் தோம். ஆனால் நம் நெஞ்சம் கலங்கும்படி செய்கின்றார் அலியார். இவர்போல் தாரணியிற் கண்டதில்லை’ என எடுத்துக் கூறுகின்றான். இதுவரையில் 10000 பேர் பெருமானாரின் படைகளை எதிர்த்து மாண்டுள்ளனர் என்பதை சக்கூனரசன் உணர்ந்த போதிலும் தன் அகம்பாவம் தீராத காரணத்தினால் தானே தலைமையேற்று பெருமா னார் நபி (சல்) அவர்களுடைய படைகளுடன் பொருதும் பொருட்டு போரிட முற்படுகின்றனர். சக்கூனரசன் தன் பெரும் படையுடன் செல்லும் நிலையை ஆசிரியர் இருபது கண்ணிகளில் வர்ணித்துள்ளார். சக்கூனரசனுடைய படைவீரர்கள் வருவதால் எழும்பும் தூசியானது விண்ணகத்திலுள்ள வெய்யோனையும் சென்று மறைக்கும் வகையில் இருந்தது.

அத்தனை எண்ணிக்கையில் வந்த சக்கூனரசன் அண்ணல் நபி (சல்) அவர்களது சேனையோடு எதிர்த்துப் போரிட அப்போரில் பிறிதொரு சேனைத் தளபதியும் மனம்மாறி இஸ்லாத்தின்மீது ஈமான் கொள்கின்றான். இந்நிலையில் புலி அலி (றலி) அவர்கள் சக்கூன்

அரசனுடைய இளைய மகனுடன் போராடினார்கள். அலி (றலி) அவர்களுடைய போர்த்திறம் கண்டு பின் வாங்கிய அவன் தன் தந்தையிடம் சென்று

எதிரொருவர் நில்லார் காணிந்த அலி சத்தங் கேட்கில்
ஏகனலியுடனே யெவரும் பொருத மாட்டார்
வாகரலியவரை மானிலத்தோர் வெல்ல மாட்டார்
ஆள்த் திறமைப் போரினிலே யவரைப் போற் கண்டதில்லை
(கண்ணி : 462 - 464)

எனக் கூறினான். பின் மாலை ஆகிவிட்டபடியால் அன்றைய போரினை அத்துடன் முடித்துக்கொண்ட புலி அலி (றலி) அவர்கள் பெருமானார் நபி (சல்) அவர்களிடம் சென்று அன்றைய போர் நிகழ்வு களை விளக்கிக் கூறினார்கள். பின் அனைவரும் இரவு நேரத் தொழுகையான இசாத் தொழுகையினை நிறைவேற்றிவிட்டு உறங்க லானார்கள்.

மறுநாள் போரில் சக்கூன் அரசனுடைய இளைய மகனும் அலி (றலி) அவர்களும் போரிட்ட செய்தியை ஆசிரியர் விவரித்துள்ளார்.

விண்ணுமண்ணுந்தானதிர வேந்து மகனும் அலியும்
திண்ணமுடனே யெதிர்த்துச் செயப்போர் புரியலுற்றார்
வெட்டுவதும் ஓட்டுவதும் வெம்பரியைத் தூண்டுவதும்
தட்டுவதும் குத்துவதுந் தப்பாமலே பொருதார்
கையுந் தவறாமல் காலுந்தவறாமல்
மெய்யுமிளைக்காமல் விழியிமைகள் மூடாமல்
இப்படியே மூன்றுநா ளிவர்கள் பொருதனர்கள் (500-503)

இவ்வாறு இடைவிடாது நடைபெற்ற போரின் இறுதியில் சக்கூனரச னுடைய மகனைப் புலி அலி (றலி) அவர்கள் சிறைப்பிடித்து விலங் கிட்டு நபி (சல்) அவர்கள் முன் அழைத்து வந்தார்கள். செய்தியைக் கேள்வியுற்று சக்கூனரசன் பெரும் சினமடைந்து மீண்டும் தன் மூத்த மகன் மாலீக்கைப் பெரும்படையுடன் போரிட அனுப்பினான். மாலீக் கும் அலி (றலி) அவர்களுடன் எதிர்த்து தோற்றுவிட இறுதியாக தன் எஞ்சியுள்ள ஒரு மகனையும் அனுப்புகின்றான் சக்கூனரசன். இவ்வாறு சக்கூனரசனுடைய ஒவ்வொரு மகனுடனும் அவர்களது படை களுடனும் அலி (றலி) அவர்களும் நபி (சல்) அவர்களது படைகளும் எதிர்த்துப் போரிட்டது விரிவாக எடுத்துரைக்கப்படுகிறது.

நடைபெற்ற அத்தனை போர்களிலும் அலி (றலி) அவர்களுக்கே வெற்றி கிட்டியதால் நேர்மையான முறையில் அவர்களுடன் போரிட்டு வெற்றி அடைய முடியாது என்பதைத் தெரிந்து கொண்ட சக்கூனரச

னுடைய படை வீரர்கள் வஞ்சனை செய்து போரில் அலி (றலி) அவர்களைத் தோற்கடிக்கலாம் என்ற கருத்தினை வெளிப்படுத்தினார்கள்.

சென்று பொருத செருக்களத்திலோர் கிடங்கு
நன்று நூறாளுமுழம் நாற்சவுக்கமாக வெட்டி
பலகை பரப்பிமேலே பதனமாய் மண்போட்டுக்
கலக மொருவருக்குங் காட்டாமல் வையுமந்த
அச்சுத் தெரியாம லதின் மேலேயாலி வந்து
மெய்ச்சப் படை பொருவார் வெல்லலா மென்றுரைத்தான்
(கண்ணி : 639-641)

இவ்வெண்ணப்படி தம் திட்டத்தை நிறைவேற்ற இரவோடிரவாக பெரும் குழி ஒன்றினை வெட்டச் செய்து அதனை மறைத்துவிட்டு மறு;நாள் தானே போர்க்களத்திற்குச் சென்றான் சக்கூனரசன்.

அன்று போரிட வந்த அலி (றலி) அவர்களும் சக்கூனரசனுடைய வஞ்சனை வலையில் சிக்கி பெருங்குழியில் வீழ்ந்துவிடவே அது கண்ட சக்கூன் படை வீரர்கள் ஆர்ப்பரித்து அகம் மகிழ்ந்தார்கள். இந் நிலையிலே சக்கூன் படைப்போர் நிகழ்வுகளில் பெருமானார் நபி (சல்) அவர்கள் பங்கேற்பதாக ஆசிரியர் சுட்டுகின்றார். அலி (றலி) அவர்கள் எதிர்பாராத நிலையில் பகைவர்களின் வஞ்சக வலையில் மாட்டிக் கொண்டதை அறிந்த பெருமானார் நபி (சல்) அவர்கள் வேகமாகச் செல்லும் தம் பரியில் விரைந்து வந்து பரியின் கால் களினாலேயே பகைவர்களை மிதிக்கச் செய்ததுடன் சக்கூனரசனுடைய ஒரு மகனையும் ஆகாயத்தில் விட்டெறிந்து இறுதியாக இப்போதாவது ஈமான் கொள்வாயா என்று கேட்க அதற்கு இசைகின்றான் அவன்.

புலி அலி (றலி) அவர்களைப் போர்க் களத்தில் காணாத அசுகாபி மார்கள் தம் உள்ளம் கலங்கி பரிதவிக்கும் நிலையை ஆசிரியர் வெகு உருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்.

புந்தியலிபுலியைப் போர்க்களத்திற் காணாமல்
மைந்தரென வந்த நல்ல முகம்மதனிபாதான்
கல்பு தடுமாறிக் கண்ணீர் சொரிந்தனரே
நல்ல அசுகாபிகள் நான்காயிரத்தி நானூற்றவரும்
எல்லவருந்தேடி யிரங்கித்தவித்துப் பின்னர்
வல்லபெல மிகுந்த வாளலியைத் தேடினரே
துல்து லுக்காரரென்று சொல்லித் திரிந்தனரே
வல்ல அலி பெற்ற மக்களொரு பத்தெண்மரும்
வீரப்புலியலியார் விட்டகன்றார் மேதினியில்
ஆரைப்பிதா வென்போ மென்றலறிய முதனரே
(கண்ணி ; 706-711)

இங்கு 'முகம்மதனிபாதான் கல்புத் தடுமாறிக் கண்ணீர் சொரிந்த னரே' என்னும் பகுதியில் குறிப்பிடப்பட்டிருக்கும் முகம்மது அனிபா அலி (றலி) அவர்களின் புதல்வர்களுள் ஒருவராவர். இங்கு குறிப் பிடப்பட்டுள்ள கல்பு என்பது இதயம் என்று பொருள்படும் அறபுச் சொல்லாகும். அசுகாபிமார்கள் துல் துலுக்காரர் என்று சொல்லித் திரிந்ததாகக் குறிப்பிடப்படுவது துல்துல் என்னும் பெயரையுடைய அலி (றலி) அவர்களுடைய கோவேறு கழுதையே ஆகும். இவ்வாறு அசுகாபிமார்களும், அலி (றலி) அவர்களது புதல்வர்களும் கலக்கமுற்று இருக்கும்போது அலி (றலி) அவர்களின் புதல்வர் முகம்மது அனிபா தம் தந்தையரின் பெருங்குரல் பாதாளக் குழியி லிருந்து கேட்பதை அறிந்து

ஆவலாய்த்தானே யருங்கயிறொன்றே கொணர்ந்து
விட்டார் கிணறதிலே வீரப்புலியலியார்
தொட்டுப் பிடித்தேறித் தோன்றி வெளியானார்
முகம்மதனிபாதான் பாவாவைப் பார்த்தங்ஙனே
மிகவும் விழுந்தழுது மெய்யணைத்துக் கூட்டி வந்தார்
முகம்மதனிபாவை வள்ளலலிதாங் கேட்டார்
அகுமதுற்றசூலே யெங்கே அபூபக்கருமறையெங்கே
உதுமானார் தம்மை யெங்கே யுற்றகுமரரெங்கே
அதிபாரசேனை யெங்கே அரசர் மற்றோர் தம்மையெங்கே
(கண்ணி : 726-731)

என பெருங்குழியிலிருந்து வெளிப்பட்ட அலி (றலி) அவர்கள் ஒவ் வொருவராக விசாரிக்க அவரது கேள்விகளுக்கெல்லாம் புதல்வர் முகம்மது அனிபா விடையளித்தார்கள். இவ்வாறு பெரும் ஆபத்தி லிருந்து தப்பிய அலி (றலி) அவர்களைப் பின் அண்ணல் நபி (சல்) அவர்கள் கண்ணுற்றார்கள். அவர்களைக் கண்ட நபி (சல்) அவர்கள் அரவணைத்து உச்சிமோந்து உணர்ச்சி வயப்பட தம் அன்பினை வெளிக்காட்டினார்கள். இக் காட்சியை வரிசை முகியித்தீன் புலவ ரவர்கள் வெகு உருக்கமாக எடுத்துக் கூறுகிறார்.

வள்ளல் நபி வந்தலியை மார்போடுமார்தழுவி
யுள்ள வெதுப்பகன்றங் குச்சிதனை மோந்தார்
கண்ணீர்த்ததும்புங் கவலை மனந்தான் ஆறிப்
புண்தான் அலியுடம்பிற் போர்க் களத்திற்பட்டதுதான்
ஆயிரத்து முப்பத்து மூன்றாகு மத்தழும்பில்
மாயிரத்தாலோடு மெய்யார் வள்ளல்நபி வாய் நீரால்
சலவாத்துச் சொல்லித் தடவினார் புண்மேலே
பல வார்த்த மும்பதெல்லாம் பழந்தழும்பதானதுவே
அத்தழும் பங்காறியபின் அலியார் மனமகிழ்ந்து
சித்தமகிழ்ந்து தெளிந்தலி யாரேது சொல்வார்
(கண்ணி : 736-740)

சலவாத்து என்பது புகழ்தல் என்பதாகும். இது குறித்து நபி (சல்) அவர்கள் தம் ஹதீதினில் கூறும்போது நிச்சயமாக அல்லாஹ் தன்மீது ஒரு சலவாத்து கூறியவர்கள்மீது பத்து சலவாத்தை கூறுகின்றான் என்பார்கள். அதுபோல் குர்ஆன் ஓதுவதும் சலவாத்துக் கூறுவதும் ஒரே நன்மை உடையன வென்றும் அண்ணல் நபி (சல்) அவர்கள் அருளியுள்ளார்கள். நிச்சயமாக இறைவனைப் புகழ்வதே எனக்கு மகிழ்ச்சி தரக்கூடியது எனக்கூறும் அண்ணல் நபி அவர்கள் இதற் கேற்பவே அல்லாஹ்வின் புகழ்பாடி அலி (றலி) அவர்களின் உடலில் போர்க்களத்தில் ஏற்பட்ட 1033 காயங்களையும் போக்கியதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இவ்வேளையில் அலி (றலி) அவர்கள் தமக்கு இறைவன் அருள்பாலித்திடக் கிடைத்த வெற்றிகளையெல் லாம் நினைந்துருகி அல்லாஹ்விடத்து இறுதிப் போரிலும் வெற்றி யைத் தந்தருள துவா (வேண்டுதல்) இறைஞ்சுகின்றார்கள்.

அத்தலத்திலேயிருந்திங் கனேகந்தடை கடந்து
இத்தலத்திற்றான் வரவே யென்னை நீ காத்திருந்தாய்
மன்னன் மகனுடனே மார்பொருத வெற்றிதந்தாய்
பின்னுந்துரவில் விழப் பெரிய வெளியாக்கி வைத்தாய்
மெய்த்தழும்பதெல்லாம் வேதநபிவாய் நீரால்
சற்றுமில்லாதாக்கினை சக்கூனை வென்றுலகில்
ஆகாக்குபிர் வழியை யழிய வெட்டித் தீன் வழியை
வாகாய்த் திருத்திடவே வல்லவனே நீயுதவி
எனக்குத் தருவாயென இரக்கமொடு கையேந்தி
மனத்திலொரு நினைவாய் வாளலியார் கேட்டனரே
(கண்ணி : 741-745)

இவ்வாறு தீன் வழியைப் பரப்புவதற்குத் தமக்கு உதவி புரியுப்படி அல்லாஹ்விடத்தும் நபியிடத்தும் வேண்டி அனுமதி பெற்ற அலி (றலி) அவர்கள் துல்புக்கறா என்னும் தம்முடைய சிறப்புப் பொருந்திய வாளினை கையிலேந்தி படையோடு இறுதிப் போரில் பொருதுவதற் காகச் சென்றார்கள். எப்போதும் போல் வெற்றிதனை சூட்டிக் கொண்ட புலி அலி (றலி) அவர்கள் தம் படை வீரர்கள் பல்லாயிரக் கணக்கானோரை இழந்து இறுதியில் தோல்வியுற்ற நிலையிலிருக்கும் சக்கூனரசனிடத்து இறுதியாக அண்ணல் நபி (சல்) அவர்களுடைய விருப்பத்தைத் தெரிவித்தார்கள்.

உன்னுடைய நாவாலே யுரைத்துக் கலிமாவை
முன்னோன் நபி தீனின் முற்றுமனம் வைத்தாயேல்
தேசமுன்னோடுஞ் சேரவே நாந்தருவோம்
வீசும்புகழலியின் விண்ணப்பஞ் சொன்ன பின்னர்
சக்கூனெனுமரசன் சமர்த்திது நல்லதென்று
மிக்காமனையேகி வெகுமன்னர்க் கூட்டி

உற்றவுற முறையா ருள்ள பலபேருடனு
மற்றோருங் கூடி வந்தலிக்குத் தாழ்ச்சிசெய்தார்
அப்போதலியாரங் கவர்களைத்தான் கூட்டிக்கொண்டு
செப்புநபியிறசூல் திருமுன்னே வந்தனரே
(கண்ணி : 795-799)

அலி (றலி) அவர்களின் கூற்றிற்கு இசைந்த சக்கூனரசன் இஸ்லாத்தின் மீது ஈமான் கொள்வதற்கு விருப்பங்கொண்டு நபி (சல்) அவர்களிடத்து வந்தவுடன் பெருமானார் நபி (சல்) அவர்கள் பெரிதும் மனம் மகிழ்ந்து தாம் சிறைப்படுத்தி வைத்திருந்த சக்கூனரசனுடைய மக்கள் மூவரையும் அழைத்து வந்து சக்கூனிடத்து சேர்ப்பித்தார்கள். நபி (சல்) அவர்களுடைய அருங்குணத்தையும் மேன்மையையும் அறிந்த காபிர்கள் அனைவரும் மனம் மகிழ்ந்து தீனுல் இஸ்லாம் மதத்தை ஏற்றுக் கலிமாவைக் கூறலானார்கள்.

வந்தவரசன் தன்னை முகம்மதுற்றசூல் நோக்கி
அந்தவரசன் மக்கள் ஆனநல்ல மூவரையும்
தாதையவர்கிட்டத் தாமழைத்துவிட்டனரே
சேதமில்லாத்தாதையவர் திருப்பாதத்திற் பணிந்தார்
ஆகாக்குபிரை விட்டங் ககுமதுற்றசூல் திருமுன்
வாகார் கலிமாவை வழுத்தினா ரெல்லோரும்
ஈமானுங்கொண்டங் கிறசூல்பதம் பணிந்தார்
நாமானமாகி நகரிலே தானேகி
அன்றரசன் கோயி லாருஞ் சிலைகளெல்லாந்
துன்றும் பொடியாய் நறுக்கித் தூரவிடுத்தெறிந்தார்
துப்பர வாகத் தூத்து நிலமெழுகி
இப்படியே லோக மெல்லோருந் தானுரைக்க
தொழுது வணங்கித் துய்யதவுபாச் செய்து
(கண்ணி : 799-805)

சக்கூன் படைப்போரின், உச்சநிலையும், நோக்கமும் நிறைவேறு தலையே வரிசை முகியித்தீன் புலவர் மேற்சொன்ன செய்யுள் வரிகளில் குறிப்பிட்டுள்ளார். முஸ்லிம் அல்லாத ஒருவர் முஸ்லிமாக மாற வேண்டுமாகில் முதலில் ஒன்றே இறை என்னும் ஏக தெய்வ வழிபாட்டில் பற்றுக்கோடும் நம்பிக்கையும் கொள்ளவேண்டும். இதனையே ஈமான் கொள்ளுதல் எனச் சுட்டுவர். அவ்வாறு ஈமான் கொண்டபின் இஸ்லாத்தின் மூலமந்திரமான 'லாயிலா இல்லல்லாஹ் முகம்மது றசூலுல்லலா'...என்னும் கலிமாவை மொழிதல் வேண்டும். அதாவது வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனே அவனையன்றி வேறு தெய்வமில்லை. முகம்மது நபி (சல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் என்னும் பொருள் கொண்ட கலிமாவை மொழிதல் வேண்டும். இதற்கேற்பவே சக்கூன் படைப்போரிலும் சக்கூனரசனும்

அவனைச் சார்ந்த காபிர்களும் இஸ்லாத்தின்மீது ஈமான் கொண்டு கலிமாவை மொழிந்து இஸ்லாமியர்களாக மாறினர் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். சக்கூனும் அவனைச் சார்ந்தவர்களும் பாவ மன்னிப்புக் கோரினார்கள் என்பதையே ஆசிரியர் ' தவுபா செய்தனர்' எனக் குறித்துள்ளார்.

**போரின் வெற்றி :**

இவ்வாறு அல்லாஹ்வின் கட்டளையின்படி பெருமானார் (சல்) அவர்கள் மேற்கொண்ட போரின் நோக்கம் வெற்றியடைய சக்கூனும் அவனைச் சார்ந்தவர்களும் முஸ்லிம்களாக மாறி அதன்வழி கடமை யாற்றியபின் சக்கூனரசன் போரில் இழந்த நாட்டினை அவன் வசம் ஒப்படைத்து அவனையே ஆளும்படி பெருமானார் நபி (சல்) அவர்கள் செய்வித்தார்கள். இழந்த நாட்டினைப் பெற்ற சக்கூனரசன் தீன் வழியில் ஆட்சி மேற்கொண்டதாக ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

மெய்ப்பார் நபியின் மேலாம்பதம் பணிந்து
ஆகுங்கருமமுமங் கனைத்தையுங் கேட்டுக் கொண்டு
ஏகனபிதம்மை எழில் நகர்க்கனுப்பிவிட்டு
வீசுங் கொடையரசும் மேலாம் படைஞர்களும்
வாசமிகுந்தாடும் மாநகரியை நோக்கி
வந்து தனக்குள்ள வடிவாருந் தேசமெல்லாம்
சிந்தாமணிநபியின் தீன் விளக்கியே யாண்டான்
முந்து முகம்மதுடை மொழிப்படியே நடந்தார்
(கண்ணி : 829-833)

இவ்வாறு தீன் வழியில் தம் அரசினை மேற்கொண்டு சக்கூனரசன் ஆட்சி புரிந்ததாகக் குறிப்பிடுவதுடன் சக்கூன் படைப்போரின் கதை யம்சம் முற்றுப் பெறுகிறது. எனினும் தம் இலக்கியப் படைப்பை இனிய நிகழ்ச்சி ஒன்றுடன் முடிக்க வேண்டும் என்பதால் இவ்வரிசை முகியித்தீன் புலவர் சக்கூனரசனுடைய மகளுக்கும் படைத்தளபதி சுனாபிலுக்கும் இஸ்லாமிய வழியில் திருமணம் நடைபெறுவதாகச் சுட்டிக் கதையை நிறைவு செய்துள்ளார்.

மன்னன் சக்கூனுமவன் மக்களும் வந்திருக்க
அன்ன நடைமின்னா ரனைவோருந் தானிருக்க
கலிமாவுமோதிக் காவின் முறையோதி
யொலியார் நிக்காகை யுவப்பவே முடித்து
மங்கிலியங்கட்டி வாழ்த்திய னைவோரும்
தங்க சுனாபீலையுந் தையலையும் வாழ்த்தினர்கள்
சக்கூன் மகளும் தகுமார் சுனாபீலும்
மிக்க சிறப்பாக மேன்மையொடும் வாழ்ந்திருந்தார்.
(கண்ணி : 848-851)

சக்கூனுடைய மகளும் சுனாபீலும் இஸ்லாம் வழியில் இல்லற வாழ்வு மேற்கொண்டு இனிதாக வாழ்ந்திருக்க அனைத்து சிறப்புக் களும் ஒருங்கே பெற்று அல்லாஹ்வின் அருளாலும் அனைத்து நபிமார்களின் ஆசியுடனும் சக்கூன் அரசன் இனிது ஆட்சியை நடத்தியதாக நூலின் இறுதியில் குறிக்கப்பட்டுள்ளது.

**வாழ்த்து :**

இதன்பின் இறுதியில் உள்ள சில கண்ணிகளில் ஆசிரியர் வரிசை முகியித்தீன் புலவர்,

ஆதியருள் வாழி அகுமதுற்றசூல் வாழி
வேதநெறி வாழி விண்ணோர்கள் தாம் வாழி
அபூபக்கரு மறுதுமான் அண்ணல் அலி வாழி
நுபுவ்வத்து நபிபேரர் நுவல் அசனுசைன் வாழி
அசுகாபுமார் வாழி ஆலநபியாலவுலாது
இசைவார் பகுதாதின் ஏந்தல் முகியித்தீன் வாழி
மாலையணிமார்பன் வாகுனயினானீன்ற
காலமுகில் மீறான் கருணைக் குடும்பமெல்லாம்
ஆல்போற்றத்தழைத்தங் கருகுபோல் வேரூன்றி
மேல் சீரினோடும் வெற்றியொடுந்தான் வாழி.

(கண்ணி : 772-776)

என ஒரு நீண்ட வாழ்த்தும் அனைத்து நபிமார் (தீர்க்கதரிசிகள்) மீதும் அவுலியாக்கள் (இறைநேசர்) மீதும் பாடியுள்ளார். அத்துடன் நூல் படிப்போரும் வாழி என்று கூறி நூலை முற்றுப்பெறச் செய் துள்ளார் ஆசிரியர்.

**சிறப்பம்சங்கள் :**

இனி சக்கூன் படைப்போரில் இடம் பெற்றிருக்கும் சில சிறப்பம் சங்களை தொகுத்துக் காண்போம். சிறப்பம்சம் என்னும்போது இஸ்லாமிய சகாப்தத்திலும், அண்ணல் நபி (சல்) அவர்களின் வாழ்விலும் நடைபெற்ற வரலாற்று நிகழ்வுகள் சக்கூன் படைப் போரில் இடம் பெற்றிருக்கும் நிலையை சுட்டுதல் அவசியமாகும். சக்கூன் படைப்போர் வரலாற்று நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டதெனினும் இந்நூலில் இடம்பெறும் பல பாத்திர உரையாடல் மூலமாகப் பல்வேறு வரலாற்று நிகழ்ச்சிகளை ஆசிரியர் எடுத்துக் கூறியுள்ளார். இவ்வரலாற்று நிகழ்வுகள் அனைத்தும் அண்ணல் நபி (சல்) அவர்களின் பெருமையையும், சிறப்பையும் எடுத்துக் கூறுவதற்கே ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார் எனலாம். வரலாற்று நிகழ்வுகளை சுருங்கக் கூறுவதன் மூலம் இலக்கிய நாயகனுடைய பெருமையையும், வாழ்வியல் பின்புலத்தையும் படிப்போருக்கு எளிதில் ஆசிரியர் உணர்த்திவிடுகின்றார். அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

சக்கூன் படைப்போரின் ஆரம்பத்தில் போருக்குமுன் இஸ்லாத்தை ஏற்கும்படி ஒரு தூதுவனை நபி (சல்) அவர்கள் சக்கூனரசனிடத்து அனுப்பி வைத்தார்கள். அவன் சென்றபோது சக்கூனரசன் அவனை யாரென்று வினவ அதற்கு அத்தூதுவர் நபி (சல்) அவர்களுடைய தூதுவர் என்று கூறிவிடுவாராகில் பெருமானார் (சல்) அவர்களுக்குரிய முக்கியத்துவம் அங்கு பகைவர்களுக்கு தெரியாது போகும். எனவே தம்மை தூதுவர் என அறிமுகம் செய்யும்போது நபி (சல்) அவர்களுடைய பெருமையையும் புகழையும் சக்கூனரசனுக்கு உணர்த்தும் விதத்தில் பல்வேறு வரலாற்று நிகழ்வுகளையும் இணைத்து கூறுவதாக ஆசிரியர் அமைத்துள்ளார்.

ஆருடைய தூதரென்றங் கரசரவரைக் கேட்டான்
பேரும் வலுமைகளும் பேசுவேன் கேளுமன்னே
காணும் புவியுங் கடல்மலையுந்தான் கடந்து
தீனறியாப் பேர்களையே தீனிசுலாமிற் பயிற்ற
தூதாகி வந்த துரை முகம்மதாமவர்கள்
தீதான காபிர்களைத் தீனிசுலா மாக்கிவைத்தோர்
வட்டமதி தன்னை மண்ணில் வரவழைத்தோர்
கட்டித் தசையைக் கன்னிவடி வாக்கிவைத்தோர்
பதுறுப் படையொருகை மண்ணாலே சூறையிட்டோர்
அதபினிறையறுசி லன்றேறி மீண்டு வந்தோர்
மல்லாலபுஜகிலை மண்மேல்விழ வடித்தோர்
அல்லாஹ்வின் றூத றகுமதுற்றசூல் நயினார்
என்னைத் தூதாக ஏவினாருன்னருகே.

(கண்ணி : 160-166)

எனத் தூதுவர் உரைப்பதாக இடம் பெற்றுள்ள இச்செய்தியில் பெருமானாரின் வாழ்வில் நடைபெற்ற பல்வேறு வரலாற்று நிகழ்வுகள் இடம் பெற்றுள்ளன.

சக்கூன் படைப்போர் போர் நிகழ்ச்சியை மையமாகக்கொண்ட இலக்கியமாயினும் இப்போர் நிகழ்வின் நோக்கம் இஸ்லாத்தைப் பரப்புதல் என்னும் அண்ணல் நபி (சல்) அவர்களுடைய அரிய முயற்சியே ஆகும். எனவே படைப்போர் இலக்கியத்துள் ஆங்காங்கே இலக்கியப் போக்கின் கட்டமைப்பு சிதைவுறாத வகையில் இஸ்லாமியக் கோட்பாடுகள் எடுத்துரைக்கப்படுகின்றன. இக்கோட்பாடுகள் இஸ்லாமிய நெறியையும் பழக்க வழக்கங்களையும் விளக்கும் வண்ணம் ஆசிரியர் அமைத்துள்ளார். சக்கூனரசன் இறுதிப் போரில் தோல்வியடைந்தபின் இஸ்லாத்தின்மீது ஈமான் கொண்டு கலிமாக் கூறி முஸ்லிமாக மாறியபின் சக்கூனும் அவனைச் சார்ந்த கூட்டத்தாரும் இஸ்லாத்தின் நெறிகளை அறிந்துகொண்டதாக ஆசிரியர்

கூறும்போது பல்வேறு இஸ்லாமிய பழக்க வழக்கங்களும் கொள்கைகளும் எடுத்துக் காட்டப்படுகின்றன.

தலையிலே முடிதரித்துச் சருவந்துந்தான் முடித்து
விலையுயர்ந்த பட்டகற்றி வெண்டுகிலாற் சட்டையிட்டு
வெள்ளை துகிலாலே வெகுபூஷணம் புனைந்து
பள்ளியிலே வந்து பண்பாதியைத் தொழுது
தசுபீகு கையிலேந்தி சலவாத்துத் தானுரைத்து
அசுத்தக்கு பிரகற்றி யனைவோருந்தான் தொழுது
மற்ற பறுலு சுன்னத்து வாய்த்த முறையும் படித்து
நற்றவங்கள் தானாகும் நானுமுறை யறிந்து
வணக்கமிணக்கமுடன் வணங்கு முறையறிந்து
இணக்கமுடனே நல்ல இசுலா நெறியறிந்து
சக்காத்தின் துறையுந் தனதாகவே யறிந்து
மிக்கான நோன்பின் வெற்றியெல்லாந் தானறிந்து
கஜ்ஜி அதின் முறையுங் கனமாகத் தானறிந்து
மெச்சும்பல வியல்பு மேலாகத்தானறிந்து
நேசத் திருவளம் நெறிகளுஞ் சூழுகிற
ஆசையாகவுள்ள தெல்லா மறிந்த பின்னங் கேது சொல்வார்
(கண்ணி : 801-814)

மேற்சொன்ன பகுதிகளுள் இஸ்லாமியர்களின் அடிப்படைக் கோட்பாடுகள் விளக்கம் பெற்றுள்ளன. முதல் இரண்டு கண்ணிகளும் இஸ்லாமியர்களின் உடை மற்றும் உடல் கூறுகளுடன் தொடர்புடைய பழக்க வழக்கங்களை விளக்குகின்றன. ‘விலையுயர்ந்த பட்டகற்றி வெண்டுகிலாற் சட்டையிட்டு வெள்ளைத் துகிலாலே வெகு பூஷணம் புனைந்து’ என்னும் வரிகள் இஸ்லாம் ஆடம்பர வாழ்க்கையில் நாட்டமற்றது என்பதையும் எளிய வாழ்க்கையையே இஸ்லாம் போதிப்பது என்பதையும் உணர்த்துகிறது. இது தொடர்பாக அண்ணல் நபி (சல்) அவர்கள் தம் ஹதீதில் ‘பேருக்காகவும் புகழுக்காகவும் வேண்டி எவர் ஆடம்பர உடைகளை அணிகின்றாரோ அவருக்கு இறைவன் (மறுமை நாளில்) இழிந்த உடைகளை அணிவிப்பான்’ என்று கூறுகிறார்கள். எனவே விலையுயர்ந்த ஆடைகள் அணிவதை இஸ்லாம் விரும்பவில்லை. பிறிதொரு ஹதீதில் ‘நீங்கள் வெண்ணாடை அணியுங்கள். ஏனெனில் நிச்சயமாக இது உங்களுக்கு நல்ல ஆடையாகும். அன்றி உங்களின் மையித் (பிரேதம்) களுக்கும் அதைக்கொண்டே கஃபனிடுங்கள்’ என்று அண்ணல் நபி (சல்) அவர்கள் கூறியுள்ளார்கள். எனவே இதற்கேற்பவே இங்கு ஆடம்பர உடை அகற்றி வெண்ணிற உடையை சக்கூனும் அவனைச் சார்ந்தோரும் அணிந்ததாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

**உவமைச் சிறப்பு :**

சக்கூன் படைப்போரில் ஆசிரியர் ஆங்காங்கே கருத்துக்களை தெளிவுற விளக்குவதற்கு பல்வேறு உவமைகளை கையாண்டுள்ளார். இவ் வுவமைகள் அந்தந்த கருத்துக்களுக்கேற்ப அமைந்திருப்பதுடன் எளிமையாகவும் உள்ளன. சக்கூன் படைப்போரின் தொடக்கத்தில் அசுகாபிமார்கள் நாற்பதினாயிரம் பேர் பெருமானார் நபி (சல்) அவர்களைச் சூழ்ந்திருந்தது வான் மதியை வான் மீன்கள் சூழ்ந்தது போலிருந்ததாக குறிப்பிடுகிறார். இதே போன்ற உவமையை போருக்கு செல்லும்போது நபி (சல்) அவர்களைச் சுற்றி அசுகாபி மார்கள் சூழ்ந்து செல்லும் காட்சியை

வட்டமதி தன்னை வான்மீன்கள் சூழ்ந்தபோல்
இட்டமுள்ள நந் நபியை எல்லவருந் சூழ்ந்துவர

சென்றதாக உவமிக்கின்றார். நபி (சல்) அவர்கள் பல இடங்களில் வான் மதிக்கும் அசுகாபிமார்கள் விண்மீன்களுக்கும் உவமிக்கப்பட்டுள்ளார்கள்.

சக்கூனரசனுடைய பெரும் பதியைக் கண்ட எண்ணிக்கையில் குறைந்த அசுகாபிமார்கள் அச்சமுற்று வியப்படைகின்றனர். இந்நிலையை

நாடிய சக்கூன் பதி நற்புரிசை கண்டனரே
புரிசைதனைக் கண்டு புலிகாணும் மானதைப்போல்
வரிசைநபி தோழரெல்லா மனதிற் பயந்திருந்தார்

என ஆசிரியர் சுட்டுகின்றார். இங்கு புலி காணும் மானதைப்போல் என்பதில் புலி என்பது சக்கூன் அரசனுக்கும் மான் அசுகாபிமார் களுக்கும் உவமிக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் சக்கூன் படைப் போரின் தொடக்கத்திலேயே சக்கூனரசன் புலி போன்ற கொடிய தன்மைகளுடையவன் என்பதையும் அசுகாபிமார்கள் மான் போன்ற மென்மைத் தன்மையுடையவர்கள் என்பதையும் ஆசிரியர் வெகு எளிதாக உணர்த்தி விடுகின்றார். இதே புலி உவமையை வீரத்திற் காக பயன்படுத்தும் போது அலி (றலி) அவர்களுக்கு ஆசிரியர் உவமித்து உள்ளார். அலி (றலி) அவர்கள் சக்கூன் படைகளுக் கிடையே பாய்ந்து அங்குள்ள யானைகளையும் வெட்டி வீழ்த்தும் காட்சியைக் கூறும்போது ஆயன் பசுக்களுக்கிடை வரும் புலிபோல் பாய்ந்து வந்ததாக வரிசை முகியித்தீன் புலவர் குறித்துள்ளார்.

நாசனலியார் நவிலுகின்ற கெச்சிதமாய்
ஆயன் பசுக்கிடையி லரும்புலி போலப் பாய்ந்து
ஆனைப்படைகளங் ஙனலறிக் கொண்டோடிடவே

எனவே ஒரு உவமானத்தை தாம் எடுத்துக்கூறும் கருத்துக்களின் தன்மைகளுக்கேற்ப ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார்.

சக்கூன் படைப்போரில் முதன் முதலில் இஸ்லாத்தைத் தழுவும் படைத் தளபதியான சுனாபீல் அதன்பின் காபிர்களை வெட்டி வீழ்த்தும் காட்சியை எடுத்துக் கூறும்போது காபிர்களின் சிரசு சிதறி விழுவது உடைந்த தயிர்க் குடம்போல் இருந்ததாக குறிக்கப் பட்டுள்ளது.

அடுத்து வெட்டினாரதனை யவன் சிரசுதான் சிதறி
யுடைத்த தயிர்க்குடம் போலு லுறச்சிந்தின் மூளை யெல்லாம்
செறிந்த பரியுடனே சென்றார் சுனாபில்தான்

என உவமிக்கப்பட்டுள்ளது.

பிறிதொரு இடத்தில் மாலை நேரத்தில் சந்திரன் எழும் காட்சியை கூறும்போது ஆசிரியர் சந்திரன் முகம்மது நபி (சல்) அவர்களின் முகம்போல் காட்சியளித்ததாக குறிப்பிட்டுள்ளார்.

வடிவங்குணமு முள்ள முகம்மதுற்றசூல் முகம்போல்
கெடியுடனே சோமனது கிழக்கே யெழுந்ததுவே

சக்கூன் படைப்போரின் இறுதியில் சக்கூன் மகளுக்கும் படைத் தளபதி சுனாபீலுக்கும் திருமணம் நடைபெற்றதாகக் குறிப்பிடும் ஆசிரியர் அவர்கள் மனம் ஒன்றி இல்வாழ்வு மேற்கொண்டதை அடுக்குவமை களால் பின்வருமாறு விவரித்துள்ளார் :

சக்கூன்மகளும் தருமாரசனாபீலும்
மிக்கசிறப்பாக மேன்மையொடும் வாழ்ந்திருந்தார்
நகமுஞ்சதையும் போல் நாடோறும் வாழ்ந்திருந்தார்
வகையன்றில் பேடுடனே வாழ்ந்ததுபோல் வாழ்ந்திருந்தார்
பாலும் பழமும்போற் பகையாது வாழ்ந்திருந்தார்
மாலிமையும் விழிபோல் வாகாக வாழ்ந்திருந்தார்
(கண்ணி : 850-853)

இவ்வுவமைகள் சக்கூனரசனுடைய மகள் சுனாபீல் ஆகிய இருவரது இல்லற வாழ்வின் பிணைப்பை நமக்கு எளிதில் உணர்த்துகிறது. வரிசை முகியித்தீன் புலவர் தாம் உணர்த்தக் கருதும் கருத்துக்களுக்கு உருவமளிக்கும்போது பயன்படுத்தும் உவமைகள் மிக எளியதாகவும் நடைமுறை உவமைகளாகவும் இருப்பதால் கவிதைப் போக்கு தடை யின்றியும் எளிதில் புரியும்படியும் அமைவதற்கு அவைகள் பெரிதும் உதவுகின்றன எனலாம்.

உவமைகளை வரிசை முகியித்தீன் பயன்படுத்தியிருப்பது போல் ஆங்காங்கே சக்கூன் படைப்போரில் சூழல் வெளிப்பாட்டிற்கு பழமொழிகளையும் கையாண்டுள்ளார். போரில் சக்கூனின் இளைய மகன் அலி (றலி) அவர்களையும், அசுகாபிமார்களையும் கண்டு இழிவான வார்த்தைகளைக் கூற அதனைக் கேட்ட அலி (றலி) அவர்களின் நிலையை விளக்கும்போது

மந்தவெளியில் வருகையிலே நாய் குலைத்தால்
கையிற்றடியிருக்கக் கரிபரியுந் தேடுவாரோ

என்னும் பழமொழியை பயன்படுத்துவதன் மூலம் சக்கூனரசனுடைய மகனுடைய நிலையையும் அலி (றலி) அவர்களது போர் வலிமையையும் ஆசிரியர் விளக்கியுள்ளார். இதேபோல் சக்கூனரசனுடைய மூத்த மகன் மாலீக், அலி (றலி) அவர்களை வெட்டி வீழ்த்தக் கருதி போர்க்களத்திற்கு வரும்போது

புலியோடெதிர்த்துப் பொருதுமோ ஆட்டுக்கிடாய்
(கண்ணி : 522)

என்னும் பழமொழியின் மூலம் அலி (றலி) அவர்களின் வலிமையை ஆசிரியர் உணர்த்துகிறார். இதே சூழலில் அலி (றலி) அவர்களைக் கண்டுற்ற சக்கூனுடைய மகன் மாலீக் அவரது தோற்றத்தைக் கண்டு அச்சம் அடைந்தபோது அலி (றலி) அவர்கள் கூற்றில் ஒரு பழமொழி இடம் பெற்றுள்ளது.

பஞ்சவர்ண நற்கிளிகள் பலபேச்சுத்தான் பேசும்
மிஞ்சவது தன்னை விரல்பிடித்தழைக்கில்
கிளிகளந்த பேச்சுவிட்டுக் கீக்கீயெனுங் கண்டாயே.
(கண்ணி : 528-529)

எனக் கூறுவதாக உள்ளது. ஏற்கனவே தம்மை இகழ்ந்து கூறியதை மறந்துவிட்டு போர்க்களத்தில் தம் வலிமையை கண்டு அச்சமுறும் மாலீக்கின் நிலையை அலி (றலி) அவர்கள் கிளியின் பழமொழி மூலமாக உணர்த்துவதாக உள்ளது. இவை தவிர்த்து பிற அணி நலன்களை வரிசை முகியித்தீன் புலவர் பெரிதும் பயன்படுத்தவில்லை. ஒரே ஒரு இடத்தில் அற்புத நவிற்சியணியினை பயன்படுத்தியுள்ளார். மாலை நேரத்தில் சூரியன் மறைவது இயற்கை. இச் சூரியன் சக்கூனும் அவனது படை வீரர்களும் வஞ்சனை செய்து அலி (றலி) அவர்களைப் பிடிப்பதற்காக பெரும் குழியில் விழச் செய்தவுடன்

அவருக்கு ஏதும் தீங்கு வருமோவென அஞ்சி சூரியன் மறைந்ததாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

மொழி நடையைப் பொறுத்தவரையில் வரிசை முகியித்தீன் புலவர் அனைவருக்கும் விளங்கத்தக்க எளிய நடையையே கையாண்டுள்ளார் எனலாம். சக்கூன் படைப்போரின் எளிமைக்குரிய பிறிதொரு காரணம் ஆசிரியர் கண்ணிகளாகவும் நாடோடிப் பாடற் பாங்கிலும் கதைப் பகுதியை விவரித்துச் செல்லுதலாகும். இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் ஆரம்பகால நூல்களுள் ஓர் இடத்தைப் பெறும் சக்கூன் படைப்போர் இஸ்லாமியத் தமிழிலக்கிய வகைக்கு முதன்மையான நூலாக இடம் பெற்று சிறக்கிறது.

---

# ஒன்பதாம் இயல்

## முதுமொழி மாலை

தமிழ்ச் சிற்றிலக்கியங்களுள் தனித்ததொரு இலக்கியப் பிரிவே மாலை என்னும் இலக்கிய வடிவமாகும். இம் மாலை இலக்கிய வகையுள் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையை இஸ்லாமியத் தமிழிலக்கியம் பெற்றுள்ளது. இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் மூன்றில் ஒரு பகுதியான இலக்கியங்களை தன்னகத்தே அடக்கியுள்ள இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியத்துள் ஒரு முக்கிய இடத்தைப் பெறுவதே மாலை இலக்கிய வகையாகும். அத்துடன் இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களுள் தனித்ததொரு இலக்கிய வடிவத்தின் கீழ் அதிகமான நூல்களைப் பெற்றிருப்பதும் மாலை என்னும் சிற்றிலக்கிய வடிவமே ஆகும். இம் மாலை இலக்கிய வடிவத்திலமைந்த சுமார் இருநூறுக்கும் மேற்பட்ட இஸ்லாமியத் தமிழிலக்கியங்களை நம்மால் அறிய முடிகிறது. எனவே மாலை இலக்கியப் பிரிவு இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் குறிப்பாக இஸ்லாமிய தமிழ்ச் சிற்றிலக்கியங்களுள் குறிப்பிடத்தக்கதோர் இடத்தைப் பெறுகிறதெனலாம். இத்தகு முக்கியத்துவம் வாய்ந்த மாலை இலக்கியத்துள் குறிப்பிடத்தக்க முன்னோடி இலக்கியமாகத் திகழ்வதே முதுமொழி மாலை என்னும் இலக்கியமாகும்.

**மாலை வடிவம் :**

மாலை இலக்கியப் பிரிவிற்கென வரையறை செய்யப்பட்ட எந்தவொரு இலக்கண அமைதியையும் நம்மால் கூறவியலாது. இலக்கண நூல்களான பாட்டியல் இலக்கணங்களும் மாலை சிற்றிலக்கியப் பிரிவுக்கென எந்தவொரு விளக்கத்தையும் வரையறை செய்து காட்டவில்லை. எனவே மாலை என்னும் பெயர் பெற்றமைகின்ற இலக்கியங்கள், உருவத்தால் எந்தவொரு யாப்பமைதியையும் பெற்று வரலாம். அதேபோல் மாலை இலக்கியத்துள் உள்ளடக்கக் கருத்துக்களும் இன்னவை பற்றியதாகத் தானிருக்க வேண்டும் என்ற கட்டுப்பாடு கிடையாது. பொதுவாக ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சி அல்லது தொடர் விளக்கங்கள் பெரும்பாலும் மாலை இலக்கியங்களுள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொகுக்கப்பட்டிருக்கும். புலவர்கள் தாம் கருதும் நோக்கங்களுக்கு அழுத்தம் தரும் பொருட்டும் ஒரே கருத்தை வலியுறுத்தியும் பல்வேறு பாடல்களை யாத்துத் தொகுத்து மாலை என்னும் பெயரின்கீழ் வெளியிட்டிருப்பதையும் அறியமுடிகிறது. இவ்வகையினைச் சார்ந்த உள்ளடக்கக் கருத்துக்களைப் பெற்றிருப்பதே முதுமொழி மாலையாகும். இந்நூல் ஆசிரியர் பெருமானார்

நாயகம் (சல்) அவர்களைக் காணும் நாள் எந்தாளோ? என்ற தன் ஏக்கத்தையே முதுமொழி மாலையில் எழுத்துப்படுத்தி இலக்கிய உருவம் அளித்துள்ளார். ஆசிரியரின் இறையருள் வேட்டல் முது மொழி மாலை இலக்கியத்தின் மூலம் அழுத்தம் பெறுவதுடன் படிப் போர் உள்ளத்திலும் ஆசிரியரின் உணர்வுப் பெருக்கை உணரச் செய்கிறது.

இந்நூல் மாலை இலக்கியப் பெயரினைத் தலைப்பாகப் பெற் றிருப்பினும் இந்நூலின் இறுதியில் உள்ள பதிப்புரையின் மூலமாக இந்நூல் முனாஜாத்து என்றும் வழங்கப் பெற்றிருக்கவேண்டும் என்பது தெரிய வருகிறது. முதுமொழி மாலையின் இறுதியில் நூற் பயனாகக் குறிப்பிடும்போது 'எனது பிறவிகளாகிய மூமின் முஸ்லிம்கள் யாபேருக்கு மிகவு மேழையாகிய நான் தெரியப்படுத்துவதியாதெனில், இந்த முதுமொழி மாலையென்னும் முனாஜாத்தை, இரவாலும் பகலாலும் நாளொன்றிற் கைந்துவிடுத்தந் தொழுது முடிந்த பின்னர், சொல்லும் பொருளும் சிதைவின்றி மனம், வாக்கு, காயம் இம் மூன்றும் ஐக்கியப்பட்டிருந்து கொண்டொருதிரம் படித்து முடிவில், தீனி னமானிதமான கருத்துக்கிசைந்த நாட்டங்களைக் குறித்து, அல்லாகுதஆலா இடத்திலே துஆவிரந்து கேட்கில், அவன்றனது தூதராகிய நபிநாயக முகம்மது சல்லல்லாகு அலைகி வசல்லமவர் களுடைய பொருட்டால், அந்த ஹாஜத்துகளை நிறைவேற்றிவைக்கப் போதுமானவன், ஆமீன் ஆமீன் யாறப்பல் ஆலமீன்' எனக் குறிக்கப் பட்டுள்ளது. இதிலிருந்து இந்நூலுக்கு முனாஜாத்து என்ற பெயரும் வழங்கியிருந்திருக்கவேண்டும். முனாஜாத்து என்பது அறபுமொழியில் இரகசியம் பேசுதல் என்று பொருள்படும். வழிபாட்டுப் பிரார்த்தனை என்பதையும் இச்சொல் குறிக்கும். இத்தகு பொருளமைதியுள்ள முனாஜாத்து என்னும் சொல் இஸ்லாமியத் தமிழிலக்கிய உலகில் தனித்ததொரு இலக்கிய வடிவத்திற்குப் பெயராகவும் அமைந்துள்ளது. அல்லாஹ்விடமும் அவனது திருத்தூதர்களிடமும் அவனருள் பெற்ற தீர்க்கதரிசிகளிடமும் மன்றாடி வேண்டிநிற்றற் பொருளில் பாடப்படும் இஸ்லாமியத் தமிழிலக்கியங்கள் முனாஜாத்து என்னும் பெயர் பெற்று வழங்குகின்றன. இம் முனாஜாத்து இஸ்லாமியத் தமிழிலக்கியங் களுக்கு எண் மற்றும் யாப்பு வரையறைகள் கிடையாது. இப்பொருள் விளக்கத்தின் அடிப்படையிலும் முதுமொழி மாலையை அணுகினால் முனாஜாத்து என்ற பெயரும் ஒருவகையில் இந்நூலுக்குப் பொருந்துவ தாகும். காரணம் முதுமொழி மாலையில் அமைந்துள்ள செய்யுள்கள் அனைத்தும் அல்லாஹுத்த ஆலாவின் அருள் பெற்ற இறுதித் தூதர் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களிடத்து 'என்று காண்குவனே' என்று மன்றாடி வேண்டுவதாகவே அமைந்துள்ளன.

எனவே முதுமொழி மாலைக்கு முனாஜாத்து என்ற பெயரும் இருந் திருந்து பிற்காலப் பதிப்புக்களில் அப்பெயர் நீக்கப்பட்டு முதுமொழி மாலை என்னும் பெயரே நிலைபெற்றிருக்க வேண்டும்.

**ஆசிரியர் :**

முதுமொழி மாலையை இயற்றியவர் சீறாப்புராணம் எழுதிய உமறுப்புலவர் என்ற கருத்தே பெரிதும் நிலவுகிறது. இக்கருத்து முதுமொழி மாலையைப் பதிப்பித்துள்ள பதிப்பாசிரியர் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர்கள் மூலமாகவே பெரிதும் நிலைநிறுத்தப் பெற்றுள்ளது. உமறுப் புலவரே முதுமொழி மாலையை இயற்றியவர் என்ற கருத்திற்குப் பின்புலமாக சில கருத்துக்களும் நிலவுகின்றன. 'எட்டப்ப நாயக்கரின் அரசவைப் புலவராகத் தொண்டாற்றிய உமறுப் புலவரை சந்திக்கும் வாய்ப்பினைப் பெற்ற வள்ளல் சீதக்காதி தம் இல்லத்திற்கு விருந்துண்ண உமறுப் புலவரை அழைத்தார். அத்தருணத்தில் தம் நெடுநாளைய ஆவலினை சீதக்காதி உமறுவிடம் தெரியப்படுத்தினார். பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் வரலாற்றினை புலவர் பெருமகனார் இனிய தமிழில் காவியமாக்கித் தரவேண்டும் என வேண்டினார் சீதக்காதி. தம்மீது சுமத்தப்பட் டிருக்கும் பெரும் பொறுப்பினை மனம் உவந்து ஏற்றுக் கொண்டார் உமறுப் புலவர்.

அதன்பின் சீதக்காதி உமறுப்புலவரை அழைத்துக்கொண்டு தமது ஆன்மீக ஆசானாகிய சதக்கத்துல்லா அப்பா அவர்களிடம் அழைத்துச் சென்று உமறின் இசைவினை எடுத்துக் கூறி அறபு மொழியில் உள்ள சீறா சரித்திரத்தைத் தமிழில் மொழி பெயர்த்து உரை தந்தால் அதனை உமறு புராணமாக இனிய தமிழில் பாடுவார் எனக் கேட்டுக் கொண்டார். புலவரவர்கள் பாளையப்பட்டு இராஜ சமஸ்தான பழக்கம்போலவே கிருதா மீசை வைத்துத் தாடியை வெட்டியிருப்ப தோடு தந்தபந்தியிற் காவியிட்டும், கைகால் நகங்களுக்கு மருதாணி யிட்டும் கைகளில் முண்டாவில் வாஜீபந்து கட்டியும் பொன்னரை ஞாணிட்டும் சரிகையினாலாகிய முறுக்குத் தலைப்பாகை கட்டியும் மாறுதார்ப்பாய்ச்சியும் ஷைகு தோன்றியதை சதக்கத்துல்லா சாகிபொ லியவர்கள் கண்டு மிகவுங் கோபமாகிக் காபிரீன் (முஸ்லிம் அல்லாத வர்) களுடைய உடை உடுத்தியிருக்கின்ற இவரா நபி (சல்) அவர் களுடைய ஏற்றம் மிகு வரலாற்றை பாடுவாரென்று பலவாறாக இழித்துரைத்து சீறாவிற்கு உரை தரமறுத்துவிட்டார்கள். அது கேட்ட சீதக்காதி மரைக்காயரவர்கள் தம் பொருட்டால் உமறுப் புலவருக்கு இழிவு நிகழ்ந்ததை எண்ணி வருத்தமடைந்து அவ்வி டத்தை விட்டு அகன்றார்.

**உமறுவின் கனவு :**

மனம் பெரிதும் சஞ்சலமடைந்த உமறுப் புலவரவர்கள் பள்ளிக்குச் சென்று இறைவனை எண்ணியும் றசூல் நாயகத்தை நினைத்தும் துவா இறைஞ்சினார்கள். இந்நிலையில் பெருமானார் நபி (சல்) அவர்களை எண்ணி உமறுப்புலவர் 'என்று காண்குவனே' என்று முடிவிலமைத்த முதுமணிமாலையென்னும் முனாஜாத்தொன்றைப் பாடிக் கொண்டிருக்கும் போதே கண்ணயர்ந்து கவலையுடன் நித்திரையில் ஆழ்ந்தார்கள். அப்போது நபி நாயகம் முகம்மது (சல்) அவர்கள் உமறுக்கு கனவில் திருக்காட்சி நல்கினார்கள். உமறென்று பெயர் சொல்லி அழைத்து: என்னுடைய சதக்கு உம்முடைய உள்ளத்தை அறியாமல் உடை பாவனையைக் கொண்டு கோபமாகச் சொன்னதேயன்றி வேறில்லை. நானவரிடத்தினும்மைக் குறித்துச் சொல்கிறேன். ஆதலால் நீர் சுபுகு (அதிகாலைத் தொழுகை) தொழுதுவிட்டு மனம் நாணாமலவரிடத்திற் போனால் உம்மைச் சங்கை செய்து சீறாவுரை எழுதித் தருவார் பாடுமென்று சொல்லி னார்கள். பெருமானார் நபி (சல்) அவர்களின் குரல் கேட்டு புலவர வர்கள் விழித்துப் பார்த்தார். அது சமயம் உலகத்தில் உள்ள ஒளிகள் யாவையும் ஒன்றுபடுத்தி ஒப்பிட்டாலும் ஒவ்வாத பெரிய ஒளியொன்று தோற்றக் கண்டு சீறாவில் முதல் காப்புச் செய்யுளாம் 'திருவினும் திருவாய்' என்னும் செய்யுளையும் அதற்கடுத்த சில செய்யுட்களையும் பாடி எழுதிக் கொண்டு சுபுகு தொழுதுவிட்டு சதக்கத்துல்லா அப்பா அவர்களின் இல்லம் நோக்கிச் சென்றார் உமறு.

அங்கே சதகத்துல்லா அப்பா அவர்களின் கனவிலும் நபி (சல்) அவர்கள் தோன்றி உமறுபற்றி எடுத்துரைத்து சீறாவிற்கு உரை கொடுக்குமாறு கூறிச் சென்றார்கள். விழித்தெழுந்த சதகத்துல்லா அப்பா உமறுவின் வரவினை எதிர் நோக்கிக் காத்திருந்து அவர் வந்த பின் சில தினங்களில் பல அரிய அறபு கித்தாபுகளின் துணைகொண்டு பெருமானார் அவர்களின் வாழ்க்கையைத் தமிழில் உரைசெய்து தர அதனை சீறாவென்னும் இனிய பெருங்காப்பியமாக உமறுப் புலவர்கள் உருவாக்கினார்கள்.

மேற்சொன்ன கருத்து சீறாப்புராணம், மற்றும் முதுமொழி மாலை தோன்றிய பின்புல வரலாறாக இஸ்லாமியத் தமிழிலக்கிய உலகில் பெரிதும் நின்று நிலவுகின்றது. இக்கருத்துக்கள் சீறாப் புராணஞ் செய்யப்பட்ட சரித்திர சுருக்கமாக பதிப்பாசிரியர் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவரவர்கள் ஆயிரத்திதொள்ளா யிரத்து இரண்டாம் ஆண்டு பதிப்பிட்ட சீறாப்புராணம் பதிப்பின் இறுதியில் விரிவாக இடம் பெற்றுள்ளன. இக்கருத்துக்களின் அடிப் படையிலேயே தமிழுலகில் முதுமொழி மாலை உமறுப்புலவரவர்களால் இயற்றப்பட்டது என்ற கருத்து நிலவுகிறது.

**பதிப்பு :**

நமக்குக் கிடைத்திருக்கும் முதுமொழி மாலையின் முந்திய பதிப்பும் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவரவர்களாலேயே பதிப்பிக்கப்பட்டுள்ளது. இப்பதிப்பு ஹிஜ்றி ஆயிரத்தி முன்னூற்றியெட்டாமாண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதற்கிணையான கிறித்துவ ஆண்டு ஆயிரத்தி எண்ணூற்றி தொண்ணூறு ஆகும். கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவரவர்கள் கொழும்பில் நெடுநாளாய் புத்தக வியாபாரஞ் செய்தவரான நெ. வா. காதிர் நெயினா வெவ்வையவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க முதுமொழி மாலையை சென்னை மநோன்மணி விலாச அச்சுக்கூடத்திற் பதிப்பித்துள்ளார். இவர் தம் பதிப்பில் திருத்தமான பதிப்பு என்று குறித்திருப்பதால் இதற்கு முந்திய பதிப்பும் இருந்திருக்கவேண்டும். நமக்குக் கிடைத்தில. ஆயிரத்தி எண்ணூற்றி தொண்ணூறில் முதுமொழி மாலை என்று பதிப்பித்திருக்கும் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் ஆயிரத்திதொள்ளாயிரத்தி இரண்டாமாண்டு சீறாப்பதிப்பில் அதே நூலை 'முதுமணி மாலை' [சீறாப்புராணம் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் பதிப்பு (1902, பக். 752)] என்று குறிப்பிட்டுள்ளார். எனவே முதுமொழி மாலைக்கு முதுமணி மாலை என்ற ஒரு பெயரும் இருந்திருக்கவேண்டும். அல்லது முதுமணி மாலை என்ற பெயரை மாற்றம் செய்து கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் முதுமொழி மாலை என்று பதிப்பித்திருக்கவேண்டும். இப்பெயர் மாற்றம் போலவே முதுமொழி மாலையின் ஆசிரியர் உமறுப்புலவர் என்ற கருத்தும் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் மூலமாகவே இலக்கிய உலகில் நிலைபெற்றுள்ளது.

**காலம் :**

முதுமொழி மாலையின் காலம் பற்றிய கருத்தும் தெளிவுறத் தெரியவில்லை. முதுமொழி மாலையை பதிப்பாசிரியர் கருத்துப்படி உமறுப் புலவரவர்களே இயற்றி இருந்தால் இது சீறாப்புராணத்திற்கு முந்தியதாகத்தானிருக்க வேண்டும். இக் கருத்தினடிப்படையிலேயே முதுமொழி மாலையை இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றில் முதற் தொகுதியில் இடம் பெறச் செய்துள்ளோம். ஆனால் நூலினுள் காலம் பற்றிய செய்தியை அறிவதற்கு எவ்வித அகச் சான்றுகளும் இல்லை.

**செய்யுள் அமைப்பு :**

முதுமொழி மாலையுள் எண்பத்தியெட்டு செய்யுள்கள் இடம் பெற்றுள்ளன. செய்யுள்கள் அனைத்தும் எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தமாகும். இச் செய்யுள்கள் ஒவ்வொன்றும் 'முகம்மதை யென்று காண்குவனே' என்னும் ஈற்றடியுடன் முற்றுப் பெறுகின்றன,

நூலின் இறுதிச் செய்யுள் முடிவில்லாததாக உள்ளது. முதுமொழி மாலையுள் இடம் பெற்றிருக்கும் எண்பத்தெட்டு செய்யுள்கள் அனைத்திற்கும் ஒரு தொடர் பொருளைக் கூறுதல் இயலாது. செய்யுள்களில் உள்ள பொதுத்தன்மை அனைத்துச் செய்யுள்களிலும் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் புகழ் பாடுதலாகும்.

**பெருமானார் புகழ் :**

அனைத்துச் செய்யுள்களிலும் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் புகழினை ஆசிரியர் பலவாறாகப் புகழ்ந்து பாடுகின்றார். நான்மறைக்கு எட்டாத பேரின்ப வாழ்வாகவும் இஸ்லாம் வழி தம் வாழ்வினை நடத்தி பெரும் பேறு பெற்ற மெய்ஞ்ஞான தேசிகராகவும் நபி (சல்) அவர்கள் புகழப்படுகிறார்கள்.

நான்மறைக் கெட்டாப் பேரின்ப வாழ்வை
  நவிலுமா விக்குறு துணையைத்
தீன்வழி நடத்தி யானந்தக் காட்சி
  சேர்க்குமெய்ஞ் ஞானதே சிகரைப்
பான்மறை ஞான பாகைக ளுணர்ந்த
  பத்தர்க ளெடுத்தசற் குருவை
தானமா ரமுதத் திருமுகம் மதுவைத்
  தயவுற வென்றுகாண் குவனே.

(முதுமொழி மாலை : 75)

பிறிதொரு செய்யுளில் பெருமானார் (சல்) அவர்கள் நபிகளுக்கரசராகவும், இருநிதித்தருவாகவும். இஸ்லாமிய மரபுகளுக்கேற்ப தம் வாழ்வினை மேற்கொண்ட தனிச் சுடராகவும் காட்டப்படுகிறார்கள்.

ஞானவா ரிதியை நபிகளுக் கரசை
  நானில மேல்சுவ டுறாத
வானமா மணியை யிருநிதித் தருவை
  மரபுகட் கொரு தனிச் சுடரை
மோனமா தவர்க டொழுநவ மணியை
  மூவுல கனைத்துமோ ருலகிற்
கோனியல் புரிய வருமுகம் மதுவைக்
  குணமுட னென்றுகாண் குவனே

(முதுமொழிமாலை : 86)

இவ்வுலகில் நாயகம் நபி (சல்) அவர்களுக்கு முன் எத்தனையோ நபிமார்கள் தோன்றியிருப்பினும் அவர்களால் சாதிக்க முடியாத அருஞ்செயலை சாதித்தவர் அண்ணல் நபி (சல்) அவர்களாவர். இஸ்லாத்தை இவ்வுலகில் நிலைநாட்டி உலக வரலாற்றையே

மாற்றியமைத்த பெருமை நபி (சல்) அவர்களையே சாரும். எனவேதான் இவர்களைப் பற்றிக் கூறும்போது அல்லாஹ் தன் திருமறையில் இவர்களின் வாழ்வு மனித இனத்திற்கு அழகிய முன்மாதிரி என்று கூறுவதுடன் 'நபிமார்களின் கடைசி முத்திரை' என்றும் குறிப்பிடுகின்றான். (அல்குர்ஆன் 33 : 40) மனிதர்களுள் மேலானவர்கள் நபிமார்கள். அவர்களில் முத்திரை போன்றவர்கள் பெருமானார் நாயகம் (சல்) அவர்களாவார்கள். இக்கருத்தினைப் புலப்படுத்தும் வகையிலேயே மேற்சொன்ன பாடலில் முதுமொழி மாலை ஆசிரியர் பெருமானாரை 'நபிகளுக்கரசர்' என்று புகழாரம் சூட்டியுள்ளார். இவ்வுலகில் தோன்றியுள்ள 124000 நபிமார்களின் செயல்கள் அனைத்திற்கும் முத்திரை வைத்தது போன்ற மாபெரும் அரிய செயலை செய்து முடித்த பெருமை நாயகம் (சல்) அவர்களையே சாரும். தனிச் சிறப்போடு இவ்வுலகில் தோன்றிய முகம்மது நபி (சல்) அவர்களை என்று காண்குவனே என முதுமொழி மாலை ஆசிரியர் கூறும்போது இறையவன் உலகமைத்து தூதராக நபி பெருமானாரை அனுப்பி வைத்த பெருமைகளையும் இணைத்து இவ்வாறு கூறுகின்றார்.

வெறுவெளி யாகிப் பேரொளி வாகி
  விளங்குமோ ரருவுரு வாகி
யறையும்பல் லுயிராய் முக்குண மாகி
  யலகிலா வுலகமைத் தளித்த
விறையவன் றூதைத் தொலைவிலா னந்தத்
  திருந்த நிர்மலச் செழுங் கொழுந்தை
நறைகமழ்ந் தொளிரும் புயமுகம் மதுவை
  நலனுற வென்றுகாண் குவனே

(முதுமொழிமாலை : 36)

அகிலமெல்லாம் படைத்துப் பரிபாலிக்கும் உருவமற்ற ஒருதனி முதல்வனான அல்லாஹ் இவ்வுலக வாழ்வை உய்விக்கும் பொருட்டே அதனைப் படைத்து அதற்கு வழிகாட்டியாக இறைத் தூதர்களை அனுப்பி வைத்துள்ளான். இதனை உணர்த்தும் வகையிலேயே இங்கு பெருமானார் நாயகம் (சல்) அவர்கள் 'இறையவன் தூது' எனச் சுட்டப் பட்டுள்ளார்கள். நபி (சல்) அவர்கள் இவ்வுலக வாழ்வானது பல தெய்வ விக்ரக வழிபாடுகளாலும், மூடநம்பிக்கைகளாலும் சூழப்பட்டு இருளில் மூழ்கிக் கொண்டிருந்தபோது உலகை உய்விக்கும் வழியாக இஸ்லாம் மார்க்கத்தை எடுத்துக்காட்டி நேர்வழிப்படுத்தியவராவார் கள். அத்துடன் இவ்வுலகில் உள்ள காரணங்களையும் காரியங் களையும் கதிபெற நடத்துபவராகவும் விளங்கினார்கள். இப் பெருமைகளை இணைத்து அண்ணல் நாயகம் (சல்) அவர்களை ஆசிரியர் பின்வருமாறு புகழ்கின்றார்.

ஆரண முழுதும் நேர்வழி முழுது
மருளிய விநோதயப் பொருளைக்
காரண முழுதுங் காரிய முழுதுங்
கதிபெற நடத்துமெங் கோவை
வாரண மஞ்சி லேறியே சுவன
முலாவரு மனோலயக் குருவைப்
பூரண வதன முகம்மது நபியைப்
பொலிவுற வென்றுகாண் குவனே
(முதுமொழிமாலை: 87)

நபி பெருமானார் (சல்) அவர்கள் வேதங்கள் அனைத்தையும் அறிந்தவராவார்கள். இதனை உணர்த்து வகையிலேயே ஆரண முழுதும் அறிந்தவர் என்று இங்கு ஆசிரியர் சுட்டியுள்ளார். அல்லாஹ் தன் திருமறையில் பெருமானார் பற்றி, ‘(நபியே!) உம்மை உலகத் தார் யாவருக்கும் ஓர் அருளாகவே அனுப்பியிருக்கிறோம்’ (அல் குர்ஆன் 22 : 107) என்று கூறுகின்றான். இத்தகு அருட்கொடையாக முகம்மது நபி (சல்) அவர்கள் வாழ்வில் மனித இனத்திற்கு அழகிய முன்மாதிரி இருப்பதாகவும் குறிப்பிடுகின்றான் (அல்குர்ஆன் 33:21). வாழ்வின் பல்வேறு துறைகளிலும் உள்ளவர்கள் நபி (சல்) அவர்களின் வாழ்வில் ஒரு முன்மாதிரியைக் காணலாம். காரணம் இவ்வுலக வாழ்வில் அனைத்து நிகழ்வுகளையும் அவற்றிற்கான காரியங்களையும் அறிந்தவர் பெருமானார் நாயகம் (சல்) அவர்களாவார்கள். இத்தகு உண்மையைத்தான் முதுமொழிமாலை ஆசிரியர் ‘காரண முழுதும் காரிய முழுதுங் கதிபெற நடத்துமெங்கோ’ என மேற்சொன்ன செய்யுளில் பாடியுள்ளார். இத்தகு முறையில் உலக வாழ்வின் காரிய, காரணங்களுக்கு அரசராக இருந்தபோதிலும் ‘அல்லாஹ் நாடினா லன்றி, நான் எனக்கு யாதொரு நன்மையோ தீமையோ செய்து கொள்ள எனக்குச் சக்தியில்லை’ எனக் கூறும்படி திருமறையில் (7:188) நபி (சல்) அவர்களுக்கு இறைவன் கட்டளையிட்டுள்ளான். எனவே எல்லாம் வல்ல அல்லாஹ்மீதே நாட்டம்கொள்ளத் தூண்டும் நபி (சல்) அவர்கள் அத்தகு முறையில் இறைவனின்மீது நாட்டம் கொண்டு தியானித்திருப்பவர்களுக்கு உதவியாக இறை நாட்டத்தை யும் இன்னருளையும் நாயகமவர்கள் அளித்துதவுவார்கள். இதனை,

பரகதி யுணர்ந்தோர்க் கருடயா பரரைப்
பரவினைத் தொடரறுத் தவரை
யருமறைச் சான்றோர்க் கரியசான் றவரை
யாரணத் துறையரும் பொருளைக்
கரையிலாத் தவத்தின் மீதுநின் றோரைக்
கதிதரும் வழித்துணை மருந்தை

வரமள வில்லாக் குரிசினந் நபியை
முகம்மதை யென்றுகாண் குவனே
(முதுமொழிமாலை : 3)

என ஆசிரியர் சுட்டுகின்றார். வாழ்வினை நல்வழிப்படுத்தி இறையருள் பாலிக்கச் செய்யும் துணைவர் அண்ணல் நபி (சல்) அவர்களாதலால் ஆசிரியர் வாழ்விற்கு 'வழித்துணை மருந்து' எனப் பெருமானாரைப் போற்றியுள்ளார். இதேபோல் உலகுயிர்கள் அனைத்திற்கும் அருள்பொழியும் அன்புகூர்ந்த கண்களையுடையவர் நபி (சல்) அவர்கள் என்றும் புகழப்படுகிறார்.

அலகிலா வண்டத் தெழுந்தபல் லுயிர்க்கு
மருடரு சலசலோ சனரை
உலகெலா மவியு மூழியி னிறுதி
யுறையுளை முதிர்தவத் தினரைக்
கலைமறை பலவு முணர்ந்தமெய்ஞ் ஞானக்
கடவுளைக் கதிதரும் வேந்தை
யிலகுபல் லுயிர்க்கு முயிரென நின்ற
முகம்மதை யென்றுகாண் குவனே
(முதுமொழிமாலை : 6)

முதுமொழி மாலைஆசிரியர் பல செய்யுட்களில் பெருமானார் நபி (சல்) அவர்களுக்குதிருமறையான அல்குர்ஆனின் மீதுள்ள ஈடுபாட்டை நன்கு எடுத்துக் காட்டிப் புகழ்ந்துள்ளார். இஸ்லாத்தில் அல்குர்ஆனின் திருவசனங்களுக்கு ஈடாகவும், மேலாகவும் எதுவும் கிடையாது. இத்தகு திருவசனங்களைப் படித்துப் படித்து நாயகம் (சல்) அவர்களின் நாவானது தழும்பேறி விட்டதாக பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

......மறைவளம் பழுத்த நா வேந்தை.........
(முதுமொழிமாலை : 14)

......அருமறை படித்து நாத்தழும் பேறு மகுமதை......
(முதுமொழிமாலை : 21)

இல்வாறு அருமறையான அல் குர்ஆனைப் படித்துப் படித்துச் சிறப்பெய்திய நம் பெருமானார் நபி (சல்) அவர்களை 'ஞானப் பழம் பொருளாகவும்' (பா : 28), மெய்ஞ் 'ஞானக் கலையமு தொழுகும் மதுரமாகவும்' (பா : 27) 'விடுசுடர் பரப்பு ஞான மெய்ச் சுடராகவும்' (பா : 31) 'மெய்ஞ்ஞான வழிமுறை காட்டிய வேந்தர் ஆகவும்' (பா : 32) இன்னும் பலவாறாகவும் ஆசிரியர் முதுமொழிமாலையில் ஏற்றிப் போற்றுகின்றார்.

முதுமொழிமாலையின் ஆசிரியர் நாயகத்தைப் புகழும் தம் நோக்கத்தை நிறைவு செய்யும்வண்ணம் தம் செய்யுள்களுள் பெரும் பாலானவற்றில் முற்பகுதி வரிகளை நபி (சல்) அவர்களுக்கு பெருமை சேர்க்கும் அடைகளாகவே அமைத்துள்ளார். பின்வரும் செய்யுளை எடுத்துக் கொள்வோம்.

வேதபூ ஷணரை யாதிபுங் கவரை
    வினைப்பவக் கடல்கடந் தோரைத்
தீதுறுங் கொடிய பாவமோ சனரைத்
    திரிமலத் தகனரைச் சிறந்த
பூதர மனைய சர்ப்பத கனரைப்
    பூரணச் சந்திரவ தனரைச்
சோதி ராசானு வாகரைச் சுடரார்
    முகம்மதை யென்றுகாண் குவனே

(முதுமொழிமாலை : 11)

இதில் வேதபூஷணர், ஆதிபுங்கவர், வினைப்பவக் கடல்கடந்தோர், பாவமோசனர், திரிமலத்தகனர், சர்ப்பதகனர், பூரணச் சந்திரவதனர், ஜோதி ராசானுவாகர், சுடரார் முதலிய பத்து அடைகளும் ஒன்றன் பின் ஒன்றாக அடுக்கப்பட்டு இறுதியில் உள்ள முகம்மது என்னும் பெயரையே சிறப்பிப்பதாக தழுவி அமைந்துள்ளன. இத்தகு முறையிலான செய்யுள் அமைப்பில் இடையில் இரு வரிகள் நீக்கப் படினும் பாடலின் பொருளமைதி சிதைவுறாது, காரணம் தொடர் கருத்துக்கள் என்ற முறையில் முதுமொழிமாலையில் உள்ளடக்கக் கருத்துக்கள் அமையாதிருப்பதே ஆகும்.

முதுமொழிமாலை ஆசிரியர் பெருமானார் நபி (சல்) அவர்களின் பெருமைகளைக் கூறும் போக்கில் சில செய்யுள்களில் மக்கா, மதீன நகர்களின் சிறப்புக்களையும் இணைத்துப் பாடியுள்ளார். நபிகளார் அவர்கள் பிறந்தது மக்கா நகரிலாயினும் இஸ்லாத்தின் ஏற்றத்தையும் சிறப்பையும் முதலில் ஏற்று உலகிற்கு வழிகாட்டியாக இருந்தவர்கள் மதீனத்தவர்களே ஆவர். முதலில் மறுத்த மக்கத்தவர்கள் பின்னால் இஸ்லாம் தம் நெறியென ஏற்றுப் போற்றினர். அத்துடன் மக்கா, மதீன நகர்களில் இஸ்லாத்தின் பெருமைகள் தழைத்தோங்கிச் சிறந்தன. நபி பெருமானாரின் ஆட்சியும் அரசு செலுத்தியது. இக்கருத்தமைவுள்ள பாடல் இதுதான்:

பஞ்ச விடைய மறுத் தெறிந்த
    படிவ ரெஞ்ஞான் றினுமுவந்து
துஞ்சு மக்க மீதுதித்தே துறக்க
    நகர்க்கோ ரேணி யெனச்

செஞ் சொன் மதீனத் திருந்தரசு
செலுத்தும் வேந்தை யடியவருக்
கஞ்ச லெனவந் தருள் கொடுக்கு
நபியை யென்று காண்குவனே

(முதுமொழிமாலை : 78)

நபி (சல்) அவர்கள், தம்மை எதிர்த்தவர்களாயினும் தம் தவறினை உணர்ந்து திருந்தும் அடியவர்களுக்கு அருள் பாலிக்கும் அருந்தவத் தோர் என்பதையும் மேற்சொன்ன பாடல் காட்டுகிறது. பிறிதொரு செய்யுளில் பூவினைக் காட்டிலும் சிறந்த மக்கமா நகரத்தில் பெரும் புகழோடு பிறந்தவர் முகம்மது நபி என்றும், பூஞ்சோலைகளைக் காட்டிலும் சிறந்த மதீன மாநகரில் செங்கோல் செலுத்தியவர் என்றும் நபி பெருமானார் அவர்கள் புகழ்ந்துரைக்கப்படுகிறார்கள். அத்துடன் நாயகம் (சல்) அவர்கள் தங்களை புகழ்ந்தேத்திப் பாவினம் செய்யும் புலவர் பெருமக்களுக்கும் அருள் செய்யும் முகிலைப் போன்ற வர்களாவர் என்றும் கூறப்பட்டுள்ளது.

பூவினிற் சிறந்த மக்கமா புரத்திற்
புகழொடு பிறந்தநா யகரை
நாவினிற் சிறந்த பதிமதி னாவிற்
கதியர சியற்றிய வேந்தைப்
பாவினிற் சிறத்த பாவகம் புனைந்த
பய்யலுக் கருடரு முகிலை
நாவினிற் சிறந்த நபிமுகம் மதுவை
நலனுற வென்றுகாண் குவனே

(முதுமொழிமாலை : 84)

இவ்வுலக முடிவின்போதும் அழியாத மதீன நகர் என்று புகழும் முதுமொழி ஆசிரியர் அத்தகைய சிறப்புப் பெற்ற நகருக்கரசர் நபி (சல்) அவர்கள் என உரைக்கின்றார்.

......பன்னருங் கற்பத் தினுமழியாத
பதிமதி னாநகர்க் கரசை......

(முதுமொழிமாலை : 23)

**வேதக் கருத்துக்கள் :**

முதுமொழிமாலையுள் பல செய்யுள்கள் யாக்கை நிலையாமை தொடர்பான ஆழ்ந்த வேதக் கருத்துக்களை உள்ளடக்கியும் உள்ளன. இவ்வாறு எடுத்துரைக்கும் வேதாந்தக் கருத்துக்கள் யாவும் பெருமானார் (சல்) அவர்களின் பெருமைக்கும் சிறப்புக்கும் புகழ் சேர்க்கும்வண்ணமே அமைந்துள்ளன. பின்வரும் செய்யுள் கருத்தை நோக்குவோம்.

இருவினை நீக்கி மும்மல மகற்றி
 யிடும்பைசெய் பொறிபுல னீத்து
வருதவத் தோர்கட் கிரங்கிமெய்ஞ் ஞான
 வழிமுறை காட்டிய வேந்தை
கரையிலா னந்தக் கடலெழு ஞானக்
 கனியினை தொல்லைநா யகரை
விரிபழ மறைக ளுணர்மகு மூதை
 வியப்புற வென்றுகாண் குவனே

(முதுமொழிமாலை : 32)

இங்கு ஆசிரியர் குறிப்பிடும் இருவினை என்பதில் உள்ள வினை என்பது முற்பிறவியின் பயனாய் இப்பிறவியில் ஒருவருக்கு வந்தடையும் செயல்களைத்தான். இது நல்வினை, தீவினை என இருவகைப் படும். இவ்விரு வினைகளும் ஒருவருக்கு பூர்வகருமப் பயனாகவே வந்தடையும். இவ்வாறு வந்தடையும் இருவினைகளையும் நீக்கி யிருக்கும் நிலையே தவத்தோர்க்குரியதாகும். இக்கருத்தை வள்ளுவர் 'இருள்சே ரிருவினையுஞ் சேரா' (குறள் : 5) எனக் குறிப்பிடுவார். இவ்வாறு இருவினைகளும் நீக்கியிருக்கும் தவத்தோர் என்னும் கருத்தையே மேற்சொன்ன பாடலும் எடுத்துரைக்கிறது. இதேபோல் 'மும்மலம்' என்பது உலக வாழ்வின் புறத்தொல்லைகளிலிருந்து விடுபட்டு இறை நிலையை எய்துதற்காக வகுத்துக் காட்டப்படும் ஐவகை மலங்களுள் மூன்றினைக் குறிப்பதாகும். உலக வாழ்வின் பற்று, விருப்பு, வெறுப்பு இவைகளுக்கு அப்பால் அனைத்தையும் மறந்து மெய்ஞ்ஞான நிலையை எய்துவதற்காகச் சுட்டப்படும் வழி முறைகளே ஐவகை மலங்களையும் துறத்தல் என்பதாகும். ஐவகை மலங்களாவன : ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் என்பனவாகும். இவற்றுள் ஆணவம் என்பது 'தான்' என்ற எண்ணத்தையும் அகங்காரத்தையும் நீக்கிவிட்டு இருக்கும் நிலை யாகும். இறைவழிப் பாதையில் சுட்டப்படும் முதல் நிலையே இதுவாகும். இவ்வுல வாழ்வியல் நிகழ்வுகளை தனக்காக தன் நலத் திற்காக மேற்கொள்ளாதிருக்கும் நிலையே ஆன்மாவிற்கு அருளினை அளிக்க வல்லதாகும். எனவே ஆணவத்தை அகற்றுதல் ஐவகை மலங்களுள் முதலாவதாகக் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு 'தான்' என்னும் சுயநலம் அகற்றப்பட்டபின் இவ்வுலக வாழ்வில் அறவழி கோட்பாடுகளுக்கேற்ப இன்பம், துன்பம், நல்வினை, தீவினை இவற்றிற்கிடையே ஒருவர் ஆற்றும் கருமங்களையே கன்மம் என்னும் இரண்டாவது ஐநிலை சுட்டுகிறது. இவ்வுலக வாழ்வில் பொய்த் தோற்றத்தையே மாயை என்பது குறிப்பிடுகிறது. நான்காவதாக உள்ள மாயேயம் என்பது அசுத்த மாயையின் காதியமான காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்னும் ஏழு

தத்துவங்களைக் கொண்டது. திரோதானம் என்பது மறைபொருள் சக்தியைக் குறிப்பதாகும். இத்தகு ஐவகை மலங்களுள் முதல் மூன்றான ஆணவமலம், கன்மமலம், மாயாமலம் என்னும் மூன்றுமே மும்மலம் என்று மேற்சொன்ன செய்யுளில் குறிப்பிடப்படுகிறது. முதுமொழி ஆசிரியர் கடுந்தவத்தோர் இருவினைகளையும் மும்மலங் களையும் அகற்றுவதுடன் இவ்வுலக வாழ்வின் இச்சைகளுக்கிணங்கி அவற்றைச் செய்யத் தூண்டும் பொறிகளையும் அடக்கவேண்டும் எனக் கருதுவதால் 'இடும்பைசெய் பொறிபுலன்' எனக் குறிப்பிட் டுள்ளார். இத்தகு முறையில் இருந்து சூழ்நிலை பக்தியில் ஈடுபடும் தவத்தோர்களின்பால் இரக்கம் கொண்டு அவர்களுக்கு மெய்ஞ்ஞானப் பாதையை வகுத்துக்காட்டுபவர் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களே ஆவார்கள். பெருமானார் அவர்கள் இவ்வுலக மக்கள் அனைவருக்கும் நல்வழி வகுத்துக் காட்டுபவர் ஆதலின் மெய்ஞ்ஞானத் தில் ஈடுபட்டு கடுந்தவம் புரிவோருக்கும் வழிகாட்டும் வேந்தராகப் புகழப்பட்டுள்ளார்கள். அல்லாஹ் தன் திருமறையில் குறிப்பிடும் போது 'நபியே! நாம் உம்மை உலகத்தார் யாவருக்கும் ஓர் அருளாகவே அனுப்பியிருக்கிறோம்' (அல்குர்ஆன் 21:107) எனக் குறிப்பிடுகிறான். இத்தகு அருட்கொடையே அனைவருக்கும் வழி காட்டியாக அமைவதாக முதுமொழிமாலை ஆசிரியர் புகழ்கின்றார். இத்தகு இருவினைகள் காரணமாக நடைபெறும் மும்மலங்களையும் நீக்கி மெய்ஞ்ஞானக் கயிற்றினால் கட்டி அகம் என்னும் பந்தத்திற்குள் பூட்டுபவராகவும் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பின்வருமாறு புகழப்படுகிறார்கள்.

சுடுகதி ரொன்றா யிரங்கடந் தோறுந்
தோன்றிய பொற்சரா சரங்க
ளிடைதொறுந் தோன்று மாதவத் தோரை
யிருவினை செயுமலக் களிற்றைப்
படருமெய்ஞ் ஞானக் கயிற்றினால் வீக்கி
யகமெனும் பந்தியிற் பூட்டுந்
திடமுடைச் சுத்த கியானநந் நபியைத்
தெளிவுற வென்றுகாண் குவனே

(முதுமொழி மாலை : 31)

நபிகள் நாயகம் அவர்களின் பெரும் தவத்தை சிறப்பிக்கும்போது ஆசிரியர் இவ்வுலக வாழ்வின் நடப்பியல் கருத்துக்களை வேதாந்த கருத்துருவமாக தருகின்றார். இவ்வுலக வாழ்வில் நிலைத்து பரவி யிருக்கும் யாக்கையானது புல் நுனியில் உள்ள பனித்துளிக்கு ஒப்பான தாகும். எவ்வாறு சூரியனைக் கண்டவுடன் புல் நுனியின் பனித் துளிகள் மறைந்துவிடுகின்றனவோ அதுபோல் யாக்கையும் அழிந்து

போகுமாம். அவ்வாறு அழிந்து போகக்கூடிய ஒவ்வொரு உடலிலும் பொருந்திய உயிர்க்கு நற்பேறு பெற அவ்வுடல்களில் நிறைந்திருக்கும் பெரும் தவத்தை உடையவர் அண்ணல் நபி நாயகம் (சல்) அவர்கள் என்று முதுமொழி மாலை ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

புன்னுனிப் பனியி னாக்கைக டோறும்
பொருந்தியாங் குறைந்த மாதவரை
மன்னுயி ரனைத்துந் தன்னுயி ரென்ன
மகிழுமற் புதக்கட வுளரைப்
பன்னிய ஞானச் சுடரை மிருகாதி
பணிகுசே சயப்பத வேந்தை
மன்னெனத் திகழு மெழின் முகம்மதுவை
வியப்புற வென்று காண் குவனே

(முதுமொழி மாலை : 12)

நபி (சல்) அவர்கள் தம்முடைய உம்மத்துகளிடத்து பெரிதும் அன்பு டையவர்களாவார்கள். அவர்களுக்காக அல்லாஹ்விடத்து இறுதி நாளில் மன்றாடுபவரும் நபி (சல்) அவர்களே ஆவார்கள். பெரு மானார் நாயகம் அவர்களின் இத்தகு குணத்தைப்பற்றி அல்லாஹ் அல்குர்ஆனில் இவ்வாறு குறிப்பிடுகின்றான். '(விசுவாசிகளே!) உங்களிலிருந்து நிச்சயமாக (நம்முடைய) ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கின்றார். (உங்களுக்கு யாதொரு துன்பம் ஏற்பட்டு) நீங்கள் கஷ்டத்திற்குள்ளாகிவிட்டால் அது அவருக்கு மிக்க வருத்த மாகவே இருக்கும் (அவ்வளவு தூரம் உங்கள்மீது அன்புடையவர்) அன்றி உங்கள் நன்மைகளைப் பெரிதும் விரும்புகின்றவராகவும் விசுவாசிகளாகிய உங்கள்மீது மிக்க அன்பும், கிருபையும் உடையோ ராகவும் இருக்கின்றார்' (9 : 128) இத்தகு முறையில் இவ்வுலக மக்களிடத்து அன்பு வைத்துள்ள பெருமானார் அவர்களின் சிறப்பினை உணர்த்தும் பொருட்டே நபி (சல்) அவர்களை 'மன்னுயிர னைத்துந் தன்னுயி ரென்ன மகிழுமற் புதக் கடவுளர்' என முதுமொழி மாலை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். முதுமொழி மாலையுள் இடம் பெற் றிருக்கும் வேதாந்தக் கருத்துக்கள் பலவும் சித்தர்களின் கருத்துக் களுடன் ஒத்துக் காணப்படுகின்றன. மும்மலம், இருவினை தொடர் பான ஆழ்ந்த கருத்துக்கள் பல பாடல்களில் இடம் பெற்றுள்ளன. ஆனால் முதுமொழி மாலை ஆசிரியர் எடுத்துக்கூறும் வேதாந்தக் கருத்துக்கள் முஸ்லிம் புலவர்களின் சூபித்துவக் கருத்துக்களிலிருந்து சற்று வேறுபட்டு உள்ளன.

**வரலாற்றுச் செய்திகள் :**

முதுமொழி மாலையுள் பல செய்யுட்களில் ஆசிரியர் பெருமானார் நாயகம் (சல்) அவர்களின் பெருமைதனை எடுத்துக்கூறும் முகத்தான்,

இஸ்லாமிய வரலாற்றில் பொன்னெனப் பொறிக்கத் தக்கனவும் நபி (சல்) அவர்களின் வாழ்வியலில் ஓர் உன்னத இடம் பெற்றுச் சிறக்கும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தனவுமான நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளன.

நபிகள் நாயகம் அவர்களின் வாழ்வியலில் எத்தனையோ வரலாற்று முக்கியத்துவங்கள் புதைந்து கிடக்கின்றன. எனினும் அவையத்தனைக்கும் மணிமுடிபோல் விளங்குவது பெருமானார் விண்ணுலகம் சென்று அல்லாஹ்வின் தரிசனம் பெற்று அங்கு இறைக் கட்டளையைப் பெற்றுத் திரும்பிய மிஃகுறாஜ் நிகழ்ச்சியே ஆகும். இந்நிகழ்வுக்கு முக்கியத்துவம் அளிக்கும் வகையில் முதுமொழி மாலை ஆசிரியர் பல செய்யுட்களில் மிஃகுறாஜ் நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். ஒரு செய்யுளில் விலை மதிக்க முடியாத மணிகள் பொருந்திய முடியையுடைய ஜிப்றயீல் (அலை) அவர்களின் ஊர்தியில் ஏறி அனைத்துலகங்களும் பற்றி அறிந்த அண்ணலே என பெருமானார் நபி (சல்) அவர்கள் புகழப்படுகிறார்கள்.

விலைவரம் பறியா மணிமுடி கவித்த
விறற் சிபுரீல்ச் சிறையேகி
அலகிலா வண்டம் பற்பல கடந்த
வண்ணலை யறநெறித் துறையி
னிலைபெற நின்ற மாதவர் துதிக்கு
நேயரை ஞானநா வாயால்
நலிவுறுங் கொடிய பவக்கடல் கடந்த
நபியினை யென்றுகாண் குவனே
(முதுமொழி மாலை : 48)

'எவன் அல்லாஹ்வுடைய தூதருக்கு (முற்றிலும்) வழிபட்டு நடக்கின்றானோ, அவன் நிச்சயமாக அல்லாஹ்வுக்கே வழிப்பட்டான்' (அல்குர்ஆன் 4 : 80) என்னும் திருமறையின் கூற்றிற் கிணங்கவே அறநெறித் துறையில் நிலைபெற நின்ற மாந்தர்கள் துதித்து வழிபடும் நேயர் முகம்மது நபி (சல்) அவர்கள் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு அறநெறித் துறையினர் துதிப்பது ஏனெனில் பெருமானார் (சல்) அவர்கள் கொடிய பாவமாகிய கடலைக் கடந்தவர் என்பதாலேயே ஆகும். பிறிதொரு செய்யுளில் மிஃகுறாஜ் நிகழ்ச்சி பின்வருமாறு இடம் பெற்றுள்ளது.

தற்பணந் தெரிசித் தோர்தொழி லனைத்துங்
காட்டிய பாவைபோற் சகத்தின்
உற்பவித் திடும்பல் லுயிர்களு மியங்க
உறைந்திடும் புனிதமா தவரை

அற்புதச் சகல லோகமு மோர்மாத்
திரையிற்பூ வலம்வரு மரசைக்
கற்பகா லமுமோர் நெடிவரை யாக்கு
முகம்மதை யென்றுகாண் குவனே
(முதுமொழி மாலை : 13)

நாயகம் (சல்) அவர்களின் விண்ணேற்றப் பயணம் வெகு விரைவாக நடைபெற்று முடிந்ததாகும். இச்சிறப்பினை உணர்த்தும் வகையிலேயே மேற்சொன்ன பாடலில் அற்புதமான அனைத்து உலகங்களையும் ஒரு நொடிப்பொழுதில் பூவலம் வரும் அரசர் என அண்ணலெம் பெருமானார் பாராட்டப்பட்டுள்ளார்கள்.

நபிகள் (சல்) அவர்கள் ஒருமுறை வர்த்தகம் நிமித்தமாக மற்ற வியாபாரிகளுடன் சேர்ந்து பலபல காடுகளையும், ஆறுகளையும் கடந்து செல்லும் தறுவாயில் அவர்களை எதிர்கொண்டு ஒருவன் வணங்கி 'நாயகமே இப்போது நாம் நடக்கும் பாதையில் ஓர் காத வழிக்குள்ளே உள்ள காட்டுவழியிற் பாதகமுற்ற நெஞ்சும், புள்ளியுள்ள உடலும் பொருந்திய ஒரு புலி திரிந்துகொண்டு அவ்வழிச் செல்வோரைத் துன்புறுத்தி வருவதால் கொஞ்சம் யோசித்துச் செல்ல வேண்டும் எனக் கூறினான். இச்சொற்களைக் கேட்ட நபிநாயகம் (சல்) அவர்கள் கோபம்கொண்டு வேலாயுதத்துடன் அப்புலி இருக்கும் இடம் நோக்கி நடந்தார்கள். பெருமானார் நாயகம் அவர்கள் கையில் வேல்கொண்டு வருவதை மலைப்பொதும்பில் கிடக்கும் பெரிய வரி படர்ந்த வேங்கைப்புலி கண்டது. அக்கணமே அது தனது வாலைக் குழைத்து அரிதாகிய உடலுயிர் கலங்கி மெல்ல நடந்துவந்து தன் தலையைக் குனிந்து வந்து, 'றசூல் நாயகமே, தேவரீர் தங்களுடைய பாத தெரிசனத்திற்குச் சலாமென்'றுக் கூறி அடிபணிந்தது. அத்துடன் பெருமானார் அவர்களைக் கண்டுற்ற சந்தோஷத்தையும் வெளிப்படுத்தியது. அது கண்ட நபி (சல்) அவர்கள் அப்புலியிடத்து 'நீ இன்று முதல் இவ்வழிச் செல்லும் உயிர்களை உயிர்வதை செய்யாமல் வேறொரு காட்டிற்குள் போயிருந்து கொள்' எனக் கட்டளையிட அக்கட்டளையை ஏற்று மீண்டும் முகம்மது நபி (சல்) அவர்களை அடிபணிந்து அவ்விடத்தைவிட்டு நீங்கிச் சென்றது. இத்தகு வரலாற்றுச் சம்பவத்தை முதுமொழி மாலை ஆசிரியர் பின்வருமாறு குறித்துள்ளார்.

..............................

பன்னிய ஞானச் சுடரை மிருகாதி
பணிகுசே சயப்பத வேந்தை
மன்னெனத் திகழு மெழில் முகம்மதுவை
வியப்புற என்று காண்குவனே
(முதுமொழி மாலை : 12)

இருவினைகளையும் நீக்கியிருக்கும் நிலையே தவத்தோர்க் குரிய தாகும். இதனையே இப்பாடல் கருத்தும் சுட்டுகிறது. அதே போல் மும்மலம் என்பது.

பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மக்கமா நகரில் வாழ்ந்து வரும் காலத்து நடைபெற்ற வரலாற்று நிகழ்வுகளுள் ஒன்று மானுக்குப் பிணையாகி நின்றதாகும். இந்நிகழ்ச்சியும் முதுமொழி மாலையுள் இடம் பெற்றுள்ளது. நபி (சல்) அவர்கள் மக்கா நகரில் பெருமையுடன் வீற்றிருக்கும்போது ஒரு நாள் திருமக்கமா நகரை விட்டும் புறத்திலுற்று நடந்து குளிர்ச்சி பொருந்திய மலையினிடத்துப் போனார்கள். அப்போது அறபு நாட்டிலுள்ள வேடன் ஒருவன் ஓர் பெண்மானைத் தொடர்ந்து கோபத்தோடு அதனை வலையிற் சேர்த்து கட்டி வைத்திருக்கக் கண்டார்கள். மானின் இரு கண்களிலும் நீர் வடிவதைக் கண்டு இரக்கமுற்ற நபி நாயகம் (சல்) அவர்களைக் கண்டு தம் குறையை எடுத்துக் கூறியது பெண்மான். 'லா இலாக இல்லல்லாகு, முகம்மதுற்ற சூலுல்லாகி' என்னும் கலிமாச் சொல்லித் தன் வழி நிலையிலாகிய மானுடர் யாவரையும், பொன் பூமியாகிய சுவர்க்கலோகம் புகுதச் செய்யும் புண்ணியப் புகழில் மிக்கானவர்களே, நானெந்த விதத்திலுங் கொலை பாதக நிலையைக் கொண்டிருக்கும் இவ்வேடனுடைய கொடூரமான பசிப்பிணியைத் தவிர்ப்பேன். அதற்கு யாதொரு சந்தேகமுமில்லை, ஆதலால் என்னுடைய காலைப் பின்னி வரிந்து கட்டியிருக்குங் கட்டை நீக்கித் தேவரீர் தாங்கள் நான் வருமளவும் பிணையாக நின்று என்னை விடவேண்டும். அப்படிப் பிணை நின்று என்னை விடுவிப்பீர்களே யானால் நான் விரைவாகச் சென்று கலைமானின் கவலையை நீக்கி விட்டு இளங்கன்று மானுக்கும் இனிமையான சுவையமுதூட்டி அதனுடைய அரிதான பசியைத் தீர்த்துவிட்டு ஒருநாழிகைப் பொழுதில் வந்து விடுவேன்' எனக்கூறிற்று. இக்கூற்றினைக் கேட்ட நாயகம் (சல்) அவர்களும் வேடனிடத்து தான் பெண்மானுக்கு அது வரும் வரைக்கும் பிணையாக இருப்பதாகக் கூறி எடுத்துரைத்துச் சம்மதம் பெற்று மானை வலையில் இருந்து விடுவித்தார்கள். விடுதலை அடைந்த பெண்மான் எங்ஙனம் மீண்டும் வரும் என ஐயமடைந் திருந்த வேடனுக்கு மேலும் அதிர்ச்சியைத் தரும் வண்ணம் சென்ற பெண்மான் மீண்டும் தன் குட்டியுடனே வந்து நாயகம் (சல்) அவர் களைத் தரிசித்து தான் சென்ற வேலை முடிவுற்றதாகத் தெரியப் படுத்தியது. இதனைக் கண்டுற்ற வேடன் பெருமானாரின் பெருமை யையும், இஸ்லாத்தின் மேன்மையையும் உணர்ந்து கலிமாக் கூறி முஸ்லிமாக மாறினான். அத்துடன் பெண்மானுக்கும் விடுதலை யளித்து கானகத்திற்குள் அனுப்பினான். இத்தகு வரலாற்று சம்பவத்தை பின்வரும் பாடல் எடுத்துரைக்கிறது.

கெடுவழி தன்னி லுழன்றுகொண் டிருந்த
கேடனை நேர்வழி யதனிற்
படுவழி யாக்கும் பாதபங் கயரைப்
பற்றறாக் கொடுங்கொலைப் பவங்க
ணெடுவழி வேட னொடுகட மானுக்
கிரங்கிரட் சித்தநிர் மலரை
நடுவழி யுடைய முகம்மது நபியை
நயமுற வென்றுகாண் குவனே

(முதுமொழி மாலை : 83)

இவ்வரலாற்று நிகழ்ச்சியையும் சீறாப்புராண ஆசிரியர் 'மானுக்குப் பிணை நின்ற படலம்' என்னும் தனித்ததொரு படலத்தின் கீழ் விரிவாக எடுத்துரைக்கின்றார்.

பிறிதொரு பாடலில் பெருமானார் நபி (சல்) அவர்கள் அமாவாசை இருளில் பூரண சந்திரனை வரவழைத்த வரலாறு சுட்டிக் காட்டப்படுகிறது. மக்கமாநகரில் ஒருமுறை ஹபீபு ராஜாவை நாயகம் (சல்) அவர்கள் சந்தித்து இஸ்லாத்தின் பெருமையை எடுத்துக்கூறி ஈமான் கொள்ளும்படி கூறப்பட்டபோது, அமாவாசை இருளில் சந்திரனை வரவழைத்துக் காட்டும்படி ஹபீபு ராஜா அவர்கள் கூறினார். அதனை ஏற்றுக்கொண்டு தம் மகத்துவத்தை உணர்த்தும் பொருட்டும் அல்லாஹ்வின் ஏற்றத்தை ஹபீபு ராஜாவுக்கு உணர்த்தும்படியும் நாயகம் (சல்) அவர்கள் துவா (வேண்டுதல்) இறைஞ்சினார்கள். பெருமானாரின் துவாவை ஏற்றுக்கொண்ட அல்லாஹ் தன் கருணையால் அமாவாசை இருளில் சந்திரனை வெளிப்படுத்திக் காட்டி தன் தூதரின் பெருமையை உலகறியச் செய்தான். அல்லாஹ்வின் கட்டளைக் கிணங்கவும் நபி (சல்) அவர்களின் துவாவினாலும் வெளிப்பட்ட சந்திரன் அல்லாஹ்வின் இறுதித் தூதரின் பெருமையை எடுத்துக்கூறி 'லாஇலாக இல்லல்லாகு முகம்மதுற்ற சூலுல்லாகி' என்னும் வேத வாக்கியத்தை எடுத்தோதி பெருமானாருக்கு சலாம் கூறி அடிபணிந்து வணங்கியது. இந் நிகழ்ச்சியை கண்ணுற்ற திமஸ்கு நகரத்தின் அதிபதியான ஹபீபு ராஜா இஸ்லாத்தின் ஏற்றத்தை உணர்ந்து அல்லாகுத்தஆலாவின் தூதரான றசூல் நாயகத்தைப் புகழ்ந்தார். இத்தகு முக்கியத்துவம் பெற்ற இவ்வரலாற்று நிகழ்ச்சி பின்வருமாறு குறிக்கப்படுகிறது.

புலன்வழி மனஞ்செல் லாதமா தவரைப்
பூதரம் பணிபதாம் புயரை
வலஞ்சுழன் றெழுந்த செழுங்கதிர்ப் பருதி
மலர்ப்பதம் வருடக் கண்டுயின்ற

பொலன்கழல் வனைந்த ராஜகேசரியைப்
பொருந்துமா னந்தமெய்ஞ் ஞானக்
கலையமு தொழுகு மதுரமென் றீஞ்சொன்
முகம்மதை யென்று காண் குவனே
(முதுமொழி மாலை : 27)

பொதுவாக முதுமொழி மாலையுள் பெருமானார் (சல்) அவர்களின் வாழ்வில் நடைபெற்ற முக்கிய வரலாற்று நிகழ்ச்சிகள் அவர்தம் பெருமையை எடுத்துக் காட்டிப் புகழ் சேர்க்கும் வண்ணமே அமைந் துள்ளன. ஆனால் எந்தவொரு நிகழ்ச்சியும் தொடர் நிகழ்வுகளாக விளக்கப்படவில்லை. ஆங்காங்கே சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. ஒரே நிகழ்ச்சியும் கூட பல செய்யுள்களில் இடம் பெற்றுள்ளது.

**மொழி நடை :**

முதுமொழி மாலையுள் குறிப்பிடத் தக்க மற்றொரு அம்சம் அதனுடைய மொழி நடையாகும். ஆசிரியர் பயன்படுத்தியுள்ள மொழி நடை சற்று கடினமானதாகவே உள்ளது. முதுமொழி மாலை யுள் அறபு சொல்லாட்சி இடம் பெற்றிருப்பது வெகு சிலவே ஆகும். குறிப்பாக முகம்மது, நபி, குப்ர், ஜிப்றயீல் இவைபோன்ற சில சொற்களே இடம் பெற்றுள்ளன. அதே நேரத்தில் வடசொல் கலப்பு மிக அதிகமாக உள்ளது. இவ்விரண்டு இயல்புகளும் முதுமொழி மாலையை ஏனைய பிற இஸ்லாமியத் தமிழிலக்கியங்களிலிருந்து பெரிதும் வேறுபடுத்துகின்றன. குறிப்பாகக் கூற வேண்டுமானால் சீறாப்புராணத்தையும், முதுமொழி மாலையையும் மொழி அடிப் படையில் ஒப்பு நோக்குவோமானால் பெரும் வேறுபாடுகள் இருப்பது நன்கு வெளிப்படுகிறது. சீறாப்புராணத்தில் அறபு, பாரசீகச் சொல் லாட்சிக்குரிய முக்கிய இடத்தை முதுமொழி மாலையில் வடசொல் பெற்றுள்ளது. அதேபோல் உள்ளடக்கம் என்ற நிலையிலும் இஸ்லா மியக் கருத்துக்கள் சீறாப்புராணத்தில் விரித்துரைக்கப்படுவது போல் முதுமொழி மாலையுள் காணமுடியவில்லை. குறிப்பாக முதுமொழி மாலையுள் முக்கியமாக பல செய்யுள்களில் குறிக்கப்பட்டுள்ள 'மும்மலம்', இருவினை, மற்றும் பிற மெய்ஞ்ஞான வழி முறைகள் தொடர்பான விளக்கக் கருத்துக்கள் சீறாவில் காணப்படவில்லை என்பது முக்கியமாகக் குறிப்பிடத்தக்கதாகும். ஏனெனில் முதுமொழி மாலையையும் சீறாப்புராண ஆசிரியரான உமறுப்புலவரே இயற்றி னார் என்ற கருத்து இதனடிப்படையில் ஐயப்பாட்டிற்குட்பட்டதா கிறது. முதுமொழி மாலையுள் உள்ள எந்தவொரு செய்யுளும் அகராதியின் துணையின்றி புரிதல் கடினமாகவே உள்ளது. இத்தகு நிலை சீறாப்புராணச் செய்யுட்களுக்கில்லை. எனவே மொழி அடிப் படையில் மேற்கொள்ளப்படும் முறையான விரிவான ஒப்பீட்டு ஆய்வு

சீறாப்புராணத்தையும், முதுமொழி மாலையையும் இயற்றியவர் ஒருவரா? இருவரா? என்ற ஐயப்பாட்டிற்கு விடையளிக்கும். முதுமொழி மாலையுள் இடம் பெற்றிருக்கும் சரோசரட்சகர், சததள பதயுகளர், சலசலோசனர், சுகாதிரப் பொருள், சகத்தி, நிருமலப் புநிதர், சசிவானவர், புயாசல வேந்தர், யூணீக்கிய வேந்தர், பூதரம், ஏடலம், சசி, சரர்கணாயகர், திவ்யதாபரர் போன்ற இன்னபிற சொல்லாட்சிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு அடைகளாக வரப் பெற்றுள்ளன. இதுபோன்ற சொல்லாட்சிகளை சீறாப்புராணத்தில் காண்பதரிதாகும்.

முதுமொழி மாலையுள் உள்ள மொழி நடையின் பிறிதொரு இயல்பு அடைகளை பாடல்தோறும் அடுக்கிச் செல்லுதலாகும். இதில் இடம் பெற்றுள்ள செய்யுள்கள் அனைத்தும் வரிகள்தோறும் நபி (சல்) அவர்களின் புகழ் சேர்க்கும் அடைகளைப் பெற்றே வருகின்றன. ஆங்காங்கே சில செய்யுள்களில் உவமைகளை ஆசிரியர் எடுத்தாண்டுள்ளார். உலக வாழ்வின் யாக்கை புல்நுனியில் உள்ள பனித் துளிக்கு உவமிக்கப்படுகிறது (பா : 12) இதேபோல் இவ்வுலகில் அடுத்தது காட்டும் கண்ணாடிபோல் உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் உணர்ந்த மாதவராக நபி (சல்) அவர்கள் பின்வருமாறு புகழப்படுகிறார்கள்.

தற்பணந் தெரிசித் தோர்தொழி லனைத்தும்
காட்டிய பாவைபோற் சகத்தின்
உற்பவித் திடும்பல் லுயிர்களு மியங்க
உரைத்திடும் புனிதமா தவரை
(முதுமொழி மாலை : 13)

உவமைகள், உருவகங்கள், வர்ணனைகள் இவற்றின் நிலையிலும் சீறாப்புராணத்திற்கும் முதுமொழி மாலைக்குமிடையே மிகுந்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. முதுமொழி மாலையுள் எந்தவொரு செய்யுளிலும் அதனை இயற்றிய ஆசிரியர் பற்றி அகச் சான்றுகள் கிடைக்கவில்லை. எனவே முதுமொழி மாலையின் ஆசிரியர் உமறுப் புலவர் என்னும் கூற்று இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் முற்றும் முடிந்த கருத்தல்ல. மேலும் ஆய்வுக் குரியதே ஆகும்.

---

# பத்தாம் இயல்

## சீறாப்புராணம்

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியப் பரப்பில் பெருவழக்கைப் பெற்று அதன் கொடுமுடியாகத் திகழ்ந்து கொண்டிருப்பது சீறாப்புராணம். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியம் என்றால் சீறாப்புராணமும் மஸ்தான் சாகிபு பாடலுமே என்று கருத்து நிலவிய காலம் இருந்தது. இன்றைக்கு முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் அப்பிழையான கருத்துத் தகர்த் தெறியப்பட்டது. அந்தக் காலக்கட்டத்தில் இருநூறுக்கும் அதிகமான இஸ்லாமியத் தமிழ் நூல்களை ஒன்று திரட்டியமை ஒரு பெருஞ் சாதனையாகக் கருதப்பட்டது. ஆனால் இன்றோ இஸ்லாமிய அடிப் படையில் தோன்றிய தமிழ் நூல்களின் எண்ணிக்கை இரண்டாயிரத் தையும் தாண்டிவிட்டது. ஒழிந்து மறைந்தவற்றையும் இலைமறை காய்களாக உள்ளனவற்றையும் ஒன்று திரட்டும் முயற்சி வெற்றி பெற்றால் அவ்வெண்ணிக்கை பல ஆயிரமாக அதிகரிக்கும் வாய்ப்பும் இல்லாமல் இல்லை. அத்தகைய வாய்ப்பினை ஏற்படுத்தும் முயற்சியில் நாம் சலியாது உழைத்தல் வேண்டும்.

இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் நூல்களுள் முதன்மையானது என எல்லோராலும் கருதப்படுவது சீறாப்புராணம். நாம் ஐம்பெரும் காப்பியங்களைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறோம். ஐஞ்சிறு காப்பியங்கள் இருந்தன எனக் கூறக் கேட்டிருக்கிறோம். ஆனால் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் நூல்களுள் காப்பியங்கள் ஒரு முக்கியமான இடத்தை வகிக்கின்றன. அக்காப்பியங்கள் அவற்றின் மகுடமாகத் திகழ் கின்றன. இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் என்னும் மாடமாளிகையில் உச்சிக் கோபுரமாக விளங்குகின்றன அக்காப்பியங்கள். அத்தகைய இஸ்லாமியத் தமிழ் காப்பியங்களின் எண்ணிக்கை ஐந்தில் ஐந்து மடங்காக மிளிர்ந்து கொண்டிருக்கின்றது. அத்தகைய காப்பியங் களுள் ஒன்றான சீறாப்புராணம் காப்பிய இலக்கணங்கள் அனைத்தை யும் கொண்டு அறிஞர் பல்லோராலும் புகழப்படுவதாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது.

***சீறா ஒரு விளக்கம் :***

நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கையைக் கருப்பொருளாகக் கொண்டு சிறந்து விளங்குகிறது சீறாப்புராணம்,

'நபியின் வாழ்க்கை' என்பதே அறபு மொழியில் 'சீறத்துன்னபி' என வழங்கப்படுகிறது. இச் சொற்றொடரை 'சீறத்து அல் நபி' எனப் பிரிக்கலாம். சீறத் என்றால் வாழ்க்கை, நபி என்றால் தீர்க்கதரிசி; அல் என்பது இங்கு இன் என்னும் இடைநிலையாக உள்ளது. ஐந்தாம் வேற்றுமைப் பொருளைக் குறித்து நிற்கின்றது. அறபு எழுத்து வடிவில் 'சீறத்' என எழுதப்படினும் அது உச்சரிக்கப்படும்பொழுது 'சீறா' என்றே சொல்லப்படுகிறது. இங்கே சீறத் அல்லது சீறா என்பது வாழ்க்கை எனப் பொருள்படினும் பொதுவாக அறபு அறிஞரும் சிறப்பாக முஸ்லிம் அறிஞரும் சீறத் அல்லது சீறா என்னும் அறபுச் சொல்லைப் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கையையே சிறப்பாகச் சுட்டும் ஒரு சொல்லாகக் கொள்வர். எனவேதான் சீறத் என எழுதப்பட்டு சீறா என்றே உச்சரிக்கப்படும் இச்சொல்லே சீறாப்புராணம் என்னும் சொற்றொடரான முதற் சொல்லாய் விளங்குகிறது. இச்சொற்றொடரின் மற்றச் சொல்லான 'புராணம்' என்பது வடமொழிச் சொல்லாகும். சங்கத மொழியில் 'புராணம் என்பது 'புனிதமான கதை' அல்லது 'பழமையான கதை' என்று பொருள்படும். அறுபத்து நாலு கலையுள் ஒன்றும் வியாச முனிவரால் இயற்றப்பட்டதும், சருக்கம், பிரதி சருக்கம், வமிசம், மன்வந்தரம், வமிசானு சரிதம் என்னும் இவற்றைப் பற்றிக் கூறுவது மான பழைய நூல் வகையும் புராணம் என வழங்கப்படும். 'புனித மான வரலாறு' என்பதனையே இங்கே புராணம் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது எனலாம். ஆக, சீறா என்னும் அறபுச் சொல்லும் புராண என்று சமஸ்கிருத மொழியில் இருந்து வந்த புராணம் எனத் தமிழ் படுத்தப்பட்டுள்ள சொல்லும் சேர்ந்தே 'சீறாப்புராணம்' என அமைந்துள்ளது என்பதைக் காண்கின்றோம். பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்களின் புனிதமான வாழ்க்கை வரலாற்றினைப் புகழ்ந்து பாடப்படும் காப்பியங்களுள் தலைசிறந்த ஒன்றாகச் சீறாப்புராணம் திகழ்வதைப் பார்க்கிறோம். பொதுவாக அறபு மொழியில் றகரம் வரும் பொழுது அது வல்லின எழுத்தாகவே அமைந்து விடுகிறது. எனவே வல்லின றகர உச்சரிப்பை உடைய அறபு எழுத்தினை இடையின ரகர உச்சரிப்புடையதாக எழுதுவது தவறானதாகும். இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் தோன்றிய தமிழ் நூல்களின் பழைய பதிப்புக்கள் அனைத்திலும் அறபு றகரம் வல்லின றகரமாக இருப்பதைக் காணலாம். அதன் பயனாகவே 'சீறாப்புராணம்' என்னும் நூலின் பெயரும் வல்லின றகரத்தைக் கொண்டதாகத் திகழ்கின்றது. அபூபக்கர், உமர் போன்ற பெயர்களை எழுதும்பொழுது றகர ஒற்று இறுதியில் வரும் சந்தர்ப்பங்களில் இடையின ரகரத்தைப் பயன் படுத்துவது தவறாகாது. அத்தகைய சந்தர்ப்பங்களில்கூட செய்யுட் களில் அமைவது போன்று அப்பெயர்களை அபூபக்கறு, உமறு என எழுதுவது பொருத்தமுடைத்து எனக் கொள்ளலாம்.

**காப்பிய அமைப்பு :**

காப்பிய இலக்கியங்கள் அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்றது சீறாப்புராணம். இது ஒரு பெருங்காப்பியம். இதன்கண் உள்ள செய்யுள்கள் படலங்களாகவும் காண்டங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக் காண்டம், ஹிஜ்றத்துக் காண்டம் என முப்பெருங்காண்டங்களைக் கொண்டது சீறாப்புராணம். விலாதத் என்பது அறபுச் சொல். அது பிறப்பு எனப் பொருள்படும். சீறாப் புராணத்தின் பாட்டுடைத்தலைவரான, ஒப்பாரும் மிக்காரும் இல்லாத நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் தலைமுறை, பிறப்பு, இளமை, இளமையில் நிகழ்ந்த முக்கிய சம்பவங்கள் முதலியன விலாதத்துக் காண்டத்தில் இடம் பெற்றுள்ளன. இக்காண்டத்தில் 24 படலங்கள் உள்ளன. 24 படலங்களிலும் 1240 திருவிருத்தங்கள் இடம் பெற்றுள்ளன.

சீறாப்புராணத்தின் இரண்டாவது காண்டம் நுபுவ்வத்துக் காண்டம் ஆகும். நபி என்னும் சொல்லோடு, தொடர்புடையது நுபுவ்வத் என்னும் அறபுச் சொல். நபி என்றால் தீர்க்கதரிசி என்று பொருள் கூறுவர். தீர்க்கதரிசி என்னும் சொல் நபி என்னும் அறபுச் சொல்லின் சரியான பொருளைக் குறிக்கின்றது எனக் கூறிவிட முடியாது. தீர்க்கதரிசனம் என்று ஒருவாறு பொருள் கூறக் கூடிய நபித்துவம்-நபியாகும் தன்மை-நுபுவ்வத் எனப்படுகிறது. எம்பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் நபிப் பட்டம் பெற்ற நிகழ்ச்சியிலிருந்து ஆரம்பமாகிறது நுபுவ்வத்துக் காண்டம். பெருமானாரின் 'ஆறாறிரண்டு' (முப்பத்தெட்டு) வயது நிரம்பியதிலிருந்து பதின்மூன்று ஆண்டுகளில் நிகழ்ந்த சம்பவங்கள் நுபுவ்வத்துக் காண்டத்தில் வருணிக்கப்பட்டுள்ளன. இக்காண்டத்தில் 21 படலங்கள் அமைந்துள்ளன. 21 படலங்களிலும் 1014 திருவிருத்தங்கள் இடம் பெற்றுள்ளன.

சீறாப்புராணத்தின் மிக நீண்ட காண்டமாக அமைந்துள்ளது ஹிஜ்ரத்துக் காண்டம். அதனை பழைய பதிப்பாளர்கள் கிசுறத்துக் காண்டம் எனக் கிரந்த எழுத்துக்களைத் தவிர்த்துக் குறிப்பிட்டுள்ளனர். ஹிஜ்றத் என்னும் அறபுச் சொல் 'இடம்பெயர்தல்' எனப் பொருள் படும். ஒரு நல்ல குறிக்கோளுக்காக ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குச் செல்வதை ஹிஜ்றத் என வழங்குவர். பிறந்த பொன்னாடான மக்க மாநகரத்தை விட்டு மதீனமாநகருக்கு முகம்மது நபி (சல்) அவர்கள் சென்ற பிரயாணமே ஹிஜ்ரத் பயணம் என வருணிக்கப்பட்டுள்ளது. மக்க மாநகர மக்கள் பொறுக்கமுடியாத அளவுக்குப் பெருமானார் (சல்) அவர்களைத் துன்புறுத்தலாயினர். அத்தகைய சொல்லொணாத் துயரங்களைத் தாங்கமுடியாது மக்காவினைத் துறந்து மதீனமாநகருக்குச் செல்வதற்கான அல்லாஹ்வின்

உத்தரவைப் பெற்றதும் அங்கு சென்றார்கள். இஸ்லாமிய ஆண்டு இந்த ஹிஜ்றி நிகழ்ச்சியிலிருந்தே ஆரம்பமாகியது. ஹிஜ்றி என இப்பெயராலேயே அழைக்கப்படலாயிற்று. ஹிஜ்ரத்துக் காண்டத்தில் பெருமானார் (சல்) அவர்களின் இறுதி வாழ்க்கை முழுமையாக விவரிக்கப்படவில்லை. உறனிக் கூட்டத்தார் படலத்துடன் ஹிஜ்றத்துக் காண்டம் முடிவடைகிறது. ஹிஜ்ரத்து நிகழ்ச்சியின் பின்னர் 10 வருடங்கள்தான் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் உயிருடன் இருந்தார்கள். அண்ணல் (சல்) அவர்களுடைய வாழ்க்கையின் இறுதி ஆண்டுகளிலே மக்காவைக் கைப்பற்றுதல், கடைசி ஹஜ் நிறை வேற்றுதல் போன்ற முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு நபிப் பட்டம் அருளப்பெற்று பதின்மூன்றாண்டுகளுக்குப் பின்னரே ஹிஜ்ரத் நிகழ்ச்சி நடைபெற்றது. அன்று முதல் ஹிஜ்றி ஆண்டு ஆறுவரையில் நபிகள் பெருமானின் வாழ்க்கையோடு தொடர்புடைய நிகழ்ச்சிகள் மாத்திரமே இக்காண டத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. ஹிஜ்றி ஆறாம் ஆண்டில் நிகழ்ந்த மழையை அழைப்பித்தல் போன்ற ஒரு சில சம்பவங்கள் மாத்திரமே இடம் பெற்றுள்ளன.

நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் மரபையும், பிறப்பையும், இளமையையும், திருமணத்தையும், வியாபார நடவடிக்கைகளையும் பற்றிக் குறிப்பிடும் 24 படலங்களையும் 1240 திருவிருத்தங்களையும் கொண்ட விலாதத்துக் காண்டத்தில் அண்ணலாரின் நாற்பதாண்டு வாழ்க்கை நிகழ்ச்சிகள் வருணிக்கப்பட்டுள்ளன. நபிப்பட்டம் அருளப்பட்டு மூன்றாண்டுகளுக்குப் பின்னர் ஹிஜ்ரத் நிகழ்ச்சி நடைபெற்றது. அது நபிகள் பெருமானாரின் வாழ்க்கையில் 53வது ஆண்டு ஆகும். பெருமானார் (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் அருளப்பெற்றது அண்ணலாரின் 40 வது ஆண்டிலாகும். நபிகள் பெருமானாரின் வாழ்க்கையில் 13 ஆண்டுகள் இடம் பெற்ற நிகழ்ச்சிகள் 1014 திருவிருத்தங்களைக் கொண்ட 21 படலங்களில் விவரிக்கப்பட்டுள்ளன. ஹிஜ்றி நிகழ்ச்சிக்குப் பின்னர் அதாவது நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் மக்காவிலிருந்து மதினாவுக்கு இடம் பெயர்ந்த பின்னர் அண்ணலாரின் வாழ்க்கையில் ஆறாண்டுகளில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் 2683 திருவிருத்தங்களைக் கொண்ட 47 படலங்களில் விதந்தோதப் பட்டுள்ளன. ஆக, மூன்று காண்டங்களிலும் உள்ள 92 படலங்களிலும் இடம் பெற்றுள்ள 5027 திருவிருத்தங்களில் பெருமானாரின் வாழ்க்கையில் 59 ஆண்டுகள் நிகழ்ந்த சம்பவங்கள் மிக நுணுக்கமாக வருணிக்கப்பட்டுள்ளன.

**காலக் கணிப்பு முறை :**

சீறாப்புராணத்திலுள்ள மூன்று காண்டங்களிலும் நான்கு முறையான காலக் கணிப்புக்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. முதலாங் காண்ட

மான விவாதத்துக் காண்டத்தில் முதலில் சிக்கந்தர் துல்கர்னைன் சகாப்தமும் அடுத்து யானை ஆண்டும் குறிப்பிடப்பட்டுள்ளன. நுபுவ்வத்துக் காண்டத்தில் நபிப்பட்டம் அருளப்பெற்ற நிகழ்ச்சியின் அடிப்படையில் ஆண்டு கணக்கிடப்பட்டுள்ளது. ஹிஜ்றத்துக் காண்ட ஆண்டுக் கணக்கீட்டுக்கு அடிப்படையாக அமைந்துள்ளது ஹிஜ்றி நிகழ்ச்சியாகும். யானை ஆண்டு தோன்றுவதற்குக் காரணமாயிருந்தது ஒரு வரலாற்று நிகழ்ச்சி. யெமன் நாட்டை ஆட்சி புரிந்த அப்றஹா அஷ்றம் என்னும் பெயரை உடைய அபிசீனிய ஆளுநர் மக்காவிற்குப் படை எடுத்து வந்தான். மக்காவை ஆக்கிரமிக்க வந்த அவன் யானைப் படைகளுடன் வந்தான். அப்பொழுது தான் மக்காவில் யானைகள் முதன்முதலாகக் காணப்பட்டன. இது நிகழ்ந்தது கி.பி. 570இல் என்பர். யானைகள் முதன்முதல் மக்காவில் காட்சி அளித்தமையினால் அவ்வாண்டு யானை ஆண்டு என அழைக்கப்பட்டது. அந்த யானை ஆண்டிலேதான் பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்கள் பிறந்தார்கள். அதனாலேயே இன்ன நிகழ்ச்சி இன்ன யானை ஆண்டில் அல்லது நபிகள் நாயகத்தின் இத்தனையாம் வயதில் நிகழ்ந்தது என விலாதத்துக் காண்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. யானைகள் முதன் முதல் மக்காவில் காணப்பட்டதும் முகம்மது (சல்) அவர்கள் பிறந்ததும் ஒரே ஆண்டானமையினால் யானை ஆண்டைக் கொண்டு கணக்கிடும் முறையும் பெருமானாரின் பிறப்பைக் கொண்டு கணக்கிடும் முறையும் ஒரே விதமாகவே இருக்கிறது.

செம்மையங் கோட்டுக் கடகரிக் கலகந்
தீர்ந்தபி னைம்பதா நாளில்
(நபியவதாரப் படலம் : 89)

பெருமானார் (சல்) அவர்கள் பிறந்தார்கள் என யானை ஆண்டின் ஆரம்பமும் பெருமானாரின் பிறப்பும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

முருகவிழ் அலங்கல் திண்தோள் முகம்மது தமக்குச் சார்ந்த
திருவயது இருபத் தைந்து வந்தடைந் திருந்த தன்றே
(பாதைபோந்த படலம் : 2)

விலாதத்துக் காண்டத்தில் இவ்வாறு ஆண்டுகள் குறிப்பிடப்பிடுகின்றன. நுபுவ்வத்துக் காண்டத்தில் பெருமானாரின் வயது நபிப்பட்டம் பெற்ற படலத்தில்

விள்ளரும் கணக்கா றாறிரண் டதின்மேல் (2)

என குறிப்பிடப்பட்டுள்ளது. அதன் பின்னர் அக் காண்டத்தில் வரும் படலங்களில் நபிப்பட்டம் பெற்ற இத்தனையாம் ஆண்டு என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

தூதென நபியின் பட்டந் துலங்கிய நான்கா மாண்டில்
(தீனிலைக்கண்ட படலம் : 1)

திமிர வெங்குபிர் கடிந்துதீ னிலைநெறி நிறுத்திக்
கமை தரும்படி யாண்டுநான் கெனக் கடந்ததற்பின்
(உமறுகத்தாபு ஈமான்கொண்ட படலம் : 1)

பரிவுறு நபியெனும் பட்ட மாகிய
வருடமே ழினிற்றனி முஹற மாத்தையில்
(ஒப்பெழுதித் தீர்த்த படலம் : 1)

இவ்வாறு நபிப்பட்டத்தை அடிப்படையாக வைத்து துபுவ்வத்துக் காண்டத்தில் ஆண்டுகள் குறிப்பிடப்பட்டுள்ளமையை காணலாம். ஹிஜ்றத்துக் காண்டத்திலும் முதலில் உள்ள படலங்களில் நுபுவ்வத்துக் காண்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஆண்டு முறைமையே பின்பற்றப் பட்டுள்ளது. ஹிஜ்றத்து நிகழ்ச்சிக்குப் பீடிகையாக அமைந்துள்ள படலங்களிலே இந்த முறைமை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

உயர்புகழ் முகம்மதுக் கும்பர் கோனபிப்
பெயரளித் தாண்டுபன் மூன்று பேர்பெற
நயமுற நடக்கு மந் நாளில்
(மதீனத்தார் வாய்மைகொடுத்த படலம் : 1)

ஹிஜ்ரத்துக் காண்டத்தில் வரும் பதினோராம் படலத்திலிருந்தே ஹிஜ்றி ஆண்டு குறிப்பிடப்பட்டுள்ளது.

பூண்டநன் கலம்போற் காரண வரைகள்
புடையுடுத் திருந்தமக் காவில்
கூண்டிருந் தெழுந்து மதீனமா நகரில்
குலத்தொடு மினிதுறப் புகுந்தோர்
ஆண்டுசென் றதற்பின்...............
(சல்மான் பாரிசப் படலம் : 1)

மருந்தெ னுங்கலி மாவுரை விதைத்துமக் காவில்
இருந்து மாமதி னாவிடத் தினிதெழுந் தருளித்
திருந்த வாண்டொரு மூன்றினில் தீன்பயிர் விளைத்துப்
பொருந்து நாளினில்.......................
(அசனார் பிறந்த படலம் : 1)

வந்த தெண்ணிய கிசுறத்து நான்கெனும் வருடம்
(உசைனார் பிறந்த படலம் : 1)

விலக்கரிய வருடமொரு நான்கு நிறைந்
தைந்தாண்டு மேவும் போதில்
(ளுமாம் ஈமான்கொண்ட படலம் : 1)

தனிமுதற் றூத ராறா மாண்டினில்.........
(மழையழைப்பித்த படலம் : 1)

இவ்வாறு ஹிஜ்றத்துக் காண்டத்தில் ஹிஜ்றி ஆண்டுகள் குறிப்பிடப் பட்டுள்ளன.

**ஆசிரியர் :**

சீறாப்புராணத்தை இயற்றியவர் உமறுப்புலவர். இவர் பற்றிய திட்டவட்டமான குறிப்புக்களைச் சீறாப்புராணத்திலிருந்து பெற்றுக் கொள்ள இயலவில்லை. எப்பொழுது இயற்றப்பட்டது, எப்பொழுது அரங்கேற்றப்பட்டது, எங்கு அரங்கேற்றப்பட்டது என்பன போன்ற விவரங்களைச் சீறாப்புராணத்திலிருந்து பெற்றுக்கொள்ள முடியாது. சீறாப்புராணத்தை இயற்றியவர் உமறுப்புலவர் என்று கூறுகிறோம். ஆனால் இந்த விபரம் கூடச் சீறாப்புராணத்தில் இடம் பெறவில்லை. கடவுள் வாழ்த்தில் உள்ள அவையடக்கம் என்னும் பகுதியில் மூன்று திருவிருத்தங்கள் இடம் பெற்றிருந்த போதும் சீறாப்புராண ஆசிரிய ரால் தம்மைப் பற்றிய எவ்வித விவரமும் அங்கு தரப்படவில்லை. இம்மூன்று திருவிருத்தங்கள் மூலம் சீறாப்புராண ஆசிரியர் அவர் தம் சிறுமையைக் குறிப்பிட்டுள்ளார். 'செந்தமிழ்ப் புலவர் முன்தான் அறிகிலான்' என்பது தொனிக்க மூன்று திருவிருத்தங்களும் அமைந் துள்ளன. (கடவுள் வாழ்த்து : 18-20) ஏனைய நூலாசிரியர் தத்தம் இலக்கியப் படைப்புக்களில் தத்தம் பெயரைக் குறிப்பிடும் முத்திரைக் கவிகூட சீறாப்புராணத்தில் இடம் பெறவில்லை. சீறாப்புராணத்தில் உள்ள எந்த திருவிருத்தத்திலும் அதன் ஆசிரியர் யார் என்பது குறிப்பிடப்படவில்லை என்பது ஈண்டு நோக்கற்பாலது. வெவ்வேறு இடங்களில் உள்ள குறிப்புக்களை ஆதாரமாகக் கொண்டே சீறாப் புராணத்தை இயற்றியவர் உமறுப்புலவர் எனக் கூறப்படுகிறது. உமறுப்புலவர் தமது பெயரைத் தாம் இயற்றிய நூலில் ஏன் குறிப் பிடவில்லை? சீறாப்புராணத்தைப் பதிப்பித்தவர்கள் ஆசிரியரின் பெயர் குறிப்பிடப்பட்ட செய்யுளை விட்டுவிட்டார்களா? இவற்றிற் கான விடைகளைக் கண்டுபிடிப்பது அரிதிலும் அரிதாகும்.

உமறுப்புலவர் பற்றிய அகச்சான்றுகள் எதுவும் எங்ஙனம் சீறாப் புராணத்தில் காணப்படவில்லையோ அதே போன்று உமறுப்புலவர் பற்றிய ஆதார பூர்வமான செய்திகளும் கிடைத்தற்கரிதாக உள்ளது. கர்ண பரம்பரையான கதைகளை ஆதாரமாக வைத்தே உமறுப்புலவ ரின் வாழ்க்கையை அறிய வேண்டியிருக்கிறது. சீறாப்புராணத்தை முழுமையாகக் காப்பியமாகப் பாடிய பின்னர் கடைசியாக முத்திரைக் கவியையும் ஏனைய கவிஞர்களைப் போல் வாழ்த்துக் கவியையும் பாட உமறுப்புலவர் எண்ணியிருக்கலாம், ஆனால் எதிர்பாராத சூழ்நிலை யில் உமறுப்புலவர் உயிர் நீத்திருக்கலாம். அதன் காரணமாகச் சீறாப்புராணத்தை முழுமையாகப் பாடி முடிக்க இயலாமல் போனது போன்று தமது பெயரை அமைத்து முத்திரைக் கவியை பாடவும் இயலாது போயிருக்கலாம். முழுமையாகப் பெறாத ஒரு காப்பியத்தை உமறுப் புலவர் அரங்கேற்றி இருப்பார் என்று கொள்ளவும் முடியாது.

உமறுப் புலவரின் வாழ்க்கை பற்றிய கர்ணபரம்பரையான கதைகள் பல வழக்கில் உள்ளன. உமறுப் புலவரின் மூதாதையர் நறுமணப் பொருள்களில் வியாபாரம் புரிந்தவர்களாவர். அறபு வணிகரான அவர்கள் தமிழ் நாட்டிற்கு வந்தனர். வியாபாரத்தில் ஈடுபட்டனர். இனிதே நடத்தி வந்தனர். அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர் செய்கு முகம்மது அலி என்பவர். காலப்போக்கில் செய்கு முகம்மது அலி என்பது சேகு முதலி என மருவலாயிற்று. பின்னர் மரியாதை விகுதியாகிய 'ஆர்' பெற்று சேகு முதலியார் என வழங்கலாயிற்று. எட்டயபுரத்தை அடுத்த நாகலாபுரத்தில் அவர் வாழ்ந்து வந்தார். அவருடைய புதல்வர் தாம் உமறுப் புலவர். ஆரம்பத்தில் திண்ணைப் பள்ளியிலும் பின்னர் கடிகை முத்துப் புலவரிடமும் கல்வி பயின்றார் உமறு. ஒரு தடவை கடிகை முத்துப் புலவருடன் வாதாட வந்த வாலைவாருதி என்னும் வடநாட்டுப் புலவன் ஒருவனை வாதில் வென்று பெருமை ஈட்டினார். அரசனும் மகிழ்ந்தான். கடிகை முத்துப் புலவரும் புத்துணர்ச்சி பெற்றார். அதன் பின்னர் உமறுப் புலவர் அரசவைப் புலவராக நியமிக்கப்பட்டார். பேரும் புகழும் பெற்றார். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனிப்பெரும் புலவராகத் திகழ்ந்தார்.

உமறுப் புலவரின் தந்தை பெயர் முகம்மது நயினார் பிள்ளை என்றும் உமறுப் புலவர் ஹிஜ்றி 1052 ஆம் ஆண்டு ஷ'பான் மாதம் பிறை 9-இல் பிறந்தார் என்றும் ஹிஜ்றி 1115-ஆம் ஆண்டு றபீஉல் அவ்வல் மாதம் பிறை 14-ல் காலமானார் என்றும் ஒரு செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளன. ஹிஜ்றி 1052-ஆம் ஆண்டு ஷ'பான் தலைப் பிறை 1642-ஆம் ஆங்கில ஆண்டு அக்டோபர் மாதம் 25-ஆந் தேதி சனிக்கிழமை ஆகும். எனவே ஷ'பான் மாதம் 9-ஆம் பிறை 1642 ஆம் ஆண்டு நொவெம்பர் மாதம் 2-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை ஆகும். அதே போன்று உமறுப் புலவர் உயிர் நீத்த நாள் ஹிஜ்றி 1115-ஆம் ஆண்டு றபீஉல் அவ்வல் மாதம் பிறை 14-இல் என்றும் கூறப் பட்டுள்ளது. ஹிஜ்றி 1115-ஆம் ஆண்டு றபீஉல் அவ்வல் மாதம் 15-ஆம் திகதி ஞாயிற்றுக்கிழமை ஆகும். இதற்கிணங்க ஹிஜ்றி 1115-ஆம் ஆண்டு றபீஉல் அவ்வல் மாதம் 14-ஆம் பிறை கி.பி. 1703-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 28-ஆந் தேதி சனிக்கிழமை ஆகும். இதன்படி பார்க்கும்பொழுது உமறுப் புலவர் அவர்கள் 63 ஹிஜ்றி ஆண்டுகள் (அதாவது 61 ஆங்கில ஆண்டுகள்) இவ்வுலகில் வாழ்ந் தார்கள் என்பது புலனாகின்றது.

1953 ஆம் ஆண்டின் கழக வெளியீடான தமிழ்ப்புலவர் வரிசை பகுதி-உ, ஐந்தாம் புத்தகத்தில் அதன் ஆசிரியர் திரு. சு. அ. இராம

சாமிப் புலவர் அவர்கள் உமறுப்புலவர் பற்றி இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

'உமறுப்புலவர் என்பவர் சேது நாட்டில் உள்ள கீழக்கரையைச் சேர்ந்தவர். அவர் தோன்றிய காலம் ஏறக்குறைய இரு நூற்றைம்பது யாண்டுகட்கு முன்பு என்பர். உமறுப்புலவருடைய மதம் முகமதியம் (இஸ்லாம்).

'உமறுப்புலவரின் தந்தை முத்து வாணிகத்தில் ஈடுபட்டிருந்தார். அவர் அடிக்கடி எட்டையபுரச் சிற்றரசரிடம் செல்வது வழக்கம். அங்கு செல்லும் போதெல்லாம் கடிகை முத்துப் புலவரையும் பார்த்து அவரோடு உரையாடி மகிழ்தல் வழக்கம். கடிகை முத்துப்புலவரின் சொல்லாற்றல் உமறுப்புலவரின் தந்தை உள்ளத்தை கவர்ந்தது. உமறுப்புலவரையும் அவர் அடிக்கடி உடனழைத்துச் செல்வது வழக்கம். கடிகை முத்துப் புலவருக்கு அரசரிடமும் மக்களிடமும் இருந்த செல்வாக்கும் புகழும் உமறு தந்தையின் உள்ளத்தைக் கவர்ந்தது. தம் மைந்தனையும் தமிழறிஞனாக்க வேண்டும் என்று விருப்பம் கொண்டார். தம் விருப்பத்தைக் கடிகை முத்துப் புலவரிடம் தெரிவித்தார். புலவருடைய உடன் பாட்டைப் பெற்றுத் தம் மைந்தனைப் புலவரிடம் ஒப்புவித்துச் சென்றார்.

'கடிகை முத்துப் புலவரிடம் ஒப்புவிக்கப் பெற்ற உமறு தமிழ்க் கல்வியிலே மிகுந்த விருப்பங் காட்டினார். கடிகை முத்துப் புலவர் இயற்கையிலேயே சொல்லாற்றல் மிக்கவராக விளங்கினமையின் மிகு விரைவிலே தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்பித்தார். நாளடைவில் உமறு, உமறுப்புலவரானார்.

'உமறு, தமிழ் மொழியை நன்கு கற்றார். தம் மதத்தினிடத்தில் அழுந்திய பற்றுடையவராக விளங்கினார். முகம்மது நபியின் வரலாறு கூறுவதாகிய சீறாப்புராணத்தை ஐயாயிரம் பாடல்களாகப் பாடிமுடித்தார். இப்புராணம் தமிழர்களாற் பாடப்பெற்றது போலவே செந்தமிழ் நடையில் அமைந்துள்ளது.

(தமிழ்ப்புலவர் வரிசை ஐந்தாம் புத்தகம்: பக்: 103-104)

**காப்பிய தோற்றப் பின்னணி :**

ஒருநாள் பெரியதம்பி மரைக்காயரின் புதல்வர் செய்கு அப்துல் காதிர் மரைக்காயர் எட்டையபுர அரசவைக்குச் சென்றார். அங்கே உமறுப்புலவரைக் காணும் வாய்ப்பு அவருக்குக் கிட்டியது. உமறுப் புலவரைக் கொண்டு பெருமானாரின் வாழ்க்கையைக் கவிதையாக வடிக்கவேண்டும் என்று எண்ணங்கொண்டார். பின்னர் சீதக்காதி

வள்ளல் என்று புகழப்பெற்ற செய்கு அப்துல் காதிர் மரைக் காயர் அவர்கள் தமது விருப்பத்தை உமறுப்புலவரிடம் தெரிவித்தார். உமறுப்புலவரும் இணங்கினார். பிறகு சீதக்காதி வள்ளல் அவர்கள் உமறுப்புலவரை பேரறிஞரான சதக்கத்துல்லா அப்பா அவர்களிடம் அழைத்துச் சென்றார். உமறுப்புலவரை சதக்கத்துல்லா அப்பா அவர்களுக்கு அறிமுகப்படுத்தினார். பெருமானாரின் வாழ்க்கையைக் கவிதையாகப் பாட உமறுப்புலவர் இணங்கி உள்ளார் என்றும் அவருக்கு அதற்கான உரைகொடுத்து உதவிபுரிய வேண்டும் என்றும் சதக்கத்துல்லா அப்பா அவர்களிடம் வேண்டிக்கொண்டார். உமறுப் புலவர் உடை நடை பாவனைகளைக்கண்ட சதக்கத்துல்லா அப்பா அவர்கள் ஒரு முஸ்லிமுக்குரிய இலட்சணங்கள் உமறுப்புலவரிடம் இருக்கவில்லை எனக்கூறி உரை வழங்க மறுத்தார். அவ்விடத்தை விட்டு நீங்கிய உமறுப்புலவர் பள்ளிவாசலை அடைந்தார். குறை இரங்கினார். முகம்மது நபி (சல்) அவர்களைப் புகழ்ந்து பாட உதவி புரியுமாறு வேண்டினார். அச்சந்தர்ப்பத்தில் உமறுப்புலவரால் பாடப்பட்ட பாடல்கள் எனக் கருதப்படும் செய்யுள்கள் இப்பொழுது முதுமொழி என்னும் பெயருடன் நூலுருப்பெற்றிருப்பதைக் காணலாம். அந்நூல் முதுமொழி மாலையாக இருக்கமுடியாது; முதுமணி மாலை யாக இருந்திருக்கவேண்டும் என்று கருத்துத் தெரிவிப்பாரும் உளர். இப்பாடல்களைப் பாடியதும் உமறுப்புலவர் கண் அயர்ந்தார். அப்பொழுது உமறுப்புலவரிடத்தும் செய்கு சதக்கத்துல்லா அப்பா விடத்தும் கனவில் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் தோன்றி உமறுப்புலவரை செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்களிடம் செல்லு மாறும் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்களை விளித்து உமறுப் புலவருக்கு உரை வழங்குமாறும் பணித்தார்கள். பின்னர் உமறுப் புலவர் செய்கு சதக்கத்துல்லா அப்பாவிடம் செல்ல உமறுப்புலவருக்கு உரை வழங்கப்பட்டது. இது கர்ண பரம்பரைக்கதை. இக்கதை எம். ஆர். எம். அப்துற் றஹீம் அவர்கள் எழுதிய முஸ்லிம் புலவர்கள் என்னும் நூலில் விரிவாகத் தரப்பட்டுள்ளது. கண்ணகுமது மகுதூம் முகம்மதுப் புலவர் அவர்கள் பதிப்பித்த சீறாப்புராணத்தின் பின் இணைப்பிலும் மு. செ. முகம்மது அப்துல் காதிர் அவர்கள் எழுதிய இறை நேசச் செல்வர் இமாம் ஷேக் சதக்கத்துல்லா என்னும் நூலிலும் (பக்கம் 120-123) செய்கு செய்யிது அப்துல் காதிறுஸ் ஸவாவி அவர்கள் எழுதிய செய்கு செய்யிது சதக்கத்துல்லா அவர்கள் சரித்திரச் சுருக்கம் என்னும் நூலிலும் (பக்கம் 17) இச்செய்திகள் விரிவாகவும் சுருக்கமாகவும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

இத்தகைய மற்றொரு கர்ண பரம்பரைக் கதையை மகுமூது பந்தரைச் சேர்ந்த க. வு. காதிரசனா மரைக்காயர் அவர்கள் நாகூர் குலாம் காதிறு நாவலர் அவர்களால் எழுதப்பட்ட சீறா நபியவதார

படல உரைக்கு மறுப்பாக எழுதிய நபியவதாரப் படலம் உரைகடிலகம் என்னும் நூலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

'மகத்துவமுடைய உமறுப் புலவரவர்கள் எட்டயபுர சமஸ்தானத்திலே வித்வாம்ஸத்திலே சிறந்து விளங்கித் தேவாரம், திருவாசகம், பெரியபுராணம், திருவிளையாடல், இராமாயணம், பாரதம் முதலிய நூல்களின் பிரசங்கத்திலே தேர்ச்சியடைந்து விளங்கிவரும் காலத்தில் ஒருநாள் அம்மஹானது மனத்தின்கண் இந்துக்களின் புராணகதைகளிலேயே தேர்ந்தேமன்றி நம்மார்க்க சம்பந்தமான சரித்திரங்களிலே தேர்ந்தேமிலையே, அன்றியும் அச்சரித்திரங்கள் பொதிந்த புராணங்களொன்றையும் கண்டேமிலையே, ஆ! இதென்ன விபரீதமென வையுற்றுத் திகைத்தேங்கி நாம் வாணாளை வீணாகச் செலவழித்தேமேயன்றி ஏதும் பயன் பயந்திலேம் ஆகலின் இதுகாறும் செய்த தோஷங்களைத் தொலைத்தலே அத்தியாவசியமெனுங் கருத்தினராய் மேற்படி சமஸ்தானத்திலே தமக்கு கிடைத்து வந்த வரிய செல்வப் பொருளையும் வேண்டாமென மறுத்து அந்நகர் விடுத்துத் தனித்தவராய்த் தமது மார்க்கப் பயிற்சியிற் சேர்ந்த வித்துவான்களமர்தரு நகர் தேடி நடந்து நீர்வள நிலவளங்களாற் சிறந்து, ஏக சோதியோடொன்றாய்க் கலந்து ஒப்பற விளங்கும் ஒலிகளென்னும் மஹான்களது பீடகாவல் கொண்டிரா நின்ற வென்பதியாகிய மஹமூது பந்தர் வந்தடைந்து குணத்தாலும் நடையுடை பாவனைகளாலும் சிறந்து விளங்கிய மாந்தர்களை நோக்கித் தம்மகத்துற்றவரிய கொள்கை நிறைவேறுயிடமிஃதேயென நன்குணர்ந்து மகத்தாகிய வேதப்பயிற்சியிற் தேர்ந்தவரும் மார்க்கச் சட்டதிட்டங்களை வழாது நடப்பித்துவருவான் வேண்டி நியமிக்கப்பட்டவருமான எனது பிதிராகிய முகம்மது நெய்னா லெப்பை எனுமியற் பெயரினையும் காலி மஹ்மூது எனுங் காரணப் பெயரினையும் உடைய வள்ளன் மாட்டடைந்து, தமது கோரிக்கையை முறையிட்டபோழ்து, வள்ளலவர்கள், புலவீர், நீவிர் நபிகணாயகம் முகம்மது (சல்) அவர்களின் சரித்திரங்களைப் பாடுமத்தனை தகுதிக்குப் பாத்திரமல்லிர்; என்னையோவெனின் நீவிர் நம் மார்க்க நிர்ணயங்களுக்கு விரோதமாய்ச் செம்மறிக் கடாக்களின் கொம்பு போன்ற முறுக்கிய மீசையுடையவராயுங் கதுப்புகளொழிய மற்றையவிடங்களை வெறுமை செய்தவராயுமிருக்கின்றீர். ஆதலின் என மிக்கவன்மையாய் கூறக்கேட்ட புலவரவர்கள் திடுக்கிட்டேங்கியகன்று மார்க்கப் பொருத்தம்போல் செய்து மறுதினம் வள்ளன்மாட்டடைந்து நிற்கக் கண்ணுற்ற வந்நாயகமவர்கள், புலவீர், நபிகணாயகமவர்களின் சரித்திரங்களைத் தமிழ்க் கவிதைகளாற் புனைதல் செய்யுங்காலத்து நபிபெருமானாரவர்களின் பெண்மக்களைத்

தமிழியற்கொப்பப் பலவாறு வருணிப்பீர் ; அன்றியும் மார்க்கப் பயிற்சியில் அவ்வளவு தேர்ந்தவரென யாம் நினைக்கவுமில்லை. ஆகவே மேன்மை தங்கிய சரித்திரத்தை நும்மிடத்துக் கொடுக்க என் மனம் பொருந்திலது, என்றாலும் நீர் கருதியபடி புராணஞ் செய்வதற்காக மகத்தாகிய கடவுளினது ஒப்பறுதலைக் குறித்த ஒரு கவிதை செய்து வருவீராகவென ஆக்கியாபித்தபோது பலவாறு மதுரமூறிய கவிகளாற் கடவுளினது தன்மையைப்பற்றிப் புனைதல் செய்து பிரதி தினமும் நாயகரது சந்நிதியில் கொடுவர ஒவ்வொரு கவிதைகளிலும் கடவுளுக்குத் தகுதியில்லாத சில தவறுக்காக காண்பித்துக் கூடாதென மறுத்து விடுவார்கள்.

இவ்வாறு அநேக கவிதைகளைச் செய்து யாதும் பயன்படாது போனதுபற்றிப் புலவரவர்கள் மனங்கலங்கி இக்காண்டத்திற்கு நாயகராய் விளங்கும் நாகூர் ஷாஹுல்ஹமீது ஆண்டவரவர் களின் பாத மாட்டடைந்து தமது கோரிக்கை நிறைவேறும் வரை கிடப்பாமெனு மனத்தினராய்ச் சென்று பல நாளங்ஙனமே வீற்றிருந்தும் தமது கோரிக்கை நிறைவேறக் காணுமையான் ஒருநாள் சந்நிதானத்தினின்று ''நாயக, எமது கோரிக்கை நுமக்கும் பொருந்துமேல் எதிர்வரும் இரவிலே யாம் கருதிய புராணத்திற்கு முதலிலே வரைதற்காக மெய்யாகிய கடவுளினது ஒப்பறுதலைக் குறித்துப் புனையுங் கவிதைக்குத் தலைமொழியை எமக்கு வெள்ளிதாயறிவித்தல் வேண்டும். இல்லாவிடில் விடிந்த வுடனே இவ்வழியாக வெம்பதி அடைதல் திண்ணம்'' எனக்கூறி யன்றிராதரித்துத் துயிலும்போது ஒலிகள் பிரானவர்களின் கிருபா கடாட்சத்தானே புலவர் நாயகம் அவர்களின் மனந் திருக்கறத் 'திருவினும் திருவாய்ப் பொருளினும் பொருளாய்' என்ற உருத்தோற்றம் இன்றிய ஒரு தொனியைக் கேட்டு ஆனந்தக் கடலிலே மூழ்கித் 'தெளிவினுந் தெளிவதாய்ச் சிறந்த' எனத் தொடங்கி யெழுந்து ''பெருந்தலம் புரந்த கருத்தனைப் பொருத்துதல் கருத்தே'' எனச் செய்யுளை முடித்து ஒலிகள் பிரானவர்களை வணங்கி உடனே பிரயாணித்து மஹ்மூது பந்தர் காலி மஹ்மூதவர்கள் மாட்டடைந்து நடந்தனவெல்லாம் நவிற் றிக் கடவுளினது ஒப்பறுதலைக் குறித்துச் செய்த செய்யுளைக் காண்பிக்க அதினுள்ளுறைப் பொருளை நன்குணர்ந்த நாயக மவர்கள் மிக்க மகிழ்வு கூர்ந்து புலவரீர், நபி பெருமானாரவர் களின் சரித்திரத்தைத் தமிழ்ப் புராணமாய்ச் செய்தற்கு ஒலிகள் பிரானவர்கட்கும் பொருத்தமேயாகலின் எமக்கும் மிக்க பொருத் தமே. நும்மனத்துற்றடைந்தவாறு தமிழ்ப் புராணமாய்ச் செய்வீராகவென வுத்தாரமு முதனூலிற் சில பாகமும் கொடுத் தார்கள். பிறநிகழ்ந்தனவெல்லா நிகழ்ந்தன ; உய்த்துணர்க : (பக்கம் ரு-எ)

இக்கதை சதக்கத்துல்லா அப்பா அவர்களிடம் உமறுப்புலவர் சென்ற கதையிலும் வேறுபட்டதாக இருக்கிறது. இக்கதையில் உமறுப்புலவர் நாகூரில் உள்ள சாகுல் அமீது ஆண்டவருடைய கல்லறையை நாடிச் சென்றுள்ளார். இக்கதை உண்மை எனின் உமறுப்புலவர் அதனைக் குறிப்பிடும் முகமாகச் சாகுல் அமீது ஆண்ட கையைக் கடவுள் வாழ்த்தில் புகழ்ந்திருப்பார். ஆனால் உமறுப் புலவர் சீறாப்புராணத்தில் சாகுல் அமீது ஆண்டகையைப் பற்றிய எவ்விதக் குறிப்பையும் சேர்க்கவில்லை என்பது ஈண்டு நோக்கற் பாலது. இதற்கு மாறாகச் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்களே உமறுப்புலவருக்கு உரை வழங்கி இருந்தால் அவர்கள் பற்றிய அத்தகைய குறிப்பும் சீறாப்புராணத்தில் இடம் பெற்றிருக்கும். அத் தகைய குறிப்பும் சீறாப்புராணத்தில் காணமுடியாது. சீறாப் புராணத்தில் உள்ள கடவுள் வாழ்த்தில் இடம் பெற்றுள்ள சதக்கத் துல்லா அப்பா பற்றிய பாடலையும் உமறுப்புலவர் பாடி இருக்க முடியாது. அது பிற்சேர்க்கையான ஓர் இடைச் செருகலாகவே உள்ளது. அதனைப் பின்னர் விளக்குவாம்.

சீறாப்புராணம் என்னும் காப்பியத்தில் இடம் பெற்றுள்ள பெருமானார் (சல்) அவர்கள் சம்பந்தப்பட்ட வரலாற்று நிகழ்ச்சிகள் வருணிக்கப்பட்டு விவரிக்கப்பட்டுள்ள முறையைப் பார்க்கும்பொழுது சீறாப்புராண ஆசிரியர் எவருடைய உரையையும் பெறுவதற்கான தேவை அவருக்கு ஏற்படவில்லை என்பது தெற்றெனப் புலனாகின்றது. பெருமானார் (சல்) அவர்களின் வாழ்க்கையைப் பற்றி சீறாப்புராண ஆசிரியர் நன்கு அறிந்திருந்தார் என்பதும் தெளிவாக விளங்குகிறது. சில சமயங்களில் பெருமானார் வாழ்க்கை பற்றிய மரபு வழிச் செய்தி களைச் சற்று மாற்றிச் சீறாப்புராணம் குறிப்பிடுகின்றது. அத்தகைய மாற்றியமைக்கப்பட்ட செய்திகள் அதிகாரபூர்வமான பெருமானார் வாழ்க்கை பற்றிய செய்திகளுடன் பெரிதும் ஒத்திருப்பதைக் காண லாம். இன்ன பிறவும் பெருமானார் (சல்) அவர்களின் வாழ்க்கை பற்றியும் சீறாப்புராண ஆசிரியருக்கு இருந்த சிறந்த புலமையையும் எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.

**பதிப்பு :**

சீறாப்புராணம் இயற்றப்பட்டு ஏறத்தாழ 140 ஆண்டுகள் சென்ற பின்னரே அது அச்சியற்றப்பட்டது. சீறாப்புராண ஆசிரியர் உமறுப் புலவர் ஹிஜ்றி 1115 (கி.பி. 1703) இல் உயிர் நீத்தார் என்று கூறப் படுகிறது. சீறாப்புராணத்தின் முதற்பதிப்பு கி.பி. 1842 (ஹிஜ்றி 1258) இல் வெளிவந்துள்ளது. அதனை அச்சிற் பதிப்பித்தவர் செய்கு அப்துல் காதிர் நெய்னார் லெப்பை ஆலிம் அவர்களாவார். தமது ஆக்கப்பணிகளை முடித்த பின்னரே அவர் சீறாப்புராணத்தைப்

பதிப்பித்துள்ளார். சீறாப்புராணத்தின் இந்த முதற்பதிப்பு உவைசு நயினார்ப் புலவராலும் யாழ்ப்பாணத்து பக்கீர் முகியித்தீன் என்பவ ராலும் பரிசோதிக்கப்பட்டது. இப்பதிப்புக்கு உதவிய உவைசு நயினார் அவர்களின் பெயர் முதற்பக்கத்திலும் யாழ்ப்பாணத்து பக்கீர் முகியித்தீன் அவர்களின் பெயர் கடைசிப் பக்கத்திலும் பிரசுரிக்கப் பட்டுள்ளன.

யாழ்ப்பாணத்துப் பக்கீர் முகியித்தீன் என்பவர் உதுமான் லெப்பை அவர்களின் குமாரராவார். இவர் பரிகாரி மரைக்காயர் என்றும் அழைக்கப்பட்டார். இந்தப் பக்கீர் முகியித்தீன் புலவர் தமிழ் நூல் வெளியீட்டுத்துறையில் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார். இஸ்லா மிய அடிப்படையில் தோன்றிய பல தமிழ்க் காப்பியங்களையும் ஏனைய பிரபந்தங்களையும் பரிசோதித்துப் பதிப்பித்துள்ளார்.

யாழ்ப்பாணத்துத் தமிழறிஞர்கள் அந்தக் கால கட்டத்தில் பிரதானமான பல தமிழ் நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளனர். கி.பி. 1847 ஆம் ஆண்டு பிலவங்க வருடம் ஆவணி மாதம் முதன் முதல் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தை நச்சினார்க்கினியர் உரை யோடு அச்சிற் பதிப்பித்தவர் மழவை மகாலிங்கையர் அவர்களாவர், என தலைசிறந்த ஈழத்து மூதறிஞரான பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை அவர்கள் தமது இலக்கிய வழி என்றும் நூலில் (பக்கம் 151) குறிப்பிட்டுள்ளார். கி.பி. 1868 ஆம் ஆண்டு (விபவ வருடம் புரட் டாசி மாதம்) தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையர் உரைப் பதிப்பு தாமோதரம் பிள்ளை அவர்களால் அச்சிடப்பட்டு முதன் முதல் வெளிவந்தது. அதனைப் பரிசோதனை செய்து உதவியவர்கள் நாவலர் அவர்கள். கி.பி. 1881 இல் வீரசோழியம் உரைப்பதிப்பும், 1883 இல் இறையனார் களவியல் உரைப்பதிப்பும், 1885 இல் தொல் காப்பியம் பொருளதிகாரம் பதிப்பும், சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களால் வெளியிடப்பட்டது. பொருளதிகார முதல் ஐந்து படலங்கள் நச்சினார்க்கினியர் உரையோடும் பின்னான்கு இயல்களும் பேராசிரியர் உரையோடும் வெளிவந்துள்ளன. இந்த விவரங்கள் இலக்கிய வழியில் தரப்பட்டுள்ளன. தமிழ் இலக்கியங்கள் பல வற்றைப் பதிப்பித்து வெளியிட்ட தமிழ்த் தாத்தாவும் மகாமகோபாத்தி யாயரும் ஆன டாக்டர் சாமிநாதையர் அவர்கள் பிறந்தது கி.பி. 1855 என்பதும் ஈண்டு நோக்கற்பாலது.

செய்கு அப்துல் காதிறு நெயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் முதன் முதலாக சீறாப்புராணத்தைப் பரிசோதித்து வெளி யிட்டபோது அச்சிற் பதிப்பித்த வரலாற்றைக் குறிப்பிட்டுள்ளார். அக்கவிதை நேரிசையாசிரியப்பாவாக அமைந்துள்ளது. அச்சிற் பதிப்பித்த வரலாற்றிலே சீறாப்புராணத்துக்குக் கருப்பொருளாய்

அமைந்த நபிகள் நாயகம் (சல்) அவர்களைப் பற்றியும் சீறாப்புராண ஆசிரியர் பற்றியும் அவர் பிறந்த இடம் பற்றியும் தாம் அதனைப் பரிசோதித்தபோது மேற்கொண்ட நடவடிக்கைகள் பற்றியும் குறிப் பிட்டுள்ளார். முதலில் இறைவனின் தன்மையையும் அவனது ஆற் றலையும் குறிப்பிட்டுவிட்டு முகம்மது நபி (சல்) அவர்களின் பிறப்புத் தொன்மையைப் பற்றி இவ்வாறு பாடி உள்ளார்.

திருமறைப் பொருளினுந் தெளிதரு மறிவினும்
அருமறைப் பொருளாய் அனைத்தினுந் தோற்றும்
பண்புந் தொழிலும் பெயரும் பயனும்
எண்படும் பேரும் இன்பமு மியல்பும்
வெவ்வேறு படினும் வேற்றுமைக் கெல்லாம்
அவ்வே றளித்தும் அமையாக் கருத்தனாய்
தன்னைத் தன்னாற் 'றனக்குத் தானே'
தன்னின் றன்கட் காணுந் தகையன்
காண்போன் காட்சி காணப் படுபொருண்
மூன்று மொன்றாய் முத்துறை யானோன்
நடுத்துறை யாகி யிருதுறை நயமும்
எடுத்தரு ளொளிவா யிருந்தமெய்ப் பொருளாய்
ஆல மனைத்து மகத்து ளமைத்துங்
கோல மனைத்துங் கொண்டவெம் பெருமான்
சோதியிற் சோதியாய்த் துலங்குமத் தன்மை
ஆதியா வெடுத்த அவதா ரத்தால்
உரித்தா மானிட வுருவங் கொண்டு
கருத்தா வாகிய காரணக் கடவுள்
முகம்மது நயினார் முதிர்புகழ்ச் சரிதையை

எந்த ஊரைச் சேர்ந்த புலவர் பாடினார் என்பதையும் அந்த ஊரின் இயற்கை நலனையும் சுருங்கக் கூறியுள்ளார். அரும் பெரும் பலன் கருதியே இந்நூலை யாத்துள்ளார் என்பதையும் இவ்வாறு குறிப்பிட் டுள்ளார். உமறுப்புலவரின் ஊர் கீழ்க்கரை என்றும் அச்சிற் பதிப்பித்த வரலாற்றிலே செய்கு அப்துல் காதிறு நெயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

அகமிக மகிழ்கூர்ந் தரும்பலன் கருதித்
தேங்கனி மணமுந் தினந்தினம் பொழிலின்
பூங்கமழ் கீழக் கரையெனும் புரத்தில்

சிறந்தவர். நாவலர், இலக்கிய இலக்கணங்களைக் கற்றுத் தேர்ந்த வர். தெய்வபக்தி மிக்குடையவர். அவர்தான் உமறுப்புலவர் என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் பதிப்பாசிரியர்

நெறியுந் தவமும், நீதியு மொழுக்கத்
தறிவுங் கோடா தமைதரு வாழ்க்கையர்
நற்குண நயினார் நனிகூர் காட்சிப்
பற்பல போதும் படைத்த வரத்தினர்
வழிபடு கலைஞர் வாழ்த்துதற் காய
வொழுகுடைக் கல்வியி னூங்கிய நாவலர்
ஐவகை யிலக்கணத் தாய்ந்து பயன்படு
மெய்வகை யிலக்கண மீறிய கருத்தினர்
அருளொடு தெய்வப் பத்தியு மரும்பொருட்
டெருளொடு நிலைத்த வுறுதிச் சிந்தையர்
துதிக்கத் துதிக்கச் சுகந்தருந் தவத்தின்
சதக்கத் துல்லா சாகிபைத் தொடர்ந்தவர்
அமரு முயிர்கள்பா லன்பா லுயர்ந்த
வுமறுப் புலவரென் றோங்கிய வள்ளல்

தொடர்ந்து சீறாப்புராணத்தின் அமைப்பு அழகாக வருணிக்கப் பட்டுள்ளது. அக்காப்பியத்தின் சிறப்பியல்புகள் சுட்டிக்காட்டப் பட்டுள்ளன. சீறாப்புராணம் விரிந்த பொருளைச் சுருங்கக் கூறு கின்றது. பல்சுவை மிக்கது. நயம் மிக்கது. மலைவிலாத விளக் கத்தைத் தருவது. படிப்போருக்கு மட்டுமல்லாது கேட்போருக்கும் இன்பம் தரவல்லது. மனதுக்கு மகிழ்ச்சி ஊட்டவல்லது. பால், தேன், பழம் இவற்றைக் கலந்துண்ட சுவைகள் எல்லாவற்றையும் அளிக்க வல்லது. இன்பம் ஊறிய இத்தகைய கவிகளைக் கொண்டது சீறாப் புராணம். இக்கருத்துக்களே இங்கு இவ்வாறு தரப்பட்டுள்ளன.

சுருங்கிய சொல்லும் விரிந்த பொருளுமாத்
தெரிந்த மொழியுஞ் செறிந்த நயமுமா
மலைவிலா விளக்கமு மதிபடு பாகமாக்
கலைவிலா நிலையுங் கனிந்த சுவையுமாச்
செவிக்கோ ரின்பமுஞ் சிந்தைக்கா நந்தமும்
எவர்க்கு நல்கு மிசையும் பேறுமா
நாளு நாளு நவநவ மாக
ஆளுந் தொடைபல அமைத்துத் திரண்ட
பாலொடு தேனும் பழமுங் கண்டு
மேலுள சுவையெலா மிகுத்தால் வெறுக்கத்
தகுவன வாமெனத் தனியே மதுரம்
உகுவன வாவின்ப மூறிய கவிகளாற்
சிதநூ லியல்பிற் சீறா வென்ன
முதனூ னாமமே நாட்டி

இங்கே முதனூல் நாமமே இந்நூலுக்கும் இடப்பட்டுள்ளது எனக் குறிப்பிட்டுள்ளார். அறபு மொழியில் சீறத் (சீறா) வரலாறு என்னும் பெயராலேயே இந்நூலும் சீறாப்புராணம் என அழைக்கப்பட்டுள்ளது என்பது இங்கு சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. நூற்பயனையும் பயக்கரும் நன்னூல் இது என்பது

..............................முதுபயன்
அறம்பொரு ளின்பம்வீ டனைத்து மடங்கிய
திறம்பெறுங் காப்பியஞ் செய்தன ரஃதே

என இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

முன்பு எழுத்துப் பிரதியாக இருந்த சீறாப்புராணம் பலராலும் பலவேறுபாடு தோன்றும் வகையில் எழுதிப் பயின்று வரப்பட்டது. எனவே அதனைப் பரிசோதித்து அச்சிடுதல் அவசியமான ஒரு செயல் எனக் கருதப்பட்டது. இம் முயற்சியில் ஈடுபட்டு வந்தார் காயல் பட்டினத்தைச் சேர்ந்த ஒருவர். அவர் பெயர் உவைசு நயினார் லப்பை. அவர் செய்கு சம்சுத்தீன் லப்பை ஆலிம் அவர்களின் புதல்வர். கல்வி கேள்விகளிற் சிறந்தவர். உவைசு நயினார் அவர்கள் நன்கு பதிசோதித்து வேண்டிக்கொண்டதன் பேரிலே இப்பதிப்பு வெளியிடப்பட்டது என்று இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள்.

பலபல தேஎத்தும் பல்லோ ரிடத்தும்
பலபட வெழுதிப் பயின்று வருவதின்
எழுத்தினுஞ் சொல்லினும் பொருளினு மியாப்பினும்
வழுத்திய வணியினும் வழுசில கலத்தலால்
நலனுற வெவரு நனிபய னோர்ந்து
பலனுறத் தாங்கள் பரிசோ தித்துத்
துளக்கற வச்சிற் றுலங்கப் பதிப்பித்து
விளக்கவேண் டுமென விளைபலன் மிகுத்த
பெரும்பதி காயலிற் பிரபல முடைய
அருந்தவத் தோர்களுக் கருமணி யாகிய
சால்புறு செய்கு சமுசுத்தீன் லப்பை
யாலி மீன்ற வழகிய செல்வன்
சேர்ந்தவர்க் காதரஞ் செலுத்து மனத்தன்
தேர்ந்தவர்க் குதவி செய்தய வுடையன்
இயலிற் சிறந்தோன் எனக்குறுந் துணைவன்
புயலிற் சிறந்தோன் புண்ணிய மதியினன்
நண்புறை உவைசு நயினார் லப்பை
யன்புடன் கேட்ட வருமை யுன்னி

அச்சிற் பதிப்பித்த வரலாற்றில் தாம் என்ன என்ன முறையில் *சீறாப்* புராணத்தை எழுத்துப் பிரதிகளை அலசி ஆராய்ந்து பதிப்பித்தார்கள் என்பதை விரிவாக விளக்கி உள்ளார் பதிப்பாசிரியர். அதனைத் தொடர்ந்து பதிப்பாசிரியர் தம்மை இன்னார் என்று அறிமுகப்படுத்தி உள்ளார். முதலில் தாம் இயற்றிய நூல்கள் பலவற்றைக் குறிப்பிட்டுள்ளார். தாம் வகுதையைச் சேர்ந்தவர் என்றும் நல்லறிஞர் பலர் வாழும் நகர் அது என்றும் தாம் பிறந்த குடும்பம் இரத்தினப் பரிச்சையர் குலத்தைச் சார்ந்தது என்றும் தமது தந்தையாரின் பெயர் கபீபு முகம்மது லெப்பை என்றும் அவர் தந்தை மானாப்பிள்ளை லெப்பை ஆலிம் என்பவர் மாமு நயினார் மரைக்காயர் என்பவரின் பேரன் என்றும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

பவத்தடை யறுத்துப் பலன்றரு நெறியின்
றவத்துறை பயிலுஞ் சான்றவர் வாழும்
வகுதையம் பதியான் வர்த்தகர் சிரோமணி
பகுதகு மிரத்தினப் பரிச்சையர் குலாதிபன்
மாமு நயினார் மரைக்கார் பேரன்
தேமறை யரும்பொரு டெளிந்துணர் சிந்தையின்
பேறுறை மானாப் பிள்ளையி லப்பை
வீறுடை யாலிம் விரும்பிய கண்மணி
முழுமதி கபீபு முகம்ம திலப்பை
செழுமணி தவத்தாற் றோற்றிய செல்வன்
ஆதி செய்கு அப்துல்
காதி றென்று கருதுநா வலனே

*சீறாப்புராண* முதற்பதிப்பில் தாம் மேற்கொண்ட சில வழி முறைகளைச் செய்கு அப்துல் காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். அதனைப் பதிப்பிப்பதற்குத் தம்மைத் தூண்டிய காரணங்களையும் விளக்கி உள்ளார். அளவில்லாத இன்பத்தை இப்பதிப்பை வெளியிடுவதன் மூலம் பெறலாம் எனத் தாம் உந்தப்பட்டதாயும் குறிப்பிட்டுள்ளார். இவ்வரிய முயற்சியை மேற்கொள்வதால் எல்லாம் வல்ல அல்லாஹ்வின் கருணை நமக்குக் கிடைக்கும். நபிபெருமானாரின் அருள் எமக்குக் கிடைக்கும். சாலிகான புனிதவான்களின் உவப்பு எம்மைச் சாரும். அத்தூய்மையானவர்களைத் தொடர்ந்தவர்களின் துவா என்னும் இறைஞ்சுதலின் பயன் நம்மை அடையும். பாடினோரின் அன்பு நம்மை எய்தும். படிப்போர் பயன் அடைவதனால் நாம் மகிழ்வடைவோம். இவற்றினால் எய்தும் நன்மையை நாடியே இவ்வாறு முற்பட்டோம் எனக் குறிப்பிட்டுள்ளார்.

அள்ளிய வமிர்தம் அருங்கர விரற்கிடை
துள்ளிய திவலையை துணைக்கையா லேந்தியுண்
டெள்ளலி லின்பநீ யெய்துக வென்றெென
துள்ள முறுத்திய வோகையி னேவலால்
நாயகன் கருணையை நந்நபி யருளினைத்
தூயவ ருவப்பினைத் தொடர்ந்தவர் துவாவினைப்
பாடினோ ரன்பினைப் படிப்போர் பயனினை
நாடி நாடி நன்கென வியைந்து
பாவலர் கருத்தும் பாடலி னடையுந்
தாவிய பொருளின் முன்பினிற் சார்பும்
ஒழுங்கு முதனூல் உண்மையுந் தகுதியும்
அழுந்து முள்ளத் தறிவா லாய்ந்தும்

அல்குர்ஆன் அருளப்பட்ட அறபு மொழியிலுள்ள நூல்களுடன் ஒப்பு நோக்கப்பட்டது. அம்மொழியிலுள்ள வற்றிலிருந்து மாறாத வகையில் சீறாப்புராணம் சீராக்கப்பட்டது. முகம்மது என்னும் சொல்லில் உள்ள உகரத்தை முற்றியலுகரமாகவும் குற்றியலுகர மாகவும் சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி கொள்ளப்பட்டுள்ளது. தபம் என்பது தவம் ஆதல் போன்று நபி என்பதை நவி ஆகவும் அமைத்தும் எழுத வேண்டிய உரிய முறைப்படி வர்க்க பேதமின்றி எழுதியும் சீறாப்புராணம் பதிப்பிக்கப்பட்டுள்ளது. அறபு எழுத் தொலிகள் அவை முறை பிறழாது அவற்றிற்கு ஏற்ற ஒலிகளில் அமைக்கப்பட்டன. இலக்கண வழுக்கல் எதுவும் ஏற்படாத வகையில் பாடல்களை அமைத்துத் திணை மயக்கம் பால் மயக்கம் ஏற்படாது பாதுகாக்கப்பட்டுள்ளது. காலவேறுபாடு ஏற்படாத வகையில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. சிறந்த ஒரு பதிப்பாகச் சீறாப்புராணம் அமையத் தாம் மேற்கொண்ட வழிமுறைகளை இவ்வாறு அச்சிற் பதிப்பித்த வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார்.

வேதம் பிறந்த மேன்மையம் பாடையிற்
பேதம் பிறவாது நன்குறப் பேணியும்
புகழணி வள்ளல் புனைந்த திருநாமத்
துகர மிருவகை யுகரமாக் கொண்டும்
பொதுவுஞ் சிறப்பும் பிறழ்ந்து புகுந்ததை
அதனத னெழுத்தே யமைத்தும் விகாரம்
படாதன வற்றைப் படுத்தியு மியல்பிற்
கெடாதன வற்றை அமைத்துங் கிளந்தும்
தபந்தவ மாதல்போற் றவழ்ந்த நபிநவி
நிபமொழி யனைத்தும் வருக்கத்தி னிறுவியுஞ்
சிறப்பெழுத் துறழ்ந்து செலுமுறை யாக
அறபெழுத் தொலித்தல் ஆமெழுத் தியற்றியும்

பதங்களிற் பிறழ்ந்ததைப் பகுத்தும் பகாதும்
அதனத னமைதியே அமைத்துஞ் சிலசில
பாலுந் திணையும் இடனும் பயில்வினாக
காலமும் வழீஇயவை மயங்காது காத்துந்
தொகாநிலைத் தொகைநிலைத் தொடர்களுட் சிதைந்தவை
பகாநிலை யாக்கி விளங்கவுரைப் படுத்தியும்
வேற்றுமைப் பொருள்கள் வேறுபா டவைகளைத்
தோற்றிய முறைபோற் றொடுத்தும் விரித்தும்
முற்று மெச்சமு முடியா தனவற்றை
முற்ற முடித்தும் மொழிபெயர்த் தடுக்கியும்
பொருட்டொடர் நோக்கி மொழித்தொடர் பொருத்தியும்
மருட்டுந் துறைகளின் மயக்க மொதுக்கியும்
புறமு மகமும் புணராத் துறையொரு
புறமு மகமும் புகுதப் புகுத்தியும்
எதுகை மோனை யியைபாற் றிரிந்தவை
எதுகை மோனையைத் திரித்தியல் பாக்கியும்
இசைகெடா தெழுத்தின் இயல்பு நிரைத்தும்
அசைகெடா தமைத்து மணிபெறப் பொருத்தியும்
உவமை முதலா வுள்ள வணிகளில்
நவநிலை பிறழா தவணிலைப் படுத்தியும்
இன்னமுஞ் சிதைந்தன வெவற்றையு மாய்ந்தாய்ந்
துன்னிய விதிபோல் ஒழுங்குறத் திருத்திப்
பலபல பாடத்தாற் பரிசோ தித்தும்
பலனுற வச்சிற் பதிப்பிக்கச் செய்தனன்.

இந்தப் பதிப்போடு *சீறாப்புராணம்* நின்று விடவில்லை. தொடர்ந்து பல பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. கி.பி. 1850-ல் தஞ்சை மாநகரம் நத்தர் சாகிபு குமாரர் உசைன் சாகிபு என்பவர் யாழ்ப்பாணம் பகீர் முகியித்தீன் புலவரின் உதவியோடு ஒரு பதிப்பை வெளியிட்டார். 1852-ல் சைதாப்பேட்டை வீரபத்திர செட்டியார் என்பவரும் ஒரு பதிப்பு வெளியிட்டார். கி.பி. 1858 (ஹிஜ்ரி 1274) இலும் ஒரு பதிப்பு வெளிவந்துள்ளது. இது வீராணந்தோட்டம் கோவிந்த நாயக்கரால் பிரசுரம் செய்யப்பட்டது. ஹிஜ்ரி 1279 (கி.பி. 1862) இல் புலவர் செய்யித் என்பவர் *சீறாப்புராணத்தைப்* பதிப்பித்து வெளியிட்டுள்ளார். ம. மேத்தர் முகிதீன் என்பவர் 1862 இல் (துந்துபி வருடம்) ஆடி மாதத்தில் *சீறாப்புராணத்தை* வெளியிட்டுள்ளார். பாசிப்பட்டணம் பீர் முகம்மது சாகிப் என்பவரின் புதல்வர் நயினார் முகம்மதுப் புலவர் ஹிஜ்ரி 1283 (கி.பி. 1866) இல் *சீறாப் புராணத்தின்* மற்றொரு பதிப்பை வெளியிட்டுள்ளார். அல்லாப் பிச்சைப் புலவர் கி.பி. 1880-ல் *சீறாப்* பதிப்பு ஒன்றை வெளிக்

கொணர்ந்தார். கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் ஹிஜ்ரி 1318 (கி.பி. 1900) இல் சீறாப்புராணத்தின் வேறொரு பதிப்பை வெளியிட்டுள்ளார். இந்தப் பதிப்பின் பின் இணைப்பாக உமறுப்புலவர் பற்றி கர்ணபரம்பரைக் கதை இடம் பெற்றிருப்பதை காணலாம். செய்குத்தம்பிப் பாவலர் அவர்களின் பொழிப்புரையுடன் சீறாப் புராணம் முதல் பாகம் 1902-லும் இரண்டாம் பாகம் 1908-லும் வெளிவந்தது. முகம்மதுயூசுப் என்னும் கவிஞர் நாச்சிகுளத்தார் 1974 இல் சீறாப்புராணத்தின் ஒரு புதுப்பதிப்பை வெளியிட்டார். இங்கு குறிப்பிடப்பட்டவைகளையன்றி இடையிடையே வேறு சில பதிப்புகளும் வெளி வந்துள்ளனவென்று அறிய முடிகிறது.

இலங்கைத் தேர்வுத் திணைக்களத்தினரால் அவ்வப்போது சீறாப் புராணத்தின் சிற்சில படலங்கள் மாணவர்க்குரிய பாடப்புத்தகங்களாக விதந்தோதப்பட்டன. இலங்கையிலும் தமிழ் நாட்டிலும் உள்ள பல்கலைக்கழகங்களிலும் சீறாப்புராணத்தின் சிற்சில பகுதிகள் பாட நூல்களாக ஏற்கப்பட்டுள்ளன. தமிழ் நாட்டில் தமிழ் முதுகலை தேர்வுக்கான விருப்பப் பாடமாகவும் சீறாப்புராணம் தேர்வு செய்யப் பட்டுள்ளது. சீறாப்புராண ஆய்வினை எளிதாக்க சில படலங்களுக்கு உரை வகுக்கப்பட்டுள்ளது. ஆய்வு அரங்குகள் நடத்தப்பட்டுள்ளன.

**கொடை நாயகர் :**

வள்ளல் சீதக்காதியின் வேண்டுகோளுக்கிணங்கவே சீறாப் புராணம் இயற்றப்பட்டது என்று கர்ண பரம்பரைக் கதை கூறுகின்றது. ஆனால் சீதக்காதி அவர்களைப் பற்றிய எவ்வித குறிப்பும் சீறாப் புராணத்தில் இடம் பெறவில்லை. எனினும் சீறாப்புராணம் அபுல் காசிம் மரைக்காயரைப் பற்றிக் குறிப்பிடுகிறது. அபுல்காசிம் என்பது கதிஜா அம்மையார் அவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களை அன்பாய் அழைத்த பெயர். காசிமின் தந்தை என்பது அதன் பொருள். பெருமானாரின் பொன்மொழி 'அபுல்காசிம்' எனப்பெயர் சூட்டுவதை ஆதரிக்கவில்லை. அனஸ் (றலி) அவர்கள் இவ்வாறு அறிவித்துள்ளார்கள்.

> 'ஒருநாள் அண்ணல் நபி (சல்) அவர்கள் பகீவு என்னும் இடத்தில் அமர்ந்திருந்தார்கள். அப்பொழுது ஒருவர் 'அபுல் காசிமே' என அழைத்ததை அண்ணல் நபி (சல்) அவர்கள் செவியுற்றார்கள். உடனே அந்தச் சத்தம் கேட்ட திசையை நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பார்த்தார்கள். அச்சந்தர்ப் பத்தில் அவ்வாறு அழைத்த அந்த மனிதர் ''நாயகமே! நான் தங்களை அழைக்கவில்லை. இன்னாரைத்தான் அழைத்தேன்'' என்றார். அதற்கு அண்ணல் நபி (சல்) அவர்கள் ''என்

பெயரை வேண்டுமானால் வைத்துக் கொள்ளுங்கள்; என் சிறப்புப் பெயரை வைத்துக் கொள்ளாதீர்கள்'' எனத் திருவாய் மலர்ந்தருளினார்கள்.'' (புஹாறி, முஸ்லிம், திர்மிதி)

அபூதாவூது அவர்களின் பொன்மொழிக் கிரந்தத்தில் இச்செய்தி வேறு விதமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. 'என்னுடைய பெயரை வேண்டுமானால் வையுங்கள். ஆனால் அபுல்காசிம் என்னும் எனது சிறப்புப் பெயரை வைக்காதீர்கள். ஏனெனில் நான் அல்லாஹ்விடமிருந்து பங்கிடுபவராக ஆக்கப்பட்டுள்ளேன். அதனால் உங்களுக்கிடையில் பொருள்களைப் பங்கிடுகிறேன்' என்று பெருமானார் (சல்) அவர்கள் கூறியுள்ளனர். 'காசிம்' என்னும் அறபிச் சொல் பங்கிடுபவர் எனப் பொருள்படும். இத்தகைய பெயர் சூட்டுவதற்கான அனுமதி வழங்கப் பட்ட சந்தர்ப்பமும் உண்டு. எனினும் இத்தகைய அபுல்காசிம் என்னும் பெயர் பெருமானாரின் வாழ்க்கை வரலாற்றைக் கருவாகக் கொண்ட சீறாப்புராணம் என்னும் காப்பியத்தில் இடம் பெற்றிருப்பது சற்று விந்தையாகவே இருக்கிறது. பெருமானாரின் சிறப்புப்பெயரை முஸ்லிம்கள் சூட்டிக்கொள்ளலாம் என்று சில பொன்மொழிகளில் ஆதாரமிருந்த போதிலும் சீறாப்புராணத்தில் அத்தகைய ஒரு பெயரைத் தவிர்த்திருக்கலாம்.

பொதுவாக நூறு பாடல்களுக்கு ஒருமுறை காப்பியக் கொடை நாயகரைக் குறிப்பிடுவது இலக்கிய மரபு. சீறாப்புராணத்திலும் 'ஏறத்தாழ நூறு செய்யுளுக்கு ஒரு செய்யுள் வீதம் வைத்து அபுல் காசீமின் வண்மையும் ஒண்மையும் பாடப்பட்டுள்ளது' என்பர். இந்த அடிப்படையில் பார்க்கும்பொழுது 5027 பாடல்களிலும் ஐம்பது முறை யாவது அபுல்காசிம் அவர்கள் குறிப்பிடப்பட்டிருத்தல் வேண்டும். ஆனால் சீறாப்புராணத்தில் படிக்கும்பொழுது அபுல்காசிம் அவர்களின் பெயர் இருபத்திரண்டு தடவைகளே குறிப்பிடப்பட்டிருத்தலைக் காண் கின்றோம். முதலில் அபுல்காசிம் அவர்களின் பெயர் சீறாப்புராணத் தில் எவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது என்பதைப் பார்ப்போம்.

சீறாப்புராணத்தில் மொத்தமாக உள்ள 5027 திருவிருத்தங்களுள் முதலில் உள்ள 2488 திருவிருத்தங்களிலே 22 தடவை அபுல்காசிம் அவர்களின் பெயர் சூட்டப்பட்டுள்ளது. 1240 திருவிருத்தங்களை உள்ளடக்கிய 24 படலங்களைக் கொண்ட விலாதத்துக் காண்டத்தில் 11 தடவையும் 1014 திருவிருத்தங்களை உள்ளடக்கிய 21 படலங் களைக் கொண்ட நுபுவ்வத்துக் காண்டத்தில் 9 தடவையும் அபுல்காசிம் அவர்களின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. 2683 திருவிருத்தங்களை உள்ளடக்கிய 47 படலங்களைக் கொண்ட ஹிஜ்றத்துக் காண்டத்தில் உள்ள முதல் 234 திருவிருத்தங்களில் இரண்டு தடவையும் அபுல்காசிம்

அவர்களின் புகழ் பாடப்பட்டுள்ளது. ஹிஜ்றத்துக் காண்டத்தில் உள்ள முதல் மூன்று படலங்களும் மதீனத்தார் ஈமான் கொண்ட படலம், மதீனத்தார் வாய்மை கொடுத்த படலம், யாத்திரைப் படலம் என்னும் மூன்றில் முதலாவதிலும் மூன்றாவதிலும் அபுல்காசிம் அவர்கள் பெயர் சுட்டப்பட்டுள்ளது. ஹிஜ்றத்துக் காண்டத்தில் ஏனைய திருவிருத்தங்களில் அபுல்காசிம் அவர்களின் பெயர் விடப்பட்டுள்ளது. இவ்வாறு விடுபடுதற்கான காரணத்தை ஊகிக்கவேண்டி இருக்கிறது. ஒருவேளை அபுல்காசிம் அவர்களின் உதவி கிடைக்காமல் போயிருக்கலாம் அல்லது அபுல்காசிம் அவர்கள் உயிர்நீத்திருக்கலாம் அல்லது அபுல்காசிம் என்னும் பெயரை உபயோகிப்பது விரும்பத்தகாத ஒன்று என்னும் பெருமானாரின் பொன்மொழியை யாராவது சீறாப்புராண ஆசிரியரின் கவனத்திற்குக் கொண்டு வந்திருக்கலாம். அல்லது 22 தடவைகள் அபுல்காசிம் புகழைப் பாடியது போதுவதாகும் எனத் திருப்தி அடைந்திருக்கலாம்.

அபுல்காசிம் மரைக்காயரின் பிறப்பிடம் வகுதை எனப் பலபாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மன்னவன் வகுதைத் துரையபுல் காசீம்
வளமனைச் செருக்குமொத் திருக்கும்
(நாட்டுப் படலம் : 41)

வற்றுறாச் செல்வப் பெருக்கினி தோங்கும்
வகுதையம்பதி....................
(சுரத்திற்புனலழைத்த படலம் : 19)

திருத்திய வகுதைப் பதியபுல் காசீம்
(மதியை அழைப்பித்த படலம் : 182)

முகம்மதின் புகழைப் போற்றி
வகுதைவா ழபுல் காசீம்தன்
(யாத்திரைப் படலம் : 114)

வகுதை என்பது காயல்பட்டினத்தைச் சுட்டும் என்பர் சிலர். வகுதை என்னும் பெயரால் அழைக்கப்பட்டது பறங்கிப்பேட்டை என்பர் வேறுசிலர். ஏனையோர் கீழக்கரையே வகுதை என்னும் பெயரால் அழைக்கப்பட்ட பட்டினமாகும் எனக்கூறுவர்.

காயல்பட்டினத்தை அறபு மொழியில் காஹிறா என்பர். எகிப்தின் தலைநகரான கெய்ரோ என்பதன் அறபுச் சொல்லே காஹிறா வாகும். பறங்கிப்பேட்டை என்னும் பட்டினம் மஹ்மூது பந்தர் என அறபுச் சொற்றொடரால் வழங்கப்பட்டு வருகிறது. எனவே வகுதை என்பது கீழக்கரையின் மறுபெயராகக் கொள்ளலாம். வகுதை என்பது பகுதாது என்பதின் மருஉ வாகும். பகுதாது என்னும் நகர் இன்றைய

இறாக் நாட்டின் தலைநகராகும். பண்டு அது அப்பாசியப் பேரரசின் தலை சிறந்த தலைநகராகத் திகழ்ந்தது. அத்தகைய பகுதாது என்பது மருவி வகுதையாகி உள்ளது. அந்த வகுதையே அபுல்காசிம் அவர்கள் வாழ்ந்த நகரமாகும். ஆதலினாலே வகுதை என்பதைக் கீழக்கரை எனக் கொள்ளலாம் என்பர். பேர்பெற்ற திருடன் ஒருவன் பகுதாதில் இருந்தமையினால் அவன் பாக்தாத் திருடன் என அழைக்கப்பட்டான். இச்சொற்றொடரே மருவி இன்று பக்காத் திருடன் என வழங்கி வருவதையும் நாம் காண்கின்றோம். பல்சந்த மாலையிலும் வகுதை குறிப்பிடப்பட்டுள்ளது. வகுத்தளிக்கப்பட்ட பிரதேசம் வகுதை என உருப்பெற்றது என்ற கருத்து முன்னர் சுட்டிக் காட்டப் பட்டது.

சீறாப்புராணத்தின் மற்றோர் இடத்தில் அபுல்காசிம் மரைக் காயர் அவர்கள்

மடலவிழ் வனச வாவி வைகையம் பதிக்கு வேந்தன்
அடலுறை அபுல்காசிம் தம் அருங்குடிச் செல்வம் போல
(இசுறா காண் படலம் : 18)

என வைகை அம் பதிக்கு மன்னன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளார். இதிலிருந்து வைகையம்பதியும் வகுதையம்பதியும் ஒரே இடத்தைக் குறிக்கும் சொல்லாகக் கருத முடியும். உசைன் நயினார் என்பவரின் புதல்வன் என்பது பல பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

எண்ணரும் பெருமைப் புகழுசை னயினா
    ரெடுத்தியற் றியபல வரிசைப்
புண்ணியப் பொருளாய் வருமபுல் காசிம்
    புந்தியி னடுவுறப் பொருந்தி............
(அலிமா முலையூட்டுப் படலம் : 100)

வடுவிழித் தடமுலை யார்கண் மாமத
னடறரு முசைனயி னார்தம் மாருயிர்க்
கடகரி யெனுமபுல் காசிம் செல்வம்போ
லிடனறப் பெருகியங் கிருந்த வாவியே.
(புனல்விளையாட்டுப் படலம் : 8)

தருவெ னத்தரு முசைனயி னார்தரு மதலை
திருவு லாவிய புயனபுல் காசிஞ்செங் கரத்தாற்
பொருள்வ ரப்பெறு மவர்கலி யுடைந்தது போல
வெருவி யோடின கைசெனும் படைமிடை மிடைந்தே
(புகைறா கண்ட படலம் : 18)

விரைநறை கமலச் செவ்வி மேவுசை னயினார் பாலன்
றரைபுக ழபுல்கா சீஞ்சீர் தருங்கொடைப் புகழே போல
(கரம் பொருத்து படலம் : 18)

உலகமுந் திசையும் புகழுசை னயினா
ருதவுசந் ததியபுல் காசீஞ்
சலதர மனைய கரத்தினி லேற்றோர்
தம்மனங் குளிர்வ போற்.........
(கதீஜா கனவு கண்ட படலம் : 11)

முருகுண் டறுகாற் சஞ்சரிக
முரலும் புயத்தா ருசைனயினா
ரருமைத் தவத்தால் வந்துதித்த
அபுல்கா சீம்தன் செழுங்கரம்போல்......
(தொழுகை வந்த வரலாற்றுப் படலம் : 35)

பொருந்த மானிலத் துலவிய புகழுசை னயினார்
அருந்த வத்தினுட் பொருளென வருமபுல் காசீம்
(ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்துக்குப்
போந்த படலம் : 27)

பின்னுதிரைக் கடனிலத்தில் விளங்கு புகழ்
உசைனயினார் பெரும் பேறான
மன்னவர்மன் னபுல்காசீ மனத்தினுநா
வினுமறவா திருத்தி வாழ்த்து
(ஒப்பெழுதித் தீர்த்த படலம் : 28)

கொடைவள்ளல் அபுல் காசீம் அவர்களின் கொடைத் திறன்,

வள்ளலென் றுதவிப் பெயர் நிலை நிறுத்தி
வளந்தரு புகழபுல் காசீம்
(நபியவதாரப் படலம் : 101)

திருவு லாவிய புயனபுல் காசீஞ்செங் கரத்தால்
பொருள்வ ரப்பெறுமவர்.........
(புகைறா கண்ட படலம் : 56)

............ அபுல்காசீம்
சலதர மனைய கரத்தினில் ஏற்றோர்
தம்மனங் குளிர்வ போல்
(கதீஜா கனவு கண்ட படலம் : 11)

கனக மாமழை பொழிதர வருமபுல் காசீ
மனதி னன்னெறி யொழுங்குறு மாட்சியின் மான......
(மணம்புரி படலம் : 19)

அபுல்கா சீந்தன் செழுங்கரம் போல்
(தொழுகை வந்த வரலாற்றுப் படலம் : 35)

என்றும், அவர்தம் வளமனைச் செருக்கு

மன்னவன் வகுதைத் துரையபுல் காசிம்
வளமனைச் செருக்குமொத் திருக்கும்
(நாட்டுப் படலம் : 14)

என்றும், அவர் தம் புகழ்

தரைபுகழ் அபுல்கா சீஞ்சீர்
தருங்கொடைப் புகழே போல
(கரம் பொருத்து படலம் : 18)

மறைபடாப் புகழை யுலகினில் வளர்த்து
வருமொரு துரையபுல் காசீங்
குறைபடா மனமும் வாக்குமொன் றாக......
(தீனிலைக்கண்ட படலம் : 110)

திசைகதிர் தரநபி நடந்து தீனென
வசையறும் புகழபுல் காசி மன்னனுக்
கிசைதரா மருவல ரிதயம் போலநின்
(மதியை அழைப்பித்த படலம் : 78)

......................... தீனின்
நலனுறு மபுல் காசீம்தம் நல்லிசை திசைகள் தோறும்
நிலைபெற நின்ற தென்ன
(ஜின்களீமான் கொண்ட படலம் : 34)

கனைக்கும் வெண்டிரைக் கடற்புவி புகழ்அபுல் காசிம்
(மதீனத்தார் வாய்மைகொடுத்த படலம் : 55)

என்றும், அபுல்காசிம் அவர்களின் புயவலிமை

திருவு லாவிய புயனபுல் காசிம்
(புகைறா கண்ட படலம் : 56)

வரியளி யலம்பும் புயனபுல் காசிம்
(மணம்புரி படலம் : 19)

என்றும், வள்ளல் அபுல்காசிம் அவர்களை அவர்கள் தம் சுற்றத்தவர்களும் உறவினர்களும் இளையோர்களும் சிறப்போடு தழைக்கச் சூழ்ந்திருந்தமை

.............. மெய்த்துரை அபுல்காசிம்
சுற்றமுங் கிளையுஞ் சிறப்பொடு தழைத்துச்
சூழ்ந்திருந் தணிதிகழ் வதுபோல
(சுரத்தில் புனலழைத்த படலம் : 19)

என்றும், அவர்களுடைய உள்ளத் தெளிவு

மன்னவ னபுல்கா சீந்தன் மனத்தெளி வதனின் மிக்காய்
(உமறுகத்தாபு ஈமான் கொண்ட படலம்: 72)

என்றும், அவர்களுடைய நல்லொழுக்கம்

கனக மாமழை பொழிதர வருமபுல் காசிம்
மனதி னன்னெறி யொழுங்குறு மாட்சியின் மான
(மணம்புரி படலம்: 19)

என்றும் சீறாப்புராணத்தில் வெகுவாகப் பாராட்டப்பட்டுள்ளன. கொடைவள்ளல் அபுல்காசிம் மரைக்காயர் அவர்களைத் 'துரையபுல் காசிம்' எனத் துரை என்னும் அடைச் சொல்லைக் கொண்டு வருணிக் கப்பட்டுள்ள சந்தர்ப்பங்களை மேலே எடுத்துக் காட்டியுள்ள பல திருவிருத்தங்களில் காணலாம்.

உமறுப்புலவர் தமது காப்பியமான சீறாப்புராணத்தைத் தமது இல்லத்திலேயே எழுதி முடிக்க ஆசிரியருக்கு எல்லா வசதிகளையும் வகுதையைச் சேர்ந்த அபுல்காசிம் மரைக்காயர் செய்து கொடுத்தார் என்று கூறப்பட்டுள்ளது. உமறுப்புலவர் அவர்கள் மஹ்மூது பந்தரி லுள்ள புதுப்பள்ளிவாசலின் அருகே உள்ள மேடையில் வைத்து சீறாப் புராணத்தை எழுதி உள்ளார் என்றும் சிலர் கூறுகின்றனர்.

உமறுப்புலவர் கீழக்கரையிலே திருமணம் புரிந்து அங்கே வாழ்ந்தார் என்றும் அந்த ஊரில் நடக்கும் ஒவ்வொரு திருமணத் திலும் புலவர் பணம் என்று ஒரு மகமையும் ஏற்படுத்தி அதனை நடைமுறைப்படுத்தி வந்தனர், வருகின்றனர் என்றும் கூறப்படுகிறது. அவ்வாறு உமறுப்புலவர் அவர்கள் அங்கு கௌரவிக்கப்பட்டார்கள்.

அபுல்காசிம் மரைக்காயரைப் பற்றிச் சீறாப்புராணத்தின் யாத் திரைப் படலத்தில் உள்ள இறுதிப் பாடலில் கடைசி முறையாக குறிப்பிடப்பட்டுள்ளது. 47 படலங்களைக் கொண்ட சீறாப்புராண ஹிஜ்றத்துக் காண்டத்தின் மூன்றாவது படலமான யாத்திரைப் படலத்தின் இறுதிப் பாடலிலே அவர் கடைசியாக வருணிக்கப்பட் டுள்ளார். அதன் பின்னர் அவர் பற்றிய குறிப்பு சீறாப்புராணத்தில் இடம் பெறவில்லை. வகுதை அபுல் காசீம் மரைக்காயர் பற்றிச் சீறாப்புராணத்தில் உள்ள ஏனைய பாடல்களுடன் ஒப்புநோக்கும் போது யாத்திரைப் படலப்பாடல் சற்று வேறுபட்டுக் காணப் படுகின்றது. முதலில் பாடலைப் பார்ப்போம்.

முகம்மதின் புகழைப் போற்றி
வகுதைவாழ் அபுல்கா சீந்தன்
அகமலர் களிக்கு மாறா
யணிச்சிறை பறவை யாவும்

இகலவர் போனா ரென்ன
இதயங்க ளூறப்பூ ரித்துக்
புகரறக் கூவிச் சுற்றிப்
பொருப்பை விட் டகன்றிடாதே.
(யாத்திரைப் படலம் : 114)

ஒருவேளை இந்தப் பாடலின் இறுதி அடி

'புகரறக் கூவிச் சுற்றிப்
பொருப்பைவிட் டகன்ற தன்றே'

என இருந்திருக்கலாம். இவ்வாறிருப்பது அமங்கலமானது என இருந்திருக்கலாம் எனக் கருதிய சீறாப்புராணத்தை முதலில் பதிப்பித்த செய்கு அப்துல் காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவரவர்கள் 'பொருப்பை விட்டகன்ற' என்பதைப் 'பொருப்பை விட்டகன்றிடாதே' என மாற்றி இருக்கலாம். 'பொருப்பை விட்டகன்ற தன்றே' எனக் கொள்ளின் 'அபுல்காசீம்' களிக்கு மாறாய்ப் பறவைகள் எல்லாம் பகைவர்போல கூவிச் சென்று விட்டன' எனப் பொருள் படும். 'பகைவர்போல பறவைகள் எல்லாம் செல்லவில்லை' என்று கொள்வது அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை. சீறாப் புராண மூலப்பிரதியில் 'பொருப்பை விட்டகன்ற தன்றே' என்றே இருந்திருத்தல் வேண்டும்.

இதனை மூன்று விதமாக விளக்கலாம். உமறுப்புலவர் சீறாப் புராணத்தைப் பாடிக் கொண்டிருக்கும்பொழுது அபுல்காசீம் மரைக்காயர் உயிர் நீத்தார் எனக் கேள்விப்பட்டிருக்கலாம். அதன் காரணமாக 'அவருடைய குன்றிலே இருந்த பறவைகள் யாவும் அவருடைய மறைவைக் கேட்டதும் பகைவர்போல கூவி சுற்றிக் குன்றைவிட்டு அகன்றுவிட்டன' எனப்பாடி இருக்கலாம். அவருடைய மறைவை இவ்வாறு குறிப்பாகச் சுட்டி இருக்கலாம்.

அறம் பாடுதலினால் தீய விளைவுகளே ஏற்படும். உமறுப் புலவர் தன்னை மறந்த நிலையில் இத்தகைய ஒரு பாடலைப் பாடி இருக்கலாம். இப்பாடலினால் ஏற்படும் விளைவைக் கருதாது உமறுப் புலவர் பாடிக்கொண்டே சென்றார். உறனிக் கூட்டத்தார் படலம் வரை பாடிய பிறகு கல்வி கேள்விகளில் சிறந்த ஒரு புலவர் உமறுப் புலவர் பாடிய அபுல்காசீம் மரைக்காயர் பற்றிய கடைசிச் செய்யுளை பார்க்கவேண்டும் என்றார். அவருக்கு அச்செய்யுள் காட்டப்பட்டது. அச்செய்யுள் அமைந்துள்ளவிதம் அறம்பாடுதலை ஒத்திருந்தது எனக் கண்ட அப்புலவர் அப்பாவினால் அபுல்காசீம் மரைக்காயர் தீய விளைவுகளுக்கு ஆளானார் என்று தெரிவித்திருக்கலாம். இதனால் சோர்வடைந்த சீறாப்புராண ஆசிரியர் 'உறனிக் கூட்டத்தார் படல'த்துக்கு அப்பால் பாடாமல் இருந்திருக்கலாம். இச்செய்தி இவரை வாட்டி இருக்கலாம். இதன்பயனாக நோய்வாய்ப்பட்டிருக்கலாம்.

பெருமானாரின் வாழ்க்கையைப் பூரணமாகப் பாடிச் சீறாப் புராணத்தை முழுமையாக ஒரு காப்பியமாக அமைப்பதற்கு முன் இவ்வுலக வாழ்வை நீத்திருக்கலாம்.

திருவாசகத்திலே யாத்திரைப்பத்து என்று ஒரு பகுதி உண்டு. ஒருவர் கடுமையாகச் சுகவீனமுற்று மரணப் படுக்கையில் இருக்கும் பொழுது அவருடைய மரணம் துரிதப்படவும் அவருடைய ஆன்ம சாந்திக்காவும் இந்த யாத்திரைப்பத்தினைப் பாடுவதுண்டு. இதனைப் பாடுவதனால் அவருடைய மரண வேதனை குறையும் என்றும் அவருடைய ஆத்மா சாந்தி அடையும் என்றும் இந்து மக்கள் கருதுவர். மேலே குறிப்பிடப்பட்ட சீறாப்புராணம் பாடலும் அதன் ஹிஜ்றத்துக் காண்டத்திலுள்ள யாத்திரைப் படலத்தின் கடைசிப் பாடலாக அமைந்துள்ளது. யாத்திரைப் படலத்தைப் பாடும் சந்தர்ப் பத்தில் அபுல்காசீம் மரைக்காயர் நோய்வாய்ப்பட்டிருக்கலாம். அவருடைய மரண வேதனையை எளிதாக்கும்படி எண்ணி உமறுப் புலவர் மேற்கூறிய பாடலைப் பாடி இருக்கலாம். அந்தப் பாடலுடன் அவருடைய ஆவி பிரிந்திருக்கலாம். யாத்திரைப் படலத்தைத் தொடர்ந்து இடம் பெற்றுள்ள படலங்களில் அபுல்காசீம் மரைக்காயர் அவர்கள் குறிப்பிடப்படாமைக்கு அவருடைய மறைவு காரணமா யிருக்கலாம்.

எது எவ்வாறாயினும் அபுல்காசீம் மரைக்காயர் அவர்களின் வாழ்க்கையைப்பற்றிய உண்மையான விவரங்களை அறியும் வரையில் திட்டவட்டமாக எதுவும் கூறிவிடமுடியாது. சிற்சில ஊகங்களையே கூறிவிட முடியும். அவ்வூகங்கள் சரியானவைதானா எனத் தீர்மா னிப்பது கற்றறிந்தோர் கடனாகும். ஆதார பூர்வமான கருத்துக்கள் கிடையாத பட்சத்தில் எது சரியானது எது பிழையானது என முடிவு கட்டுதல் மிகமிகக் கடினமாகும்.

**கடவுள் வாழ்த்து :**

காப்பியங்களின் சிறப்பியல்புகளில் ஒன்றான கடவுள் வாழ்த்து சீறாப்புராணத்திலும் இஸ்லாமிய மரபு வழுவாமல் இடம் பெற்றிருப் பதைக் காணலாம். எல்லாப் பதிப்புக்களிலும் கடவுள் வாழ்த்து என்றே அமைந்திருக்கிறது. ஆனால் ஒரு கையேட்டுப் பிரதியில் வேறுவிதமாக இடம் பெற்றுள்ளது. ஏறத்தாழ 250 ஆண்டுகட்கு முன்னர் எழுதப்பட்டதாகக் கருதப்படும் இக் கையேட்டுப் பிரதி ஹிஜ்ரி 1154 (கி.பி. 741) இல் பிரதி பண்ணப்பட்டது எனக் கருதப்படுகிறது. இதனை மஹ்மூது பந்தர் என்னும் இடத்தைச் சேர்ந்த சையிது மரைக் காயர் புதல்வர் செய்கு நயினார் மரைக்காயரால் எழுதப்பட்டது. இப்பிரதியில் 4969 செய்யுட்களே எழுதப்பட்டிருந்தன. இறுதியில்

32 ஒற்றைகள் எதுவும் எழுதாமல் விடப்பட்டிருந்தன. ஏனைய பாடல்களை எழுதுவதற்குப் பயன்பட இருந்த தாள்கள் இவையா யிருக்கலாம் என நம்பப்படுகிறது. இந்தக் கையெழுத்துப் பிரதியில் கடவுள் வாழ்த்துப் படலம் என்பதற்குப் பதிலாக சபை அலங்காரப் படலம் என்னும் சொற்றொடர் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். அக் கையேட்டுப் பிரதிக்கும் அச்சியற்றப்பட்ட பிரதிகளுக்கும் இடையே ஒரு முக்கிய வேறுபாடு இருக்கின்றது. அச்சியற்றப்பட்ட பிரதிகளில் முதலாம் செய்யுள் காப்புச் செய்யுளாக பின்வருமாறு அல்லாஹ்வைப் புகழ்ந்து இவ்வாறு பாடுகிறது.

திருவுருவா யுணருருவா யறிவினொடு
தெளிவிடத்துஞ் சிந்தி யாத
அருவுருவா யுருவுருவா யகம்புறமுந்
தன்னியலா வடங்கா வின்பத்
தொருவுருவா யின்மையி லுண்மையினைத்
தோற்றுவிக்கு மொளியா யாவு
மருவுருவாய் வளர்காவன் முதலவனைப்
பணிந்துள்ளி வாழ்த்து வாமே.

ஆனால் இத்திருவிருத்தம் செய்கு நயினா மரைக்காயரால் பிரதி பண்ணப்பட்ட சீறாப்புராணத்தில் உள்ள சபை அலங்காரப் படலத்தில் இடம் பெறவில்லை. எனவே இத்திருவிருத்தம் உமறுப்புலவரால் இயற்றப்படவில்லை என்றும் இதனை முதன்முதலாக பதிப்பித்த செய்கு அப்துல் காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் இயற்றியுள்ளார் என்றும் கூறப்படுகிறது.

இத்திருவிருத்தத்தையும் சேர்த்து சீறாப்புராணக் கடவுள் வாழ்த்துப் படலத்தில் 21 திருவிருத்தங்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் முதல் நான்கும் அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனது பாதுகாப்பைத் தேடுவதாக அமைந்துள்ளன. இவை ஒரு சந்தத்தில் பாடப்பட்டுள்ளன. இரண்டு வெவ்வேறு சந்தங்களில் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் இரண்டு திருவிருத்தங்களில் புகழப்பட்டுள்ளார்கள். முன்னூற்றுப் பதின்மூன்று முறுசலான (தூதுவரான) நபிமார்கள் மற்றொரு திருவிருத்தத்தில் இன்னொரு சந்தத்தில் புகழப்பட்டுள்ளனர். ஆசிரியர் சந்தத்தை மாற்றி மற்றொரு திருவிருத்தத்தில் ஒரு லட்சத்து இருபத்து நாலாயிரம் நபிமார்களைக் குறிப்பிட்டுள்ளார். அபூபக்கர் (றலி) அவர்களும் உமறு கத்தாப் (றலி) அவர்களும் உதுமான் (றலி) அவர்களும் வெவ்வேறு சந்தங்களிலான மூன்று வெவ்வேறு பாடல்களில் போற்றப்பட்டுள்ளனர். ஒரே சந்தத்தில் அமைந்த இரண்டு திருவிருத்தங்களில் அலி இப்னு அபீத்தாலிபு (றலி)

அவர்களும் அவர்களுடைய இரு புதல்வர்களான அசன் (றலி) அவர்களும்உசைன் (றலி) அவர்களும் முறையே பாடப்பட்டுள்ளனர். சுவர்க்க வாழ்வு பெறுவர் எனப் பெருமானார் (சல்) அவர்களால் நன்மாராயம் கூறப்பட்ட பத்து அசுகாபித் தோழர்கள் (அஷறத்துல் முபஷ்ஷறா) வேறொரு சந்தத்திலான மற்றொரு செய்யுளில் வருணிக்கப்பட்டுள்ளனர். இஸ்லாத்தின் கிரியைகளை நடைமுறைப்படுத்துவது பற்றிய நான்கு மதுஹபுகளை நிறுவிய நான்கு இமாம்களும் மற்றொரு சந்தத்தினாலான வேறொரு செய்யுளில் விதந்தோதப்பட்டுள்ளனர். இன்னொரு சந்தத்தில் அமைந்த வேறிரு திருவிருத்தங்களில் முறையே முகியித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (றலி) அவர்களும் செய்கு சதக்கத்துல்லா அப்பா (றஹ்) அவர்களும் நினைவு கூரப்பட்டுள்ளனர். முகியித்தீன் ஆண்டவரைப்பற்றிய செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

> உரமுறு தீன்பா ரெல்லா மொளிரவே விளக்கஞ் செய்யும்
> துரமுறு மவுலி யாவாய்த் தோன்றின பேர்க்கு மேலாம்
> வரமுறு முகியித் தீன்செம் மலரடி யிரண்டு மென்றன்
> சிரமிசை யிருத்தி வாழ்த்திச் செந்தமிழ்ப் பனுவல் செய்வேன். (16)

உலகத்திலே தீனுல் இஸ்லாம் பரந்து பிரகாசிக்க வழிவகை செய்த முகியித்தீன் ஆண்டவரவர்களின் பாதமிரண்டையும் தமது சிரமேற் கொண்டு இந்நூலைச் செய்ய முற்பட்டதாக உமறுப்புலவர் பாடியுள்ளார். செய்கு சதக்கத்துல்லா அப்பாவைப் புகழ்வதாக அமைந்துள்ள திருவிருத்தத்திலும் முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் புகழப்பட்ட அதே விதத்தில் கருத்துக்கள் அமைந்துள்ளமையைக் காணலாம் அந்தப் பாடலே இவ்வாறு அமைந்துள்ளது.

> நம்மையா ளுடையான் வேத நபிதிரு வசனந் தீனோர்
> சம்மதித் திடப்பா ரெல்லாந் தழைக்கவே விளக்கஞ் செய்தோர்
> இம்மையு மறுமை யும்பே றிலங்கிய சதக்கத் துல்லா
> செம்மல ரடியி ரண்டுஞ் சிந்தையி லிருத்தி னேனே. (17)

இந்தப் பாடலையும் இதற்கு முன் தரப்பட்டுள்ள பாடலையும் நோக்கும்பொழுது இரண்டும் சொல்லாட்சிக் கருத்துச்செறிவு ஆகியவற்றில் ஒத்திருக்கக் காணலாம். 'உரமுறு தீன்பா ரெல்லாம் ஒளிரவே விளக்கஞ் செய்யும்' என்று 16 ஆம் திருவிருத்தத்தில் உள்ள சொற்றொடர்களும் 'தீனோர் சம்மதித்திடப்பார் எல்லாம் தழைக்கவே விளக்கஞ் செய்தோர்' என 17 ஆம் திருவிருத்தத்தில் உள்ள சொற்றொடர்களும் கருத்தொத்து 'மலரடி யிரண்டும் என்றன் சிந்தையில் இருத்தி' என்பதிலும் 'சதக்கத்துல்லா செம்மலரடியிரண்டுஞ் சிந்தையிலிருத்தி' என்பதிலும் இருப்பதையும் காணலாம். இவ்வாறு அடுத்தடுத்து வரும் இரண்டு செய்யுட்களில் சொல்லாட்சியும் கருத்தொற்று

மையும் ஒத்திருப்பது கவிஞனின் திறமைக்கு இழுக்குக் கூறுவதாகும், கற்பனை வளம்மிக்க எந்தக் கவிஞனும் இத்தகைய குறையை ஏற்படுத்தமாட்டான். எனவே இரண்டாம் செய்யுள் அதாவது சதக்கத்துல்லா அப்பா பற்றிய செய்யுள் ஓர் இடைச் செருகலாகும் எனக் கூறலாம். பதிப்பாசிரியர் அவர்களே இச்செய்யுளை இயற்றிப் புகுத்திக் கர்ண பரம்பரைக் கதையை வலியுறுத்தி இருக்கலாம்.

சதக்கத்துல்லா அப்பா அவர்களுக்கு அடைமொழி கொடுக்கும் பொழுது 'இம்மையும் மறுமையும் பேறு இலங்கிய சதக்கத்துல்லா' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. உமறுப்புலவர் உயிர் நீத்தது கி.பி. 1703-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 28-ஆந் தேதி சனிக்கிழமை ஆகும். செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள் காலமானது கி.பி. 1703-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 20-ஆந் தேதி புதன்கிழமை (வியாழன் இரவு) (ஹிஜ்றி 1115 சபர் 5) ஆகும். இவற்றிற்கு இணங்க உமறுப் புலவர் மறைந்து 38 நாட்களில் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள் மறைந்து விட்டார்கள். இஃது இங்ஙனமாயின் உமறுப் புலவர் தமது சீறாப்புராணத்தில் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்களின் மறுமைப்பேற்றினைப் பற்றிக் குறிப்பிட்டிருக்க முடியாது. உமறுப்புலவர் மரணமாவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே கடவுள் வாழ்த்துப் பாடலைப்பாடி இருப்பார். எனவே செய்கு சதக்கத்துல்லா அவர்கள் பற்றிய சீறாப்புராணக் கடவுள் வாழ்த்துப் பாடல் உமறுப் புலவர் பாடியது என்று கொள்ள முடியாது. அது ஓர் இடைச்செருகலான பாடல் என்றே கொள்ளுதல் வேண்டும். சீறாப்புராணத்தைச் சிறப்பான முதற்பதிப்பாக வெளியிட்ட செய்கு அப்துல் காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் அவர்களே சதக்கத்துல்லா அப்பா பற்றிய அந்தப் பாடலையும் பாடியுள்ளார் என்று கொள்ளலாம்.

நாகூர் ஆண்டகையைப் பற்றிச் சீறாப்புராணத்தில் இடம் பெறாததேன் என்பது புதிராகவே இருக்கின்றது. சதக்கத்துல்லா அப்பா அவர்கள் உமறுப்புலவருடைய சம காலத்தவர். ஆனால் நாகூர் சாகுல் அமீது ஆண்டகை உமறுப்புலவரைவிடக் காலத்தால் முந்தியவர். சாகுல் அமீது ஆண்டகை அவர்களோ தாம் வாழ்ந்த காலத்திலே பல சாதனைகளைப் புரிந்து புகழ் பெற்றவர். உமறுப் புலவர் காலத்திலே இன்னும் பேரும் புகழும் பெற்றிருப்பார். தமிழ் நாட்டிலே தமது வாழ்க்கையின் பெரும் பகுதியைக் கழித்த அத்தகைய மெய்ஞ்ஞானியை புகழ்ந்து பாடாதது வியப்பாகவே உள்ளது. ஏனைய கவிஞரைப் போன்று உமறுப்புலவர் எல்லா இறை நேசர்களையும் சேர்த்து ஒட்டு மொத்தமாக ஒரு செய்யுளில் கூட பாடவில்லை.

நாகூர் ஆண்டகை ஒருமுறை கீழக்கரைக்குப் போனதாகவும் அங்கே சில இடர்ப்பாடுகள் ஏற்பட்டதாகவும் அதன் பயனாக மனம்

வருந்தியவர்களாக அங்கிருந்து திரும்பி விட்டதாகவும் கூறப்படுகின்றது. இதனைக் காரணமாக நினைத்து உமறுப்புலவர் கடவுள் வாழ்த்தில் நாகூர் ஆண்டகையைப் பற்றிப் பாடாமல் விட்டிருக்கக் கூடும். தமிழ் நாட்டில் அற்புதங்கள் பல புரிந்த ஒரு மெய்ஞ் ஞானியைத் தமது கடவுள் வாழ்த்தில் இடம் பெறச் செய்யாததாலோ என்னவோ நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கையை முழுமையாகப் பாடிச் சீறாப்புராணத்தை முழுமைத்துவம் பெற்ற ஒரு காப்பியமாக மாற்றமுடியாது போயிருத்தல் கூடும்.

கல்வத் நாயகம் என்றும் கல்வத் ஆண்டவர்கள் என்றும் வழங்கப் பட்ட செய்கு அப்துல் காதிறுஸ்ஸவாவி (றஹ்) அவர்கள் எழுதிய 'செய்கு செய்யிது சதக்கத்துல்லா (றஹ்) அவர்கள் சரித்திரச் சுருக்கம்' என்னும் நூலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்கள் : 'சீறாப் புராண கர்த்தா உமறுப்புலவர் கோன் அவர்கள் கடவுள் வாழ்த்துப் படலத்தில் குத்புகளுக்கெல்லாம் தலைமை பெற்ற எம்பெருமானார் ஹலறத்து முகையதீன் ஆண்டவரவர்களைப் பாடி வேண்டித் தீர்ந்த பின்னர் நாகூர் நாயகரை வழக்கம்போல் கூறாது செய்கு சதக்கத் துல்லா நாயகரைக் குறித்திருப்பதின் இரகசியங்களும் பல உள. இவைகளை அகக்கண் திறந்த மஹானு பாவர்களே அறிவர்' என்று கூறப்பட்டிருப்பதால் அந்த இரகசியங்களை அறியும் பேறு நமக்குக் கிடைத்திலது.

**அவையடக்கம் :**

அழகுணர்ச்சி இலக்கியக் கலைக்கு இன்றியமையாதது. இலக் கியத்துக்கு அழகைக் கொடுப்பது அணி. அணி என்றால் அழகு என்றும் பொருள்படும். அத்தகைய அணிகளுள் சிறந்து விளங்குவது உவமை அணி. அறிந்த ஒரு பொருளைக் கொண்டு அறியாத ஒரு பொருளை அறிமுகப்படுத்துவதற்குப் பெரும்பாலும் பயன்படுவது உவமை அணி. உவமானமும் உவமேயமும் உவமை அணியின் இரண்டு கூறுகளாகும். இவற்றுக்கிடையே ஏதோ ஒரு வகையில் பொருத்தம் இருப்பதைக் காணலாம். ஒன்று மற்றதோடு ஏதோ ஒரு வகையில் தொடர்பு கொண்டுள்ளது. இத்தகைய பொருத்தத்தையும் தொடர்பினையும் கண்டு மகிழ்வதில் கை வல்லவர்கள் கவிஞர்கள். தமது கவிதைகளுக்கு மெருகூட்டும் முகமாக அத்தகைய கவிஞர்கள் உவமான உவமேயங்களைச் சிறப்பாகத் தேர்ந்தெடுப்பர். பொருத்த மான உவமான உவமேயங்களைக் கொண்ட கவிதை இலக்கிய வானிலே சிறப்பாக விளங்கும். அத்தகைய சந்தர்ப்பங்களிலே கவிதை நயம் மிக்கதாய் அமைந்துவிடும். படிப்போரும் பயனடைவர்.

சீறாப்புராணத்தில் பல உவமைகள் இடம் பெற்றுள்ளன. கடவுள் வாழ்த்திலே அவையடக்கம் கூறும்பொழுது ஆசிரியர் தமது இப்

படைப்பு ஏனைய புலவர் முன்னிலையில் எவ்வாறு காட்சி அளிக்கும் என்பதைக் குறிப்பிட்டுள்ளார். தம்மை ஒரு சிற்றெறும்பு விடும் மூச்சிற்கும் ஏனைய புலவர்களைச் சூறாவளிக்கும் ஒப்பிடுகிறார். கடல்களையும் மிகப் பெரிய மலைகளையும் தகர்க்கக்கூடிய சண்ட மாருதப் புயலுக்கு முன்னால் நொந்து கெட்ட ஒரு சிற்றெறும்பு விடும் மூச்சினைப் போன்றது தமது இந்தப் படைப்பு என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

படித்த லத்தெழு கடல்குல கிரிநிலை பதற
எடுத்து வீசிய சண்டமா ருதத்தினுக் கெதிரே
மிடித்து நொந்தசிற் றெறும்பொரு மூச்சுவிட் டதுபோல்
வடித்த செந்தமிழ்ப் புலவர்மு னியான்சொலு மாறே
(கடவுள் வாழ்த்து : 19)

மற்றொரு அவையடக்கச் செய்யுளில் தமது இந்தப் படைப்பினை புலவர்களின் முன் கூறுதல் இடிமுழக்கமான ஆரவாரத்துக்கெதிரே ஒரு நொடி நொடிப்பது போன்றது என இவ்வாறு கூறியுள்ளார்.

படிப டித்தசெஞ் சொல்புல வோர்முனம் பகர்தல்
இடியி டித்திடும் ஆரவா ரத்தினுக் கெதிரோர்
நொடிநொ டிப்பது போலுமொத் திருந்ததென் னூலே
(கடவுள் வாழ்த்து : 20)

**உவமை நயம் :**

சீறாப்புராணத்தில் உள்ள நாட்டுப்படலத்திலேயும் நயம்மிக்க பல உவமைகள் இடம் பெற்றுள்ளன. உழவர் நெல் முளைகளைச் சிதறி னார்கள். அவ்வாறு சிதறிய தோற்றம் பொன்மழை பொழிந்தது போன்று காட்சி வழங்கியது என இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

நிலந்தனை வாழ்த்தி வலக்கரங் குலுக்கி
நெல்முளை சிதறிய தோற்றம்
பொலன்பல சிறப்பு விடனற நெருங்கிப்
பொன்மழை பொழிவது போன்றும்
(நாட்டுப் படலம் : 26)

நகரப்படலத்திலே பல உவமைகள் இடம் பெற்றுள்ளன. மாட மாளிகைகள் அங்கு இருந்தன. மேனிலையிலே சந்திரனின் ஒளி பாய்ந்து கொண்டு இருந்தது. இனிய குரலை உடைய பெண்கள் தமது குழல்களை விரித்துக்கொண்டு இருந்தனர். அவர்கள் குழலுக்கு நறுமணம் ஊட்டிக் கொண்டிருந்தனர். அப்பொழுது அங்கிருந்து நறும்புகை மேலே சுருண்டு எழுந்தது. அது ஒழுங்காய் ஆகாயத்திற் போய்ச் சேர்வது போன்றிருந்தது. அந்தக் காட்சி உண்மையிலேயே ஏணி ஒன்று அமைத்து ஆகாயத்திற்கு இடுவது போன்று இருந்தது என இவ்வாறு உமறுப்புலவர் பாடியுள்ளார்.

வெண்ணில வெறிக்கு மிரசதத் தகடு
வேய்ந்தமே னிலைவயின் செறிந்து
பண்ணிருந் தொழுகு மென்மொழிக் குதலைப்
பாவையர் செழுங்குழல் விரித்து
நண்ணிய துகிலும் கமழ்தர வூட்டும்
நறும்புகை சுருண்டெழுந் தொழுங்காய்
விண்ணினிற் படர்வ தேணியொன் றமைத்து
விசும்பினுக் கிடுவது போலும்

(நகரப் படலம் : 13)

நபிகள் நாயகம் (சல்) அவர்களின் பிறப்பைக் குறிப்பிட வந்த ஆசிரியர் பல உவமை உருவகங்களை உபயோகித்துள்ளார். சூரியனுடைய வெப்பத்தால் இடருற்ற மக்களுக்கு படர்ந்த மர நிழலாய் அவர்கள் பிறந்தார்கள். கொலைபோன்ற கெட்ட செயல்களை விளைவிப்பது பாவம். அத்தகைய இடர் விளைக்கும் பாவம் என்னும் நோய்க்கு அருமருந்து என அண்ணல் நபி (சல்) அவர்கள் உலகிலே உதித்தார்கள். தீனுல் இஸ்லாம் என்னும் மார்க்கமாகிய பயிரினுக்கு செழுமையைத் தரும் மழை என அவர்கள் தோன்றினார்கள். குறைஷி மக்களுக்கு ஒரு திலகம் போன்று ஜனனமானார்கள். மாநிலத்திலே உள்ளவர்களுக்கு ஒளிபரப்பும் மணிவிளக்குப் போன்று நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பிறந்தார்கள். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

பானுவின் கதிரா லிடருறுங் காலம்
படர்தரு தருநிழ லெனலாய்
ஈனமுங் கொலையும் விளைத்திடும் பவநோ
யிடர்தவிர்த் திடுமரு மருந்தாய்த்
தீனெனும் பயிர்க்கோர் செழுமழை யெனலாய்க்
குறைஷியர் திலதமே யெனலாய்
மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
முகம்மது நபிபிறந் தனரே.

(நபியவதாரப் படலம் : 92)

அன்று அரேபியாவில் பஞ்சம் நிலவியது. அந்தப் பஞ்ச காலத்தை பல உவமை உருவகங்களின் நயங்களுடன் விவரித்துள்ளார் உமறுப் புலவர். பஞ்சகாலச் சூழலை ஓர் அரசனுக்கு உருவகித்துள்ளார். அவன் கொடுங்கோலரசன். அவன்தான் கொலை எனும் அரசன். அவனுக்கு யானைப்படை உண்டு. அதுதான் எல்லா இடங்களிலும் மலிந்திருந்த பசி. வறுமைதான் அவ்வரசனுடைய சேனை. பாவச் செயல்களெல்லாம் அவனுடைய குதிரைப்படையாக அமைந்திருந்தன. தேர்ப்படையும் அவனுக்கிருந்தது. அதுதான்

பழிச்செயல்கள். கலிதான் அவனுடைய அமைச்சு. கோபமாகிய கணக்கர் அங்கு பணிபுரிந்தனர். அத்தகைய ஆட்சி பஞ்சகாலத்தில் நிலவியது என இவ்வாறு வருணித்துள்ளார் ஆசிரியர்.

மலிபசி யானையா வறுமை சேனையாப்
பலபரி பவங்களாப் பழிர தங்களாக்
கலியமைச் சாய்த்துறைக் கணக்கர் கோபமாக்
கொலையர சன்கொடுங் கோன டாத்தினான்.

(அலிமாமுலையூட்டுப் படலம் : 9)

இதனை அடுத்த பாடலிலும் இதே கருத்துக்களை வேறுவித மாகக் கூறியுள்ளார் ஆசிரியர். மரபு வழியில் ஆட்சிபுரிந்த மன்னர்கள் போய்விட்டனர். பஞ்சம் ஏற்பட்டுள்ள காலத்திலே பாதகர் (கொடிய வர்) ஆட்சிபுரிந்தனர். அதனைப் போன்று நலனை மக்களுக்கு வாரி வழங்கும் கொடை என்னும் பெயருடைய அரசு கெட்டு இல்லை என்று எப்பொழுதும் சொல்லும் அரசு ஆட்சிபுரிந்து கொண்டிருந் தான். இக்கருத்துக்களே இவ்வாறு அழகாக தீட்டப்பட்டுள்ளன.

குலமறை மன்னர்போய்க் கொடிய பாதகர்
தலைநிலம் புரந்திடும் தகைமை போலவே
நலனுறு கொடையெனு நாம வேந்துகெட்
டிலனெனு மரசுவீற் றிருந்த காலமே.

(அலிமாமுலையூட்டுப் படலம் : 10)

அலிமா அம்மையாரிடம் முகம்மது நபி (சல்) அவர்கள் வளரும் பொழுது ஒருநாள் அலிமா அம்மையாரின் ஏனைய பிள்ளைகளுடன் முகம்மது நபி (சல்) அவர்கள் ஆடு மேய்க்கச் சென்றார்கள். அப்பொழுது அங்கு வந்த வானவரிருவர் அண்ணலாரை ஒருபுறம் அழைத்துச் சென்று உள்ளத்தைக் கீறித் தூய்மைப்படுத்தினர். இதனைக் கண்ட மற்றப் பிள்ளைகளிருவரும் அலிமா அம்மையாரிடம் சென்று முகம்மதைக் கொன்று விட்டனர் என்று கூறினர். இதனைச் செவிமடுத்த அலிமா அம்மையார் உள்ளங்கலங்கினார்; பதைபதைத் தார்; மயக்கமுற்றார், மயங்கி வீழ்ந்தார். இதனைக் கூறவந்த ஆசிரியர் அதனை இடிமுழக்கம் பட்ட மயிலுக்கு இவ்வாறு உவமித் துள்ளார்.

வேரியங் குழன்மா மேக மின்னென மேனி தேம்பிப்
பாரினிற் புரண்டே றுண்ட மயிலெனப் பதைக்கலுற்றார்.

(இலாஞ்சனைதரித்த படலம் : 37)

ஒருமுறை அலிமா அம்மையாரின் இல்லத்திலிருந்து முகம்மது (சல்) அவர்கள் கொண்டுவரப்பட்டார்கள். இடைவழியில் அவர்கள் காணாமல் போய்விட்டனர். தேடவே முடியவில்லை. எல்லோரும் கவலையுற்றனர். சஞ்சலப்பட்டனர். மனங்கலங்கினர். அப்பொழுது

ஓர் அசரீரி கூறிய ஒரு குறிப்பைத் தொடர்ந்து அனைவரும் சென்றனர். அப்பொழுது அங்கே முகம்மது நபி (சல்) அவர்கள் காணப்பட்டார்கள். அப்போதைய அவர்களுடைய அழகிய தோற்றம் குளிர்ந்த பதினாறு கலைகளும் ஒன்று சேரக் காட்சி அளிக்கும் பூரணச் சந்திரன் கீழே வந்திருந்தது போல் இருந்தது எனப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

இந்து தண்கலை எண்ணிரண் டுடனிறைந் திறங்கி
வந்தி ருந்ததொத் திருந்தனர் எழின்முகம் மதுவே
(இலாஞ்சனை தரித்த படலம் : 86)

முகம்மது நபி (சல்) அவர்கள் புனல் விளையாட்டில் ஈடுபட்டார்கள் என உமறுப்புலவர் வருணித்துள்ளார். அக் காட்சிகளிலும் உவமைகள் நிறைய வந்துள்ளன. அங்கு வாவி உள்ளது. வாவியின் கரையிலே தென்றல் காற்று வீசியது. அத் தென்றல் காற்றினாலே அவ்வாவியின் கரையிலே உள்ள மரங்களிலிருந்து நறுமணம் மிக்க பூக்கள் சொரிந்தன. அக்காற்றினாலே அவ்வாவியின் நீர் அசைந்தது. அவ்வாறு காட்சி அளித்தது. அப்பொழுது சங்குகள் முழங்கின. அப்பொழுது அந்த அலைகள் முத்துக்களை இரண்டு கரையிலும் எறிதலை ஒத்திருந்தது. இக் கருத்துக்களையே இவ்வாறு பாடியுள்ளார் ஆசிரியர் :

கரைதவழ் தென்றலங் காலினால் விரை
சொரிமலர் வாவிநீ ரசைந்து தோன்றுவ
தரிதிரைக் கரங்களில் சங்க மார்த்திட
இருகரை முத்தெடுத் தெறிதல் போலுமே.
(புனல் விளையாட்டுப் படலம் : 10)

குயிலினங்கள் அங்கு உள்ள மரக்கொப்புகளில் இருந்தன. பேடோடு இருந்தன. அங்கே அவை கூவிக்கொண்டிருந்தன. இனிமையான ஓசையை எழுப்பிக்கொண்டிருந்தன. அவை அவ்வாறு இசை எழுப்பியது நபி பெருமான் மீது கலிமா இவ்வாறு சொல்வோம் என்பது போன்றிருந்தது. கரும்பு போன்ற அழகிய சுவையான பொருளைத் தரும் கலிமா என்னும் இஸ்லாமிய மூலமந்திரத்தை இவ்வாறு நந்நபிக்கு இசைப்போம் என்று குயில்கள் கூவிக்கொண்டிருந்தன. இந்தக் காட்சியே இப்பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

பின்னிய தடத்தரு சினையிற் பேட்டொடு
மன்னிய குயிலினம் வாய்விட்டா ர்ப்பது
கன்னலஞ் சுவைக்கலி மாவை நந்நபிக்கு
இன்னணம் இயம்புமென் றிசைத்தல் போலுமே
(புனல் விளையாட்டுப் படலம் : 20)

முகம்மது நபி (சல்) அவர்களும் வணிகத் தோழர்களும் சிறியா நோக்கி சென்றுகொண்டிருந்தனர். அப்பொழுது அவர்களை எதிர்ப் பட்டவற்றுள் ஒரு பாம்பு இருந்தது. ஒரு குன்றின் அடியிலிருந்து அந்தப் பாம்பு வந்தது. அது ஒரு பெரிய பாம்பு. குன்றனைய, தீதுறும் கொலைப்பாந்தள் (பாந்தள் வசனித்த படலம்: 4) வருவதைப் பெருமானார் கண்டார்கள். அந்தப் பாம்பின் ஒவ்வோர் உறுப்பும் மிகப் பெரியதாக இருந்தது. அவை ஒவ்வொன்றையும் ஓர் உவமையைக் கொண்டு விளக்கியுள்ளார் புலவர். அதன் கண்கள் அக்கினிக் குவைவயைப் போன்றது. அது உமிழும் நஞ்சு சுருண்டு இருண்டு இருந்தது. அதன் வெண்மையான பற்கள் பிறைக்கீற்று போல் காட்சி அளித்தன. இவ்வுவமைகளை அமைத்து இவ்வாறு கொடிய பாம்பு வருணிக்கப்பட்டுள்ளது.

கண்க ளக்கினிக் குவையெனப் பொறிதிசை கதுவ
மண்க ளெங்கணும் இருளுற நச்சுமா சுமிழ்ந்து
விண்கொ ளும்பிறைக் கீற்றென வெள்ளெயி றிலங்கப்
புண்கொ ளுங்கடை வாய்கவை நாவிடை புரள

(பாந்தள் வசனித்த படலம்: 5)

முக்கனிகளுள் ஒன்று பலா. அது முட்புற நறைக்கனி என அழைக்கப்படும். முள் போன்ற தோலினால் மறைக்கப்பட்டுள்ள இனிமையான பழம் என்பதனால் அவ்வாறு அழைக்கப்படுகிறது. வழிநெடுகப் பலா மரங்கள் வரிசை வரிசையாக நின்றன. அப்பலாமரங் களிலே கனிகள் கண்கவரும் வகையில் தொங்கிக் கொண்டிருந்தன. அது அங்கு இயற்கையாக அமைந்துள்ள காட்சி. ஆனால் புலவரோ அந்தக் காட்சியில் ஒரு புதுமையைக் கண்டார். அப்பொழுது முகம்மது நபி (சல்) அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். அவர் செல்லும் பாதையின் இருமருங்குகளிலும் பலாமரங்கள் காய்த்து அங்கே பலாப்பழங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. அவை அமைந்த காட்சி பொற்குடங்களை வரிசை வரிசையாய் அழகழகாய் வைக்கப்பட்டது போல் இருந்தது. பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் செல்லும் பாதையை அழகுபடுத்தும் பொற்குடங்கள் போன்று அந்தப் பலாக் கனிகள் காட்சி அளித்தன. இவ்வுவமை இப்பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

தேக்கும் வெண்டிரைப் புவிக்கொரு தனிச்செங்கோல் செலுத்திக்
காக்கும் நாயக முகம்மது வரும்வழி கவின
வாக்கும் பொற்குட நனிநிரை நிரையணி யணியாய்த்
தூக்கி வைத்தபோன் முட்புற நறைக்கனி தூங்கும்

(சாம்நகர்புக்க படலம்: 5)

இத்தகைய உவமை நயந்தோடு இதே படலத்தில் வாழைப் பழமும் (3) மாம்பழமும் (4) குறிப்பிடப்பட்டுள்ளமையைக் காணலாம்.

சாம்நகர் புக்க படலத்தில் உவமை நயம் சிறக்கப் பல பாடல்கள் அமைந்துள்ளன. ஒரு பெண் ஒரு மனையில் பிறக்கிறாள். திருமணமானதும் வேறொரு மனையில் வாழ்கிறாள். கருவுறுகிறாள். குழந்தையை ஈன்றெடுக்கிறாள். தன் கணவனை இகழாது போற்றிப் புகழ்கிறாள். அத்தகைய பெரிய கட்டுப்பாடுகளை உடையவள் பெண். அந்தப் பெண் போன்றே வரம்புகளுக்கிடையே வளரும் நெற்பயிர் காட்சி அளிக்கிறது. ஓரிடத்திலே நெல் விதைக்கப்படுகிறது. நாற்று நடப்பட்டு அது வேறோர் இடத்திலே வளருகிறது. பின்னர் பூத்துக் காய்த்துக் கருவீனுகிறது. அப்பெண் போன்றே செந்நெல்லும் தலைசாய்த்து நிற்கின்றது. இவ்வாறு உவமைநயம் உடையதாக வயலை வருணித்துள்ளார் உமறுப் புலவர்.

ஒரும னைப்பிறந் தொருமனை யிடத்தினி லுறைந்து
கருவ ரத்தரித் தீன்றுதன் கணவனை யிகழாப்
பெருவ ரம்புறும் பெண்கொடி யெனத்தலை சாய்த்துத்
திருவுஞ் செல்வமும் திகழ்தரக் காண்பன செந்நெல்

(சாம்நகர் புக்க படலம் : 11)

வயலின் வாயலிலே செந்தாமரை மலர்கள் மலிந்திருக்கின்றன. அவற்றின் சிவந்த இதழ்கள் எங்கும் பரந்திருக்கின்றன. செவ்விதழ்களுக்குள்ளே மாமணி போன்று மகரந்தக் கோடுகள் இருக்கின்றன. அவை அங்கே ஒளி வீசிக் கொண்டிருக்கின்றன. அவை ஏன் அங்கே அப்படிக் காட்சியளிக்கின்றன. முகம்மது நபி (சல்) அவர்கள் வருகிறார்கள். அவர்கள் நடந்து செல்லும் பாதை ஒளியற்றுக் கிடக்கிறது. அதனை ஒளிமயமாக்க வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக செந்தாமரைகள் மலர்ந்திருக்கின்றன. அப்பாதையை ஒளிமயமாக்கச் செந்தாமரைகள் எண்ணிறந்த கைவிளக்குகளை ஏந்திக்கொண்டிருக்கின்றன. இங்கே செந்தாமரை மலர்ந்திருந்தமை கைவிளக்குகள் ஏந்திக் கொண்டிருந்தமையை ஒத்திருந்தது என நயம்பட இவ்வாறு உமறுப் புலவர் ஒரு பாடலை யாத்துத் தந்துள்ளார்.

பண்ணை வாய்ச்செழுங் கமலங்கள் செவ்விதழ் பரப்பி
உண்ணி றைந்தமா மணியொடும் ஒளிர்வன அவைகள்
வண்ண வார்கழன் முகம்மது வருநெறிக் கெதிராய்
எண்ணி றந்தகை விளக்கெடுத் தேந்தின ரியையும்

(சாம்நகர் புக்க படலம் : 14)

ஒருவர் ஓரிடத்துக்கு முதன் முறையாகச் செல்லும்பொழுது அவருக்கு அங்கே பகட்டான வரவேற்பு உண்டு. அதே போன்று முகம்மது நபி (சல்) அவர்கள் வியாபார நோக்கமாகச் சாம் நாட்டுக்குச் சென்றார்கள். இன்றைய சிறியா நாடு அன்று சாம் நகர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதியிலே பேரொளியாகப் படைக்கப்பட்டுப் பின்னர் இவ்வுலகில் தோன்றிய முகம்மது நபி (சல்) அவர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களைச் சென்று வரவேற்பு அளியுங்கள். வருக, வருக என அழைத்து வாருங்கள். சாம் நாட்டில் உள்ள பெரு மக்கள் அவர்களை எதிர்கொண்டு அழையுங்கள். உங்களுடைய நல்லாபரணங்களை அணிந்து செல்லுங்கள். இவ்வாறு மகிழ்ச்சி பொங்க முகமலர்ந்து உள்ளங்குளிர அழைத்து வாருங்கள் எனக் கைகளை அசைத்துக் கூறுவதுபோல் அங்கே நிலைபெற்றிருந்த கொடிகள் அசைந்தன. இந்த உவமை இச்செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

முதிர்ந்த பேரொளி முகம்மது வருநெறி முன்னி
எதிர்ந்தி றைஞ்சுதற் கிந்நக ருறைந்திடு மரசீர்
பொதிந்த பூணொடு மேகுமி னெனக்களி பொங்கி
அதிர்ந்தி டக்கர மசைத்தல்போ லசைந்தன கொடிகள்.

(சாம்நகர் புக்க படலம்: 17)

அடுத்த இரண்டு பாடல்களிலும் கொடிகள் அசைந்த விதத்தினை பெருமானாரை வரவேற்கவே இவ்வாறு அசைந்தன என நயம்பட வருணித்துள்ளார் உமறுப்புலவர்.

விதுக்கொண் மேநிலை மென்றுகண் மாசறத் துடைத்துப்
புதுக்கு வான்றொழில் புரிந்தபோ லசைந்த பொற்கொடிகள்

(சாம்நகர் புக்க படலம்: 18)

என்றும்

குவித்த கைவிரித் தழைத்தபோ லசைந்தன கொடிகள்

(சாம்நகர் புக்க படலம்: 19)

என்றும் வந்துள்ளமை காண்க.

முதற் பாடலில் கொடிகள் அசைந்தன என ஒரு நோக்கத்துடன் செயற்பட்டன என்றும் அடுத்த இரண்டு செய்யுட்களிலும் அவை இயற்கையாகவே அசைந்தன என்றும் தொனிக்க கொடிகள் இங்கு வருணிக்கப்பட்டுள்ளமை நோக்கற்பாலது.

சீறாப்புராணத்தில் வரும் பாட்டுடைத் தலைவரின் பரம எதிரி அபுஜகுல் என்பவன். அவனுடைய தன்மைகள் கொடூரமானவை. அத்தகைய கொடியவனை வருணிக்கப் பொருத்தமான ஓர் உவமையை உமறுப்புலவர் கையாண்டிருப்பதைக் காணலாம். ஒரு தோட்டம்

உள்ளது. அந்தத் தோட்டத்திலே பல மரங்கள் உள்ளன. அவை நல்ல கனிகளைத் தருபவை. அதன் பயனாக புவியும் புவியிலுள்ளவர் களும் பயனடையவர். அத்தகைய நல்ல பயனுள்ள மரங்களுக் கிடையே பயனற்ற ஒரு செடியும் வளரும். அந்தச் செடி எவ்வித பயனையும் தராது. எவ்விதச் சுவையாயும் இராது. நஞ்சுகளே அந்தச் செடியில் பொதிந்திருக்கும். அத்தகைய நஞ்சுகளே அந்தச் செடியில் செறிந்திருக்கும். அபூஜகிலை அந்தச் செடிக்கு உவமையாக வருணிக்கப்பட்டிருக்கிறது.

புவிவளர நன்கனி பொழிந்ததரு வூடோர்
சுவையுமற நஞ்சுகள் சொரிந்தசெடி யென்னப்
பவமிடறு வஞ்சனை படுங்கொலை படைத்த
அபுஜகிலெ னுங்கொடிய பாவியு மடைந்தான்
(சாம்நகர் புக்க படலம் : 33)

சாம் நகரத்திலே பெருமானார் (சல்) அவர்கள் சென்றிருந்த பொழுது அவர்களைக் கொல்லச் சதி ஒன்று மேற்கொள்ளப்பட்டது. அந்நாட்டு மக்களுள் சிலர் இந்த நோக்கத்தோடு அவர்களை ஓர் இல்லத்துக்கு அழைத்துச் சென்றனர். இருளடைந்த ஓர் இல்லமாக அது அமைந்திருந்தது. மேகம் போன்று கொடையிற் சிறந்த கவிந்த கைகளையுடைய பெருமானார் (சல்) அவர்கள் அருளிலும் அறத்தி லும் பேரறிவிலும் எவரும் ஒவ்வாதவர்களாகத் திகழ்ந்தார்கள். அவர்களை அவ்வில்லத்துக்கு அழைத்துச் சென்றார்கள் அந் நாட்டில் அவர்களிடம் பொறாமை கொண்ட சிலர். அவர்கள் அங்கு நடந்தே சென்றார்கள். அவர்கள் அங்கு நடந்து சென்ற காட்சி எல்லாக் கலைகளும் நிரம்பிய வெண்மையான சந்திரன் நடந்து செல்வதை ஒத்திருந்தது. இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் இது.

அருளினி லறத்தில் தேர்ந்த அறிவினில் எவரும் ஒவ்வாக்
குரிசினான் மறைக்கும் வாய்ந்த கொண்டலங் கவிகை வள்ளல்
விரிகதிர்க் கலைக ளோடும் வெண்மதி காலி னேகி
இருவிடம் புகுவ போல இவர்களில் லிடத்தில் புக்கார்
(கரம்பொருத்து படலம் : 37)

முகம்மது நபி அவர்களுக்கும் கதீஜாப் பிராட்டியாருக்கும் திருமணம் நிகழ இருந்த சமயம். வானவர் சம்சம் கிணற்றிலிருந்து நீர் கொண்டு வந்தனர். பொன்னாலான குடத்தில் அந்நீரைக் கொண்டு வந்தனர். கொண்டு வந்து அந்நீரால் முகம்மது நபி அவர் களை நீராட்டினர். இதனை ஒரு சாதாரண விஷயமாகக் கருதாத உமறுப்புலவர் இந்நிகழ்ச்சியை விளக்கி ஓர் உவமையைக் கையாண் டுள்ளார். பொற்குடம் போன்ற சந்திரனிலிருந்து குளிர்ந்த கிரணங்கள் மலைமீது விழுகின்றன. இதுவும் ஒரு சாதாரண நிகழ்ச்சி.

இவ்விரண்டையும் சேர்த்து ஒன்றை உவமானமாகவும் மற்றதை உவமேயமாகவும் அமைத்துள்ளார் புலவர். பொற்குடத்திலிருந்து சம்சம் கிணற்றிலிருந்து பெறப்பட்ட நீரை முகம்மது நபி அவர்கள்மீது வார்த்தது சந்திரனிலிருந்து கிரணங்கள் மலைமீது பொழிவதுபோல் இருந்தது என்று நயம் மிகப்பாடி உள்ளார்.

அற்புதமாய் விண்ணவரும் புகலரிய ஆபுசம்சத்
 தரிய நீரைப்
பொற்குடத்தி லெடுத்தமுதக் கதிர்க்கிரண மலைமிசையே
 பொழிவ போலச்
சிற்பரியற் றியபலகை நடுவிருத்தி முகம்மதுதஞ்
 சிரசின் மீதே
சொற்பழுத்த மறைமுதியோர் மங்கலவாக் கியங்கறங்கச்
 சொரிந்தா ரன்றே

(மணம்புரி படலம் : 33)

திருமணப் பவனியைக் காண வந்திருந்தனர் கட்டிளங் கன்னியர். அவர்களுடைய கண்கள் கதிர் வீசும் வேலை ஒத்திருந்தன. பவளக் கொடிகளினூடே குவளை பூத்தது போன்று அவர்களுடைய கண்கள் விளங்கின. இதுவே இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

கடிமணப் பவனி நோக்குங் கன்னியர் கதிர்வேற் கண்கள்
கொடிதுடர்ப் பவளத் தூடு குவளைகள் பூத்த போன்ற

(மணம்புரி படலம் : 75)

நபிப்பட்டம் வழங்கப்படுவதற்குச் சற்று முன்னர் முகம்மது நபி (சல்) அவர்களை வானவர் கோன் ஜிபுறீல் (அலை) அவர்கள் வந்து சந்தித்தார்கள். இந்த சந்திப்பினை உமறுப்புலவர் உவமை நயம் மிளிர வருணித்துள்ளார். முகம்மது நபி (சல்) அவர்கள் மண்ணிலும் விண்ணிலும் உள்ள ஒளிகளுக்கெல்லாம் மேலான ஒளி உடையவரா வார்கள். ஏனெனில் அவர்கள் முதன்முதலில் ஒளி மயமாகவே படைக்கப்பட்டவர்களாவார். மலாயிக்கா என்று அழைக்கப்படும் வானவரும் ஒளியினால் படைக்கப்பட்டோராவர். இந்த இரண்டு ஒளிகளுக்கும் உள்ள வேறுபாட்டை வகுத்துக்காட்டவே உமறுப் புலவர் இந்த உவமையைக் கையாண்டுள்ளார். எல்லா உலகங் களிலும் சன்மார்க்கமாகிய இஸ்லாத்தை பரப்பப் பேரொளியாய்த் தோன்றியுள்ள ஒளியாகிய நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களை ஒளியினால் படைக்கப்பட்டவர்களின் தலைவரான ஜிபுறீல் (அலை) அவர்கள் வந்து சந்தித்தமை 'நானிலம் பரப்பும் சோதியை (வானகத் திருந்த சோதி) வானில் திகழ்கின்ற சூரிய ஒளி வந்து சந்தித்தது போல் இருந்தது' இவ்வாறு உமறுப்புலவர் குறிப்பிட்டுள்ளார்.

நானிலம் பரப்புஞ் சோதி நாயகக் கடவுடம்மை
வானகத் திருந்த சோதி வந்துசந் தித்த தேபோல்
கானமர் துண்டச் செங்கட் கலைநிலாத் தவழு மியாக்கை
ஈனமில் ஜிபுற யீல்வந் திறையவன் சலாமுஞ் சொன்னார்

(நபிப்பட்டம் பெற்ற படலம் : 17)

சாதாரணமாகப் பாட்டுடைத்தலைவனைப் பூரணச் சந்திரனுக்கு ஒப்பிடுவது மரபு. பூரணச் சந்திரனிலும் மறு உண்டு எனக் கூறப் படுகிறது. எனவே ஒரு பாட்டுடைத் தலைவரை பூரணச் சந்திர னுக்கு ஒப்பிட்டால் அந்தப் பாட்டுடைத் தலைவரிடத்தும் மறு என்னும் குற்றம் உண்டு எனக் கொள்ள வாய்ப்பு உள்ளது. எனவே தான் உமறுப்புலவர் முகம்மது நபி (சல்) அவர்களை சந்திரனுக்கு ஒப்பிட்டு வருணிக்கும்பொழுது 'மறு அற்ற சந்திரனுக்கு' ஒப்பிடுவர். பூரணச் சந்திரனில் உள்ள இந்த மறு ஒரு முயலின் வடிவம் என்று கதை கூறப்படுகிறது. இதனையும் கருத்தில் கொண்டே உமறுப் புலவர் முகம்மது நபி (சல்) அவர்களைக் களங்கமற்ற, முயலற்ற சந்திரனுக்கு இவ்வாறு ஒப்பிட்டுள்ளார்.

மறுவிலா தெழுந்த முழுமதி போல
முகம்மது நபிபிறந் தனரே

(நபியவதாரப் படலம் : 91)

முயலகன் மதியம் போன்ற
முகம்மதைப் போற்றி......

(நபிப்பட்டம் பெற்ற படலம் : 31)

முகம்மது நபி (சல்) அவர்களின் பிறப்பைக் கூறவந்த உமறுப் புலவர் அதனைப் பல உவமைகள் மூலம் விளக்கியுள்ளார்.

தீனெனும் பயிர்க்கோர் செழுமழை யெனலாய் முகம்மது நபி (சல்) அவர்கள் பிறந்தார்கள் எனக் குறிப்பிட்டுள்ளார். முகம்மது நபி (சல்) அவர்களுக்கு முதன் முதலில் இறை அறிவிப்பும் நபிப் பட்டமும் கிடைத்தபின் சிலகாலம் எதுவித இறை அறிவிப்புமின்றிக் கழிந்தது. பின்னர் ஒருநாள் ஜிபுறயீல் (அலை) அவர்கள் விண்ணி லிருந்து இறங்கி நபிகள் பெருமானாரை சந்தித்தார்கள். இந்தச் சந்திப்பை இரண்டு உவமைகளைக் கொண்டு உமறுப் புலவர் விளக்கி உள்ளார். விவசாயிகள் வயல்களில் பயிர்களை நட்டு வளர்ப்பர். சில சமயங்களில் அவை நீரில்லாமல் வாடிப் போய்விடும். அத்தகைய சந்தர்ப்பங்களில் அப்பயிர்கள் நீரைப் பெற்றால் பயிரும் வளரும். விவசாயிகளும் மகிழ்வர். அதேபோன்று ஒருவன் நாள்தோறும் உழைப்பான். உடல் வருந்த உழைத்தும் அதற்கான பொருள்

கிட்டாவிட்டால் துயருறுவான். அத்தகைய சந்தர்ப்பத்தில் அவனுடைய கையில் அந்தப் பொருள் வந்து சேர்ந்தால் அவன் அளவிலா மகிழ்ச்சி அடைவான். வாடிய பயிருக்கு நல்ல மழை பெய்தது போலும் தேடிய செல்வம் கைக்கெட்டியதுபோலும் முகம்மது நபி (சல்) அவர்களை மீண்டும் ஜிபுறயீல் (அலை) அவர்கள் வந்து சந்தித்தார்கள். இந்நிகழ்ச்சியே உமறுப் புலவரால் இவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளது.

வாடிய பயிர்க்குறு மழையும் போற்றினந்
தேடிய பொருட்கரஞ் சேரு மாறென
ஈடில்வா னவர்க்கிறை விரைவி னேகியக்
கோடுறை நபிவயின் குறுகி னாரரோ.

(தொழுகைப் படலம் : 31)

மற்றொரு சந்தர்ப்பத்திலும் உமறுப் புலவர் இத்தகைய ஓர் உவமையை இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

மண்ணினிற் செழுந்தீன் பயிர்நலம் தழைக்க
வளர்த்தமா மறை நபிநயினார்.

(தீனிலை கண்ட படலம் : 109)

செய்ய முடியாத காரியத்தைச் செய்ய முற்படுபவரைக் காட்ட உமறுப் புலவர் அலாதியான ஓர் உவமையைக் கையாண்டுள்ளார். சூரியன் கிழக்கில் உதிக்கும், மேற்கில் மறையும். அதனைப் பொதுவாக தடுத்து நிறுத்தமுடியாது. ஆனால் அதனைத் தடுத்து நிறுத்தும் செயலை இரு கால்கள் உள்ளவனாலும் செய்ய முடியாது. இது உலக இயற்கை. உத்துபா என்பவன் முகம்மது நபி (சல்) அவர்கள் நிறுவ முற்பட்டுள்ள இஸ்லாம் மார்க்கத்தைத் தடுத்துப் பல தெய்வ வணக்கத்தை நிறுத்துவேன் எனக் கூறிக்கொண்டு முற்பட்டான் என்னும் அவனுடைய செய்கையை இத்தகைய இரு கால்களும் வழங்காத ஒருவனின் அந்தச் செய்கைக்கு ஒப்பிட்டுள்ளார் உமறு.

ஒருகாலுந் தறுகாது குணக்கெழுந்து
குடக் கோடற் குறும்வெய் யோனை
இருகாலும் வழங்காதான் முன்னோடி
மறிப்பனெனு மியற்கை போலக்
குருகாலு மலர்வாவி புடைசூழு
மக்கநகர்க் குரிசி றன்பாற்
பொருகாலக் கதிரிலைவேல் வலனிலங்க
விரைவினொடும் புறப்பட் டானே.

(உத்துபா வந்த படலம் : 6)

ஒரு வேடன் மானினைக் கைப்பற்றிக் கட்டி வைத்தான். அதன் பிணை ஆங்கே வருந்திக் கொண்டிருந்தது. இதனைக் கண்டார்கள் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள். அங்கே அவர்கள் உள்ளம் வருந்தி நின்றுவிட்டார்கள். இந்த நிலைமையில் அயலில் இருந்த மரங்களிலிருந்து புது மலர்கள் வீழ்ந்தன. செந்தேன் பொழிந்தது. இந்தக் காட்சி மானின் துன்பத்தைக் கண்டு பரந்த கொப்புகளாகிய கரங்களை அசைத்து இலைகளாகிய கூந்தலை சோரவிட்டு புத்தி யிழந்து இரக்கங்கொண்டு கண்ணீர் வடிப்பன போன்று இருந்தது. இத்தகைய நயங்களை எல்லாம் அமைத்து இவ்வாறு பாடி உள்ளார் உமறுப்புலவர்.

கதிர்விரி கபீபு நிற்பக் கானகத் தருக்களி யாவும்
புதுமல ரலர்த்திச் செந்தேன் பொழிவ மான் வருத்த நோக்கி
விதிர்சினைக் கரங்கள் சாய்த்து மென்றழைக் கூந்தல் சோர
மதியழிந் திரங்கிக் கண்ணீர் வடிப்பன போன்ற தன்றே
(மானுக்குப்பிணை நின்ற படலம் : 13)

உலகின் நிலையாமையைக் கூற வந்த உமறுப்புலவர் அதனை மானின் கூற்றாக உவமை நயத்துடன் குறிப்பிட்டுள்ளார். இலை நுனியிலே உள்ள பனி நிலைத்து நிற்காது. அத்தகையதே இவ்வுலக வாழ்க்கை என்பதை இவ்வாறு சுருங்கச் சொல்லி விளங்க வைத் துள்ளார்.

இலைநுனிப் பனியி னாக்கை யிறத்தலே நலத்தன் மன்னோ
(மானுக்குப்பிணை நின்ற படலம் : 31)

அன்று பெருமானார் நபி (சல்) அவர்கள் மக்காவைவிட்டு மதீனா செல்வதற்கு இறைக்கட்டளையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அங்கிருந்து தப்பிச் செல்வதற்கு முன்னர் அவர்களைக் கொன்று தீர்த்து விட வேண்டும் என்னும் எண்ணத் துடன் முஸ்லிம் அல்லாத குறைஷியர் திட்டம் தீட்டி அண்ணல் அவர்களின் இல்லத்தை இரவோடு இரவாக முற்றுகை இட்டனர். இந்த முற்றுகை தோல்வியுறும் என்பது அறிந்ததே. இந்த நிகழ்ச்சி யையும் உவமை மூலம் விளக்கிக் கூறியுள்ளார் உமறுப்புலவர். குற்றம் எதுவும் இல்லாத ஆண்சிங்கம் ஒன்று மலையின் குகையிலே இருக்கிறது. அதனை அழிக்கக் கருதி சின்னஞ்சிறு ஆட்டுக் கூட்டம் ஒன்று அக்குகையை வளைத்துக் கொண்டிருக்கிறது. ஆண் சிங்கத் தின் குகையை ஆட்டுக் கூட்டம் முற்றுகை இட்டதுபோல் இருந்தது அன்று முகம்மது நபி (சல்) அவர்களின் இல்லத்தைக் குறைஷிப்

பகைவர் முற்றுகையிட்டுக் கொண்டிருந்தது என நயம்பட இவ்வாறு விளக்கி உள்ளார் உமறுப்புலவர்.

மறுவறு மடங்க வேற்றினங் கிடந்த
மலைமுழைஞ் சினைக்கொறித் திரள்கள்
அறவளைந் ததுபோல் காபிர்க ளெவரும்
அகுமது மனையினை வளைந்தார்

(யாத்திரைப் படலம் : 67)

மக்காவிலிருந்து மதீனாவுக்குச் செல்லும் வழியில் முகம்மது நபி (சல்) அவர்களும் அபூபக்கர் (றலி) அவர்களும் தவுர் குகையில் எவரும் காணாதவாறு தங்கி இருந்தார்கள். அப்பொழுது குகையிலிருந்து வெளியே வந்த ஒரு பாம்பு அபூபக்கர் (றலி) அவர்களின் குதிகாலைத் தீண்டிற்று. அப்பொழுது அந்தப் பாம்பின் விடம் அபூபக்கர் (றலி) அவர்களின் உடல் முழுவதும் பரவிய விதத்தினை உவமை மூலம் விளக்கியுள்ளார் நூலாசிரியர். குற்றம் அற்ற பஞ்சினை நெருப்புத் தொட்டால் அது நெருப்புக்கிரையாகிவிடும். நன்றாகச் சுடப்பட்ட சாம்பர் மீது தண்ணீர் வார்த்தால் எளிதில் எல்லாவிடமும் பரந்து விடும். அத்தகையனபோன்று அபூபக்கர் (றலி) அவர்கள் உடலில் விஷம் பரவியது என்று உமறுப்புலவர் இவ்வாறு பாடி உள்ளார்.

மாசறத் தெளித்த பஞ்சின் வாய்ப்படு நெருப்புப் போன்றும்
வேசறச் சுட்ட சாம்பர் மீதுறும் புனலைப் போன்று
மூசிவெள் ளெயிறு சிந்த முரணராக் கடித்த வாயில்
ஆசொடும் விடத்தின் வேக மாகத்தின் முழுது மேற்ற

(விடமீட்ட படலம் : 14)

பதங்கம் பிரசாசமான பொருள் பால் ஈர்க்கப்படுவதொன்று. நெருப்பைக் கண்டால் அது அங்கு பறந்து செல்லும். அங்கே அபாயம் இருக்கிறது என்பதை அது உணராது. அந்த நினைவு அதற்கு வராது. அதனால் உணர்ந்து கொள்ளவும் முடியாது. எனவே அது நெருப்பை நாடிச் செல்லும். அந்த நெருப்பே அதற்கு மரணத்தை ஏற்படுத்தும். இத்தகைய பதங்கத்துக்கு சுறாக்கத் என்பவனை உவமித்துள்ளார் உமறுப்புலவர். முகம்மது நபி (சல்) அவர்களும் அபூபக்கர் (றலி) அவர்களும் மதீனா நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். அவர்களைப் பிடித்துக் கொண்டு வருபவருக்கு மிகுந்த பரிசில்கள் வழங்கப்படும் என்று குறைஷிப் பகைவர் பறை சாற்றினர். இந்த ஆசை வார்த்தைகளைக் கண்டு அவர்களையும் அவர்கள் தம் தோழர்களையும் சுறாக்கத் பின் தொடர்ந்தான். அந்த சுறாக்கத் என்பவனுக்கு பதங்கத்தை உவமை கூறி உமறுப் புலவர் இவ்வாறு பாடி உள்ளார்.

சுடரிடத்திற் பதங்கநினை வறியாது
வருவதுபோற் சுறாக்கத் தென்போன்
............... ............... ...............
வடவரை போற் புயமுகம்ம தினைச்செகுப்ப
வேண்டுமென மனத்திற் றாங்கிக்
கடிதினிற்கை வேல்சுழற்றி யிமைக்குமுனம்
வரநபியும் கண்ணுற் றாரால்
(சுறாக்கத்துத் தொடர்ந்த படலம் : 38)

மதீன மாநகரிலே மாட மாளிகைகள் மலிந்திருந்தன. அவை மேருமலை போன்று உயர்ந்திருந்தன. அங்கே பல வீதிகள் இருந்தன. அந்த வீதிகளிலே வியாபார நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டிருந்தன. அந்த வியாபார நடவடிக்கைகள் காரணமாக அங்கு ஒரே ஆரவாரமாக இருந்தது. எங்குமே ஒரே இரைச்சலும் சத்தமும். அந்த ஒலி கடலின் ஒலியைப் போன்று இருந்தது. அந்த வீதிகளோ மிக நீண்டவை. அவை பூமியை அளப்பதற்குப் பயன்படுத்துவதற்காக அவ்வளவு நீளமாக அமைக்கப்பட்டிருந்தன என்று ஐயம் தோன்றுவதற்கு ஏதுவாக அமைந்திருந்தன. இவ்வாறு மதீன மாநகரை வருணித்துள்ளார் உமறுப்புலவர்.

வடவரை பொருவன மலிந்த மேனிலைக்
கடலென வொலித்ததா வணத்தின் கம்பலைப்
புடவியை அளந்தன போன்ற வீதிகள்
இடனற நெருங்கின மாட மெங்குமே
(மதீனம் புக்க படலம் : 6)

பெருமானார் முகம்மது (சல்) அவர்களுடன் மக்காவிலிருந்து மதீனாவுக்குச் சென்றவர்கள் முஹாஜிறீன்கள் என்று அழைக்கப் பட்டனர். இடம் விட்டு இடம் செல்லுதல் என்று பொருள்படும் ஹிஜ்றத் பயணத்தை மேற்கொண்டவர்களை அச்சொல் குறிக்கும். சிறப்பாக மக்காவிலிருந்து மதீனா சென்றவர்களையே குறிக்கும். மதீனாவாசிகள் அன்சார் என அழைக்கப்பட்டனர். அன்சார் என்றால் உதவி செய்தவர்கள் என்று பொருள். மக்காப் பகைவர்களின் இன்னல் பொறுக்கமுடியாது பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் மதீனாவுக்குச் சென்றார்கள். மதீனா மக்களோ அண்ணல் நபி (சல்) அவர்களை உள்ளங்களிப்ப வரவேற்றனர். அதனாலேயே மதீனா வாசிகள் அன்சார்கள் என அழைக்கப்பட்டனர். பெருமானாரை வரவேற்றது போன்று பெருமானாருடன் சென்ற மக்காவாசிகள் என முஹாஜிரீன்களையும் மதீனாவாசிகள் உள்ளங்குளிர வரவேற்று உபசரித்தனர். இருசாராரும் நெருங்கிய உறவினர்களாக மாறினர். அவர்களுடைய உறவின் நெருக்கத்தைப் பாட வந்த உமறுப்புலவர்

அவர்கள் இரு சாராரும் காந்தமும் இரும்பும் போன்று இணைபிரியாச் சகோதரர்களாக மாறினர் என இவ்வாறு வருணித்துள்ளார்.

இடரறுத் தடைந்த முஹாஜி ரீன்களும்
அடலுறும் வேற்கையன் சாரி மார்களும்
உடனுவந் தொருவருக் கொருவர் அவ்வயின்
இடனுறக் காந்தமு மிரும்பு மாயினார்
(மதீனம் புக்க படலம் : 22)

மற்றொரு பாடலில் முஹாஜிரீன்களும் அன்சார்களும் உடலும் உயிரும் போல பிரியாது வாழ்ந்து வந்தனர் என இவ்வாறு விவரித்துள்ளார்.

மக்கமா நகர முஹாஜிரீன் களுக்கு
மதீனத்தன் சாரிக டமக்கும்
ஒக்கலின் பிரியா தனந்தரத் தவரும்
உவந்தசம் பந்தரு மாக
மிக்கநந் நயினார் சேர்த்தன ரியாரும்
விள்ளுதற் கிடமற வுடலும்
புக்கிய வுயிரும் போற்பிரி யாதங்
கவர்களும் பொருந்தியங் கிருந்தார்.
(உகுபான் படலம் : 8)

பாத்திமா நாயகி அவர்களுக்கும் அலி (றலி) அவர்களுக்கும் திருமணம் நடைபெற்றது. அத்திருமணக்காட்சி பல பாடல்களில் சீறாப்புராணத்தில் கற்பனை நயத்துடன் வருணிக்கப்பட்டுள்ளது. அந்தத் திருமண விழாவில் மணமகன் அலி (றலி) அவர்களின் திருமண உலாவைக் கண்டு களிக்க பெண்கள் வந்திருந்தனர் என கற்பனைச் சுவையுடன் உமறுப்புலவர் வருணித்துள்ளார். அப் பெண்கள் கடல் போன்று வந்து திரண்டிருந்தனர் என வருணித் திருக்கிறார். கடலிலே மீன்கள் உண்டு. சங்கு ஆர்த்துக் கொண் டிருக்கும். முத்துக்கள் உண்டு. பவளங்கள் உண்டு. அலை உண்டு. அலைமோதும்போது நுரை ஏற்படுவதுண்டு. இவைகளை ஒரு பெண் ணின் அவயவங்களாக கண், களம் (தொண்டை), புன்சிரிப்பு, இதழ், பசலை, வெண்மாலை என்பனவற்றுக்கு உருவகிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு பெண் என்னுங்கடல் அங்கு பெருகிற்று என்று வருணிக்கப் பட்டுள்ளது.

கண்ணெனுங் கயல்கள் தாவக் களமெனுஞ் சங்க மார்ப்ப
வெண்ணகைத் தரள நக்க விரிஇதழ்ப் பவள மின்ன
வொண்ணிறப் பசலை கால வொளிர்நுரை மாலை சிந்தப்
பெண்ணெனுங் கடலந் தானை யிடனறப் பெருகிற் றன்றே.
(பாத்திமா திருமணப் படலம் : 134)

ஒருமுறை மதீனாவிலே ஒரு நபித் தோழரின் ஒட்டகம் ஒன்று மதம்பிடித்து அங்கும் இங்கும் ஓடி ஒரு பூஞ்சோலையை அழிக்கத் தலைப்பட்டது. ஒட்டகம் மதமுற்று '............ மருமலர் செறியுஞ் சோலை வளாகத்திற் புகுந்ததன்றே' (ஒட்டகை பேசிய படலம் : 2) என இச்செய்தி சீறாப்புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அத் தருணம் முகம்மது நபி (சல்) அவர்கள் அந்தச் சோலையை அடைந் தார்கள். ஒட்டகம் சோலையை அழிக்க முற்பட்டதைக் கண்ட பறவைகள் சத்தமிடத் தலைப்பட்டன. எல்லாப் பறவைகளும் ஒன்று கூடி கூவிச் சத்தமிட்டன. இந்தச் சத்தம் எவ்வாறிருந்ததெனின் அப் பறவைகள் 'முகம்மது நபியே! எம்மைத் தாய்போல் வளர்த்த இந்தச் சோலையை அதற்கு ஏற்பட்டுள்ள துன்பத்திலிருந்து காப் பாற்றுங்கள்' என்று கூறுவதுபோல் இருந்தது என உமறுப்புலவர் இவ்வாறு உவமைநயம் சிறப்பப் பாடியுள்ளார்.

ஆய்சிறைத் தூவிப் புட்க ளனைத்துமொன் றாகக் கூடி
வாய்திறந் தாற்று மோதை முகம்மது நபியே எம்மைத்
தாயென வளர்த்த சோலை தனக்குறு மிடரைத் தீர்க்க
வேயருள் செய்வி ரென்ன விளம்புவ போலும் அன்றே
(ஒட்டகை பேசிய படலம் : 9)

ஒட்டகம் சோலையைத் தாக்கியது. அதன் பயனாகப் பூக் கொப்புகள் உள்ள மலர்களில் தேன் அருந்திக் கொண்டிருந்த தேனீக் கள் ஓலமிட்டுக்கொண்டு வேறோர் இடத்துக்குச் சென்றுவிட்டன. அஃது எவ்வாறிருந்ததெனின் எந்நாளும் தானம் அளிக்கும் ஒரு வித்தகர் ஒருநாள் சற்றுத் தளர்ச்சி உறவே அதன் பயனாக மனம் வருந்திய பிச்சைக்காரரைப் போன்றிருந்தது. அயலிடத்துக்கு வண்டுகள் செல்லுதல் யாசகர் உள்ளம் மெலிந்தமை போன்றிருந்தது என உமறுப்புலவர் உவமையை இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

அத்திரி அலைத்த கொம்பி னலர்களி னறவ மாந்த
மொய்த்திருந் தெழுந்த தும்பி முரன்றெழுந் தயலிற் போதல்
சித்தநல் குறவே நாளும் செழுநிதிக் குவைக ணல்கும்
வித்தகர் தளர உள்ள மெலிந்தயா சகரைப் போலும்
(ஒட்டகை பேசிய படலம் : 10)

உமறுப்புலவர் மற்றொரு காட்சியையும் படம்பிடித்துக் காட்டி யுள்ளார். பூஞ்சோலையிலே மரங்கள் உள்ளன. மரங்களில் தளிர்கள் உண்டு. தளிர்களிலே நீர் உள்ளது. அதேபோன்று மலர்ப் போது களிலே தேன் உண்டு. அங்கே தென்றல் வீசுகின்றது. பூஞ்சோலை யில் தென்றல் வீசுவதனால் தளிர்களிலே இருந்த நீரும் பூப்போதுக் களிலே இருந்த மதுவும் எல்லா இடங்களிலும் வடிகின்றன. ஒழுகு கின்றன. இந்தக் காட்சி எத்தகையது எனின், 'வண்டுகள் தங்கு

கின்ற மாலையுடைய ஐயாவே!' என்று பூஞ்சோலை கூறுவதுடன் நின்றுவிடாது துளிதுளியாகக் கண்ணீர் வடித்து அந்தப் பூஞ்சோலை அழுவதற்கு ஒப்பாக இருந்தது. இந்தக் காட்சியையே சீறாப் புராண ஆசிரியர் கற்பனை நயம் விளங்க இவ்வாறு பாடிப் போந் துள்ளார்.

தளிர்களிற் புனலும் போது தனிலுறு மதுவும் வாடை
வளியலைத் திடவே யெங்கும் வார்ந்தெழுந் தொழுகும் தோற்றம்
அளியினுக் கிருப்பா மையா அத்திரி அலைத்த தென்று
துளிதுளி யாகக் கண்ணீர் சொரிந்துகா வழுதல் போலும்
(ஒட்டகை பேசிய படலம் : 11)

**மகளிர் வர்ணனை :**

தமிழ் இலக்கியக் கவி மரபுக்கியைய பெண்கள் எழுபருவங்களைக் கொண்டவர்களாக வர்ணிக்கப்படுவர். பெரும்பாலும் உலாப் பிரபந் தங்களிலே இத்தகைய வருணனைகளைக் காணலாம். பாட்டுடைத் தலைவன் உலா வருவதைக் கண்டுகளிக்கப் பெண்கள் தெரு ஓரத்திலே கூடுவர். அத்தகைய பெண்களைக் கவிஞர் ஏழு பருவத்தினாகப் பிரித்துப் பாடுவர். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களிலே அத்தகைய வருணனைகளைக் காணலாம். பெரும் பாலும் பாட்டுடைத் தலைவரின் திருமண உலாவிலே அத்தகைய ஏழு பருவங்களையும் சார்ந்த பெண்கள் வந்திருந்து களித்தனர் என முஸ்லிம் கவிஞர்கள் பாடி உள்ளனர். சீறாப்புராணத்தில் பாட்டுடைத் தலைவர் முகம்மது (சல்) அவர்களின் திருமண ஊர்வலத்தைக் கண்டு களிக்க ஏழு பருவங்களையும் சார்ந்த பெண்கள் வந்திருந்தனர் என்பதை உமறுப்புலவர் சுருக்கமாக இவ்வாறு பாடி உள்ளார்.

செழுமுகிற் கவிகையஞ் செம்மல் வீதிவாய்
வழுவறு பவனியின் வருகின் றாரென
எழுவகைப் பேதைபே ரிளம்பெ ணீறதாய்க்
குழுவுடன் திசைதிசை நிறைந்து கூடினார்
(மணம்புரி படலம் : 51)

இது வெறுங் கற்பனையே. இங்கே ஏழு பருவத்தினரும் வெவ்வேறாகக் குறிப்பிடப்படவில்லை.

பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் ஏழு பருவப் பெண்களும் பாத்திமா திருமணப் படலத்திலே வெவ்வேறாக வருணிக்கப்பட்டுள்ளனர். அலி (றலி) அவர்கள் திருமணக் கோலத்துடன் பவனி வருவதைக் காண அத்தகைய பெண்கள் எல்லோரும் வந்திருந்தனர் என சீறாப்புராண ஆசிரியர் பாடியுள்ளமை அவர்தம் கற்பனை நயத்தை எடுத்துக் காட்டுவதாகும். பேதைகள் வந்திருந்தமையை

எயிறுக ணிறையா மார்பி னிளமுலை முளையாக் கண்கள்
அயிலென வரிகள் சேரா அளகமு முடியிற் கூடா
தொயில்வரை மெய்யிற் பூழ்தி பூத்ததுந் துடையாக் காமப்
பயிரெனத் தோன்றும் பேதை பருவத்தி னொருத்தி வந்தாள்
(பாத்திமா திருமணப் படலம் : 148)

என்றும் பெதும்பைப் பருவத்தாள் சமுகந் தந்திருந்தமையை

கரும்பெனு மொழியாள் ஆசைக் கவின்முளைத் தென்னத் தோட்டுட்
குரும்பையின் முலையாள் மாயங் கொலைகள வென்ப சற்றே
அரும்பிய விழியைப் போலும் அகத்தின ளமலை மாறாப்
பெரும்படைப் பவனி நோக்குப் பெதும்பையென் றொருத்தி வந்தாள்
(பாத்திமா திருமணப் படலம் : 151)

என்றும் மங்கையள் ஒருத்தி அங்கு வருகைத் தந்திருந்தமையை

புத்தமு துகளும் வாயும் புதுமதி முகமுஞ் சேர்ந்த
கொத்தலர்க் குழலும் செம்பொற் குவிமுலைச் சுணங்கு நூலி
னெய்த்தசிற் றிடையும் காந்தி வளைநிரைத் தெடுத்த கையின்
வைத்தொரு கிளியு மேந்தி மங்கைய ளொருத்தி வந்தாள்
(பாத்திமா திருமணப் படலம் : 153)

என்றும் மடந்தையர் அங்கு கூடியிருந்தமையை

வாரறுத் தெழுந்து வீங்கும் வனமுலைப் பூணுஞ் சாந்துங்
கூரயில் பொருது நீண்ட கொடிவரி விழியின் மையும்
காரெனத் திரண்ட கூந்தற் காட்டினில் வரிவண் டார்ப்பப்
பேரணி மடந்தை யென்னும் பெண்கொடி யொருத்தி வந்தாள்
(பாத்திமா திருமணப் படலம் : 155)

என்றும் அரிவைப் பருவத்தை எய்தியவர்கள் அங்கு திரண்டிருந்தமையை,

காழ்த்தடக் களிறு சூழ வந்தகா வலரை நோக்கி
வீழ்த்தனள் அறிவை நாண விருப்பினான் மெல்ல மெல்ல
வீழ்த்தனள் வாரா தாலோ வென்னையோ பாலிற் சூழ்ந்து
வாழ்த்திநின் றவரை எல்லாம் வைதுகொண் டரிவை நின்றாள்
(பாத்திமா திருமணப் படலம் : 157)

என்றும் தெரிவைப் பருவத்தவர்கள் அங்கு குழுமியிருந்தமையை

பெரும்படைத் தலைவர்சூழ வரும்பிரான் வதன நோக்கி
அரும்பிய துயர வெள்ள மடிக்கடிப் பெருக லாலே
வரம்பெறு நாணும் போக்கி மதிமயக் குற்றிவ் வள்ளல்
திரும்பலில் சொல்வே னென்னச் சினந்தொரு தெரிவை போனாள்
(பாத்திமா திருமணப் படலம் : 158)

என்றும் இறுதியாகப் பேரிளம் பெண் பருவத்தவர்கள் அங்கு சூழ்ந் திருந்தமையை

குலிகமார் செப்பின் வாய்ந்த கொங்கைக டதும்ப வந்து
மலிதருந் தொடையல் சிந்த வடகங்க டுயல நோக்கி
அலியினைச் சேரா மாதர் அலியென விருத்த னன்றென்று
ஒலிதர உரைத்துச் செவ்வி ஒழுகுபே ரிளம்பெண் போனாள்
(பாத்திமா திருமணப் படலம்: 159)

என்றும் உவமை உருவகங்களை அமைத்துக் கற்பனை நயம் மிளிர அங்கு கடல்போல திரண்டிருந்த பெண்களை உமறுப்புலவர் வருணித்ததிலிருந்து அவர் கற்பனையில் உச்ச நிலையை அடைந்திருந்தார் என்பது வலியுறுகின்றது. இத்தகைய வருணனைகள் காப்பியத்துக்கு மெருகூட்டுவதற்காகவே அவ்வாறு சேர்க்கப்பட்டுள்ளன. வரலாற்று அடிப்படையில் நோக்கும்பொழுது இத்தகைய விமரிசையாக இத் திருமணம் நடந்தேறியது என்பதற்கு ஆதாரம் எதுவும் இல்லை. எனினும் காப்பியம் படைக்கும்பொழுது காப்பியத்துக்குச் சிறப்பியல்பு களாகவும் இன்றியமையாததாகவும் உள்ள வருணனைகளைக் காப்பிய ஆசிரியர்கள் தத்தம் காப்பியங்களில் சேர்த்தல் வேண்டும். இவ்வாறு சேர்க்கப்படாவிட்டால் சான்றோர் அப்படைப்பினைச் சிறந்த காப்பியமாக ஏற்கத் தயங்குவர். ஆதலினால்தான் உமறுப் புலவர் இத்தகைய வருணனைகளையும் இன்னோரன்ன பிறவற்றை யும் தமது சீறாப்புராணத்தில் சேர்த்துள்ளார் என்று கூறுவதே பொருத்தமாக அமையும் எனின் அது மிகையாகாது.

**கேசாதிபாத வர்ணனை :**

பெண்களைக் கேசாதிபாதமாகவோ பாதாதி கேசமாகவோ வருணித்தல் காப்பிய ஆசிரியர்களின் சிறப்பியல்புகளில் ஒன்றாகும். முடியிலிருந்து பாதம் வரைக்கும் அல்லது பாதத்திலிருந்து முடிவரைக் கும் ஒரு பெண்ணின் வருணனை இடம் பெறாத காப்பியம் முழுமை யான காப்பியமாகக் கொள்ளப்படமாட்டாது என்பது காப்பிய மரபாகும். எனவே எல்லாக் காப்பியங்களிலும் இத்தகைய வருணனைகள் இடம் பெற்றாக வேண்டும். அவ்வாறு இடம் பெற்றால் மாத்திரமே அத்தகைய காப்பியம் தலைசிறந்த காப்பியம் எனக் கவிஞர் கொள்வர். சீறாப்புராண ஆசிரியருக்கு இத்தகைய வருணனையை இடம் பெறச் செய்தல் அவ்வளவு எளிதான காரியமாக அமையவில்லை. சீறாப்புராணத்தில் புலவர் வருணிக்கவேண்டிய பெண் பாத்திரங்கள் நபிகள் பெருமானாரின் வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்புடையவர்களாக இருந்தனர். நபிகள் பெருமானாரின் தாயார் ஆமினா அம்மையார், அவர்

களின் செவிலித் தாயார் ஹலிமா அம்மையார், கதீஜா அம்மையார், ஆயிஷா அம்மையார் போன்ற அவர்களின் வாழ்க்கைத் துணைவியர், பாத்திமா அம்மையார் போன்ற அவர்களின் பெண் மக்கள் ஆகியோரை அவ்வாறு வருணிக்க முடியாது. இஸ்லாமிய வரம்பு இத்தகைய வருணனைக்கு முட்டுக் கட்டையாக அமைந்துள்ளது. அத்தகைய பெண் பற்றிய வருணனையை இடம் பெறச் செய்வதற்குச் சீறாப்புராண ஆசிரியர் ஓர் உத்தியைக் கையாண்டுள்ளார்.

சீறாப்புராணத்திலே அண்ணல் நபி (சல்) அவர்கள் நிகழ்த்திக் காட்டிய அற்புதங்கள் பல வருணிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று தசைக் கட்டியைப் பெண்ணுருவாக்கியது. திமிஷ்கு நாட்டு மன்னன் ஹபீபு அரசன் முன்னிலையில் பெருமானார் புனித கஃபாவில் அதனைச் செய்து காட்டினார்கள் எனச் சீறாப்புராணம் குறிப்பிடுகிறது. (தசைக் கட்டியை பெண் உருவமைத்த படலம்) இவ்வாறு பெருமானார் (சல்) அவர்கள் செய்து காட்டினார்கள் என்பதற்கு ஆதாரபூர்வமான சான்று பெருமானாரின் வாழ்க்கையிலிருந்து சுட்டிக் காட்ட முடியாது. பலராலும் ஏற்றுக்கொள்ளப்படாத ஓர் அற்புதம் என்றே இந்நிகழ்ச்சி கருதப்பட்டுள்ளது. ஆனால் உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் தந்துள்ள விவரங்கள் ஆதாரபூர்வமானவை போல் காட்சி அளிக்கின்றன. புலவர் அதனை ஓர் அற்புதமாகவே கையாண்டுள்ளார்.

தசைக் கட்டியைப் பெண் உருவமாக்கின நிகழ்ச்சியில் ஒரு பெண்ணை நுணுக்கமாக கேசாதிபாதமாக வருணிக்கக்கூடிய வாய்ப்பு உமறுப்புலவருக்குக் கிட்டியது. அதனை நன்கு பயன்படுத்தி உள்ளார் உமறுப்புலவர். சீறாப்புராணத்தில் கேசாதிபாத வருணனை இல்லை என்று கூறக்கூடிய குறையை இதன் மூலம் நிவர்த்தி செய்துள்ளார். அந்தப் பெண்ணை கேசாதிபாதமாக வருணித்துள்ளார்.

முன்பு ஒருமுறை அமாவாசை இரவில் சந்திரனை அழைத்தார்கள் அண்ணல் (நபி) அவர்கள். இந்த இருண்ட இரவிலும் பார்க்கக் கருமையாக இருந்தது அந்தப் பெண்ணின் கூந்தல். பெருகி இருந்தது. கருகி இருந்தது. மினுமினுத்துக் கொண்டிருந்தது. திரண்டு இருந்தது. தழைத்து இருந்தது. குழன்றிருந்தது. வார்ந்தொழுகிக் கொண்டிருந்தது. இளைஞர்களை மயக்கக் கூடிய வகையில் அமைந்திருந்தது. அத்தகைய அவளுடைய கூந்தலை உவமை நயத்துடன் இவ்வாறு வருணித்துள்ளார் உமறுப்புலவர் :

மங்குலிற் பெருகி விடத்தினுங் கருகி
வரியற லினுமினு மினுத்துத்
தங்கிய இதழித் திரளினுந் திரண்டு
சைவலத் தொடரினுந் தழைத்துக்
கொங்குறக் குழன்று நெறிந்து வார்ந் தொழுகிக்
குவலயத் திளைஞர்கண் வழுக்க
எங்கணன் னயினார் முன்னை நாளழைத்த
இருளினு மிருண்டமைக் குழலாள்
(தசைக்கட்டியைப் பெண் உருவமைத்த படலம்: 18)

அப்பெண்ணின் நெற்றியும் புருவங்களும் மற்றொரு பாடலில் வருணிக்கப்பட்டுள்ளது. இளம்பிறை போன்ற வளைந்த நெற்றி பிரகாசமாக இருந்தது. செழுமையான அவளுடைய புருவங்கள் வில் போன்று வளைந்து இருந்தன. அத்தோடு இமைகளும் விளங்கிக் கொண்டிருந்தன. இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் இது.

கீற்றிளம் பிறையுங் கணிச்சியின் வளைவுங்
கிளர்ந்தசெவ் வகத்திமென் மலருந்
தோற்றிடத் தோற்றி விளங்குநன் னுதலாள்
சுடருமுள் வாரணத் தலகு
மாற்றருந் தனுசுங் கருங்கொடி யெதிர்வு
மாற்றிமைக் கட்கடற் கரையின்
மேற்றிகழ் கரிய பவளமென் கொழுந்தாய்
விளங்கிய செழும் புருவத்தாள்
(தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம்: 19)

அப்பெண்ணுடைய கண்கள் அடுத்து வருணிக்கப்பட்டுள்ளன. இங்கும் புலவர் தமக்கே உரிய பாணியில் உவமைகளை அமைத்து இவ்வாறு வருணித்துள்ளார்.

மடற்குழை கிழித்துத் தடக்குழல் குழைத்து
வரியளி யினைச்சிறைப் படுத்திக்
கடற்குளந் தேறா தலைதரச் செய்து
கணையயில் கடைபடக் கறுவி
விடத்தினை யரவப் படத்திடை படுத்தி
மீனினம் பயப்படத் தாழ்த்தித்
திடக்கதிர் வடிவா ளெனக்கொலை பழகிச்
செவந்தரி படர்ந்தமை விழியாள்
(தசைக்கட்டியைப் பெண்ணுருவாக்கிய படலம்: 20

அடுத்து வருணிக்கப்படுவது அவளுடைய மூக்கு. கவிதையிலே மூக்கினைக் குமிழம் பூவுக்கு உவமிப்பதுண்டு. இங்கே உமறுப்புலவர்

குமிழம் பூவையே உடையாள் அவள் என இவ்வாறு குமிழாள் என வருணித்துள்ளார்.

வள்ளையை வாட்டி யூசலை அசைத்து
மண்ணெழி லாடவ ருயிரைக்
கொள்ளைகொண் டுடலங் குழைப்பதற் கன்றோ
குழையெனும் பெயரிடுங் குழையாள்
எள்ளையுஞ் சிறந்த குமிழையும் வாசத்
தினியசண் பகமலர் தனையும்
விள்ளருங் கானத் திடையலர் படுத்தி
விலங்கிட விலங்கிய குமிழாள்
(தசைக்கட்டியைப் பெண் உருவமாக்கிய படலம் : 21)

அந்தப் பெண்ணுடைய இதழ்கள் அடுத்து வருணிக்கப்படுகின்றன. அவற்றின் அழகை வருணிக்கமுடியாது. அவை பவளமோ, ஆம்பல் மலரோ, தொண்டையங்கனியோ என்று வினாக்களை எழுப்பி உள்ளார் ஆசிரியர். உவமிக்கமுடியாதவை அவை எனக் கூறியுள்ளார். ஆடவருடைய பார்வையிலோ வெனின் அவை சிவந்து இருக்கின்றன என இவ்வாறு பாடியுள்ளார் உமறுப்புலவர்.

வெண்ணிலாத் தரள நகைநிறை பொதிந்து
விரிந்தசெம் பவளமோ விலவோ
வண்ணவாய்ச் செழுஞ்சே தாம்பலின் மலரோ
வடிவுறு தொண்டையங் கனியோ
எண்ணிநோக் கினருக் குவமையி னடங்கா
தெழில்குடி யிருந்தமு தொழுகிப்
பண்ணெலாஞ் சுவற்றி யாடவ ரிருகட்
பார்வையிற் செவந்தமெல் லிதழாள்
(தசைக்கட்டியை பெண் உருவாக்கிய படலம் : 22)

அப்பெண்ணுடைய புன்சிரிப்பு அலாதியானது. முத்துப் போன்ற பற்களை உடையவள். அந்த அவளுடைய புன்னகையை இவ்வாறு மென்னகை என உமறுப்புலவர் வருணித்துள்ளார்.

முல்லையு முருந்து நிரைத்தன போன்று
முத்தெனத் திகழ்ந்தற நெருங்கி
மெல்லெனச் செவந்த மணியினிற் பிரித்து
விளக்கியொப் பித்துவைத் தனபோல்
வில்லிடக் கவின்கொண் டிருபுறத் தொழுங்கும்
விரிந்தபூங் காவிகள் படர்ந்து
சொல்லரு மனத்தா டவர்மய லிருளைத்
துணித்திட நகைக்குமென் னகையாள்
(தசைக்கட்டியை பெண் உருவமாக்கிய படலம் : 23)

அவளுடைய மொழி இனிமையானது. அமுதம் போன்றது. இளங்கிளியின் மொழி போன்றது. அவளுடைய இனிய மொழி பொன்மழை பொழிவது போன்றிருக்கும். இறந்த மரங்களை முளைக்கச் செய்யக்கூடியன அவர்தம் இனியமொழி. அத்தகைய இனியமென் மொழியாள் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளாள்.

பாலென வெளிறாக் கனியென வழியாப்
பசுமடற் றேனெனச் சிதறா
வேலவார் குழலார் செழுங்கரத் தேந்தும்
இளங்கிளி மொழியெனக் குழறா
வேலைவா ழமுதம் பிறந்தென உலகம்
விளங்கிடப் பொன்மழை பொழியச்
சாலவு மிறந்த தருவினம் தழைப்பத்
தரவரு மினியமென் மொழியாள்
(தசைக்கட்டியைப் பெண் உருவாக்கிய படலம் : 24)

அடுத்து வருணிக்கப்படுவது அந்தப் பெண்ணின் முகம். அவளுடைய சிறந்த முகம் தூய்மையான வெண்மையான சந்திரனை ஒத்திருந்தது. அழகுடையதாகத் திகழ்ந்தது. அவளுடைய முகத்தை வருணிக்க வந்த பாடலில் திமிஷ்கு நாட்டு மன்னன் ஹபீப் என்பவரின் வேண்டுகோட்படி அண்ணல் (சல்) அவர்கள் அழைப்பித்த சந்திரனைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். அந்தச் சந்திரனைப் போன்றது அவளுடைய முகம் என இவ்வாறு பாடி உள்ளார்.

வெய்யவ னலர்த்த விகசிதம் பொருந்தி
விரிநறைக் கமலமென் மலரில்
செய்யவ ளிருப்ப தெனவெழில் சிறந்து
செழுங்களைக் கதிர்கள்கான் றொழுக
வையக மதிப்பத் திமிஷ்கிறை யுரைத்த
வழிமுறை முகம்மதங் கழைத்த
துய்யவெண் மதிய நிகரென உலகில்
சொலும்படிச் சிறந்தமா முகத்தாள்
(தசைக்கட்டியைப் பெண் உருவாக்கிய படலம் : 25)

அப்பெண்ணுடைய கழுத்து, தோள்கள், கைகள் அடுத்து ஒரு பாடலில் வருணிக்கப்பட்டுள்ளன. பிரகாசிக்கின்ற மணிகளை உடைய ஆபரணத்தை தாங்கக் கூடியது கழுத்து. தோள்கள் அழகாக இருந்தன. மயிர் நிறைந்துப் பிரகாசமான முன்கைகள் உடையவளாய்த் திகழ்ந்தாள். அப்பாடல் இது :

திரளினின் மணியாய் முரல்வினின் வளையாய்ச்
செவ்விநெய்ப் பினிற்கமு கெனலாய்
விரிகதிர் மணிப்பூண் டாங்குமென் கழுத்தாள்
வேயினைக் கரும்பைமெல் லணையைச்
சருவிடப் பசந்து திரண்டுமென் மையவாய்த்
தழைத்தெழில் பிறங்கிய தோளாள்
வரிவளை சுமந்தி யாழினும் வியந்து
மயிர்நிறைந் தொளிருமுன் கையினாள்

(தசைக்கட்டியை உருவமைத்த படலம் : 26)

கை, விரல், நகம் என்பன ஒரு பாடலில் அடுத்து வருணிக்கப் பட்டுள்ளது. அவளுடைய காந்தள் போன்ற அழகிய கைகள் சிவந் தனவாய்க் காட்சியளித்தன. அதற்கு ஏற்றதாப் போல் அவளுடைய மெல்லிய விரல்கள் அழகிற்கு அழகு செய்வனவாய் அமைந்திருந்தன. ஈந்திலை போல் அவளுடைய நகங்கள் பிரகாசமாய் இருந்தன. இவற்றையே உமறுப்புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

குலிகமார்ந் தனபோ லரக்கினுஞ் சிவந்த
கொழுமடற் காந்தளங் கரத்தாள்
மலிசினைக் கெளிற்றின் வனப்பினும் வனப்பாய்
மணியணி சுமந்தமெல் விரலாள்
பொலிவுறச் சிவந்தீந் திலையெனக் கிளர்ந்து
புனக்கிளி நாசியின் வடிவாய்
நலிவிலா திளைத்த வயிரவொண் கதிராய்
நலங்கிடந் திலங்கிய வுகிராள்

(தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம் : 27)

இரண்டு பாடல்களில் அவளுடைய தனங்கள் வருணிக்கப்பட் டுள்ளன. அருந்தவத்தில் ஈடுபட்டுள்ளவர்களுடைய உயிரையும் வாங்கக் கூடியனவாக அவளுடைய தனங்கள் இருந்தன. இரண்டாம் பாடலில் அவற்றை வருணிக்கமுடியாது சிமிழோ? செப்பினமோ? மதுக் கலசமோ? அமிர்தம் பெருகிய குடமோ? பேரிளங் குரும்பையோ? வனசமென்முகையோ? மென்முடியோ? எனக் கேள்விக் கணைகளைத் தொடுத்துள்ளார் ஆசிரியர். கடைசியாக வருணிக்கமுடியாதவை என இவ்வாறு பாடியுள்ளார்

தடித்தடி பரந்திட் டெழுந்துபூ ரித்துத்
தளதளத் தொன்றொடொன் றமையா
தடர்த்திமை யாத கறுத்தகண் ணதனால்
அருந்தவத் தவருயிர் குடித்து
வடத்தினு ளடங்கா திணைத்தகச் சறுத்து
மதகரிக் கோட்டினுங் கதித்துப்
படத்தினும் பிறங்குஞ் சுணங்கணி படர்ந்த
பருமிதத் துணைக்கன தனத்தாள்.
பரிமளச் சிமிழோ குலிகச்செப் பினமோ
பசுமதுக் கலசமோ வமிர்தம்
பெருகிய குடமோ காமநீ ருறைந்த
பேரிளங் குரும்பையோ கதிரின்
முருகுகொப் பளிக்கும் வனசமென் முகையோ
முழுமணி பதித்த மென் முடியோ
கரையிலா வழகா றொழுகிய வரையோ
கவலுதற் கரிதெனுந் தனத்தாள்.

(தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம்: 28-29)

வயிற்றின் மயிரொழுக்கும் இத்தகைய வருணனையில் இடம் பெறும். உமறுப்புலவரும் அவளுடைய மயிரொழுக்கை வருணிக்கும் பொழுது முலைகள் இரண்டையும் பிணைத்த சங்கிலியோ? என்றும் 'காமன் மலைக்குந் தன் மனைக்கும் சேர்த்திடப்பட்ட நூலோ?' என்றும் ஐயுற்றுப் பாடியுள்ளார். அவருடைய ஐயப்பாட்டுடன் கூடிய செய்யுள் இது.

தனமெனு மிருகோட் டத்தியோ ராலிற்
றளைபடப் பணித்தசங் கிலியோ
மனநிலை கவருங் கடிதட வரவின்
வாலணி கிடந்ததோ வலது
சினவுவிற் காமன் மலைக்குந்தன் மனைக்குஞ்
சேர்த்திய மயநடு நூலோ
வினனுட னழகு நிறைகுடி யிருந்த
விவள்வயி றணிமயி ரொழுங்கே

(தசைகட்டியைப் பெண்ணுருவமைத்த படலம்: 30)

அவளுடைய இடை சிறிதாய் இருந்தது. மணிமேகலை அணிந்திருந்தாள். அவளுடைய இடை எவ்வாறு தேய்ந்து தேய்ந்து சிறிதாய் உள்ளதெனின் முகம்மது நபி (சல்) அவர்களுடைய பொன்மொழிக்குச் செவி சாய்க்காத வழிகேடர்கள் குறைந்து குறைந்து போவதுபோல் இருந்தது என உவமை கூறமுடியாத இடையை உவமை மூலம் விளக்கி உள்ளார் ஆசிரியர்.

பெருவரை யிடத்தி னடியுறைந் திலங்கும்
பேரெழிற் சுமந்தபொற் கொடியோ
விரிகதிர் மணிமே கலைநடுக் கோத்து
விளங்கிட நுடங்குமெல் லிழையோ
குருமுகம் மதுநன் மொழிவழி யடங்காக்
குபிர்க்குலந் தேய்ந்தெனத் தேய்ந்து
தெரிவரி தெனலா யுவமையிற் பொருவாச்
சேயிழை மடந்தைசிற் றிடையே
(தசைக் கட்டியைப் பெண்ணுரு வாக்கிய படலம் : 31)

அடுத்து வருணிக்கப்படுவது அவளுடைய குறங்கு. இது தொடையைக் குறிக்கும். அது திரட்சியானது. அழகானது மிருதுவானது. தவத்துறையவரும் புகழச் சிறந்தனவாய் அமைந்தது தொடை. உவமை நயத்துடன் இக்கருத்துக்கள் இங்கே இவ்வாறு அமைந்திருக்கக் காணலாம்.

கதிரொளி வழுக்கி னரம்பையைப் பழித்துக்
கவினுறுந் திரட்சியின் கதத்த
மதமலைக் கரத்தின் வனப்பினை யழித்து
மாறரு மிருதுமென் மையினில்
இதமுறச் சிவந்த விலவினைக் கடைந்திட்
டிணையடி யணையெனப் படுத்திப்
புதுமையின் விளங்கித் தவத்துறை யவரும்
புகழ்ந்திடச் சிறந்தபொற் குறங்காள்
(தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம் ; 32)

அவளுடைய கணைக்கால்கள் இரண்டும் சிறுமயிர்களால் நெருங்கப்பட்டிருந்தன. சதங்கை அணியப்பட்டிருந்தன. தூணரியையும் உவமை கூறமுடியாத அளவுக்கு அழகாய் இருந்தன. இன்னோரன்ன கருத்துக்களை அமைத்து அவளுடைய கணைக்கால்கள் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளன.

அணிமுகட் டலவன் றளைமுகந் தடுத்த
வரிவரிச் சினைவராற் போன்று
மணியினிற் செறிந்த துணியும் பொருவா
வடிவதாய் வெற்றிமன் னவர்முன்
தணிவிலா திசைக்கும் காளமும் பொருவாத்
தன்மைய வாகிமென் மையவாய்ப்
பணிபல சுமந்து சிறுமயிர் நெடுங்கால்
பண்புறு மிணைக்கணைக் காலாள்
(தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம் : 33)

அவளுடைய பரடு, குதி, புறந்தாள், கால் விரல்கள் முதலாக உள்ள பாதம் அடுத்து வருணிக்கப்பட்டுள்ளது. அப்பாதங்கள் சிவந்தனவாயும் மென்மையான தன்மை உடையனவாயும் விளங்கின. இப்பாடல் இக்கருத்துக்களைக் கொண்டுள்ளது.

நிறைதரு தராசின் வடிவுறும் பரடாள்
 நிறைமணிப் பந்தெனுங் குதியாள்
பொறையொடுங் கமடத் தினம்வனம் புகுந்து
 பொருவறா தைந்தையு மொடுக்கி
மறைபடத் தவஞ்செய் திணைபடற் கரிதான்
 மதித்திடற் குறும்புறந் தாளாள்
கறைதரா மணியின் குலமென விரல்கள்
 கவின்கொளச் சிவந்தமென் பதத்தாள்
(தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம்: 34)

**ஹிஜ்றத் பயணம் :**

ஹிஜ்றத் பிரயாணத்தின் ஆரம்பம் அது. மக்காக் குறைஷிக் காபிர்களின் இன்னல்கள் பொறுக்கமுடியாதவையாயின. மக்கா விலிருந்து புறப்பட, அல்லாஹ்வின் கட்டளையை எதிர்பார்த்திருந் தார்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள். மக்காவை விட்டு மதினா வுக்குப் புறப்படுமாறு அல்லாஹ்வின் கட்டளை ஜிப்றயீல் (அலை) அவர்கள் மூலம் கிடைக்கப்பெற்றது. அபூபக்கர் (றலி) அவர்களின் துணையோடு பெருமானார் (சல்) அவர்கள் மதினா நோக்கிப் புறப் பட்டார்கள். முதலில் தௌர் என்னும் குகையிலே மூன்று நாள் தங்கி இருந்தார்கள். அங்கிருந்து தப்பிப் பயணத்தை ஆரம்பித்தார்கள். அப்பொழுது சுறாக்கத் என்பவன் அவர்களைப் பின் தொடர்ந்தான். அவனும் பின்னர் இஸ்லாத்தை ஏற்று மக்காவுக்குத் திரும்பிவிட்டான். அவர்கள் இருவரும் மதீனமாநகரை நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

அண்ணல் நபி (சல்) அவர்களும் அபூபக்கர் (றலி) அவர்களும் இரவில் பிரயாணம் செய்தார்கள். இருளில் பிரயாணம் செய்தார்கள். இரவு காலத்தில் முட்கள் நெருங்கிய காட்டினை அடைந்து நடந்து சென்றார்கள். இரவில் சற்று மெதுவாகவே சென்றார்கள். சூரியன் உதயமான பின்னர் விரைவாகப் பயணமானார்கள். நண்பகலாயிற்று. கரடு முரடான பாதை. சூடு மிகுந்திருந்தது. வெப்பமான பாலை நிலத்தில் நண்பகல் சூடு என்றால் அகோரமாகத்தான் இருக்கும். அங்கே ஒரு குன்று இருந்தது. நிழலில்லாத வெயில் மிகுந்துள்ள இடத்தில் தங்கினார்கள். அந்தக் குன்றுக்கு அணித்தாய் இருந்தது அந்த இடம். அவர்கள் இருவரும் தங்கிய அத்தகைய இடத்தை இவ்வாறு வருணிக்கிறார் உமறுப்புலவர்.

இரவின் முட்செறி வனங்கடந்து இரவிதோன் றியபின்
பரல்கி டந்தவெம் பாலையில் பகல்நடுப் போதில்
ஒருகு றும்பொறை இடத்தினில் அறிவுறும் உரவோர்
விரைவின் ஏகிஅங்கு இறங்கினர் நிழல்இலா வெயிலின்
(சுறாக்கத்துத் தொடர்ந்த படலம் : 11)

இருவரும் அங்கிருக்கும்பொழுது அவர்கள் யார் என்று அறியும் விருப்பொடு ஓர் இடையன் வந்தான். அந்த இடையனையும் இடையனின் ஆட்டு மந்தையையும் நேரில் பார்த்தவர் போல் மிக நுணுக்கமாக வருணிக்கிறார் உமறுப்புலவர். அங்கே ஆட்டுக்கூட்டம். அவை செறிந்த உரோமத்தைக் கொண்டனவாய் இருந்தன. அவற்றின் கொம்புகள் திருக்குற்று இருந்தது. சிறுத்துப் பிளந்த மெல்லிய காற்குளம்புகளை உடையனவாய் அவை தென்பட்டன. அந்த ஆட்டுக் கூட்டத்தை மேய்த்த இடையனோ தோளில் கரிய கம்பளிப் போர்வையை வைத்திருந்தான், கையிலே தறி கைகோலும் கடைக்காலும் கொண்டிருந்தான். ஆடுகளின் இரைக்காக இலை தழை தேவைப் படும் அல்லவா? அவற்றைப் பெறுவதற்காக மரக்கிளைகளைத் தறிப்பதற்குப் பயன்படுத்தப்படுவதே தறி கைக்கோல். கடைகால் என்பது ஒரு பாத்திரம், மூங்கிலினால் செய்யப்பட்டது. பால் கறப் பதற்குப் பபயன்டுத்தப்படுவது. பொது வழக்கில் கடையால் எனவும் வழங்கப்படுகிறது. ஆட்டு மந்தையுடன் இடையன் தோன்றிய காட்சி தான் இப்பாடலில் வருணிக்கப்பட்டுள்ளது.

செறிம யிர்த்திரு கியமருப்பு உடைச்சிறு கவைக்கால்
குறும றித்திர ளொடுமயிர்ப் போர்வை தோட்கொண்டு
வெறிக மழ்ந்துஇவண் இருப்பவர் எவரென வியந்து
தறிகை கோல்கடை காலொடு சார்ந்துநோக் கினனால்
(சுறாக்கத்துத் தொடர்ந்த படலம் : 14)

இங்கே கஸ்தூரி மணம் கமழ்வதைத்தான் ‘வெறி கமழ்ந்து’ எனப் புலவர் குறிப்பிட்டுள்ளார். அத்தோடு நின்றுவிடவில்லை புலவர். அந்த இடையன் ஆட்டிலிருந்து பால் கறக்கும் முறையினையே படம் பிடித்துக் காட்டுகிறார். அந்தக் காட்சியைப் பார்க்குமுன் மற்றொரு சம்பவத்தை நாம் குறித்துக் கொள்ளுதல் வேண்டும். இடையன் பல ஆடுகளை வைத்திருந்தான். அப்போது அபூபக்கர் (றலி) அவர்கள் இந்த ஆடுகள் உன்னுடையனவா? கூலிக்கு மேய்க்கப்படுவனவா? என்று கேட்டார்கள். அதற்கு அந்த இடையன் கூலிக்கு மேய்க்கப் படுவனவும் உண்டு. எனக்குச் சொந்தமான ஆடுகளும் உண்டு என விடையளித்தான். ‘அப்படியானால் உன்னுடைய ஆட்டிலிருந்து எங்களுக்குப் பால் கறந்து கொடு’ என்றார்கள். அபூபக்கர் சித்திக் (றலி) அவர்கள் அப்படிச் சொன்ன பிறகு அவன் ஓடிப்போய்ப் பால்

கறந்து கொண்டுவந்து கொடுத்தான். இந்த சம்பவத்தைக் குறிக்கும் செய்யுளிலேதான் இடையன் பால் கறக்கும் முறை படம் பிடித்துக் காட்டப்படுகின்றது.

கூலி யின்கொறி விடுத்துநின் கொறியினைக் குறுகிப்
பாலி னைக்கறந்து இவண்தருக எனப்பணிந்து ஓடிக்
காலி னைத்தகைத்து உறுங்கடை காலினில் கறந்து
சீல முற்றவர் இடத்தினில் கொடுத்தனன் திறலோன் (50 : 16)

இந்தப் பாடலில் அந்த இடையன் தனக்குச் சொந்தமான ஆட்டைப் பிடித்து அதனை அணுகி அதன் பக்கத்தில் குந்தி இருந்தான். தனது கால்களைச் சேர்த்துக் கடைகால் என்னும் பாத்திரத்தை வைத்து நெருக்கிப் பாலைக் கறந்தான். மேலே குறிப்பிட்ட பாடலின்

காலினைத் தகைத்து உறுங்கடை காலினில் கறந்து

என அமைந்துள்ள மூன்றாம் அடியில் இடையன் பால் கறக்கும் காட்சியைப் புலவர் சொல்லோவியம் ஒன்றாக நமக்குக் காட்டுவது நயக்கத்தக்கதல்லவா? உம்மி மகுபதுப் படத்திலும் (15) கடை கால் என்னும் சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

இடையன் வரும்பொழுது பெரும்பாலும் முல்லை நிலக்காட்சியே நமது மணக்கண் முன் தோன்றுகிறது. ஒரு காலத்தில் குறிஞ்சி, முல்லை நிலங்களாய் இருந்த பகுதியே பாலை ஆகிறது என்பர். அதே போன்று பாலை நிலமாக இருந்த பகுதி பின்னர் முல்லையாக அல்லது குறிஞ்சியாக மாறுவதும் உண்டு என்பர். குறிஞ்சி நிலத்திலும் முல்லை நிலத்திலும் தான் பாலை நிலம் ஏற்படுகின்றது என்பர் ஆன்றோர். இக்கூற்றுக்கு ஆதாரமாக உள்ளது சிலப்பதிகாரம்

முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
நல்லியல்பு அழிந்து நடுங்கு துயர்உறுத்துப்
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்
(காடு காண்காதை: 64-66)

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்குமே விதந்தோதப் பட்டுள்ளன. இதனாலேயே உலகம் நானிலம் - நான்கு வகையான நிலம் எனப்பொருள்பட அழைக்கப்படுகின்றது. தொல்காப்பியரும்,

அவற்றுள்

நடுவண் ஐந்திணை நடுவணது ஒழிய
படுதிரை வையம் பாத்திய பண்பே (2)

என்றார். இங்கே பாலை நிலம் தவிர்த்த ஏனைய நிலங்கள் என் கிறார். குறிஞ்சியும் முல்லையுமே பாலையாக மாறுகிறது என்று கொள்ளலாம்.

இவ்வாறு சிந்திக்கத் தலைப்பட்டதினாலோ என்னவோ உமறுப் புலவர் அறபு நாட்டிலே முல்லை நிலத்தைக் கொலுவீற்றிருக்கச் செய்கிறார். கடுமையான வெய்யிலை அனுபவித்த எம்பெருமானார் (சல்) அவர்களும் தோழர் அபூபக்கர் (றலி) அவர்களும் பின்னர் குளிர்ச்சி உடைய பகுதியை அடைந்தனர். குற்றமற்ற வெள்ளை அலைகளை உடையது கடல் நீர். அந்தக் கடல் நீரை உண்டது மேகம். அவ்வாறெழுந்த கார்மேகம் பெருமானாருக்குக் குடையாக அமைந்து நிழலை வழங்கிற்று. குறைவில்லாத உயர்ந்த மரங்கள் தளிர்த்தன. பூக்கள் மலர்ந்தன. தேனைச் சிந்தின. எல்லா இடங் களிலும் பறவைகள் பாடின. அவை நபிகள் பெருமானாரின் புகழைப் பாடின. இந்தச் சூழலில் பெருமானார் அவர்கள் ஒட்டகத்தின்மீது அமர்ந்து நல்லொழுங்காகச் சென்றார்கள். இக்காட்சியையே உமறுப் புலவர் இவ்வாறு பாடுகிறார்.

கறையில் வெண்டிரை உண்டவன் கவிகைமுன் நிழற்றக்
குறையு நீள்தருத் தளிர்த்துஅலர் நறவுகொப் பளிப்பப்
பறவை எங்கணும் செழும்புகழ் பாடஒட் டகத்தின்
முறையின் ஏகினர் இறைஅருள் நிறைமுகம் மதுவே
(உம்மி மகுபதுப் படலம் : 2)

முல்லை நிலத்திற்குப் புகுமுன்னர் உள்ள தோற்றம் இது. இனி முல்லை நிலத்தையே நமக்குப் படம்பிடித்துக் காட்டுகிறார் உமறுப் புலவர். அங்கே நீண்ட காட்டாறுகள் இருந்தன. அந்தக் காட்டாறு களின் கரைகளிலே வெண்ணிறமான வண்டல்கள் கொழித்திருந்தன. அங்குள்ள குறுஞ்சுனைகளிலே அலை அடித்துக் கொண்டிருந்தன. முல்லைக் கொடிகளாலான பந்தர்கள் இருந்தன. அவை மணம் கமழுவனவாய் அமைந்திருந்தன. கொன்றை மரங்கள் அங்கு இருந்தன. அந்தக் கொன்றை மரங்களிலே உள்ள பூக்களிலிருந்து தேன் வடிந்து கொண்டிருந்தது. பூக்களோ, விளைந்து திரண் டிருந்தன. இந்தக் காட்சியே இப்பாடலில் தரப்படுகிறது.

கரைகொ ழித்தவெண் வண்டலும் நெடிய கான்யாறும்
திரைஅ லம்பிய குறுஞ்சுனை இடங்களும் செறிந்து
விரைகொள் முல்லைஅம் பந்தரும் விளைநறா உடைந்து
சொரியும் கொன்றையும் தோன்றிடச் சென்றனர் தூயோர்
(உம்மி மகுபதுப் படலம் : 3)

இருவரும் தொடர்ந்து பயணத்தில் ஈடுபட்டனர். அவர்களுடைய காது, கண், மூக்கு முறையே கேள்வி, பார்வை. நுகர்வு பெற்றன. காதுக்கு இனிமை பயந்தது புல்லாங்குழல் இசை. அங்குள்ள இடையர் வாலிபர்கள் மூங்கிலாலான புல்லாங்குழலை வாய்களிலே வைத்து ஊதினர். இன்னிசை எழுப்பினர். இந்த இன்னிசை அவர்

களின் இரண்டு காதுகளையும் குளிரச் செய்தது. மறுபுறம் மற்றொரு காட்சி. சேவலினங்கள் சண்டையிடும் காட்சி. சிறிதளவேனும் அச்சமில்லாது சண்டை இட்ட அச் சேவல்கள் தணியாத வெப்பந்தங்கிய கோபத்தோடு சண்டை இட்டுக் கொண்டிருந்தன. இந்தக் காட்சியைக் கண்டு அவர்களின் கண்கள் களிப்படைந்தன. இன்னொரு பக்கத்தில் தயிர் கடையப்பட்டது. மத்திட்டுத் தயிரைக் கடைந்து கொண்டிருந்தனர். இவ்வாறு கடையப்பட்ட வெள்ளைநிறத் தயிரிலிருந்து உண்டானது நறுமணம். அந்த நறுமணம் அவர்களின் நாசியைத் துளைத்தது. இவ்வாறு கேட்டல், பார்த்தல், நுகர்தல், ஆகிய மூன்று உணர்வுகளையும் முல்லை நிலத்தில் புகுந்தவுடன் அவர்கள் பெற்று மகிழ்ந்தனர். இந்தக் காட்சியை எடுத்துக் காட்டவே உமறுப்புலவர் இவ்வாறு பாடுகிறார்.

வேஇ சைத்தொனி இருசெவி குளிர்தர வெருவாக்
காயும் வெஞ்சின வாரணம் பொருவகண் களிப்பத்
தோயும் வெண்தயிர் நறுநறை நாசிகள் துளைப்பப்
பாய ரிக்குலம் எனநெறி குறுகிடப் படர்ந்தார்
(உம்மி மகுபதுப் படலம் : 4)

பாய்ந்து செல்கின்ற சிங்கங்கள் செல்வது போன்று சென்றார்கள். செல்லும்பொழுது வழி குறுகிக்கொண்டே வந்தது. தாங்கள் வந்து அடைய வேண்டிய இடம் நெருங்கிக் கொண்டு வந்தது என்பதையே கடைசி அடி குறிப்பிடுகிறது.

முல்லை நிலத்தின் ஏனைய வளங்களையும் விவரிக்க முற்படுகிறார் உமறுப்புலவர். சாமையின் அமோக விளைச்சல் கிடைக்கப் பெற்றுள்ளது. அதன் போர்க் குவியல்களை எங்கு பார்த்தாலும் காணலாம். அங்கெல்லாம் அக்குவியல்கள் பெரிய மலைபோல் காட்சி அளித்தன. முல்லை நிலத்துக்கே உரிய பறையின் முழக்கம் எல்லாப் பக்கங்களிலும் ஒலித்துக் கொண்டிருந்தது. அந்தப் பறை ஒலி முழக்கம் கடலில் அலை அடிப்பதனுல் ஏற்படும் சப்தத்தைவிட அதிகமாகக் கேட்கப்பட்டது. முல்லை நிலத்தில் பாலுக்குக் குறைவில்லை. எல்லா இடங்களிலும் பால் கிடைக்கக் கூடியதாக இருந்தது. அதனை எங்கும் மக்கள் அடுப்பில் வைத்துக் காய்ச்சிக் கொண்டிருந்தனர். அவ்வாறு காய்ச்சுதலினால் ஏற்பட்ட புகை மேலெழும்பியது. அது விசாலமான மேகம் போன்று காட்சி அளித்தது பசுக்கன்றுகளும் ஆட்டுக் குட்டிகளும் தம்தம் வாய் திறந்து சப்தித்துக் கொண்டிருந்தன. அந்தச் சத்தம் ஓயாது முழங்கிக் கொண்டிருந்தது. இத்தகைய சிறப்பியல்புகள் மிக்க இடையர் குடியிருப்பு இருந்தது. அது பாடி என்னும் சிற்றூராக இருந்தது. நபிகள் பெருமானார் (சல்) அவர்களும் அபூபக்கர் (றலி) அவர்களும் அந்தப் பாடியை அடைந்தார்கள். இச்செய்தியையே உமறுப்புலவர் இவ்வாறு பாடுகிறார்.

நிறையும் சாமையின் போர்க்குவை வரைகளை நிகர்ப்ப
அறையு முல்லைஅம் பறைகட லமலையை அவிப்பக்
குறைவில் பாலடு புகைஇரு விசும்புஎனக் குலவப்
பறழின் வாய்த்தொனி இடையறாது இருந்ததோர் பாடி
(உம்மி மகுபதுப் படலம் : 5)

அணி நலன் :

அடுத்து இங்குள்ள அணி நயத்தைப் பற்றிப் பார்ப்போம். பெயரும் பொருளும், பெயராத பொருளும் என இரு பொருட் கண்ணும் இயல்பாக நிகழும் தன்மை ஒழியக் கவி தான் கருதிய வேறொன்றினை ஏற்றிச் சொல்வது தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரமாம் என்று தற்குறிப்பேற்ற அணிக்கு வரைவிலக்கணம் வகுக்கிறது தண்டியலங்காரம்.

பூமியின் எல்லாப் பகுதிகளிலும் இருள் நீங்கியது. சிவந்த கிரணங்கள் எங்கும் பரவியதே இருள் நீங்கக் காரணமாய் அமைந்தது. வாவியிலே இருந்த தாமரை மலர்கள் விரியத் தலைப்பட்டன. விளங்கத் தொடங்கின. எல்லா இடங்களிலும் சேவல் கூட்டங்கள் இரைந்து கூவின. இது இயற்கை வருணனை. விடியற்காலையின் வருணனை. இரவிலே ஊராரை ஏமாற்றித் திரிந்த இபுலீசு அவனது முயற்சிகளைக் கைவிட வேண்டிய நேரம் அது. இரவில் காட்டும் அவனது வித்தைகள் விடிந்தால் பலிக்காது என்று இயற்கையாக விடியும் நேரத்தில் மாய வஞ்சகனான இபுலீசின் சத்தம் ஓய்ந்தது. அவனது வாய் அடைத்துவிட்டது. இக்கருத்துக்களையே உமறுப் புலவரின் இப்பாடல் அதனிடத்தே கொண்டுள்ளது.

தேயம் எங்கணும் இருள்கெடச் செழுங்கதிர் குலவ
மேய வாவியின் வனசங்கள் விரிதர விளங்க
மாய வஞ்சகன் கூக்குரன் மறுத்துவா யடைப்பக்
கூய வெத்திசை தொறும்தொறும் சேவலின் குலங்கள்
(யாத்திரைப் படலம் : 6)

இங்கே இயற்கையாக சேவல் கூட்டம் இரைந்து கூவத் தலைப் பட்டதும் இப்லீசின் வாய் அடங்கியது என்பதையே ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார்.

மக்கமாநகரம் சோலைகளால் சூழப்பெற்றது. அந்தச் சோலை களிலே பூக்கள் மிகுதியாக இருந்தன. அந்தப் பூக்களிலிருந்து தேன் வழிந்து ஒழுகிக் கொண்டிருந்தன. அத்தோடு அங்கு எப்போதும் கொடை கொடுத்தல் நீங்காது இருந்தது. அத்தகைய நகரத்தை விட்டு நீங்கிக் கொண்டிருந்தார்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள்,

அப்போது சூரியன் உதித்தான். இங்கே புலவர் சூரியன் உதித்தமைக்கு ஒரு காரணம் கற்பிக்கிறார். இயற்கையாக உதிக்கும் சூரியனுக்கு அவர் அன்று உதித்தமைக்கு ஒரு காரணம் கூறுகிறார். இதனாலேயே இங்கு தற்குறிப்பேற்ற அணி இடம் பெற்றுள்ளது என்று கூறுவர். அன்று சூரியன் எப்படி உதித்தான்? நீண்ட கதிர்களை உடைய சூரியன் எட்டிப் பார்ப்பதுபோல் எழுந்தான். அஞ்சிப் பயந்த நெஞ்சத்தோடு எட்டிப் பார்த்தான். ஏன் சூரியன் எட்டிப் பார்க்கவேண்டும்? எம்பெருமானார் நபிகள் நாயம் (சல்) அவர்கள் மக்கமாநகரைவிட்டுப் புறப்பட்டு விட்டார்கள். கொடூரமான வெப்பந் தாங்கிய காட்டுக்கு வந்து விட்டார்கள். அண்ணல் (சல்) அவர்கள் ஏன் மக்கமாநகரைவிட்டுப் போகிறார்கள் என்பதனை நாம் அறிய முற்படாவிட்டால் நமக்கு ஏதாவது குற்றம் வந்து விடுமோ என்று அஞ்சிப் பயந்து எட்டிப் பார்ப்பதுபோல் அன்று சூரியன் உதித்தான். இனி இந்த தற்குறிப்பேற்ற அணி அமைந்த செய்யுளைப் பார்ப்போம்.

மட்டு வார்பொழில் சூழ்தரு மக்கமா நகரம்
விட்டு நந்நபி கொடியவெங் கானிடை விளங்கப்
பட்ட காரணம் எவைகொல் என்று அஞ்சிஉட் பயத்தோடு
எட்டிப் பார்ப்பபோல் எழுந்தனன் நெடுங்கதிர் இரவி
(சுறாக்கத்துத் தொடர்ந்த படலம் : 10)

இத்தகைய செய்யுட்கள் பல சீறாப்புராணத்தில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

**வரலாற்றுச் செய்திகள் :**

அண்ணல் நபி (சல்) அவர்களின் வாழ்க்கை பற்றிய குறிப்புக்கள் உண்மையிலேயே வரலாற்றுக் குறிப்புக்களாகும். அவை சீறாப் புராணத்தில் இடம் பெற்றுள்ள முறைமையினைப் பார்ப்போம். உமறுப்புலவர் தமது சீறாபுராணத்தில் நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் பிறந்த ஆண்டைக் குறிப்பிடுகிறார். அண்ணல் நபி (சல்) அவர்கள் கி,பி. 570-இல் பிறந்தார்கள் என்பது பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மையாகும், ஆனால் சீறாப்புராணத்தில் இந்தக் கிறித்தவ ஆண்டு குறிப்பிடப்படவில்லை. உமறுப்புலவர் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பிறந்த ஆண்டை வேறுவிதமாகக் குறிப்பிடுகின்றார். இவ்வரலாற்றுக் குறிப்பை அமைத்துப் பாடியுள்ள செய்யுளை முதலில் எடுத்துக் கொள்வோம்.

''வீசு தெண்டிரைக் கடன்மலை யடங்கவெண் குடைக்கீ
ழாசி லாதசிங் காசனத் திருந்தசிக் கந்தர்
காசி னிக்கர சியற்றுதுல் கருணையின் கால
மாசி லாக்கணக் கெட்டுநூற் றெண்பத்தோர் வருடம்''
(நபியவதாரப் படலம் : 14)

இங்கே சிக்கந்தர் என்னும் துல்கருனைனின் ஆட்சி குறிப்பிடப் படுகிறது. சிக்கந்தர் என்னும் துல்கருனைன் எனப்பட்டவர் மகா அலெக்சாந்தர் என்பவரே என்பது பெரும்பாலானோரின் கருத்தாகும். மகா அலெக்சாந்தர் கி.மு. 356-லிருந்து 323 வரை வாழ்ந்தவர். பல நாடுகளை வெற்றி கொண்டவர். ஐரோப்பா, ஆசியா, ஆஃப்ரிக்கா ஆகிய மூன்று கண்டங்களினதும் வரலாற்றையே மாற்றியமைத்தவர் எனப் பாராட்டப்படுபவர். அவர் 33 ஆண்டுகளே உலகில் வாழ்ந்தார் எனினும் அவருடைய செல்வாக்குப் பல நூற்றாண்டுகளுக்கு உலகில் நிலவியது. 'தமது வெள்ளிய குடையின் கீழ் தெள்ளிய அலைகளை எறியா நிற்கும் கடல்களும் மலைகளும் அடங்கும்படி, குற்றமேதும் இல்லாத சிங்காசனத்தில் வீற்றிருந்த சிக்கந்தர் என்னும் இயற்பெயரையும் துல்கருனைன் என்னும் காரணப் பெயரையும் கொண்ட பேரரசர் அரசு செய்யும் காலத்தினின்று மறுவற்ற கணக்கிலே எண்ணூற் றெண்பத்தோர் வருடத்தில்' அண்ணல் நபி (சல்) அவர்கள் பிறந்தார்கள் எனக் குறிப்பிடுகிறார் உமறுப் புலவர். மகா அலெக்சாந்தரின் ஆட்சியிலிருந்து 881 வருடங்களுக்குப் பின்னரே நபிகள் பெருமானார் பிறந்தார்கள் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது, கிறித்தவ ஆண்டோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது 881-லிருந்து நபிகள் பெருமானார் பிறந்த கி.பி. 570-ஐக் கழித்தால் 311 என வருகிறது எனவே இது கி.மு. 311 ஆகும். கிறித்தவக் கணிப்பின்படி ஓர் ஆண்டில் உள்ள நாட்களுக்கும் மகா அலெக்சாந்தரின் ஆட்சியினை அடிப்படையாக வைத்துக் கணிக்கப்படும் ஆண்டில் உள்ள நாட்களுக்கும் வித்தியாசம் இருத்தல் வேண்டும். இவ்வாறு முன்னைய ஆண்டைவிட பின்னைய ஆண்டில் ஏறக்குறைய 15 நாட்கள் குறைவாகவே இருத்தல்வேண்டும். இவ்வாறு பார்க்கும் பொழுது மகா அலெக்சாந்தரின் ஆட்சி முடிவுற்ற கி.மு. 323-லிருந்தே இக்கால எல்லை கணிக்கப்பட்டிருத்தல் வேண்டும். செய்யித் அமீர் அலி அவர்கள் தமது (Spirit of Islam) என்னும் நூலின் (8-ஆம் பக்கத்தில் உள்ள) அடிக்குறிப்பொன்றில் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் பிறந்த ஆண்டு கிஸ்றா அனுசர்வான் ஆட்சியில் 40-ஆம் ஆண்டின் இறுதிப்பகுதி' என்னும் 'செலுக்கஸ் ஆட்சியின் 880-ஆம் ஆண்டின் இறுதிப்பகுதி' என்றும் குறிப்பிட்டுள்ளமை கண்டு நோக்கற்பாலது.

இந்த ஆண்டு 'ஆமுல் பீல்' என்றும் வழங்கப்படுகிறது. இதன் கருத்து யானை வருடம் என்பதாகும். அப்றஹா என்ற யெமன் நாட்டு அபிஸீனிய ஆளுநர் கஃபத்துல்லாவை அழிக்கும் நோக்கத்துடன் யானைகளுடன் வந்து அழிந்துபோன சம்பவத்தைக் குறிக்கும் முகமாகவும் முதன் முதலில் மக்காவில் யானைகள் காணப்பட்டமை

யாலும் அந்த ஆண்டு யானை வருடம் என வழங்கலாயிற்று. இந்த யானை வருடத்திலேதான் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் பிறந்தார்கள் என்று சீறாப்புராணத்தில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

''கரைத்த மின்றெளித் தெழுத்தெனச் சிறக்குமக் காவி
னிரைத்த கார்க்குலந் திரண்டெனக் களிறுக ணெருங்கி
யிரைத்த டர்ந்துமும் மதங்களை வாரிநின் றிறைத்து
வரைக்கு லங்கள்போல் வந்ததற் கொருமுதல் வருடம்''
(நபியவதாரப் படலம் : 15)

நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் கி.பி. 570-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 28-ந்தேதி அன்று பிறந்தார்கள் என்று பெரும்பான்மையான வரலாற்று ஆசிரியர்கள் ஒப்புவர். அண்ணல் நபி (சல்) அவர்களின் பிறப்பு அப்றஹா மக்காவை ஆக்கிரமித்த அதே நாளிலே நிகழ்ந்தது என்று சிலர் கூறுவர். இது நிகழ்ந்தது அப்றஹா மக்காவை ஆக்கிரமித்து பன்னிரண்டு நாட்களிலென்றும், நாற்பது நாட்களிலென்றும், ஐம்பது நாட்களிலென்றும் பலரும் பலவாறாகக் கூறுவர். எனினும் உமறுப்புலவர் அண்ணல் நபி (சல்) அவர்களின் பிறப்பு 'யானைக் கலகந் தீர்த்த பின்னர் ஐம்பதாவது நாளில் அழகிய சந்திர மாதமாகிய 'றபீஉல் அவ்வல்' பிறை 12 திங்களிரவில் நிகழ்ந்தது' என்று இவ்வாறு வருணிக்கிறார்.

''செம்மையங் கோட்டுக் கடகரிக் கலகந்
தீர்ந்தபி னைம்பதா நாளி
லம்மதி மாசத் தொகையினில் றபீயு
லவ்வலிற் பனிரண்டாந் தேதி
யெம்மனைக் கும்பே றெனவரும் பொருளா
யிசைத்திடுந் திங்களி ராவின்
மும்மையென் றுரைக்கும் புவனமும் புரக்க
முகம்மது நபிபிறந் தனரே''
(நபியவதாரப் படலம் : 89)

இப்பொழுது நவீன கட்டடம் ஒன்று நூல் நிலையமாகக் காட்சியளிக்கும் 'மௌலிதுன் நபி' என்னும் இடத்திலே தான் நபிகள் பெருமானார் பிறந்தார்கள் என்று கூறப்படுகிறது. 'ஸக்கத்துல் மௌலிது' என அப்பொழுது அந்த இடம் அழைக்கப்பட்டது இந்த இடத்தில் இருந்த இல்லம் அபீதாலிப் அவர்களுக்குச் சொந்தமாயிருந்தது என்றும் நபிகள் பெருமானார் ஹிஜ்றத்துச் சென்ற பின்னர் அபீதாலிப் அவர்களின் புதல்வர்களுள் ஒருவரான அகீல் அவர்கள் அதன் உரிமையாளராக இருந்தார் என்றும் கூறப்படுகிறது. சீறாப்புராணத்திலும் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் அபீதாலிப் அவர்களின் இல்லத்திலே பிறந்தார்கள் என்றும் அவரது இல்லம் ஜெமுறத்துலுஸ்தா என்னும்

இடத்தின் நடுவே அமைந்திருந்தது என்றும் அந்த இடம் மக்கமா நகரில் உள்ள புனித கஃபத்துல்லாஹ்வின் வடகிழக்குத் திசையில் இருந்தது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. (நபியவதாரப் படலம்; 90)

அண்ணல் முகம்மது (சல்) அவர்கள் பிறக்குமுன்னரே தந்தையை இழந்த பெருமானார் அவர்கள் தங்களது ஆறாவது வயதில் அப்பொழுது இருபது வயதை அடைந்திருந்த தாயார் ஆமினா அம்மையாரை இழந்துவிட்டார்கள். ஆமினா அம்மையார் உயிர் நீக்கும் பொழுது பெருமானார் அவர்களுக்கு ஆறு வருடமும் ஒரு மாதமும் நிரம்பி இருந்தன. இதனையே சீறாப்புராணம் இவ்வாறு விவரிக்கிறது.

அரசர்நா யகநபிக் காண்டோ ராறுடன்
ஒருதிருத் திங்களு நிறைந்த தோதிய
வரிதினில் கணக்கிலக் காக வாண்டுமோ
ரிருபஃ தாமினா விறந்த காலமே.

(புனல் விளையாட்டுப் படலம் : 37)

மதினாவிலிருந்து தமது புதல்வருடன் மக்காவுக்கு வரும் வழியிலே ஆமினா அம்மையார் அபுவா என்னும் இடத்தில் காலமானார்கள். புதல்வர் முகம்மது (சல்) அவர்கள் பாட்டனாராகிய அப்துல் முத்தலிப் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டார்கள். நபிகள் பெருமானாருக்கு எட்டு வயதும் நான்கு மாதங்களுமாயிருந்த காலத்தில் அபிசீனியாவிற்கும் அறபு மக்களுக்கும் ஏற்பட்ட சண்டையில் அறபிகள் வெற்றி பெற்றனர். இதுவும் நபிகள் நாயகத்தின் பொருட்டாலேயே என்று அப்பொழுது கருதப்பட்டது. அப்பொழுது பெருமானாரின் ஒரே பாதுகாவலராக இருந்த அப்துல் முத்தலிப் அவர்களும் மேலுலகம் அடைந்தார்கள். இதனையே சீறாப்புராணம் இவ்வாறு குறிப்பிடுகிறது.

நபிதிரு வயதிரு நான்குந் திங்களும்
கவினுற விரண்டுசென் றதற்பின் காணுநாட்
புவியினில் பத்துறப் பொருந்தும் போதினில்
அபுதுல்முத் தலிபுமே லுலக டைந்தனர்

(புனல் விளையாட்டுப் படலம் : 53)

பின்னர் முகம்மது நபி (சல்) அவர்களின் பாதுகாவலராக அவர்களுடைய பெரிய தகப்பனார் அபீத்தாலிப் அவர்கள் அமைந்தார்கள். இதுவும் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது :

அம்மொழி கேட்டபித் தாலி பாகிய
மும்மதக் கரியுயிர் முகம்ம துக்கினி
எம்மனை யலதுவே றிடமுண் டோவெனச்
செம்மலர்க் கரத்தெடுத் தணைத்துச் சென்றனர்.

(புனல் விளையாட்டுப் படலம் : 57)

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் ஒன்பதாவது வயதில் பெரிய தகப்பனார் அப்துல் முத்தலிபு அவர்களுடன் சிரியா நாட்டுக்கு அவர்களும் இன்னும் பலரும் அவர்களுடன் சென்றார்கள். அவர்களுடைய பிரயாணத்தின்போது முகம்மது நபி அவர்களின் தோற்றம் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

காறு நீங்கியே முகம்மது வருவது கண்டு
மாறி லாதசந் தோடமும் ஒன்பதாம் வயதில்
தேறி லாமனச் சிறுவனென் றெண்ணிய திடுக்கும்
ஊறு துன்பமு மின்பமு முடன்வர நடந்தார்.

(புகைறா கண்ட படலம் : 12)

அவர்கள் தமது பிரயாணத்தின்போது புகைறா என்னும் பண்டிதரைச் சந்தித்தார்கள். அவர் தம் ஆலோசனைப்படி முகம்மது நபி (சல்) அவர்களை மக்காவுக்கு அனுப்பிவிட்டார்கள். அபீத்தாலிப் அவர்கள் இவ்வாறு செய்வதற்கு இணங்கியமையைக்கண்ட அப்பண்டிதர் மன மகிழ்ந்தார் என சீறாப்புராணம் இவ்வாறு கூறுகிறது.

நன்ன யம்பெறு முகம்மதை மக்கமா நகரிற்
கின்ன ணம்விடுத் துதுமென எழிலபித் தாலிப்
சொன்ன போழ்தினில் பண்டிதன் முகம்மதி துலங்கி
யன்ன தேகருத் தாமெனக் களித்தக மகிழ்ந்தான்

(புகைறா கண்ட படலம் : 44)

நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் தங்களது இளம்பிராயத்திலே சிரியாவிலிருந்து திரும்பி வரும்பொழுது ஊர் கொல்லனின் உலைக் கூடத்தில் தங்கினார்கள். முகம்மது நபி சல்) அவர்களிடம் அவர்கள் தம் தலைமுறைப்பெயர், ஊர்ப்பெயர் முதலியவற்றை அக்கொல்லன் கேட்டான். அவர்களும் உரிய பதிலை அளித்தார்கள். அந்தப் பதிலில் நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் ஊர்ப்பெயரும் மூதாதையரின் பெயர்களும் இடம் பெற்றிருந்தன. கிலாப் என்பவர் மூதாதையர் என்றும் அவருடைய புதல்வன் குசை என்பவர் என்றும் அவருடைய வழித்தோன்றல் அப்துல் முனாப் என்றும் அவருடைய புதல்வர் ஹாசீம் என்றும் அவருடைய புதல்வர் அப்துல் முத்தலிபு என்றும் அவருடைய புதல்வர் அப்துல்லா என்றும் அப்துல்லாவின் புதல்வர் தாம் என்றும் தங்களது பெயர் முகம்மது என்றும், நபிகள் நாயகம் (சல்) அவர்கள் கூறினார்கள். இக்கூற்றினையே உமறுப் புலவர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

''மக்க மூர்கிலா பருள்குசை யப்துல் முனாபுக்
கக்க மானஹா சீமுத லப்துல்முத் தலிபு
தக்க மன்னவர் மைந்தரி லப்துல்லா தவத்தான்
மிக்க னென்பெயர் முகம்மது வெனவிளம் பினரே.''

(ஊசாவைக்கண்ட படலம் : 8)

பின்னர் ஊசா என்னும் முதிய அறிஞருக்குத் தங்களைப்பற்றிக் கூறு கையில் தங்களின் கிளை அதுனான் கிளை என்றும் தங்களின் குலம் ஹாசீம் குலம் என்றும் தங்கள் பிதிராம் நிலை - தந்தையாகிய நிலை யில் - இருந்த அபுத்தாலிப் அவர்களின் இளைய சகோதரன் அப்துல் லாவின் புதல்வர் தாம் என்றும் கூறினார்கள். இக்கருத்துக்களே சீறாப்புராணத்தில் இவ்வாறு அமைந்துள்ளது :

''அதுனான்கிளை ஹாசீம்குல மமரும்பதி மக்கம்
பிதிராநிலை யபித்தாலிபு பின்னோர புதுல்லா
சுதனாமுகம் மதுநானெனச் சொன்னார்,''

(ஊசாவைக்கண்ட படலம் : 19)

பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்களுக்கு பதினான்கு வயது நிகழ்ந்து கொண்டிருந்தது. அப்பொழுது கைசு என்னும் கூட்டத்தார் படை எடுத்து மக்காவைத் தாக்க வந்தனர். இதனைக்கண்ட மக்கா நகர மக்கள் எல்லோரும் ஓரிடம் சேர்ந்தனர். சிந்தை நொந்தனர். அங்கும் இங்கும் ஒதுங்கலாயினர் ; திகைத்துப் போயினர் ; கலக்க முற்றனர், இந்த நிலையை எண்ணுற்ற சிலர் கைசுக் கூட்டத்தா ருடன் போர் புரிய வந்தனர். தமது படையுடன்

சந்த மான்மதங் கமழ்புய வப்துல்லா தவத்தால்
வந்த பேரொளி வெற்றிவெம் புலி முகம் மதுவை

(புகைறா கண்ட படலம் : 54)

அழைத்துச் சென்றால் இப்போரில் வெற்றி அடையலாம் என்று அனைவரும் ஒருமனப்பட்டனர். முகம்மது நபி அவர்களும் இதற்கு இணங்கினார்கள். கைசுப்படையினரை எதிர்த்துக் குறைஷிப் படை யுடன் முன் சென்றார்கள், இதன் பயனாக கைசு என்னும் படையினர் தோற்றனர் ; மண்ணைக் கவ்வினர். இது குறைஷி மக்கள் கைசுக் கூட்டத்தினருக்கு எதிராக ஈட்டிய பெரு வெற்றியாகக் கணிக்கப் பட்டது. முகம்மது நபி (சல்) அவர்கள் பங்கு பற்றியதனாலேயே இந்த வெற்றி தமக்கும் கிட்டியது எனக் குறைஷியர் பெருமிதம் அடைந்தனர். இதற்கு முன்னர் குறைஷியர் தாம் பங்கு பற்றிய எந்தப் போரிலும் தோல்வி அடைந்தனரே ஒழிய வெற்றி கொள்ள வில்லை எனக் கூறப்பட்டுள்ளது அவ்வாறு வெற்றி ஈட்டிய ஒரு சந்தர்ப்பம் தமக்குத் தெரியாது என்று கூறலாயினர். இக்கருத்துக் களே சீறாப்புராணத்தில் இவ்வாறு கூறப்பட்டுள்ளன.

பண்டு நாட்டொடுத் திற்றைநாள் வரைக்குமப் படையைக்
கண்டு நாமுறிந் தனமலால் வெற்றிகண் டறியோம்
வண்டு வாழ்மலர்த் தொடைப்புய முகம்மது வரலால்
கொண்ட வெற்றிபோல் வெற்றிவே றிலையெனக் குறித்தார்.

(புகைறா கண்ட படலம் : 58)

இந்நிகழ்ச்சியின் பின்னர் சீறாப்புராணம் பெருமானார் (சல்) அவர்கள் இருபத்தைந்தாம் வயதை எய்திவிட்டார்கள் என்று மாத்திரமே குறிப்பிடுகின்றது.

முருகவி ழலங்கற் றிண்டோண் முகம்மது தமக்குச் சார்ந்த
திருவய திருபத் தைந்து நிறைந்தன சிறக்க வன்றே
(பாதை போந்த படலம் : 1)

அண்ணல் நபி (சல்) அவர்கள் கதீஜா (றலி) அவர்களைத் திருமணம் புரிந்த நிகழ்ச்சி வருணிக்கப்படுகின்றது. இங்கே அண்ணல் நபி (சல்) அவர்கள் திருமணம் புரியும்போது அவர்களுடைய வயது குறிப்பிடப்படுகிறது. அப்பொழுது அவர்களுக்கு இருபத்தைந்து ஆண்டுகளும் இரண்டு மாதமும் இரண்டு நாட்களும் ஆகியிருந்தன என்று குறிப்பிடப்படுகின்றது, அச்செய்யுள் வருமாறு :

''திண்டிறற் புவியின் முகம்மது தமக்குத்
திருவய திருபத்தைந் தினின்மேற்
கண்டதிங் களுமோ ரிரண்டுநா ளிரண்டிற்
கனகநாட் டவர்கள்கண் களிப்ப
வெண்டிசை முழுதுந் திருப்பெயர் விளங்க
விருநில மணிக்கதீ ஜாவை
வண்டுறை மரவச் செழுந்தொடை புனைந்து
வரிசைமா மணம்பொருந் தினரே.''
(மணம்புரி படலம் : 117)

அண்ணல் நபி (சல்) அவர்களுக்கும் கதீஜா நாயகி அவர்களுக்கும் பிறந்த பிள்ளைகள் கஃபத்துல்லா வரலாற்றுப் படலத்தில் உள்ள முதல் மூன்று செய்யுட்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளனர். ஸயினப் அம்மையாரைப் பெற்றெடுத்தமை 'பெருகுமிள மயில் கதீஜா ஸயின பெனும் பசுங்கிளியைப் பெற்றா ரன்றே' என முதலாவது செய்யுளிலும் அடுத்து றுக்கையா அம்மையாரையும் உம்மு குல்தூம் அம்மையாரை யும் பெற்றெடுத்தமை பற்றி, 'குயின்மொழி றுக்கையாவை யீன்றும் முக் குல்தூமை யீன்று' என்று இரண்டாம் செய்யுளின் முதற்பகுதி யிலும் அவர்களின் ஆண் பிள்ளைகளான காசீம், தையிப், தாகிர் என்பவர்களைப் பெற்றெடுத்தமை பற்றி,

''செயிரறநா லாவதிலாண் பிள்ளைகா சீமெனவோர் செம்மலீன்று
நயமுறப்பின் தையிபெனுஞ் சேயீன்று தாகிறையு நல்கினாரே''

என்று இரண்டாம் செய்யுளின் பிற்பகுதியிலும் விவரித்த உமறுப்புலவர் பாத்திமா நாயகி பிறக்கும்பொழுது அண்ணல் நபி (சல்) அவர்களின் வயது முப்பத்தைந்து என்றும் இப்பூவுலகத்திலுள்ள பெண்களுக்கும் சுவர்க்கலோகத்தில் உள்ள பெண்களுக்கும் எந்நாளும் அரசென்று விளங்க பாத்திமா நாயகி (றலி) அவர்கள் பிறந்தார்கள் என்றும்

கஃபத்துல்லா வரலாற்றுப் படலத்தில் உள்ள மூன்றாம் செய்யுளில் இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

''மன்றல்கமழ் முகம்மதர்க்கை யேழாண்டு
நிறைந்ததற்பின் மறுவிலாத
மின்றவழ்வ தெனவொளிருங் கதீஜாநா
யகியுதரம் விளங்கச் சோதி
துன்றுமணி யெனப்பூவின் மடந்தையர்க்குஞ்
சுவனபதித் தோகை மார்க்கு
மென்றுமர செனவிருப்பப் பாத்திமா
வெனுமயிலை யீன்றா ரன்றே.''

மக்கா மாநகரில் அமைந்துள்ள புனித கஃபத்துல்லா அமைக்கப் பெற்ற வரலாறு கஃபத்துல்லா வரலாற்றுப் படலத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. இப்படலத்தில் உள்ள 6-ஆம் 7-ஆம் செய்யுட்களில் ஆதிபிதா ஆதம் (அலை) அவர்கள் கட்டியமையையும் 8-ஆம் செய்யுளில் நூகு நபி (அலை) அவர்களின் காலத்தில் ஏற்பட்ட பிரளயத்தால் கஃபா இடிந்ததையும் 9-ஆம் செய்யுளில் நெடுநாட்களுக்குப் பின்னர் நூகு நபி (அலை) அவர்களின் பதினோராவது தலைமுறையில் வந்த இபுறாகீம் நபி (அலை) அவர்கள் புனரமைப்புச் செய்தமையையும் விவரிக்கப்படுகிறது. 10 முதல் 16 வரையுள்ள செய்யுட்களில் காலத்துக்குக் காலம் கஃபத்துல்லாவுக்கு ஏற்பட்ட இடைஞ்சல்களும் திருத்தங்களும் வருணிக்கப்படுகின்றன. பின்னர் குறைஷிகள் ஒன்று கூடி புனித கஃபாவில் பொருத்தப்பட்டிருக்கும் ஹஜறுல் அஸ்வத் என்னும் கல்லை யார் அந்த இடத்தில் வைக்கும் பாக்கியத்தைப் பெறுபவர் என ஆராய்ந்தபோது அங்கு கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அடுத்த இரண்டு செய்யுட்களிலும் இந்நிகழ்ச்சி விவரிக்கப்படுகிறது. அங்கு கூடியிருந்தவர்கள் ஒரு முடிவுக்கு வந்தனர். பனீ ஹாசீம் என்னும வமிசத்தைச் சேர்ந்தவர்களுள் கஃபத்துல்லாவுக்கு முதன் முதலில் வருபவர் எவரோ அவரே அந்த புனித கல்லை உரிய இடத்தில் வைப்பதற்கு அருகதை உள்ளவர் என்று அனைவரும் ஒப்பினர். இக்கருத்துக்களையே உமறுப்புலவர் இவ்வாறு வருணிக்கிறர் கஃபத்துல்லா வரலாற்றுப் படலத்தில் உள்ள 19 ஆம் செய்யுளில்,

''அன்ன காலையிற் செவ்விய நெறிபனீ ஹாசீ
மென்னும் வங்கிடத் தொருவரிப் பள்ளியி னிடத்து
முன்ன தாகவந் தவர்நிறு வுவரென முதலோன்
பன்னு மாமறை தெளிந்தவர் சிலர்பகர்ந் தனரே.''

அவ்வாறு முதன் முதலில் அங்கு வந்த முகம்மது நபி (ஸல்) அவர்கள் தங்களது திருமேனியிலிருந்த போர்வையை எடுத்து குறைஷிமக்களுள் நான்கு தலைவரைத் தெரிந்தெடுத்து போர்வையின் நான்கு புறங்

களையும் பிடிக்கச் செய்து அந்தப் போர்வையிலே ஹஜருல் அஸ்வத் என்னும் கல்லை வைத்து தங்கள் கைகளாலே தூக்கி அதனை உரிய இடத்தில் வைத்தார்கள். இதனால் மூள இருந்த ஒரு பெரும்போரும் தவிர்க்கப்பட்டது. பெருமானார் (சல்) அவர்கள் நடந்து கொண்ட விதத்தினையே உமறுப்புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்

''வெற்றி மன்னவர் தலைவரி னல்வரை விளித்துப்
பொற்ற டந்துகின் முந்தியினன் கினும் பொருந்த
விற்று றாவகை யெடுமென விவரொடு மெடுப்பக்
குற்ற மின்றிமுற் றலத்திடை யிருத்தினர் குறித்தே.

(கஃபத்துல்லா வரலாற்று படலம் : 23)

வரலாற்றுக் குறிப்புக்கள் நிறைந்த மற்றொரு படலம் நபிப் பட்டம் பெற்ற படலம். ஹிறா மலைக்குகையில் தியானத்தில் ஈடுபட்டிருந்த முகம்மது (சல்) அவர்களுக்கு அப்பொழுது முப்பத்தெட்டு வயதாக இருந்தது. இதனை அப்படலத்தின் இரண்டாம் பாடலில் 'ஆறாறிரண்டு' என ஆசிரியர் குறிப்பிடுகின்றார். அச்சமயத்தில் அவர்கள் கண்களுக்கு 'வெள்ளிடை யதனிற் சிறிதொளி திரண்டு விழித்திடும் விழிக்கெதிர் தோன்றும்' என அங்கும் இங்குமாக ஒளி தோன்றியது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு கூறிய உமறுப் புலவர் ஜிபுறீல் (அலை) அவர்கள் ஹிறா மலையை அடைந்த நிகழ்ச்சியை குறிப்பிட முற்படுகிறார், அப்பொழுது நபி பெருமானாருக்கு நாற்பது வயதாகும். அந்த ஆண்டு அல்லாஹ்வின் அருளால் ஆதிபிதா ஆதம் (அலை) அவர்கள் உலகில் தோன்றிய ஆறாயிரத்து ஒரு நூற்றி இருபத்து மூன்றாவது ஆண்டாகும் என்றும் முகம்மது நபி (சல்) அவர்கள் உலகில் பிறந்து நாற்பது ஆண்டுகளாகும் என்றும் ஜிபுறீல் (அலை) அவர்கள் முதன் முதலில் வந்தது றபீஉல் அவ்வல் மாதம் எட்டாந்தேதி சனிக்கிழமை இரவு என்றும் உமறுப்புலவர் இவ்வாறு கூறுகிறார் :

''துய்யவ னருளா லாதமா மனுவாய்த்
தோன்றிய வவனியின் வருட
மையமி லாறா யிரத்தினி லொருநூற்
றிருபத்து மூன்றினி லழகா
வையக மதிக்கு முகம்மதின் வயது
நாற்பதில் றபீயுலவ் வலினி
லெய்திய வெட்டாந் தேதியிற் சனியி
னிரவினிற் கிறாமலை யிடத்தில்''

(நபிப்பட்டம் பெற்ற படலம் : 11)

அடுத்த நாளிரவிலும் ஜிபுறீல் (அலை) அவர்கள் வந்தார்கள் என்பதை 'மற்றை நாட்பகுதி ராவில் கிறாமலையிடத்தில்' (14) எனக் குறிப்

பிடுகிறார். ஞாயிறு இரவையே 'பருதி ராவு' என்கிறார். ஜிபுறீல் (அலை) அவர்கள் மீண்டும் அடுத்தநாள் - சங்கை பொருந்திய றபீஉல் அவ்வல் மாதம் பத்தாம் நாள் திங்கட்கிழமை இரவில் ஹிறா மலைக்குகைக்கு வந்தார்கள் என்பது சீறாப்புராணத்தில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

''வரிசைநேர் றபீவு லவ்வல் மாதமீ ரைந்து நாளிற்
றெரிதர விளங்குந் திங்க ளிரவினிற் சிறப்பு மிக்கோ
னருளினில் ஜிபுற யீல்வந் தருவரை யிடத்தில் வைகுங்
குரிசிறன் கமலச் செங்கண் குளிர்தர வெதிர்ந்து நின்றார்.''
(நபிப்பட்டம் பெற்ற படலம் : 16)

திருக்குர்ஆன் அருளப்பட்டது லைலத்துல் கத்ர் இரவிலாகும். இந்த இரவு றமளான் மாதம் 27-ஆம் நாள் இரவு என்பதே பொது வான நம்பிக்கை. றமளான் மாதத்தின் பிந்திய பத்து நாட்களில் வரும் ஒற்றைநாட்களின் இரவு என்றும் கூறுவர். 'றஹ்மத்துன்லில் ஆலமீன்' என்னும் கிரந்தத்தில் முதன் முதலில் திருக்குர்ஆன் அருளப் பட்டது றபீஉல் அவ்வல் மாதம் பிறை ஒன்பது திங்கட்கிழமை எனக் கூறப்படுகின்றது. இது கி.பி. 610 பிப்ரவரி 12-ஆந் தேதி என்பர். திருக்குர்ஆன் முதல் முதன் அருளப்பட்டது றபீஉல் அவ்வல் மாதம் 12-ஆம் நாள் என்று கூறுவாரும உளர். ஆனால் உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் றபீஉல் அவ்வல் மாதம் 10-ஆம் நாள் என்று குறிப் பிடுவது ஈண்டு நோக்கற்பாலது. 'ஓதுவீராக' என்று விண்ணவர் கோன் கூறியதும் தங்களுக்கு ஓதத்தெரியாது என்று பெருமானார் கூறியதும் இவ்வாறு உரையாடல் மூன்றுமுறை நடைபெற்றது என்பதை அடுத் தடுத்த பாடல்களில் குறிப்பிடும் உமறுப்புலவர் இறுதியாக ஜிபுறீல் (அலை) அவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு 'இக்றவு' என்று ஆரம்பித்து 'மாலம் யஃலம்' வரை உள்ள ஆயத்துக்களை ஓதிக் காட்டினார் என்பதை இவ்வாறு குறிப்பிடுகிறார் :

''மிக்குயர் மறையின் வள்ளல் விளம்பவிண் ணவர்கள் கோமா
னிக்குறவு வெனும்சூ றத்தி லிருந்தைந் தாயத் தின்ப
மெய்க்குற மாலம் யஃல மெனுமட்டும் விளர்பு வீரென்
றொக்கலி லுயிரின் மிக்கா யுறுநபிக் குணர்த்தி னாரால்''
(நபிப்பட்டம் பெற்ற படலம் : 27)

நபிப்பட்டம் பெற்ற படலத்தின் உள்ள இறுதிப் பாடல்களில் முகம்மது நபி (சல்) அவர்கள் தங்களுக்கு ஏற்பட்ட அனுபவத்தைப் பற்றி வறக்கத் இப்னு நவ்பல் என்னும் மூதறிஞருக்கு எடுத்துக்கூறிய விரைங்களுக்கு அவை உண்மை என்பதற்குரிய அடையாளங்கள் இவை என்று அம்முதியவர் கூறியவையும் இடம் பெற்றுள்ளன.

நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் அருளப்பெற்ற பின்னர் இஸ்லாம் இரகசியமாகப் போதிக்கப்பட்டது. பெண்களுள்

முதன் முதலில் இஸ்லாத்தைத் தழுவிய பெருமை அவர்கள் தம் பாரியா ராகிய கதீஜா (றலி) அவர்களையே சாரும். அவ்வம்மையார் இஸ் லாத்தைத் தழுவியமைபற்றி,

''முல்லையங் குழற்கதீ ஜாமின் னேமுத
லில்லறத் தொடுமிசு லாத்தி லாயினார்''
(தொழுகை வந்த வரலாற்றுப் படலம் : 5)

இவ்வாறு குறிப்பிடுகிறார் கவிஞர் உமறு. வயது முதிர்ந்தவர்களுள் இஸ்லாத்தை தழுவியவர் அபூபக்கர் (றலி) அவர்கள் என்பதனை...... 'அடல பூபக்கர்...நல்லிய லொடுமிசு லாத்தி னண்ணினார்' (15) என்றும் சிறுவர்களுள் இஸ்லாத்தை முதன் முதலில் தழுவியவர் அலி (றலி) அவர்கள் என்பதனை,

''சுந்தரப் புலியலி யென்னுந் தோன்றலும்
வந்தனை செய்துதீன் வழியி லாயினார்,'' (16)

என்றும் அடிமைகளுள் இஸ்லாத்தை முதலில் தழுவியவர் ஆரிதென் பவரின் புதல்வராகிய ஸைத் (றலி) என்பதனை,

''அடிமையில்.................
மிடலவர் சைதெனுர் வீர கேசரி
யிடரறுங் கதியிசு லாத்தி லாயினார்'' (17)

என்றும் விவரித்துள்ளார். இவர்களைத் தொடர்ந்து இஸ்லாத்தைத் தழுவியவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் அப்துல் றகுமான் (றலி) அவர்களும் சுபைர் (றலி) அவர்களும் என்பதனை,

''கரும்பெனு நபிகலி மாவைக் காமுற
விரும்பிய பேர்களிற் றலைமை மிக்கவ
ரரும்புவிக் கரசபு துற்றகு மானுடன்
தரும்புகழ் சுபைறுதல் காவுஞ் சகுதுவும்'' (23)

என்றும்

''அருமறைப் பொருட்குரை யாணி யாகிய
வரிசைநன் னெறியுது மானு மாசிலாத்
திருநபி பெயர்க்கலி மாவைச் செப்பிய
பரிசனத் தொடுந்தனி பழகு நாளினில்'' (24)

என்றும் உமறுப்புலவர் விவரித்துள்ளார். இவ்வாறு இவர்கள் அனைவரும் இஸ்லாமியத் திருத்தொண்டர் முன்னணியில் நின்றனர். ஜிபுறீல் (அலை) அவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு தொழுகை நடத்தப்பட வேண்டிய முறையைச் செய்துக்காட்டித் தந்தார்கள். இஸ்லாத்தைத் தழுவிய அனைவரும் அதன்படி ஒழுகலானார்கள்,

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு திருக்குர்ஆன் அருளப்பட்டு நபிப் பட்டம் வழங்கப்பட்டு நான்கு ஆண்டுகள் கடந்துவிட்டன. இன்னமும் இரகசியமாகவே இஸ்லாமியப் போதனைகள் நடாத்தப் பட்டன. நான்காம் ஆண்டு அல்லாஹுத் தஆலாவின் கட்டளையை எடுத்துக் கொண்டு அமரர் கோமான் ஜிபுறீல் (அலை) அவர்கள் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். எல்லோருக்கும் இஸ்லாத்தைப் பகிரங்கமாக விளக்கும்படியும் தொழுகையைக் கடைப்பிடிக்கும்படி போதிக்கும்படியும் கூறினார்கள். இக்கருத்துக்களை

> ''சீதவொண் கவிகை நீழ றிருந்திய குரிசி லானோர்
> தூதென நபியின் பட்டந் துலங்கிய நான்கா மாண்டில்
> வேதம்நல் வணக்க மியார்க்கும் விரித்துற விளக்கு மென்ன
> வாதிதன் பருமான் மேற்கொண் டமரர்கோ னுரைத்துப்
> போனார்.''
>
> (தீனிலை கண்ட படலம் : 1)

இச்செய்யுளில் 'பருமான்' என்னும் பாரசீகச் சொல் 'கட்டளை' என்னும் பொருளில் உபயோகிக்கப் படுத்தப்பட்டுள்ளதைக் காண லாம்.

இஸ்லாத்தைப் பகிரங்கமாகப் போதிக்கத் தலைப்பட்டார்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள். இதனைக் குறைஷிக் காபிர்களால் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பாதுகாவலராக இருந்த பெரியார் அபுதாலிப் அவர் களிடம் சென்றனர் அக்குறைஷியர். தமது தம்பி மகனை இஸ்லாத் தைப் போதிப்பதிலிருந்து தடுக்கும்படி அபுதாலிப் அவர்களை வலியுறுத்தினர். அபுதாலிபும் செய்வதின்னது என்று அறியாமல் குறைஷிக் காபிர்களின் வன்செயல்களுக்கு அஞ்சி அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் இஸ்லாமியப் போதனையைக் கைவிட்டுவிடுமாறு கேட்டுக்கொண்டார்கள். இதனைச் செவியுற்ற அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பெரியார் அபுதாலிப் அவர்களுக்குப் பதில் அளித்தார்கள். அவர்களுடைய பதிலை உமறுப்புலவர் இரண்டு செய்யுட்களில் அமைத்துப் பாடியுள்ளார். தங்களது வலது கையில் சூரியனையும் இடது கையில் சந்திரனையும் வைத்தாலும் தங்களது இனத்தவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து தங்களை எதிர்த்துப் போரிட்டாலும் தங்களது போதனைகளைப் பெரியார் அபுதாலிப் அவர்கள் ஏற்கா விட்டாலும் இவையேயன்றித் தங்களுக்கு ஏதேனும் இடைஞ்சல் ஏற்பட்டாலும் அல்லாஹுத் தஆலாவின் தூதர் என்ற முறையில் இஸ்லாத்தைப் போதிப்பதிலிருந்து தங்கள் மனம் சற்றும் தளர்ச்சி அடையாது என்று அழுதவண்ணம் கூறியவற்றை இவ்வாறு தந்துள்ளார் கவிஞர்.

''பருதியைக்கொணர்ந் தணிவலக் கரத்திடைப் பதித்து
மரிதி னிற்சசி கொணர்ந்திடக் கரத்தினி லமைத்து
மொருமொ ழிப்பட வினத்தவ ரொருங்குற நெருங்கிப்
பொருத டக்கினு நும்மனம் பொருந்திலா திருந்தும்''.

''ஈதலாற் சில விடரெனை யடுக்கினு மிறையோன்
றூத னியானெனச் சுருதியை விளக்குவ தலது
பேதி யாதென தகமென முகம்மது பிரியாத்
தாதை யோடுரைத் தனரிரு விழிமழை தயங்க.''

(தீனிலை கண்ட படலம் : 44, 45)

இஸ்லாத்தைப் பகிரங்கமாகப் போதிக்கத் தலைப்பட்டு மக்காக் குறைஷியர்களை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இஸ்லாத்தின்பால் அழைத்தார்கள். இந்த அழைப்பைக் கேட்ட அபூலஹப் என்னும் அப்துல் உஸ்ஸா, நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களை வாயாரத் தூற்றினான். கொடுமைகள் புரியத் தலைப்பட்டான். இதனால் பெரும்பாவியாகும் தகுதியை அபூலஹப் பெற்றுக் கொண்டான். இச்சந்தர்ப்பத்திலே 'தப்பத் யதா' என்னும் அத்தியாயம் அபூலஹபுக்கும் அவனது மனைவிக்கும் நடக்க இருக்கும் கேட்டினைக் குறித்து அல்லாஹு தஆலாவினால் இறக்கப்பட்டது. இவ்வுலகிலும் மறு உலகிலும் கேடுடையவன் என இவ்வாயத்துக்களின் மூலம் அபூலஹப் சபிக்கப்பட்டான். இக்கருத்துக்களே இங்கு இவ்வாறு இடம் பெற்றுள்ளன :

''அடர்ந்தெதிர்ந் துரைத்த கொடியவ னபூல
கபுபுவி யிடத்துமா கிறத்து
மிடைந்திடும் பெருங்கே டுடைய னிவனே
யென்னுமப் பொருளுரை பிறப்பத்
துடங்குதப் பத்ய தாவெனத் தோன்றுஞ்
சூறத்தொன் றிறங்கிய துலகிற்
கிடந்தழும் மறையுந் தெரிதரப் புகழ்ந்த
கிளரொளி முகம்மது நபிக்கே.''

(தீனிலை கண்ட படலம் : 117)

இவ்வாயத்துக்களில் குறிப்பிட்டதுபோல் அபூலஹபும் அவனது மனைவியும் பெருங்கேட்டுக்கு இலக்காயினர் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. இஸ்லாத்தைத் தழுவிய காரணத்துக்காக பிலால் (றலி) என்னும் தனது அடிமையைக் கொடுமைக்கு ஆளாக்கிய இபுனுகலப் என்பவனின் கொடிய தொழில்களும் பிலால் (றலி) அவர்களை அபூபக்ர் (றலி) அவர்கள் விடுவித்த விதமும் தீனிலை கண்ட படலத்தில் 141 முதல் 149 வரை உள்ள செய்யுட்களில் விவரிக்கப்பட்டுள்ளன.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு நபிப் பட்டம் கிடைக்கப் பெற்று நான்கு ஆண்டுகள் கழிந்து விட்டன. ஐந்தாம் ஆண்டு ஆரம்பமாகியது. இஸ்லாத்தைப் பகிரங்கமாகப் போதிக்கும் போது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பல இன்னல்களை எதிர்நோக்க வேண்டி இருந்தது. அப்பொழுது குறைஷி மக்களிடையே பெருஞ் செல்வாக்கைப் பெற்றவர்களாக உமறு அவர்களும் அபூஜஹ்லும் திகழ்ந்தனர். இவர்கள் மிக்க வீரம் உடையவர்களாகவும் இருந்தனர். இவர்களில் ஒருவரை உமறை அல்லது அபூஜஹ்லைத் தங்கள் பக்கம் சேர்த்துத் தருமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் இறைஞ்சினார்கள்; துஆ கேட்டார்கள். இந்த நிகழ்ச்சியே இவ்வாறு சீறாப்புராணத்தில் அமைந்துள்ளது.

''வருட நான்குசென் றைந்தினின் முகம்மது வொருநா
ளிரவி னிற்றனித் திருந்திரு கரமெடுத் தேந்திப்
பொருவி லாமுத லிறைவனை யீறிலாப் பொருளை
யுருகு மெய்ம்மன வாக்கொடும் புகழெடுத் துரைத்தார்

உலகி னிற்கரு தலர்க்கட லரியும றினைக்கொண்
டலத பூஜகி லினைக்கொடு தீனிலை யதனைப்
பலனு றும்படி யெனக்கருள் பிறிதிலை யெனவே
நலனொ டுந்துஆச் செய்தனர் முகம்மது நபியே''

(உமறு கத்தாப் ஈமான் கொண்ட படலம்: 2, 3)

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் துஆ கபூல் செய்யப்பட்டது. அல்லாஹ்வால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. நபிகள் பெருமான் (ஸல்) அவர்களைக் கொல்வதற்கு முற்பட்ட உமறு அவர்கள் பின்னர் திருக் குர்ஆனை ஓதிக்கொண்டிருந்த தமது சகோதரியையும் அவர்தம் கணவரையும் துன்புறுத்தத் தலைப்பட்டார். அப்பால் திருக் குர்ஆனால் கவரப்பட்டார். இஸ்லாத்தைத் தழுவுவதற்காக நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் ஓடோடிச் சென்றார். அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் இஸ்லாத்தைத் தழுவவே தாம் வந்துள்ள மையை உமறு கத்தாப் (றலி) அவர்களின் கூற்றாகவே உமறுப்புலவர் இவ்வாறு செய்யுள் யாத்துள்ளார்.

''வரிசை நபியே முகம்மதுவே வானோர்க் கரசே புவிக்கரசே
யுரிய தனியோன் முதற்றூதே யுமது கலிமா வுரைப்படியே
புரிய மறைதேர்ந் தீமான்கொண்டறத்தா றொழுகும் படிகருத்திற்
கருதி யிவணி லடைந்தேனென் றுரைத்தா ருமறு கத்தாபே.''

(உமறு கத்தாபு ஈமான் கொண்ட படலம்: 90)

இஸ்லாத்தைத் தழுவிய ஆரம்ப முஸ்லிம்களுக்கு மக்கா குறைஷியர் சொல்லொணாத் துயர் இழைத்தனர். மக்காவில் தொடர்ந்து வசிப்பதால் அவர்களின் உயிருக்கே ஆபத்து வந்துவிடும்

போல இருந்தது. இதனை உணர்ந்த அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தமது மகள் றுக்கையா அம்மையாரையும் அவர் தம் கணவர் உதுமான் இப்னு அப்பான் (றலி) அவர்களையும் அபிஸீனியா என்று வழங்கப் படும் ஹபஷா நாட்டுக்குச் செல்லும்படி பணித்தார்கள். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு நபிப் பட்டம் அருளப்பெற்ற ஐந்தாம் ஆண்டாகும். இவர்கள் இரகசியமாகவே மக்கத்தை விட்டுப் புறப்பட்டார்கள். இது நடந்தது றஜபு மாதத்தில் எனக் கூறப் பட்டுள்ளது. இந்நிகழ்ச்சியே சீறாப்புராணத்தில் இவ்வாறு பாடப் பட்டுள்ளது.

''ஷரகி றங்கிநன் னபியெனும் பெரும்பெயர் தரித்த
வருட மைந்தென வரவரு மிறஜபு மாதந்
தரும நேருது மானொடு றுக்கையா தமையு
மிருளும் போதனுப் பினர்ஹப ஷாவெனுந் தேயம்''

(ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்துக்குப்
போந்த படலம் : 7)

இது முதல் ஹிஜ்றத் என வருணிக்கப்படுகிறது. சொந்த நாட்டை விட்டு வேற்று நாட்டுக்குப் பாதுகாப்பு தேடிச் சென்ற இந்த ஹிஜ்றத் பயணத்தில் பதினைந்து நபித் தோழர்கள் பங்கு பெற்றனர். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மகளார் றுக்கையா அம்மையாருடன் வேறு மூன்று பெண்களும் அவ்வம்மையாரின் கணவரான உதுமான் (றலி) அவர்களுடன் வேறு பத்து ஆண்களும் மக்காவிலிருந்து அபிஸீனியாவுக்கு ஹிஜ்றத் சென்றனர். இந்த வரலாற்று நிகழ்ச்சி சீறாப்புராணத்தில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''திருந்துந் திண்புய நபிதிரு மகளுடன் சிறப்ப
விரிந்த பூங்குழன் மடந்தையர் மூவரும் வியப்பப்
பொருந்துந் தீனவர் பதின்மரும் புகழுது மானும்
பிரிந்தி டாதுசென் றந்தநா டடைந்ததற் பின்னர்.''

(ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்துக்குப்
போந்த படலம் : 8)

இதே படலத்திலுள்ள 9வது செய்யுளில் இப்பயணத்தில் பங்கு பற்றிய ஜஃபறிப்னு அபுதாலிப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

'ஆமுல் ஹுஸுன்' என்றால் 'துக்ககரமான ஆண்டு' என்பது பொருள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வாழ்க்கையிலும் இத்தகைய துக்ககரமான ஓர் ஆண்டு ஏற்பட்டுள்ளது என வரலாறு கூறுகின்றது. அந்த ஆண்டிலே தான் அண்ணல் நபி (ஸல்) அவர் களின் பெரிய தந்தையும் பாதுகாவலருமான அபூதாலிப் அவர்கள் இவ்வுலகை விட்டுப் பிரிந்தார்கள். அவருடைய இறப்பை,

"இரைப்பெ ருங்கட லெனவினஞ் சூழ்தர விறந்தார்
மரைப்ப தத்தபித் தாலிபென் றழகுறும் வள்ளல்"
(பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் : 7)

என விவரிக்கிறது சீறாப்புராணம். இது வரலாற்று முக்கியத்துவம் பொருந்திய நிகழ்ச்சி என்பதனால் இச்சம்பவம் நிகழ்ந்த நாளை நுணுக்கமாகக் குறிப்பிடுகிறார் உமறுப்புலவர். அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் அருளப்பெற்று பத்து வருடங்களும் எட்டு மாதங்களும் பதினொரு நாட்களும் கழிந்த பின்னரே அபுதாலிப் அவர்கள் உயிர் நீத்தார்கள் என இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

"வட்ட வாரிதிப் புவியிடை முகம்மது தமக்குப்
பட்ட மென்பவந் திறங்கிய வருடம்பத் ததின்மே
லெட்டு மாதமும் பதினொரு நாளுஞ்சென் றிதற்பின்
சட்ட கந்தனை விட்டுயிர் பிரிந்தவண் சார்ந்தார்."
(பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் : 8)

அபுதாலிப் அவர்களின் மரணத்தைத் தொடர்ந்து மூன்று நாட்களே கழிந்தன. இஸ்லாத்தை முதன்முதல் தழுவிய பெண்மணியும் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு எல்லா வகையிலும் உறுணையாக விளங்கியவரும் இருபத்தைந்து ஆண்டுகளாக அண்ணல் நபி (சல்) அவர்களின் வாழ்க்கைத் துணைவியாக விளங்கியவருமான கதீஜா (றலி) அவர்கள் இவ்வுலக வாழ்வை விட்டுப் பிரிந்தார்கள். அல்லாஹ் விதித்த வழிக்கிணங்க குவைலிது அவர்களின் மகளார் இவ்வுலகப் புகழை நிறுத்தி விண்ணுலகத்தில் புகழ் விளங்க அங்கு சென்றுவிட்டார்கள் என்று உமறுப்புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

"அகத்தி னிற்பெருந் துன்பொடு மிருக்குமூன் றாநாள்
வகுத்த நாயகன் விதிவழி குவைலிது மகளா
ரிகத்தி னிற்புகழ் நிறுத்திவிண் ணகம்புக ழிலங்கத்
தகுத்தொ டும்பெரும் புதுமையிற் றிருவடி சாய்ந்தார்."
(பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் : 12)

அபுதாலிப் அவர்களின் மரணத்துக்கு ஒரு மாதத்துக்குப் பின்னரே கதீஜா (றலி) அவர்கள் வபாத்தானார்கள் என்று சிலர் கூறுவர். வேறு சிலர் ஒரு மாதமும் ஐந்து நாட்களும் கழிந்ததன் பின்னர் என்றும் மற்றும் சிலர் ஐம்பது நாட்கள் சென்ற பின்னர் என்றும் கூறுவர்.

வியாபாரிகளாகவும் யாத்திரிகர்களாவும் யத்றிப் நகரிலிருந்து அறுவர் மக்கமா நகருக்கு வந்திருந்தனர். அந்த அறுவரையும் சந்தித்து இஸ்லாமிய போதனையை மேற்கொண்டார்கள் எம்பெருமானார் (சல்) அவர்கள். அடுத்த ஆண்டில் யத்றிபிலிருந்து அந்த ஆறு பேரும் மற்றும் ஆறு பேருடன் வந்திருந்தனர். அவர்களை அகபா என்னும் இடத்தில் அண்ணல் நபி (சல்) அவர்கள் சந்தித்து

மீண்டும் இஸ்லாமிய போதனையை மேற்கொண்டார்கள். இரண்டாவது தடவை வந்தவர்களுள் அவ்ஸ், கஸ்றஜ் கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் இருந்தனர். இவர்கள் இஸ்லாத்தை ஒப்புக்கொண்டு இஸ்லாமிய முறைப்படி ஒழுக இணங்கினர், இந்த ஒப்புதல் 'அகபா வார்த்தைப்பாடு' என வழங்கப்படுகிறது. இங்ஙனம் யத்றிபிலிருந்து பன்னிருவர் வந்து இஸ்லாத்தை ஒப்புக்கொண்டமையே இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

''தன்னுயி ரென்ன நீங்கார் தலைமையி னுரிய தோழர்
பன்னிரு வருக்கு நேர்ந்த பண்புட னெறிகள் கூறிப்
பின் அக பாவென் றோதும் பெருந்தலத் துறைந்து காட்சி
மன்னிய முகம்ம தின்றன் மலர்ப்பதம் வந்து கண்டார்.''

(மதீனத்தார் ஈமான்கொண்ட படலம் : 5)

மதீனத்தார் வாய்மை விளக்கிய படலத்திலும் யத்றிப் வாசிகள் வந்து வார்த்தைப்பாடு கொடுத்த விவரங்கள் தரப்பட்டுள்ளன.

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மக்கமா நகரிலிருந்து மதீனமா நகருக்குச் செல்லும் பொருட்டு அல்லாஹ்வின் உத்தரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவ்வாறு செல்லவேண்டிய நாளும் நிர்ணயிக்கப்பட்டது. அவ்வாறு செல்ல இருந்த நாளை இங்கு குறிப்பிடுகிறார் உமறுப்புலவர். இறைவனிடமிருந்து அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் கிடைத்த பதினான்காம் ஆண்டு றபீஉல் அவ்வல் மாதம் ஐந்தாம் நாள் திங்கட்கிழமை இரவினில் மக்கமா நகரிலிருந்து மதீன மாநகருக்குச் செல்ல இருந்தார்கள் என்பது இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

''தருமுகம் மதுநம் மிறையவன் தூதாய்
நபியெனும் பட்டமே தரித்து
வருமுறை பதினான் காண்டினின் மாசத்
தொகையினில் றபீவுலவ் வலினிற்
றெரிதருந் தேதி யைந்தினிற் றிங்க
ளிரவினிற் சிறப்பொடு மதீனாப்
பெருநகர்க் கேக விருந்தன ரிஃது
பிறந்தது காபிர்க டமக்கே.''

(யாத்திரைப் படலம் : 65)

இந்த நிகழ்ச்சி நடைபெற்றது நபித்துவத்தின் 13-ஆம் ஆண்டு என்று கூறுவர். ஸபர் மாதம் 28-ஆம் நாள் திங்கட்கிழமை அன்று நிகழ்ந்தது என்று கருதுவாரும் உளர். மற்றும் சிலர் றபீஉல் அவ்வல் மாதம் முதல் மூன்று இரவுகளில் ஒன்றில் நிகழ்ந்தது என்றும் தெரிவித்துள்ளனர். எனினும் திங்கட்கிழமை நிகழ்ந்தது என்று கூறுவதில் ஓரளவு கருத்தொற்றுமை இருக்கக் காணலாம்.

**நாம் மூவர் :**

மதீன நகருக்கு ஹிஜ்றத் செல்லும்பொழுது மூன்று நாட்கள் தௌர் குகையில் தங்கிவிட்டுச் சென்றார்கள் என வரலாறு கூறு கின்றது. தௌர் குகையினுள்ளே அண்ணல் நபி (சல்) அவர்களும் அவர்களின் இணை பிரியாத் தோழர் அபூபக்கர் (றலி) அவர்களும் இருந்தனர். குகைக்கு வெளியே எதிரிகளின் காலடிச் சத்தம் கேட்டது. அவர்களின் முழந்தாள்களும் தென்பட்டன. அப்பொழுது அபூபக்கர் (றலி) அவர்கள் 'யா றசூலல்லாஹ், நாம் இருவரே இங்கு இருக்கின்றோம். எதிரிகள் உள்ளே வந்தால் ?'' என்றார்கள். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் ''இங்கு நாம் இருவர் இருப்பது உண்மைதான். ஆனால் உலகத்திலுள்ள பல்லுயிர்களையும் காக்கும் ஒருவன் நம்முடனே நீங்காது இருக்கின்றான். ஆதலினால் எதிரி களான காபிர்களால் ஒன்றும் செய்ய முடியாது'' என்றார்கள். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் குகையிலே புகுந்துள்ள சூரியனைப் போன்று காட்சியளித்தார்கள். இக்கருத்துக்களே சீறாப் புராணத்தில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

> ''இருவர்நா மிருப்பப் பூவி னிருந்தபல் லுயிருங் காக்கு
> மொருவனம் மிடத்தை நீங்கா துடனுறைந் திருப்பக் காபிர்
> தெரிதருங் கண்ணிற் காணச் செயலுமற் றுண்டோ வென்றா
> ரருவரை முழையிற் புக்கி யருக்கனொத் திருக்கும் வள்ளல்.''
>
> (யாத்திரைப் படலம் : 111)

இருவரும் மூன்று நாட்கள் தௌர் குகையில் தங்கிவிட்டு நான்காம் நாள் அங்கிருந்து புறப்பட்டனர் என்று 'அடுக்க லின்புற மூன்று நாளிருந்து நாலாநாள்' (சுறாக்கத்துத் தொடர்ந்த படலம்) என கூறப்படுகிறது.

**முதற் பள்ளி :**

இவ்வாறு மக்கமா நகரை விட்டுப் புறப்பட்டுச் சென்ற அண்ணல் நபி (ஸல்) அவர்களும் அவர்கள் தம் தோழர் அபூபக்ர் (றலி) அவர் களும் மதீன மாநகரை அடைவதற்கு முன்னர் குபா என்னும் இடத் திற்கு வந்து சேர்ந்தனர். 'இன்பச் செல்வமே, தருகுபா வென்னுமத் தலத்தை நண்ணினார்' (மதீனம் புக்க படலம்: 25) என இது வருணிக்கப்பட்டுள்ளது. இருவரும் மதீன மாநகருக்கு அணித்தா யுள்ள குபா என்னும் நகரை றபீஉல் அவ்வல் மாதம் 12-ஆம் நாள் திங்கட்கிழமை அன்று வந்தடைந்தார்கள் என்பது பொதுவாக எல்லோ ராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்தாகும். இதனையே உமறுப் புலவரும் இவ்வாறு குறிப்பிடுகிறார்,

''ஆசிலா தவரொடும் றபீயு லவ்வலின்
மாசம்பன் னிரண்டினில் வதிந்த திங்களிற்
பாசமுற் றவரிடம் பரிந்து நந்நபி
வாசமுற் றுறைந்தனர் மகிழ்வின் மாட்சியால்.''

(மதீனம் புக்க படலம் : 26)

அங்கே பள்ளிவாசல் கட்டப்பட்டது. நபிகள் பெருமானாரினால் கட்டப்பட்ட முதற் பள்ளிவாசல் இதுவாகும். 'மஸ்ஜிதுத் தக்வா' என அழைக்கப்படும் இப்பள்ளிவாசல் (அல் குர்ஆன் 9 : 109) காய்ந்த ஓலையினால் வேயப்பட்ட கூரையை உடையதாய் இருந்தது. இதனைக் கட்டி எழுப்புவதில் பெருமானார் (ஸல்) அவர்களும் தீவிர மாக ஈடுபட்டுள்ளார்கள் எனக் கூறப்படுகிறது. இந்தப் பள்ளிவாசல் 'ஒளி பரப்பிக் கொண்டிருக்கும் வெண்மையான சுண்ணாம்பினால் பூசப்பட்டிருந்தமையினால் எல்லா இடங்களும் அழகு மிக்கதாய் இருந்தன' என கவிதை நயம் ததும்ப இவ்வாறு உமறுப்புலவரால் பாடப்பட்டுள்ளது.

''அவிரொளி முகம்மது மாவி போன்றவ
ரெவருமற் றின்புற விருந்தவ் வூரினிற்
சவிதரும் வெண்சுதை தயங்க வெங்கணுங்
கவினுறப் பள்ளியொன் றரிதிற் கட்டினார்''

(மதீனம் புக்க படலம் : 30)

இங்கே தான் இஸ்லாமிய வரலாற்றிலே முதற் குத்துபாப் பிரசங்கம் பெருமானார் (சல்) அவர்களினால் நிகழ்த்தப்பட்டது. அன்று முதல் இறுதிநாள் வரை குத்துபா ஓத வேண்டும் என்று நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பணித்தமையை உமறுப்புலவர் இவ்வாறு வருணிக்கிறார்.

''அத்தலத் துறைந்துபி னடுத்த வெள்ளிநா
ளுத்தமத் தமரொடவ் வுறைந்த பேர்கட்கு
மித்தலத் தின்றுதொட் டீறு நாள்மட்டுங்
குத்துபா வெனநபி குறித்துக் காட்டினார்''

(மதீனம் புக்க படலம் : 37)

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் அன்று குத்துபா தொழுவித்தமை 38-ஆம் செய்யுளில் குறிப்பிடப்படுகிறது.

**பனீ நஜ்ஜாறுகள் :**

அண்ணல் நபி (சல்) அவர்களின் தாயாரான ஆமினா அம்மை யாரின் உறவினர் மதீனாவில் வாழ்ந்து வந்தனர். அவர்களுள் பனீ நஜ்ஜாறுகள் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்கள் உறவு முறையில்

நபிகள் பெருமானாரின் தாய்மாமன்மாரைச் சேர்ந்தவர்கள். மதீனாவிலே ஒரு காணி நிலம் வாங்கத் திட்டம் இட்டார்கள் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள். நிலத்தை விலைக்கு வாங்கவேண்டும் என்றார்கள். பனீ நஜ்ஜாறுகளோ 'நிலத்தைத் தருகிறோம் - பொருள் பெற மாட்டோம்' என்றனர். ஆனால் அபூபக்கர் (றலி) அவர்கள் விலைக்கே விற்கப்படல் வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். இச் சம்பவம் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது

''மதிமுகம் மதுதா யாமினாக் குரிய
மாதுலர் பனீநச்சா றுகளின்
முதியரை யழைத்திந் நிலம்விலைப் படுத்தித்
தருகென மொழிதலு மெவர்க்கும்
புதியவ னெமக்கு விலைகொடுத் தருள்வ
னுயர்மிடம் பொருள் கொளோ மென்ன
விதமொடு முரைப்ப வவர்தமக் கெதிரி
னபூபக்க ரினிதெடுத் துரைப்பார்.''

(விருந்திட்டு ஈமான் கொள்வித்த படலம் : 11

நிலத்திற்கான விலை முடிவு செய்யப்பட்டது. பத்து பொற்காசுகள் என அந்நிலத்தின் விலை நிர்ணயிக்கப்பட்டது இந்த பத்து வெண் பொற்காசுகளையும் அபூபக்ர் (றலி) அவர்கள் வழங்கி நிலத்தை வாங்கி நபிகளார் (ஸல்) அவர்களிடம் ஒப்படைத்தார்கள். அங்கே ஒரு பள்ளியையும் வீட்டையும் கட்டுவதற்குத் திட்டம் வகுக்கப்பட்டது. அவ்வாறு கட்டி முடிக்குமளவும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஏறி வந்த ஒட்டகம் சுயமாகவே நின்ற இடத்தின் சொந்தக்காரரான அபூ அய்யூப் அன்ஸாரி அவர்களின் இல்லத்திலே தங்கி இருந்தார்கள். இந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியே இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''தங்கமோ ரீரைந் தளித்தபூ பக்கர்
வாங்கிய தலத்தினை யினிதின்
கொங்கிருந் துலவு முகம்மது நபிக்குக்
கொடுத்தன ரந்நிலத் திடத்தின்
மங்குறோய்ந் திலங்கும் பள்ளியு மனையும்
வகுத்தெடுத் தியற்றிட வருளிச்
சிங்கவே றனைய அபூ அய்யூப் மனையி
னிருந்தனர் குருநெறிச் செம்மல்''

(விருந்திட்டு ஈமான் கொள்வித்த படலம் : 3)

பெருமானார் நபி (சல்) அவர்கள் மதீனம் வந்ததைத் தொடர்ந்து அண்ணல் நபி (சல்) அவர்களின் நெருங்கிய உறவினர்கள் மதீன மாநகரை வந்தடைந்தனர். அவ்வாறு வந்த உறவினர்களின் பட்டியல்

ஒன்றை உமறுப்புலவர் குறிப்பிடுகிறார். அந்தப் பட்டியலில் சௌதா (றலி) அவர்களும் அபூபக்கர் (றலி) அவர்களின் மனைவியாரும் ஆயிஷா (றலி) அவர்களும் அலி (றலி) அவர்களின் தாயார் பாத்திமா அம்மையாரும் நபிகள் பெருமானாரின் புதல்வியர் நால்வரும் அவர்களின் அடிமைகள் இருவரும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

''ஆயிழை சௌதா அபூபக்கர் மனைவி
தன்னொடு மாயிஷா அலியின்
றாயெனும் வரிசைப் பாத்திமா நயினார்
தரும்புதல் வியர்கணால் வரையும்
சேயினு மினிய வடிமைக ளிருவர்
திருந்தலர் நோக்கிலா வண்ணம்
நாயகப் பதியென் றோதிய மதீனா
நகரினி லழைத்துவந் தனரால்''

(உகுபான் படலம் : 3)

அடிமைகளைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது அவர்களைப் புதல்வர்களைவிட இனியவர்கள் என்று உமறுப்புலவர் வருணிக்கிறார். புதல்வர்களைப் போன்றே அடிமைகள் பராமரிக்கப்படல் வேண்டும் என்பது தொனிக்கப் பாடியுள்ளமை நயக்கத்தக்கதாகும்.

**கிப்லா மாற்றம் :**

இன்னொரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி முஸ்லிம்கள் தொழும் திசையாகிய கிப்லா மாற்றப்பட்டமையாகும். அப்பொழுது இறை தூதர் (சல்) அவர்கள் பைத்துல் முகத்திஸ் என்னும் ஜெருசலத்தின் திசையையே கிப்லாவாகக் கொண்டு தொழுது வந்தார்கள். கஃபாவின் திசைக்குக் கிப்லாவை மாற்ற விருப்பம் கொண்டிருந்த போதிலும் அதற்கான அல்லாஹ்வின் உத்தரவை அண்ணல் நபி (சல்) அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஹிஜ்றி நிகழ்ச்சி நிகழ்ந்து ஓராண்டுக்கு மேலாகியது. ஷஉபான் மாதம்.

''மகிதலத் தினிலுயர் மக்க மாகிய
நகர்விடுத் தணிமதி னாவை நண்ணிச்சூழ்
புகழொடுந் தீனெறி புரந்து வைகுநாட்
டிகழ்சகு பானென விளங்குந் திங்களில்''

(கஃபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம் : 3)

இந்த சகுபான் மாதம் 15-ஆம் நாள் செவ்வாய்க்கிழமை மத்தியானத் தொழுகை நேரமான லுஹறு வேளை. லுஹறுத் தொழுகையில் இரண்டு றக்கஅத்துக்களைத் தொழுது முடித்துவிட்டார்கள், அண்ணல்

றசூல் (சல்) அவர்களும் ஏனையோரும். இந்நிகழ்ச்சி இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''மிக்கநற் றேதிமு வைந்தின் மேவியே
தக்கசெவ் வாயினி லுஹறு நேரத்தில்
ஹக்கனை யிரண்டிறக் ஆத்துத் தான்றொழு
தொக்கலோ டிசைநபி யுறையு மொல்லையில்''
(கஃபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம் : 4)

இது நிகழ்ந்தது லுஹறு நேரத்தில் என்று சிலரும் அஸ்ர் நேரத்தில் என்று வேறு சிலரும் கருத்துத் தெரிவிப்பர். இச் சந்தர்ப்பத்தில் அமரர் கோன் ஜிபுறீல் (அலை) அவர்கள் மண்ணுலகுக்கு இறங்கி அண்ணல் நபி (சல்) அவர்களிடம் அல்லாஹ்வின் கட்டளையை அறிவித்தார்கள். அல்லாஹ்வின் வீடான கஃபத்துல்லா என்னும் புனித பள்ளிவாசலை நோக்கித் தொழவேண்டும் என்னும் இறைவன் கட்டளை அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. இதுவே,

''இறைவன் கருபத்துல் லாவென் றெய்திய
துறவுயர் பள்ளியை நோக்கித் தான்றொழ
மறையுரை வழங்கின னென்ன மன்னபி
முறையிதென் றாநந்தக் கடலில் மூழ்கினார்
(கஃபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம் : 6)

என அமைந்துள்ளது. இந்த அறிவிப்பினால் பேரானந்தம் அடைந் தார்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள். ஜெருஸலத்தை எதிர் நோக்கித் தொழுது இரண்டு றக்கஅத்துக்களை நிறைவேற்றிய நபிகள் பெருமானார் (சல்) அவர்களும் தோழர்களும் உடனே கஃபத்துல்லா வின் திசையை நோக்கி அதனை கிப்லாவாக்கி எஞ்சியிருந்த இரண்டு றக்கஅத்துக்களையும் தொழுது தொழுகையை நிறைவேற்றினார்கள் என்பதே இவ்வாறு இந்தச் செய்யுளில் அமைந்துள்ளது.

''முன்னரி ரண்டிறக் ஆத்து முற்றிய
பின்னரிற் கருபத்துல் லாவைப் பெட்புற
வுன்னினர் நோக்கின ரோதும் பாதியுந்
துன்னிய குழுவுடன் றொழுது வைகினார்''
(கஃபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம் : 7)

முஸ்லிம்களின் கிப்லா மாற்றப்பட்டு மூன்று நாட்களில் முஸ்லிம் களுக்கு நோன்பு விதியாக்கப்பட்டது. அதே ஹிஜ்றி ஆண்டில் அதாவது 2-ஆம் ஆண்டில் முஸ்லிம்களுக்கு றமலான் மாதத்தில் நற்கதி பெறுவதற்காக நோன்பு பறுலாக்கப்பட்டது—விதியாக்கப் பட்டது என்னும் திருக்குர்ஆன் ஆயத்து அல்லாஹுத் தஆலாவினால் இறக்கப்பட்டது. இதனையே உமறுப்புலவர்,

''நெறியொடும் புறுக்கா னன்னோர் நிகழு மவ்வருடந் தன்னிற்
பெறுகதி றமலா னென்னப் பெருகிய நோன்பு தன்னை
யுறுதிகொண் டெவர்க்குஞ் செவ்வி யுறுபறு லாக்கி னேனென்
றிறையவ னருளி னாயத் திறங்கிய தெவர்க்கு மன்றே''
(பதுறுப் படலம் : 1)

முதல் போர் :

றமலான் மாதம் 17-ஆம் நாள் வெள்ளிக்கிழமை முஸ்லிம்களுக்கும் மக்கத்தைச் சேர்ந்த குறைஷிக் காபிர்களுக்கும் இடையே போர் மூண்டது. இஸ்லாத்தின் வரலாற்றிலே முதலாவது போர் என இது கணிக்கப்படுகிறது. இப்போர் கற்பனை நயத்துடன் சீறாப்புராணத்தில் உள்ள பதுறுப் படலத்தில் விரிவாக வருணிக்கப்படுகிறது. முஸ்லிம்களின் சார்பில் பதுறுப் போரில் பங்கு கொண்ட முஸ்லிம்களின் எண்ணிக்கையை உமறுப்புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிடுகிறார்.

''இயன்மறை தெரிமு ஹாஜி ரீன்களெண் பத்து மூன்று
பெயருமன் சாரி மாரிற் பேர்பெறுந் தலைமை மிக்கோ
ருயரிரு நூற்று முப்பத் தொருபெய ரவருங் கைவா
ளயருறா வெற்றி வீரத் தவருட னீண்டி னாரால்''
(பதுறுப் படலம் : 13)

இங்கே பதுறுப் போரில் பங்கு கொண்ட முஸ்லிம்களின் எண்ணிக்கை வகைப்படுத்திக் கூறப்படுகிறது. பதுறுப் போரிலே மக்கமா நகரிலிருந்து வந்து பங்கு கொண்ட முஹாஜிரீன்களின் எண்ணிக்கை 83 என்றும் மதீனா மாநகரைச் சேர்ந்த அன்சாரிகளின் தொகை 231 என்றும் ஒவ்வொருவரும் ஒரு கை வாளுடனே வந்திருந்தனர் என்றும் இங்கு விவரிக்கப்பட்டுள்ளது. பதுறுப் படலத்தில் உள்ள மற்றொரு செய்யுளில் பதுறுப் போரில் பங்கு கொண்ட முஸ்லிம்களின் மொத்த எண்ணிக்கை 314 என்று 'பதுறி லடர்ந்தமுந்நூற்றுடன் பதினான்கு, இதமுறுந் தலைவர்க் கும்பர்மா ராயமுண்டு...' (பதுறுப் படலம் : 245) என குறிப்பிடப்பட்டுள்ளதும் கண்டுநோக்கற்பாலது. இப்போரில் பங்கு கொண்ட குறைஷிக் காபிர்களின் எண்ணிக்கை ஆயிரம் என்று 'அந்நக ரறபிக் காபி ராயிரம் பெயர்கள்' (55) என இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. இப்படலத்தில் உள்ள 204-வது செய்யுளில் ஒரு பிடி மண் எடுத்து எதிரிகளின் பக்கம் அண்ணல் நபி (ஸல்) வீசிய நிகழ்ச்சி குறிப்பிடப்படுகிறது. இந்த பதுறுப்போரிலே குறைஷிக் காபிர்களுள் 70 பேர் சிறைபிடிக்கப்பட்டனர் என்பதை...எதிர்ந்த தலைமைமன்னவரி னெழுபது பெயரினை...பிடித்தனர் மாதோ' (211) எனவும் அவ்வாறு பிடிபட்டவர்களை......'முகம்மதின் பிதாபின் னான அப்பாசையு...அபித்தா லிபுதரு மலிமுன் வந்தவுக்கயிலையும்...

ஆரிதுதரு திருச் சேய் நௌபலென் பவனையும்...' (212) எனவும், முஸ்லிம்களுள் விண்ணுலகெய்தியோர்'...'இறந்த தீனவர் பதினான் கமருறுந் தலைவர்...' (213) எனவும் கைப்பற்றப்பட்ட யுத்தக் கைதிகள் ஒவ்வொருவரும் நாலாயிரம் பொற்காசுகள் செலுத்தித் தத்தம் தாயகம் திரும்பினர் என்பதை 'உறுதலை விலைநாலாயிரத் திருகம் மொவ் வொரு வருக்கினி தளித்து...' (252) எனவும் விவரிக்கப் பட்டுள்ளது. பதுறுப்போரிலே பங்கு கொண்ட முஸ்லிம் ளின் எண்ணிக்கை 313 என்று பல இடங்களில் கூறப்படுகின்றன. சிறைக் கைதிகளிடமிருந்து ஆயிரம் முதல் நாலாயிரம் தீனார் வரை பெறப் பட்டதாகவும் கூறுவர். இவ்வாறு றமலான் மாதம் முடிவாகும் பொழுது நபிகள் பெருமானார் (சல்) அவர்களுக்கு பித்றா பறுலாக்கப் பட்டது என்னும் திருக்குர்ஆன் ஆயத்தும் இறங்கியது என்பதை,

"முதலவன் விதித்த விறமலா னோன்பு
முடிவினி லியாவரு மறிய
அதிசயம் பிறப்பப் பித்துறாப் பறுலென்
றாயத்தும் நபிக்கிறங் கியதான்..."

(பதுறுப் படலம் : 256)

எனக் குறிப்பிட்டுள்ளார் உமறுப்புலவர். பணஞ் செலுத்த முடியாத கைதிகளைக் கொண்டு படிப்பு வாசனையற்றவர்களுக்குக் கற்பித்துக் கொடுக்கச் செய்து அத்தகையோருக்கும் விடுதலை அளிக்கப்பட்டது என்ற செய்தி சீறாப்புராணத்தில் இடம்பெறவில்லை என்பது குறிப் பிடத்தக்கது.

### ஹிஜ்றி மூன்றாம் ஆண்டு :

நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் இஸ்லாத்தின் அடிப்படை யான மூலமந்திரமான கலிமாவை விதைத்த மக்கமா நகரிலிருந்து மதீன மாநகர் வந்து அப்பொழுது மூன்றாம் ஆண்டு நடைபெற்றுக் கொண்டிருந்தது. இவ்வாறு மூன்றாம் ஆண்டு நிகழ்வதை உமறுப் புலவர்,

"மருந்தெ னுங்கலி மாவுரை விதைத்துமக் காவி
லிருந்து மாமதீ னாவிடத் தினிதெழுந் தருளித்
திருந்த வாண்டொரு மூன்றினில்........."

(அசனார் பிறந்த படலம் : 1)

இந்த ஹிஜ்ரி மூன்றாம் ஆண்டில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சில சம்பவங்களை உமறுப்புலவர் இங்கு குறிப்பிடுகின்றார். இங்கே றசூல் நாயகம் (சல்) அவர்களுடைய வாழ்க்கையோடு நெருங் கிய தொடர்புடைய சில விவரங்களை வருணிக்கிறார். அசனார் பிறந்த படலத்தில் இந்த விவரங்கள் இடம் பெறுகின்றன. '...குலவு

நீள்புக ழுமறுகத் தாபெனுங் குரிசில்' (2) என்று வருணிக்கப்பட்டுள்ள உமறுகத்தாப் (றலி) அவர்களின் புதல்வியான,

''அருந்த வத்தினி லீன்றெடுத் துவந்தபெண் ணரசைக்
கருந்த டங்கயற் கண்ணியை நறுமொழிக் கனியை
வருந்து மெல்லிழைக் கொடியை மென் பிடிநடை மயிலைப்
பொருந்து மாரமு தைஅபு சாவெனும் பூவை''

(அசனார் பிறந்த படலம் : 3)

''குறைஷி யங்குலக் காவினி லுறைந்தகோ குலத்தைப்
பொறையு நீதியு மொழுக்கமும் விளைத்தபொன் னிலத்தை
யுறையுங் கற்பினுக் குறையிடத் தினையொளிர் மணியை
மறையி னோர்நபி முகம்மது வதுவையின் மணந்தார்.''

(அசனார் பிறந்த படலம் : 4)

என்று உமறுப்புலவரால் வானளாவப் புகழ்ப்பெற்ற ஹப்ஸா (றலி) அம்மையார் அவர்களை ஹிஜ்றி மூன்றாம் ஆண்டிலே 'மறையி னோர் நபி முகம்மது வதுவையின் மணந்தார்' என வருணிக்கப்பட்டுள்ளது. இதே ஆண்டில் தான் அண்ணல் நபி (சல்) அவர்களின் புதல்வியருள் ஒருவரானஉம்மு குல்தூம் (றலி) அம்மையாரை (மாதருக்கர சும்முக்குல் தூமணி விளக்கை (6) உதுமான் இப்னு அப்பான் (றலி) அவர்களுக்குத் திருமணம் செய்துவைக்கப்பட்டது. இங்கே நபிகள் பெருமானாரின் மற்றொரு திருமணம் குறிப்பிடப்படுகிறது. உசைமா அவர்களின் புதல்வி 'ஸெயினபைப் பொறைச்செழு மழுதை' (8) அண்ணல் நபி (சல்) அவர்கள் திருமணம் புரிந்து எல்லா வளங்களோடும் வாழ்ந்தார்கள் என்று குறிப்பிடப்படுகிறது. அதே ஆண்டில் பாத்திமா (றலி) நாயகி அவர்கள் ஒரு புதல்வரைப் பெற்றெடுத்தார்கள்.

''இறம லான்பதி னைந்தினில் வெள்ளியி னிரவின்
மறுவில் கற்புடை பாத்திமா வெனுந்திரு மடமா
னறமும் வெற்றியு மோருரு வெடுத்தென வரிதிற்
பொறையு யிர்த்தன ரொளிதர வொருபுதல் வனையே''

(அசனார் பிறந்த படலம் : 11)

அப்புதல்வருக்கு நபிகள் பெருமானார் பெயர் இட்டமையும் இங்கு வருணிக்கப்பட்டுள்ளது.

''..................செம்மல்
வசைய றுங்கரத் தெடுத்தரும் பேரனை வாழ்த்தி
யசனெ னச்செழுந் திருப்பெயர் தரித்தன ரன்றே''

(அசனார் பிறந்த படலம் : 18)

ஹிஜ்றி மூன்றாம் ஆண்டில் இஸ்லாமிய வரலாற்றிலே இரண்டாவது முக்கியமான போர் நிகழ்ந்தது. மதீனாவுக்கு அருகாமையில்

உள்ள உகுது மலை அடிவாரத்தில் நிகழ்ந்தமையால் அப்போர் உகுதுப்போர் என அழைக்கப்பட்டது. அன்று வெள்ளிக்கிழமை ஷவ்வால் மாதம் 14-ஆம் நாள். குத்துபாத் தொழுகைக்குப் பின்னர் முகம்மது (சல்) அவர்கள் போருக்கு ஆயத்தமானார்கள். இந் நிகழ்ச்சி

''பேத மற்றஷவ் வாலென வுரைத்திடும் பெரிய
மாத மேழிரண் டினில்வெள்ளி வாரத்தின் வணங்கி
யோது குத்துபாத் தொழுதபின் மறையிய மொலிப்பத்
தீத றும்படி யெழுந்தனர் ஹபீபெனுஞ் செம்மல்''

(உகுதுப் படலம் : 77)

என சீறாப்புராணத்தில் வருணிக்கப்பட்டுள்ளது. உகுதுப் போரில் பங்கு கொண்ட முஸ்லிம்களின் எண்ணிக்கை (700) 'தீனவரேழு நூறு' (பா. 85) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. உகுதுப் போரிலே முஸ்லிம் களுக்கு ஏற்பட்ட பேரிழப்பு அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சிறிய தகப்பனாரான ஹம்ஸா இப்னு அப்துல் முத்தலிப் (றலி) அவர்கள் வபாத்தானமையேயாம். வஹ்சி என்பவனின் குத்து வாளுக்கு இரையான ஹம்ஸா (றலி) அவர்கள் 'தள்ளாடித் தள்ளாடி அல்லாஹு-த் தஆலாவையும் அவனது திருத் தூதரையும் நினைவு படுத்திக் கொண்டு படிக்கும் நல்ல மொழியாகிய கலிமாவை அடிக்கடி கூறிக்கொண்டவராய் நிலத்திலே வீழ்ந்தார்கள். அவருடைய உயிர் பிரிந்தது. அவரும் சுவனபதிக்கு ஏகிவிட்டார்.' இக்கருத்துக்களை இவ்வாறு அமைத்துப் பாடுகிறார் ஆசிரியர் :

''மெல்ல நின்றுநின் றசைந்தசைந் துணர்வுமே லாட
இல்லல் லாவையும் ஹபீபையு முளத்தினி லிருத்தி
கல்லு நன்மொழி வாக்கினி லடிக்கடி கலிமாச்
சொல்லி வீழ்ந்தனர் போயின ருறைந்தனர் சுவனம்''

(உகுதுப் படலம் : 241)

உகுதுப் போரிலே அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஒரு பல் ஒரு கல் தாக்கியதனால் சேதமுற்றது. சிதைந்தது. இதன் பயனாக உணர்வு உள்ளவர்களாக பூமியில் சாய்ந்தார்கள். அசுகாபிமார் சகீதாகவும் வபாத்தாகவும் பெருமானார் (ஸல்) அவர்களின் பல் சகீதாகவும் சிதையவும் அல்லாஹு-வின் ஏவலே காரணம் எனக் கூறிய உமறுப் புலவர் ஒரு கேள்வியையே எழுப்புகிறார். எந்த உலகத்திலும் துன்பம் இல்லாதவர்கள் யார் தான் இருக்கின்றனர் ? ஒருவருமில்லை என்ற பதிலைத் தொனிக்க வைக்கிறார். இக்கருத்துக்கள் அடங்கிய இரண்டு செய்யுட்களையும் பார்ப்போம்.

''ஈத லாதொரு கவண்கல்கீழ் வாய்ப்புறத் திலங்குஞ்
சோதி மூரலுஞ் சிதைத்திடத் தைத்தது தொகுத்த
பூத லத்தினி லுணர்வுடன் சாய்ந்தனர் பொருவா
மாதி ரத்தொடு மதியொடும் பேசிய வள்ளல்''

''பத்தி மீறிய தீனவர் படவுமக் கவணாற்
றத்தி தத்தியிற் படரொளி முகம்மது தமக்குங்
கத்த னேவலிற் றுனிவந்து றுதிய தென்றா
லெத்த லத்தினு மியாவரே துன்பமிலாதார்.''

(உகுதுப் படலம் : 244-245)

உகுதுப் போரிலே வீரமரணம் எய்திய முஸ்லிம்களின் தொகை 65 என்பதை உமறுப்புலவர் 'அறுபத்தைந்து' (பா. 264) எனக் குறிப்பிடுகிறார்.

### ஹிஜ்றி நான்காம் ஆண்டு :

அடுத்து ஹிஜ்றி நான்காம் ஆண்டில் நிகழ்ந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சம்பவங்கள் விவரிக்கப்படுகின்றன. இந்த ஆண்டிலே தான் 'கஸ்று'த் தொழுகை முஸ்லிம்களுக்கு விதியாக்கப் பட்டது. கஸ்றுத் தொழுகையைப் பறுலானதாக்கும் இறை வசனம் இறங்கியது. இஸ்லாமிய சன்மார்க்கத்தில் விலக்கப்படாத பிரயாணங் களில் ஈடுபடுவோர் அதாவது ஏறத்தாழ 80 மைல் தூரப் பிரயாணத் தில் ஈடுபடுவோர் 'அதாவாக' இருந்தாலுமோ 'களாவாக' இருந் தாலுமோ நான்கு றக்கஅத்துள்ள பறுளுத் தொழுகையை இரண்டு றக்கஅத்துக்களாகச் சுருக்கித் தொழலாம். இத்தகைய தொழுகையே கஸ்றுத் தொழுகை என அழைக்கப்படுகிறது. ஹிஜ்றி நான்காம் ஆண்டில் கஸ்றுத் தொழுகை முஸ்லிம்களுக்குப் பறுளாக்கப்பட்ட தென்னும் இறைமறை வசனம் இறங்கிற்று என்று உமறுப்புலவர்,

''வந்த தெண்ணிய கிஜுறத்து நான்கெனும் வருடஞ்
சிந்தை கூர்தரக் கசறெனுந் தொழுகையைச் செய்த
லெந்த நாட்டினு மேகுவோர் மேல்பறு லென்ன
வந்த மில்லவ னாரண மிறங்கின வன்றே''

(உசைனார் பிறந்த படலம் : 1)

இவ்வாறு கூறுகிறார். அதே ஆண்டில் அபூ உமையா அவர்களின் புதல்வி உம்மு ஸல்மா (றலி) அவர்களை அண்ணல் நபி (சல்) அவர்கள் திருமணம் புரிந்தார்கள் இதனையே உமறுப்புலவர் ''......அபூ உமையா, பேறி னால்வரும் பேதைய ரும்முசல் மாவை . , ஈறிலானபி திருமண முடித்தனர்......'' (உசைனார் பிறந்த படலம் : 2) என வருணித்துள்ளார். உசைன் (றலி) அவர்களின் பிறப்பு அடுத்து வருணிக்கப்படுகின்றது. அதே ஆண்டு சகுபான் மாதம் ஐந்தாம்

நாள் உசைன் (றலி) அவர்கள் பிறந்தமை இவ்வாறு விவரிக்கப் பட்டுள்ளது.

''பின்னு மவ்வரு டஞ்சகு பானெனப் பேசு
மன்ன திங்களிற் றேதியோ ரைந்தினி லழகார்
மின்னு பூணணி பாத்திமா வயிற்றினில் விளங்கி
யுன்னு காரணத் துடன்உசை னார்நிலத் துதித்தார்''
(உசைனார் பிறந்த படலம் : 3)

இந்தப் படலத்தில் உள்ள 7-ஆம், 8-ஆம் செய்யுட்களில் அபூதாலிப் அவர்களின் அருமை மனைவியார், அண்ணல் நபி (சல்) அவர்களை நாள்தோறும் வளர்த்து தாய்க்குப் பதில் தாயாக இருந்த பாத்திமா அம்மையார் அவர்களின் மறைவுபற்றிக் குறிப்பிடப்படுகிறது. 17-ஆம் பாடலில் இவ்வம்மையாரின் புதல்வர்களினதும் புதல்வியர்களினதும் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

வாஷிங்டன் இர்விங் (Washington Irving) என்னும் வரலாற்று ஆசிரியர் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை வெகுவாகப் பாராட்டியுள்ளார். தாதுர் என்னும் காட்டறபிக்கும் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கும் இடையே நடந்த சம்பவத்தையே அவர் அவ்வாறு புகழ்ந்து எழுதியுள்ளார். நபிகள் பெருமானார் அவர்களுக்கு அல்லாஹுத்தஆலா மீதிருந்த அளப்பரிய நம்பிக்கை, மிக்க அபாயகரமான சந்தர்ப்பத்திலும் அவர்களுக்குப் பேருதவியாக இருந்தது என்பதைத் தெள்ளிதிற் புலப்படுத்திக்கொண் டிருக்கிறது அச்சம்பவம். கத்பான் வெற்றிக்குப் பின்னர் முகம்மது நபி (சல்) அவர்களும் தோழர்களும் திரும்பி வந்து கொண்டிருந்தனர். பாலையைக் கடந்து ஒரு காட்டினில் தங்கினார்கள். அங்கே ஓரிடத் தில் எல்லோரும் நித்திரை கொண்டார்கள். நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மற்றவர்களை விடச் சற்றுத் தள்ளித் தூங்கிக்கொண்டிருந் தார்கள். நபிகள் பெருமானாரைக் கொல்லக் கருதியவனாக நித்திரை செய்து கொண்டிருக்கும் நபிகள் பெருமாரின் கைவாளை தன் கையில் எடுத்துக்கொண்டான் அந்த அறபி. இதனை உமறுப்புலவர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

''துன்ற ருங்குணத் தூதர்கை வாளினைச்
சென்றெ டுத்தடற் செங்கையிற் சேர்த்தினான்''
(தாத்துற்ற ஹாக்குப் படலம் : 47)

நபிகள் பெருமானாரின் சிறந்த பண்பினைக் குறிப்பிட 'நெருங்குதற்கு அருமையான குணத்தை உடையவர்' எனப் பொருள்பட 'துன் றருங்குணம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த வாளினைக் கையில் எடுத்துக் கொண்டவனாய் முஸ்லிம்களைப் பழிக்கு முகமாக உம்மை இரண்டு துண்டாக்குவேன். உம்மைத் தப்பிப்பவர்

யாவர்? என்று மமதையுடன் கேட்டான். அவன் 'ஒருவரும் இல்லை' என்ற பதிலையே எதிர்பார்த்தான். இக் கருத்துக்கள் பொதிந்த செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

''மண்டு செம்புன லாடிய வாளுரீஇக்
கொண்டு தீனர் குறைபட வேயிரு
துண்ட மாக வுனைத்துணிப் பேனது
கண்டி யாவர் விலக்குவர் காணென்றான்''

(தாத்துற்ற ஹாக்குப் படலம் : 49)

நபிகள் பெருமானார் அஞ்சா நெஞ்சினராய் இவ்வாறு பதிலளித்தார்கள். 'எனது வாள் (நாந்தகம்) உன் கையிலாயது. வெற்றியைத் தமதாக்கிக் கொண்ட வீரர்களான சஹாபாக்களும் நித்திரை கொள்கின்றனர். என்னை மடக்குவதற்காக இவ்வாறு பேசினாய். அல்லாஹ் ஒருவனே என்னைக் காப்பாற்றுபவன். வேறொருவருமில்லை' என்றார்கள். இக்கருத்துக்கள் பொதிந்த பாடல் இதோ,

''உறைகொ ணாந்தக முன்கையி னாயின
விறல்கெ ழீஇவய வீரருந் துஞ்சினர்
பெறுக நீயெதி ரிம்மொழி பேசினை
யிறைவ னேயெனைக் காப்பன்மற் றில்லென்றார்''

(தாத்துற்ற ஹாக்குப் படலம் : 50)

இதனைக் கேட்டதும் அவன் கையில் ஏந்திய வண்ணம் இருந்த பிரகாசமான வாள் (கோணம்) அவனது சிவந்த கையிலிருந்து நிலத்தில் விழுந்துவிட்டது. ஒருவர் நினைத்தபடி இன்னொருவரைக் கொல்ல முடியுமோ என ஒரு கேள்வியையும் இங்கே எழுப்புகிறார் கவிஞர். இதுதான் அந்தச் செய்யுள் :

''அன்ன காலையி னாங்கவ னேந்திய
மின்னு கோணம் விரல்கள் சிவப்புற
மன்னு செங்கை பறித்துமண் வீழ்ந்தன
வுன்னு மப்படி கொல்லவு மொண்ணுமோ''

(தாத்துற்ற ஹாக்குப் படலம் : 51)

தாதுர் எதிர்பாராத பதில் அது. அவன் கையிலிருந்து விழுந்த வாளினை (வைவாள்) நபிகள் நாயகம் (சல்) அவர்கள் ஒரு நொடிப் பொழுதில் நிலத்திலிருந்து எடுத்து 'இனி உன்னுடைய இனிய உயிரை வானலோகத்தின்கண் போகச் செய்வேன். அதனைத் தடை செய்யக் கூடியவர் உலகில் யாவர்? ஒருவருமிலர்' என்று கூறினார்கள். இக்கருத்துக்களே,

''விடுத்த மண்ணிடை வீழ்ந்தவை வாளினை
யெடுத்து வள்ள லினியுன தாருயிர்
படுத்து விண்ணுல கேற்றுவன் பாரினிற்
றடுத்து நிற்பவ ரியாரெனச் சாற்றினார்''

(தாத்துற்ற ஹாக்குப் படலம் : 52)

என அமைந்துள்ளன. தனக்கு உதவி செய்ய அங்கு எவருமில்லை என்பதை உணர்ந்து கொண்ட அந்த தாதுர் என்னும் அறபி தான் செய்த பெரிய குற்றத்தை ஆண்டவனுக்காக மன்னித்தருளும்படி வேண்டி நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் சரணடைந்தான். இதனையே உமறுப்புலவர் இவ்வாறு கூறுகிறார்.

''பிறர்க்க டாத பெரும்பிழை நெஞ்சினிற்
குறிக்கு நீர்மையன் செய்தவிக் குற்றமே
மறைக்க ணின்று வளரிறைக் காகநீர்
பொறுக்க வேண்டு மெனச்சரண் பூண்டனன்''

(தாத்துற்ற ஹாக்குப் படலம் : 56)

தாதுர் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சியை வருணிக்க உமறுப்புலவர் உபயோகித்த செய்யுட்களிலே வாளைக் குறிக்கக் கைவாள், நாந்தகம், கோணம், வைவாள் என்பன பயன்படுத்தியுள்ளமை ஈண்டு நோக்கற் பாலது.

பனூ முஸ்தலிக்கு கோத்திரத்தவர் மதீன மாநகரின் சுற்றுப் புறத்தில் கலகம் விளைவித்துக் கொண்டிருந்தனர். இவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் முறைசீக் என்னும் இடத்தில் சண்டை மூண்டது. இவர்கள் தோற்கடிக்கப்பட்டனர். பலர் கைது செய்யப் பட்டனர். இவர்களுள் பனூ முஸ்தலிக் கோத்திரத்தின் தலைவரான ஹாறித் பின் அபீலர்றார் என்பவரின் புதல்வி ஜுவைறியா (றலி) அம்மையாரும் ஒருவர். தாபித் இப்னு கைஸ் (றலி) அவர்களின் பங்காக அவர்களுக்கு ஜுவைறியா அம்மையார் கொடுக்கப்பட்டார். இந்நிகழ்ச்சி இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

''தருமந்திகழ் தாபித்தென வருமன்னவர் சார்பின்
வருமந்திகழ் தரு ஆரிது வரத்தாலவ தரித்த
திருவுங்குண நலனும் பெறு செயலும்பொறை நிறையு
முருவந்தமு முறவந்தனள் ஜுவைறாவென வொருமான்''

(முறைசீக்குப் படலம் : 45)

ஒன்பது மிஸ்கால் தங்கம் தந்து 'உம துடன் மீளுதி யென்றார்' தாபித் (றலி) அவர்கள். (47) இந்தச் சொல்லைக் கேட்டதும் ஜுவைறியா (றலி) அம்மையார் 'நபி திரு முன்னரின் வந்தாள்' (48) வந்து தான் தாபித் என்பவரின் சிறைக்கைதி என்றும் அவர்

'தலை விலை ஈந்து இனி நீ போ' எனக் கூறினார் என்றும் ஆதலி னால் இங்கே வந்ததாகவும் 'ஹயிறாக' (நல்லறமாக) இருக்கும் என்றும் அதற்கான பொருள் தருமாறும் கேட்டார். இக்கருத்துக் களையே உமறுப்புலவர் இவ்வாறு கூறுகிறார்,

''தீனோர்களில் தாபித்தெனுந் திறன்மன்னவர் சார்பி
லானேன்றலை விலையீந்தினி நீபோகென வறைந்தார்
வானூர்மதி யனையீர்மன் மகிழ்ந்தேகயி றாக
யானேயிவ ணடைந்தேன்சில பொருளீகுமி னையா''

(முறைசீக்குப் படலம் : 51)

அண்ணல் நபி (சல்) அவர்களும் அவ்வாறே பொருளை ஈந்து ஜுவைறியா (றலி) அம்மையாரை விடுதலை செய்வதற்கான வழி கோலினார்கள். அவ்வம்மையாரோ விடுதலை பெற்றுத் தமது தந்தை யாருடன் செல்ல மறுத்து தாம் றசூலுல்லாஹ்வின் சமுகத்திலேயே வாழ விரும்புவதாகக் கூறினார்கள். அவர்தம் விருப்பப்படி அடிமை யாகப் பிடிக்கப்பட்டு விடுதலை பெற்ற ஜுவைறியா (றலி) அம்மை யாரைத் திருமணம் புரிந்தார்கள். இதனை அறிந்த ஏனையோரும் தத்தம் அடிமைகளையும் விடுதலை செய்தனர் என்று உமறுப்புலவர் இவ்வாறு பாடுகிறார்.

''மட்டார்தொடைப் புயத்தாரிது மகளார்ஜுவை றாவை
யொட்டாதரும் புகழ்மாநபி மணமெய்தலு மெவரும்
கட்டாம்புடி சிறையாவையும் கடிதின்பய னுரிமை
விட்டாரிவர் நகர்மேவிய சுற்றம்மெனும் விருப்பால்''

(முறைசீக்குப் படலம் : 60)

இந்த ஹிஜ்றி ஆண்டிலே மற்றொரு முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி நடந்துள்ளது. நீர் வேண்டிய விடத்து நீரில்லையே, ஒலுச் செய்ய முடியாமல் இருக்கிறதே, அதன் விளைவாகத் தொழமுடியாமல் இருக்கிறதே. கடமைகளை நிறைவேற்ற முடியாமல் இருக்கிறதே என்று கவலை கொள்ளாமல் இருத்தற் பொருட்டு பறுளான கடமை களைத் தப்பாது செய்வதற்கு ஒரு வழியாக தயம்மும் செய்து கொள்ள லாம் என்று அல்லாஹுத்தஆலா விதித்தான் என்று ஜிபுறீல் (அலை) அவர்கள் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அறிவித்தார்கள். இதன் பயனாக நீர் கிடைக்கவில்லையே என்ற கவலையும் அகன்றது. இக்கருத்துக்களையே உமறுப்புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

''நெஞ்சாகுல மறநீரக மில்லாவிட நியமந்
துஞ்சாவகை தயமுஞ்செய்து தொழமேலவன் விதியின்
மிஞ்சாரண மொழியாரமு திஃதென்ன விரைந்து
மஞ்சார்வெளி வழியேகொடு வந்தார்ஜிபு றீலே''

(முறைசீக்குப் படலம் : 39)

இதனை அறிந்ததும் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் இம்முறை மையை மேற்கொண்டார்கள் என்பதனை,

''..................இவரும்பிற ருளரு
முருகும்படி பிறிதொன்றையு நினையாதொரு பொருளைத்
தருமந்திர நெறியின்படி தயமுஞ்செய்து தொழுதார்''
(முறைசீக்குப் படலம் : 40)

என உமறுப்புலவர் வருணித்துள்ளார்.

அபூ சுபியானின் தலைமையில் பத்தாயிரம் போர் வீரரைக் கொண்ட ஒரு சைனியம் மதீன மாநகரைத் தாக்கும்பொருட்டு முன்னேறி வருவதாக எம்பெருமானார் (சல்) அவர்களுக்குச் செய்தி எட்டியது. இதனைத் தடுக்க எடுக்கவேண்டிய நடவடிக்கைகளைப் பற்றி தோழர் அசுகாபிமாருடன் கலந்தாலோசித்தார்கள் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள். இவ்வாறு கலந்தாலோசித்த பொழுது சல்மான் பாரிசி (றலி) அவர்கள் தமது கருத்தைத் தெரிவித்தார்கள். 'வண்மைத் தக்க, தருவென வுதவுஞ் சல்மான் பாரிசி......சொல்வார்' (கந்தக்குப் படலம் : 42) கத்பான், அசத், அவுஸ், கனானா, யூதர் முதலிய கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் மக்காவிலிருந்து வந்த முஸ்லிம் அல்லாதாரின் அணியில் இடம் பெற்றனர் என்பதை சல்மான் பாரிசி (றலி) அவர்கள் கூறிய விதத்தினை உமறுப்புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடியுள்ளார். ஒவ்வொரு கோத்திரத் தாரையும் வெவ்வேறு அடைமொழி கொடுத்து வருணித்துள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

''வசையிலாக் கத்பா னென்னு மாயமு மதிப்பில் லாத
அசதெனுங் குழுவு மிக்க அவுசெனுங் கணமு மூரித்
திசைபுகழ் தருங்கனானாச் சங்கமுந் திரட்டி யென்று
மிசையறு மெஹூதிக் காபிர் தம்மொடு மீண்டி னானால்''
(கந்தக்குப் படலம் : 39)

ஓர் அகழியின் அவசியத்தை வலியுறுத்திய சல்மான் பாரிசி (றலி) அவர்கள் '......தீனர் சூழ்தர வகழொன்று திருத்துவ மென்றார்' (45) இவ்வாறு 'தூய பேரக ழியற்றியிங் கிருந்தனர்' (83). உயை வந்த படலத்தில் அகழ்ப்போர் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது. அமீர் இப்னு அப்துத் என்பவனுக்கும் அலி (றலி) அவர்களுக்கும் மும்முர மாக நடைபெற்ற போர் இப்படலத்தில் நுணுக்கமாக விவரிக்கப் படுகிறது. இப்படலத்தில் 72 முதல் 77 வரை உள்ள செய்யுட்களில் எதிரிகளின் தோல்வி விரிவாக வருணிக்கப்பட்டுள்ளது. அகழ்ப் போரில் ஏற்பட்ட தோல்வி இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''கங்கு தப்பிய கத்துபான் குழுவுங்க னானாச்
சங்க மும்பெரும் படைக்கட லசத்தெனுஞ் சவையும்
பங்க மெய்திடும் பனீகுறை லாவெனும் படையு
மங்கி ருந்தில சிதறின வோடின வன்றே''

(உயை வந்த படலம் : 181)

இச்செய்யுளிலும் வெவ்வேறு கோத்திரங்கள் வெவ்வேறு அடைமொழிகளால் வருணிக்கப்படுவதும் குறிப்பிடத்தக்கது. இந்தப் போர் - மதீனாவின் முற்றுகை 27 நாட்கள் நடைபெற்றது என்று வரலாறு கருதுகிறது. ஆனால் உமறுப்புலவரோ தமது சீறாப்புராணத்தில் அகழ்ப்போர் நடைபெற்ற கால எல்லையை இருபது நாளும் சொச்சமும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

''இனைய மன்னர்நா ளிருபதுஞ் சின்னமு மிருந்து,
மனமு ழுன்றகம் வெருவியோ டினர்.''

(உயை வந்த படலம் : 182)

இச்செய்யுளில் 'சின்னம்' என்னும் சொல் 'சொச்சம்' என்னும் பொருளில் உபயோகிப்பட்டுள்ளது.

### ஹிஜ்றி ஐந்தாம் ஆண்டு :

ஹிஜ்றி நான்கு ஆண்டுகள் நிறைவு பெற்று ஐந்தாம் ஆண்டு நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஖ுமாம் ஈமான் கொண்ட படலத்தில் இச்செய்தி '...விலக்கரிய வருடமொரு நான்குநிறைந் தைந்தாண்டு மேவும் போதில்...' (பா. 1) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த ஆண்டும் இஸ்லாமிய வரலாற்றிலே முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சிகள் நடந்தேறியுள்ளன. உலகில் உள்ள முஸ்லிம்களுக்கு இஸ்லாமிய கடமைகளுள் ஐந்தாவதான ஹஜ் கடமை விதியாக்கப்பட்டுள்ளது. 'அவனி மீதிற் றுலக்கமுற வந்தஹஜ்ஜு பறுலான தின்று முதற் றொழுவீ ரென்றே' (பா. 1).

இருதயத்தின் இடத்துள்ள அறிவை நீக்குதல் அருமையானது. அத்தகைய அறிவையும் அகலச் செய்ய வல்லது ஒன்று உண்டு. சரீரத்திற்கு மயக்கம் வருதல் அபாயகரமானது. அத்தகைய அபாயகரமான மயக்கத்தையும் உண்டாக்க வல்லது அது. நண்பர்களைப் பிரிப்பதும் எளிதான காரியம் ஒன்றன்று. அத்தகைய நட்புறவையும் நொடிப்பொழுதில் உடைத்தெறிந்து நண்பர்களை எதிரிகளாக்க வல்லது அது. எப்பொழுதும் ஒருவன் பேசும்பொது பொறுப்புணர்ச்சியுடனே பேசுதல் வேண்டும். ஆனால் அதுவோ பேசுவது இன்னது என அறியாது ஒருவனைப் பேசவைக்கும் சர்வ வல்லமையும் உள்ளது. அதுதான் மது. கள்ளாகிய உணவும் வெறியைப்-போதையை உண்டாக்கும் மதுபானமாகிய குடியுமாகும். அது இஸ்லாத்தில் தடுக்கப்

பட்டிருக்கிறது, ஹறாமாக்கப்பட்டிருக்கிறது. இந்த ஹிஜ்றி ஐந்தாம் ஆண்டிலேதான் அல்லாஹுத் தஆலாவினால் மதுபானம் முஸ்லிம் களுக்கு ஹறாமாக்கப்பட்டது. இத்தகைய தடைவிதித்து அருளப் பட்ட திருமறை வாக்கியங்களை அண்ணல் நபி (சல்) அவர்கள் தங்களது அசுகாபித் தோழர்களுக்கு ஓதிக்காட்டி அவற்றின் முக்கியத்து வத்தை விளக்கிக் காட்டினார்கள். இக்கருத்துக்களையே உமறுப் புலவர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

''தள்ளரிய மனத்தறிவு தனையகற்றி
மெய்மயக்கந் தந்து நட்பா
யுள்ளவரைப் பகையாக்கி யுரைப்பதிலை
யெனவறியா துரைக்கப் பண்ணுங்
கள்ளுணவும் வெறிமதுவும் ஹறாமெனவா
யத்துவரக் கண்டன் பாகி
விள்ளரிய மறைப்பொருளை சகுபிகளுக்
குரைத்தெவர்க்கும் விளக்கினாரே''

(லுமாம் ஈமான் கொண்ட படலம் : 2)

ஹிஜ்றி ஐந்தாம் ஆண்டிலேதான் ஸெய்னப் (றலி) அம்மையாரை நபிகள் பெருமானார் திருமணம் புரிந்தார்கள். இவர் சகுசு (ஜஹ்ஷ்) என்பவரின் புதல்வி. ஸெய்னப் (றலி) அவர்களை வருணிக்க வந்த உமறுப்புலவர் உருவக வாயிலாக அம்மாது சிரோமணியை வாயார வாழ்த்துகிறார். பெண்களைக் கவிஞர் கொம்புக்கு ஒப்பிடுவர். கொம்பர் என அழைப்பர். ஸெய்னப் (றலி) அம்மையாரைக் கொம்பே என விளிக்கிறார். கொம்பு என உருவகிப்பவர் உமறுப்புலவர். பெண் என்னும் கொம்பு வளர்ந்தோங்க அன்பு என்னும் வித்து அவசியம். அன்பு என்னும் வித்தில் தோன்றி, புண்ணியம் என்னும் வேரூன்றி, புகழ் என்னும் கிளைகள் பரப்பி, கற்பு என்னும் ஒப்பற்ற மலர் நெருக்க மாக மலர்ந்து, நாடொறும் இன்பம் என்னும் காய்களைக் காய்த்து, ஏக இறைவனான அல்லாஹ்வின் திருவருளே பழுக்கப் பெற்று வளர்ந் தோங்கி இருந்தது. அந்த அழகே உருவான சகுசு (ஜஹ்ஷ்) என்பவரின் மகளான ஸெய்னப் நாச்சியார் என்னும் கொம்பே என உமறுப்புலவர் இவ்வாறு நயம்படப் பாடியுள்ளார்.

''அன்பெனும் வித்திற்றோன்றி யறமெனுஞ் சடைகள் விட்டுக்
தன்புகழ் தழைத்துக் கற்பாந் தனிமலர் செறிந்துநாளு
மின்பமாங் காய்கள் காய்த்திட் டிறையருள் பழுத்த கொம்பே
தென்பயில் சகுசு பெற்ற செயினபு நாச்சி யாரே''

(செயினபு நாச்சியார் கலியாணப் படலம் : 4)

சடை என்னும் சொல் வேர் என்னும் பொருளிலும் தென் என்னும் சொல் அழகு என்னும் பொருளிலும் உபயோகப்பட்டுள்ளதைக் காண

லாம். நபிகள் பெருமானாரின் அடிமையும், சுவீகாரப் புத்திரருமாகிய ஸெய்த் பின் ஹாரிதா (றலி) என்பவர் இவரை மணந்தனர். இறுதியில் இருவரும் பிரிய வேண்டிய நிலை ஏற்பட்டது. ஸெய்த் (றலி) அவர்கள் தமது மனைவியை தலாக் சொல்லிவிட்டார்கள். அடிமையின் மனைவியாக இருந்தமையினால் அம்மாது சிரோன்மணி மறுமண வாய்ப்பில்லாமல் இருந்தார். இத்தகைய சந்தர்ப்பத்தில் அண்ணல் நபி (சல்) அவர்கள் ஸெய்னப் (றலி) அம்மையாரைத் திருமணம் புரிந்து கொண்டார்கள். இச்செய்தியையே,

''அன்றவர் கிருபை யாகி யகமகிழ்ந் திவரோ டென்றும்
ஒன்றிய மனமாய்க் கற்பி லுயர்ந்தவ ரென்ன வாழ்ந்தார்''
(செயினபு நாச்சியார் கலியாணப் படலம் : 16)

உமறுப்புலவர் இவ்வாறு விதந்தோதுகிறார்.

இந்த திருமணத்தின் பின்னரே பெண்களுக்கு நாணம் ஓர் அணிகலம் என்னும் இறைமறைத் திருவாக்கு அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அருளப்பெற்றது. இதனையே உமறுப்புலவர்...... 'இருநிலக் கிழமை பூண்ட, மாதர்க ளெவர்க்கு நாண மணியணிப் பூணாமென்றார்' என வருணித்துள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.
(செயினபு நாச்சியார் கலியாணப் படலம் : 28)

இந்த அடிப்படையிலேதான் பருதா முறை முஸ்லிம் பெண்களிடையே புகுத்தப்பட்டது.

### ஹிஜ்றி ஆறாம் ஆண்டு :

''தனிமுதற் றூத ராறா மாண்டினிற் றகைமை பெற்ற
வனைகழல் சகுபி மார்கள் வழுத்திட விருக்கு நாளில்''
(மழையழைப்பித்த படலம் : 1)

என ஹிஜ்றி ஆறாம் ஆண்டு ஆரம்பமாயது பற்றிக் குறிப்பிடுகிறார் உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில். இந்த ஆண்டிலே தான் புனித உம்றாவை நிறைவேற்ற அண்ணல் நபி (சல்) அவர்கள் அசுகாபித் தோழர்களுடன் மக்கமா நகருக்குச் சென்றார்கள்...... 'மக்கத்தி லோது ஹஜ்ஜுமுறாச் செய்ய உன்னியே, போதுந் தன்மை......' (உமுறாவுக்குப் போன படலம் : 2) என்று இதுவே குறிப்பிடப்படுகிறது. மதீன மாநகரிலிருந்து மக்க மாநகருக்கு ஹிஜ்றி ஆறாம் ஆண்டிலே உம்றா நிறைவேற்றச் சென்றவர்களின் எண்ணிக்கை 1400 என்னும் வரலாற்று உண்மையினை உமறுப்புலவர் 'ஆற்றன் மிக்கவ ராயிர மேலுநா னூற்றிலக்க முடையரும்...... நபியிற சூலினை......ஈண்டினார்' (உமுறாவுக்குப் போன படலம் : 6) என்று இதுவே குறிப்பிடப்படுகிறது. பெருமானார் (சல்) அவர்கள் உம்றா நிறைவேற்ற மதீனாவை விட்டுச் செல்லுமுன் மதீனாவுக்குட்

பொறுப்பாக நுமைலா (றலி) அவர்களை நியமித்துச் சென்றார்கள் என்பது,

''இமய வெற்பென் றிலங்கிய மாடங்க
ளமையுஞ் செல்வ மதீனத்தை யாள்கென
நுமையி லாவைமுன் னோக்கி யுரைத்தவர்
தமைய வூர்க்குத் தனியென வைத்தவர்''
(உமுறாவுக்குப் போன படலம்: 7)

என விவரிக்கப்பட்டுள்ளது.

ஹுதைபிய்யா உடன்பாடு ;

நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடையதாகவும் இஸ்லாமிய வரலாற்றிலே முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் இஸ்லாமிய வரலாற்றிலே ஒரு திருப்பமாகவும் விளங்கிய ஓர் இடம்தான் ஹுதைபியா. இது மக்க மாநகரிலிருந்து ஐந்து மைல் தூரத்தில் அமைந்துள்ளது. கஃபாவின் புனித எல்லையிலே உள்ளது. அண்ணல் நபி (சல்) அவர்களும் தோழர்களும், ஹுதைபியா என்னும் இடத்தை அடைந்தமை சீறாப்புராணத்திலே இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''திண்மை மீறிய தீனர்க ளியாவரு
முண்மை சேர்பய காம்பரு மோங்கிய
வண்மை சேர்மக்க மாநக ருக்கரு
கண்மிச் சேர்ந்தன ராண்டுஹு தைபிய்யா''
(உமுறாவுக்குப் போன படலம் : 30)

இங்கே நபி, தூதர் என்னும் பொருளில் பயகாம்பர் என்னும் பாரசீகச் சொல் உபயோகிக்கப்பட்டுள்ளது. நபிகள் பெருமானாரும் கூட்டத்தினரும் அங்கு வந்ததைச் சந்தேகக் கண்கொண்டு நோக்கிய மக்காக் குறைஷிக் காபிர்கள் ஆளுக்குமேல் ஆளனுப்பிப் பார்த்தார்கள். இக்கூட்டத்தினர் உம்றா செய்யவே வந்துள்ளனர் என்று அனைவரும் திருப்தி அடைந்தனர். இறுதியாக 'சொற்பயின் மதியான் மிக்க சுகயிலென் றொருவன் வந்தான்' (உமுறாவுக்குப் போன படலம் : 75) நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் சுகயில் என்னும் பெயருக்கு கொடுத்த கருத்து இலேசு என்பதும் இங்கு, ''பதித்திவ னாம சாரம் பார்த்திடி லேசாம்......'' (76) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு சுகயில் என்னும் பதத்தின் பொருளை முகம்மது நபி (சல்) அவர்கள் ஆராய்ந்து சொல்ல அற்புதமான நபிகள் பெருமானாரை நோக்கி சுகயில் ஒன்று கூறினார். 'எங்கள் இருசாராருக்கும் இடையில் விற்பனமாக - விந்தையாகச் செய்ய வேண்டிய கருமங்களுக்கு எல்லாம் உற்பனமாக - நன் நிமித்தமாகச் செய்ய வேண்டியது ஒன்று

உண்டு' என்றான். அதாவது இரு சாராருக்கும் இடையே ஒரு சீட்டு எழுதப்படல் வேண்டும் என்று கூறினான். இக்கருத்துக்களே,

''சொற்பொருள் முகம்ம தாய்ந்து சொல்லிட சுகயி லென்போ
னற்புதர் தம்மை நோக்கி யறைகுவ னிருவ ருக்கும்
விற்பன மாகச் செய்ய வேண்டுகா ரியங்கட் கெல்லா
முற்பன மாகச் சீட்டொன் றெழுதுத லுறுதி யென்றான்.''

(உமுறாவுக்குப் போன படலம் : 77)

எனச் சீறாப்புராணத்திலே இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இதற்கிணங்கினார்கள் உம்மி நபி (சல்) அவர்கள். அலி (றலி) அவர்களை அழைத்துச் சீட்டினை எழுதும்படி பணித்தார்கள். 'ஏமநற் புகழீர் சீட்டி லெழுதுவக் கணையே தென்றார்' (78). இது அலி (றலி) அவர்கள் எழுப்பிய கேள்வியாகும். வக்கணை என்பது கடிதம், சீட்டு முதலியவற்றின் முகப்பில் எழுதும் வாசகத்தைக் குறிக்கிறது. வக்கணை எவ்வாறு எழுதப்படல் வேண்டும் எனக் கேட்டதற்கு அண்ணல் றசூல் (சல்) அவர்கள் 'பிசுமில் லாகிற் றகுமா னிற்றகீம்' என எழுதுமாறு பணித்தார்கள். இதனைக் கேட்ட சுகயில் என்பவன் 'பிஸ்மில்' என்பதன் தாத்பரியம் தனக்குத் தெரியும் என்றும் 'அற்றஹ்மா னிற்ற ஹீம்' என்பதனைப் பற்றி தான் இதற்கு முன்னர் கேட்டதில்லை என்றும் சுகயில் கூறினான். இதனைக் கேட்டதும் அண்ணல் நபி (சல்) அவர்கள் தொடர்ந்து கூறினார்கள். இக்கருத்துக்கள் இரண்டு செய்யுட்களில் இவ்வாறு அமைந்துள்ளன.

''இன்புறும் பிசுமில் லாகிற் றகுமா னிற்ற கீமென்
றன்புறு முதலிற் கோட்டென் றகுமது வந்து கூற
முன்புறு சுகைலென் போனு மொழிகுவன் பிசுமில் லாவின்
றன்பெயர் நடக்கும் வண்ண மறிகுவந் தரணி மீதில்''

''அற்றகுமா னிற்றகீ மென்ன வறைகின்ற வார்த்தை யாங்க
டிறனுறக் கேட்ட தில்லை யம்மொழி தீட்ட வேண்டா
நிறைபுக ழுடையீ ரென்று சுகைலினி தியம்பக் கேட்டு
மறைபயி லிறசூ லுல்லா மகிழ்ந்தொரு வசனஞ் சொல்வார்''

(உமுறாவுக்குப் போன படலம் : 79-80)

*சீட்டின் அடுத்த வசனமாக,*

''சொல்லிய விறையா மல்லா தூதரா முகம்ம தென்றுங்
கல்வி சீருடைய வள்ளல் கவுல் கொடுத் திட்ட வாறென்று'' (81)

அதாவது 'இறைவன் அல்லாஹ் ஒருவனே; அவன் திருத் தூதர் முகம்மது' என்று எழுதும்படி கூறினார்கள். இதற்கும் எதிர்ப்புத் தெரிவித்தான் சுகயில். 'உங்களை அல்லாஹ்வின் றசூல் என்று ஏற்றுக் கொண்டோமேயானால் இந்தப் பகைமை எதுவுமே ஏற்பட்

டிராதே' என்று பதில் அளித்த சுகையில் அவ்வாறு எழுதுவதற்கும் எதிர்ப்புத் தெரிவித்தான். கவுல் என்னும் சொல் உடன்படிக்கையைக் குறிக்கின்றது. இதனையே ஒரு செய்யுளின் முதலிரண்டு அடிகளில் கவிஞர்,

''ஆதிதன் றூத ரென்ன வும்மையா மறிந்தோ மாகில்
வேதனைப் படுவ துண்டோ பகைசில விளைவ துண்டோ'' (82)

எனக் குறிப்பிட்டுள்ளார். இச் சொற்றொடரை ஏற்க மறுத்ததனால் நபிகள் பெருமானாரும் அதனை மாற்றும்படி உத்தரவிட்டார்கள். மாற்றி அந்தச் சொற்றொடரை நீக்கி சமாதானத்தையே நாடியவர்களாய் அதற்கு மாறாக 'அப்துல்லா மகன் முகம்மது அன்போடு கொடுத்த இணக்கத்துக்கிணங்க இம்முறை உம்றா நிறைவேற்ற மக்காக் குறைஷியர்கள் வழிவிடவேண்டும்' என்று எழுதுமாறு பணித்தமையை உமறுப்புலவர்,

''அரியதோர் புகழ்சேர் வண்மை யப்துல்லா முகம்ம தென்போர்
பரிவொடு கவுல்தா மீந்த படியுமு றாச்செய் தேக
வரிசையாய் மக்கத் துள்ளோர் வழிவிடக் கடவ தென்று
தெரிவுறத் தீட்டு கென்றார் சுகயில்பின் சிறிது சொல்வான்''
(உமுறாவுக்குப் போன படலம் : 83)

எனக் குறிப்பிட்டுள்ளார், இந்த நிபந்தனைக்கு மாறாக வேறொரு நிபந்தனையை இந்த உடன்பாட்டில் எழுதுமாறு கூறினான் சுகயில். 'இந்த ஆண்டு திரும்பிச் செல்லுங்கள். அடுத்த ஆண்டு வாருங்கள். அவ்வாறு வந்தால் உங்களையும் உங்கள் கூட்டத்தாரையும் ஹஜ்ஜையும் உம்றாவையும் நிறைவேற்ற விடுவோம்' என்று ஒரு நிபந்தனை எழுதுமாறு கூறினான். இதனையே உமறுப்புலவர் இவ்வாறு வருணிக்கிறார் :

''அம்மொழி பொருந்தா திந்த வாண்டினுக் ககன்று போகிச்
செம்மையா யெதிர்ந்த வாண்டின் மீண்டிவண் செறிந்த காலை
யும்மையாஞ் செறுத்தி டாம லுவந்துஹஜ் ஜுமுறாச் செய்ய
வெம்மையி லாது விட்டு விடலென வெழுது மென்றான்''
(உமுறாவுக்குப் போன படலம் : 84)

சுகயிலென்பவன் சொன்ன நிபந்தனையை எழுதும்படி அண்ணல் நபி (சல்) அவர்கள் அனுமதி வழங்கினார்கள். அலி (றலி) அவர்கள் அவ்வாறே எழுதினார்கள். அதனை நபிகள் நாயகம் (சல்) அவர்கள் கொடுக்க சுகயில் என்பவன் அதனைப் பெற்றுக்கொண்டு மிக்றசு என்பவனுடன் மக்க மாநகரை அடைந்தான். இந்நிகழ்ச்சி சீறாப் புராணத்தில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''எழுதின ரலியு மன்னோ ரியைந்திடும் படியே சற்றும்
வழுவறக் கடுதா சின்கண் வரைந்தவுத் தரத்தை யென்றும்
பழுதிலான் றூதர் நல்கப் பரிந்தந்த சுகயில் வாங்கி
யெழுகென மிக்ற சோடிவ் விருவரு மக்கம் புக்கார்''

(உமுறாவுக்குப் போன படலம் : 87)

முஸ்லிம்களுக்கும் முஸ்லிம் அல்லாதாருக்கும் இடையில் ஹுதை பிய்யா என்னும் இடத்தில் ஏற்பட்ட உடன்படிக்கையில் இடம் பெற்ற எல்லா நிபந்தனைகளும் சீறாப்புராணத்தில் வருணிக்கப்படவில்லை. உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் உள்ள உமுறாவுக்குப் போன படலத்தில் உம்றா பற்றிய செய்தியையே விவரிக்க முற்பட்டாராகை யால் உடன்படிக்கையில் இடம் பெற்ற ஏனைய நிபந்தனைகளை விட்டிருக்கலாம். முஸ்லிம்கள் அணியிலிருந்த பலருக்கு இந்த உடன் படிக்கையில் நியாய மற்றவை எனத் தோன்றிய நிபந்தனைகளைப் பற்றியும் அத்தகைய எதிர்ப்பினைத் தெரிவித்தவர்களைப் பற்றியும் உமறுப்புலவர் குறிப்பிடவில்லை. அந்தச் சம்பவங்களும் இந்தப் படலத்துக்குப் பொருத்தமற்றவை எனக் கருதப்பட்டிருக்கலாம். மக்காக் காபிர்களின் சார்பில் உடன்படிக்கையில் கைச்சாத்திட்ட தீமையே உருவெடுத்தவர்களான சுகயிலும் மிக்றசும் மக்காவுக்குத் திரும்பிச் சென்றுவிட்டனர். ஆனால் நபிகள் பெருமானார் (சல்) அவர்களுக்கும் அவர்களது தோழர்களுக்கும் அவ்வாறு திரும்பி மதீன மாநகருக்குச் சென்றுவிடமுடியாது. ஏனெனில் அவர்கள் ஒரு குறிக் கோளை நிறைவேற்றவே அங்கு வந்தவர்களாவர். ஹஜ்ஜோடு சம்பந்தப்பட்ட உம்றா நிறைவேறும் நோக்கத்தோடே அவர்கள் அங்கு வந்தார்கள். அதற்காக நிய்யத்து வைத்திருந்தார்கள். அந்த அவர் களது நிய்யத்தை - எண்ணத்தை நிறைவேற்றும் முகமாக ஓர் ஒட்டு கத்தைக் குறுபான் கொடுத்தார்கள். அர்ப்பணித்தார்கள். உடலில் கத்தூரி மணம் (நானம்) கமழும் அண்ணல் (சல்) அவர்கள் இவ்வாறு தோழர்களுடன் சேர்ந்து நிய்யத்தை நிறைவேற்றியமைபற்றி இவ் வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''மாயத்தின் வடிவ தாக வந்தவர் போய பின்னைக்
காயத்தி னானம் வீசும் ஹபீபுஹஜ் ஜுமுறாச் செய்ய
நீயத்து நினைந்த தன்மை தடையற நீங்க வேண்டித்
தேயத்தோர் புகழ வொட்டை யறுத்துநற் குறுபான் செய்தே''

(உமுறாவுக்குப் போன படலம் : 88)

**உதுமான் (றலி) :**

ஹுதைபிய்யா உடன்படிக்கையை விவரித்த பின்னரே உமறுப் புலவர் உதுமான் (றலி) அவர்கள் மக்காவுக்கு அனுப்பப்பட்ட நிகழ்ச்சி யைக் குறிப்பிடுகிறார். நபிகள் பெருமானார் உதுமான் (றலி)

அவர்களை வேண்டியதும் அவர்கள் அங்குச் சென்றதும் ஒரு செய்யுளில் இவ்வாறு விவரிக்கப்படுகிறது.

"மடிவிலா வுதுமா னென்னும் வள்ளலை யினிது கூவித்
துடவை சூழ் மக்க மென்னுந் தொன்னகர்க் கேகு மென்னப்
படிபுகழ்ந் தேத்த வன்னோர் பரிவுற மகிழ்ந்து போனார்"
(உமுறாவுக்குப் போன படலம் : 105)

அண்ணல் நபி (சல்) அவர்களும் தோழர்களும் மதீன மாநகரை நோக்கி நடந்தார்கள். என்றும் பின்னர் மக்க மாநகரிலே உதுமான் (றலி) அவர்களை எதிரிகள் கொன்று விட்டனர் என்று ஒரு வதந்தி பரவியது என்றும் வருணிக்கப்பட்டுள்ளது.

"………மதீன முதூர் வளநக ரடுக்கும் போதிற்
றரைபுகழ் மக்கந் தன்னிற் றகைபெறு முதுமா னென்னுங்
குரைகழற் கோவைக் கொன்றா ரெனுமொழி பிறந்த தன்றே"
(உமுறாவுக்குப் போன படலம் : 106)

இச்செய்தி முஸ்லிம்களிடையே பரபரப்பை ஏற்படுத்தி விட்டது. வெற்றி வாழ்வு அல்லது வீரமரணம் என்னும் தோரணையில் முஸ்லிம்கள் ஆலோசனை நடத்தினர். அண்ணல் நபி (சல்) அவர்கள் உடனே தங்கள் அருமைத் தோழர்களை ஒன்று திரட்டி கலந்தாலோசித்தார்கள். உதுமான் (றலி) அவர்களின் கொலைக்குப் பழிவாங்க வேண்டும் என்று திட்டமிட்டார்கள். இத்துறையில் ஈடுபடுவதற்கான உறுதிமொழி தோழர்களிடமிருந்து கோரப்பட்டது. ஒருவர் பின் ஒருவராக உறுதிமொழி கூறினர். வாய்மைப்பாடு நிகழ்த்தினர். இதற்கிடையில் உதுமான் (றலி) அவர்கள் கொலை செய்யப்பட்டது பொய் என்னும் செய்தி பெறப்பட்டது. இத்தருணத்தில் அல்லாஹ்விடமிருந்து ஓர் ஆயத்து இறங்கியது. அந்த ஆயத்திலே 'வாய்மைப்பாடு நிகழ்த்தின எல்லோருக்கும் அல்லாஹுத்தஆலா நல்லருள் பாலித்தான்' என்று கூறப்பட்டிருந்தது. இந்தக் கருத்துக்களைக் கொண்டதே இந்தச் செய்யுள் :

"மற்றயுண ருதுமா னென்னு மன்னவ ரிறத்தல் பொய்யென்
றறைதரு வசனங் கேட்டங்க ககமகிழ்ந் திருந்த பின்னர்
நிறைதரு வாய்மைப் பாடு நிகழ்த்தின பேர்கட் கெல்லா
மிறைய்வ னருளி னாலே யாயத்தொன் றிறங்கிற் றன்றே."
(உமுறாவுக்குப் போன படலம் : 11)0

இவ்வாறு அல்லாஹுத்தஆலாவினால் இறக்கப்பட்ட அந்த இறை மறை வாக்கியத்தின் கருத்தினைப் புரிந்துகொண்ட அண்ணல் நபி (சல்) அவர்கள் அங்கிருந்த தோழர்களுக்கு அதன் தாத்பரியத்தை விளக்கினார்கள். அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு உறுதிமொழி

வழங்கியவர்கள் சுவர்க்க லோகத்தை (உவணை) அடைவார்கள். அவர்களுக்கு நரகலோகம் (நிரையம்) உரித்தாக மாட்டாது. இவ்வாறு அதன் தாத்பரியம் விளக்கப்பட்டமையே இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப்பாடப்பட்டுள்ளது.

''வந்தவா யத்தைத் தேர்ந்து தீனவர் வதன நோக்கிப்
பந்தனை வாய்மை யெற்குப் பகர்ந்ததூ யோர்க ளெல்லாம்
விந்தைசே ருவணை மீதின் மேவுவர் நிரைய மில்லென்
றந்தமி லிறைவன் றூத ரறைந்தன ருளங்க னிந்தே''

(உமுறாவுக்குப் போன படலம் : 111)

**இஸ்லாத்தை தழுவுதல் :**

சீறாப்புராணத்தில் இறுதியாக விவரிக்கப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி பல பெரியார்கள் இஸ்லாத்தைத் தழுவியமை பற்றிக் குறிப்பிடுவதாகும்.

''பரிவி னாலிசு லாமினிற் புகவெனும் படியா
லரிய திண்டிறல் வயவர்கள் வந்தன ரவரின்''

(சல்மா பொருத படலம் : 3)

அவர்களுள் நால்வர் குறிப்பிடத்தக்கவர்களாவர். அந்நால்வரும் பல்வேறு துறைகளில் இஸ்லாத்தின் பாதுகாப்பிற்காகவும் வளர்ச்சிக் காகவும் அரும்பாடு பட்டவர்களாவர். காலிது இப்து வொலீத் (றலி) என்பவர் ஒருவர். இவரது வேலாயுதத்தில் எப்பொழுதும் மாமிசம் இருக்கும் என்று அவரது வலிமை போற்றப்படுகிறது. மற்றவர் அம்ரு இப்னு ஆஸ் (றலி) அவர்களாவார். இவர் கண்ணைக் கவரும் அழகு மிக்கவர் என்றும் மானின் கண்கள் போன்றிருக்கும் மை தீட்டப் பட்ட கண்களை உடைய மகளிர் மையல் கொள்ளக்கூடிய அழகினை உடையவர் என்றும் வருணிக்கப்பட்டுள்ளார். மூன்றாவமவர் உகைல் இப்னு அபீத்தாலிப் (றலி) அவர்கள். இவர் எப்பொழுதும் வாசனை கமழுகின்ற மலர்களினாலான மாலையை அணிந்திருப்பவர் என்று பாராட்டப் பட்டுள்ளார். இஸ்லாத்தைத் தழுவிய நான்காமவர் உதுமான் இப்னு தல்ஹா (றலி) என்பவராவார். இவரோ காமதேனு வைப் போன்று காட்சி அளிக்கும் கைத்தலத்தை உடையவர் என்று புகழப்பட்டுள்ளார். இக்கருத்துக்களையே உமறுப்புலவர் தமது சீறாப் புராணத்தில் சிறப்பாக இவ்வாறு விவரித்துள்ளார்.

''ஊன்கி டந்தவேற் கரனொலீ துதவுகா லிதுவு
மான்கி டந்தமை விழிமின்னார் மால்கொளும்அமுறுங்
கான்கி டந்தமா லிகையபீத் தாலிபுக் கையிலு
மான்கி டந்தகைத் தலத்தல்கா வருளுது மானும்''

(சல்மா பொருத படலம் : 4)

இவ்வாறு இஸ்லாத்தில் பலர் சேர்ந்து நன்மை பெற்றமை குறிப்பிடப் படுகின்றது.

ஆறு ஹிஜ்றி ஆண்டுகளில் நிகழ்ந்த சம்பவங்களுள் ஒரு சில வற்றை விவரிப்பதுடன் சீறாப்புராணம் முடிவுறுகின்றது. உறனிக் கூட்டத்தார் படலம் சீறாப்புராணத்தின் இறுதிப் படலமாக அமைந் துள்ளது. அண்ணல் நபி (சல்) அவர்கள் மக்க மாநகரிலிருந்து மதீன மாநகரத்துக்கு ஹிஜ்றத்துச் சென்று அங்கு பதினொரு ஆண்டுகள் வாழ்ந்திருந்தார்கள். ஹிஜ்றி பதினோராவது ஆண்டிலே தான் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் வபாத்தானார்கள். இந்த அடிப்படையில் பார்க்கும்போது நபிகள் பெருமானாரின் மதீனா வாழ்க்கையுடன் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளுள் ஏறத்தாழ சரி பாதி கால நிகழ்ச்சிகளே சீறாப்புராணத்தின் இறுதிக் காண்டமான ஹிஜ்றத் காண்டத்தில் இடம் பெற்றுள்ளமையைக் காணலாம். ஆறாண்டுக்கால வரலாற்று நிகழ்ச்சிகளை விவரிக்க சீறாப்புராணத் தில் 47 படலங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஹிஜ்றத்துக்கு முந்திய நபிகள் பிரானின் வாழ்க்கை சீறாப்புராணத்தில் 45 படலங்களிலே விவரிக்கப்பட்டுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது. எனவே, நபிகள் பெருமானாரின் இறுதி ஐந்து அல்லது ஆறு ஆண்டு வாழ்க் கையை வருணிக்க உமறுப்புலவர் மேலும் நாற்பதுக்கு மேற்பட்ட படலங்களைப் பயன்படுத்தி இருத்தல் வேண்டும். ஏனெனில் நபிகள் நாதரின் வாழ்க்கையின் இறுதி ஐந்து ஆறு ஆண்டுகளில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பல நிகழ்ச்சிகள் நிகழ்ந்துள்ளன. நபிகள் நாயகத்தின் இறுதி ஐந்து ஆறு ஆண்டுகளில் நடைபெற்ற வரலாற்றுச் சம்பவங்கள் சீறாப்புராணத்தில் இடம் பெறாமைக்குரிய காரணம் இவற்றை வருணிக்க முயல்வதற்கு முன்னரே உமறுப்புலவர் இறையடி சேர்ந்துள்ளார்கள் என்பதேயாகும். வாய்ப்புக்கிட்டி இருந்தால் நிச்சயமாக உமறுப்புலவர் நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் வபாத்து உட்பட வரலாற்று முக்கியத்துவம் உள்ள பல சம்பவங்களை வருணித்திருப்பார். அத்தோடு சீறாப்புராணத்தையும் பூரணத்துவம் பெற்ற தொன்றாக அமைத்திருப்பார்.

எனவே, இதுகாறும் கூறியவற்றிலிருந்து நாம் புரிந்து கொள்வது உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் வாழ்கையோடு நெருங்கிப் பின்னப்பட்ட வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பல நிகழ்ச்சிகளை மிக நுணுக்கமாக வருணித் துள்ளார். அவற்றைச் சொற்சுவை மிக்கனவாய்ப் பாடியுள்ளார். பொருளாழம் உடையனவாய் அமைத்துள்ளார். கவிதை வளம் நனி சொட்டச் சொட்ட அவற்றை செய்யுட்களாக வடித்துள்ளார். ஓசை நயம் ததும்புவனவாய் அவற்றைக் கவிதை உருவில் அளித்துள்ளார். சந்தர்ப்பத்துக்கும் சூழலுக்கும் ஏற்ப அவற்றைப் பல் சுவையும்

வழிந்தோடுவனவாகப் பாவடிவில் தீட்டியுள்ளார். சுருங்கக்கூறின் தமிழ் மரபைப் பேணும் அதே நேரத்தில் இஸ்லாத்துக்கு முற்றிலும் முரணாகாத வகையில் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடைய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சிகளைத் தத்ரூபமாக வருணிப்பதில் உமறுப்புலவர் மாபெரும் வெற்றி ஈட்டி உள்ளார் எனக் கூறின் அது மிகையாகாது.

**அல்குர்ஆன் :**

நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு அருளப்பட்டது அல்குர்ஆன். நபிகள் நாயகம் (சல்) அவர்களின் வாழ்க்கையினைக் கருப்பொருளாகக் கொண்ட சீறாப்புராணத்தில் அண்ணல் முகம்மது (சல்) அவர்களுக்கு அருளப்பட்ட அல்குர்ஆன் பற்றிய குறிப்புக்கள் இடம்பெறுவது இயற்கையே. அல்குர்ஆன் 114 அத்தியாயங்களையும் 6666 திருவசனங்களையும் கொண்டது. இவை முப்பது ஜுசுக்கள் என முப்பது பகுதிகளாக பகுக்கப்பட்டுள்ளன. அல்லாஹ்வால் அருளப்பட்டவை இத்திருவசனங்கள். அவற்றைப் பெருமானார் முகம்மது (சல்) அவர்களுக்கு வானவர்கோன் ஜிப்றீல் (அலை) அவர்கள் மூலமாக அல்லாஹ் அருளினான். அல்குர்ஆனிலே உள்ள அத்தியாயங்கள் சூறா எனவும், திருவசனங்கள் ஆயத்து எனவும் அறபு மொழியில் சுட்டப்பட்டுள்ளன.

முகம்மது நபி (சல்) அவர்களுக்கு முதன்முதலில் ஹிறாக் குகையில் இருக்கும்போது அல்குர்ஆனின் ஆரம்பத் திருவசனங்கள் அருளப்பட்டன. இவ்வாறு முதன்முதல் அருளப்பட்ட திருமறையின் திருவசனங்கள் இவை என உமறுப்புலவர் இவ்வாறு சுட்டிக் காட்டியுள்ளார்.

மிக்குயர் மறையின் வள்ளல் விளம்பவிண் ணவர்கள் கோமான்
இக்குறவு எனும்சூ றத்திலி ருந்தைந் தாயத் தின்ப
மெய்க்குற மாலம் யஃல மெனுமட்டும் விளம்பு வீரென்
றொக்கலி லுயிரின் மிக்கா யுறுநபிக் குணர்த்தி னாரால்

(நபிப்பட்டம் பெற்ற படலம் : 27)

இங்கே 'இக்றவு' என்று ஆரம்பித்து 'மாலம் யகுலம்' வரையுள்ள அறபுத் திருவாக்கியங்கள் சுட்டப்பட்டுள்ளன. இன்று நமக்குக் கிடைக்கும் அல்குர்ஆன் பிரதிகளில் 'இக்றவு முதல் மாலம் யகுலம்' என்னும் சொற்றொடர் வரை ஐந்து வாக்கியங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஆனால் உமறுப்புலவர் தமது பாடலில் நாலாயத் என்றே குறிப்பிட்டுள்ளார். அதனைப் பிற்காலத்தில் பதிப்பித்தவர்களும் அப்பிழையைப் பொருட்படுத்தவில்லை போலும். இப்பாடலில் இரண்டாவது அடியில் 'ஐந்தாயத்' என இருப்பது யாப்பமைதியாகவும்

இருப்பதைக் காணலாம். இத்திருவாக்கியங்களை இவ்வாறு தமிழில் மொழி பெயர்க்கலாம்.

1. (நபியே! யாவையும்) படைத்த உமதிறைவனின் திருநாமத்தால் (எனது கட்டளைகளடங்கிய திருக்குர்ஆனை) நீர் ஓதுவீராக!

2. அவனே மனிதனை இரத்தக் கட்டியிலிருந்து படைத்தான்.

3. (நபியே! பின்னும்) நீர் ஓதும்; உமதிறைவன் மாபெரும் கொடையாளி

4. அவன்தான் எழுதுகோலைக் கொண்டு (எழுதக்) கற்றுக் கொடுத்தான்

5. அன்றி (அதன்மூலம்) மனிதன் அறியாதவைகளை எல்லாம் அவனுக்குக் கற்றுக் கொடுக்கின்றான் (96-1-5)

முதன்முதல் நபிகள் பிரான் (சல்) அவர்களுக்கு அல்லாஹ்வினால் அருளப்பட்ட திருவாக்கியங்கள் ஐந்து என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. எனினும், 'இக்றவு வெனும் சூறத்திலிருந்து நாலாயத்தின்ப' என சீறாப்புராணப் பாடலின் இரண்டாம் அடி அமைந்துள்ளது. 'இக்றவு வெனுஞ்சூறத்தி லிருந்தைந் தாயத் தின்ப' என்றிருந்திருந்தால் யாப்பமைதி பேணப்பட்டும் இருக்கலாம். இந்தப் பாடலைப் பிரதி பண்ணும் பொழுதோ முதல்முதல் பதிப்பிக்கும் பொழுதோ ஏற்பட்ட பிழை திருத்தப்படாமையினால் இந்தத் தவறு ஏற்பட்டிருக்கலாம்.

இதன் பின்னர் இறை அறிவிப்பு ஏதும் இன்றிச் சில நாட்கள் கழிந்தன. நபிகள் பெருமானார் சிந்திக்கலானார்கள். பின்னர் ஜிபுறீல் (அலை) அவர்கள் தோன்றியதன் மூலம் போர்வையாளர் எனப் பொருள்படும் 'முஸ்ஸம்மில்' என்னும் சூறாவில் உள்ள சில வசனங்கள் அருளப்பட்டன. 'போர்வையைப் போர்த்திக் கொண்டிருப்பவரே' என்று ஆரம்பமாகிறது இந்த அத்தியாயம் (73 : 1). இவ்வாறு அறிவிக்கப்பட்டதினால் இன்னல் தீர்ந்து மகிழ்ந்தார்கள் முகம்மது நபி (சல்) அவர்கள் என இவ்வாறு உமறுப்புலவர் பாடியுள்ளார்.

தன்னுடற் குயிரெனுந் தகைமைத் தாகிய
பொன்னகர்க் கிறைசொலும் புனித வாசகம்
கன்னலஞ் சுவையினும் கனிந்த பாகென
நன்னபி செவிப்புக நடுக்க நீங்கினார்

(தொழுகை வந்த வரலாற்றுப் படலம் : 33)

இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே என்றார் பாரதியாரும். செவி கைப்ப என்றார் திருவள்ளுவர். இருவரும் இத்தகைய சூழ்நிலையைக் குறிக்கவே இவ்வாறு பாடியுள்ளனர்.

அதன்பின்னர் இறையறிவிப்பு முகம்மது நபி (சல்) அவர்களுக்குத் தொடர்ந்து வந்தது. இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் முஸ்லிம் மக்கள் தமது மார்க்கக் கடமைகளை இரகசியமாகவே செய்து வந்தனர். மலைகளிலும் மக்கள் சஞ்சரிக்காத இடங்களிலும் மறைவாகத் தமது தொழுகை முதலியவற்றைச் செய்து வந்தார்கள். இஸ்லாமிய மார்க்கக் கடமைகளைப் பகிரங்கமாக நடத்துங்கள் என்னும் இறை கட்டளை பெருமானாருக்கு அனுப்பப்பட்டது. முதன் முதல் திருக்குர்ஆன் அருளப்பட்டு நான்கு ஆண்டுகள் சென்ற பின்னரே அக்கட்டளை பிறப்பிக்கப்பட்டது.

தூதென நபியின் பட்டந் துவங்கிய நான்காம் ஆண்டில்
வேதங்கள் வணக்க மியார்க்கும் விரித்துற விளக்கும்
(தீனிலைகண்ட படலம் : 1)

என்று இச்செய்தியையே உமறுப்புலவர் குறிப்பிட்டுள்ளார். அல்குர் ஆனின் 74-வது அத்தியாயமாக அமைந்துள்ள சூறாவிலே இந்த அறிவிப்பு இடம் பெற்றுள்ளது. போர்த்தியிருப்பவர் எனப் பொருள் படும் 'முத்தஸ்ஸிர்' என்பதே அந்த அத்தியாயத்தின் பெயராகும். இந்த அத்தியாயத்தில்

(வஹியின் அதிர்ச்சியால்) போர்த்தியிருப்பவரே,
(நபியே) நீர் எழும். (மனிதர்களுக்கு) அச்சமூட்டி
எச்சரிக்கை செய்யும். உமதிறைவனைப் பெருமைப்
படுத்தும். (74 : 1-3)

என முகம்மது நபி (சல்) அவர்கள் பகிரங்கமாக இஸ்லாமிய போதனையை மேற்கொள்ளும்படி உத்தரவிடப்பட்டிருந்தார்கள். இக்கட்டளைக்கிணங்க ஆரம்ப கால முஸ்லிம் மக்களும் வெளிப்படையாக இஸ்லாமியக் கடமைகளை நிறைவேற்றலானார்கள். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

பொருப்பிடத் தொளித்தும் வாழாப் புறமனை யிடத்தும் புக்கி
இருப்பது தகாதென் றாயத் திறங்கிய தென்னக் கேட்டு
மருப்பருங் கரடக் கைமா மதர்த்தன மதர்த்து வீரர்
தெருப்புகுந் தெவர்க்கும் தோன்றத் தீனிலை வணக்கஞ்
செய்தார்
(தீனிலைகண்ட படலம் : 2)

ஜிபுறீல் (அலை) அவர்கள் மற்றொரு சந்தர்ப்பத்தில் இறை ஆணையைப் பெருமானார் முகம்மது (சல்) அவர்களுக்கு அருளினார்கள். அந்தக் கட்டளையில் பெருமானார் (சல்) அவர்கள் தங்களுடைய நெருங்கிய உறவினர்களை இஸ்லாத்தின் பால் அழைக்குமாறும் அவர்களை அச்சமூட்டி எச்சரிக்கை செய்யுமாறும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இக்கட்டளை அல்குர்ஆனில்

'நீர் உம்முடைய நெருங்கிய பந்துக்களுக்கும்
அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும்' (26 : 214)

என இடம் பெற்றுள்ளது. இதனையே உமறுப்புலவர்,

மறைபடாப் புகழை யுலகினில் வளர்த்து
வருமொரு துரையபுல் காசீம்
குறைபடா மனமும் வாக்குமொன் றாகப்
புகழ்ந்திடும் குரிசினந் நபிக்கு
நிறைபட வடுத்த கிளையனைத் தையுந்தீ
னிலைபெற நிறுத்திடு மென்ன
இறையவன் ஆயத் திறங்கிய தெனவங்
கிருந்திறங் கினர்ஜிபு றீலே
(தீனிலைகண்ட படலம் : 110)

அபூலஹப் என்பவன் பெருமானார் (சல்) அவர்களின் பெரிய தந்தையருள் ஒருவன். அவன் இறுதிவரை நபிகள் பெருமானாருக்கு இடையறாத தொல்லை உண்டு பண்ணினவன். பகிரங்கமாக இஸ்லாமிய மார்க்கப் போதனை செய்யுமாறும் நெருங்கிய உறவினரை அச்சமூட்டி எச்சரிக்குமாறும் இறைக்கட்டளைக் கிடைக்கப் பெற்றதும் முகம்மது நபி (சல்) அவர்கள்

தருமுகிற் கவிகை இலங்கிடச் சிறந்த
சபாமலை யிடத்தினிற் சார்ந்தார்
(தீனிலைகண்ட படலம் : 111)

என்ற வருணனைக்கு ஒப்ப மக்காவில் உள்ள சபா மலையை அடைந்தார்கள். அங்கிருந்து தங்களது உறவினர்களை இவ்வாறு அழைத்தார்கள்.

கடுப்பறக் கொடுஞ்சொற் பிறந்திடா தமிர்தங்
கனிந்தவா யிதழ்திறந் தெவர்க்கும்
எடுப்பரும் புதுமை யுண்டென வினத்தோ
ரியாரையு மினிதுற நோக்கிக்
கொடுப்பதற் கெழுமா முகிலினம் பொருவாக்
குருநெறி முகம்மது விளித்தார்.
(தீனிலைகண்ட படலம் : 112)

இதனைக் கேட்ட இனத்தவர்களனைவரும் அந்த அழைப்பினை ஏற்று அங்கு வந்தனர். அந்த மலைக்கப்பால் மக்காவைத் தாக்க ஒரு படை வந்துள்ளது என்றால் அது உண்மையெனக் கொள்வீர்களா? என்று கேட்டார்கள்.

உரைத்தசொல் லெவர்க்கு முறுதிநிண் ணயமென்
றனைவரு முரைத்திட மகிழ்ந்து
(தீனிலைகண்ட படலம் : 115)

எல்லோரும் உண்மைதான் என்றனர். இதனைக் கேட்டதும் மகிழ்ச்சி அடைந்த நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் இஸ்லாம் மார்க் கத்தை ஏற்கும்படி கூறினார்கள். இதனைக் கேட்டதும் அதனை முதலில் எதிர்த்தவன் அபூலஹப். 'இதற்கா நீ எங்களை இங்கு அழைத் தாய். நீ குலத்தொடுங் கெடுவாய்' என்று சப்தமிட்டுக் கூறியதுடன் நின்று விடாது இரண்டு கைகளாலும் மண்ணை வாரி பெருமானார் அவர்கள் மீது வீசினான். இக்காட்சியே சீறாப்புராணத்தில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

கூறிய மொழிகேட் டபூலகு பெனுமக்
கொடியவ னிருவிழி சிவந்து
மாறுபட் டிதற்கோ குலத்தொடுங் கெடுவாய்
வரவழைத்த னையெனச் சீறித்
தேறிலா துறுக்கி இருகரம் புதைப்பச்
செறிதரு பூழ்தியை வாரி
ஈறிலான் றூதை முகம்மதைச் சிறிதும்
எண்ணிலாது எதிர்த்துநின் றெறிந்தான்
(தீனிலை கண்ட படலம் : 116)

இச்சந்தர்ப்பத்தில் ஜிபுறீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் செய்தி யொன்றை முகம்மது நபி (சல்) அவர்களுக்குக் கொண்டு வந்தார்கள். 'தப்பத்யதா' என அறபில் ஆரம்பிக்கும் அல்குர்ஆன் அத்தியாயம் பெருமானாருக்கு அருளப்பட்டது. அந்த சூறா என்னும் அத்தியாயத் தின் பெயரே 'லஹப்' என்பதாகும். அல்குர்ஆனின் 111வது அத்தி யாயமான இந்த சூறத்தில் ஐந்து திருவாக்கியங்கள் (ஆயத்துக்கள்) இடம் பெற்றுள்ளன.

1. அழியட்டும் அபூலஹபின் இருகரங்கள்
அவனுமே அழியட்டும்
2. அவனுடைய பொருளும், அவன் சேகரித்துவைத்தி
ருப்பவைகளும் அவனுக்கு யாதொரு பயனுமளிக்கா
3. அதிசீக்கிரத்தில் அவன் கொழுந்து விட்டெரியும் நெருப்பை
அடைவான்
4. விறகு சுமக்கும் அவனுடைய மனைவியோ
5. அவளுடைய கழுத்தில் முறுக்கேறிய ஈச்சங் கயிறுதான்
(அதனால் சுருக்கிடப்பட்டு அவளும் அழிந்து விடுவாள்)

இவ்வாறு இறை வாக்கியம் முகம்மது நபி (சல்) அவர்களுக்கு அருளப் பட்டமையை உமறுப்புலவர்,

அடர்ந்தெதிர்த் துரைத்த கொடியவ னபூல
கபுபுவி இடத்தும் ஆகிறத்தும்
இடைந்திடும் பெருங்கே டுடையவன் இவனே
என்னும்அப் பொருளுரை பிறப்பத்
துடங்குதப் பத்ய தாவெனத் தோன்றும்
சூறத்தொன் றிறங்கிய துலகில்
...... ...... ...... ......
...... ...... ...... ......

(தீனிலைகண்ட படலம் : 117)

அல்குர்ஆன் ஆயத்தின் தலைப்பான 'லஹப்' என்பதன் பொருள் 'தீக்கொழுந்து' என்பதாகும். அபூலஹப் என்னும் அவனுடைய பெயரின் பொருள் 'தீக்கொழுந்தின் தந்தை' என்பதாகும். கோபா வேசமாகப் பேசுபவனாகவும் செக்கச்செவேர் எனவும் இருந்தமையால் அவன் அந்தப் பட்டப்பெயரால் அழைக்கப்பட்டான். அந்த அத்தியா யத்தின் கருத்தை உமறுப்புலவர் இங்கே இவ்வாறு சுருக்கமாக விளக்கி உள்ளார்.

அவனியிற் கேடு முடிவினில் நரகும்
அடைகுவன் அபூலகுபு எனவே
செவியுற ஆயத் திறங்கிற் றென்றுரைத்த
...... ...... .. ...

(தீனிலைகண்ட படலம் : 120)

ஆரம்ப காலத்தில் இஸ்லாத்தைக் கடுமையாக எதிர்த்தவர் உமறு (றலி) அவர்கள். முகம்மது நபி (சல்) அவர்களைக் கொல்லச் செல் லும் வழியில் தமது சகோதரியும் அவருடைய கணவரும் இஸ்லாத்தை தழுவிவிட்டனர் என்பதைக் கேட்டு அங்கே சென்றார். அவர் அங்கு சென்றபொழுது அவருடைய சகோதரி ஒரு பத்திரத்தில் எழுதப்பட்ட அல்குர்ஆனின் ஒரு பகுதியை ஓதிக்கொண்டிருந்தார். அதைக் கண்டும் கேட்டும் கோபாவேசமாக உமறு அவர்கள் இருவரையும் நையப்புடைத் தார். அவ்விருவடைய மன உறுதியை உணர்ந்த உமறு (றலி) அவர் கள் தமது சகோதரி ஓதிக் கொண்டிருந்த பத்திரத்தைக் கேட்டார். அந்தப் பத்திரத்தில் 'தாஹா' எனத் தலைப்பை உடைய 'தாஹா' என ஆரம்பிக்கும் சூறத்தின் (20-ஆம் அத்தியாயத்தின்) ஒரு பகுதி அங்கு எழுதப்பட்டிருப்பதை கண்டார்; ஓதினார்; மனம் மாறினார்; இஸ்லாத் தின் பால் ஈர்க்கப்பட்டார். உமறு அவர்களுக்கு ஏற்பட்ட மன மாற்றத்தைக் கவிஞர் உமறு இவ்வாறு வருணித்துள்ளார்.

மறைமொழிப் பொருளைத் தேர்ந்து
மானுடர் மொழியீ தன்றென்
றிறையவன் மொழியே யென்ன
இதயத்தில் இருத்தி வேத
நிறைநிலை மனத்த ராகி
நினைத்தவா சகத்தைப் போக்கி

(உமறுகத்தாபு ஈமான் கொண்ட படலம் : 76)

அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் வழங்கப்பெற்று எட்டாம் ஆண்டு நிகழ்ந்துகொண்டிருந்தது. அப்போதும் ரூமியரும் பாரசீகரும் பகைமை பூண்டிருந்தனர். ரூமியருக்கும் பாரசீகருக்கும் ஏற்பட்ட போரில் பாரசீகர் வெற்றி கொண்டனர் என்னும் செய்தி மக்காவுக்கும் பரவியது. இதனால் ஆரம்ப முஸ்லிம் மக்கள் பாதிக்கப்பட்டனர். பாரசீகர் இறுதியில் தோற்கடிக்கப்படுவர் என்று அல்லாஹ் ஜிபுறீல் (அலை) மூலம் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களுக்கு அறிவித்தான். அண்ணல் நபி (சல்) அவர்களும் அச்சந்தர்ப்பத்தில் அதனை பகிரங்கப்படுத்தினார்கள்.

இறூமிகட்கும் பாரிசுநாட் டவர்க்கும் பெரும்
பகையாக விருந்தவவ் வாண்டு
மறமுதிர்ந்து பாரிசவர் வெற்றிகொண்டார்
எனும்வசன மக்க மீதி
லுறையும்பெருங் குபிரர்கேட் டுடற்பூரித்
திசுலாத்தி லுற்ற பேரைத்
திறனடுத்த தெமர்க்கிழிந்த சிதைவடுத்த
துமர்க்கெனவுஞ் செப்பினாரால்

(ஒப்பெழுதித் தீர்ந்த படலம் : 30)

என்று பாரிசு நாட்டுக்காரர் (பாரசீகர்) வென்றமையால் முஸ்லிம்களுக்கும் அழிவுவந்து விட்டது என்பதனை விவரித்த உமறுப்புலவர் அடுத்த பாடலில் நபிகள் நாயகத்துக்குக் கிடைக்கப்பெற்ற அறிவிப்பாகிய உறூமிகளுக்கு ஆற்றாது பாரசீகர் தோற்றுப்போவர் என்னும் செய்தி மெய்மையானதே என அபூபக்கர் (றலி) வலியுறுத்தியமையை குறிப்பிட்டுள்ளார்.

தருவைநிகர் முகம்மதுநன் னபியுரைத்தார்
உறூமிகடஞ் சமர்க்காற் றாது
வெருவியிரு நிலத்தோடிப் பாரிசற
முறியுமென விரித்த வாய்மை
ஒருபொழுதும் பழுதாகா தென்னஅபூ
பக்கரெடுத் துரைப்பக் கேட்டே
இருமையிலும் பலனறியா னிபுனுகலப்
எனுமவன் வந்தெதிர்ந்து சொல்வான்

(ஒப்பெழுதித் தீர்ந்த படலம் : 31

றூமியர்கட்கும் பாரசீகர்கட்கும் நடைபெற்ற போரில் இறுதியில் றூமியர் வெற்றி பெறுவர் என்ற இறை மறை வாக்கியங்கள் அல்குர் ஆனில் முப்பதாம் அத்தியாயமான அற்-றூம் அதாவது றூம் பேரரசு என்பதில் உள்ள முதல் ஆறு திருவசனங் (ஆயத்துக்)களும் இவ்வாறு குறிப்பிடுகின்றன.

1. அலிப் லாம் மீம்.

2, 3. (நபியே !) றூம் வாசிகள் சமீபத்திலுள்ள
பூமியில் (தற்சமயம்) தோல்வி அடைந்தனர்.
அவர்கள் (இன்று) தோல்வி அடைந்து விட்ட
போதிலும், அதி சீக்கிரத்தில் வெற்றி அடைவார்கள்.

4, 5. (அதுவும்) சில வருடங்களுக்குள்ளாகவே
(வெற்றி தோல்வி அளிக்கும்) அதிகாரம்
இதற்கு முன்னரும் பின்னரும்,
அல்லாஹ்வுக்கே சொந்தமானது.
(அவர்கள்) வெற்றி அடையும் அந்நாளில்
விசுவாசிகள் அல்லாஹ்வின் உதவியைக்
கண்டு மகிழ்ச்சியடைவார்கள். அல்லாஹ்,
தான் விரும்பியவர்களுக்கு உதவி புரிகிறான்,
அவன் (யாவரையும்) மிகைத்தோனும்,
கிருபையுடையோனுமாக இருக்கிறான்.

6. (இது) அல்லாஹ்வுடைய வாக்குறுதி,
அல்லாஹ் தன்னுடைய வாக்குறுதியில்
மாறுவதில்லை. எனினும் மனிதரில்
பெரும்பாலோர் (இதனை) அறியமாட்டார்கள்
(அல்குர்ஆன் : 30 : 1-6)

ஒருநாள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் தனிமையாக இருக்கும் பொழுது பசியும் தாகமும் அவர்களை வாட்டின. அதனைக் கண்ட இருவர் பழவகைகளைத் தமது தலைவர் மூலம் பெருமானார் அவர்களுக்கு அனுப்பினர். அத்தாசு எனப் பெயருடைய அவர் அதனை அவ்வாறே நபிகளுக்கு அளித்தார். பெருமானாரும் அவற்றை நுகர்ந்த பின்னர் அவருடைய ஊர் பெயர்களைக் கேட்டார்கள். தாம் ஒரு கிறித்தவர் என்றும் நீனவா (Ninevah) என்னும் ஊரைச் சார்ந்தவன் என்றும் அளித்த விடையை உமறுப்புலவர் இவ்வாறு பாடுகின்றார்.

நள்ளென வுலகி னூழின் வருநசுறானி மார்க்கத்
துள்ளவன் னீன வாவென் றோதிய வூரி னுள்ளேன்
(அத்தாசு ஈமான் கொண்ட படலம் : 6)

இந்த விடையைக் கேட்ட நபிகள் முன்னர் வாழ்ந்த தீர்க்கதரிசிகளுள் ஒருவராகிய யூனுசு நபி (அலை) அவர்களும் நீனவா என்னும் ஊரைச் சார்ந்தவர் எனக் குறிப்பிட்டார்கள். நபி யூனுசு (அலை) அவர் களுடைய கல்லறை நினேவாவில் இருக்கிறது என்று யூனுசு என்னும் தலைப்பில் அமைந்த அல்குர்ஆனின் பத்தாவது சூறாவின் 8-வது திருவாக்கியத்துக்கு எழுதப்பட்ட குறிப்பொன்றில் காணப்படுகிறது.

சந்தர்ப்பம் வாய்க்கும் போதெல்லாம் உமறுப்புலவர் அல்குர்ஆன் போதனைகளை ஆங்காங்கே சுட்டிக் காட்டத் தவறுவதில்லை. மானுக்குப் பிணைநின்ற படலத்தில் அத்தகைய ஒரு போதனையைக் காணலாம். புலிக்குப் பயந்து மான் கூட்டம் ஓடியது. எது எங்கே சென்றது என்று எதற்கும் தெரியாது. அவ்வாறு ஓடும்பொழுது ஒரு மான் ஒரு வேடனின் வலைக்குள் அகப்பட்டது.

...... ...... ...... ...... கரந்திவ் வேடன்
துடரிடும் வலையைச் சுற்றிச் சுருக்கிடப் புலிவாய்த் தப்பி
மிடலரி யுழையிற் சிக்கி மிடைந்தென மிடைந்து ......
(மானுக்குப் பிணை நின்ற படலம் : 24)

இவ்வாறு அதன் வரலாற்றை அவ்விடத்தை அடைந்த பெருமானார் (சல்) அவர்களிடம் கூறியது. அவர்களோடு அம் மான் தத்துவார்த்த அடிப்படையில் உரையாடியது என உமறுப்புலவர் குறிப்பிட்டுள்ளார். அந்த மான் வாயிலாக அல்குர்ஆன் போதனை யொன்றையும் விவரித் துள்ளார். சூறா அல்றஹ்மான் என்பது அல்குர்ஆனிலே உள்ள 55-வது அத்தியாயமாகும். அவ்வத்தியாயத்தில்

'பூமியிலுள்ள யாவும் அழிந்தே போகும்' (55 : 26) என்னும் ஒரு வாக்கியம் உள்ளது. இதனையே பெருமானார் (சல்) அவர்களுக்கு அம் மான் எடுத்துக்காட்டியதாக உமறுப்புலவர் இவ்வாறு வருணித் துள்ளார்.

இச்சிலை வேடன் கையி னிறத்தலை உளத்தி லெண்ணி
அச்சமுற் றுரைப்ப தன்றிவ் வவனியில் சீவ னியாவும்
நிச்சயம் இறத்த லல்லால் இருப்பவை நிலத்தி லுண்டோ
முச்சகம் விளங்கும் தீனின் முதன்மறை முறைமைச் சொல்லோய்.
(மானுக்குப் பிணை நின்ற படலம் : 30)

அண்ணல் நபி (சல்) அவர்களும் அவர்களைப் பின்பற்றிய சிறு கூட்டத்தினரும் மதீன மாநகருக்கு வந்து இரண்டு ஆண்டுகளாயின. இது ஹிஜ்றி இரண்டாம் ஆண்டு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த இரண்டாம் ஆண்டிலே தான் முஸ்லிம் மக்களுக்கு நோன்பு நோற்றல் கட்டாய கடமையாக்கப்பட்டது. இதனையே உமறுப்புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்,

நெறியொடும் புறுக்கா னன்னோர் நிகழுமவ் வருடந் தன்னில்
பெறுகதி றமளான் என்னப் பெருகிய நோன்பு தன்னை
உறுதிகொண் டெவர்க்குஞ் செவ்வி யுறபறு லாக்கி னேனென்
றிறையவ னருளி னாயத் திறங்கிய தெவர்க்கு மன்றே
(பதுறுப் படலம் : 1)

அந்த அல்குர்ஆன் ஆயத் இரண்டாவது அத்தியாயமான சூறத் அல்பகறா (இடபம்) வில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

'விசுவாசிகளே ! உங்களுக்கு முன்னிருந்தவர்கள்
மீது விதிக்கப்பட்டிருந்த பிரகாரமே
உங்கள் மீதும், நோன்பு நோற்பது
விதிக்கப்பட்டிருக்கின்றது. (அதனால்)
நீங்கள் பரிசுத்தவான்களாகலாம்' (அல்குர்ஆன் : 2 : 183)

தொழுகைகள் பல வகை உண்டு. உரிய நேரங்களில் தொழ வேண்டியவை அவை. ஆனால் அவற்றிற்குச் சில விதிவிலக்குகள் உண்டு. உதாரணமாக நெடுந்தூரம் பிரயாணத்தில் ஈடுபடும் ஒரு முஸ்லிம் சில சமயங்களில் தான் நிறைவேற்ற வேண்டிய தொழுகை களைச் சுருக்கித் தொழலாம். சேர்த்துத் தொழலாம். சுருக்கித் தொழுவதை அறபு மொழியில் கஸ்று என்பர். கசறு என்றும் குறிப் பிடுவர். இத்தகைய தொழுகைக்கு ஹிஜ்றி நான்காம் ஆண்டு அனுமதி வழங்கப்பட்டது. அல்லாஹ் அவ்வாறு கட்டளை பிறப் பித்தான். இக்கருத்துக்கள் சீறாப்புராணத்தில் இவ்வாறு அமைந் துள்ளன.

வந்த தெண்ணிய கிசுறத்து நான்கெனும் வருடம்
சிந்தை கூர்தரக் கசறெனுஞ் தொழுகையைச் செய்தல்
எந்த நாட்டினும் ஏகுவோர் மேல்பறு லென்ன
அந்த மில்லவன் ஆரணம் இறங்கின அன்றே
(உசைனார் பிறந்த படலம் : 1)

பெருமானார் (சல்) அவர்கள் வழக்கமாக பிரயாணத்தின் போது நண்பகல் தொழுகையையும் மாலை நேரத் தொழுகையையும் சுருக்கித் தொழுபவர்களாக இருந்தார்கள். இவ்வாறு சுருக்கித் தொழுதல் ஒருவர் மேற்கொள்ளும் பயணத்தின் சூழலைப் பொறுத்துள்ளது என்பதை நாம் நினைவில் கொள்ளுதல் வேண்டும். இங்கே குறிப் பிடப்பட்ட இறை கட்டளை அல்குர்ஆனிலே நான்காம் அத்தியாய மான சூறத்துன்னிஸா - பெண்கள் பற்றிய அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ளது. இந்த ஆயத்தில் இடம் பெற்றுள்ள கசறுத் தொழுகை பற்றிய அத்திருவாக்கியம் இவ்வாறு அமைந்துள்ளது.

(விசுவாசிகளே! நீங்கள் பூமியில் பிரயாணம்
செய்யும் காலத்தில் (நீங்கள் தொழுது கொண்டிருக்கும்
பொழுது) நிராகரிப்போர் உங்களைத் துன்புறுத்துவார்கள்
என்று பயந்தால், நீங்கள் (கஸ்ர் தொழுவதை) அதாவது
உங்கள்) தொழுகையைச் சுருக்கிக் கொள்வது உங்கள்
மீது குற்றமாகாது. ஏனென்றால், நிராகரிப்போர்
உங்களுக்குப் பகிரங்கமான விரோதிகளாகவே
இருக்கின்றனர். (அல்குர்ஆன் : 4 : 101)

பெருமானார் (சல்) அவர்கள் தங்கள் தோழர்களுடன் மாலை நேரத் தொழுகையைச் சுருக்கித் தொழுத மற்றொரு சம்பவத்தை சீறாப்புராணம் இவ்வாறு கூறுகின்றது. முஸ்லிம் மக்கள் துன்புறுத் தப்படுவார்கள் என்றும் ஐயந் தோன்றியது. அப்பொழுது அண்ணல் (சல்) அவர்கள் தாதுற் றஹ்ஹாக்கு என்னும் ஊரில் வாழ்ந்து வந்தார்கள். முஸ்லிம்களை அழிக்கக் கருதிய ஒரு கூட்டம் முஸ்லிம் மக்கள் தொழுகை நிறைவேற்றும் தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

இன்றொடும் பகைவே றின்றி இற்றுறத் துடைப்பே மென்று
வன்றிறல் தீனோர் செய்யும் வணக்கமே நோக்கி நின்றார்
(தாதுற்றஹ்ஹாக்குப் படலம் : 20)

இறைவனின் அருளால் ஜிபுறீல் (அலை) அவர்கள் இறை கட்டளை ஒன்றை எடுத்துக் கொண்டு வந்தார்கள்.

...... ...... ...... உறுபொரு ளுணர்த்தும் வேதம்
தாங்கிய எழிலா யத்துத் தலைமிசை கொண்டி ழிந்தார்
நீங்கரும் பயம்வந் தெய்து நிலத்திடை தொழுதற் கன்றே
(தாதுற்றஹாக்குப் படலம் : 31)

இறைகட்டளைக் கிணங்கப் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் அசறுத்தொழுகையான மாலைத் தொழுகையைச் சுருக்கித் தொழுதார்கள். இதனையே உமறுப்புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்கள்.

...... ...... ...... ...... பரிவின் வள்ளல்
ஓங்கிய சலாமைக் கொண்டு முடித்தன ருரைத்த வாறே
ஈங்கியற் றியதிரண்டி றக்அத்தின் கசுறா மன்றே
(தாதுற்றஹாக்குப் படலம் : 25)

முஸ்லிம் மக்கள் தொழுகையை நிறைவேற்றுவதற்குத் தம்மைச் சுத்தம் செய்து கொள்ளல் வேண்டும். கை, முகம், கால் முதலியவற்றை நீரினால் கழுவி சுத்தஞ்செய்தல் வேண்டும். ஒருமுறை பெருமானார் (சல்) அவர்களும் அவர்கள் தம் கூட்டத்தினரும் முறைசீகு

என்னும் நகரத்துக்குப் போயிருந்தார்கள். அங்கே தண்ணீர் கிடைக்க வில்லை. அதிகாலைத் தொழுகையான பஜ்றுத் தொழுகைக்குரிய நேரம் அண்மியது. அவ்வேளையும் சென்று கொண்டிருக்கிறது.

தேய்கின்றதிவ் விரவுப்வெளி தெரிகின்றது கதிரும்
பாய்கின்றது கலனுங்கணிற் படுகின்றில பஜுறு
மாய்கின்றது …… …… ……
(முறைசீகுப் படலம் : 36)

என்பது அதனையே குறிக்கின்றது.

உதகத்தட மிலவித்தல முறையத் தொழுகையுமே
(முறைசீகுப் படலம் : 37)

என மனங்கலங்கி நின்றார் ஒரு மனிதர். உறங்கிக் கொண்டிருந்த பெருமானார் (சல்) அவர்களும் விழித்தார்கள். தண்ணீர் இல்லையே என்று கவலைப்பட்டார்கள். அப்பொழுது இறைவன் கட்டளையைக் கொண்டு வந்தார்கள், ஜிபுறீல் (அலை) அவர்கள். அந்தக் கட்டளை அல்குர்ஆனின் ஐந்தாம் அத்தியாயத்திலே ஆறாம் திருவாக்கியத்திலே விரிவாக குறிப்பிடப்பட்டுள்ளது. அது ஒரு நீண்ட வாக்கியமாக அமைந்துள்ளது. அது சுருக்கமாக இங்கே தரப்படுகிறது.

''விசுவாசிகளே ! நீங்கள் தொழுகைக்குச் சென்றால்,
(அதற்கு முன்னர்) உங்கள் முகங்களையும் முழங்கைகள் வரையில்
உள்ள இருகைகளையும், கணுக்கால்வரையில் உள்ள உங்கள்
இரு பாதங்களையும் கழுவிக் கொள்ளுங்கள். அன்றி,
(உங்கள் கையில் நீரைத் தொட்டு) உங்கள் தலையை
(த்தடவி) மஸஹு செய்து கொள்ளுங்கள்.
…… …… …… ……
…… …… …… ……
(தொழுகையின் நேரம்வந்து, உங்களைச்
சுத்தி செய்து கொள்வதற்கு வேண்டிய)
நீரை நீங்கள் பெறாவிடில், பரிசுத்தமான
மண்ணை (உங்கள் கைகளால் தொட்டு,
அதனை)க் கொண்டு உங்கள் முகங்களையும்
கைகளையும் துடைத்துத் 'தயம்மும்'
செய்து கொள்ளுங்கள் …… ……
…… …… …… …… (அல்குர்ஆன் : 5 : 7)

ஏறத்தாழ இதே கருத்துக்களை அல்குர்ஆன் மற்றோர் இடத்திலும் (4 : 43) வந்துள்ளமையைக் காணலாம். இந்த இறை கட்டளையே இவ்வாறு சீறாப்புராணத்தில் இடம் பெற்றுள்ளது.

நெஞ்சாகுல மறநீரக மில்லாவிட நியமந்
துஞ்சாவகை தயமுஞ்செய்து தொழமேலவன் விதியின்
மிஞ்சாரண மொழியாரமு திஃதென்ன விரைந்து
மஞ்சார்வெளி வழியே கொடு வந்தார் ஜிபுறீலே.

(முறைசீகு படலம் : 39)

இந்த இறை அறிவிப்பு அவர்களிடையே பெரு மகிழ்ச்சியை ஏற்படுத்தியது. இது அங்கிருந்த எல்லோருக்கும் அறிவிக்கப்பட்டது. எனவே எல்லோரும் இவ்வாறு தயமும் செய்து தம்மைத் தூய்மைப்படுத்திக் கொண்டு ஒரே இறைவனை நினைத்துத் தொழுதார்கள். வேறொன்றையும் நினைக்காது தொழுகையில் ஈடுபட்டனர். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

வரலும்பெரு மகிழ்கொண்டகுமது துன்புறு மவரோடு
உரைவிண்டனர் அவர்கொண்டனர் இவரும்பிற ருளரும்
உருகும்படி பிறிதொன்றையு நினையாதொரு பொருளைத்
தருமந்திர நெறியின்படி தயமுஞ்செய்து தொழுதார்.

(முறைசீகு படலம் : 40)

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மக்காவை விட்டு மதினாவுக்குச் சென்று நான்கு ஆண்டுகள் பூரணமாகி விட்டன. ஐந்தாம் ஆண்டு நடந்து கொண்டிருந்தது. அச்சமயத்தில் அல்லாஹ்வின் கட்டளை ஒன்று முகம்மது நபி (சல்) அவர்களுக்கு வந்தது. அங்கு முஸ்லிம் மக்களுக்கு ஹஜ் கடமையாக்கப்பட்டுவிட்டது என்னும் இறையறிவிப்பை அண்ணல் (சல்) அவர்கள் பெற்றார்கள். இதனையே உமறுப் புலவர் இவ்வாறு விவரித்துள்ளார்.

மலக்குகள்விண் ணாட்டடைய நபியிறசூல்
மதீனநகர் வாழு நாளில்
விலக்கரிய வருடமொரு நான்குநிறைந்
தைந்தாண்டு மேவும் போதில்
அலக்கணுறாச் சுடரொளியாம் அல்லாவின்
பணிவிடையால் அவனி மீதில்
துலக்கமுற வந்தஹஜ்ஜு பறுலானது
இன்றுமுதல் தொழுவீ ரென்றே

(ஒமாம் ஈமான் கொண்ட படலம் : 1)

இந்த இறை அறிவிப்புப் பற்றி அல்குர்ஆன் குறிப்பிடுகிறது. ஹஜ் பற்றிய பல குறிப்புக்கள் அங்கு உள்ளன. அதன் மூன்றாம் அத்தியாயத்தில்

'(இவ்வுலகில் இறைவனை வணங்குவதற்கென)
மனிதர்களுக்கு அமைக்கப்பெற்ற ஆலயங்களில்
முதன்மையானது நிச்சயமாக பக்காவில்
(மக்காவில்) இருப்பதுதான்'

என 96-வது வாக்கியத்தில் ஒரு பகுதி குறிப்பிடுகின்றது. அந்தத் திருவாக்கியத்தைத் தொடர்ந்து

'அதில் தெளிவான அத்தாட்சிகளும்
இருக்கின்றன. இப்றாஹீம் (தொழுகைக்காக)
நின்ற இடமும் இருக்கின்றது. எவன்
அதில் நுழைகிறானோ அவன், (அபயம்பெற்று)
அச்சமற்றவனாகி விடுகிறான்.
ஆகவே எவர்கள் அங்கு யாத்திரை
செல்லச் சக்தி உடையவர்களாக
இருக்கிறார்களோ, அத்தகைய
மனிதர்கள் மீது, அல்லாஹ்வுக்காக
(அங்குசென்று) அவ்வாலயத்தை
ஹஜ்ஜு செய்வது கடமையாகும்
...... ...... ...... (அல்குர்ஆன் : 3 : 97)

என வந்துள்ள திருவாக்கியத்தில் ஹஜ் கடமையாக்கப்பட்ட விவரம் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தோடு இஸ்லாமிய மூலமந்திரமான கலிமா, தொழுகை, கட்டாய கொடையான சக்காத், நோன்பு, புனித யாத்திரையான ஹஜ் என்பன ஐந்தும் முஸ்லிம்களுக்கு கடமையாக்கப் பட்டுவிட்டன. இதனையே இப்பாடல் குறிப்பிடுகிறது.

...... ...... ...... ......
நிறைந்த அல்லா செகத்தின் மேற்றன்
தூதராய் உமையிருக்க அனுப்பினதும்
காலமைந்தும் தொழுக வென்றும்
காதலுடன் சக்காத்து நோன்புகச்சும்
பறுலெனவே கழறு மைந்தும்
(ஸுமாம் ஈமான் கொண்ட படலம் : 5)

இதே கால எல்லையிலே முஸ்லிம் மக்கள் மது அருந்தக் கூடாது; சூதாட்டத்தில் ஈடுபடக் கூடாது; விக்கிரக ஆராதனை கூடாது; அம்பெறிந்து குறிகேட்பதும் கூடாது என்றும் இறைகட்டளை பெருமானார் (சல்) அவர்களுக்கு அனுப்பப்பட்டன. இவை விலக்கப்பட்டவையாக ஹறாமானவையாகக் கூறப்பட்டுள்ளது. இதனைக்கொண்ட அல்குர்ஆன் திருவாக்கியம் இவ்வாறு அமைந்துள்ளது.

'விசுவாசிகளே! நிச்சயமாக மதுபானமும்,
சூதாட்டமும், விக்கிரக ஆராதனையும்,
அம்பெறிந்து குறிகேட்பதும், ஷைத்
தானுடைய அருவருக்கத்தக்க வேலை
களிலுள்ளவையாகும். ஆகவே
இவைகளிலிருந்து நீங்கள் விலகிக்
கொள்ளுங்கள். (அதனால்) நீங்கள்
சித்தி பெறுவீர்கள். (அல்குர்ஆன் : 5 : 93)

இத்திருவாக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கருத்துக்களைப் பெருமானார் தோழர்களுக்கு அறிவித்தார்கள். அங்கு குறிப்பிடப்பட்ட மதுபானத் தடையைப் பற்றி உமறுப்புலவர் ஒரு பாடலில் குறிப்பிடும் பொழுது மதுபானத்தின் தன்மையினையும் மதுபானம் அருந்துவதனால் ஏற்படும் தீய விளைவுகளையும் இவ்வாறு விளக்கி உள்ளார்.

தள்ளரிய மனத்தறிவு தனையகற்றி
மெய்மயக்கந் தந்து நட்பா
உள்ளவரைப் பகையாக்கி உரைப்பதிவை
எனவறியா துரைக்கப் பண்ணுங்
கள்ளுணவும் வெறிமதுவும் ஹறாமெனவா
யத்துவரக் கண்டன் பாகி
விள்ளரிய மறைப்பொருளை சகுபிகளுக்
குரைத் தெவர்க்கும் விளக்கினாரே
(லுமாம் ஈமான் கொண்ட படலம் : 2)

பெண்களை நிந்திக்கக்கூடாது. உண்மைக்கு முரணான காரணங்களைக் கூறி பெண்கள் மீதுள்ள குற்றஞ் சாட்டுதலை அல்குர்ஆன் வன்மையாகக் கண்டிக்கிறது. பண்டு அறபு நாட்டிலே ஒரு பழக்கம் இருந்தது. இஸ்லாம் ஏற்றுக் கொள்ளாத ஒரு பழக்கம். இஸ்லாத்தைப் பின்பற்றியவர்களும் சில சமயங்களில் தமது சுயநலம் கருதி அப்பழக்கத்தைப் பின்பற்றலாயினர். அத்தகைய ஒரு பழக்கத்தையும் அது பின்பற்றப்பட்டமையால் ஏற்பட்ட விளைவுகளையும் சீறாப்புராணத்தில் உள்ள கவுலத்தை விட்டுக் கூட்டின படலம் விவரிக்கிறது.

இச்சம்பவத்தில் சம்பந்தப்பட்ட பெண் கவுலா பிந்த் தஅலபா என்பவள். அவளுடைய கணவன் பெயர் அவுஸ். சாமித் என்பவரின் புதல்வன். அவர்களிருவரும் முஸ்லிமாயிருந்தனர். ஆனால் அவுஸ் என்பவன் ளிஹார் என அன்று பெருவழக்கிலிருந்த அப்பழக்கத்தை மேற்கொண்டான். 'ளிஹார்' என்பது ஒரு சூத்திரம் போன்று அமைந்திருந்தது.ஓர் ஆண் தனது மனைவியை விரும்பாவிடின் அவர் 'ளிஹார்' என்பது குறிக்கும் அச்சொற்றொடரை உச்சரிப்பான். 'நீ எனக்கு என் தாயைப் போன்ற வளாகிவிட்டாய்' என்று கூறுவதே அச்சொற்றொடராகும். இஸ்லாத்துக்கு முன்னர் இச்சொற்றொடரை ஒருவன் கூறிவிட்டால் அது விவாகரத்துக்குச் சமமானது எனக் கொள்ளப்பட்டது. அப்பெண்ணின் கணவன் என்னும் பொறுப்பிலிருந்து தன்னை விலக்கிக் கொண்டவன் ஆகிவிட்டான் எனக் கருதப்பட்டது. அச் சந்தர்ப்பத்தில் தனது மனைவியுடன் உறவுகொள்வதை நிறுத்திவிட்டதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. கணவன் என்னும் அவனுடைய பொறுப்புக்களிலிருந்து அவன் விடுதலை பெற்றுவிட்டான் எனக் கருதப்பட்டது. ஆனால் அந்தச் சுதந்திரம் அத்தகைய ஒரு பெண்ணுக்குக்

கிடையாது. அவள் அவளுடைய கணவன் வீட்டிலேயே தங்கி இருக்க வேண்டி இருந்தது. அவனுக்குத் திருமணம் புரிந்து கொள்ள முடியும். ஆனால் அவளுக்கு மறுமணம் செய்யும் வாய்ப்புக் கிடையாது.

பெருமானார் (சல்) காலத்தில் வாழ்ந்த அவுஸ் இப்னு சாமித் என்பவர் தனது மனைவியான கவுலா பின்து த' அலபாவை 'ளிஹார்' உச்சரிப்பின் மூலம் தள்ளிவைத்தார். சிறுகுழந்தைகளை உடைய அப் பெண்மணி தன் கணவன் பால் அளவற்ற அன்புடையவளாயிருந்தாள். அவளுடைய பிள்ளைகளை அவளால் பராமரிக்க இயலவில்லை. தனது பிள்ளைகளைப் பராமரிக்கும்படி அவள் தனது கணவனிடம் குறை இரந்தாள். அவரோ அதற்கும் செவி சாய்க்கவில்லை. தமக்கு அப்பொறுப்பு இல்லை என்றே அவர் கருதினார்.

கவுலா என்னும் பெண்மணி பெருமானார் (சல்) அவர்களிடம் சென்று முறையிட்டாள். அவளுடைய முறையீடு இவ்வாறிருந்தது என உமறுப்புலவர் கூறியுள்ளார்.

இறையவன் தூதே செல்வ மிலங்கிய கோவே வேத
மறைபடர் கொம்பே என்ன வணங்கிவாய் புதைத் தொதுங்கிக்
கறையற மாலிக் கீன்ற கவுலத்து யானென் றன்னை
அறைகழல் சாமித் தீன்ற அவுசினுக் களித்தா ரன்றே.

(கவுலத்தைவிட்டுக் கூட்டின படலம்: 5)

இங்கே கவுலத்தின் தந்தையின் பெயர் மாலிக் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அவர் தம் பெயர் தஅலபா வாகும். எனவே இச்செய்யுளில் உள்ள மூன்றாம் அடியில் இருக்கும் முதன் மூன்று சீர்களும் 'கறையற தலபாவீன்ற' என வந்திருக்கலாம். தம்மை அறிமுகப்படுத்திவிட்டுத் தனது முறைப்பாட்டைப் பெருமானாரிடம் இவ்வாறு கூறினாள் என்பது இரண்டு பாடல்களில் அமைந்துள்ளது.

இளமையும் எழிலும் செல்வத் தியற்கையுங் கிளையுமிக்க
வளமையும் முற்று மேனான் மகிழ்ந்தினி திருந்தோ மன்பாய்
உளமகிழ் தனையர் தோன்றி உரியவா லிபமு மாறி
அளவிடற் கரிய வாழ்வும் அழிந்திட மெலிந்த பின்னர்

சீற்றமும் பகையும் பொல்லாச் செய்கையு மன்றி வேறு
மாற்றமொன் றுரையா தில்லின் வருந்தொறும் புலிபோற் சீறிக்
கோற்றொடி யாரை நோக்கிக் கொழுநர்க ளொருகா லத்துஞ்
சாற்றரு முறைகொண் டென்னைத் தாயென உரைத்தார் மன்னோ

(கவுலத்தை விட்டுக் கூட்டின படலம்: 6, 7)

அவ்வாறு உரைத்தலோடு நின்றுவிடாது தன்னைவிட்டுச் சென்று விட்டார் என்றும் தானும் தன் பிள்ளைகளும் வாழ்க்கைக்கு வழியின்றி தவிப்பதாகவும் தாம் சேர்ந்து மறுபடியும் வாழ ஒரு வழி சொல்லும்படியும் பெருமானார் (சல்) அவர்களிடம் கோரினாள். சேர்ந்து வாழ்வதற்கான தந்திரம் ஏதும் உண்டோ என்றும் வினாவினாள். சேர்த்து வைப்பது அரிய ஒரு காரியம் என்று பெருமானார் (சல்) அவர்கள் கூறியதாக உமறுப்புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

கொந்தலர் குழலாய்! எம்மாற் கூட்டுத லரிய தென்றார்
(கவுலத்தைவிட்டுக் கூட்டின படலம் : 9)

அப்பொழுது அந்தப் பெண்மணி அல்லாஹ்விடம் குறை இரந்தாள். துஆக் கேட்டாள். உமறுப்புலவர் வாயிலாகக் கூறுவதாயின்

சகதல முழுதும் நின்ற தனிப்பெரும் பொருளை யுன்னி
இகலறு மொழிகள் கூறித் துஆவிரந் திரங்கி நின்றாள்
(கவுலத்தை விட்டுக் கூட்டின படலம் : 10)

அப்பெண்மணியின் நியாயமான கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொண்டான். பெருமானார் (சல்) அவர்களுக்கு அல்லாஹ் இவ்வாறு அறிவித்தான்.

'(நபியே!) எவள் தன் கணவனைப் பற்றி உம்மிடத்துத் தர்க்கித்து (அவனைப்பற்றி) அல்லாஹ்விடம் முறையிட்டாளோ, அவளுடைய முறையீட்டை அல்லாஹ் நிச்சயமாகக் கேட்டுக்கொண்டான். (அதைப்பற்றி) உங்களிருவரின் (தர்க்க) வாதத்தையும் அல்லாஹ் செவியுற்றான். நிச்சயமாக அல்லாஹ் (யாவையும்) செவியுறுவோனும் (ஒவ்வொருவரின் செயலையும்) உற்று நோக்கினவனுமாக இருக்கின்றான்.

'உங்களில் எவரேனும் தம் மனைவிகளில் எவளையும், தன்னுடைய தாயென்று கூறிவிடுவதனால் அவள் அவர்களுடைய (உண்மைத்) தாயாகி விடமாட்டாள். அவர்களைப் பெற்றெடுத்தவர்கள் தாம் (உண்மைத்) தாயாவார்கள். (இதற்கு மாறாக எவளையும் எவரும் தாயென்று கூறினால், கூறுகின்ற) அவர்கள் நிச்சயமாக தகாததும், பொய்யானதுமான ஒரு வார்த்தையையே கூறுகின்றனர். நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்போனும் (குற்றங்களைப்) பொறுப்போனுமாக இருக்கின்றான். (ஆகவே இத்தகைய குற்றம் செய்தவர்கள் அல்லாஹ்விடம் மன்னிப்பைக் கோரவும்).

'எனவே எவரேனும் தங்கள் மனைவிகளைத் (தம்)
தாய்க்கு ஒப்பிட்டுக் கூறிய பின்னர், அக்கூற்
றிலிருந்து திரும்பி (மீண்டும்) சேர்ந்து கொள்ள
விரும்பினால் அவ்விருவரும்
ஒருவரையொருவர் தொடுவதற்கு முன்ன
தாகவே, (இவ்வாறு ஒப்பிட்டுக் கூறியதற்குப்
பரிகாரமாக) ஓர் அடிமையை விடுதலை செய்ய
வேண்டும் (என்று) இதன்மூலம் நீங்கள்
உபதேசிக்கப்படுகிறீர்கள். அல்லாஹ் நீங்கள்
செய்பவைகளை நன்கறிபவனாக இருக்கின்றான்.

'(விடுதலை செய்யக் கூடிய அடிமையை)
எவரேனும் பெற்றிருக்காவிடில்
அவ்விருவரும் ஒருவரை ஒருவர் தொடுவதற்கு
முன்னதாகவே (அவன்) இரண்டு மாதங்கள்
தொடர்ச்சியாக நோன்பு நோற்கவும்
(இவ்வாறு நோன்பு நோற்கச்) சக்திபெறா
தவன் அறுபது ஏழைகளுக்கு (மத்திய
தரமான) ஆகாரமளிக்கவும். அல்லாஹ்
வையும் அவனுடைய தூதரையும் நீங்கள்
(மெய்யாகவே) விசுவாசங் கொண்டிருக்கிறீர்கள்
என்பதற்காக (இக் கட்டளையை இவ்வாறு
இலகுவாக்கி வைத்தான்) இவைகள் அல்லாஹ்வுடைய
வரம்புகளாகும், (இவற்றை மீறுவதன் மூலம்)
நிராகரிப்போருக்குத் துன்புறுத்தும் வேதனையுண்டு.

(அல்குர்ஆன்: 58 : 1-4)

ஒருவன் தன் மனைவியைத் தாய் என்று கூறியமை தண்டனைக்குரிய குற்றம் என்பதையும் அத்தண்டனையிலிருந்து மீட்சி பெற ஒருவன் மேற்கொள்ளவேண்டிய பரிகாரமும் மேலே கூறப்பட்டது. இக்குற்றத்திலிருந்து பரிகாரம் பெறுவதற்கு ஒருவன் ஓர் அடிமைக்கு விடுதலை அளித்தல் வேண்டும். தன்னிடம் அடிமை இல்லாவிட்டால் ஓர் அடிமையை விலைக்கு வாங்கி விடுதலை அளித்தல் வேண்டும். இதனை நிறைவேற்ற முடியாதவனாயிருந்தால் இரமலான் மாதம் கடைப்பிடிக்கப்படும் நோன்பைப் போன்று இரண்டு மாதங்கள் நோன்பு நோற்றல் வேண்டும். நோன்பு நோற்பதற்கு அவனுடைய உடல் நிலை இடமளிக்காவிடில் அவன் அறுபது வறியவர்கட்கு உணவு அளித்தல் வேண்டும். உணவு அளிப்பது என்பது ஒருவனுக்கு இரண்டு வேளைகளாவது போதுமான உணவு அளிக்கப்படுவதையே குறிப்பிடுகிறது. அறுபது வறியவர்கட்கு உணவு அளிப்பது

என்பதனை ஒருவனுக்கு அறுபது நாட்களுக்கு உணவு அளிப்பதையும் இருவருக்கு முப்பது நாட்களுக்கு உணவு அளிப்பதையும் இன்னோ ரன்ன பிற நடைமுறைகளையும் மேற்கொள்ளலாம் எனக் கூறலாம் என்று அறிஞர் அபிப்பிராயப்படுகின்றனர்.

இந்த அல்குர்ஆன் ஆயத்து என்னும் திருவாக்கியங்கள் அருளப் பெற்றதும் அண்ணல் நபி (சல்) அவர்கள் கவுலா என்பவரை விளித்து அவர் தம் கணவரை அழைத்து வரும்படி கேட்டார்கள். அழுது கொண்டிருந்த அவரும் சென்று தனது கணவரை அழைத்து வந்தார். வந்தவுடன் பெருமானார் (சல்) அவர்கள் தங்களுக்கு அருளப்பெற்ற அல்குர்ஆன் ஆயத்தினை ஓதிக்காட்டி நிலைமையை விளக்கினார்கள். இவ்வாறு அருளப்பெற்ற ஆயத்துக்களை விளக்கின முறையினை உமறுப்புலவர் இவ்வாறு விவரித்துள்ளார்.

வரவவர் தம்மை நோக்கி வந்தஆ யத்தி லுள்ள
உரைவழு வாமல் வள்ளல் உரைத்தனர் அவனி மீதில்
புரையரு கோபந் தன்னால் புருடர்கள் மனைவி மாரை
வரையறத் தாய்நீ என்று வழுத்துந்தீ தகற்ற வேண்டில்

அடிமைகொண் டுரிமை யாக விட்டிட லவையின் றென்னில்
இடையறா திரண்டு மாதந் தொடர்ந்துநோன் பிருக்க வேண்டும்
கடவதற் குரியர் அன்றேல் கருதிய அதிதி மாரென்
றடகுகூ ழையம் ஏற்போர் அறுபது பெயரைக் கூவி

தலைக்கொரு படியா லுள்ள தவசமு மவருக் கீந்து
விலக்குதல் கடனாம் என்று வந்தது வேதம் என்றார்
அலக்கணுற்ற றழுது நின்ற அறிவைதன் மெலிவை எல்லாம்
சொலக்கருத் துன்னி வள்ளல் தூய்முகம் பார்த்துச் சொல்வாள்.

(கவுலத்தை விட்டுக் கூட்டின படலம் : 13, 14, 15)

பெருமானார் (சல்) அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த சின்னஞ் சிறு சம்பவங்களையும் உமறுப்புலவர் அறிந்திருந்தார் என்பது சீறாப் புராணப் பாடல்களிலிருந்து புலனாகின்றது. அதே போன்று அல்குர் ஆனின் திருவாக்கியங்களையும் அத்திரு வாக்கியங்கள் எவ்வெச் சந்தர்ப்பங்களில் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அருளப்பட்டன என்னும் விவரங்களையும் உமறுப்புலவர் நன்கு அறிந்திருந்தார் என்பதும் சீறாப்புராணப் பாடல்களிலிருந்து தெற்றெனப் புலனா கின்றது. அல்குர்ஆன் கருத்துக்களை விளக்கும் விதத்திலிருந்து வேறொருவரிடமிருந்து உரை கேட்டுத் தான் சீறாப்புராணம் பாடப் பட்டது என்பது ஏற்றுக்கொள்ள முடியாததாகின்றது. அத்தகைய அவசியம் சீறாப்புராண ஆசிரியருக்கு ஏற்படவில்லை என்பதும் மறுக்க முடியாத உண்மையாகும்.

**கருத்தொற்றுமை :**

ஒரு காப்பியத்தில் அதன் ஆசிரியர் தமது கூற்றை வலியுறுத்தப் பிற இலக்கியங்களிலிருந்து சில பொன்மொழிகளைப் பயன்படுத்துவதுண்டு. அத்தகைய பிரயோகம் அந்த இலக்கியங்களில் அவ்வாசிரியருக்கு இருந்த ஈடுபாட்டைக் காட்டுவதோடு அவ்வாறு பயன்படுத்துவதனால் அவருடைய காப்பியமும் மெருகூட்டப்படுகிறது என்பதும் உண்மை. வெவ்வேறு காலங்களில் தோன்றிய பல்வேறு புலவர்கள் இத்தகைய உத்தியைக் கையாண்டு பெரு வெற்றியைக் கண்டுள்ளனர். சீறாப்புராணத்திலும் பிற இலக்கியங்களில் உள்ள கருத்துக்கள் கூட்டியும் குறைத்தும் பெருக்கியும் சுருக்கியும் ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம். சீறாப்புராண ஆசிரியர் தமது கருத்தோடு ஒத்துவரும் கருத்துக்களைக் திருக்குறளிலிருந்து எடுத்து ஆண்டிருப்பதைக் காணலாம். திருக்குறட் கருத்துக்களை மேற்கோள்காட்டி இருப்பதைக் காணலாம்.

நபிகள் பெருமானார் (சல்) அவர்களும் அவர்தம் கூட்டத்தவரும் ஒரு வழியிலே சென்று கொண்டிருந்தார்கள். இரவு வந்ததும் ஓரிடத்தில் தங்கினார்கள். அங்கே கள்வர் கூட்டமொன்று வியாபாரிகளை வழிமறித்துக் கொள்ளையிட உள்ளது என்பதை அறிந்தார்கள். ஆனால் இரவோடு இரவாக அங்கே ஓர் ஆறு பாய்ந்து ஓடியது. அந்த ஆற்றின் மறுகரையிலே கள்வர் அகப்பட்டுவிட்டனர். ஆற்றைக் கடந்து வியாபாரிகளைச் சூறையாடும் அவர்கள் தம் நோக்கம் கைகூடவில்லை. இத்தகைய பல இன்னல்களுக்கு அவ்வியாபாரக் கூட்டம் ஆளாகியது, இந்த இன்னல்களிலிருந்து தம்மைக் காப்பாற்றியது பெருமானார் (சல்) அவர்களே என்றனர் அங்குள்ளோருள் பலர். ஆனால் பெருமானாரின் பகைவனான அபூஜகிலோ இந்த இன்னல்கள் அனைத்துக்கும் காரணம் முகம்மது நபி அவர்களே என்றான். இதனைப் பொறுக்க முடியாது அபூபக்கர் (றலி) அவர்கள் அவனைக் கண்டித்தார்கள். ஆனால் முகம்மது நபி (சல்) அவர்கள் ஒன்றும் பேசாது வழி நடந்தார்கள். இவ்வாறு அபூஜகில் கூற்றினைப் பொருட்படுத்தாது நடந்தார்கள். தீய்ந்து கரிந்து கறுப்புண்ட நெஞ்சை உடையவர்கள் கூறிய கூற்றை கல்வி கேள்விகளிற் சிறந்தவர்கள் காதில் ஏற்கமாட்டார்கள். அதனைப் பொறுத்துக் கொள்வர். இந்தப் பேருண்மையையே பெருமானார் கடைப்பிடித்தார்கள் என உமறுப்புலவர் இவ்வாறு பாடி உள்ளார்.

கரிந்த புன்மனச் சிறியவர் கழறிய கொடுஞ்சொல்
தெரிந்த மேலவர் செவிக்கிடார்...........

(கள்வரை நதிமறித்த படலம் : 12)

இங்கே திருக்குறள் கருத்துக்கள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல் (314)

என்னும் குறளில் உள்ள கருத்துக்களை உமறுப்புலவர் பயன்படுத்தி உள்ளார் என்பது புலனாகின்றது.

முகம்மது நபி (சல்) அவர்கள் சிறியா நாட்டுக்குச் சென்றிருந் தார்கள். அப்பொழுது சூழ்ச்சிக்காரர் சிலர் அவர்களைக் கொல்ல எண்ணி அவர்களை ஓர் இடத்துக்கு அழைத்தார்கள். அங்கே அவர்கள் வந்ததும் அவர்கள்மீது பெருங் கற்களைத் தள்ளிவிடத் திட்டமிட்டனர். அவ்வாறு கற்களை இட்டனர். அங்ஙனம் கற்களை இடும்பொழுது ஒருவனுடைய கை கற்களுக்குள் அகப்பட்டு முறிந்தது. இந்த நிகழ்ச்சியையே உமறுப்புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

ஓங்கு மாநில மாக்களில் ஒருவருக் கொருவர்
தீங்கு இயற்றிட நினைத்திடுங் கொடியவத் தீமை
நீங்கி டாதவ ருயிரினைப் பருகநே ரவர்கை
தாங்கும் வாளென ஒல்லையில் உறச்சமைந் திடுமே
(கரம் பொருத்து படலம் : 52)

இங்கே ஒருவருக்குத் தீங்கு செய்ய நினைப்பவன் அத்தீங்கு பகைவ னுடைய கையிலே உள்ள வாள்போல அவனுக்குத் துன்பம் விளைத் திடும். இக்கருத்துக்களுக்குச் சமமான கருத்துக்கள் திருக்குறளில்

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு (204)

என வந்துள்ளன.

நபிகள் பெருமானாரும் தோழர் அபூபக்கர் அவர்களும் மக்காவி லிருந்து மதீனம் சென்றனர். அவர்களிருவரையும் பிடிக்க சுறாக்கத் என்பவன் பின் தொடர்ந்தான். அவனுடைய மன நிலையை விளக்க உமறுப்புலவர் ஒரு பழமொழியைப் பயன்படுத்தி உள்ளார்.

புன்மைகவர் வஞ்சகநெஞ் சினர்க்குமறை
தினந்தோறும் புகட்டி னாலும்
நன்மைபய வாரெனுஞ்சொல் பழமொழியைப்
புதுக்குவன்போல் நடுக்க நீங்கி
(சுறாக்கத் தொடர்ந்த படலம் : 34)

இவ்வாறு ஒரு பழமொழியைப் புதுமொழியாக்குபவன் போல சுறாக்கத் என்பவன் முகம்மது நபி (சல்) அவர்களைக் கொல்ல வந்தான் என இப்பாடல் குறிப்பிட்டுள்ளது.

அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு (847)

என்ற குறளின் கருத்துக்களுடன் ஒத்திருப்பதைக் காணலாம்.

கபுகாபு என்பவருடைய தந்தை மூன்று வேதங்களையும் அறிந்தவன். முகம்மது நபி (சல்) அவர்களின் வரவைப் பற்றி அறிந்திருந்தான். அவனிடம் அதற்குரிய அத்தாட்சிகள் இருந்தன. அவற்றை அவன் யாரிடமும் தர விரும்பவில்லை. ஒருநாள் கபுகாபு என்பவரின் தந்தை மதுபோதையில் இருக்கும்பொழுது அவ்விவரம் எழுதப்பட்டிருந்த பத்திரத்தை கபுகாபு என்பவர் எடுத்துவிட்டார். இச்சூழ்நிலையிலே உமறு தமது நூலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

போதமும் தரும நேர்ந்த புந்தியும் புகழின் பேறும்
வேதமும் கலையு ஞான விளக்கமு மனுவி நூலும்
காதலிற் பயந்த மைந்தர் கருத்தினில் சிறப்பச் செய்தல்
தாதையர் கடனே அன்றி கரப்பது தகைமைத் தன்றே
(கபுகாபுப் படலம் : 38)

அத்தகைய விவரங்களை மறைக்காது அவற்றைத் தன் மகன் அறியச் செய்வது தந்தையின் கடமையல்லாது அவற்றைத் தன் மகன் பெறாத வண்ணம் மறைத்து வைத்தல் தகாது என்னும் கருத்தையே இங்கு புலவர் வலியுறுத்தி உள்ளார். இக்கருத்துக்களையே இரத்தினச் சுருக்கமாகத்

தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல். (67)

என திருவள்ளுவர் கூறிப்போந்தார்.

உகுதுப்போர் நடைபெற இருந்த சமயம் அது. பகைவரைக் கண்ட முஸ்லிம்கள் தமது படை அளவிற் குறைந்தது என உணர்ந்தனர். வெளியில் அதனைச் சொல்லவில்லை. அம்முஸ்லிம் மக்களின் உள்ளத்திலே ஏற்பட்ட இந்த ஐயத்தை உடனே உணர்ந்துவிட்டார்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள். அந்தச் சூழ்நிலையே இப்பாடலில் இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

அடுத்தவை காட்டுகின்ற பளிங்குபோ லகத்தினூடு
கொடுத்திடு நலித லியாவு முகத்தினாற் றோன்றக் கண்டு
(உகுதுப் படலம் : 113)

அகத்தினழகு முகத்தில் தெரியும் என்பர். தன்னையடுத்த பொருளது நிறத்தைத்தானே கொண்டு காட்டும் பளிங்குபோல ஒருவன் நெஞ்சத்து மிக்கதனை அவன் முகம் தானே கொண்டு காட்டும். இதனைத் திருவள்ளுவர்,

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். (706)

எனக் கூறி உள்ளார்.

இக்கருத்துக்களையே நான்மணிக்கடிகை வேறுவிதமாகக் கூறுகிறது. ஒருவனது உள்ளக்குறிப்பை அவனது முகத்தைப் போல முன்படத் தெரிவிப்பது வேறொன்றும் இல்லை எனப் பொருள்பட 'முன்னம் முகம்போல முன்னுரைப்பதில்' என்னும் சொற்றொடரைக் கொண்ட நான்மணிக்கடிகையில் உள்ள ஒரு செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

நாற்ற முரைக்கும் மலருண்மை கூறிய
மாற்ற முரைக்கும் வினைநலந் தூக்கின்
அகம்பொதிந்த தீமை மனமுரைக்கும் முன்னம்
முகம்போல முன்னுரைப்பதில் (45)

தாதுற்றஹாக்கு என்னும் தலத்தில் பெருமானார் அவர்கள் ஒருநாள் ஒரு தனிமையான இடத்தில் தங்கி இருந்தார்கள். அப்பொழுது அங்கே உருவிய வாளுடன் ஒருவன் அங்கு வந்தான். கண்மூடிக் கொண்டிருந்த அண்ணல் நபி (சல்) அவர்களை விளித்து 'முகம்மதே, என் வாளிலிருந்து உம்மைக் காப்பாற்றுபவர் யார்?' எனக் கேட்டான். 'அல்லாஹ்' என்று விடைபகர்ந்தார்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள். எதிர்பாராத விடையைக் கேட்ட அவன் கையிலிருந்து வாள் கீழே விழுந்துவிட்டது. அங்கே அவன் கையிலிருந்து கீழே விழுந்த வாளை எடுத்துப் பெருமானார் (சல்) அவர்கள் 'இப்பொழுது உன்னை இவ்வாளிலிருந்து காப்பாற்றுபவன் யார்?' எனக் கேட்டார்கள். 'ஒருவருமில்லை' என்று விடை பகர்ந்த அவன் பெருமானாரிடம் மன்னிப்புக் கேட்டு இஸ்லாத்தில் சேர்ந்தான். அவன் தன் நிலைமையை உணர்ந்தமையை உமறுப்புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

பிறர்க்க டாத பெரும்பிழை நெஞ்சினிற்
குறிக்கு நீர்மையன் செய்தவிக் குற்றமே
மறைக்க ணின்று வளரிறைக் காகநீர்
பொறுக்க வேண்டும் எனச்சரண் பூண்டனன்
(தாதுற்றஹாக்குப் படலம் : 56)

இங்கே அவன் இறைவனுக்காகத் தன்னை மன்னித்துவிடும்படி பெருமானார் (சல்) அவர்களிடம் சரணடைந்தான் எனக் கூறப்பட்டுள்ளது. இக்கருத்துக்களை வேறுவிதமாகக் கூறியுள்ளார் திருவள்ளுவர்.

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று (157)

இத்தகைய மேற்கோள்கள் பலவற்றை உமறுப்புலவர் சீறாப் புராணத்தில் தந்துள்ளார். தாம் கூறக்கருதியவற்றைப் பொதுக் கூற்றுக்களுடன் சேர்த்துக் குறிப்பிட்டுத் தமது சீறாப்புராணத்தைச் சிறப்படையச் செய்துள்ளார். நறுந்தொகை போன்ற நீதி நூல்களி லிருந்தும் மேற்கோள்களைச் சீறாப்புராணத்தில் கையாண்டுள்ளார் உமறுப்புலவர்.

**சொல்லாட்சி :**

ஒரு கவிஞன் தன் ஆற்றலை அவன் தனது படைப்பில் கையாளும் சொற்களைக் கொண்டு நிர்ணயிக்கலாம். எந்தெந்தச் சொல் எந்தெந்த முறையில் எவ்வெவ்விடத்தில் இடம் பெறவேண்டும் என்பதை நன்குணர்ந்தே அவன் அவனது படைப்பைப் படைக்க முற்படுவான். சொற்கள் சிறந்த ஒழுங்கு முறையில் அமைவதே உரை நடை. ஆனால் சிறந்த சொற்கள் சிறந்த ஒழுங்கு முறையில் அமைந்துவிட்டால் அது சிறந்த கவிதை எனக் கருதப்படும். இங்ஙனம் சிறந்த சொற்களைத் தெரிந்தெடுத்து அவற்றைச் சிறந்த முறையில் ஒழுங்குபடுத்தி தான் கருதிய பொருளை ஏனையோருக்கு விளக்குவதில் வெற்றி ஈட்டுவதே ஒரு புலவனின் பிரதானமான குறிக் கோளாகும். படிப்பவருக்கு அலுப்புத் தட்டாமல் இருக்க ஒரே பொருளைத் தரும் பல சொற்களை ஒரு புலவன் பயன்படுத்துவான். ஒரே சொல்லைக்கூட பல கருத்துக்களில் உபயோகிப்பான். சுருங்கச் சொல்லி விளங்கவைப்பான். தொகுத்துக் கூறுவான். விரித்துரைப் பான். ஓசைநயம் கருதி ஒரே சொல்லைப் பல தடவை உபயோகிப் பான். இந்த அடிப்படையில் உமறுப்புலவர் அருமையாகப் பயன் படுத்தி உள்ள சில சொற்களை எடுத்துக் கொள்வோம்.

அடவு என்பது எங்கள் காதுகளில் எப்பொழுதுமே ஒலித்துக் கொண்டிருக்கும் ஒரு சொல்லாகும். 'தொழுகை அடவு' என்னும் ஒரு நூல் உள்ளது. முஸ்லிம் மக்கள் அல்லாஹ்வைத் தொழும்பொழுது கடைப்பிடிக்கவேண்டிய ஒழுங்கு முறைகளை அந்நூல் விவரிக்கிறது. இந்த அடவு என்னும் சொல் உருமாறிய ஓர் அறபுச் சொல் என்று சிலரும் உச்சரிப்பில் ஏற்பட்டுள்ள மாற்றத்தால் உருவான ஒரு தமிழ்ச் சொல் என்று சிலரும் கூறுவர். ஒழுக்கம் எனப்பொருள்படும் அதபு என்னும் அறபுச் சொல்லே அடவு என மாறியுள்ளது என்பர். அடவு என்பது தமிழ்ச் சொல்லாகக் கருதின் அது முறை எனப்படும் அடைவு என்னும் சொல்லிலிருந்து தோன்றி உள்ளது எனக் கொள்ளலாம். அடைவு என்னும் சொல் கல்லாடம் (6 : 35) என்னும் நூலில் இதே பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். 'தொழுகை அடவு' என்பதில் உள்ள அடவு என்பதனை அறபு எனக் கொள்ளின் தொழுகை ஒழுக்கம் என்றும் அதனைத் தமிழ் எனக் கொள்ளின்

தொழுகை முறை என்றும் பொருள் கொள்ளக்கூடியதாக இருப்பதைக் காணலாம். உமறுப்புலவரும் அடவு என்னும் சொல்லை முறை என்னும் பொருளில்

...... ...... மாற்றம் பகர்வது நீங்கி
அயலகல் வதுவே நுங்கட்கு அடவு என அறியவேண்டும்
(மதீனத்தாரீமான் கொண்ட படலம் : 26)

எனப் பயன்படுத்தி உள்ளார்.

அட்டுகம் என்பது அட்டு என்பதும் கம் என்பதும் சேர்ந்த ஒரு சொற்றொடர். அடுதல் என்றால் சமைத்தல் என்பது பொருள். கம் என்றால் தொழில் என்பது பொருள். 'கம்மு முருமென் கிளவியும்' என்கின்றது தொல்காப்பியம் (எழுத்ததிகாரம் : 328) சமையல் தொழில் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது என்பதனைக் கூறவே உமறுப்புலவர் இவ்வாறு பாடி உள்ளார்.

எண்ணி லாதபேரில் அட்டுகம் ஆயின ......
(கந்தக்குப் படலம் : 66)

நெய்யில் வெங்கறி யிலட்டுக மோய்ந்தில நிறைந்த
(கந்தக்குப் படலம் : 69)

எல்லாம் அல்லது எல்லாரும் என்னும் பொருள்பட அடங்கலும் என்னும் சொல்லை உமறுப்புலவர் பயன்படுத்தி உள்ளார்.

நாடடங் கலுந்தெரி தரந டந்ததே.
(ஒப்பெழுதித் தீர்ந்த படலம் : 23)

என்றும்,

பூணுந் தஞ் செல வடங்கலும் போக்கியும் ......
(சல்மான் பாரிசுப் படலம் : 60)

என்றும்

ஆறு கொண்டன திகைவெளி அடங்கலும்
(உகுதுப் படலம் : 44)

என்றும் அஃறிணையிலும்

பரிச னத்தவ ரடங்கலும் பதைபதைத் தேங்க
(பிராட்டியார் பொன்னுலகுபுக்க படலம் : 10)

என்றும்

...... ...... ...... ...... நின்றவர்
அடங்கலும் செவிக்கொளக் கூப்பிட் டார்த்ததால்
(மதீனம் புக்க படலம் : 57)

என்றும் உயர்திணையிலும் அடங்கலும் என்னும் சொல்லை உமறுப் புலவர் பயன்படுத்தி உள்ளார். இலங்கை முஸ்லிம் மக்களின் பெரும்

பாலோரின் தமிழ்ப் பேச்சு வழக்கில் இச்சொல் இவ்வாறு பயன்படுத் தப்படுவதைக் காணலாம்.

அபிதானம் என்பது பெயர் எனப் பொருள்படும். சூரியன் மறைந்து சந்திரன் உதயமானால் எனக் கூறவந்த உமறுப்புலவர் ஆயிரம் சிறப்புப் பெயர்களை உடைய முகம்மது நபி (சல்) அவர் களின் முகம் போன்று சந்திரன் தோன்றினான் என இவ்வாறு பாடியுள்ளார்.

சேயுயர் கடவு ணாவலி னிழற்கீழ்ச்
சிறப்புடன் சகமக ளுவந்து
பாயிருட் படம்போர்த் துறைந்துகண் வளரப்
படர்திரைக் குடதிசை புகுந்தான்
மாயிருட் குடம்பை சீத்துவிட் டெறியும்
வாண்மதி வெண்டிரை முகட்டின்
ஆயிர மபிதா னம்முடைக் குரிசில்
ஆனனம் போலுதித் ததுவே.

(சல்மாபொருத படலம் : 77)

அமட்டுதல் என்றால் மயக்குதல் என்பது பொருள். இது பேச்சு வழக்கில் பெரிதும் பயன்படுத்தப்படும் ஒரு சொல். அங்கு ஏற்பட்ட பொறிக்கறியின் வாசம் பெண்களுடைய நாசியுட் புகுந்து அவர்களை மயக்கமுறச் செய்யும் அளவுக்கு மிகுந்திருந்தது என்பதனை உமறுப் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

'நான மார்புய மாந்தர்க ணாசியு மமட்டி'

(பாத்திமா திருமணப் படலம் : 101)

'அம்மலோதி' என்னும் சொற்றொடரை அடுத்துப் பார்ப்போம். அம், அல், ஓதி என்னும் மூன்று சொற்களைக் கொண்டது இச்சொற் றொடர். அம் என்றால் அழகு ; அல் என்றால் இருள் ; ஓதி என்றால் கூந்தல். அழகிய இருண்ட கூந்தலை உடையவளை அம்மலோதி என்பார். அம்மலோதி என்னும் சொற்றொடர் ஓர் அருமையான உபயோகம் என்றுதான் கூறுதல் வேண்டும். பண்டைய இலக்கியங் களில் இச்சொற்றொடர் குறிக்கும் கூந்தலைச் சுட்ட வெவ்வேறு சொற்றொடர்கள் ஆளப்பட்டிருப்பதைக் காணலாம். அழகிய மென் மையான கூந்தல் என்னும் பொருளில் 'அம்மலோதி' என்றும் அழகிய சிலவான கூந்தல் என்னும் பொருளில் 'அஞ்சிலோதி' என்றும் பொலிவு பெற்ற கூந்தல் என்னும் பொருளில் 'பொம்மலோதி' என்றும் கரிய நெய்ப்புடைய கூந்தல் என்னும் பொருளில் 'மையீ ரோதி' என்றும் பலவாறாகப் பண்டைய இலக்கியங்களில் வந் துள்ளன.

உம்மி மகுபது என்பவள் ஒரு மூதாட்டி. முன்பு அவள் கரிய கூந்தலை உடையவளாய் இருந்தவள். ஆனால் அவள் முதுமை அடைந்த காரணத்தினால் அவளுடைய கூந்தல் வெண்மையாகி விட்டது. வெள்ளை நிறமான நூல் விளங்குவதுபோல் அவளுடைய கூந்தல் காட்சி அளித்தது, நரைத்த கூந்தலை வெண்மையான நூலுக்கு உவமிப்பது கவிஞர் மரபு. பரிசில் பெறக் கருதிச் சென்ற பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் தமது தாயாரின் கூந்தல் வெள்ளை நூலைப்போன்று நரைத்திருந்தது எனச் சுட்டுவதற்கு

நூல்விரித்தன்ன கதுப்பினள் (புறநாநூறு : 159 : 4)

எனக் குறிப்பிட்டுள்ளார். அதேபோன்று முன்பு அழகாகவும் கருமை யாகவும் கன்னங்கறேர் என்று இருந்த உம்மி மகுபது மூதாட்டியின் கூந்தல் பின்னர் வெள்ளை வெளேரென்று நூல் போலக் காட்சி அளித்தது. இதனையே உமறுப்புலவர் இரண்டு இடங்களில் இவ் வாறு குறிப்பிட்டுள்ளார் :

அம்ம லோதிவெண் ணூலினிற் பிறங்கிட அழகார்
(உம்மி மகுபதுப் படலம் : 7)

புரிவெண்ணூற் குழன் முதியவள்.........
(உம்மி மகுபதுப் படலம் : 22)

அயிதம் என்றால் தீங்கு என்று பொருள். கல்வெட்டுக்களில் காணப்படும் ஒரு சொல் இது. இந்த மானியத்துக்கு 'அயிதம் பண்ணினவர்' (S.I.I. 2 : 138) என தென்னிந்திய சாசனம் ஒன் றில் வந்துள்ளது. ஒருவன் சொல்வது நன்மையாக இல்லாது தீங்காக இருந்தாலும் கூட அதனைக் கேட்போம் என்று கூறுவதுபோல் உமறுப்புலவர் அச்சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

ஈங்கிவ னுரைக்கும் வாய்மை யிதமல தயிதமேனும்
பாங்கொடு மறிவோம் என்றே .........
(மதீனத்தாரீமான் கொண்ட படலம் : 29)

வெற்றிலையுடன் மெல்லுதற்குப் பயன்படும் பாக்கினைச் சீறாப் புராணம் 'அரிபிளவு' என்னும் சொற்றொடரால் குறிப்பிட்டுள்ளது.

வெள்ளிலை அரிபிளவு ஈய்ந்து
(மதீனத்தாரீமான் கொண்ட படலம் : 56)

அதனை மற்றோர் இடத்தில் அடைகாய் எனச் சுட்டி உள்ளது.

வெள்ளிலை அடைகாய் சந்தம்
(கரம்பொருத்து படலம் : 38)

இன்னோர் இடத்தில் அதனைப் பாகு என்று

> பாகு பாளிதம் வெள்ளிலைச் சுருளொடும் பகிர்ந்து
> (இசுறா காண் படலம் : 48)

என்றும் வேறோர் இடத்தில் அதே பொருளில் பாகு என்பது

> பாகு வெள்ளிலைப் பாளிதஞ் சந்தன
> மோகை கூர வுவந்தளித் தாரரோ
> (விருந்தூட்டுப் படலம் : 17)

என்றும் வந்துள்ளமை காணலாம்.

அவ்வியம் என்பது பொறாமை. (திருக்குறள் 169) அதே பொருளில் தமது சீறாப்புராணத்தில் அச்சொல்லை,

> அவ்வியம் களைந்து அகுமது நபி
> (வீடமீட்ட படலம் : 29)

என உமறுப்புலவர் பயன்படுத்தி உள்ளார்.

தன்வசம் இல்லாமை அல்லது தன்வசப்படாமை என்பது அவசம் எனப்படும். பெருமானார் (சல்) அவர்கள் உம்மி மகுபது என்னும் மூதாட்டியிடம் 'உமது வீட்டில் ஆடிருக்கிறதே, பால் இல்லையா?' என்று கேட்டார்கள். உம்மி மகுபதுவின் விடையிலே இந்த அவசம் என்னும் சொல்லை இவ்வாறு இடம் பெறச் செய்துள்ளார் உமறுப் புலவர்,

> இன்மை நோயினும் வலிதென அவசமுற் றிசைத்தாள்
> (உம்மி மகுபதுப் படலம் : 10)

அற என்றால் மிகுதி என்பது பொருள். (கலித்தொகை : 105) மிகுந்த இருள் என்னும் பொருளில் 'அறப் பொங்கிருள்' என உமறுப் புலவர் பாடியுள்ளார்.

> அறப்பொங் கிருளில் தனித்திவணின்
> அடைந்த வரலாறு என்செவியில்
> (யாத்திரைப் படலம் : 81)

பேச்சு வழக்கிலும் இந்த 'அற' என்னும் சொல் இடம் பெறுவதைக் காணலாம். அதிகப் பிரசங்கி அல்லது அதிகப்படித்தவன் அல்லது அளவுக்கு மிஞ்சிப் படித்தவன் என்று ஒருவனைக் கிண்டலாக அழைப்பதற்கும் இந்த 'அற' என்னும் சொல் பயன்படுத்தப்படுவதைக் காணலாம். அத்தகையோரை 'அறப்படித்தவன்' என்று வழங்குவது சர்வ சாதாரணமான தொன்றாகும்.

கண்ணியப்படுத்தலைக் குறிப்பிட உமறுப்புலவர் ஆசரித்து எனக் குறிப்பிட்டுள்ளார், வழிபடுதல் என்றும் இச்சொல் பயன்படும்,

இஸ்லாத்தின் ஆரம்ப கால எதிரிகள் பெருமானார் (சல்) அவர்கள் சாம் நாட்டில் இருக்கும்பொழுது அவர்களைக் கொல்லச் சதி செய்தனர். அது பலிக்கவில்லை. அவர்களுக்கே அது வினையாக முடிந்தது. அவர்கள் அண்ணல் (சல்) அவர்களைப் போற்றிக் கண்ணியப்படுத் தினர். இதுவே அவர்கள் ஆசரித்தனர் என்று இங்கு சுட்டப்படுகிறது.

அடியினிற் பணிந்து ஆசரித் தாசனத் திருத்தி
(கரம்பொருத்து படலம் : 66)

சிரியாவிலுள்ள ஹபீபு மன்னருக்கு முஸ்லிம் அல்லாத குறைசிகள் முகம்மது என்பவர் தம்மைக் கண்ணியப் படுத்துவதில்லை என்று நிருபம் வரைந்தனர். தம்மைக் கண்ணியப் படுத்தவுமில்லை தம்மோடு இணங்கவுமில்லை என்ற அன்னாரின் கூற்றை உமறுப்புலவர் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார்.

எந்த மன்னவன் தம்மையும் ஆசரித்து இணங்கான்

மற்றோர் இடத்தில்

அங்கை நீட்டிநற் பதம்பணிந்தவர்கள் ஆசரிப்ப
(சல்மான் பாரிசுப் படலம் : 19)

என்று அதே சொல் அதே பொருளில் இடம் பெற்றுள்ளது.

கள்ளைக் கவிஞர் ஆசவம் என்பர். ஆனால் அதே சொல்லை உமறுப்புலவர் பூக்களிலிருந்து ஒழுகும் தேனைக் குறிக்கப் பயன் படுத்தி உள்ளார். தேன் சொட்டும் பூக்களைக் கொண்ட மலர் மாலையைக் குறிப்பிட 'ஆசவத்தொடையல்' (சாபிர் கடன் தீர்த்த படலம் : 1) என்னும் சொற்றொடரை உமறுப்புலவர் பயன்படுத்தி உள்ளார்.

ஆலி என்னும் சொல் நீர்க்கட்டி (9) என்பதனைக் குறிக்கவும் பனிக்கட்டி (195) என்பதனைக் குறிக்கவும் நீர் (314) என்பதனைக் குறிக்கவும் அகநானூற்றிலே பயன்படுத்தப்பட்டுள்ளது. உமறுப் புலவர் கண்ணீர் என்னும் பொருளில் ஆலி என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

முன்னிருந்து இருகண் ஆலி கலுழ்தர மொழிந்து முன்னோர்
(மதீனத்தாரீமான் கொண்ட படலம் : 53)

இரண்டு கண்களிலும் ஆலங்கட்டி போல் நீர் உகுத்து என ஆலி என்னும் அந்தச் சொல்லுக்குப் பொருள் கூறுவாரும் உளர்.

இறும்பு என்பது மலை. 'இறும்பினின் றிருநிலத்திழிந்தார்' (மதியை அழைப்பித்த படலம் : 182) என, மலையிலிருந்து இறங்கி னார்கள் என்பதைக் குறிக்க - மலையைக் குறிக்க - இறும்பு என்னும் சொல்லை உமறுப்புலவர் உபயோகித்துள்ளார். கவிஞர் மலை

அரசனை 'இறும்பி னுக்கர சாகிய'......... (பருப்பதராஜனைக் கண்ணுற்ற படலம் : 22) என்று வருணித்துள்ளமையும் நோக்கற்பாலது.

இற்புலி என்றால் பூனை என்று பொருள் (பிங்கலந்தை). யானைக்குப் பூனை நிகர் என்பதாகக் கூறப்பட்டுள்ளது. ஒப்பாகக் கூறமுடியாத ஒன்றை ஒப்பாகக் கூறியது முஸ்லிம் அல்லாதார் பெருமானாரைப் பற்றிய கூற்றைக் குறிப்பிடுவதற்கே. இதனையே உமறுப்புலவர்,

நீட்டு கைக்கரியை நிக ரிற்புலி
காட்டு மாறெ‌ன மாறிடுங் காபிர்கள்
(தீனிலைகண்ட படலம் : 76)

இன்பம் என்னும் சொல்லுக்குத் திருமணம் என்னும் பொருளும் உண்டு. ஆகு பெயராக இச்சொல்லுக்கு இப்பொருள் வந்துள்ளது. விமலையாருக்கும் சீவகனுக்கும் திருமணம் நடத்தி வைக்கப்பட்டதை 'இன்பம் இயற்றப்பட்டது' எனக் கூறப்பட்டுள்ளது. இவ்வுலகிலே நடந்தில்லாத ஒரு இன்பம் நடத்தி வைக்கப்பட்டது எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. சீவகசிந்தாமணியில் விமலையாரிலம்பகத்தில் இத் திருமணம் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளனது.

அம்பொற் கொம்பனை யாளையும் வார்கழல்
செம்பொற் குன்றனை யானையும் சீர்பெறப்
பைம்பொ னீணகர்ப் பல்லிய மார்த்தெழ
இன்பரில் லதோர் இன்பம் இயற்றினார் (92 (1981))

இந்த இன்பம் என்னும் சொல்லை அதே கருத்துத் தொனிக்க வேறொரு முறையில் பயன்படுத்தி உள்ளார் உமறுப்புலவர். அண்ணல் நபி (சல்) அவர்களின் இளைய புதல்வி பாத்திமா நாயகி அவர்களுடைய திருமணத்தை வருணிக்க வந்த உமறுப்புலவர் அம்மங்கை நல்லார் பருவம் எய்தியமை பற்றிக் குறிப்பிட்டுள்ளார். வெறுமனே ''பருவம் எய்தினார்'' என்று குறிப்பிடுவதில் உமறுப்புலவர் திருப்தி அடையவில்லை. அப்பெண்மணி திருமணப்பருவத்தை அடைந்திருந் தார் எனக் குறிப்பிட விரும்பினார். இன்பம் என்பது திருமணம் எனப் பொருள் கொண்டுள்ளதால் அந்தத் திருமணப் பருவத்தை 'இன்பப் பருவம்' எனக் குறிப்பிட்டுள்ளார். திருத்தக்க தேவர் திருமணத்தை இன்பம் என்றார். ஆனால் உமறுப்புலவர் திருமணப் பருவத்தை இன்பப் பருவம் என்றார். பாத்திமா நாயகி திருமணப் பருவத்தை அடைந்தார் என்று இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

வடிவுறுஞ் செம்பொற் பூவில் வாசம்வந் துறைந்த போலும்
கொடிமலர் அதனில் சேர்ந்த கொழுநறா நிறைந்த போலும்
கடிநெடுங் கழையில் செவ்விக் கதிர்மணி தரித்தல் போலும்
அடிகடம் புதல்விக் கின்பப் பருவம்வந் தடைந்த தன்றே.
(பாத்திமா திருமணப் படலம் : 10)

இழுத்து என்பது ஈழ்த்து என்றும் வரும். இவ்வாறு உமறுப் புலவர் ஈழ்த்து என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

ஆடை முந்தி தொட்டு ஈழ்த்துறுக் கொடுமலக் கழித்து
(யாத்திரைப் படலம் : 19)

பெருமானார் (சல்) அவர்கள் தாயிப் என்னும் பகுதிக்கு இஸ்லாமிய போதனைக்குச் சென்றார்கள். அங்கே அவர்களுக்கு கிடைத்தனவெல்லாம் சொல்லம்பும் கல்லடியும்தான். அவர்கள்மீது சிலர் எறிந்த கற்கள் அவர்களுடைய நெஞ்சிலும் தலையிலும் கைகளிலும் கால்களிலும் முகத்திலும் தாக்கின என்பதை ஓசைநயம் ததும்ப உமறுப் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

கல்லி னாலுரஞ் சிரங்கரங் கான்முகங் காணா
தெல்ல வன்கதிர் பொழிந்தெனப் பலதொடுத் தெறிந்து
(பருப்பதராசனைக் கண்ணுற்ற படலம் : 17)

'உரஞ்சுடு...........எரி' என்பது அகநானூற் (279) றில் 'நெஞ்சைச் சுடும் தீ' என வந்துள்ளது. மற்றோர் இடத்தில் உமறுப்புலவர் 'உரந்தனி உருகி' (மதீனத்தாரீமான் கொண்ட படலம் : 14) எனப் பயன்படுத்தி உள்ளார்.

உற்பனம் என்றால் பிறப்பு என்பது பொருள். ஆனால் உமறுப் புலவர் இச்சொல்லை வேறுவிதமாகப் பயன்படுத்தியுள்ளார். முகம்மது நபி (சல்) அவர்களும் தோழரும் உம்றா நிறைவேற்ற மக்காவுக்குச் சென்றார்கள். ஆனால் மக்காவாசிகள் அவர்களை அனுமதிக்கவில்லை. மக்கா மக்கள் சார்பில் சுகைல் என்பவன் வந்து அடுத்த ஆண்டு மக்காவுக்கு வரும்படியும் அதற்கு முதற்படியாக ஓர் உடன்படிக்கை செய்துகொள்ள வேண்டும் என்றும் கூறினான். அதற்கு இணங்கின முகம்மது (சல்) அவர்கள் உடன்படிக்கை செய்து கொண்டார்கள். இது ஹுதைபியா உடன்படிக்கை என வழங்கி வருகிறது. இங்கே சுகைல் என்பவன் எல்லாவற்றிற்கும் முதலாவதாக - உற்பனமாக ஓர் உடன்படிக்கை ஏற்படுத்த வேண்டும் என்று கூறினுன். இதனையே உமறுப்புலவர்,

விற்பன மாகச் செய்ய வேண்டுகா ரியங்கட் கெல்லாம்
உற்பன மாகச் சீட்டி லெழுதுவக் கணையே தென்றார்
(உமுறாவுக்குப் போன படலம் ; 77)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

உரோமருக்கும் பாரசீகருக்கும் நடந்த போரில் பாரசீகர் வெற்றி கொண்டனர். இஸ்லாத்தின் ஆரம்பகாலமான அப்பொழுது இஸ்லாத்தை எதிர்த்த மக்காவாசிகள் குதூகலமடைந்தனர். அப்பொழுது 'பாரசீகர் தோல்வியுறுவர்' என்னும் அல்குர்ஆன் ஆயத்து (30 : 1-6)

அருளப்பட்டது. இதனைப் பெருமானார் (சல்) அவர்களிடமிருந்து அறிந்த அபூபக்கர் (றலி) அவர்கள் அவ்வாறு குதூகலமடைந்தவர் களிடம் 'பெருமானாரது பொன்மொழிகள் ஒருபொழுதும் பழுதாகா' என்று கூறினார்கள். இதனை மறுத்த இபுனுகலப் என்பவன் அபூபக்கர் (றலி) அவர்களுடன் பந்தயம் பிடித்தான். பாரிசுக்காரர் (பாரசீகர்) தோற்றால் தான் நூறு ஒட்டகைகளைத் தருவதாகவும் உறோமர் தோற்றால் அபூபக்கர் (றலி) அவர்கள் நூறொட்டகை களைத் தனக்குத் தரவேண்டும் என்றும் கூறினான். அபூபக்கர் (றலி) அவர்களும் இணங்கினார்கள். இந்தப் பந்தயத்தைக் குறிப்பிடவே 'ஒட்டம்' என்னும் பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒட்டம் என்றால் பந்தயம் என்பதே பொருளாகும். இந்தப் பந்தயத்தையே ஒட்டம் என அருமையாகப் பயன்படுத்தி இவ்வாறு பாடியுள்ளார் உமறுப் புலவர்,

எங்கள்குலத் தவருரையே பழுதாகிப்
பாரிசவ ரிரிந்தா ரென்னில்
உங்கடமக் கருள்வேனூ றொட்டகையீது
ஒட்டமென உரைப்ப நோக்கி
எங்கணபி முன்னுரைத்த உரைதவறி
உறூமிகள்போ ரிடைந்தா ரென்னில்
உங்கடமக் களித்தலஃ தென்னவபூ
பக்கரெடுத் தோதி னாரால்

(ஒப்பெழுதித் தீர்ந்த படலம் : 32)

அடுத்த பாடலில் 'இருவருஞ் சம்மதித்திகலி யொட்டிய வொட்டகம்' (33) என்றும் அதற்கடுத்த பாடலில் 'ஒட்டியொட்டம் பலித்த' (34) என்றும் ஒட்டம் என்னும் சொல் வேறுருவில் வந்துள்ளமை காண்க.

நமது கவனத்தை ஈர்க்கத்தக்க மற்றொரு சொல் ஒப்பு என்பது. காணி நிலங்கள் உரிமையை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு மாற்றும்பொழுது ஆவணம் வழங்கப்படுவதுண்டு. அது முறி என்றும் வழங்கப்படும். ஒப்பந்தம் என்றும் அழைக்கப்படும். வேறு விஷய மாகவும் இருசாராருக்கிடையே ஒப்பந்தம் ஏற்படுவது உண்டு. பெரும் பாலும் எழுத்து மூலமே இவை மேற்கொள்ளப்படும்.

பெருமானார் (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் வழங்கப்பெற்று ஏழாம் வருடம் நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது ஒருநாள் இஸ்லாத்தை எதிர்க்க குறைஷியர் ஒருங்கு கூடினர். பெருமானார் சார்ந்த ஹாஷிம் குலத்தாருடனும் முத்தலிப் குடும்பத்தாருடனும் அறபு மக்கள் வணிகத் தொடர்போ வேறு எந்தவிதமான தொடர்போ வைத்துக்கொள்ளக் கூடாது என்று முடிவுகட்டினர். நெருப்பு, நீர் இவைபோன்றவற்றை நீக்கி வேறொன்றும் அவர்களுக்கு கிடைக்க

வழி செய்யக் கூடாது, இடங்கொடுக்கக் கூடாது, எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாது என ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர்.

வரைப்புற ஒருமுறி வரைந்திட் டார்களால்
(ஒப்பெழுதித் தீர்ந்த படலம் : 4)

அந்த முறியை எழுதி முடித்துப் புனித கஃபாவின் வாயிலிலேயே தொங்கவிட்டனர். பெருமானார் அவர்களும் அறிய வேண்டும் என்றே அவ்வாறு செய்தனர். இந்த முறியையே உமறுப்புலவர் ஒப்பு எனக் குறிப்பிட்டுள்ளார்.

சாதியின் விலக்கெனத் தவறி லாதெடுத்
தோதிய ஒப்பெனு முறியை ஊரவர்
மாதிர மடர்கஃபு பாவின் வாயிலிற்
றூதரு மறியவென் றெடுத்துத் தூக்கினார்
(ஒப்பெழுதித் தீர்ந்த படலம் : 5)

இங்கே ஒப்பு, முறி என்பன ஒரு பொருட்சொற்கள் என்பது சுட்டப் பட்டுள்ளது. ஆனால் அந்த ஒப்பினை முறியை கரையான் அரித்து விட்டது. இச்செய்தி இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

வன்பரா கியகுறைஷிக் காபிரிடும்
ஒப்புமுறி வசன மியாவும்
இன்புறா நின்றுசித லரித்ததெனப்
பெரியதந்தைக் கியம்பி னாரால்
(ஒப்பெழுதித் தீர்ந்த படலம் : 35)

கரையான் அரித்த முறியைக் குறிக்க முற்பட்டமை

விரைவினொடும் ஒப்புமுறி தனைக்கிழிப்ப
வெரும்போது............
(ஒப்பெழுதித் தீர்ந்த படலம் : 36)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு அந்த உடன்பாட்டினை அழிக்க முற்பட்டமையைக் கேட்டு அபூஜகுல் சினந்தான் என்பது,

சாதிவிலக் கொப்புமுறி பரிகரிக்கும்
வார்த்தை செவிதடவக் கேட்டுக்
காதியெழுந் தபூஜகுல்கண் செவந்துமனங்
கறுத்துமுகங் கடுத்து நோக்கி
(ஒப்பெழுதித் தீர்ந்த படலம் : 37)

இந்த ஒப்பு என்னுஞ் சொல்லை முறி என்னும் பொருளில் இலங்கையில் வாழும் சிங்கள மக்கள் இன்றும் உபயோகிக்கின்றனர். எப்பொழுதும் ஒன்றுக்கு மேற்பட்ட பிரதிகளைக் கொண்டிருப்பதால்

இந்த ஒப்பு என்னும் முறியை இலங்கை வாழ் முஸ்லிம் மக்கள் ஒப்பிணை என்றே வழங்குகின்றனர். முஸ்லிம் மக்களின் உபயோகத்திலிருந்து இந்தச் சொல்லைச் சிங்கள மக்கள் பெற்றிருக்கலாம். இதே போன்று நீதிமன்றங்களைக் குறிப்பிட ஈழத்துச் சிங்கள மக்கள் உசாவி என்னும் சொல்லை இன்றும் பயன்படுத்துவதைக் காணலாம்.

கரப்பு என்பது மற்றொரு சொல். இதன் பொருள் வஞ்சனை என்பதாகும். 'கரப்புறு சிந்தையர் காண்டற்கரியவன்' (தேவாரம் : 524 : 3) இச்சொல் சீறாப்புராணத்தில் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

நொவ்விதிற் றிறந்துள் ளாய கரப்பையார் நுவல வல்லார் ?
(அபீறாகுவதைப் படலம் : 14)

முஸ்லிம் மக்கள் கலிமா என்ற உடன் அது இஸ்லாத்தின் மூல மந்திரத்தைக் குறிக்கும் ஒரு சொல் எனச் சொல்வர். இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் மலிந்து காணப்படும் அறபுச் சொற்களுள் கலிமாவும் ஒன்று. கலிமா என்று ஒரு தமிழ்ச் சொற்றொடர் உண்டு என்பது பலருக்குத் தெரியாது. அச்சொற்றொடர் கலி, மா என இரண்டு சொற்களைக் கொண்டது. கலி என்றால் வேகம். மா என்றால் குதிரை. ஆக கலிமா என்பது வேகமாகச் செல்லும் குதிரையைக் குறித்தது. தமிழ் மொழியிலே இச்சொற்றொடர் இவ்வாறு உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. அகநானூற்றிலே வேகமாகச் செல்லும் குதிரையைக் குறிக்கக் கலிமா என்னும் சொற்றொடர் இவ்வாறு உபயோகிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

நிரைபறை அன்னத் தன்ன விரைபரிப்
புல்லுளைக் கலிமா..............

(மணிமிடைப் பவளம் : 234)

'நிரல்பட வானத்திலே பறக்கின்றன அன்னங்களைப் போன்று விரைகிற செலவினை உடைய நமது புல்லிய பிடரிமயிரை உடைய குதிரை' என்பது இதன் பொருளாகும்.

கல்லாதனாரின் திரிகடுகத்திலும் இச்சொற்றொடர்ப் பிரயோகத்தைக் காணலாம். இங்கும் குதிரை என்ற பொருளிலே கலிமா என்னும் சொற்றொடர் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

கால்தூய்மை யில்லாக் கலிமாவும்...... (46)

கலிமா என்னும் அறபுச் சொல்லை பல இடங்களில் பயன்படுத்தி உள்ள உமறுப்புலவர் ஓர் இடத்தில் கலிமா என்னும் தமிழ்ச் சொல்லையும் பயன்படுத்தி உள்ளார். நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களும் அபூபக்கர் (றலி) அவர்களும் மதீனாவுக்குப் போய்க்கொண்டிருந்தார்கள். அப்பொழுது யாரோ ஒருவர் அவர்களைப் பின்

தொடர்ந்து வருவதை அபூபக்கர் (றலி) அவர்கள் கண்டார்கள். அந்தக் குதிரையைத்தான் உமறுப்புலவரவர்கள் வருணித்துள்ளார்கள். ஒருவன் குதிரையில் வருகிறான். கசையினால் குதிரையின் விலாப் புறத்தில் அடிக்கிறான். பூமி அதிர்ச்சி அடையும்படி அதனை ஓட வைக்கிறான். வேகமாக வருகிறான். கையிலே பிடித்துச் சுழற்றி வரும் வேலாயுதத்தையும் உடையவனாக மிக நெருங்கி வருகிறான். அவன் ஏறி வரும் குதிரையையே உமறுப்புலவர் கலிமா என இவ்வாறு குறிப்பிட்டு வருணித்துள்ளார்.

கசைபு றம்புடைத் திடப்புவி யதிர்ந்திடக் கலிமா
விசையும் வேகமுங் கையினிற் சுழற்றிய வேலும்
நசைவி டாதுகொண் டிவ ணடுத் தனன்.........
(சுறாக்கத் தொடர்ந்த படலம் : 23)

அடிமை என்னும் பொருளில் கிணகன் என்னும் சொல் அருமையாகப் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். அத்தாசு என்பவர் முகம்மது (சல்) அவர்களை ஒருமுறை சந்தித்தார். அப்பொழுது பெருமானார் அவருடைய பெயரையும் ஊரையும் செய்தொழிலையும் கேட்டார்கள். அதற்கு அவன் விடைபகரும்பொழுதே தான் நீனேவா என்னும் ஊரைச் சேர்ந்தவன் என்றும் றபீஆ என்பவரின் அடிமை என்றும் கூறினான். இதனையே உமறுப்புலவர் இவ்வாறு சுட்டியுள்ளார்.

.. ...நீன வா வென் றோதிய வூரி னுள்ளேன்
தெள்ளியன் இறபீ ஆதன் திருமனைக் கிணகன்......
(அத்தாசீமான் கொண்ட படலம் : 6)

நன்னூலாரின் கூற்றுக்கிணங்க ழகர மெய்முன் க, ச, த, ப வந்தால் அல்வழியில் இயல்பாகும்; மிகும்; வேற்றுமையில் மிகும், வல்லினமாவது மெல்லினமாவது மிகும்; விகற்பிக்கும். இங்கே நிலைமொழி ழ் மாறாது. வருமொழி முதல் எழுத்து மிகும், விகற்பிக்கும் (நன்னூல் : 224) வீரசோழியம் ழகரத்துக்குச் சிறப்பு விதி கூறுகிறது. பதினைந்தாம் மெய்யாகிய ழகாரத்தை ஈற்றிலே கொண்ட சொல்லின் முன் வல்லெழுத்தை முதலில் கொண்ட சொல் வந்து புணர்ந்தால் அந்த ழகரம் ஆறாம் எழுத்தாகிய ணகாரமாகவும் ஐந்தாம் எழுத்தாகிய டகாரமாகவும் மாறும். அந்த ழகார ஈற்றின் முன் நகாரம் வந்து புணர்ந்தால் அந்த ழகாரம் கெட்டு வந்த நகாரம் ணகாரமாகும். இந்தச் சூத்திரத்தின் பிற்பகுதிக்கு இணங்கவே உமறுப்புலவர் 'கீணடக்க' என்பதனை ஆண்டுள்ளார் கீழ்+நடக்க=கீணடக்க.

உடற்கு ளாவியொத் திருப்பதிற் றிருவர்கள் உரைக்கீ
ணடக்க வேண்டுமென் றுரைத்தனர் நபிகணு யகமே
(மதீனத்தார் வாய்மை கொடுத்த படலம் : 46)

நாம் நமது பசி தீர்ந்துவிட்டால் வாயார உண்டோம்; அல்லது வயிறார உண்டோம்; அல்லது பசியார உண்டோம் என்று கூறுவோம். சிறு அளவினை உடைய உணவைப் பலர் உண்டு மகிழ்ந்தனர் எனக் கூறவந்த உமறுப்புலவர் அதனை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

இன்னமுது செய்கவென முகம்மதுநந் நபியிசைப்ப
இனிதின் நோக்கி
அன்னவர்கள் கையார வாயார வயிறார
அருந்தி னாரால்
(அபூதல்கா விருந்துப் படலம் : 8)

இங்கே அவர்கள் உண்டு மகிழ்ந்தார்கள் என்பதனைத் தெளிவாகக் கூற நினைத்த உமறுப்புலவர் 'கையார' என்பதனையும் சேர்த்துக் கையார, வாயார, வயிறார என வருணித்துள்ளமை நயக்கத்தக்கது.

சிட்டர் என்போர் கல்வி கேள்விகளில் நிரம்பியவர்கள் (இறைய னாரகப்பொருள் பக்கம் 6). இஸ்லாம் பரவத் தொடங்கிய காலத்தில் எதிரிகளின் துன்புறுத்தலைத் தாங்கொணாது முஸ்லிம்களுள் சிலரை அபிசீனிய நாட்டுக்கு அனுப்பி வைத்தார்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள். எதிரிகள் அங்கும் சென்று அபிசீனிய மன்னரை முஸ்லிம் களுக்கு எதிராகத் தூண்டிவிட முயற்சித்தனர். ஆனால் முஸ்லிம்களின் கூற்றைக் கேட்ட அபிசீனிய மன்னர் அவர்களை வேதவேதாங்கங் களைக் கற்றுவல்ல பெரியோர் எனக் கூறினார். இதனையே உமறுப் புலவர்

துன்ன லார்கொலோ சிட்டரோ எனச்சிரந் தூக்கி
(ஹபசாராச்சியத்துக்குப் போந்த படலம் : 21)

என அவர்கள் சிட்டராகக் கருதப்பட்டனர் எனக் குறிப்பிட்டுள்ளார்.

அலி (றலி) அவர்களுக்கும் பாத்திமா நாயகி அவர்களுக்கும் திருமணம் நடைபெற்றது. இவ்விருவரையும் முகம்மது நபி (சல்) அவர்கள் 'நீரும் பாலும் எவ்வாறு ஒன்றோடொன்று கலக்கிறதோ, கலக்கப்பட்ட பின்னர் ஒன்றை மற்றதிலிருந்து வேறாக்க முடியாதோ அவ்வாறே இணங்கி வாழ வேண்டும்' என்று வாழ்த்தினார்கள் என்று உமறுப்புலவர் இவ்வாறு பாடியுள்ளார்

சலிலமுஞ் சீரமுந் தழீஇய தன்மைபோ
லொலிகடற் புவியினீ டூழி வாழ்கென
அலியையு மகவையும் வாழ்த்தி அன்பொடு
மலிபுகழ் முகம்மது மனைபுக் காரரோ
(பாத்திமா திருமணப் படலம் : 219)

இங்கே சலிலம் நீரையும் சீரம் பாலையும் குறித்தன.

சுன்னிதம் என்றால் நுண்மை என்பது பொருள். அச்சொல்லையே கனிதம் என உமறுப்புலவர் பயன்படுத்தி உள்ளார். நுண்ணிதாகச் சமைத்தமையை அவர் இங்கு இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

கனியி னுஞ்செழுங் காயினும் பூவினும் கலவாப்
புனித நெய்யினில் வெண்மலர்க் கரியபூங் குழலார்
கனித மாகிநற் பாகொடு மறுசுவை தூங்க
இனிமை கூர்தர மணத்தொடுங் கறிசமைத் திடுவார்.
(பாத்திமா திருமணப் படலம் : 100)

செச்சை என்பது சந்தனக் குழம்பு (திவாகரம்) முகம்மது நபி (சல்) அவர்களின் புயத்தை வருணிக்கும் பொழுது சந்தனக் குழம்பு நிரம்பியிருந்த புயங்களை

செச்சை முங்கிய புயநபி
(புகைறா கண்ட படலம் : 40)

என உமறுப்புலவர் வருணித்துள்ளார்.

சோகு என்றால் பிசாசம் என்பது பொருள். (பிங்கலந்தை). ஒருமுறை மதம்பிடித்த ஓர் ஒட்டகையை ஒரு தோழர் கட்டிவிட்டார். அது கயிற்றை அறுத்துக்கொண்டு ஒரு பூஞ்சோலையினுள் புகுந்து பிசாசம்போல அழிக்கத் தலைப்பட்டது. அதனை வரவழைத்து அதனைக் காப்பாற்றினார்கள் முகம்மது நபி (சல்) அவர்கள். இந் நிகழ்ச்சி சம்பந்தமாகவே சோகு என்னும் சொல் இவ்வாறு பயன் படுத்தப்பட்டுள்ளது.

சோகு சென் றலைப்ப மாழ்கித்
துயருறும் பொழிலைக் கண்டு
(ஒட்டகை பேசிய படலம் : 12)

மைவண்ணக் குடையார் அந்த
மருமலர்த் துடவை புக்கிக்
கைவண்ணங் காட்டிச் சோகைக்
காத்தருள் செய்து............
(ஒட்டகை பேசிய படலம் : 13)

முஸ்லிம் மக்கள் அல்லாஹ்வை சுஜூது செய்வர். கால் விரல்களும் முன்னங்காலும் கைகளும் நெற்றியும் நிலத்தைத் தொடும்படியாக அல்லாஹ்வைத் தொழும் நிலையைத்தான் சுஜூது செய்வது என்பர். இதனை உமறுப்புலவர் 'தறை சிரம்பட' எனக் குறிப்பிட்டுள்ள பாடல் இது.

தறைசிரம்படசஜூ தாச்செய் தேத்துவது
(அசீறாப் படலம் : 38)

இங்கு தறை என்பது தரையையே குறிக்கிறது. கம்பராமாயணத்திலும் 'பிள்ளைகள் தறையிற் கீறிடில்' எனக் குறிப்பிட்டுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது. அதே கருத்தில் உமறுப்புலவர் மற்றோர் இடத்தில்

உரந்தனி யுருகி ஆதி உறுதிநா யகனுக் கன்பாய்ச்
சிரந்தரை தீண்டத் தீனோர் செய்முறை வணக்கஞ் செய்தோர்
(மதீனத்தாரீமான்கொண்ட படலம் : 14)

என்றும் சஜதா நிலையைக் குறிப்பிட்டுள்ளார்.

முஸ்லிம்களிடையே பெருவழக்கைப் பெற்றுள்ள கலிமா போன்ற மற்றொரு சொல் தீன் என்பதாகும். தீன் என்பது அறபு மொழியில் இஸ்லாம் மார்க்கத்தைக் குறிக்கும். அந்தத் தீன் என்னும் அறபுச் சொல்லோடு அன், ஆர், அர், ஓர் போன்ற விகுதிகள் சேரும்பொழுது அச்சொற்கள் முஸ்லிம்களைச் சுட்டும். தீனர், தீனவர், தீனோர் முதலிய பல உருவங்களில் அச்சொல் வரும்.

கோதுறு மருவார் நாட்டின் கொள்ளையின் முதல்க ளெல்லாம்
மாதவ தீனர்க் கீந்து வானவர் பரவி வாழ்த்த
(குதிரிப் படலம்: 12)

இங்கே மாதவ தீனர்களான முஸ்லிம் மக்களுக்குக் கொள்ளைப் பொருளிலிருந்து ஒரு பகுதி பகிர்ந்தளிக்கப்பட்டமை கூறப்படுகிறது.

வேத நன் மறையினுற்ற விதிப்படி தீனர்க்கீந்து
(தீயம்றுப் படலம் : 12)

அதே பொருளில் இங்கும் அச்சொல் ஆளப்பட்டுள்ளது.

தீன ரீரணி யாய்நின்று தொழுதெழும் செய்கை......
(தாதுற்றஹாக்குப் படலம் : 26)

இவ்வாறு பல இடங்களில் தீன் என்னும் அறபுச் சொல்லை உமறுப் புலவர் ஆண்டுள்ளார். அதே சமயம் சீறாப்புராணத்தில் தீனர் என்னும் தமிழ்ச் சொல்லையும் பயன்படுத்தி உள்ளார். தீனன் என்று குறிப்பிடும்பொழுது அதனைத் தமிழ்ச் சொல்லாகக் கொண்டால் வறியவன் என்ற பொருளில்

தீனரைத் தியக்கறுத்த திருவுடையார்
(தேவாரம்: 477, 9)

என்று தேவாரத்தில் வந்துள்ளது. சூடாமணி நிகண்டு தீனன் என்பதன் பொருள் இரப்போன் எனக் குறிப்பிட்டுள்ளது. யாழ்ப்பாணத்து மானிப்பாய் அகராதி அதன் பொருளை தீம்பன் எனச் சுட்டுகிறது.

கதீஜா நாயகியின் திருமணம் நடைபெற உள்ள சமயம் அது. செல்வந்தர்கள் தமது செல்வப் பொருள்களை எல்லாம் சுமந்து கொண்டு தெருக்கள் தோறும் திரிந்தனர். இரப்போர் எவரையும் கண்டுகொள்ள முடியவில்லை. தானம் ஏற்பதற்கு எவரும் இல்லையே என இவர்கள் மனஞ் சஞ்சலித்தனர். இவ்வாறு வருணிக்கும்பொழுது தான் உமறுப்புலவர் இரப்போர் என்ற பொருளில் தீனர் எனக் குறிப்பிட்டுள்ளார். அந்தப் பாடல் இதுதான்.

வான மாமுகி லெனச்சொரி தரவரு மாந்தர்
தூந றுங்கதிர் மணியொடு நிதியினைச் சுமந்து
தீன ரியாசக ரியாரெனத் தெருத்தொறுந் திரிந்து
தான மேற்பவ ரில்லென மனத்திடைச் சலிப்பார்.
(மணம்புரி படலம் : 30)

நியதி என்னும் சொல் நிகதி எனச் சீறாப்புராணத்தில் ஆளப்பட்டுள்ளது. நியதி என்றால் வரையறை. இங்கே உமறுப்புலவர் அதே கருத்தில் ஆண்டுள்ளமையைக் காணலாம்.

நிகதி பெற்றிலா அதிசயம் இஃதென நினைத்து
(மதியை அழைப்பித்த படலம் : 131)

நீட்டுதல் என்றால் பொதுவாக நீளச் செய்தல் என்று பொருள் படும். அளவுக்கு அதிகமாக அல்லது நெடுநேரம் பேசுவதையும் நீட்டுதல் என்பர். இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் முஸ்லிம் அல்லாத மக்காவாசிகள் முகம்மதுநபி (சல்) அவர்களுக்குப் பாது காப்பு அளித்துக் கொண்டிருந்த அபீத்தாலிபு அவர்களிடம் சென்று ஒரு சமரச முயற்சியை மேற்கொண்டனர். அவர்தம் பாதுகாப்பில் இருக்கும் முகம்மதைத் தங்களிடம் ஒப்படைத்துவிட்டு அதற்குப் பிரதியீடாக தம்மைச்சேர்ந்த ஒரு பையனை எடுத்து வளர்க்கும்படி மக்காவாசிகள் அபீதாலிபிடம் கூறினர். இச்சொல் அபீதாலிபின் உள்ளத்தில் நெருப்பு வளர்வது போன்ற கோபத்தை உண்டாக்கியது. அந்த நிலையில் அபீதாலிப் அவர்கள் விடை பகர்ந்தார்கள். அவர் கூறினார் என்பதையே உமறுப்புலவர் நீட்டினார் என இவ்வாறு ஒரு பாடலில் அமைத்துப் பாடியுள்ளார்.

எனவு ரைத்த வினத்தவர் தம்மொழி
மனதி னுட்புகுந் தங்கி வளர்த்துறு
சினமெ ழுப்பின சிந்தையுட் டீயைநன்
னினைவி னுட்பொதிந் தோர்மொழி நீட்டுவார்.
(தீனலைகண்ட படலம் : 56)

நூர்த்தல் என்பது விளக்கை அவித்தல் ஆகும், 'விளக்கை நூர்த்துப்போடு' என்பது வழக்கு. ஆனால் இன்றைய பேச்சு வழக்கில்

நூர்த்தல் என்பது அருகி, அவித்தல் போன்றவை பெரு வழக்கைப் பெற்றுள்ளன. காலப்போக்கில் நூர்த்தல் என்பதில் இருந்த ரகரம் விடுபட்டு நூத்தல் என்பது எஞ்சி உள்ளது. ஈழத்து முஸ்லிம் மக்களின் பேச்சு வழக்கில் இன்றும் நூத்தல் அதே பொருளில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். அந்த நூத்தலில் இருந்தே நூந்து என வினையெச்சம் உருவாகி உள்ளது. நூந்து என்னும் அதே வினை எச்சத்தை அதே பொருளில் உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் பயன்படுத்தி உள்ளார். நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பிறந்த உடன் பாரிசு நாட்டில் (பாரசீகத்தில்) ஆறு நூற்றாண்டுகளாகக் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்த அழியா நெருப்பு அழிந்து விட்டது. நூந்து அழிந்துவிட்டது. அந்த நெருப்பையே பாரிசு நாட்டு மக்கள் வணங்கி வந்தனர். அந்நெருப்பு நூந்து அழிந்தது என உமறுப்புலவர் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார்.

மகிதலம் புகழ்ஈ சாநபி பாரில்
    வந்தநாட் டொடுத்திடை விடாது
பகுமத மிலையென் றாறு நூறாண்டு
    பாரிசுக் காரர்கள் வணங்கும்
புகையுடன் கெழுமிப் பொறிபல தெறிப்ப
    புரிந்தெழு மக்கினிக் கொழுந்து
திசைதொறுந் தெரிய வெரிந்த செந்நெருப்புத்
    தேய்ந்துநூந் தழிந்தன வன்றே.
(நபியவதாரப் படலம் : 94)

நொதுமலர் என்பது அயலவர் எனப் பொருள்படும். காம்மா என்பவன் தன்னை எவ்வாறு தனது தந்தையார் ஓர் அயலவனைக் கொண்டு கட்டி வைத்தார் என்பதை முகம்மது (சல்) அவர்களிடம் விளக்கினார். அந்த அயலவனையே உமறுப்புலவர் நொதுமலன் என அச்சம்பவத்தை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

கூவி முன்னிருத்தித் தாட்பெரு விரல்கள்
    இரண்டையும் கூட்டுற நெருக்கி
தோவர இறுகக் கட்டிவைத் தெழுந்து
    போயினன் ஒருநொது மலனே.
(காம்மாப் படலம் : 12)

பிங்கலந்தை நிகண்டு நீர் என்றும் பால் என்றும் பயசு என்பதற்குப் பொருள் தந்துள்ளது. சல்மா என்பவர் நீரினால் உலு (சுத்தஞ்) செய்து தேனினுமினிய பாலினை அருந்தினார் என்பதனை ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார். இப்பாடலில் நீரைச் சலிலம் என்றும் பாலைப் பயசு என்றும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

ஆன்றிரு கரத்தினர் ஆமிறு அன்புற
ஊன்றிய சலிலத்தி னுலுவுஞ் செய்துபின்
தேன்தரு பயசினைச் சிறப்பின் உண்டனர்
மான்றிகழ் புயசல்மா வென்னு மன்னரே.
(சல்மா பொருத படலம் : 72)

ஐயனாரிதனாரால் இயற்றப்பட்ட புறப்பொருள் வெண்பா மாலையில் பலிசை என்னும் சொல் 'பலிசையாற் பண்டம் பகர்வான்' (12:12) எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இங்கு இதன் பொருள் இலாபம் என்பதாகும். ஆனால் தென்னிந்தியக் கல்வெட்டுக்களில்(S.I.I. i 116) பலிசை என்னும் சொல் வட்டியைக் குறிக்கிறது. இச்சொல்லை இதே கருத்தில் உமறுப்புலவர் பயன்படுத்தி உள்ளார். சாபிர் என்பவரின் தந்தை யூதரிடம் முன்பு ஒரு நாள் அறுபது கோட்டை (கோட்டை ஒரு முகத்தல் அளவு; 21 அல்லது 23 மரக்கால் கொண்டது ஒரு கோட்டை என்பர்) பேரீச்சம் பழத்தைப் பெற்றுக்கொண்டார். வட்டிக்குப் பெற்றுக் கொண்டார். அவற்றைத் திருப்பிச் செலுத்து முன்னர் இறந்துவிட்டார். இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடும்பொழுது உமறுப்புலவர் வட்டியைக் குறிக்கப் பலிசை என்று இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

அண்டர் நாயகஎன் றந்தை அறிவிலா யெஹூதி யோர்பால்
பண்டை நாளினிய வீந்தின் பழமறு பஃது கோட்டை
கொண்டனர் பலிசை யாக ஆங்கவை கொடுக்கு முன்னம்
விண்டனர் உயிரை யைய மேலவன் விதியின் வண்ணம்
(சாபிர் கடன் தீர்த்த படலம் : 2)

அந்த யூதர்கள் சாபிர் என்பவரிடம் வந்து அந்தக் கடனை வட்டியுடன் கேட்டனர். இதனைக் குறிப்பிடும் பொழுது பலிசை என்ற சொல்லைத் தவிர்த்து வட்டியைக் குறிப்பிடப் 'பொலி' என்னும் சொல்லை இவ்வாறு உமறுப்புலவர் பயன்படுத்தி உள்ளார்.

என்னுழை அவர்கள் ஈண்டிப் பொலிகட னீகென் றுன்னி
(சாபிர் கடன் தீர்த்த படலம் : 3)

ஆனால் சாபிர் என்பவர் கடன் தீர்க்கக் கூடிய நிலையில் இருக்கவில்லை. அந்த வருடம் சாபிர் என்பவருக்குப் போதிய வருவாய் கிடைக்கவில்லை. நான்கு ஆண்டுகள் சென்றாலும் அந்தக் கடனைத் தீர்க்கும் வல்லமை தம்மிடம் இல்லை என்று கூறினார். இதனையே உமறுப்புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

பலிசையு முதலு நூற்றைம் பதின்கல மாகு மெண்ணில்
அலைவிலா வாண்டு நான்கி னாயினு மருள மாட்டேன்
(சாபிர் கடன் தீர்த்த படலம் : 4)

சாபிர் அக்கடனைத் தீர்க்க முகம்மது நபி (சல்) அவர்கள் சாபிர் என்பவருக்கு ஒரு முறையை அறிமுகப்படுத்தினார்கள். அந்த முறை மையைப் பின்பற்றியதனால் சாபிர் என்பவர் வெற்றி பெற்றார். யூதனை அழைத்து அவனுக்கு செல்ல வேண்டியவை அனைத்தையும் எடுத்துக்கொள்ளுமாறு கூறப்பட்டது. அவனும் தனது முதலையும் வட்டியையும் அளந்து கொண்டு போனான். இங்கே வட்டியைப் பொலி என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் உமறுப்புலவர்.

இக்குவை தன்னில் நீவிர் அளந்துகொண் டேகும் என்றார்
புக்கியாண் டன்னோர் தங்கள் பொலிகடன் அளந்து போனார்
(சாபிர் கடன் தீர்த்த படலம் : 8)

சில இடங்களில் தானியமாகக் கொடுக்கும் வட்டியைப் பொலி என்பர். ஈழத்திரு நாட்டிலே வாழும் சிங்கள மக்கள் பொதுவாக வட்டி என்னும் சொல்லை அவர்தம் மொழியில் பொலி என்றே வழங்குவர்,

அடுத்து, பாய்அரி என்னும் சொற்றொடரை எடுத்துக் கொள் வோம். பாய்அரி என்பதைப் பாய்ந்து செல்லும் சிங்கம் என்றும் பரந்த செவ்வரி என்றும் கொள்ளலாம். முகம்மது நபி (சல்) அவர் களும் அவர்கள் தம்தோழர் அபூபக்கர் (றலி) அவர்களும் மதீனாவுக்கு விரைவாகச் சென்று மதினமாநகரம் அண்மிவிட்டது என்பதை உமறுப் புலவர் பாய்ந்து செல்லும் சிங்கங்கள் போவது போன்று போனமை யினால் மதீனா அண்மிவிட்டது என்பதை.

பாய ரிக்குல மெனநெறி குறுகிடப் படர்ந்தார்
(உம்மி மகுபதுப் படலம் : 4)

என வருணித்துள்ளார். இதே கருத்தில் 'பாய்அரி' என்பது வேறோர் இடத்திலும் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

பாயரி போன்று சின்னாட் பாதைகாத் திருப்ப......
(பத்னுன்னகுலாப் படலம் : 5)

முகம்மது நபி (சல்) அவர்களின் பிரயாணத்தின்போது இடையரும் இடைச்சியரும் இஸ்லாத்தைத் தழுவினர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு இஸ்லாத்தைத் தழுவிய இடைச்சியரைக் குறிப்பிடும் பொழுது இவர்கள் 'பரந்த செவ்வரிகளை உடைய கயல்மீன் போன்ற விழிகளைக் கொண்ட இடைச்சியர்' என வருணிக்கப்பட்டுள்ளனர்.

தேயுஞ் சிற்றிடை மடந்தைய ளொருத்திதன் திறத்தால்
மாய வன்குபிர் போக்கிநந் நபிவழி வழுத்திப்
பாய ரிக்கயல் விழிமட வாரொடும் பாடி
ஆயர் தங்குலத் தவரிசு லாமினி லானார்.
(உம்மி மகுபதுப் படலம் : 20)

திருப்புகழில் சூரியன், பாஸ்கரன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது (941). பகலை உண்டாக்குகிறவன் அல்லது வெளிச்சத்தைத் தருகிறவன் என்னும் கருத்திலே சூரியனைப் பாஸ்கரன் என்பர். ஆனால் உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் சூரியனைப் பாஸ்கரன் எனக் குறிப்பிடாது பார்க்கரன் என்றே குறிப்பிட்டுள்ளார். உலகத்தை உண்டாக்குகிறவன் அல்லது உலகத்துக்கு வெளிச்சம் அளிப்பவன் என்றே அவர் கருதி இருக்கலாம். தொடக்கத்தில் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட பிலால் என்னும் பெயரை உடைய அபிசீனிய அடிமை துன்புறுத்தப்பட்டமையை விவரிக்கும்பொழுது உமறுப்புலவர் அந்த அடிமை நெஞ்சில் கருங்கல் வைக்கப்பட்டு மணலிலே சூரிய வெளிச்சத்தில் கிடத்தப்பட்டமையை வருணிக்கும் பொழுதே சூரியனைக் குறிப்பிட 'பார்க்கரன்' என்பதனை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

படருல முரத்தினிற் பதியப் பார்க்கரன்
சுடுகதிர் நிலத்திடைச் சோர்ந்து மூச்செறிந்து
உடலுலைந் துள்ளுயி ரொடுங்குங் காலையில்
இடர்தவிர்த் திருவிழி யெரிய நோக்குவான்.
(தீனிலை கண்ட படலம் : 144)

யானைக்கழுத்திடுகயிறு புரோசை எனப்படும். உமறுப்புலவரும் இதே கருத்தில் புரோசை என்பதனை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

செந்நெலங் கழனி சூழுந் திமிஷ்கினின் ஹபீபு வேந்தன்
பொன்னணிப் புரோசை நால்வாய்க் களிறொடும் புரவி யோடும்
(ஹபீபுமக்கத்துக்குவந்த படலம் : 72)

'பொரிக்கறி' என்னும் சொற்றொடர் சீறாப்புராணத்தில் வந்துள்ளது. கல்வெட்டுக்களிலே இச்சொற்றொடர் புளியிடாமற் சமைத்த கறி வகையை குறிப்பிடும் (S.I.I. ii 127, 19) என்பர். பொறிக்கப்பட்ட கறி உணவு என்பர் வேறு சிலர். தமிழ்நாட்டிலே கறி என்பது ஆட்டிறைச்சியைக் குறிக்கும் என்பர். சீறாப்புராணத்திலே பொறிக்கறியின் வாசம் ஆகாயம் வரை சென்றது என உமறுப்புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

தேன வாந்தொடை மடந்தையர் குழலினுஞ் செருகி
நான மார்புய மாந்தர்க ணாசியு மமட்டித்
தான மானக மேனிலை யாவையுந் தடவி
வான மீதினும் கமழ்த்தின பொரிக்கறி வாசம்
(பாத்திமா திருமணப் படலம்: 101)

மகன் என்னும் சொல்லின் பன்மைச் சொல்லாக மகர் என்பது அமைந்துள்ளது என்பதை முன்னர் குறிப்பிட்டோம். உமறுப்புலவரும் மகர் என்பதனை அதே கருத்தில்

ஆசி மாகுலத் தப்துல்லா மகரணி மருவி
வாச மெய்முகம் மதுபெறும் புதுமணக் கோலம்
(மணம்புரி படலம் : 3)

மூக்கால் நுகர்தல் மோத்தல் எனப்படும். திருக்குறளிலே 'மோப்பக் குழையு மனிச்சம்' (90) என இச்சொல் வந்துள்ளது. தனது துணையைத் தேடி மான் மோப்பம் பிடித்துச் சென்றமை

ஒல்லையி னோடி நீங்கா தொருத்தலின் றளவு மோந்து
(மானுக்குப்பிணைநின்ற படலம் : 34)

என *சீறாப்புராணத்தில்* வந்துள்ளது. அடுத்துப் பெண் மான் தனது கன்றினைச் சந்தித்து மோந்து கொண்டது என இடம் பெற்றுள்ளது. இங்கு மோந்து என்பது முத்தமிட்டு என்னும் பொருளில் வந்துள்ளது.

முலையினை யூட்டி மென்மை முதுகுவா லடிநா நீட்டி
அலைதர வளைத்து மோந்து வேட்கையை அகற்றிற் றன்றே
(மானுக்குப்பிணைநின்ற படலம் : 51)

மற்றொரு பாடலில் 'வாயை முத்தி பலமுறை மோந்து கொண்டார்' என இவ்வாறு முத்தமிட்டு என்னும் பொருளில் வந்துள்ளது.

பண்டருந் திருவாய் முத்திப் பற்பல்கான் மோந்து கொண்டார்
(கபுகாபுப் படலம் : 8)

மோந்து என்னும் சொல் நான்மணிக்கடிகையில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

நாக்கின்அறிய இனியவை - முக்கினான்
மோந்தறிப வெல்லா மலர்களும் நோக்குள்ளும்
கண்ணினால் காண்ப "அணியவற்றைத் தொக்கிருந்து
எண்ணினான் எண்ணப் படும் (75)

முத்தமிடுதல் என்னும் பொருளில் மோந்து கொள்ளுதல் என்பதனை ஈழத்து முஸ்லிம் மக்கள் தமது பேச்சு வழக்கில் பயன்படுத்துவர் என்பதும் ஈண்டு நோக்கற்பாலது. அங்கே ஒரு குழந்தையிடம் 'முத்தம் தா' என்று கேட்பதில்லை. மாறாக 'மோந்து கொள்' என்று தான் கூறப்படும்.

உமறுப்புலவர் வாறு என்னுஞ் சொல்லை சீறாப்புராணத்தில் அருமையாக உபயோகித்து உள்ளார். வரலாறு என்றும் கருத்திலே பெரும்பாலும் பயன்படுத்தி உள்ளார்.

இந்த வாறுக ளனைத்தையும் அறிந்து......
(நபியவதாரப் படலம் : 20)

...... ...... ...... காலில்
தகைபடுத் தொடிந்த வாறு தன்னையு முரைத்து நின்றார்
(அபீறாபிகு வதைப் படலம் : 37)

வாறு என்பதனை விதம் என்னும் பொருளில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

இனியவர் போலச் சென்று வந்தவா றெடுத்துக் கூறி
(ஜின்கள் ஈமான் கொண்ட படலம் : 12)

பெயரெச்சமாகவும் அஃறிணைப் பன்மை அகர விகுதியைப் பெற்ற வினைமுற்றுக்களாகவும் வரும் சில சொற்கள் இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களிலே உயர்திணைக்குரிய வினைமுற்றுக்களாகவும் வந்துள்ளமையைக் காணலாம். அஃறிணையிலே வந்துள்ளவை :

கந்தரமு மிக்கபுனல் கங்கையு மடுத்த
(உமுறாவுக்குப் போன படலம் : 95)

ஏடு கொண்டபூ மரங்களியா வையுமுறித் தெறிந்த
(உயைவந்த படலம் : 142)

அண்ட மும்பெரும் பூமியு நடுங்கிட அடித்த
(உயைவந்த படலம் : 141)

ஆதிவானவர்க் குரைத்தென முரசங்கள் அதிர்ந்த
(உருதுப் படலம் : 40)

எண்ணரும் பிணையும் கன்றும் கலையு டனினிது கண்ட
(மானுக்குப் பிணை நின்ற படலம் : 50)

நிரைநிரைப் பரியின் பிணக்குவை மலிந்த
நிருபர்க ளுடற்குறை மலிந்த
விரிகதிர்ப் பூணு மாரமு மலிந்த
வெற்றிவெம் படைக்கலன் மலிந்த
குருதியு மலிந்த குடர்த்துடர் மலிந்த
கொற்றவர் மணிமுடி மலிந்த
முரிதருஞ் சிரசின் மூளைகண் மலிந்த
மொய்த்தவெண் ணிணங்களு மலிந்த
(பதுறுப் படலம் ; 207)

அஃறிணையையும் உயர்திணையையும் சேர்த்து இத்தகைய வினைமுற்றுக்கள் வந்துள்ளன.

முரசமு மவிந்த காகள மவிந்த
  மூரிவெம் பேரியு மவிந்த
பரிகளு மவிந்த வாவணத் தொகுதிப்
  பாசறை முழக்கமு மவிந்த
திரைகட லெனும்பே ரோதையு மவிந்த
  வீரர்கள் சேவக மவிந்த
அரசரு மவிந்த வாகையுந் திறனு
  மாண்மையு மவிந்தன வன்றே

(பதுறுப் படலம் : 208)

இங்கே அரசரு மவிந்த என வந்துள்ளமையைக் காணலாம். பெயரெச்சமாகவோ அஃறிணைப் பன்மை அ விகுதி பெற்ற வினைமுற்றாகவோ வரும் சொற்களை ஈழத்தில் வாழும் முஸ்லிம் மக்களுள் பெரும்பாலானோர் தமது பேச்சு வழக்கில் எல்லாத் திணைகளிலும் எல்லாப் பால்களிலும் எல்லா இடங்களிலும் ஒருமை பன்மை வேறுபாடு இல்லாமல் வினைமுற்றாக உபயோகிப்பதை இன்றும் காணலாம்.

**யாப்பமைதி :**

சீறாப்புராணத்தில் உள்ள செய்யுட்களுள் மிகப் பெரும்பாலானவை விருத்தப்பாக்களாகவே உள்ளன. சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு இந்த விருத்தப்பாக்கள் வேறு படுத்தப்படுகின்றன. சந்தங்கள் வேறுபடுத்தப்படுகின்றன. அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம், எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம், சந்த விருத்தம் என விருத்தப்பாக்கள் மாற்றப்பட்டுள்ளன. உதாரணமாக சல்மா பொருத படலத்தில் நூறு பாடல்கள் உள்ளன. ஆனால் விருத்தப் பாக்களின் சந்தங்கள் இருபத்திரண்டு தடவைகள் மாற்றப்பட்டிருப் பதைக் காணலாம். பதுறு சுகுறாப் படலத்தில் உள்ள எல்லாச் செய்யுள்களும் வஞ்சி விருத்தங்களாக இருப்பதையும் காணலாம்.

சீறாப்புராணத்தில் இடம் பெற்றுள்ள சில விருத்தப்பாக்கள் சிறப் பியல்புகளை உடையனவாய்த் திகழ்கின்றன. ஒரு செய்யுளில் உள்ள ஒன்றைத் தவிர மற்றெல்லாச் சொற்களும் குற்றெழுத்துக்களாகவே உள்ளன.

படர்ந்து கொன்றனர் சிலர்சிலர் இழிந்துவெம் பரியை
நடந்து கொன்றனர் சிலர்சிலர் நடையுமற் றொழிந்து
கடந்தி ருந்துகொன் றனர்சிலர் சிலர்மனங் கனன்று
கிடந்து கொன்றனர் சிலர்சிலர் வீரர்கள் கெழுமி

(பதுறுப் படலம் : 201)

இரண்டு சீர்கள் மாத்திரமே நெட்டெழுத்துக்களைக் கொண்டனவாயும் ஏனையவை குற்றெழுத்துச் சீர்களாகவும் அமைந்துள்ள பாடல் இது.

கவரி யும்பல கவிகை யும்பல
சிவிகை யும்பல சிவிறி யும்பல
துவடரும் கொடி பலவுந் தோன்றலால்
குவித ரும்படி கொள்ளை கொண்டனர்

(உகுதுப் படலம் : 210)

ஒற்றை எழுத்துக்களை மாத்திரமே கொண்ட ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

செரும டிந்தன சிரம டிந்தன
கருதி யெங்கணுங் கழுது துன்றின
பருதி மண்டல மனைய பண்பெனக்
குருதி மண்டின குடர்மி தந்தன

(உகுதுப் படலம் : 203)

இத்தகைய பல சிறப்பியல்புகளைக் கொண்டு திகழ்கின்றது உமறுப்புலவரின் சீறாப்புராணம். இக்காப்பியத்திலே இன்னும் ஆராயப்படவேண்டியவை பல உள. இதன் மொழி அமைப்பினை ஆராய்வது இன்றியமையாததாகும். நுணுக்கமாக மேற்கொள்ளப் படும் சீறாப்புராண மொழி அமைப்பின் ஆராய்ச்சியின் மூலமே சீறாப் புராணத்தில் இடைச் செருகல்கள் இடம் பெற்றிருப்பின் அவை எவை எனவும் பிற்சேர்க்கைகள் அங்கு புகுந்திருப்பின் அவை எவை எனவும் எளிதில் கண்டு பிடிக்க முடியும். இன்று உமறுப்புலவர் பற்றியும் சீறாப்புராணம் பற்றியும் பல கட்டுக்கதைகள் வழக்கில் உள்ளன. அவற்றையே மக்கள் விரும்புவதாகக் கூறி அவை மேலும் பரப்பப் படுகின்றது. இக்கட்டுக்கதைகள் அனைத்துக்கும் முற்றுப் புள்ளி வைப்பதற்குச் சீறாப்புராணம் நன்கு அலசி ஆராயப்படல் வேண்டும்.

---

# பதினோராம் இயல்

## திருமக்காப் பள்ளு

பள் என்பது ஒரு நாடகப் பிரபந்த வகை. இத்த நாடகத்துக்கு நிலைக்களனாக அமைவது மருதநிலம். அந்நில மக்களே இந்த நாடகப் பிரபந்தத்தில் முக்கியமான பங்கு எடுப்பர். பள் என்பதே பள்ளு ஆயிற்று. இப்பள்ளு வகையிலான பிரபந்தம் சிற்றிலக்கியங் களை சார்ந்தது. பள்ளுப் பிரபந்தங்களுக்கு முன்னோடியாக விளங்கியது முக்கூடற் பள்ளு என்பர். அதன் பின்னரே ஏனைய பள்ளுக் கிரந்தங்கள் தோன்றின என்பர்.

முக்கூடற் பள்ளை முதன் முதல் வெளியிட மூலகாரணமா யிருந்தவர் திருநெல்வேலி பேட்டை பரிமளகார வீதியில் வாழ்ந்த உயர்திரு ம. மேத்தர் முகிதீன் என்று கூறுவர். அவர் விருத்தாசலம் தியாகராசக் கவிராயரவர்களைக் கொண்டு பல சுவடிகளை ஆராய்ந்து பாங்காக்கி உருத்திரோற்காரி ஆண்டு ஆடி மாதம் முதற் பதிப்பு வெளியிட்டார் என வித்துவான் ந சேதுரகுநாதன் அவர்கள் முக்கூடற் பள்ளு என்னும் நூலில் தமது முகவுரையில் குறிப்பிட்டுள்ளார். மேத்தர் முகிதீன் அவர்கள் உண்மையிலேயே இலக்கிய ஆர்வம் படைத்தவர். அவர் 1862-ஆம் ஆண்டில், துந்துபி ஆண்டில் சீறாப் புராணத்தைப் பதிப்பித்துள்ளார் என்பதும் ஈண்டு நோக்கற்பாலது. சீறாப்புராணம் பதிப்பிக்கப்பட்டதும் துந்துபி ஆண்டு ஆடி மாதத்தி லாகும். மேத்தர் முகிதீன் அவர்களின் சீறாப்புராணப் பதிப்பு அந் நூலின் மூன்றாம் பதிப்பாகும். இப்பதிப்பு வெளிவந்து இன்றைக்கு நூற்றிருபது ஆண்டுகள் கடந்துவிட்டன. துந்துபி ஆண்டைத் தொடர்ந்து உருத்ரோற்காரி ஆண்டு வருவதால், முக்கூடற் பள்ளின் முதற் பதிப்பை மேத்தர் முகிதீன் அவர்கள் 1863-ஆம் ஆண்டில் பதிப் பித்திருத்தல் வேண்டும் எனக் கொள்ளலாம். முக்கூடற் பள்ளு என்னும் நூலை இயற்றியவர் என்னயினாப்புலவர் என்றும் அவர் ஒரு முஸ்லிம் புலவர் என்றும் கூறுவர். இது தவறான கூற்று என்றும் என்னயினாப்புலவரால் இயற்றப்பட்டது முக்கூடற்பள்ளு நாடகம் என்றும் அதன் உரையாசிரியர் குறிப்பிட்டுள்ளார். பள்ளு என்றாலே ஒரு கவிதை நாடகமாக இருக்கும்பொழுது பள்ளு நாடகம் என்று வேறொன்று தோன்றியிருக்குமா என்னும் ஐயத்தைக் கொள்பவரும் இன்று இல்லாமல் இல்லை.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஒரு பள்ளு நூல் உள்ளது. அது திரு மக்காப் பள்ளு என பெயர் பெற்றுள்ளது. பள்ளு நூலுக்

குரிய சிறப்பியல்புகள் அத்தனையும் மக்காப்பள்ளில் இடம் பெற்றுள்ளன. அதில் பங்கேற்பவர்களும் ஏனைய பள்ளு நூல்களில் உள்ளவர்கள் போன்று மருதநிலமக்களே. திரு மக்காப்பள்ளுக்கு நிலைக்களனாக அமைவது மக்க மாநகரம். முகம்மது நபி (சல்) அவர்கள் பிறந்த நகரம். அறபு நாட்டிலே பிரதானமான நகரங்களுள் ஒன்று. முஸ்லிம் மக்கள் புனிதமான நகரமாக அதனைக் கருதுவர். ஆண்டு தோறும் முஸ்லிம் மக்கள் புனித ஹஜ் பயணத்தை மேற்கொண்டு மக்காவுக்குத்தான் செல்கின்றனர். 'நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது' என்பது திருநெல்வேலி மாவட்டத்தில் பெருவழக்கை பெற்றுள்ள ஒரு பழமொழியாகும். இப்பழமொழியை மெய்ப்பிக்கும் வகையிலேயே திரு மக்காப் பள்ளு என்னும் நூலும் தோன்றி உள்ளது. இருபத்தைந்துக்கும் அதிகமான பள்ளு நூல்களை வித்துவான் ந. சேதுரகுநாதன் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

திரு மக்காப்பள்ளின் ஆசிரியர் யார் என்று தெரியவில்லை. இப்பள்ளு முகம்மது நபி (சல்) அவர்கள் பேரில் பாடப்பட்டுள்ளது. பழைய ஏட்டுப் பிரதிகளிலிருந்து பரிசோதித்துத் திருத்தி பி. றஹீம் கான் சாய்பு என்பவரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இவர் தூத்துக்குடியைச் சேர்ந்த மகா-௱-௱-ஸ்ரீ பாக்கர்கான் சாய்பு அவர்களின் மூத்த புதல்வர் ஆவார். பி. றஹீம்கான் என்பவர் தூத்துக்குடி மாவட்ட முன்சீபு நீதிமன்றத்திலே பணிபுரிந்துள்ளார். இந்த நூலை வெளியிட சின்னத்தம்பி மரைக்காயர் அவர்கள் புதல்வர் எஸ். கே. முகியித்தீன் காதர் ஷா மரைக்காயர் அவர்கள் பொருளுதவி புரித்துள்ளார். இத் திருமக்காப்பள்ளு தூத்துக்குடி அருணோதய அச்சகத்தில் 1900 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது. பதிப்பாசிரியரும் திருமக்காப்பள்ளின் தெய்வ வணக்கம், நபிநாயக வணக்கம், குருநாயக வணக்கம் பாடி உள்ளார். கொட்டாம்பட்டி எம். கருப்பையாப் பாவலரும் தூத்துக்குடி தூ. ந. அப்பாவாசாரியார் அவர்களும் தூத்துக்குடி எஸ். நல்லபெருமாள் கவிராயர் அவர்களும் ஜோ. சு. இராமநாதபிள்ளை அவர்களும் இன்னும் பலரும் பதிப்பாசிரியரைப் புகழ்ந்து பாடிய சாற்றுக் கவிகளும் இங்கு இடம் பெற்றுள்ளன.

பதிப்பாசிரியரின் அவையடக்கம் அடுத்து இடம் பெற்றுள்ளது. அவையடக்கம் பின்வரும் நிலமண்டில ஆசிரியப்பாவுடன் தொடங்குகிறது.

குறையாக் கேள்விக் குணத்தோ ரெவரும்
நிறையா யென்னுள் நிலைப்பர் தாமே
மறதியுந் தவறு மக்கட் கியல்பே
அறிவுடை யோர்பொறுத் தாள்வது கடனே.

திருமக்காத் திருப்பள்ளினை இயற்றியவர் யார் என்பன போன்ற விவரங்களை அவையடக்கத்தில் இடம் பெற்றுள்ள நேரிசைப் பாவில் குறிப்பிட்டுள்ளார் பதிப்பாசிரியர். அந்தக் காலத்திலே வாழ்ந்த ஓர் அறிஞர் மக்க மாநகரில் பிறந்த முகம்மது நபி (சல்) அவர்கள் பேரில் திருமக்காப்பள்ளைப் பாடினார். அதனையே பதிப்பாசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

உலகம் பலவு முளசரா சரமும்
இலக வியற்றியா ளிறையரு டன்னால்
மணிசோ லைசூழ் மாநிலந் தன்னில்
அணிசேர் மக்கா அகமது மேற்திரு
மக்காப் பள்ளெனு மாபி ரபந்தம்
அக்கா லத்தினில் அறைந்தனன் அறிவன்
தமிழ்நா டெங்குந் தகையுற விளங்க
இமிழ்தா யின்னூல் இயற்றி உள்ளது.

அந்தத் திருமக்காப் பள்ளு என்னும் நூலைத் தாம் படித்த தாயும் அது கிருசிகத் தொழிலைப் பற்றிக் குறிப்பிடும் ஓர் அருமை யான நூலென்பதும் அந்த நூலை இயற்றியவர் பெயர் தெரியவில்லை என்றும் இவ்வாறு கூறி உள்ளார்.

கிருசித் தொழின்முறை வளமுங் கிளத்தும்
அருமை நூலென அறைதலு நலனே
அன்னவ னூலை ஆயுங் காலே
சொன்னவர் இவரெனத் துலங்க வில்லை.

தமக்கு இதுபற்றி எதுவும் தெரியாத போதிலும் தான் செவிவழி அறிந்த ஒரு செய்தியைப் பதிப்பாசிரியர் ஈண்டு குறிப்பிட்டுள்ளார். இந்நூலைப் பற்றித் தெரிந்தவர்கள் இந்நூல் இருநூறாண்டுகளுக்கு முன்னர் இயற்றப்பட்டதென்பர். இதன் ஆசிரியர் சிறந்த அறிஞரா யிருந்தார். சொல் நயம் பொருள் நயத்தில் கைதேர்ந்து விளங்கியவர். நாகலாபுரத்தினில் வாழ்ந்தவர். இஸ்லாம் சிறப்புற்று விளங்கிய நகரம் அது. நாகலாபுரம் அமைந்துள்ள இடம் திருநெல்வேலி மாவட்டத்தின் வடகிழக்குத் திசையில் உள்ளது. இக்கருத்துக்களே இவ்வாறு இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது.

நெல்லை சில்லா நேர்வட கிழக்கின்
எல்லை விளங்கி இஸ்லாம் சிறக்கும்
நன்னகர் நாக லாபுர மதனில்
சொன்னயம் பொருணயம் தோன்ற மாவறிவன்
அகன்ற இருநூ றாண்டு முன்னர்
புகன்றனன் என்றே புகல்வரும் உளரே.

திருமக்காப்பள்ளின் பொருளடக்கம் இன்னதென்றும் அங்குள்ள பா வகைகள் சில தெளிவின்றி இருந்தமையால் அவற்றைத் திருத்தித் தரும்படியும் கமத் தொழில் புரிகின்றோர் பலர் தம்மைக் கேட்டுக் கொண்டதாகப் பதிப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளார். அத்தோடு இந்நூல் அப்பொழுது பகுதி பகுதியாகவே அவர் கைவசம் இருந்தது. எனவே அவர்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்க பதிப்பாசிரியர் இதனை முழுமை பெறச் செய்ய முற்பட்டார் என்று இவ்வாறு பாடி உள்ளார்.

கிருசித் தொழில்புரி கிளைஞர் பலரும்
விருப்பத் தோடிதை விளங்க வின்னாள்
விடுகவி யன்ன விறனபி மீது
முடுகுஞ் சிந்துகண் மொழிவா ரிவணே
அன்றி யின்னூ லணியுற முழுதும்
இன்று காணவும் எட்டா தாலே
முழுநூல் கண்டு முறையொடு மஃதை
வழுவறத் திருத்தி வனப்புற வமைக்க
வேணு மென்றெனை வேட்ட லாலவர்
ஆணையை மறவா தகத்திடை பெய்து

இதனை முழுமைப்படுத்தும் நோக்கத்துடன் பல இடங்களுக்கு அலைந்து திரிந்தாராம் பதிப்பாசிரியர். ஏட்டுப் பிரதிகளைச் சேர்க்கச் சென்றாராம். அப்பொழுது ஒரு பெரியவரின் உதவி கிட்டியதாம். அவர் பூசனூரைச் சேர்ந்தவராம். அவர் பெயர் சையது மைதீன் ராவுத்தர் என்பதாம். அவர் ஏட்டுப் பிரதியைத் நமக்கு அளித்தா ராம். இதனையே இவ்வாறு பாடி உள்ளார்.

நாட்டுப் புறங்கள் நகரூர் தோறும்
ஏட்டுப் பிரதியை எய்த முயன்று
பன்னாள் அலைந்தும் பயன்படா தாகி
இன்னாள் சீர்பெறு பூசனூ ரென்னும்
வையம் புகழ்நகர் வாழு நண்பர்
சையது மைதீன் ராவுத்தர் தானும்
அறிவிற் சிறந்தோர் அன்பின் மிகுந்தோர்
நெறியுடன் ஏட்டை நேர்ந்தா ரதுவும்

இவ்வாறு தமக்கு ஏட்டுப் பிரதி கிடைக்கப் பெற்றும் அவ்வேட்டுப் பிரதி சிக்கலான தொன்றாகவே இருந்ததாம். அங்கே

பொதுவுஞ் சிறப்புமெய்ப் புள்ளிக டீக்கம்
ஏதுவுந் தோன்றா தெழுத்துப் பிழையா
இனமறி யாசிற் றிளவ றன்னான்
மனமது சென்ற வாறாய் வரைந்துஞ்

செல்லு மரித்துச் சீரன் றாயொரு
சொல்லுஞ் சரிவரத் துலங்கா தாகியும்
அன்னூற் றுறைக ளனுகுஞ் சிந்துமற்
றின்னூ விற்சில தில்லா தாகியும்
இருந்த இன்னூல் இறந்து போகாது
இருந்த மட்டில் பொருந்த எண்ணி
இன்றியமை யாநல் லிசையுஞ் சிந்துக
ளன்றி கலிப்பா வதினடை யன்ன
ஓதும் அவர்கள் உள்ளம் விளங்க
ஏதும் குறைவிலா தியன்ற மட்டும்
ஓர்பிர பந்தம் உறுரு பம்போல்
ஆர்பெற முழுதும் அமைத்துத் திருத்தியு
மணிகொள முழுதும் வரைந்து நன்றே
அணிகொள இஃதை அச்சும் பதித்தனன்.

இவ்வாறு பதிப்பிக்கப்பட்ட இத்திருமக்காப் பள்ளு என்னும் நூலை ஏல்லோரும் ஏற்றுப் போற்றவேண்டும் என்றும் அதனை ஓதுவோர் எப்போதும் வாழ்வர் என்ற பிரார்த்தனையுடன் அவை யடக்கத்தைப் பதிப்பாசிரியர் இவ்வாறு முடித்துள்ளார்.

அசல்ரு பம்வெளி யாய்வரின் அறிஞர்
வசமாய்த் திருத்த வணங்கினே னானால்
உழத்திப் பாட்டென உரைக்கு மெவையு
மிழற்றுவ போல விளங்க லாலே
இன்னூ னடையை யினிய நடையென
தொன்னூ லாய்ந்தோர் சொற்றுவர் திடனே
நாவு படைக்கு நல்லுயி ரெவையும்
காவு மக்கா காக்கு நபியைத்
துதித்தற் கடனெனச் சுருதிக ளாய்ந்தோர்
விதித்த லாலே விறனபி சீர்த்தி
விளங்கச் செயுமிம் மேனூ றன்னை
களங்க மற்றும் கனமகிழ் வோடும்
ஓதுவர் உண்மை யறிந்தெப்
போதும் வாழ்குநர் இறையருள் பூத்தே.

மேத்தர் முகிதீன் அவர்கள் முக்கூடற் பள்ளின் முதலாம் பதிப்பை 1863-இல் வெளியிட்டுள்ளார். திருமக்காப் பள்ளின் முதற் பதிப்பு 37 வருடங்களுக்குப் பின்னர் 1900-ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. திருமக்காப் பள்ளினை அதே ஆண்டில் சென்னை, ஆவணக் காப்பகம் பெற்றுள்ளது. இதற்கு ஆதாரமாக அந்த நூலில் முத்திரை இடப்பட்டுள்ளது. அந்த முத்திரையில் திருமக்காப் பள்ளு ஆவணக் காப்பகத்துக்குக் கிடைத்த நாள் 1900-ஆம் ஆண்டு அக்டோபர் 1-ஆம்

தேதி எனப் பொறிக்கப்பட்டுள்ளது. இது ஏறத்தாழ 200 ஆண்டுகட்கு முன்னர் இயற்றப்பட்டது எனப் பதிப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளமை யால் இதன் காலத்தை 17-ஆம் நூற்றாண்டின் இறுதி என்று கூறு வதைக் காட்டிலும் 18-ஆம் நூற்றாண்டின் ஆரம்பம் எனக் கூறுதல் பொருத்த முடைத்து எனத் தோன்றுகிறது. திருமக்காப் பள்ளில் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள் குறிப்பிடப்படுவதும் இந்த முடிவுக்கு வருவதற்கான ஒரு காரணமாகும். ஏனெனில் சதக்கத் துல்லா அப்பா அவர்கள் இறந்தது 1703-ஆம் ஆண்டு ஆகும். சதக்கத்துல்லா அப்பா பற்றிய குறிப்புப் பதிப்பாசிரியரால் திருமக்காப் பள்ளு 'முழுதும் அமைத்துத் திருத்தியும்' வெளியிடப்பட்டதால் இதில் சேர்க்கப்பட்ட பிற் சேர்க்கையாகவும் இருக்கலாம். எனினும் பதிப் பாசிரியரின் '200 ஆண்டுகளுக்கு முந்தியது' இந்நூல் என்னும் கூற்றை அடிப்படையாக வைத்தே இந்நூலை நாம் 17-ஆம் நூற் றாண்டோடு தொடர்புடைய நூலாகக் கொண்டுள்ளோம்.

திருமக்காப் பள்ளு நூலில் இடம் பெற்றுள்ள கடவுள் வணக்கம் என்னும் பகுதியில் ஒன்பது செய்யுள்கள் இடம் பெற்றுள்ளன. அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தப் பாக்கள் இரண்டும், கலிப் பாக்கள் இரண்டும் கட்டளைக் கலித்துறைப்பாக்கள் நான்கும் தொண் ணூற்றொரு அடிகளைக் கொண்ட நிலமண்டிலவாசிரியப்பா ஒன்றும் கடவுள் வணக்கப் பகுதியில் அமைந்துள்ளன. இரண்டு பாக்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனுடைய பாதுகாப்பைக் கோருவதாக அமைந்துள்ளன. கிருசிச் செல்வம் பெருகி அப் மக்கள் வாழ நபிகளார் பேரில் பள்ளுப் பாடல் பாட இறைவனின் காப்புக் கிடைக்கவேண்டும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பார்பெறும் பொருளி ரண்டும் பயன்பெற கிருசிச் செல்வம்
நேர்பெற அருளு மோங்கி நீடூஉழி காலம் வாழச்
சீர்பெறு மக்கா வாழும் திருநபி இறசூலுல் லாமேல்
ஏர்பெறும் பள்ளி சைக்க இறையவன் காப்புத் தானே (1)

அடுத்த பாடலிலும் அதே கோரிக்கை இறைவனிடம் சமர்ப்பிக்கப் பட்டுள்ளது.

வையகத்தி லேசிறந்த மக்கமதீ னத்தில்வளர்
ஜெயத்திற சூல்நபியார் சாய்புதம்மேற் பள்ளிசைக்க
மெய்யாக வண்டமுயிர் மென்மேலு மேபடைத்த
அஞ்சயமில்லா நாயனவ னாதரவும் காப்பாமே (2)

நபிகள் பெருமானாரைப் போற்றி அவர்கள் பேரில் பாடிப்பட்ட துதியாக அடுத்த மூன்று பாடல்களும் அமைந்துள்ளன. அத்தகைய கலிப்பா இது.

பொன்மயமா யெங்கும் புண்ணியங்க ளுண்டாகும்
கன்னல் விளையும்நற் கதலிசெந் நெல்விளையும்
நன்னகரா மக்கமதில் நல்லரசு செய்யுமெங்கள்
அன்ன முகம்மதுவா மாதிநபி காப்பாமே (3)

அடுத்த இரண்டு பாடல்களும் கட்டளைக் கலித்துறைப் பாக்களாக நபி துதி கூறுவனவாகவே அமைந்துள்ளன.

மதியாத நேரவர் வாழுவா ரோவில்லை மாநபியைத்
துதியாத நாவது நேரலவே புவிசொர்க் கத்திடை
கதியாதும் நல்கி எமையாட்கொள வினிகாவு மக்காப்
பதிவாழ கம்மது பூங்கழலைப் பற்றிப் பாடுவமே. (4)

மாறாப் புகழ்மக்க மாநபி நாமம் வழுத்திடிலோ
பீறா நசைவலைப் பேர்ந்திடு மின்னும் பெருவிரிவு
கூறாப் பவக்கடல் நீந்திடும் புண்யக் குவடுயருந்
தேறாத நெஞ்சமும் தேறிவரும் ஞானச் சித்தியுமே (5)

அடுத்து வரும் 91 அடிகளைக் கொண்ட நில மண்டில ஆசிரியப்பா வில் பெருமானாரின் வரலாறு விரிவாகத் தரப்பட்டுள்ளது. அண்ணல் (சல்) அவர்களுடைய மூதாதையரையும் அவர்கள் பிறந்தமையையும் இவ்வாறு பாடியுள்ளார் நூலாசிரியர்.

எங்கும் நிறைந்த இறையரு ளொளிவு
தங்கியே நபிமார் சார்பா யிலங்கி
அபுதுல்லா சாகிபு வழகிய நெற்றியில்
பபதியி னொளிபோல் பளபள வெனவே
ஆணிமுத் தாகி அழகான நபியார்
மாநிலந் தன்னில் மயிலாய்ப் பிறக்க
மின்னொளி வாகி விளக்கொளி வாகி
தன்னை யறிந்தவர் சாகிபு நபியும்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்த ஆண்டு யானை ஆண்டு எனப்படும். முதன் முதல் யானைகள் மக்காவில் தென்பட்டமையால் இக்காலம் யானை ஆண்டு எனப்பட்டது. யெமன் நாட்டிலிருந்து அப்றஹா என்னும் அபிசீனிய ஆளுநர் மக்காவை ஆக்ரமிக்க யானைப் படையுடன் வந்தமையே இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த நிகழ்ச்சி நடந்து ஐம்பதாவது நாளில் நபிகள் பெருமானார் பிறந்தார்கள். றபியுல் அவ்வல் மாதம் பன்னிரண்டாம் நாள் திங்கட் கிழமை பிறந்தார்கள். பிறந்த இடம் புனித கஃபாவுக்கு வடகீழ் திசையில் இருந்தது. அந்த மனை அபீதாலிபுக்குச் சொந்தமானதா யிருந்தது. எவ்வித குறையுமில்லாமல் பிறந்தார்கள். இவற்றையே அப்பாடலின் இன்னொரு பகுதி இவ்வாறு குறிப்பிட்டுள்ளது.

கலந்ததோர் சண்டைக் கடக்கரிக் கலகம்
அலம்ப லொழிந்த வன்பதாம் நாளில்
பதிவான றபியுல் பனிரெண்டாந் தெய்தி
கெதியான திங்கட் கிழமை யிராவில்
எதிர்கா பத்துல்லா ஈசான்ய மூலை
முதியரபித் தாலிபு முழுநடு மனையில்
பரிமள வாசம் திக்கெங்கும் வீச
திறமையாய்க் கிழக்குத் திசைதனை நோக்கி
கொப்புளுஞ் சுன்னத்துங் குறைக ளில்லாமல்
ஒப்புட னெவையு மொழுங்கின் படியே
கால்கை முகமுங் கழுகி யூதியே
மேலது கலிமா விரலை உயர்த்தி
ஆமி னாளம்மா ளடிவயிற் றிருந்து
பூமியைப் புரக்கப் பிறந்தனர் நபியும்.

இந்நிகழ்ச்சிகள் சீறாப்புராணத்தில் உள்ள நபியவதாரப் படலத்தில் (87-90) குறிப்பிடப்பட்டுள்ளன. 'கிளர் கிபுலாவை முன்னோக்கி' (81) நபிகள் பிறந்தார்கள் என உமறுப்புலவர் கூறியுள்ளார்கள். முஸ்லிம்களின் கிபுலாவான கஃபத்துல்லாஹ்வின் வடகிழக்குத் திசையில் உள்ள அபூதாலிபின் மனையில் பிறந்த பெருமானார் (ஸல்) கிழக்குத் திசையை நோக்கினவர்களாகப் பிறந்தார்கள் என திருமக்காப் பள்ளு குறிப்பிட்டுள்ளது.

முகம்மது நபி (ஸல்) அவர்கள் பிறந்த உடன் அல்லாஹ்வின் கட்டளைப்படி வானுலகம் எடுத்துச் செல்லப்பட்டார்கள் என்று அடுத்து வருணிக்கப்பட்டுள்ளது. அங்கு கொண்டுபோய் அல்லாஹ்வால் நல்ல அதிசயங்களும் காட்டப்பட்டார்கள் எனத் திருமக்காப்பள்ளு இவ்வாறு வருணித்துள்ளது.

மிகவும் புகழொடு விளங்கிடு நாயன்
சிகரான ஜிபுரியீல் சேர்ந்த மலக்குகள்
தூதர்கள் தமக்குச் சொல்லிய னுப்பவே
நாத கீதத்துடன் நடத்துவிங் கிதமாய்
பெண்கள் கூறானிகள் பிரியமாய் மகிழ்ந்து
தங்கத் தினாலே தட்டுக ளேந்தி
ஒப்பி லாப்பொன் னூஞ்சல் தனிலே
முப்பொரு ளான முகம்மது நபியைத்
தூக்கி மேல்வைத்துச் சுமந்தெல் லோருமே
ஆக்கிர மாக அல்லாமுன் வைத்தார்

கண்டதோர் நாயன் கண்காட்சி தன்னை
மண்டலங் காக்கவும் வாக்குக் கொடுத்து
அங்குள சுவர்க்கத் ததிசயங் காட்டி
எங்குந் தீனாக இறக்கினன் மக்கா

இதனைத் தொடர்ந்து பல அடிகளில் நபிகள் பெருமானார் பல அடை மொழிகளால் புகழப்பட்டுள்ளார்கள்.

சோதிசேர் நபியைத் துங்கவர் நபியை
நீதிசேர் நபியை நெடியவன் நபியை
கோதிலா னுடனே கூறிய நபியை
ஆதியாய் வந்த அகம்மது நபியை
கோசால நபியை குருவெனு நபியை
தேச முழுதுஞ் சிறந்த நபியை
மறையின் நன்னபியை மாதவ நபியை
முறைநிறை நபியை மோனமா மணியை
தரையினிற் பாதந் தான்படா நபியை
புரையொன்று மில்லாப் புண்ணிய நபியை
அன்பியாக் களுக்கும் அவுலியாக் களுக்கும்
ஆதர வாகிய அழகான நபியை
எம்பிரான் நபியை இறசூல் நபியை
தம்பிரான் நபியை தாகா நபியை
நால்வேதந் தன்னை நாட்டிலே நிறுத்தி
மேல்வீடு சேர நேர்வழி விளக்கி
அகமதி லறிவு அருளொடு துலக்கும்
முகம்மது நபியை முழுதுமே பணிந்தால்

இத்தகைய பெறற்கரிய பேறெல்லாம் பெற்ற முகம்மது நபி (ஸல்) அவர்களின் போதனைகளுக்கு இணங்கி நடந்தவர்கள், நடக்கிறவர் கள், நடப்பவர்கள் அனைவருக்கும் என்ன என்ன நன்மைகள் வழங்கப் படும் என அடுத்த வரிகளில் விவரித்துள்ளார் திருமக்காப்பள்ளு ஆசிரியர்.

அன்புடன் நபிதான் அல்லா(ஹ்)வை வணங்கி
துன்பங்க ளகலத் துவாவிரந் துநல்ல
காபத்துல் லாவிற் காத்திருந் தார்க்கும்
ஆபத்துத் தீர்ப்பா ராண்டவர் நபியும்
நம்பின பேர்க்கு நார்சாக் கொடுத்து
தஞ்சம் நானென்று தயவுடன் காப்பார்
மக்க நாடெங்கும் மணிமுடி செலுத்தி
சொர்க்கத் திருந்து சுகம்பெறு நபியும்
குறானோதி நாயனைக் குறித்துமே தொழுக
புறாக்கெனும் பரியில் புகழுட னேறி

கானக மெல்லாம் கடந்தப் புறத்தில்
தானவர் குதிரை தனைவிட் டிறங்கி
வையத் தோடுஎழு வானமும் ஏத்தும்
பய்த்துல் முகத்தஸ் பள்ளி தன்னில்
தவனங் களாரிச் சங்கையா யங்கு
கவனமாய் நினைந்து கல்மனை தன்னில்
பிஸ்மில் லாவென்று விரல்கொடு துளைத்து
அஸ்வத்தைக் கட்டி ஆண்டவர் நபியும்
அல்ஹம்து லில்லா அவன்றனைத் தொழுது
செல்வமும் பெற்றுத் திரும்பியே வந்து
பஞ்சலட் சணமுள்ள புறாக்குப் பரியும்
அஞ்சல் வைத்தோட அதட்டினார் மெள்ள
லகாந்தனைச் சுண்டி நடத்தினார் குதிரை.

இங்கே மிஃறாஜ் நிகழ்ச்சியும் சுட்டப்படுகிறது. இங்கே குறிக்கப்பட்டுள்ள பல நிகழ்ச்சிகள் உள்ளே உள்ள பக்கங்களில் அவ்வச் சந்தர்ப்பங்களில் விவரிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு செலுத்தப்பட்ட குதிரை எங்கெங்கு சென்றது என்பது அடுத்து விவரிக்கப்பட்டுள்ளது.

மகாமேரு வான மலையையுந் தாண்டி
வேகத் தோடுயர் மாகமுஞ் சென்று
பறந்து கொண்டு புறாக்குப் பரியும்
சிறந்த நபியைச் சீராய் விடநபி
ஏழு வான மெத்தலஞ் சொர்க்கம்
வாழு வோர்கள் வாழ்த்த மகிழ்ந்து
அறுசிலு மேறி அல்லா(ஹ்)வைக் கண்டு
சிறப்பா யெவையும் பேசித் திரும்பி
மக்கமே வந்து வளர்தீனை நாட்டி
சொர்க்கங்க ளுடைய சுழுநெறி காட்டி
துட்டக் குபிரரைத் தோற்க வடித்து
அட்ட திக்கு மடக்கி யாண்ட
முகம்மது நபியை முழுமன தோடு
அகமதில் நினைகுவ ரடைகுவர் நலனே.

இவ்வாறு முகம்மது நபி (சல்) அவர்களின் நற்போதனைகளைப் பின்பற்றுவோர் நற்பேற்றைப் பெறுவர் எனக் கூறி முடித்துள்ளார் திருமக்காப் பள்ளு ஆசிரியர்.

கடைசி மூன்று பாடல்களாலும் முகியத்தீன் ஆண்டவர்களைப் போற்றி அவர்களின் பாதுகாவலை நாடியுள்ளார் இந்நூலாசிரியர். அவற்றுள் ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

ஒருமையுறு மருமையுறு மிறையவனை
நிறையவனை யோர்ந்து நாளும்
பெருமையுற விருமையற திகழறிவைப்
புகழறிவைப் பெறவென் றாலே
திருவளருந் தருவளரும் பொழில்வளரும்
தொழில்வளரும் சீர்பஃ தாதில்
கருவளரு முருவதனை யொறுத்தவனை
யிறுத்தவனைக் கருத மாதோ (7)

முகையதீன் ஆண்டவர் துதியாக அமைந்துள்ள அடுத்த இரண்டு பாடல்களும் இவ்வாறு அமைந்துள்ளன.

பகுதாதை யுற்றிடு வந்திக்கு நன்மகப் பலனளித்தீர்
பகுதாதை யுற்றதி வாடுவனோ நின்ப தாப்புயம்
பகுதாதை யுற்றதின் தேனதி பாயுர் பலபொழில்சூழ்
பகுதாதை யாமுகியித்தீனே யருள் பார்த்திபனே (8)

பதந்தரு சோலையுயர் பகுதாதுப் பதிக்கிறையே
பதந்தரு மாதி கிரியைக ளென்றும பலன்பெறவும்
பதந்தரு வாக்குமிக பரபோ கமென் பாலுறவே
பதந்தரு வாயென் முகியித் தீனேசவு பாக்கியமே (9)

இங்கே முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் வாழ்ந்த, நற்போதனை புரிவதற்கு வாய்ப்பாக அமைந்த பகுதாது என்னும் பகுதி பல நயங்களோடு குறிப்பிடப்பட்டுள்ளது. அங்கே உள்ள முகியித்தீன் ஆண்டவரிடம் தனக்கு நல்ல பாக்கியங்களை அளிக்குமாறு திருமக்காப் பள்ளு ஆசிரியர் குறை இரங்கி உள்ளார்.

முக்கூடற் பள்ளிலே காப்புச் செய்யுளோடு வேறு நான்கு பாடல்களே கடவுள் வணக்கம் என அழைக்கப்படும் பகுதியில் இடம் பெற்றுள்ளன. பள்ளியர் வரவுடன் முக்கூடற் பள்ளு நூல் ஆரம்பமாகிறது அதேபோன்று திருமக்காபபள்ளு நூலும் பள்ளி வந்த செய்தியுடன் ஆரம்பமாகிறது. பொதுவாகப் பள்ளு நூல்களில் மூத்தபள்ளி, இளைய பள்ளி, பள்ளன் அல்லது குடும்பன், பண்ணைக்காரன் அல்லது பிச்சர் என்பவர்களே பிரதான பாத்திரங்களாக வருகின்றனர். அவர்களுள் மூத்தபள்ளியின் வருகையைத் திருமக்காப் பள்ளு இவ்வாறு கூறுகிறது.

ஆர்க்குமே யெட்டாத அல்லாதன் மந்திரியா
மார்க்கமுள்ள ஆதிநபி மக்கவள நன்னாடு
சேர்க்கையாய்ப் பண்ணைகளைச் செலுத்தும்படி யாகவேதான்
தீர்க்கமுடன் பள்ளிவந்த செய்தியைச் சொல்வேனே. (10)

முக்கூடற் பள்ளு பள்ளியர் வந்தமை பற்றி இவ்வாறு கூறுகிறது.

ஏவலுறும் பள்ளியர்வந் தெய்தியது சொல்வேனே (5)

மூத்தபள்ளி வந்தமை பற்றிக் கூறும் பாடல்கள் இசையோடு பாடக் கூடிய சிந்தாகவே இரண்டு பள்ளு நூல்களிலும் வந்துள்ளன. அவற்றின் இசையமைப்பும் ஒரே மாதிரியாகத்தான் அமைந்துள்ளது. இரண்டு பாடல்களும் பந்துவராளி இராகத்தில் பாடக்கூடியவை. தாளம் இரண்டிற்கும் அடதாளமாகும் திருமக்காப் பள்ளுவில் வந்துள்ள சிந்து இவ்வாறு அமைந்துள்ளது.

கன்னத்தில் மஞ்சணையும்
கழுத்தில் சந்தனம் பூசி
கணையாழி மோதிரமு மிணையுடனே

வன்னநற் பட்டுடுத்தி
மயிர்கோதி செப்பமிட்டு
வாடைப்பொடி யணைந்து

சாடைப் பேச்சுமாய்
அன்னநடை நடந்து
ஆதிநபி யிறசூல்

ஆண்டவரைத் தான்தொழுது
வேண்டிக் கொண்டுமே
மன்னர்கள் போற்றும்

திருமக்க மதீனந் தன்னில்
மயிலப் பள்ளியும்
வந்து தோன்றினாளே. (11)

இந்தப் பாடலிலே இஸ்லாத்துக்கு முரணானவை எனத் தாம் கருது வனவற்றை திருமக்காப் பள்ளு ஆசிரியர் இங்கு சேர்க்கவில்லை. முக்கூடற் பள்ளு நூலிலே மூத்தபள்ளி

நெற்றியி லிடும் மஞ்சணைப் பொட்டும்
மற்றொரு திருநாமப் பொட்டும்

இட்டுவந்தாள் எனக் கூறப்படுகிறது.

ஆசிரியர் 'மஞ்சணைப் பொட்டு கன்னத்திலே இடப்பட்டது' என்றும் 'சந்தனம் கழுத்தில் பூசப்பட்டது' என்றும் குறிப்பிட்டுள்ளார். இன்றும் சில விழாக்களில் முஸ்லிம்கள் கழுத்தில் சந்தனம் பூசுவதுண்டு. திருமக்காப் பள்ளு நூலில் மூத்தபள்ளி மயிலைப் பள்ளி என்றே குறிப்பிடப்பட்டுள்ளாள். முக்கூடற் பள்ளு நூலிலே மூத்த பள்ளியின் வருகை ஒரு பாடலிலே குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் திருமக்காப் பள்ளு அதற்காக இரண்டு பாடல்களைப் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம்,

கொச்சி மஞ்சளின் பூச்சுங்
 கோவைத் தாவடங்களும்
 குறுஞ்சிரிப் பேப்பமிட்டு மருகுடனே
பச்சநீல வானமாய்
 பல்லிடைக் காவியு மாய்ப்
 பாங்கும் பரியாசங்களும்
தூங்கு கொங்கையும்
 அச்சரம் பதித்தாப்போல்
 அழகுத் தேமலுமாக
அதட்டி யதட்டி
 வெகு பகட்டுடனே
 மச்ச விழிகளிரண்டும்
மருட்டி நபிபண்ணைக்கு
 வாய்த்த மயிலப்பள்ளி
 தோன்றினாளே (12)

முக்கூடற் பள்ளு நூலிலே 'சற்றே சரிந்த தனமும்' என்று வந்துள்ளது. திருமக்காப்பள்ளு நூலிலோ எனின் 'தூங்கு கொங்கையும்' என வந்துள்ளது. அங்கே தேமல் வருணிக்கப்படவில்லை. இங்கே தேமல் வருணிக்கப்பட்டுள்ளது எழுத்துக்கள் பதிக்கப்பட்டன போன்று காட்சி அளித்த அழகான தேமலை உடையவளாய் இருந்தாள் என வருணிக்கப்பட்டுள்ளது.

அடுத்து இளைய பள்ளியின் வரவு கூறப்படுகிறது. திருமக்காப் பள்ளு நூலிலே மூத்த பள்ளியை மக்கத்துப் பள்ளி என்றும் இளைய பள்ளியை மதீனத்துப் பள்ளி என்றும் வழங்கப்பட்டுள்ளமையைக் காணலாம். முக்கூடற்பள்ளு நூலில் இருவரும் முறையே முக்கூடற் பள்ளி என்றும் தருதூர்ப் பள்ளி என்றும் பேசப்படுகிறது. இளைய பள்ளியின் வருகையைப் பற்றிக் கூறுகிறது அடுத்த கலிப்பா.

எத்திசையும் போற்று மிறசூல் நபியைத் தான்வணங்கி
துத்தியமாய்க் குடும்பன் சொல்லுந் தவறாமல்
சித்திரம் போல நடையும் சிங்காரக் கைவீச்சும்
பத்தியுடனே யிளையபள்ளி வந்து தோன்றினளே (13)

இளையபள்ளி ஒளிவுப்பள்ளி என்றும் அழைக்கப்படுகிறாள். அவளின் வரவு இவ்வாறு நான்கு பாடல்களில் விவரிக்கப்படுகிறது. முக்கூடற்பள்ளு நூலில் இடம் பெற்ற இளையபள்ளியின் வருகையைப் பற்றிய பாடல் சிந்து பயிரவி இராகத்தில் ரூபக தாளத்தில் பாட வேண்டியது. ஆனால் திருமக்கத்துப் பள்ளு நூலில் இளைய பள்ளியின் வருகையைப் பற்றிய சிந்து முடுகு என அமைந்துள்ளது. முடுகிச் செல்லும் (அதாவது விரைந்து செல்லும்) சந்தவகை முடுகு எனப்படும்,

முடுகு வண்ணம் என்பது அராகந் தொடுத்த அடியோடு பிற அடி சேர்ந்து தொடர்ந்தோடுஞ் சந்தம் எனப்படும். திருமக்காப் பள்ளு நூலில் முடுகுச் சந்தமாக அமைந்துள்ள இளைய பள்ளியின் வருகையைக் கூறும் பாடல்கள் இவ்வாறு அமைந்துள்ளன.

சீவிச் சினுக்கெடுத்துக் கொண்டை முடிந்து
செல்ல நடைநடந்து மெல்லச் சிரித்து
ஓவியம் போல முகுமுக மிலங்க
ஒளிவுப் பள்ளியும் வந்து தோன்றினாளே (14)

செங்கனி வாயிதழும் நெற்றிச் சுட்டியும்
செந்தூரப் பொட்டுமிட்டு விந்தையுடனே
தங்கப் பதக்கமிட்டு வொளிவு பள்ளியும்
தனதாய்ப் பண்ணைக்கு வந்து தோன்றினாளே (15)

கொங்கைக் குடமசையக் கொத்துச் சரமுங்
குலுங்கத் தங்கப் பதக்க முடனிலங்க
மங்கையரி லதிக வொளிவுப் பள்ளியும்
வரிசை நபி பண்ணைக்கு வந்தனளே (16)

அல்லா நபியை நாடிப் போற்றிக் கொண்டு
ஆமீன் கூறியே வெகு நேமமுடனே
உல்லா சமாய் நடந்து நபிப் பண்ணைக்கு
உகந்த வொளிவுப் பள்ளி தோன்றினாளே (17)

இளைய பள்ளியை வருணிக்கும்பொழுது முக்கூடற் பள்ளு நூலில்

நெஞ்சுகவர் கனதன மாமதக்
குஞ்சரவினைக் கோடுகள் அசைய (8)

எனக் கூறியுள்ளார். திருமக்காப் பள்ளு நூலில் அதே வருணனை 'கொங்கைக் குடமசைய' எனக் குறிப்பிட்டுள்ளமை நோக்கற்பாலது. திருமக்காப் பள்ளு அல்லாஹ்வையும் அவனது நபியையும் போற்று வதைக் குறிப்பிடுகிறது. அவ்வாறே 'ஆகுக' என இறைஞ்சுவோருடன் சேர்ந்து மக்கள் கூறும் 'ஆமீன்' என்னும் அறபுச் சொல்லும் இளையபள்ளியின் வருணனையில் இடம் பெற்றுள்ளது.

இங்கே இந்தப் பள்ளு நாடகம் நடந்து கொண்டிருக்கிறது. மூத்த பள்ளியின் தோற்றமும் இளைய பள்ளியின் வருகையும் கூறப்பட்டன. இந்நாடகத்தில் முக்கியப் பங்கினை வகிப்பவரான பள்ளனின் வருகை இப்போது அறிவிக்கப்பட்டுள்ளது. பள்ளன் குடும்பன் என்றும் அழைக்கப்படுவதுண்டு. குடும்பனின் வருகைக்குப் பீடிகையாக அமைந்துள்ளது இக்கலிப்பா.

ஆதிநபி தமக்கும் அடிமை தானென்று சொல்லி
நீதமுடனே தொழுது நெறிமுறைகள் தப்பாமல்
வாதுபுரி மாதுநல்லாள் மயிலி மணவாளன்
கோதிமயிர் முடித்துக் குடும்பன் வந்து தோன்றினனே,

இங்கே குடும்பன் இறைபக்தி உடையவன் என்றும் சமயச் சடங்குகளை நிறைவேற்றிவிட்டு வந்தான் என்றும் கூறப்பட்டுள்ளது. பள்ளனின் வருகையை முன்பு போலவே திருமக்காப் பள்ளு ஆசிரியர் முடுகுச் சந்தத்தில் ஆறு செய்யுட்களில் பாடியுள்ளார். ஆனால் முக்கூடல் பள்ளு நூலிலோ சுருட்டி இராகத்தில் ஆதி தாளத்தில் அமைந்த ஒரு சிந்துப் பாடலைக் கொண்டதாக உள்ளது. குடும்பன் வரவு பற்றிய திருமக்காப் பள்ளுச் சிந்து இவ்வாறு அமைந்துள்ளது.

வடித்தகாதும் பரந்த முகமும் வாயிற்பருத்த வுதடுமாய்
முடித்த கொண்டயி லுருமால்கட்டி முத்தக்குடுபபன்
தோன்றினானே. (19)

பீளைக் கண்ணும் சாளைவயிறும் பிடரியுமான
கூழைக் கையும் வீசியே முத்தக்குடும்பனும் வந்து
தோன்றினானே. (20)

செகமகிழ் மக்கமதீன நாட்டில் செந்நெல் விளையும் பண்ணைக்கு
முகம்மது நபிபாதம் வணங்கி முத்தக்குடும்பன்
தோன்றினானே. (21)

அட்டதிசையும் புகழும் நபியாண்டவர் பண்ணை செலுத்தவே
திட்டமாகவே முத்தக் குடும்பனும் திறத்துடன் வந்து
தோன்றினானே. (22)

கொட்டு மண்வெட்டி அரிவாளும் கொண்டு கூன்முதுகுங்
காட்டியே
முட்டிவயிறும் நெட்டைக் காலுடன் முத்தக்கடும்பன்
தோன்றினானே. (23)

ஆதிநபி யிறசூல் பாதம் அனுதினமும் போற்றியே
கம்பிளிமூடியே முத்தக் குடும்பனும் வந்து தோன்றினானே. (24)

பள்ளனின் வருகையைக் கூறிய முக்கூடற் பள்ளு ஆசிரியர் அடுத்த பாடல் பள்ளன் தன் பெருமையைக் கூறுவதாக அமைத்துப் பாடியுள்ளார். ஆனால் திருமக்காப் பள்ளு ஆசிரியர் முத்தக்குடும்பனான பள்ளனின் வருகையைக் கூறியபின்னர் குடும்பனும் பள்ளியரும் நபியைப் போற்றி வாழ்த்தினர் எனக் குறிப்பிட்டு அவ்வாறு வாழ்த்திய பாடல்களைக் குறிப்பிட்டுள்ளனார். அதனைக் கூறும் கலிப்பா இவ்வாறு அமைந்துள்ளது.

பத்தினியான வொளிவும் பாங்காகவே நடந்து
முத்தக் குடும்பனுடன் மூத்த பள்ளியு மயிலி
சுத்தமுடன் நீராடிச் சுகம்பெறவே யாதிநபி
சித்தமே யென்றுசலாஞ் செப்பி வாழ்த்துவரே. (25)

உண்மையான வாழ்த்தினை அடுத்துத் தந்துள்ளார் திருமக்காப் பள்ளு ஆசிரியர். அப்பாடல் மோகன ராகத்தில் ஆதிதாளத்தோடு பாட

வேண்டிய பாடலாக அமைந்துள்ளது அது பல்லவி, அனுபல்லவி, சரணங்களைக் கொண்டதாக உள்ளது.

தரு பல்லவி

போற்றுவோமே யெங்கள் நபியைப் — பாடிப் புகழை
யேற்றுவோமே யெஙகள் நபியைப்

அனுபல்லவி

போற்றுவோமே நாமெல்லோரும்
மாற்றுவோமே எங்கள் குறை
யாற்றுவோமே சலவாத்தைச்
சாற்றுவோமே நாளுமிகப் போற்றுவோமே

சரணங்கள்

செங்கதிர் நடையைத் தடுத்தார்—கதிர்நிறைந்த
திங்கள் வந்துரைக்க விடுத்தார்
பொங்குந் தண்ணருளைக் கொடுத்தார்—தசைக்கட்டியைப்
பூவையாக்கிப பூவிலெடுத்தார்
சிங்கம் புலிமான் முசலியங்கதஞ் சினைபறவை
தங்களிடம் வந்து பேசுந் துங்கவர் கருணை நாடிப்
—போற்றுவோமே எங்கள் நபியை
சாபிரின் புதல்வர் தம்மையு—மிறந்தபின்பு
தங்குமுயிர் தந்தார் செம்மையும்
பாவங்கள் நீக்கியே யிம்மையும்—மறுமையுமே
பாதுகாப்பார் நாளு மெய்மையும்
கோபமும் பேராசை லோபஞ் சாபமும் போக்கி எங்கள்
தாபமும் நீக்கி யெம்மில் ஞானந்தந் தோனை
—போற்றுவோமே எங்கள் நபியை

மான்மதங்கள் காதம் வீசுமே—யிருளைப் போக்கும்
மாநபியின் முகத்தேசுமே
வான்புவியும் புகழ்ந்தே—கொளவும்
மனதினின்று எங்கு மணமே
கான் மலர்த்தேன் கமழும் மக்காக்
கோமான் எங்கள் நபியை
மேன்மையுடன் போற்றி யெங்கள்
வீமலர் பதத்தை நாடி
போற்றுவோமே யெங்கள் நபியைப் பாடிப்புகழ்
போற்றுவோமே எங்கள் நபியை (26)

இவ்வாறு பாடிவிட்டு அடுத்த பாடலிலும் நபிகள் நாயகத்தைப் புகழ்ந்துள்ளார் திருமக்காப் பள்ளு ஆசிரியர். இந்தப் பாடல் ஆதி

தாளத்தில் ஆனந்த பைரவி இராகத்தில் பாடக்கூடிய ஒரு சிந்தாக அமைந்துள்ளது. இச்சிந்து இருபத்தெட்டு அடிகளைக் கொண்டுள்ளது.

அடுத்து நாட்டு வளம் கூறப்படுகிறது. அந்த நாட்டுவளத்தை யார்யார் கூறுகின்றனர் என்பதை ஒரு கலிப்பாவின் மூலம் முதலில் திருமக்காப் பள்ளு ஆசிரியர் அறிமுகப்படுத்தியுள்ளார். முக்கூடற் பள்ளு நூலிலும் அந்த முறையே பின்பற்றப்பட்டுள்ளது. நாட்டு வளம் கூறப்படும் என அறிமுகப்படுத்தப்படும் கலிப்பா இவ்வாறு அமைந்துள்ளது.

விந்தையுடனே தொழுது மென்மேலுமே பணிந்து
சொந்த அடிமைக்கு மிறசூல் நபியே தஞ்சமென்று
பந்தாள மாய்க் குடும்பன் பள்ளியருமே மகிழ்ந்து
வந்துமக்க நன்னாட்டின் வளமைகளைச் சொல்வாரே (28)

அடுத்து நாட்டுவளம் கூறப்படுகிறது. நாட்டுவளச் சிந்து அடதாளத்தில் சங்கராபரணம் இராகத்தில் பாடக்கூடியதாக அமைந்துள்ளது.

முக்கூடற் பள்ளு நூலில் பள்ளன் தன் பெருமை கூறியபின்னர் மூத்த பள்ளியும் இளைய பள்ளியும் தத்தம் குடித்தரம் கூறினர். அதனைத் தொடர்ந்து பள்ளன் குடித்தரம் கூறினான். அதற்கப்புறம் தான் நாட்டுவளம் இடம் பெறுகிறது. நாட்டுவளம் கூறும்பொழுது கூட மூத்த பள்ளியும் இளைய பள்ளியும் வெவ்வேறாகவே கூறி உள்ளனர். நகர வளமும் அவ்வாறே அமைந்துள்ளது. ஆனால் திருமக்காப் பள்ளு நூலில் பள்ளியரிருவரும் நாட்டுவளம் கூறுகின்றனர். முதலில் 'மக்கநாடெங்கள் நாடே' என இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

மேவுவான் கதிர் வெப்பத்தினுல் நிழல்
    வேட்டுவந் தோரைத் தண்வெருட்டவுயர்
காவிரங்கன்ன கண்மலர் தந்திடுங்
    கடிமதுக்கரி மும்மதத்தோடுமே
தாவிநஞ்சைப் புலன்கள் விளைந்துமேற்
    சாயுங்கன்னலிற் பொழிகள் மறைந்திட
நோவுதுன்பம் வறுமையு மொன்றிலா
    நோன்மைவாழ் மக்கநா டெங்கள் நாடே (29)

ஓட்டமென்பது பான்மது நீணதி
    ஒடுக்கமென்பது மாற்றவர் கோட்டங்கள்
ஆட்டமென்பது மெண்வகைச் சித்துகள்
    அடக்கமென்பது கோபமுந் தாபமும்

ஈட்டமென்பது நல்வினை கீர்த்தியும்
நடுக்கமென்பது தண்சோலை மந்திகள்
வாட்டமென்ப திரப்பவ ரில்லென
வளம்பெறு மக்க நாடெங்கள் நாடே (30)

மக்க மாநகரின் சிறப்புகள் மேலே எடுத்துக் கூறப்பட்டன, அங்கே என்ன என்ன சிறப்பாக அமைந்துள்ளன என்பது அடுத்து வருணிக்கப் பட்டுள்ளது. இந்தப் பாடலிலே மிக ஆழமானது எது, மிக உயர்ந்தது எது எனப் பல்வேறு வகையால் மக்காவின் சிறப்பு இவ்வாறு ஓதப்பட்டுள்ளது.

தாழக் காண்ப தகழ்களி னாழம்விண்
தடவக் காண்பது தீன்கொடிச்சீலைகள்
சூழக்காண்பது நல்வினை தண்ணருள்
தூற்றக் காண்பது தீவினைச்சா்பங்கள்
பாழக் காண்பது நேரலர் தானங்கள்
பரவக் காண்பதி யானை மதங்களே
வீழக்காண்பது ரத்தின மாரியே
விளங்க மக்கநன் நாடெங்கள்நாடே (31)

மக்கவருணனையை இத்துடன் நிறுத்திய திருமக்காப் பள்ளு ஆசிரியர் அதே பாணியில் அமைந்த அடுத்த எட்டுப் பாடல்களில் மக்கம், மதீனம், இரண்டினதும் வருணனைகள் சேர்த்துக் கூறியுள்ளார்.

கன்னல் செந்நெல் விளைந்து சரியுநற்
கதலிவாழை கனிந்து சொரியும்
வன்னமாங் குயிற் சன்னைகள் கூவும்
மரங்களேறியே மந்திகள் தாவும்
பின்னிப்பின்னிக் கமுகும் பருக்கும்
பேடையன்னங்கள் செல்வஞ் செருக்கும்
மன்னர் போற்றிய மக்க மதீனம்
வளமையாகிய நாடெங்கள் நாடே (32)

பஞ்சவர்ணக் கிளிகளும் பேசும்
பரந்து செண்பகச் செம்மலர் வீசும்
இஞ்சியேலக்காய்க் கொம்பிலுதிரும்
இலுமிச்சம்பழம் தன்னாலுதிரும்
கொஞ்சிக் கொஞ்சிக் குரங்குக் கிளைகள்
குதித்து வர்க்கங்கள் தின்றுசெழிக்கும்
தஞ்சமென்றோரை மக்கமதீனமுந்
தற்காக்கும் வளநாடெங்கள் நாடே (33)

இங்கே விவரிக்கப்பட்டுள்ள இயற்கை வருணனைகள் பெரும்பாலும் தமிழ் நாட்டைச் சார்ந்தவையாகவே இருக்கின்றன. ஏனைய இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் போல் திருமக்காப் பள்ளு நூலும் மக்காவிலும் மதீனாவிலும் வாழ்ந்த முகம்மது நபி (சல்) அவர்களைப் போற்றிப் புகழப்பட்ட போதிலும் அவர்களுடைய நாடெனக்கருதி தமிழ் நாட்டினையே புலவர் வருணித்துள்ளார்.

முக்கூடற் பள்ளு நூலில் நாட்டுநகர வருணனை ஓர் பத்துப்பாடல்களில் இடம் பெற்றுள்ளது. மூத்த பள்ளியும் இளைய பள்ளியும் மாறி மாறி நாட்டு நகர வருணனைகளை விதந்தோதுவதாக அவை அமைந்துள்ளன. மூத்த பள்ளி தனது நாட்டுவளத்தை முக்கூடற் பள்ளு நூலில் இவ்வாறு பாடுகின்றாள் :

மீதுயர்ந்திடுந் தெங்கிள நீரை
  மிடைந்த பூகஞ் சுமந்துதன் காயை
சூதமொன்றிச் சுமக்கக் கொடுக்கும்
  சுதந்தன்கனி தூங்கும் பலவின்
ஓதும் அந்தப் பலாக்கனி வாழை
  உளுக்கவே சுமந்தொண்குலை சாய்க்கும்
மாதுளங் கொம்பு வாழையைத் தாங்கும்
  வளமை ஆசூர்வடகரை நாடே (55)

அடுத்து இளைய பள்ளி தனது நாட்டு வளத்தை முக்கூடற் பள்ளில் இவ்வாறு பாடுகிறாள் :

பங்கயந் தலைநீட்டிக் குரம்பினில்
  பச்சை இஞ்சியின் பார்சடை தீண்டும்
தங்கும் இஞ்சியும் மஞ்சட்கழுத்தைத்
  தடவி மெள்ளத் தொடும் அந்தமஞ்சள்
அங்க சைந்திடும் காய்கதிர்ச் செந்நெல்
  அளாவி நிற்குமச் செந்நெலு மப்பால்
செங்கரும்புக்குக் கைதரும் போல்வளர்
  சீவலமங்கைத் தென்கரைநாடே (26)

முக்கூடற் பள்ளு நூலிலே இருபள்ளியரும் தம் ஊரே சிறந்தது என்று கூறுமாப்போல அதன் ஆசிரியர் பாடி உள்ளார். ஆனால் திருமக்காப் பள்ளு நூலிலே இருபள்ளியரும் ஒன்றாகத் தத்தம் இருநகரங்களின் பெருமையைப் பாடி உள்ளனர். ஆனால் இஸ்லாத்தில் யாதும் ஊரே என்னும் கோட்பாட்டில் அடிப்படையில் எல்லாம் ஒரே அளவில் வைத்துக் கருதப்படுவதாகும். அதிலே உலகிலே உள்ள புனிதத் தலங்களுள் முஸ்லிம்கள் மூன்றையே மிகச் சிறப்பானவையாகக் கருதுவர். ஒன்று மக்கா. மற்றது மதீனா, மூன்றாவது ஜெரூஸலம்.

எனவே மக்காவையும் மதீனாவையும் ஒன்றை விட மற்றது சிறந்தது எனக் கூறுவதற்கு இஸ்லாத்தில் அனுமதி இல்லை. ஆகவேதான் திருமக்காப் பள்ளு ஆசிரியர் இருபள்ளியரும் மக்கா மதீனாவின் வளமையைப் போற்றிப் பாடுவதாகப் பாடல்களை அமைத்துள்ளார்.

பள்ளு நூலில் நாட்டுநகர வள வருணனைகளைத் தொடர்ந்து குயிற்சிந்து இடம் பெறும். முக்கூடற் பள்ளிலே கலிப்பா இவ்வாறு அமைந்துள்ளது.

தேவாதி தேவர்திரு முக்கூடலின் பெருமை
நாவால் வழுத்திவள நாட்டியல்பு கூறியபின்
பூவாசனைசேர் புரிகுழலார் பூங்குயிலைக்
கூவாயென் றந்தக் குயில்மொழியைக் கண்டாரே (27)

திருமக்காப் பள்ளு நூலில் உள்ள குயிற்சிந்தை அறிமுகப்படுத்தும் கலிப்பா இவ்வாறு அமைந்துள்ளது.

அக்கனருள் பெற்றுவள ரகமதுவின் பண்ணைகளைத்
தக்கபயி ரேற்றுமந்தத் தார் புகழும் பள்ளியர்கள்
மக்கவள நன்னாட்டின் வளஞ்சொல்லிக் கொண்டங்கே
புக்கிபூஞ் சோலைதனில் பூங்குயிலைக் கண்டாரே. (39)

இங்கே அக்கன் என்பது ஹக்கு என்னும் அறபுச்சொல்லின் தமிழ் திரிபாகும். அது அல்லாஹ்வைக் குறிக்கும் சொல். இங்கே குயில் என்பது அது குறிக்கும் பறவையைக் குறிப்பிடுவதோடு மேகத்தைக் குறிக்கவும் குயில் அல்லது குயின் என்னும் சொல் பயன்படுத்தப் படுகிறது. மழை பெய்வதற்கு முன்னர் இடிமுழக்கம் ஏற்படும். அந்த இடி முழக்கத்துக்கும் இங்கே குயிலின் குரலுக்கும் ஏதோ ஓர் ஒற்றுமையை ஆசிரியர் காண்கிறார். குயில் என்னும் பறவை கூவும் குயின் என்னும் மேகம் இடிமுழங்கும். இதன் பயனாக மழை பெய்ய வேண்டும் என்று ஆசிரியர் விரும்பி உள்ளார். இனி, திருமக்காப் பள்ளு நூலில் உள்ள குயிற்சிந்தினைப் பார்ப்போம். திருமுக்கூடற் பள்ளு நூலில் உள்ள தாளமான சம்பை தாளத்திலும் இராகமான ஆனந்தபைரவி இராகத்திலும் பாடக்கூடியதாகத் திருமக்காப் பள்ளு நூலில் உள்ள குயிற்சிந்தும் அமைந்துள்ளது.

எல்லாம் படைத்தாளும் இறையவனரு ளெங்கும்
என்னாளும் ஓங்கவே கூவாய் குயிலே
மல்லாடி எமைக்காக்கும் மக்கநபி தீன்கொடியும்
வளர்ந்தேற வென்னாளுங் கூவாய் குயிலே
பொல்லாக் குபிரறுத்துப் புண்யஞ்சேர் அசுகாபின்
புகழோங்கி வாழ்கவே கூவாய் குயிலே
அல்லா வினமலியற்றி யருள் பெருகுங் குதுபொலிகள்
அதிகீர்த்தி விளங்கவே கூவாய் குயிலே. (40)

இங்கே மல்லாடி என்பது முகம்மதுநபி (சல்) அவர்கள் ஆற்றலைக் காட்டி எனப் பொருள்படும். குபிர்-இஸ்லாம் அற்றதன்மை ; அசுகாபி-நபிபெருமானின் தோழர். அமல்-முஸ்லிம்களின் தொழுகை முதலிய நற்கிரியைகள் ; குது பொலிகள்-இறைநேசச் செல்வர்கள் என அறபுச் சொற்கள் பொருள்படுகின்றன.

திருமக்காப் பள்ளு நூலில் மூன்று குயிற்சிந்துகள் இடம் பெற்றுள்ளன. முக்கூடற் பள்ளு நூலிலும் மூன்று பாடல்கள் இடம் பெற்றுள்ளன. திருமக்காப் பள்ளு நூலில் உள்ள இரண்டாம் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

வரிசை நதிபாயும் மக்கவள நன்னாட்டில்
வளமாரி பெய்யவே கூவாய் குயிலே
திருமக்க மதீனஞ் சூழ்செய் நஞ்சைப் புலன்களிலே
செந்நெல் விளையவே கூவாய் குயிலே
தருமநெறி காட்டுந் தாஹாவின் சன்னதியைச்
சார்ந்தோர் மிகவாழ்க கூவாய் குயிலே
நிருவாக மில்லாரை நேயத்தோ டாதரிப்போர்
நிதியோங்கி வாழ்கவே கூவாய் குயிலே. (41)

இங்கே பெருமானார் (சல்) அவர்கள் தாஹா எனக் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். அடுத்த பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

இசுலாங் கொடிகள் மிகவேறும் சுல்த்தான் கட்டளைகள்
என்னாளும் உயரவே கூவாய் குயிலே
பசுமை வயல் விளைந்து பலன்கள் மிகப்பெருகும்
பண்ணைகள் வளர்ந்தேற கூவாய் குயிலே
பிசுமில்லா வென்றுபுகழ் பேசிநடும் பள்ளியர்க்குப்
பெருஞ்செல்வ மோங்கவே கூவாய் குயிலே
விசுவாசம் வைத்தவர்க்கு வெற்றிதரு மக்கநபி
மெய்ப்புகழைத் தினம்பாடி கூவாய் குயிலே (42)

குயிற்சிந்தினைத் தொடர்ந்து முக்கூடற்பள்ளு நூலில் இடம் பெறுவது தெய்வ வழிபாடு. இதனைத் தெய்வநிலை போற்றுதல் என்றும் கூறுவர். திருமக்காப் பள்ளு நூலில் இது மழை வேண்டிக் கடவுளைப் பரவல் என்ற தலைப்பில் அமைந்துள்ளது. முக்கூடற் பள்ளிலே

மாரிப் பொருட்டால் வரங்குறித்து மள்ளரெல்லாஞ்
சேரிக்குரவை யெழத் தெய்வநிலை போற்றினரே (31)

என பள்ளர்கள் தெய்வத்தை வேண்டினர் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் திருமக்காப் பள்ளு நூலிலே மழை பெய்ய வேண்டும் என முறையாக நேர்த்திக்கடன் வைத்தனர் பள்ளியர் என அதன் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அக்கலிப்பா வருமாறு :

சட்டமுடன் நாட்டுவளஞ் சதிராகச் சொல்லியபின்
திட்டமாக நபிக்குச் சலாஞ்செப்பிப் பள்ளியர்கள்
அட்டதிக்குஞ் சூழ்ந்துகொண் டாகாச மழைபெய்யக்
கட்டளையாய் நேத்திக்கடன் காரணமாய்ச் செய்தாரே (43)

இங்கே சதிராக என்பது அழகாக எனப் பொருள்பட்டது. 'சதிராயிருந்த ரதி' என்கிறது ஒரு தனிப்பாடல். (தனிப்பாடற்றிரட்டு : 11 : 23)

மழை வேண்டிப் பாடிய சிந்து அடுத்ததாகத் திருமக்காப் பள்ளு நூலில் இடம் பெறுகின்றது. முக்கூடற் பள்ளு நூலில் உள்ளது போல் இந்தச் சிந்தும் புன்னாகவராளி இராகத்திலும் அட தாளத்திலும் பாடக்கூடியதாக அமைந்துள்ளது.

அல்லா வொருவனை யஞ்சுநேரந் தான்தொழுதார்
நல்லறம்ளான் மாதத்திலே நாயனுக்கு நோன்பு இருந்தார்
காட்சியா யாதிநபிக்குக் கலிமாச்சொலி தான்பணிந்தார்
சூட்சியாய் இசுமாயில் நபிக்குச் சூட்டுக்கறி ஆக்கிவைத்தார்
பந்தனமாய் ரொட்டிசுட்டுப் பணிந்தார் முகியிதீனை
சொந்தமுட னபூபக்கர்க்குச் சோறுகறியாக்கி வைத்தார்
உகந்து நேத்திக்கடன் கொடுத்தே உமறுகத்தாவைப் பணிந்தார்
புகழ்ந்து துமானார் சாய்பைப் பொறுமையுடன் தான் பணிந்து
பத்திவைத்து அலியார் பீவிக்குப் பால்சோறு ஆக்கிவைத்து
உத்த அசனுசைனாருக்கு உரிமையாய்ப் பானக்கம் வைத்தார்
காரணக் காதிரொலிக்குக் கந்திரியாக்கித் தான் பணிந்தார்
பூரணமாய்க் காட்டுவாவுக்குப் புதுச்சந்தனக் குடமெடுத்தார்
பொங்கிவைத்த மீறாசாய்புக்குப் புதுமையுடன் தான் பணிந்தார்
இங்கிதமாய் துவாவுஞ் சொல்லி யீசாநபியைத்தான் பணிந்தார்
நேத்தியாய்ப் பூப்பழமும் வைத்து நெயினாரைத்தான் பணிந்தார்
வாழ்த்தி மிகதுவாவோதி மதாறு சாய்பைத்தான் பணிந்தார்
சீருடனே கறிசமைத்துச் சிக்கந்தரைத் தான் பணிந்தார்
பேருடனே யிபுறாம்சாய்பைப் பிலாச்சோ றாக்கித்தான் பணிந்தார்
செல்வமுடன் தீன்கள்கூறி சேகாதிசாய்பைப் பணிந்தார்
சொல்லுறுதி யாய்நினைந்து சுல்தான் சாய்பைத் தான்பணிந்தார்
சட்டமாய்ச் சாம்பிறாணியிட்டுச் சதகத்துல்லாவைப் பணிந்தார்
அட்டதிக்கு விளங்கும் எல்லா அவுலியாக் களைத்தான் பணிந்தார்
ஓதிவரும் லெப்பைமாரையும் அதபுடன் றான்பணிந்தார்
ஆதிநபியாண்டவரி னடிமையான பள்ளியர்கள் (44)

இங்கே சூட்டுக்கறி என்னும் சொற்றொடர் வந்துள்ளது. இஸ்மாயீல் நபிக்குச் சூட்டுக்கறி ஆக்கிவைத்தார் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. சூட்டுக்கறி என்பது தமிழ்நாட்டில் பக்றீத் பண்டிகையைக்

குறிக்கும். பெரிய பண்டிகையான இது ஹஜ்ஜுப் பெருநாள்ப் பண்டிகையைச் சுட்டும். இஸ்மாயீல் நபி (அலை) அவர்களை அவர்களுடைய தகப்பனார் இப்றாகீம் நபி (அலை) அவர்கள் பலியிட முயன்றதை நினைவுகூருமுகமாக இவ்விழா கொண்டாடப்படுகிறது. இங்கே ஆடு பலியிடப்பட்டது. ஆதலினால்தான் போலும் தமிழ் நாட்டு முஸ்லிம்கள் ஹஜ் பெருநாள் என்னும் பக்றீத் பண்டிகையைச் சூட்டுக்கறி விழா என்றழைப்பர். இம்மாத நோன்பைச் சூட்டுக்கறி நோன்பு என்றும் அழைப்பர்.

மற்றச்சொல் பானக்கம் என்பது பானக்கம் என்றால் இனிமையாகத் தயாரிக்கப்பட்ட பானம் என்பது பொருள். கந்தூரி என்பது கந்திரி என விழாவைக் குறிக்கின்றது. அதபு என்பது ஒழுக்கத்தைக் குறிக்கும் அறபுச் சொல்லாகும். பள்ளிவாசல்களிலே கருமமாற்றுபவர்களை லெப்பைமார் என வழங்குவதுபற்றி முன்னர் குறிப்பிடப் பட்டுள்ளது.

பள்ளியரின் வேண்டுகோள் நிறைவேற்றப்பட்டது. மழை பெய்யும் அறிகுறி தென்பட்டது. முக்கூடற் பள்ளு அதனை இவ்வாறு குறிப்பிடுகிறது.

...... ...... ...... சேரிப்பள்ளரெல்லாம்
புத்தியுடன் தெய்வநிலை போற்றியபின் வானமுகில்
எத்திசையும் பெய்யமழை யின்குறி உண்டாகியதே (44)

திருமக்கத்துப் பள்ளு அதனை இவ்வாறு அறிமுகப்படுத்துகிறது.

போற்றியபின் நாயனுட புதுமையாய்ப் பூமியெங்குஞ்
சூத்திரமாய்க் கார்மேகஞ் சூழ்ந்து மிருட்டானதுவே
வாழ்த்திப புகழ்ந்து இன்னிசை நபியைப் பணிந்து
நேத்தியுடன் பெய்யுமழை நினைவறிந்து சொன்னாரே (45)

அடுத்து இடம் பெற்றுள்ளது மழைக்குறியோர்தல் சிந்து. முக்கூடல் பள்ளு அதனை மழைக்குறி எனத் தலைப்பிட்டுள்ளது. இரண்டுக்கும் அடதாளம்; ஆனந்தபைரவி ராகம். திருமக்காப் பள்ளு நூலிலே மழை பெய்வதற்கான பல அறிகுறிகள் சுட்டப்படுகின்றன.

வாடைக்காற்று நேற்றுமின்று
மோடிவீசுது - வானம்
வரிசைநபி கிருபையாலே
உருமிமின்னுது

சாடையா யன்றிலும் பேடும்
கூடிப்பேசுது - கேணித்
தண்ணீர்த் தவளையெல்லா
முன்னிச் சொல்லுது

ஓடைநண்டு சேற்றையள்ளி
மூடிக்கொள்ளுது—மழை
ஊற்றெடுத்துப் பேயும் போல
தோற்றுது பள்ளா
நாடெலாம் பணியுகின்ற
நபியிறசூல் பண்ணை
நாமல்லவோ பாத்திடுவோம்
நேமமுடனே (46)

இட்டமழைபெய்து வெள்ளங்
குட்டந்தத்தியே—வயல்
ஏகனபி கிருபையால்மும்
போகம் விளையும்
கட்டெறும்பு முட்டைகொண்டு
திட்டுமேறுது—பயிர்கள்
காட்சி பார்க்கும் காலமிப்போ
தாச்சுது பாராய்
குட்டந்தன்னில் மச்சமிட்ட
முட்டைபொரித்து—மிகக்
கூடுமீனைப் பிடிக்கவலை
தேடுவோம் வாராய்
அட்டதிக்கு வெற்றிபெற்ற
வட்டமங்குலக்—குடை
ஆதிநபிகிருபையுண்டெப்
போதும் நமக்கே (47)

முக்கூடல் பள்ளிலே இரண்டு சிந்துப் பாடல்களைக்கொண்ட மழைக்குறி திருமக்காப் பள்ளிலே நான்கு பாடல்களைக் கொண்டுள்ளது. மூன்றாவது பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

கங்கையளவு மில்லாமல்
பொங்கித் தாமரைக்—குலம்
தத்தளிக்கச் சாயும்வெள்ள
முத்தக் குடும்பா
கொங்கணித் தாழைக்குடை
யுங்குத்துக்கம்பு—மண்வெட்டி
கொண்டுபோய் கம்மாய் ஓரத்தில்
ஒண்டுடுவேன் பள்ளி
மங்கையொளிவுப் பள்ளி
செங்கனிவாயைத் திறந்து
வாருங்கான் குடும்பனாரே
சோறுவுண் ணென்றாள்

தங்கவூஞ்ச லாடிவரும்
எங்கள்நபி—ஆண்டவரைச்
சலாஞ் சொல்லிப் பணிந்தவர்க்குப்
பலன்கள் வருமே. (48)

முக்கூடற் பள்ளுப் பாடலில் சில பகுதி இவ்வாறு அமைந்துள்ளது.

......... ......... ......... .........
நேற்று மின்றுங் கொம்பு சுற்றிக்
காற்ற டிக்குதே—கேணி
நீர்ப்படு சொறித்தவளை
கூப்பிடுகுதே
சேற்று நண்டு சேற்றில் வளை
ஏற்றடைக்குதே—மழை
தேடியொரு சோடி வானம்
பாடியாடுதே
......... ......... ......... ......... (35)

மழைக்காலம் வருவதால் நாம் இன்ன இன்ன செயல்களைச் செய்யவேண்டும். இன்ன இன்னவற்றை அதற்காக ஒன்று சேர்க்க வேண்டும். இச்செய்திகளை நான்காம் பாடலில் காணலாம்.

பந்தமும் விளக்கெண்ணையும்
முந்தவே வேணும்—குடும்பா
பாங்குடனே யார்நமக்கு
வாங்கித் தருவார்
எந்தவேளையு கண்மாயில்
அந்திசந்தி—காத்திருந்தால்
ஏத்துமீனேறிக் குதிக்கும்
பார்த்துப் பிடிப்போம்
செந்தாழை நெல்விளையும்
இந்தவருஷம்—பள்ளி
செங்கிடா யறுத்து நாங்கள்
பங்கு போடுவோம்
சொந்தமுகம்மது பத
விந்தம் பணிந்து—நிதந்
தொழுதுவர நமக்குமொரு
பழுதுமிலையே (49)

முக்கூடற் பள்ளு நூலிலே மழைபெய்தல் குறிப்பிடப்படுகிறது. அதனை அடுத்து ஆற்று வரவு சுட்டப்பட்டுள்ளது. குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என ஐந்திணை நிலங்களும் வருணிக்கப்

பட்டுள்ளன. ஆனால் இவற்றிற்கு சமமான வருணனைகள் திருமக்காப் பள்ளு நூலில் இடம் பெறவில்லை. திருமக்காப் பள்ளு மழைக் குறியோர்தலைத் தொடர்ந்து ஆசிரியர் வெள்ளச்சிந்து பாடியுள்ளார். முக்கூடற் பள்ளில் ஆற்று வெள்ளம் பெரிய ஆறு, சிற்றாறு என இரண்டாகப் பகுக்கப்பட்டு இரண்டு சிந்துப் பாடல் களில் வருணிக்கப்பட்டுள்ளது. திருமக்காப் பள்ளு என்னும் நூலிலே ஒரே பாடலாக இடம் பெற்றுள்ளது. அதற்கான கலிப்பா இவ்வாறு அமைந்துள்ளது.

சூட்டுதலாய் வந்தமழை சோவென்று பெய்தவுடன்
காட்டில் புலிகடுவாய் கதறிமிக வேபதுங்க
நாட்டின் மக்கமதீனமதில் நபியிறசூல் தண்ணருளால்
மேட்டுத் திடலறுத்து வெள்ளங்கள் சாய்ந்ததுவே (50)

இதனைத் தொடர்ந்து இடம் பெற்றுள்ள வெள்ளச்சிந்து கேதார கௌள இராகத்தில் அடதாளத்தில் பாடக்கூடியதாக அமைந்துள்ளது. ஆனால் முக்கூடல் பள்ளு நூலில் இடம் பெற்றுள்ள ஆற்று வெள்ளம் காம்போதி இராகத்தில் அடதாளத்தில் பாடக்கூடியதாக அமைந் துள்ளது. திருமக்காப் பள்ளு நூலில் இடம் பெற்றுள்ள வெள்ளச் சிந்து இவ்வாறு அமைந்துள்ளது.

வரிசை யாற்றில் வெள்ளங்கள் மிகப்
பெருகி யோடப் பள்ளங்கள்
வண்டலடித்து மணலைத் திரட்டிக்
கொண்டுகரையிற் சேரவே

உருமியிரைந்து மதிரவேவனஞ்
செருமிப் பரந்து சிதறவே
உயர்ந்த மரத்திலடைந்த குளவி
அயர்ந்து விழுந்து தேரவே

தருமம் பெருகு மக்க மதீனம்
தாமரைக்குளம் நிறையவே
தட்டிக்கலுங்கை முட்டித் தழுப்பி
வெட்டுக் குழியில் அமர்ந்ததே

மருவடிகன வெள்ளந் திரண்டு
பெருமடைக்களைத் தாண்டியே
மறுகால் பிடுங்கி தண்ணீர் சாய்கிற
வளமைபாடும் பள்ளீரே (51)

மற்றும் இரண்டு பாடல்களில் வெள்ளத்தின் தன்மையைப் பாடிய திருமக்காப் பள்ளு ஆசிரியர் நான்காவது பாடலில் மீன் வகைகளைக் குறிப்பிட்டுள்ளார். முக்கூடற் பள்ளு நூலிலும் ஒரு (51-ஆம்) பாட லில் வெள்ளத்தில் வந்த மீன்களின் வகைகள் விவரிக்கப்பட்டுள்ளது. திருமக்காப் பள்ளு மீன்கள் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளன,

நல்லமகர மீன்கள் திருக்கை
பல்லுக் கெண்டைகள் தொண்டைமீன்
நகரி சேரி வேளா மணலி
பகருஞ் சுறாவுஞ் சீலா மீன்
உல்ல மீனுடன் சாவாளைபல
வூழிகீழி தேழி மீன்

உடகன் பன்னா சாளைகூனி
யோடுவாவலு தேடுமீன்
செல்லவாழை கட்டா குதிப்பு
சீரா பஞ்சாலை யாறா மீன்
சேற்ற மணலை உழுவை குரவை
சினைக்கெளிறுடன் கூனக் கெண்டை

மெல்லத்துள்ளு மயிரையும் விறால்
சள்ளை கத்தளை முட்டி மீன்
விலாங்கு நெத்திலி நெய்க் கோலாவுடன்
றுலங்கு மாங்காச் சூடையும்

அல்லாநபி நால்வேத முறையி
லடுத்திடும் பல மீன்களும்
ஆமீன் கூறி தண்ணீரின் முங்கும்
அழகைப் பாரும் பள்ளீரே (54)

வெள்ளத்தின் சிறப்புக் கூறிய பின்னர் திருமக்காப் பள்ளு நூலில் பறவைகள் பற்றிய ஒரு செய்தி வந்துள்ளது. கண்மாய் என்று அழைக்கப்படும் நீர்நிலையில் மீன்களை மேய்வதற்கு அங்கு பட்சிகள் வந்தன. அதனை ஒரு விருத்தப்பாவில் வருணித்து அறிமுகப்படுத்தி உள்ளார் ஆசிரியர்.

தக்கமாய்ப் பள்ளனுமீன் சாய்ந்தவகை சொன்னதற்பின்
சொக்காரப் பள்ளிகளுஞ் சொல்லுறுதி யாய்மகிழ
மக்கநபி யாண்டவர்தன வளம்பெருகுங் கண்மாயின்
மெய்க்கவே பட்சிவந்து மேய்ந்தவகை சொல்வேனே (55)

ஆனால் பறவை வருகை பற்றிய அறிமுகப்பாடலோ பறவைச் சிந்தோ முக்கூடற் பள்ளு நூலில் இடம் பெறவில்லை. திருமக்காப் பள்ளு நூலில் உள்ள பறவைச் சிந்து அட தாளத்தில் ஆனந்த பைரவி இராகத்தில் பாடக் கூடியதாக அமைந்துள்ளது.

அடுத்துக் கூறப்படுவது பண்ணையாள் வரவு. அதற்கான அறிமுகக் கலிப்பா இவ்வாறு அமைந்துள்ளது.

பேருடைய ஆதிநபி பிள்ளை நானென்று சொல்லி
யாரும் பயந்திடவே அதட்டி முகஞ்சினந்து
தாறுமாறாகவெகு தாட்டிமைகள் தான்பேசி
வீறுடனே நபி பண்ணை விசாரிப்பான் வந்தானே (57)

முக்கூடற் பள்ளு நூலில் உள்ள பண்ணைக்காரன் வரவு கூறும் கொச்சகக் கலிப்பாவின் இறுதி அடி

வீறுதரும் பண்ணை விசாரிப்பான் வந்தானே

என அமைந்துள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

திருமக்காப் பள்ளு நூலில் பண்ணையான் வரவுச் சிந்து அட தாளத்தில் பந்துவராளி இராகத்தில் பாடக் கூடியதாக அமைந்துள்ளது. ஆனால் முக்கூடற் பள்ளு நூலில் பண்ணைக்காரன் வரவுச் சிந்து ஆதி தாளத்தில் பைரவி இராகத்தில் பாடக்கூடியதாகப் பாடப் பட்டுள்ளது. திருமக்காப் பள்ளு நூலில் உள்ள பண்ணையான் வரவுச் சிந்து ஐந்து பாடல்களைக் கொண்டிருக்க முக்கூடற் பள்ளு இரண்டு பாடல்களையே கொண்டுள்ளது.

திருமக்காப் பள்ளுப் பண்ணைக்காரன் வரவுச் சிந்து இவ்வாறு அமைந்துள்ளது.

அங்கமதிற் சங்குமணித்
தான்இலங்க - பூமி
யதிரநடந்துகாலை
யதரிக் கொண்டு

செங்கையாற் சலாங்கொடுத்து
தீன்கூறியே நபிக்கு
கங்கணமாய்ப் பிச்சர்
பண்ணைக்காரனும் வந்தான் (58)

மேலிலங்க வங்கியும் பொன்
சாலுவையுஞ் சருகை
வேலையிட்டுச் செய்ததொப்பி
தலையில் வைத்து

காலிலே சோடு மிதித்துக்
கோலுங் கையிலே பிடித்து
காரணமாய்ப் பிச்சர் பண்ணைக்
காரனும் வந்தான் (59)

தலையசைப் புஞ்சரிந்து நீண்ட
தாடியுமாக இடையிற்
றமானும் பட்டையரைஞாண்
தானிலங்க

பலபல வனப்புகளும்
மனதில் வைத்து வெகு
பாங்கான பிச்சர் பண்ணைக்
காரனும் வந்தான் (60)

மண்டியிட்டே யடிக்கடி
சலாங்கொடுத்து நல்ல
வணங்கி நபியைத் தொழுது
பிரியமுடனே
கண்டபேர் பயந்திட
வண்டுறுக்கி நடந்து
கடிதான பிச்சர் பண்ணைக்
காரனும் வந்தான் (61)

வயிரச்சன்னம் பதித்த
மோதிரமாய் கழுத்தில்
மாணிக்கக் கண்டசரஞ்
தானிலங்க
உயிர்க்குயிராய் காக்குமாதி
நபியைத் தேடி
உல்லாசமாய்ப் பிச்சர் பண்ணைக்
காரனும் வந்தான் (62)

தமான் என்பது காற்சட்டை என்றும் சோனகர் அணியும் அங்கி வகை என்றும் கூறப்பட்டுள்ளது. வண்டுறுக்கி என்பது திருநெல் வேலி மாவட்டச் சொல் வழக்கு. உதட்டை மடக்கிக் கடித்து என்பதே வண்டுறுக்கி என்பதனால் சுட்டப்பட்டுள்ளது. அடதாளம புன்னாக வராளி இராகத்தில் பாடக்கூடிய மற்றொரு சிந்து திருமக்காப் பள்ளு நூலில் இடம் பெற்றுள்ளது. அது பண்ணையான் நபியைப் போற் றும் பாடலாக அமைந்துள்ளது முக்கூடற் பள்ளு நூலில் பண்ணைக் காரன் வரவுக்குப் பின்னர் மூத்தபள்ளி முறையிடுதல் முதலியன இடம் பெறுகின்றன. ஆனால் திருமக்காப் பள்ளு நூலிலோவெனின் பண்ணையார் நபியைப் போற்றும் சிந்தினைத் தொடர்ந்து தோணி யோட்டுவோர் வரவு கூறப்படுகிறது.

தோணியோட்டுவோர் வரவு இவ்வாறு அறிமுகப்படுத்தப் படுகிறது.

வணக்கமிட்ட பிச்சயர்க்கு வாக்கருளி ஆதிநபி
கணக்குடனே பண்ணைகளைப் பார்க்க வேணும் என்றார்
இணக்கமாய் நதிகடக்க ஏவலாட்க டானுமொரு
கணப்பொழுதிற் றோணியிட்டுச் சந்திக்க வந்தாரே. (65)

தோணியோட்டுவோர் வரவு பற்றிய சிந்து அடதாளத்தில் பந்துவராளி முடுகுத் தாளத்தில் பாடக்கூடியதாக அமைந்துள்ளது. இத்தொகுதி பதினொரு பாடல்களைக் கொண்டு அமைந்துள்ளது. அவற்றுள் ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

சல்லடங்கள் தானுடுத்தி
அங்கியிட்டுச் சரிகை
சல்லாவும் வல்லவட்டும்
உல்லாசமாய்

வல்லமைகளாய் நடந்து
மக்காவினில் வெகு
வரிசையாய்த் தோணி
கொண்டுவந்தனரே (66)

சல்லடம் என்பது இடுப்பினின்று அடித்தொடை வரை தரிக்கும் காற்சட்டை. சல்லா என்பதன் பொருள் மெல்லிய துணிவகை என்பதாகும்.

எல்லோரும் தோணிகளிலே செல்கின்றனர். தோணிகளில் செல்லும்பொழுது கப்பற்சிந்து முதலியன பாடுதல் மரபு. அதனையும் இங்கு குறிப்பிட்டுள்ளார் மக்காப் பள்ளு ஆசிரியர். அதனை இவ்வாறு ஒரு விருத்தப் பாடலில் அறிமுகப்படுத்தி உள்ளார்.

காணிக்கை கொண்டவரைக் காண்கவந்த போதகர்க்கு
மாணிக்கத் தாவடத்தை வாரியவர்க்கே கொடுத்தார்
ஆணிமுத் தானநபி ஆண்டவரைத் தான்தொழுது
தோணிதனி லேறிச் சுக்கானைத் தள்ளுமென்றார் (78)

இனி கப்பற் சிந்தின் ஒரு பகுதியை எடுத்துக் கொள்வோம்.

ஏலஏலோ ஏலஏலோ - இல்லல்லா
இறசூல்நபி முகம்மதா.
ஆலநபி பண்ணைகளைப் பார்க்கும்
அதிகாரி பிச்சருமே
காலந்தன்னில் ஆறுகடக்கத் தோணிக்
காரனையுந்தான் பார்த்து
பாலைவனங் கண்மாய்முத லெங்கும்
பரவுதுகாண் வெள்ள மென்றார்
சோலைகடந் தாற்றோரம் வந்து
தோணியின் மேல் தானேறி

( துள்ளல் )

பூலோகம் வாழ்த்து நபியார் தன்னைப் போற்றி
பொங்கமாய்த் தோணி வெகு சிங்கார நேர்த்தி
மேலாகப் பாய்மரம் விரித்து மேற்பூட்டி
விதவிதமாய் விருதுக்கொடி தன்னையும் நாட்டி

நீலகார் மேகம்போல் வரிசையாறு பொங்கி
நீச்சு நிலையில்லாமற் றோணியது முங்கி
மூலகாரணமான அப்துல்லா மகனார்
முகம்மது றசூல்நபி பாதமே போற்றி
—ஏலஏலலோ (79)

இத்தகைய வேறு மூன்று பாடல்கள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன.

முக்கூடற் பள்ளு நூலில் பண்ணைக்காரன் வரவுக்கு அடுத்ததாக உள்ளது மூத்த பள்ளியின் முறையீடாகும். திருமக்காப் பள்ளு நூலில் கப்பற்சிந்துக்கு அடுத்ததாக உள்ளது பண்ணையனைப் பள்ளியர் போற்றல் என்பதாகும். அதனை ஒரு கலிப்பாவில் இவ்வாறு அறிமுகப்படுத்தியுள்ளார் அதன் ஆசிரியர். இங்கே பள்ளரும் பள்ளியரும் போற்றுவதாக அமைந்துள்ள இக்கலிப்பா.

வள்ளந்தனி லேறிவந்த பிச்சா பண்ணைக்காரனங்கே
வேளாண்மை செய்வதற்கு வேலையாள் எங்கே என்றான்
உள்ளமிக வுருகி உமதடிமை நாங்களென்று
பள்ளனும் பள்ளியரும் பாதம் பணிந்தாரே (83)

பண்ணையனைப் பள்ளனும் பள்ளியரும் போற்றுவதாக அமைந்துள்ள சிந்துப் பாடல் இவ்வாறு இடம பெற்றுள்ளது.

நாங்கள் உமதடிமை நபிறசூல் வர்க்கத்தாலே
நீங்களிங்கே வருவீரென்று நேத்திக்கடன் நேர்ந்தோம் சாய்பே
துணிவாக யெங்களை நீர்சொந்தமாய்க் காக்கவென்று
மணியம் விசாரணையாக வந்தீர் நல்ல பாக்யஞ் சாய்பே
ஆசாரமாக வந்தீர் ஆண்டவர்க்குப் பிள்ளையென்று
கூசாமற் பண்ணைவகை கூறுவீர் வேலைசெய்ய சாய்பே
முத்தொளிவான நபியார் முத்திரை பெற்றுவந்த சாய்பே
பத்திரமாய் நீர்தான் சொல்லும் பண்ணை வேலைசெய்வோம்
சாய்பே

மானிடநபிக்கு நல்ல மந்திரியென்றிங்கு வந்தீர்
கானகத்தி லெங்களையும் கருணைவைத்துக் காப்பீர் சாய்பே
நீதமாய்ப் பண்ணை வைக்க நிச்சயமென்றிங்கு வந்தீர்
பாதத்தூளாய் நடந்துகொண்டு பணிவிடைகள் செய்வோம்
சாய்பே

லாயிலாஹா இல்லல்லாஹு முஹம்மதுர் றசூலுல்லாஹி
நாயனுதவி கொண்டு நபிபண்ணைகளைப் பார்ப்போம்
சாய்பே (84)

இதனைத் தொடர்வது பண்ணையானுக்கும் பள்ளனுக்கும் இடையே நடக்கும் உரையாடல். அதனை இவ்வாறு அறிமுகப்படுத்தியுள்ளார் திருமக்காப் பள்ளு ஆசிரியர்.

காபந்தாய் மேல்மணிய காரனென்று வந்தபிச்சர்
தாபந்த மேதுவினித் தாமதமேன் பள்ளியரே
சோபனங்களான சுபதினத்தில் ஏர்ப்பூட்டக்
கோபங்களாகக் குடும்பனையும் கண்டித்தார் (85)

இங்கே காபந்தாய் என்பது பாதுகாப்பதற்காய் என்று பொருள் படுகிறது. தாபந்தம் என்பது தாவந்தம் என்பதன் திரிபு. அதன் பொருள் சங்கடம் என்பதாகும். ஆதிதாளத்தில் ஆனந்த பைரவி இராகத்தில் பாடக்கூடிய ஒரு சிந்தில் பண்ணைக்காரனுக்கும் பள்ளனுக்கும் நடக்கும் உரையாடல் இடம் பெற்றுள்ளது.

பண்ணைக்காரன் கேள்வி கேட்கப் பள்ளன் விடையளிப்பதாக அமைந்துள்ளது இச் சிந்துப் பாடல். பண்ணையான் பள்ளனைப் பயிர் செய்ய வற்புறுத்துவதாகச் சமைந்துள்ளது இச்சிந்து.

இத்தனைநேரம் நீயெங்கு போனாய்
முத்தக்குடும்பா உனக்
கென்ன மகத்துவம்
சொல்லடாநீ முத்தக் குடும்பா

சித்தமிரங்கி தயவுசெய்யும்
பண்ணையாண்டே - நான்
செய்யும் பிழையைப் பொறுத்தருளும்
பண்ணையாண்டே

தாமிதமென்ன வயலுமுக
முத்தக்குடும்பா எங்கள்
சாய்புநபி மெத்தக்
கோபிக்கிறார் முத்தக்குடும்பா

நேமிய மாகப் பயிரிடுவேன்
பண்ணையாண்டே வெள்ளம்
நேற்றல்லோ வந்தது
பார்த்திடுவீர் பண்ணையாண்டே

மேல்வெள்ள மெத்தவருதுபார்
முத்தக்குடும்பா தண்ணீர்
வெட்டி விடுகரை
முட்டுதடா முத்தக்குடும்பா

ஆலநபியார் கிருபையுண்டு
பண்ணையாண்டே - கண்மாய்
அப்ப ழுக்கில்லாமற்
செப்பமிட்டேன் பண்ணையாண்டே

வாய்க்கால் வகுந்து
மடைகள் திற முத்தக்குடும்பா - இந்த
மாத்தையிலே பட்ட
மாச்சுதடா முத்தக்குடும்பா

பாயுது தண்ணீரும் எங்குமே
பண்ணையாண்டே - மேற்
பத்துவய லெங்கும்
சுற்றுதுகாண் பண்ணையாண்டே

பண்ணைவயலைப் பரம்படிப்பாய்
முத்தக்குடும்பா - உரம்
பார்த்துத் தொழியிட்டு
நாத்துநடு முத்தக்குடும்பா

நிண்ணயமென்ன நீர்சொன்னபடி
பண்ணையாண்டே - கால்
நெடுகப் பரவி நடுவே
தெரிக்குது பண்ணையாண்டே

சொன்னதற்காகநீ யாம்
என்கிறாய் முத்தக்குடும்பா - உன்
சுட்டித்தனத்தையும்
விட்டுவிடு முத்தக்குடும்பா

என்னசெய்வேன் நான் ஒருத்தனுமே
பண்ணையாண்டே உமக்
கேற்க நடப்பேன் நீர்
காத்திடுவீர் பண்ணையாண்டே

காப்பார் முகம்மதிறசூல் நபியார்
முத்தக்குடும்பா அவர்
கண்டிப்பு மெத்தநான்
விண்டு சொன்னேன் முத்தக்குடும்பா

தீர்க்க மடியேன் பாடுமை
பண்ணையாண்டே நீர்
செப்பிய வேலையைச்
செய்திடுவேன் பண்ணையாண்டே (86)

திருமக்காப் பள்ளு நூலில் மூத்தபள்ளி பள்ளனை வற்புறுத்தல் செய்யும் சிந்து இடம் பெற்றுள்ளது. இதனைத் தொடர்ந்து பள்ள னுக்கும் மூத்தபள்ளிக்கும் நடைபெறும் உரையாடல் ஒரு சிந்துப் பாடலாக அமைந்துள்ளது. அதற்கு அடுத்த சிந்துப்பாடலில் பண்ணை யாரிடம் மூத்தபள்ளி முறையிடு செய்தல் இடம் பெற்றுள்ளது.

இத்தகைய பண்ணையாரிடம் மூத்தபள்ளி முறையிடுதலும் இளைய பள்ளி கூறுதலும் இடம் பெற்றுள்ளது.

மயில்போன்றவளை மயில் என்பர். மயிலின் நிறம் சற்றுக் கருமையாக இருக்கும் இதனால்தான் போலும் திருமக்காப் பள்ளு நூலில் மூத்தபள்ளி மயிலப்பள்ளி எனக் குறிப்பிடப்பட்டுள்ளாள். மூத்த பள்ளியான மயிலப்பள்ளி என்பவள் மக்காப்பள்ளி என்றும் இந்நூலில் சுட்டப்பட்டுள்ளாள். மூத்தபள்ளியாயினமையின் மக்காப்பள்ளி என்றாள். நபிகள் நாயகம் பிறந்த ஊர் மக்கா பழமையானது. இஸ்லாத்துக்கு முன்னரும் புனிதத்தலமாகத் திகழ்ந்தது மக்கா. இன்றும் திகழ்ந்து கொண்டிருக்கிறது. எனவேதான் பழமையான மக்காவின் பெயரால் மூத்தபள்ளியை மக்கத்துப்பள்ளி எனச் சுட்டி உள்ளார்.

ஒளிவு என்றால் பிரகாசம் என்பது பொருள். ஒளியுடையவள் அழகானவள், எனவேதான் இளையபள்ளி ஒளிவுப்பள்ளி என அழைக்கப்பட்டாள். மயிலப்பள்ளியைவிட ஒளிவுப்பள்ளி அழகானவாளாயிருந்தாள். அதனால் மூத்தபள்ளியுடன் இருந்த பள்ளன் இளைய பள்ளியை விரும்பினான். இளையபள்ளி மதீனத்துப்பள்ளி என்றும் சுட்டப்பட்டாள். மக்க மாநகரத்தவர் முகம்மது நபி (சல்) அவர்களின் போதனைகளை எதிர்த்து அவர்களைத் துன்புறுத்தினார்கள். அது காரணமாக அவர்கள் மக்காவைத் துறந்து சென்றார்கள். மதீனாவுக்குப் போனார்கள். மதீனமாநகரத்தார் அவர்களை அன்புடன் வரவேற்றனர். எல்லா உதவிகளையும் செய்தனர். அதன் பயனாக இன்றும் மதீனாவாசிகள் உதவி செய்பவர் எனப் பொருள்படும் அன்சார்கள் என்று அழைக்கப்படுகின்றனர். இதனாலேயே இளைய பள்ளி என்னும் ஒளிவுப்பள்ளி என்பவள் மதீனத்துப்பள்ளி என இங்கே சுட்டப்பட்டுள்ளாள். பெருமானார் (சல்) அவர்களுக்குப் புகலிடம் அளித்தமையினால் மதீனமாநகரம் புகழ்பெற்றது. சிறப்புடன் விளங்குகிறது. திருமக்காப் பள்ளு ஆரிரியரும் அறபு நாட்டுப் பண்ணை ஒன்றை வருணிப்பதாக கற்பனை செய்துள்ளாராதலின் இரண்டு பள்ளியர்களையும் அறபு நாட்டுப் பெயர்களைக் கொண்டே அழைத்துள்ளார். மூத்தபள்ளியை மக்கத்துப்பள்ளி என்றும் இளைய பள்ளியை மதீனத்துப்பள்ளி என்றும் குறிப்பிட்டுள்ளார்.

திருமக்காப் பள்ளு நூலில் மூத்தபள்ளி சொல்வதாக ஒரு நொண்டிச் சிந்து அமைந்துள்ளது. அந்நொண்டிச் சிந்தின் ஒரு பகுதி இவ்வாறு அமைந்துள்ளது.

கள்ளார் நறுஞ்சோலை - மதீனத்துக்
கள்ளியெங்கே யிளையபள்ளியெங்கே
உள்ளார் வெறியுமெங்கே விளையாட்டி
னோட்டமெங்கே அவள் நாட்டமெங்கே

இளையாள் மயக்கமெங்கே யொளிவுட
　　இடுக்கையெங்கே அவள் படுக்கையெங்கே
பிழையா நெறியுமெங்கே உன்னுடைய
　　பித்துமெங்கே மணிமுத்து மெங்கே
செம்மலர் வாசமெங்கே யெங்களுடைய
　　சித்துமெங்கே சுகமுற்றுமெங்கே (105)

மூத்தபள்ளியின் செய்தியைக் கேட்டு பண்ணையார் பள்ளனைக் குட்டையில் இட்டான் பண்ணைக்காரன். இதனை அறிந்த இளைய பள்ளி பண்ணையாரிடம் சொல்வது ஒரு சிந்தாக இவ்வாறு அமைந் துள்ளது. அடதாளத்தில் புன்னாகவராளி இராகத்தில் பாடவேண்டிய சிந்துப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

மூத்தபள்ளி வார்த்தை கேட்டுப் பண்ணையாரே - யுங்கள்
　　மூத்தப் பள்ளனைக் குட்டை மாட்டினீரே
பார்த்தவர்க்குவெகு உண்மை காட்டியே கள்ளி - பண்ணை
　　பலசொத்தெடுத்துமவள் தாய்வழி சேர்த்தாள்
வார்த்தைகள் பேசித்தடுத்த நாண்முதல வளென்மேல்
　　வர்மம் வைத்துச் சிக்கிக் கள்ளியிப்படிச் செய்தாள்
போற்றும் நபி பண்ணையாரே நியாயங் கேட்டால் - வெகு
　　புண்யமுண்டு பள்ளனையும் விடுவிப்பீராண்டே (111)

இருவருடைய முறையீடும் முடிந்து பள்ளனும் விடுபட்டான். பண்ணையாண்டான் பள்ளனைக் காப்பாற்றிவிட்டான். பள்ளனும் பயிர் செய்ய முற்பட்டான். இதுவே ஒரு கலிப்பாவில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

வல்லமையாய்க் குட்டைதனின் மாட்டியதோர் பிச்சரிடம்
தொல்லை சொன்ன மயிலி பள்ளன் துயரத்தையுந் தான்கேட்டுப்
புல்லறிவாளன் தனக்குப் புத்திசொல்லி விளக்கியபின்
னெல்லைச் சதிராய்க் குடும்பன் ஏர்ப்பூட்டவே துணிந்தான் (116)

பள்ளன் பயிர் செய்ய முயலல் என்னும் தலைப்பில் திருமக்காப் பள்ளு நூலில் சிந்துப்பாடல் ஒன்று அமைந்துள்ளது. எல்லோரும் சேர்ந்து முயற்சியிலீடுபட்டனர். உழுவதற்காக ஒரு கலப்பை செய்தான் பள்ளன். காளையின் கழுத்தில் பூட்டப்படும் மரம் நுகம் எனப்படும். (புறநானூறு 102) அது நுகத்தால் என மாறி திருநெல்வெலிப் பகுதியில் நோக்கால் என வந்துள்ளது. இன்னபிறவும் இச்சிந்தில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

தோத்திரஞ்செய்து நபியைப்
போற்றிவணங்கிக் - குடும்பன்
சொந்தமாகப் பண்ணையுழத்
துணிந்து நடந்தான்

நேர்த்தியாய் நாற்றுநட
மூத்தபள்ளியும் - நபிக்கு
நேத்திக்கடன் செய்துமங்கே
வாழ்த்தி நடந்தாள்

சாடை சொல்லியே குடும்பன்
ஓடியேவந்து - பண்ணைத்
தனதாயுழு வேனென்று
மனதினினைந்தான்

பேடைமயிற்போல் ஒளிவும்
கூடியேவந்து - நபியைப்
பேணியே மனதில் வைத்துத்
தானும் நடந்தாள்

நந்தவனச்சோலை தன்னை
முந்த நடந்து - குடும்பன்
நாடிய காவுதனி
லோடிப் புகுந்தான்

சந்தன மரத்தை வெட்டி
கலப்பை செய்து - பெரு
சாதிக்காய் மரம் பிளந்தே
யேர்காலும் வைத்து

வேங்கை மரந் தன்னைவெட்டி
நோக்காலும் செய்தே - ஒரு
வில்வமர வைரத்தான்
மேழி செதுக்கி

பாங்கான பச்சைவர்ண
வடத்தைத் சுற்றி நல்ல
பத்தரை மாற்றுத் தங்கத்திற்
கொழுவும் சேர்த்தான் (117)

இவ்வாறு கூறிக்கொண்டே போகிறார் ஆசிரியர். பின்னர் பள்ளன் மீது மாடு பாய்கிறது. மாடு குத்திப் பள்ளனை நிலத்திலே தள்ளி விடுகிறது. இதனைக் கண்டு இரண்டு பள்ளியரும் வருத்தப்படு கின்றனர். மூத்தபள்ளி இவ்வாறு கூறினாள்.

அசலங் கணவியும் திண்புய தீரா - போர்முகத்தில்
ஆயிரமியானைகளையும் கொலும் வீரா
குசலமறி நெஞ்சுடையபள்ளா - எதிர்க்காமல்
குண்டையொன்றைத் தோற்றதென்ன விள்ளாய்
வசனமெந்தன் றள்ளிவிடப் புகுந்தா - யடிக்கடியே
மதினத்துப்பள்ளி சேர்க்கையின் மிகுந்தாய்
விசன மிகுவாச்சுதுன் னிலை பார்த்தே யுன்னையிப்போ
வெற்றிநபி ஆட்கொள்வார் வினைதீர்த்தே (119)

இளைய பள்ளியின் கூற்று இவ்வாறு அமைந்திருந்தது.

மண்டையிடியால் வருத்தப்படும்போதிற் கந்திரிசெய்
வல்லவனை நோக்கி நேர்ந்திடும் போதில்
அண்டர் தொழும் நாயன் எமைக்காத்தானே - நேர்ச்சைசெய
அதட்டியடித்தி டவேமுகம் பார்த்தானே
குண்டையொன்றுக் கிப்போதவன் தோற்றானே - மூத்தபள்ளி
குறைவாகச் சொல்லவும் பள்ளனேத்தானே
விண்டுசொல்லிற் காமவெறி தொட்டானே மக்கநபிமேல்
வெகுநாளாய் பாத்தியாக்கள் விட்டானே (120)

இங்கே அல்லாஹ்விடம் குறை இரந்து ஒரு அன்னதானம் செய்வது பாத்திகா என வழங்கப்படும். இதுவே இங்கு பாத்தியா என வந்துள்ளது.

அடுத்து இடம் பெறுவது களஞ்சியச் சிறப்புச் சிந்து. இங்கே, அல்லாஹ், நபிகள் பெருமானார், நான்கு கலிபாக்கள், பீவி அம்மையார், அசனுசைனார், முகியதீன் ஆண்டவர், நாகூர் ஆண்டவர் முதலிய பலர் புகழப்பட்டுள்ளனர். இதனைத் தொடர்ந்து இடம் பெறுவது விதைப்புச் சிந்து. விதைத்த பின் நடைபெற்றதாக இடம் பெற்றுள்ளது முகம்மது நபி (சல்) அவர்களின் பவனி வரவுச்சிந்து. இவ்வாறு விதைக்கப்பட்ட வயலைச் சொந்தக்காரர் பார்க்க வருவது போல் முகம்மது நபி (சல்) அவர்கள் வந்தார்கள் என்ற கற்பனைச் சித்திரம் ஒன்றைத் தீட்டி உள்ளார் திருமக்காப் பள்ளு ஆசிரியர். இப்பவனி வரவுச்சிந்து 130-வது பாடலாக அமைந்துள்ளது. அப்பால் நாற்று நடுதல் சிந்து, நீர்ப்பாய்ச்சல் பற்றிய சிந்து முதலியன திருமக்காப் பள்ளு நூலில் இடம் பெற்றுள்ளன.

அடுத்து வருவது ஏசற் சிந்து. மக்கத்துப் பள்ளியும் மதீனத்துப் பள்ளியும் ஒருவரை ஒருவர் தாக்கி ஏசிக் கொள்கின்றனர். ஒருவர் மற்றவரை ஏசும்பொழுது சிக்கி எனக் குறிப்பிடுகின்றனர். சிறுக்கி என்பது தான் சிக்கியாக மாறி இருத்தல்வேண்டும். இளம் பெண்ணை சிறுக்கி எனத் திருப்புகழ் 'சிறுக்கிகளுறவாமோ' (145) என்பதன் மூலம் குறிப்பிடுகிறது. வேலைக்காரி என்றும் அதற்குப் பொருள் கூறுவர். முதலில் ஏசலை அறிமுகம் செய்கிறார் ஆசிரியர்.

எவ்வாறு இருவருக்கும் இடையில் ஏசல் நடைபெற்றது என்பதை ஒரு விருத்தப்பா மூலம் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தந்திரமாகக் குடும்பன் தண்ணீர் வகுந்தபின்பு
முந்தியே சோறுகொண்டு மூத்தபள்ளிதான் கொடுத்தாள்
மந்திரியாம் பிச்சருட வார்த்தை மிகக் கேளாமல்
உந்திறமோ சமத்தியென்று வொளிவு சண்டை செய்தாளே (135)

இனி ஏசல் சிந்தை எடுத்துக் கொள்வோம்.

கெட்டியே மயிலியடி
மக்கத்துப்பள்ளி - சிக்கி
கேவலமோ நானுனக்கு
மக்கத்துப்பள்ளி
அட்டியென்னடி யொளிவே
மதினத்துப்பள்ளி - சிக்கி
ஆரறிய வந்தாயடி
மதீனத்துப்பள்ளி
எத்துவாய்பள்ளி மைலி
மக்கத்துப்பள்ளி - சிக்கி
ஏதடியுறவு மினி
மக்கத்துப்பள்ளி
தொத்திலே வந்தாய் வொளிவே
மதினத்துப்பள்ளி - பள்ளன்
சொந்தமோ உனக்குமட்டும்
மதீனத்துப்பள்ளி
ஆமடிசமத்தி மைலி
மக்கத்துப்பள்ளி - சிக்கி
யார்சொன்ன புத்தியடி
மக்கத்துப்பள்ளி
ஓமலிப் பேனடியொளிவே
மதீனத்துப்பள்ளி - சிக்கி
உனக்குப் பேசவாயுமுண்டோ
மதீனத்துப்பள்ளி
தக்கபடி புத்தி சொல்வேன்
மக்கத்துப்பள்ளி - சிக்கி
தாட்டிகமாய் பேசாதடி
மக்கத்துப்பள்ளி
சக்களத்தியே யொளிவே
மதினத்துப்பள்ளி - சிக்கி
சாடைகண்டு விலகித் கொள்வாய்
மதீனத்துப்பள்ளி

வெட்கமில்லையே மயிலி
மக்கத்துப்பள்ளி - சிக்கி
மேட்டுமைகள் பேசாதேடி
மக்கத்துப்பள்ளி
ஏக்கிறாயென்னடி யொளிவே
மதீனத்துப்பள்ளி - சிக்கி
என்னடி பகட்டுகிறாய்
மதீனத்துப்பள்ளி
சிக்கியென்றாயே மயிலி
மக்கத்துப்பள்ளி - ரெம்பச்
சீரழிந்துபோகாதடி
மக்கத்துப்பள்ளி
எக்கிப் பேசுறா யொளிவே
மதீனத்துப்பள்ளி - சிக்கி
எப்பொருளுங் கைக்கொண்டாயே
மதீனத்துப்பள்ளி
வாயிடும் பேனடி மயிலி
மக்கத்துப்பள்ளி - யொப்பன்
வாழ்க்கையை நானறியேனோ
மக்கத்துப்பள்ளி
தாயிதிக்காரியே யொளிவே
மதீனத்துப்பள்ளி - யுன்
தந்தைதாய் வாழ்க்கை யென்ன
மதீனத்துப்பள்ளி
சரிசரிப் போயே மயிலி
மக்கத்துப்பள்ளி - சிக்கி
சணத்திலேயுன் மயிர்பிடிப்பேன்
மக்கத்துப்பள்ளி
பரியாசமோ என்னடி வொளிவே
மதீனத்துப்பள்ளி - சிக்கி
பல்லுதிரவே யடிப்பேன்
மதீனத்துப்பள்ளி
மூர்க்கமென்னடி மயிலி
மக்கத்துப்பள்ளி - சிக்கி
முந்தியேன் சோறுகொடுத்தாய்
மக்கத்துப்பள்ளி
தீர்க்கமில்லையோ யொளிவே
மதீனத்துப்பள்ளி பிச்சர்
செய்தியை யறிந்திலையோ
மதீனத்துப்பள்ளி (136)

இவ்வாறு தத்தம் சொந்தக் குறைபாடுகளைச் சுட்டியே மக்கத்துப் பள்ளியும் மதீனத்துப்பள்ளியும் ஒருவரை ஒருவர் ஏசினர். இறுதியில் பண்ணைக்காரன் தலையீட்டால் இருவரும் ஒற்றுமையாய் பள்ளனுடன் சேர்ந்து கருமமாற்ற இணங்கினர்.

திருமக்காப் பள்ளு நூலில் உள்ள ஏசற் சிந்திலிருந்து சற்று வேறுபட்டுள்ளது முக்கூடற் பள்ளு நூலில் இடப் பெற்றுள்ள பள்ளியருக்கிடையிலான ஏசற் சிந்து. முக்கூடற் பள்ளு நூலில் இடம் பெற்றுள்ள பள்ளியர் ஏசலில் பள்ளியர் இருவரும் ஒருவர் மற்றவருடைய தனிப்பட்ட குறைகளைச் சுட்டிக் காட்டுவதாக ஏசல் சிந்தின் ஆரம்பம் அமைந்துள்ளது. அவற்றுள் சில இவ்வாறு அமைந்துள்ளன.

முண்டை முறையிட்டதென்ன
முக்கூடற்பள்ளி - உங்கள்
மூப்புச்சொல் எனக்குத்தந்தால்
மூதலியடி
தொண்டைகட்டிக் கூப்பிடாதே
கூப்பிட்டு என்னை - வைது
சொன்னபேச்சைப் பண்ணையார்க்குச்
சொல்லுவேண்டி (152)
சொன்னாலெனக் கென்னபயம்
மருதூர்ப்பள்ளி - சென்று
சொல்லிலுன் காசுசெல்லாது
சொல்லடி போடி
என்னாலேயா காததுண்டோ
முக்கூடற்பள்ளி - பள்ளன்
இங்குவந்தால் உன்சலுகை
எல்லாந் தெரியும் (153)
சலுகையில்லாம லென்ன
மருதூர்ப் பள்ளி - நானும்
தன்னூர்விட்டுன் போல ஒட்டுச்
சாய்ப்பில் வந்தேனோ
வலுச்சலுகை பேசாதேநீ
முக்கூடற் பள்ளி - உன்போல்
வழக்கிட்டுக் கணக்கிட்டு
வந்தேனோ போடி (154)
வழக்கிட்டு நான்வந்தேனோ
மருதூர்ப்பள்ளி - பள்ளர்
மாமன்மகள் என்றென்னை
மறித்துக் கொண்டான்

உழக்கிற் கிழக்குமேற்கோ
முக்கூடற் பள்ளி - மறித்து
உன்னைக்கொண்டான் என்னைக் கண்டென்
னூரிலே வந்தான்

முதலில் சொந்தக் குறைபாடுகளை எடுத்துக் காட்டி இருவரும் ஒருவரையொருவர் ஏசிக்கொண்ட பின்னர் அப்பள்ளியருடைய ஏசல் சமயச் சார்புடையதாக மாறியது. முக்கூடற் பள்ளி வைணவ சமயத்தைச் சேர்ந்தவள். இளையபள்ளியான மருதூர்ப்பள்ளி சைவ சமயத்தைச் சார்ந்தவள். ஒருவர் மற்றவருடைய சமயத்தையும் சமயப் பெரியார்களையும் தாக்கி ஏசமுற்பட்டனர். முக்கூடற் பள்ளி சைவத்தைத் தாக்கி ஏச மருதூர்ப்பள்ளி வைணவத்தைத் தாக்கி ஏசினாள். இந்த ஏசலில் கிண்டல் பேச்சு பிரதான இடம் பெறுவதைக் காணலாம். ஒவ்வொரு ஏசல் சிந்திலும் முதல் பகுதி மூத்தபள்ளியான முக்கூடற் பள்ளியின் கூற்றாகவும் இரண்டாம் பகுதி இளையபள்ளி யான மருதூர்ப் பள்ளியின் கூற்றாகவும் அமைந்துள்ளன.

சாதிப்பது உனக்குவரும்
மருதூர்ப் பள்ளி - நரிதான்
பரியாய்ச்சா தித்தான்உங்கள்
சம்புவல்லோடி
பேதிக்கச் சாதிக்க வாராய்
முக்கூடற்பள்ளி - கல்லைப்
பெண்ணாகச்சா தித்தானுங்கள்
கண்ணனல் லோடி. (161)

மங்கையோடு பங்கிருக்க
யோகியென்றுதான் - கையில்
மழுவேந்தி நின்றான் உங்கள்
மத்தனல்லோடி
கொங்கைதனில் நாச்சியாரைச்
கங்கையில்லாமல் - பண்டு
கூடிநெய்யில் கையிட்டானுங்
கொண்டனல்லோடி (162)

ஏறவொரு வாகனமும்
இல்லாமையினால் - மாட்டில்
ஏறியே திரிந்தானுங்கள்
ஈசனல்லோடி
வீறுசொன்ன தென்னமாடு
தானுமில்லாமல் - பட்சி
மீதிலேறிக் கொண்டானுங்கள்
கீதனல்லோடி (170)

இவ்வாறு கிண்டல் செய்வதுபோல் முக்கூடல் பள்ளு ஏசல் சிந்து அமைந்திருந்தபோதிலும் அவற்றிலுள்ள குறிப்புக்கள் புகழாப் புகழ்ச்சியாய் அமைந்துள்ளமையும் புலப்படுகின்றது.

திருமக்காப் பள்ளு நூலில் இடம்பெற்ற ஏசற்சிந்தைத் தொடர்ந்து அறுவடையைப் பற்றிய சிந்து இடம் பெற்றுள்ளது. கதிரறுப்பு தொங்கற் சிந்து என அது பெயரிடப்பட்டுள்ளது. ஆதி தாளத்தில் நாட்டை இராகத்தில் பாடக்கூடியது அச்சிந்து. அல்லாஹ், நபி, இறைநேசர் எல்லோரும் அங்கு போற்றப்படுகின்றனர். அதனைத் தொடர்ந்து கணக்குரைத்தல் சிந்து இடம் பெற்றுள்ளது. அறுவடை எவ்வளவு என்றும் அந்த அளவு எவ்வாறு பலரிடை பகிர்ந்து அளிக்கப் பட்டது என்பதும் கணக்குரைத்தல் சிந்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. இங்கே கோட்டை என்னும் முகத்தல் அளவை பேசப்பட்டுள்ளது. ஒரு கோட்டை என்பது 21 மரக்கால் கொண்ட ஒரு முகத்தலளவை என திருநெல்வேலி மாவட்டக் கெஸட்டீயர் (1 : 238) குறிப்பிடுகிறது. திருமக்காப் பள்ளி மொத்த அறுவடை 'ஆறுகோடி எண்பத்து நான்கு நூறாயிரத்தெழுநூறுஞ் சொச்சங் கோட்டை' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அடதாளத்தில் சங்கராபரண இராகத்தில் பாட அமைந்துள்ள கணக்குரைத்தல் சிந்து இவ்வாறு ஆரம்பமாகிறது.

ஆதிமக்கநபியின் கிருபைகொண்டு
　　ஆறுகோடியுமெண்பத்து நான்குநூ
　　　　றாயிரத்தெழுநூறுஞ் சொச்சங் கோட்டை
　　　　　　யான நெல்லில் வல்லாண்டவன் பேருக்குப்

பாதியைப் பாத்தியாவுக் களந்தினிப்
　　பாதியில் நன்னபிஷயப் புகழும்
　　　　பாவலர்க்குமளந்து கொடுத்த நெல்
　　　　　　பத்துலட்சத் தீராயிரங் கோட்டை

ஏதுமற்ற அகதிபரதேசி
　　எளியவர்கட்கு மெண்ணாயிரங்கோட்டை
　　　　ஏர்ச்சுதந்திரக் கம்மாளர் தங்கட்கு
　　　　　　எழுபதினாயிரங் கோட்டையளந்தேன்

கோதிலா நற்புலன்களுழுத நங்
　　குடும்பத்தார்க்கேழு நூறாயிரங் கோட்டை
　　　　குளம்பழுதுகள் பார்த்த வகையிலும்
　　　　　　கூலிக்காயிரங் கோட்டையுண் டாண்டே (140)

இவ்வாறு இரண்டு சிந்துக்களில் கணக்குரைத்தல் இடம் பெற்றுள்ளது. இறுதியாக திருமக்காப் பள்ளு கடவுளைப் போற்றுதலும் வாழ்த்துதலும் இடம் பெற்று முடிவடைகின்றது.

## அகர வரிசைத் தொகுப்பு அட்டவணை

---